உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வேதாரணிய புராணம்.

## அகோரதேவர்

அருளிச்செய்தது.

இஃது,

யாழ்ப்பாணத்து வரணியாதீன

வேதாரணிய தேவஸ்தான தருமகர்த்தாவாகிய

ஸ்ரீலஸ்ரீ,

**ஐ. சுவாமிநாத தேசிகரவர்கள்**

கட்டளையிட்டருளியபடி,

ஷை யாழ்ப்பாணத்து மட்டுவில்

**உரையாசிரியர்**

**க. வேற்பிள்ளையவர்களால்**

பலபிரதிரூபங்களைக்கொண்டுபரிசோதித்து,

ஷை தேவஸ்தானம் ஹெட்கிளர்க்கு

**அ. அப்பாக்குட்டியாபிள்ளையால்**

சென்னபட்டணம்:

**ஸ்ரீலளிதா அச்சியந்திரசாலையில்**

பதிப்பிக்கப்பட்டது.

விளம்பி௵ கார்த்திகை௴.

1898.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

---

திருக்கைலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீன

வித்துவான்-சேற்றூர்

ம-ள-ள-ஸ்ரீ.

## சுப்பிரமணியக்கவிராசரவர்கள்

இயற்றியது.

பெருந்தவருமெச்சுபுகழகோரதேவப்பெயர்கொள்பெரியோன்செவ்வி
திருந்தவருஞ்சொல்வளமும்பொருள்வளமுமெவ்வளமுந்திகழக்கற்றுய்ந்தும்
திருந்தவரும்பருக்குமெய்தாவமிழ்திஃதென்றுளத்துமகிழ்வெய்தியார்க்கு
பொருந்தவரும்பேறுபெறச்செய்தவேதாரணியபுராணந்தன்னை. (க)

நாவலராற்றமிழ்நாடுமிகச்சிறந்தவாறேபோனலங்களெல்லா
மேவுமுயர்மட்டுவிலாம்பதிசிறந்துதேசமெலாம்விளங்கவந்தோன்
பூவினிற்பல்லிலக்கியமுமிலக்கணமுஞானநூற்பொரு[illegible]
பாவலனெற்காண்முனுநண்புறுதனிவேற்பிள்ளையெனப்பகருநல்லோன்.

சோதனைசெய்துதவிடயாழ்மொழி[illegible]
மாதலமாமணிமறைசையானைப்பதியின்பணிவிடை[illegible]
நீதமுறநடத்துபவன்போதமதா[illegible]
நாததேசிகவள்ளலச்சிபத்[illegible] (உ)

---

ஷ ஆதீனவித்துவான்

சுப்பிரமணியக்கவிராசரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

ம-ள-ள-ஸ்ரீ.

## சு. பொன்னு ஓதுவார்மூர்த்திகள்

இயற்றியது.

இப்புவியதனின்முன்[illegible]
செப்பிடுமிருவர்தமிழ்ச்சுவையறிந்தோர்சிறப்பவும்[illegible]
வப்பெருமான்றனருளினதருமையறிந்துதாமன்பகங்கொண்டு
திப்பியவகோரதேவர்சொல்வேதாரணியநற்சீர்ப்புராணத்தை. (க)

செகமலிபுகழ்யாழ்ப்பாணத்தின்மேலாச்சிறந்திடுமேட்டுவிற்பதியா
மகமதிலமர்வோன்பல்கலைக்கடலையருந்துவேற்பிள்ளையாமறிஞன்
றகவுறச்சோதித்துதவவம்மறைசைத்தளிக்கதிகாரிசங்கரன்றாட்
ககமுறுசாமிநாததேசிகனலச்சினிலமைத்தருளினனே. (௨)

---

மாயூரம்-வித்துவான்.

பிரம்மஸ்ரீ.

## கிருஷ்ணாநந்தயோகிகள்

இயற்றியது.

சீர்பூத்தவிண்ணாட்டுச்செல்வமொடுபோகமெலாஞ்சேரத்துய்க்கும்
பேர்பூத்தபுகழ்படைத்துப்பிறங்குமியாழ்ப்பாணத்துப்பெருமைவாய்ந்த
நீர்பூத்தவளங்கொழிக்குமெழில்வரணியாதீனநிலைபெற்றோங்குந்
தேர்பூத்தவணிமறுகிற்றிரைபூத்தமணியிருள்சீத்திடுதலாலே. (௧)

என்றுமிரவகற்றிவளரொளிதிகழ்வேதாரணியமெனப்பார்போற்று
நின்றநலமான்மியத்தையணிவளர்செந்தமிழ்மொழியாணிருமித்தான்மு
னென்றுமுளர்நடத்தலர்பொன்மன்றுடையாரடிக்கமலமுவந்துநோக்குங்
குன்றுதலில்சிவஞானாநந்தவுடையமுதிரகோசதேவன். (௨)

ஒருசருக்கத்தோர்கவியாயினுங்கற்போர்காற்பயனுமுவப்பநல்கும்
பொருவருமத்தலபுராணந்தனையேட்டிற்பொறித்தோர்புகன்றோர்நம்மாற்
பெருகுபிழைகளைக்களைந்துகளைகளைந்துசாலிபயன்பெறச்செய்தாங்கின்
னருள்வளரும்வாதவூரடிகள்மான்மியவிருத்தியதுவும்பாரில். (௩)

விரிந்தபுகழ்ப்புலியூரந்தாதியுரையுந்தெளிவின்விளங்கச்செய்தோன்
புரிந்ததமிழ்க்குறுமுனியுஞ்சிரந்தூக்குந்தமிழ்த்திறமைப்புலமைசான்றோ
னெரிந்தவுரையாசிரிய[illegible]வேற்பிள்ளையெனுஞ்சீர்த்திமிக்கோன் [ன்
பரிந்துபயனுறத்திருத்தியளித்திடவோன்றாயிரமாப்பல்கும்வண்ணம். (௪)

அவ்வேதவனத்தலத்துத்தருமாதிபதிபிறவியாயதீய
வெவ்வேலையுறவொழிக்கும்பூசிசாதனைநெறிகைவிடாதசீலன்
செவ்வேளைநிகர்சாமிநாததேசிகனெனும்பேர்சிறக்கப்பெற்றோ
னெவ்வேளையினுமுலகுபுகழ்ந்துய்யவச்சியற்றியீந்தான்மன்றே. (௫)

---

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்து-நீர்வேலி,

ம-ா-ா-ஸ்ரீ.

## சிவப்பிரகாசபண்டிதரவர்கள்

இயற்றியது.

செந்நெல்வயல்கன்னலொடுசென்னிலவவன்னமலி
மன்னுபொழில்சூழமருவுதல-முன்னமிகு

பற்றுனினைப்பவரைப்பாரின்முத்தியேற்றுதலை
மற்றேதிதற்கிணையாமன்னுலகி-லுற்றுரு

மூன்னுதிர்வம்மென்னுதல்போலுற்றதிரைக்கைமறித்துச்
சன்னிதியின்வாரிதழங்குதல-முன்னுமலர்

வேதனொடுமாலறியாவேதார்த்தசாரமுட
னோதரியவாகமத்தினொப்புக்கண்-டாதிசிவா

நந்தாமுதம்பருகிநன்றிறுமாந்தியார்க்குந்தா
நந்தான்புரிந்துநனியமரு-நந்தாத

பத்தர்குழாம்போலநணிபத்திகொடுசூழ்கின்ற
சுத்தமிகுவாவிபலதுன்றுதலம்-பத்தியொடு

மாதிசதுர்வேதங்களன்றுபூசித்தமையால்
வேதவனமாம்பேர்விளங்குதல-மேதகைய

விந்தவேதாரணியத்திந்துமுடியெந்தையரு
ணந்துவடபுராணந்தன்னைச்-சிந்தையுற

வாருமுணரவகோரதேவப்பெயரைச்
சேருருசாரியர்தாஞ்செந்தமிழில்-வாரமொடு

மூந்நான்மொழிபெயர்த்தமூதறிவினன்மொழிய
வெந்நாளுமீண்டும்புராணமதைப்-பின்னாளிற்

பேதமுறமேட்டுப்பிரதிபலகொண்டுபரி
சோதனஞ்செய்தச்சிற்றலக்குசௌ-[illegible]

அத்தகுதேவத்தானத்தாதீனசற்குருவா
யுத்தமதர்மத்திருவமாய்ச்-சுத்திபெறு

சற்குணரத்தினமாய்த்தாவில்சைவாகமநூல்
கற்றுநனிமெய்ப்பொருளைக்கண்டுணர்ந்த-நற்றவரே

## சிறப்புப்பாயிரம்.

யானசுவாமிநாதையாவவர்கள்சன்னி
தானமருள்கட்டளையைத்தஞ்சிரசின்-மானமொடு

கொண்டதனைச்செய்தகுணநிதியாம்பண்டிதன்றன்
வண்டமிழ்சேரீழவளநாட்டிற்-றண்டலைசூழ்

மட்டுவில்வாழ்ந்தட்டதிசைமட்டுவிளங்கும்புகழ்சேர்
சிட்டகணபதிவேள்செய்தவம்போன்-றிட்டசுத

ஞுசில்சலைக்கார்த்திகேயாசாரியரிடத்து
மாசபைகளிற்ப்ரசங்கமாசுதையை-வீசியருள்

வித்துவசிரோமணியாய்மேயபொன்னம்பலப்பேர்ச்
சத்திலகவாசிரியர்தம்மிடத்து-மெத்திசையின்

வந்தாரும்போற்றவளமுறுசைவம்வளர்த்த
வைந்தாங்குருவென்றறிஞர்புகழ்-நந்தாத

வாறுமுகநாவலவராஞ்சற்குருநாதர்
தேறுசமுகத்துந்திகழ்பரிவால்-வேறுபல

பேதவிலக்கியங்கள்பேணுமிலக்கணங்கள்
மேதகையவாஞ்சமயமெய்க்கலைக-ளேதமறக்

சற்றுணர்ந்துவல்லவனுய்க்காதலுறுமாணவகர்க்
கற்பினொடுகொட்டுமுறையாசிரியன்-பற்றினொடு

வாதவூரண்ணல்வளர்புராணம்முதனூற்
கேதமறுநல்லுரைகளேவர்களுங்-காதலொடு

கண்டுணரச்செய்தோன்கனபுகழ்வேற்பிள்ளையெனும்
பண்டிதன்றன்மற்றிவனேபார்.

---

சென்னை-அஷ்டாவதானம்

ம-௱-௱-ஸ்ரீ.

### பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.

இருமொழிமுற்றொருங்குணர்ந்தானிவனொருவனேயென்றுவேதியாரும்
பெருமகிழ்வின் [illegible] ரதேவப்பெயர்கொள் [illegible]
ளருமமிழ் [illegible] யணியாக்காங்கிலங்கப்
பெருமழகிற்பாடியநற்றனிமறைசைமான்மியத்தின்பெருமையோர்ந்தே.

இசைபரவுயாழ்ப்பாணத்துறைமட்டுவிற்பதியிலினிதுதித்தோ
னசைபரவுபெரும்புலவர்சரபமெனுமாறுமுகநாவலன்பார்
திசைபரவுவித்வசிரோமணிபொன்னம்பலப்பிள்ளைதெய்வவேதப்
பசைபரவுகார்த்திகேயப்புலவனிவர்மூவர்பாற்படித்த.

பயனுகவிலக்கியவிலக்கணவரம்புணர்ந்துபல்லோர்போற்று
முயர்புலியூரந்தாதிதிருவாதவூரடிகளொண்புராண
நயமாருமேயுணரவேவிருத்தியுரைகூறிநயக்கச்செய்ய
வயமாரும்பழைய[illegible]மேதகு[illegible]மையாய்ந்தோன்.

துன்னியநஞ்சிவபெருமானருட்சீரேபெஞ்ஞான்றுஞ்சொல்லுநாவான்,
மன்னருஞ்சுத்தாத்துவிதசித்தாந்தசாத்திரங்கள்வழங்கச்செய்வோ, னின்ன
லரும்பொறைகருணைகொடையொழுக்கம்வாய்மைமுதலேய்ந்தோன்யாரும்,
பன்னருஞ்சீரெடுத்துரைக்கும்பெரும்புகழ்கொள்வேற்பிள்ளைப்பாவலோ
னே.

பற்பலவேட்டுப்பிரதிகொண்டுசோதனைசெய்துபண்பினீயச்
சிற்பரன்வேதாகமபுராணவிதிகாசங்கள்செவ்வேதேர்ந்து
தற்பரன்வேதாரணியதருமபரிபாலனஞ்செய்தன்மைவாய்ந்த
நற்புகழேய்ந்திடுசாமிநாததேசிகனச்சிறுட்டினனே.

---

திருமயிலை-வித்துவான்

ம-ா-ா-ஸ்ரீ.

## சண்முகம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

மணிபூத்தமருமத்துமாதவனுமலர்க்கமலமன்னுங்கோவுங்
கணிபூத்தமாமறையுமாட்டாமேபுலியரவங்கனிந்துநாடப்
பணிபூத்தமணிமன்றுணடநவிற்றுமிறையமரும்பதிமுன்னுய
திணிபூத்ததலம்பல்லதன்னிடங்கொண்டதுவளஞ்சால்சென்னிநாடு. (க)

வேதசிவாகமமிரண்டுமிரனுரையென்றுலகமெல்லாம்விளம்புமன்ன
வேதநெறியாகமநன்னெறியதனைக்கடப்பாடாவிழைந்துகொண்டு
வேதநெறிக்கிறையாயபரம்பரனைவழிபாடுவிஞ்சவாற்றும்
வேதவனமெனுமறைக்காடென்றொருதேத்தந்நாட்டில்விளங்குமாலோ. (உ)

அன்னதிருத்தலச்சிறப்பிங்கெம்மனோருரைப்பளவோவற்றைஞான்று
முன்னுமறைபயிலுமந்தத்திருவாயிற்கதவடைப்பமுந்நீர்ஞாலஞ்
சொன்னபுகலிக்கன்றும்வாய்மூர்மனனருமெய்த்திததுணிவிற்பாடிப்
பொன்னினீடிருக்கதவந்திறப்பக்காப்பிடப்புரிந்தபுகழினம்மா. (ங)

அத்தலமான்மியமதனைவடமொழியாங்கடலொன்றோவன்றுவிண்டோய்
மைத்தவரைவிந்தமொடுநெடுமகராலயங்குறுகமலர்க்கையோச்சிப் [த
பொய்த்தலில்சீர்ப்பொதியின்மேவருந்தவனேமுதற்றெய்வப்புலவோராய்ந்
ஙைபத்தசெழுந்தமிழ்க்கடலும்பரம்பரையினுணர்ந்தருந்தும்பான்மைமிக்கான்

அகம்புறமேயகப்புறமேயெனுமுக்கூற்றுச்சமயமரிதிற்றேர்ந்து
நகம்பயந்தவல்லிபடரோரெண்டோள்வரையரசைநயக்கவான்ம
சுகம்பயிலுமனுபூதித்திறத்தெய்துவிக்குமருட்டொன்னூலோடு
சகம்பயிலுமுப்பானூன்முதலனநன்கோர்ந்திலங்குந்தகைமையாளன். (௫)

அகோரசிவனிவனென்னமாயிருஞாலங்கூறுமடைவினோங்கு
மகோரதேவக்கவிஞர்சிகாமணியாமபிதானமமைந்தமேலோன்
மகோததிபோலிருமொழியின்வரம்புணர்ந்துமிளிர்கின்றமாண்புகண்ட
சுகோதயமெய்யுணர்ச்சியுடையாரினையதலப்புகழைச்சொல்லென்றோத. (௬)

மெய்யவிருமுதனூலைக்கடைப்பிடித்தையிருகுற்றமேவாவண்ண
மையறுசொற்சுருங்கல்விளங்கிடவைத்தன்மனக்கினியமொழிபுணர்த்தல்
வையமலையாமைவிழுமியதுபயந்திடுதன்முதல்வயங்கும்பத்துச்
செய்யவனப்புடையதமிழ்ச்செய்யுளினாற்புகன்றளித்தான்சேணார்காலம்.

அன்னதமிழ்முறையதனைக்கரலிகிதவழுஉக்களைந்திங்களிக்கவென்னும்
பொன்னவிருமலர்த்தடஞ்சூழ்வரணியாதீனத்துப்பொலிந்துமேவுந்
தன்னிகரில்சுவாமிநாதக்குரவனாணைசிரந்தனின்மேற்கொண்டு
மன்னுமெழுதாவெழுத்திற்பொறித்தெம்மனோர்க்கின்றுவழங்கினான். ( )

அனையனியாரெனினறைதுநீடுபுகழ்த்திரிகோணவருஞ்சிலம்புந்
தனையனையதிருக்கேதீச்சரமுமிருவிழியென்னுந்தகைமைமேவி
யெனையடிமைகொண்டபிரான்கதிர்காமத்தலனுமெழிலிதயமாகப்
புனை[illegible]ரபாகத்தினிடைப்பொலியுமாங்கண். (௯

வீட்டுவிலிட்டொளிர்மணிமாடம்பல்லசூழ்ந்தொருவேர்வருக்கைநீழன்
மட்டுவிரிபசுங்கொன்றைத்தார்புனைசந்திரமோலிவம்பார்கூந்தற்
பொட்டுநுதற்சாந்தநாயகியோடும்வீற்றிருந்துபோற்றமேவு
மட்டுவிலென்றொருபதியான்வஞ்சகந்தீப்பொறாமைமுதன்மனமாசில்லான்.

சென்னிமறுக்கங்கொள்வாளொருமுள்ளிச்செடிக்குமுத்திந்திருவமீட்டும்
பொன்னிவளந்தருநாட்டுக்கொற்றவன்றன்குடிமுதல்வர்புகலுஞ்சீர்த்தி, தன்
னியவேளாண்குலக்கோர்சுடரனையான்கணபதிவேடேய்முத்தம்மை, யிந்நில
மேலியற்றியமெய்த்தவமனைத்துமோருருக்கொண்டென்னவந்தோன். (௧௧)

தவக்கொருவர்தமிழ்க்கொருவரலரென்னும்பெரியருரைதனைநன்காய்ந்தே
பவக்கடலைக்கடத்துமொருபுணையென்னவுரைநூல்கள்பலவுந்தந்து
சிவப்பிரகாசத்தினையாழ்ப்பாணத்தோவெவ்வுலகுந்தெரித்துக்காட்டுந்
தவப்பிரகாசத்தாறுமுகநன்னாவலரேறுதமதுபாலும். (கஉ)

முற்றோன்றுங்காதினும்பிற்றோன்றியகொம்பேவலிமைமுற்றுமெய்தப்
பெற்றோங்குமெனுமொழிக்கிங்கிலக்கியமாயவனுழைப்பீடுறக்கற்றோரின்
மற்றோரினிணையிலாப்பொன்னம்பலப்புலவர்மன்னன்மாட்டுஞ்
செற்றோரைந்திந்தியமுந்திகழ்கார்த்திகேயதேசிகன்றன்பாலும். (கங)

அகத்தியந்தொல்காப்பியமேயவிநயமேயாதியபல்லிலக்கணங்கண்
மகத்துவஞ்சால்குறளொடுநம்மரிந்தமன்சீர்செழுமியமாண்புடைநூன்மற்று
சகத்தியல்பல்லிலக்கியங்கள்கசடறக்கற்றடக்கமணிகலனாத்தாங்கிச் [ஞ்
சுகத்தியலுமனுபூதித்தோன்றலாயரனடிக்கண்புடையதூயோன். (கச)

போதமேவடிவாகப்புன்மலவாதனைதீர்ந்துபொலிந்ததெய்வ
வாதவூரடிகள்புகழ்க்கொப்பறுநல்விருத்தியுரைவழங்கிநம்பன்
மாதயாவொடுநடஞ்செய்புலியூரந்தாதியுரைவகுத்தமேலோன்
நீதிவேற்பிள்ளையுரையாசிரியனெனவான்றோர்நியமித்தோனே. (கரு)

திருச்சிற்றம்பலம்.



# சருக்க அட்டவணை.



[[illegible] சருக்கம்-என.]

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வேதாரணிய புராணம்.

## பாயிரம்.

### கடவுள்வாழ்த்து.

காப்பு.

கார்மலிந்து*கடாம்பொழியுங்கமழ்மதத்தின்சுவைமாந்திக்களித்தவண்டின்
போர்மலிந்தகணஞ்செவியினிடைமருத்தாற்பொம்மெனமேற்பொங்கிநீலத்
தார்மலிந்தகும்பத்திற்பரந்துகருமணியிழைத்ததடப்பொற்கும்பத்
தேர்மலிந்தவீரகத்தியடர்த்தநடக்குஞ்சரத்தாளிறைஞ்சிவாழ்வாம். (க)

### வேதாரணியேசுரர்.

கார்பூத்தகளத்துவிடப்பாசொளிவெண்டோட்டொளியிற்கலந்துகாம
ரேர்பூத்தபசுங்கொடியோடமர்ந்துயிர்கட்கின்பமுத்தியெளிதினீந்து
சீர்பூத்தமறைச்சிரத்திற்றெளிவாகிச்சிதாநந்தத்தேறலாகும்
பார்பூத்தவேதவனப்பரமனடிக்கடிப்பதுமம்பரசிவாழ்வாம். (உ)

இருள்சூழ்ந்தசுடர்க்கதிரினிகல்வேழத்துரிவைபுனைந்திமயமீன்ற, சுருள்
கூந்தற்சுவைப்பொருள்போற்[illegible]கென்றுந்,
தெருள்சேர்ந்தஞ்சனமளித்துமைக்களத்தானெனும் பெயராற்றிகழ்ந்து
தேவர்க், கருள்கூர்ந்தவேதவனத்தமர்சோதியுளக்கமலைத்தளியாமன்றே.

### யாழைப்பழித்தமொழியம்மை.

ஒருருவாய்விந்துவினிற்பரையாதியைந்துருவாயொன்பானுகிக்
காருருமாயையிற்பலவுஞ்சராசரத்திற்றெழிலியற்றிக்கலந்துவாழ்னோர்
தாருயர்மாமுடிவெயிலாற்றளிரடியும்பலவுருவந்தன்போல்வாயும்
பேருமையாழைப்பழித்தமொழி[illegible]பேருமன்றே. (ச)

---

* கடாம் என்பது கடபத விகாரம். கடம்-யானைக்கதுப்பு.

எழுத்துருவாய்ப்பலபொருளுமிலக்கியிடக்குறிமூலைத்தேய்ந்துஞாலம்
[illegible]மென்டலைமூன்றிடைவயங்கிமதியமீதே
விழுத்தவர்தேர்வெளியொளியாய்விரித்தகதிர்ச்சிலம்பாகிவிளங்குசோதி
பழுத்தவெழிற்குவையாழைப்பழித்தமொழியுமைபாதப்பதுமஞ்சேர்வாம்

## வீரகத்திவிமோசன விநாயகர்.

தந்தைவலிமக[illegible]யாற்கூற்றுவனிற்றறுகட்பேழ்வாய், வெந்திறல்சார்[illegible]யோன், முந்து புரம்பொடித்தாசைக்கரியின்மதனழித்துருவமுரணவேய்ந்த, சந்தமறை வனக்களிற்றைவெளிற்றையகன்ஞெளிற்றையுறச்சரணஞ்சார்வாம். (அ)

## சுப்பிரமணியக்கடவுள்.

உலகமுயிர்பெறநிறுவுமைந்தொழிற்குமைந்துமுகவுபாதியோவி
யிலகுபரமானந்தவெளியாகுமுகனுமுளதின்பமாகி
நிலவுமெனவுணர்த்தவறுமுகமாகித்தாரகத்தினிலைமையோதுங்
கலவமயிலிருண்மீதிற்கதிருருவாமுருகனடிகருத்துள்வைப்பாம். (எ)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பொருமருகவிட[illegible]ப்புடவியுறத்திருப்புலம்பப்பொரு[illegible]சோதி
[illegible]முன்னுமைபாற்பரஞானவுருவமாகித்
திருமருகல்விடமெனத்தீர்த்தருமறையுநீற்றொளியுந்தெளிந்துதேவி
யொருமருகனெனத்தோன்றுங்கவுணியனைத்தொழத்தருமூழுயர்கமாதோ.

## திருநாவுக்கரசுநாயனர்.

ஈனமுறுந்தொழிற்சமயத்திழிந்துபயனின்மையுணர்ந்திகழ்ந்துசோதி
ஞானவுருத்திருவுரைத்ததொழின்மேற்கொண்டலைச்சிலையேநாவாயாக்கித்
தேனவிழுமதிமதுரச்செழும்பதிகமணிக்கதவந்திறக்கச்செய்த
வானவனுவுக்கரசினடிநிழலாற்பிறவிவெயில்வருத்தந்தீர்வாம். (கூ)

## சுந்தரமூர்த்திநாயனர்.

வெள்ளிமலைத்தலைமாதரதிமதுரத்தழைவிரும்பிமேவித்தென்பால்
வள்ளிதழ்ப்பூமுலைத்தடத்திற்கமலைவயிற்படிந்தயலார்வடிவுவாய்ந்த
தெள்ளியகட்சங்கிலியாற்பிணிப்புண்டுபரவையுறத்திருவார்பாக
னள்ளிரவிற்செலப்பணித்தநாவலூர்மதகளிற்றைநயந்துவாழ்வாம். (கo)

## திருவாதவூரடிகள்.

இருள்சார்ந்தவுயிர்தனதன்பிழைத்தவிணையதமிழ்ப்பாவாலின்பமாரு, மருள்சாருமெனவுணர்த்தநரியனைத்தும்பரியாக்கியமலமாய, பொருள்சார்ந் தமண்சுமக்கப்புரிந்தணிசேர்பொருட்கோவைப்பொருளாந்தில்லைத், தெருள்சார்ந்தவாதவூர்ச்செம்மலடிப்பொடியாடித்திகழ்வாமன்றே. (கக)

## திருத்தொண்டத்தொகைத்திருத்தொண்டர்.

செயற்கரியதொழில்பலவுஞ்செய்துயிரைமதியாதுதிகழ்ந்தசெவ்வேற்
கயற்கணுமையொருபாகனடியிணைசேர்ந்தானந்தக்கதியின்மூழ்கி
மயற்குறைமாய்ந்துயிர்களிப்பவளர்சீர்த்திகுழைத்தபயிர்மல்கவாயும்
புயற்குளிர்போற்றருமூரன்புகழ்புனைந்ததொண்டரடிபோற்றல்செய்வாம்.

## திருமாளிகைத்தேவர்.

தெளிஞானவுருவேய்ந்துதிருக்கரணங்கிரியையுறத்திகழ்ந்தவின்ப
மொளியாவியிச்சையுறவோங்கருளேயவயவமாயுவந்துதோன்றிக்
களிவாயுமலமூன்றுங்கழித்தமலவானந்தக்கதியினுக்கு
மளியானற்றிருப்புலியூர்மாளிகைத்தேவனுக்கெழுமையடிமையாமே.

## வாழ்த்து.

வேறு.

வளம்பொழிவானந்நீம்பால்வழங்குமான்மறையோர்வாரிக்
களம்பொதிகளத்தோன்மேன்மைகண்ணுதற்பெருமாற்கன்ப
ருளங்கொளுமருணனீடவுலகருள்சுரக்கும்வேந்தன்
விளம்பருந்தருமம்வாழ்கமேதினிதழைக்கமேன்மேல். (௧௪)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

## வழி.

வேறு.

மணிவளம்பொழியுமாடமலிந்தெழுசுடரால்வானத்
தணிநலம்பெருகும்வேதவனத்துயரகலமேன்மை
துணிதருபுராணங்*காந்தம்பிரமகைவர்த்தந்தூய்தா
யணிபிரமாண்டங்காளிகாண்டநான்காதியாமே. (௧௫)

## வழியின்வகையும், காரணமும்.

ஈங்கிவற்றுரைத்தமேன்மையாவையுமியன்றவாற்று
லோங்கியமதுர[illegible]சீர்
வீங்கிளமுலையாள்பங்கற்கன்பராய்விழுப்பமேன்மை
தாங்கியின்புருவமானார்தருகெனச்சாற்றலுற்றேன். (௧௬)

---

* ஈண்டுக்காந்தமென்றது காந்தபுராணத்துச் சனற்குமாரசங்கிதையை.

## அவையடக்கம்.

கலைபலவுணர்ந்த சூதன்கனிந்தமென்மொழியாற்காட்சி
நிலைபெறுபுராணம்யானுநிகழ்த்துதலிழிபின்றாயி
னுலைவறுமுயர்ச்சியோங்குமுறுசுவையுவர்ப்பின்றாயிற்
றலைநலமுறாதென்றாயுந்தன்மையிற்றழைவதாமே. (௧௭)

## ஆக்கியோன்பெயர்.

வேறு.

துணிவருமாரியமுற்றுந்தோய்ந்துளந்
தணிவறத்தமிழ்க்கடலளக்குந்தன்மையான்
மணிவளரின்னொலிமறைசைத்தீந்தமி
ழணிபெறவருளினனகோரதேவனே. (௧௮)

பாயிர முற்றிற்று.

உ

# வரன்முறைச்சருக்கம்.

மறைக்கருத்துணர்வயங்கியகேள்விவாய்வாளாற்
கறைக்குயிர்ப்பருள்காமமேமுதற்பகைகாய்ந்தே
யுறைக்குமுத்தியிற்சிந்தனையுருக்குமன்புளத்தா
னிறைக்குமின்பருட்பாவனைமுற்றியநிலையார். (௧)

நாடிசுத்திசெய்தனிலனைச்சுழுனையினடாத்தி
வீடின்முத்திரையாற்றின்முப்பிணிப்பறமேல்போ
யாடியிற்றெளிமதிக்கதிர்மண்டிலத்தருந்தே
னோடியுற்றயர்வண்டெனவின்பமார்ந்துறைவோர். (௨)

அங்கமாமறையதன்பயனளவுறவோதிப்
பங்கமீர்விதிப்பாலிதன்றுணிவெனப்பகருந்
துங்கநூனயமதன்சிரந்துளக்கறுஞ்சோதி
யெங்கணாயகனிடத்தெனுநயந்தெளிந்திசைவார். (௩)

இருளகற்றியவருட்கதிர்வெண்ணிலாவொழுந்து
பொருள்படுத்துடல்போர்த்தெனநீற்றொளிபொலிவார்
தெருளளித்தொளிர்சிந்தையிற்செம்மையிற்செறிந்த
வுருளுருப்பசுங்கண்டிகைமுடிச்சடையுரவோர். (௪)

மூன்றழற்றுறையஞ்செனத்திசழ்மசமுறையா
லான்றியற்றியபவமுறையோர்ச்சியற்றளிப்போ
ரேன்றுதம்மினும்பிறர்க்குறுமின்பமேயிழைப்போர்
வான்றருந்தவங்கொலையறலென்றுளமதிப்போர். (ரு)

மயக்குறும்பொறிகரணமென்றிவற்றினைமடக்கி
வியக்குறும்பொருள்வேட்கைவேரரிந்தறவீழ்த்தி
நயக்குமுத்தியினசையினைப்பெருக்கிநான்மறைநூல்
பயக்குநல்லொழுக்குலகிடைப்பாத்தியபரிவார். (சு)

பொறைமுதற்பெருங்குணமெலாம்போற்றியபடிவ
நிறையுமேதகுநீர்மையார்முதுக்குறைநெறியார்
கறையகற்றியகாட்சியார்கமலமீதமர்ந்த
விறையுருப்பலவெய்தியதேயெனுமியலார். (எ)

அவாவிறுற்றமுமகற்றினராயினுமரன்பாற்
றவாதவன்பினுலுருகுளந்தழன்மெழுகனையார்
நிவாதமேவியசுடரெனநிலைபெறுஞ்சமாதி
யுவாவிறுண்மதிபோற்குளிர்ந்தொளிர்தருமுளத்தார். (அ)

எல்லையோவியமந்திரத்திலங்குயிராகி
யல்லைநீத்துளத்தமுதவெண்ணிலாக்கதிர்வழங்குந்
தொல்லையஞ்செழுத்ததன்பயனுசையுந்துணிந்து
மல்லையுற்றதோண்மறலிவெந்திறலறமடித்தார். (கூ)

எண்ணினற்குணத்தியங்கினரவர்பெயரியம்பிற்
பண்ணியற்றெரிநாரதன்பருப்பதன் * றடிபா
ரண்ணியற்சதவித்தையன்பப்புருவசிதன்
புண்ணியச்சரபங்கனற்காசிபன்புதனே. (க0)

கோதமன்கௌசிகன்பராசரன்சுகன்குச்சன்
றீதகற்றியகுறுமுனிதேவலன்வசிட்ட
ஞுதபற்பொருபுலத்தியன்புலகனுரீதன்
வேதமுற்றுபோதாயனன்சனிவிபண்டகனே. (கக)

† பங்குவத்திரிததீசிமார்க்கண்டனேபயிலன்
றுங்கவுக்கிரசீலனேசுதிக்கணன்சுசீலன்
றங்குசத்தியாசாடனேசுமதியேசத்தி
திங்கள்சான்றசாபாலியங்கிராவசுச்சிவனன். (கஉ)

* தடி ஓர்முனிவர்.

† பங்கு ஓர்முனிவர்.

கிருதுயாக்கியவற்கனேசாரதன்கிருபன்
பிருகுவேபரத்துவாசனுபத்தம்பன்பீடார்
மருசதாதபன்மிருகண்டுமரீசிநற்சிலாதன்
றுருவனூர்த்துவபாருமாதவுமியன்சுமேதன். (கங)

வேறு.

வாமதேவன்மகாபாருவிசுவாமித்திரன்மகாசீலன்
ஞேமி * யுதக்குசிரசுகர்க்கன்சுவேதகேதுவுபயாச
னுமயாசன்றீர்க்கதமனவையில்சாலிகோத்திரனே
யேமமாருந்தீர்க்கதபனெச்சசீலனிரப்பியனே. (கச)

வேறு.

சத்தியச்சமதக்கினிகாத்தியாயனனே
சுத்த † வக்கினிபுக்கொடுத்தாலகன்சுவேதன்
வைத்தசண்டன்சாந்தீபினிசுசக்குவன்சுமந்து
முத்தசாசலிபராமிர்தன்சதாநந்தன்முதலோர். (கரு)

அலகிறந்தவரவர்வழியொழுகுமாணுக்க
ரிலகுமிங்கிவர்பாற்றெளிந்திருளறுமியலார்
குலவுகொள்கையர்கோதிலார்குணப்பெருங்கொடிக்கோர்
திலகமாயவர்திரண்டொருகாலுளந்தெளிவார். (கசு)

ஊற்றமார்தருபயனெலாமுறுப்பறவொடுங்க
நோற்றவர்க்கலாதில்லையாலத்தகுநோன்பும்
போற்றுநற்றலத்தாறுந்தலம்பூமிசைப்புந்தேள்
சாற்றுமென்றுசார்ந்துரைத்தனர்மாதவத்தலைவர். (கஎ)

முனிவர்வாய்மொழிகேட்டயனணிவிரன்முடிகுற்
றினியபாசிலைத்தருப்பையானேமியையேவாப்
புனிதமார்தலத்துறுமிடத்தலம்புகுந்து
பனிதருந்தவமாற்றுமினென்றிடப்படர்ந்தே. (கஅ)

ஆயநேமியின்பின்செலவறந்தழைத்தமலர்
தோயுமோர்வனத்துற்றதுனுண்டியநேமி
சாயுமாதலி ‡ னைமிசமெனப்பெயர்சார்ந்து
வாயுமவ்வனமடைந்தொளிர்மாதவமறையோர். (ககூ)

வற்றியென்புகமறுகுறுதவம்பலவாய்ப்ப
முற்றியாரழற்கருமமுழுமுடித்தியன்முறையா
னெற்றிவல்வினையிருளொடுமிரித்துளமிலங்கச்
சுற்றியன்றசெஞ்சடைமுடியுறுமருந்தறவோர். (உ0)

---

* உதக்குசிரசு ஓர்முனிவர். † அக்கினிபுக்கு ஓர்முனிவர். ‡ நேமி சம்பந்தம் நைமிசம். நைமிசத்துக்குச் சித்தாச்சிரமமெனவும்பெயர்.

தினங்களாயவும்பக்கமுந்திங்களுந்திங்க
ளினங்களாகியவிருதுவும்வருடமுமியலான்
மனங்கொண்மாமகமுடித்தபின் * வருடங்கள்பலவா
முனங்கொள்சத்திரமாமகமியற்றுவான்முயன்றார். (உக)

ஆன்றவங்கமோடாகுதிதுவன்றியேயளவாற்
றோன்றுமாரணமந்திரத்தின்றொலிசூழக்
கான்றநெய்வழியாகுதிப்புகைமணங்கமழ
வேன்றுவானவரவிக்கெழுந்தந்தரத்திலங்க. (உஉ)

ஆற்றியீறுசெய்காலையினருமறையனைத்தும்
போற்றுமோருருப்பெற்றெனப்பொலிந்தொளிர்வியாதன்
வீற்றுவீற்றுறுமுயிர்கடமெலிவுகண்டிரங்கித்
தோற்றுமின்னருளுருவெனச்சுடர்விடுந்தூயோன். (உ௩)

கண்ணுதற்பெருமானடிக்கமலமேயல்லாற்
புண்ணியப்பொருளிலதெனப்புந்தியிற்புரிந்தோ
னெண்ணியற்புதனிலங்குருவிடையருவின்பா
னுண்ணிகழ்ந்திடுமுருக்கமேயுருவுடையரவோன். (உ௪)

கலிவிழுங்கியவுலகினைக்கரிசறக்கழுவும்
பொலிவுதங்கியபுனிதநீரெனப்பொலிபுராணத்
தொலியடங்கலுமொருங்குளத்தொருதலையாக
மலிபரம்பொருண்மகேசனென்றுளத்துறமதித்தோன். (உ௫)

வரம்பிலெம்பரன்பெருங்குணநினைந்தெழுமகிழ்வாற்
பரம்புகாதனீர்நெகிழ்ந்துளம்பரவசமாக
நிரம்புமானந்தநிலைபெறுபேரின்பநீத்தத்
தரம்பிலம்படிந்தகிலமுமத்துணையானோன். (உ௬)

சொற்றநற்குணமெண்ணிலசிறந்தொளிர்சூதன்
கற்றமாதவரவையுறக்காண்டலுங்களித்தே
பற்றுமாதவமியற்றியவேள்வியின்பயன்போ
லுற்றதையநீநன்றெனவுவந்தெதிர்கொண்டே. (உஎ)

தழுவுநின்றிருநோக்கமுந்தழைத்தபேரன்பா
யொழுகுவாய்மையுமொருங்குநோன்பியற்றியவுருவு
மழுவலானருள்வழங்கியமதிபொதிவதனத்
தெழுநிலாவுளத்தின்பினையிலக்கியவியல்பும். (உ௮)

* ஈண்டு வருடங்கள்பல என்றது பன்னிரண்டு வருடத்தை.

கண்டுவாழ்ந்தனமினிக்குறைகண்டிலோமெனவே
மண்டுகாதலிற்பாத்தியமுதலியவழங்கி
யெண்டிசாமுகமிலக்கியகதிரெனவிருக்கை
கொண்டுசூதனங்கமர்ந்தபின்குளிர்ந்துளங்குழைவார். (உகூ)

மயக்குறும்பலவழிகெழுமுயிரினைமருடீர்த்
துயக்கொளும்படிவியாதனென்றோருருவாகித்
துயக்கினாரணனாரணந்தொல்லையினெல்லை
நயக்குமாறிலவென்றுயிர்க்குறையினைநயந்தே. (௩௦)

பாலினன்குறவறம்பயினல்வர்க்கும்பயிற்றி
வாலிதாகியபுராணமென்றனக்கருள்வழங்கிப்
போலியாகியநெறியெலாம்புறந்தரப்பொலிந்த
வாலினனிவையாற்றியபொருளெனவறைந்தே. (௩௧)

நீங்கலின்றியங்கவரவர்தம்மிடைநிலையா
யோங்கிநின்றரனுஞற்றலினும்பரையொருகாற்
றீங்கறும்பரமென்றிடுந்தெளிவினோலோர்ந்தோர்க்
காங்ககன்றுளமரனடிக்கமலத்தினடங்கும். (௩௨)

இனையபான்மையுமெரிவிரிநான்குறவியற்றும்
வினையினுக்சமும்வீட்டிடுந்தன்மையும்விழைந்தாங்
கனையநல்கிடுந்தருமமுமவற்றினையளிக்கும்
புனையுநன்னெறியெவைசளுந்தானத்தின்பொலிவும். (௩௩)

நெறியினாற்றிடுமகங்களுமவற்றினைநிகழ்த்துங்
குறியுமாதவக்கொள்கையுங்காற்றினைக்குறுக்கிப்
பொறியவித்திடுமியோகமுமதனதுபுணர்ப்பு
மறிவினுக்கறிவாகியபரம்பரனருளும். (௩௪)

வையமீன்றருள்வயங்கியவடிவுறுமுமையாந்
தையன்மேன்மையுந்தாமரைக்கண்ணனதகையு
மையனீத்திவர்வழங்கிடும்போசமுமவற்றிற்
கையசாதனத்தியற்கையுமுதலியவருளால். (௩௫)

நின்னிடைத்தெளிந்தமர்ந்தனமாயினுநெருக்கு
மன்னிருட்பிழம்புறுமுயிர்மணியெனவயங்கி
யின்னருட்பெறுமுத்தியினற்றிறமெவற்றூற்
றுன்னுமற்றதன்றுணிவெமக்கருளெனச்சொற்றூர். (௩௬)

வேறு.

என்றவர்மொழிதலுமினிதெனவருளொடுமெதிர்சூதன்
பொன்றிகழவிரொளியுமையொடுபொலிதருபுகழாள
ஞென்றியமலரடியுணர்வுறவுருகுளமிருணீவத்
தன்றிறமறவுறுதனியொடுமினிதுறுதகையூரயே. (௩௭)

குழைதருமுளமொடுபழகியநெறியறுகுறியாகித்
தழைதருவிழைவொடுதனியருளுருவுறுவழிமேவி
யிழையனதளரிடையெழில்வளர்கொடியிடமியல்பாகத்
துழைதருகரமலருடையவனடியிணையொளியாக. (௩௮)

கனிவொடுமுனிவரர்கதிவதியெதுவதுகரைவாயென்
றினிதுறமுனிவறவினவியதிதுவெனவிசைவாயும்
பனிதருமொழிவழிபகருவனஃதடர்படர்சாயத்
துனியுறமிருளறவொருவுதறருமதுதுணிவீரால். (௩௯)

துரியமுமிரிதரவிரிதருபரமொருதுரமாகத்
தெரிதருமுரிதிரையரியமுதலைவதுதெளிவோவக்
கரிபரிபொரியரைவிளமுதிர்கனிகனிகரியாகத்
திரிதருமுலகுயிரொருமுதலுருவுறுதிருவாயும். (௪0)

வேறு.

பாசவல்லிவேரறவகழ்ந்தமலமாம்பரத்தினிற்பரிவாற்றி
பூசலாகியபிறப்பெனுந்தளையறுத்தோங்கொளியுருவாச்சு
நேசமார்தருஞானமேமுத்தியைநிகழ்த்திடுநிலைவாயா
வாசையார்தருகருமமற்றெவற்றினுமரியதாமுயர்வீடே. (௪௧)

சுத்திவெள்ளியிற்கயிற்றினிலரவெனத்தோற்றுதமுெழிலாக
வெத்திறத்தினுமகன்றிடாவிடயமாமிவற்றினுக்கிடமாகு
மொத்தவப்பொருளுணர்ந்திடமயலறுமுலகுயிர்க்கிடமாகுந்
தத்துவத்தினைச்சார்பறவுணர்ந்திடற்றனைமுத்தியுமாமே. (௪௨)

மறைவழக்குறுகருமங்கடருங்கதிவரதனைமனத்தாற்றுங்
கறையகற்றிடுமாதலிற்சாதனங்கடவுண்மாலகங்காற்றிற்
குறையுடற்றியயோகமாதவமருங்கொடைமுதற்குணமாய
விறையளித்திடுஞானசாதனமெனவியம்புவர்நயம்பேரார். (௪௩)

ஊனமீர்ந்திருங்கதியளித்திருளொழித்துயிரையின்புருவாக்கு
ஞானமாவதுமறைச்சிரந்தருவதேநயந்ததுமிருமூன்று
மானசாதனநயத்தினுன்மறைச்சிரவாக்கியந்தருமாற்றற்
றினமற்றமர்தாற்பரியத்தினுலிசைந்தநிச்சயத்தாமே. (௪௪)

ஒளியிருட்படவேற்றுமையுற்றிடுமுயர்பரமொன்றுக்குந்
தெளிவளித்திடுமிலக்கணவிலக்கியத்தேசுறுந்திருஞானங்
களியளித்திடுமுத்தியிற்சாதனங்காட்சியிற்பிறவெல்லாந்
தளியயற்றிடும்பரம்பராசாதனந்தலைமையாந்தவத்தீர்காள். (௪௫)

அறைந்தஞானத்திற்கணுகியவங்கநான்கருமறைமுடிவாயு
நிறைந்தகேள்வியுமனனமுந்தியானமுநிட்டையுங்கிழ்க்கொண்டே
சிறந்தவொன்றினென்றதிகமாம்பொறைமுதற்றேசுசால்குணநான்கு
முறைந்தசெய்மையவங்கமற்றிவையொழித்துவப்பதொன்றிலையன்றே.

வாய்ந்தகேள்வியேமுதலியநான்கவாமடிதரும்படியாற்றிற்
றேய்ந்துவாதனையகன்றிடச்சிவனேசிற்பரவுருவாகு
மாய்ந்தமாயையுமயக்கிடாவுலகுயிர்வழக்கமீதெழத்தோற்ற
மேய்ந்ததாயினுமினியதற்சொருபமாயிலங்கிடும்பிறிதின்றே. (௪௭)

ஒன்றதாயினுமுலகிடைத்தனிநிலையொழிந்துணர்ந்திடானோகை
கன்றியேய்ந்திடும் *கர்த்திருத்துவமுதற்கரணமார்செயறன்பாற்
பொன்றிமாய்ந்திடக்கனவெனக்கண்டிடும்பொறிமனத்தொழிற்கெல்லாம்
வென்றியார்தருசாட்சியாயானந்தவேலையாம்வியப்பற்றே. (௪௮)

மயக்கமுற்றவனிந்திரசாலமாவாரியுற்றிடைமாய்ந்தே
துயக்கமுற்றிடுமுலகுயிர்மெய்யெனத்துணிந்தவனவன்போலாம்
வியக்குமிந்திரசாலமென்றுணர்ந்தவன்வேலைவீழினுமின்பாய்
நயக்குமிச்சகம்பொய்யெனவுணர்ந்தவனனுகுமின்பினைநாளும். (௪௯)

இல்லதாயினுமுண்மையிற்றோன்றிடுமிறுவிறும்பூதென்றுங்
கொல்லையோர்ந்திடுமுலகுமற்றவத்தையினொழிதலால்வியப்புற்றே
யல்லைமேவியகனவுறும்பொருளெனவடைந்தசாக்கிரத்தானு
மெல்லைபோகியபல்பொருள்கண்டுளந்திகழ்ந்திடுநகையேய்ந்தே. (௫0)

வேறுவேறுபல்லியற்கையிற்கனவிடைமேலுறும்விழைந்தோரிற்
கூறுமொன்றுதானலதிலைசாக்கிரக்குறி[illegible]
தேறுமேயெனினுதலிற்பரம்பரஞ்சின்மயமகந்தானு
மீறிலாப்பரப்பிரமமாமசங்கமாமின்பமாத்திரையாமே. (௫௧)

நனனுசத்தையும்புரணமுமின்பமுஞ்சகத்துறுமெனவேட்கை
மனமழுத்திடுமாயையாற்பரித்திவைமற்றவற்றிலையென்றே
தினமுளத்துறவைத்தொளிர்சிற்பரத்தேசுகால்பேய்த்தேர்சூழ்
கனவெனச்சகங்கண்டிடினுலகமோர்கரிபரவுருவாமே. (௫௨)

மிதியுமானமுமேயமும்பலமுமாய்விரிந்திடுமுலகெல்லாம்
பதியுமையலான்மாயையிற்பாத்தியபண்பினும்பகல்போன்றே
விதியினாலவைவிளக்கியாதாரமாய்வீந்துநின்றவைதோற்றக்
கதியுமாயவைநீங்கியேயவத்தையுங்காலமூன்றையுங்கண்டே. (௫௩)

விளங்குசுப்பிரகாசமாயசங்கமாய்விமலபூரணமாகித்
துளங்குமாதியுமந்தமுநடுவுமாந்துகளறச்சுடர்சோதிக்
களங்கொளாநந்தகன்மதாம்பிரமமேகலந்ததன்னிலையுண்போ
னுளங்கொளுண்டியேமுதலவுந்தானலதொன்றிலையெனவோர்ந்தே. (௫௪)

---

* கர்த்திருத்துவம் - வினைமுதலாந்தன்மை.

உகளமற்றகமிதமறவொன்றதாயோர்ச்சியின்புருவாகி
நிகளமற்றிருள்பொடிபடுத்துலகுயிர்நின்றவந்நிலேயேயா
யகளமுற்றிடவாவதுமழிவதுமகற்சியுமணேவும்போய்த்
துகளகற்றிமெய்ஞ்ஞானவானந்தமாந்தொம்பதப்பொருடானே. (ருரு)

இணேயஞானமேமுத்தியையளித்திடுமேனேயவளியாவாம்
புனேயுமாயிழைபங்கனதடிமலர்புந்தியிற்பொறித்தன்பா
னிணேயுமாசெயலவற்றிடையூறுபின்னிகழ்ந்திடுநிழனேமி
வணேதுழாய்முகில்வண்ணனேவழிபடும்வழியுமாமதிப்பார்க்கே. (ருசு)

சொற்றபிஞ்ஞகற்கன்புசெய்தின்புறச்சுரந்திடும்பிராசாதம்
பெற்றவற்கருமறைகுருவிடத்துறும்பெரியபற்றதனுலே
மற்றவன்றனுனுண்மையும்வாய்ந்திடும்வழிபடுமிடையூறு
துற்றவற்குபாசனேயொழித்தருமறைத்தொழில்விதித்தனர்தூயோர். (ருஎ)

நித்தியந்தனேமுதலியநாண்மறைநிகழ்த்திடுநெறியாற்றப்
புத்தியற்றிடுஞ்சுத்தியாற்பொறிதரும்பொருட்பசைவெறுப்பாகு
மத்திறத்தினுற்பத்தியுமரனடிக்காமதினருள்கூடத்
தொத்திழித்துயர்ஞானமஞ்ஞானமுந்துகள்படச்சுடராமே. (ருஅ)

ஒழிந்துபேரிருளொடுங்கிடப்பேதமுமொழிந்துருமதுபோகக்
கழிந்துநன்றுதீதகன்றிடுமகன்றிடக்காதலுமுவர்ப்பும்போ
யிழிந்தவீங்கிவையகன்றிடவிருவினேயெய்திடாவிவையிற்று
லழிந்துபோயறும்பிறப்பதனுற்றெழிலாம்பரம்பரையென்ன. (ருகூ)

வேறு.

என்றுமுனிவரனியம்பவெல்லேயறுமருந்தவத்தோர்
நன்றுனதுதன்றுசுவைநவிற்றுமொழிஞானத்திற்
கொன்றுமவாமுதற்பகையுமுளப்பசையுமுடற்றுணமும்
பொன்றவொழித்தொழியாதபொறிமனத்திற்புகமாட்டி. (சுO)

தனியிருந்துபாவனேயிற்றளராதுசராசரமாய்த்
துனியுறுபேருலகனேத்துஞ்சுயஞ்சோதியுருவாகி
யினிதுறலுமறையீற்றினிருள்வெளியிற்பலநெறியும்
பனுநயத்தினெருவழியிற்படுத்திடலும்பயப்பரிதாம். (சுக)

அல்லதுமாமறையீற்றிற்கதிகாரமிலராகச்
சொல்லியசூத்திரர்மாதர்முதலாயதொடக்குற்றுேர்
புல்லுமிருட்கழிபருவம்பொருந்தினர்க்கும்புகலாகி
யெல்லேயறுமுத்தியெளிதெய்துநெறியாதென்றுர். (சுஉ)

இவ்வாறுதெரிந்துரைப்பவியற்சூதனியம்பிடுவான்
றெவ்வாயபகைமாட்டித்திகழ்வீட்டையெளிதாக்கு
மவ்வாயும்பரன்பத்தியினமர்ந்தாகமொழித்திடினேன்
றெவ்வாதவுயர்கதியாமுயர்பத்தியுமுணர்வீரால். (சுங)

தொழுஞ்சீதப்புனற் * கங்கைத்துவாரமரன்சுடர்வடிவா
யெழுங்காசிபுட்கரமூன்றியம்புகயைபிரயாகை
யழும்பாவமகற்றியநைமிசம்வதரிகாச்சிரம
மொழுங்காயகுருநகரமுயர்சோமவொலிநாதம். (௬௪)

† ஓங்காரங்கங்கைநதியுவரியுறுந்தலமுளத்தின்
பாங்காயமாகாளங்கோகரணம்பருப்பதஞ்சீர்
நீங்காதகாளத்திகிரிமாகாஞ்சிமுதுகுன்றம்
பூங்கானமலியண்ணாமலைவிரிஞ்சிபுரம்பொருவே. (௬௫)

வெண்காடுசாய்க்காடுவேறுபுரந்திருக்கடவூர்
பண்பாருமாயூரங்குற்றாலம்பணிந்தெழு ‡ மா
நண்பாயதுறையாலங்காடுநலமழபாடி
யெண்பாயகோடிசமங்கலமேயிடைமருதம். (௬௬)

வேறு.

குடந்தைநாகேச்சுரங் § குன்றஞ்சாமிநன்
னிடம்பெறுவலஞ்சுழியெழிலையாறுசீர்
வடம்படுபூவணம்பயணம்வாஞ்சியந்
தொடங்குசோற்றுத்துறைசோதியானைக்கா. (௬௭)

திருக்கமலாலயம் + வசிட்டன்சீர்ப்பதி
தருக்கிராமேச்சுரமதுரைசாலறம்
பெருக்கியசெயந்திதென்காசிபீடிறைச்
செருக்கியசீந்திரங்குமரிசேர்பதி. (௬௮)

வேறு.

பாரிசாதநல்வனந்திருநாகையேபரிந்தவில்லுவஞ்சாரு
மோரிரூர்வனமிசைமுதலெண்ணிலயீசனற்பதியீர
நீரிரூர்தருதீர்த்தமெண்ணிலவுளநிறைமலர்ப்பொறையாருஞ்
சீரிரூர்தருவனம்பலதிலமிசைச்[illegible]றும். (௬௯)

---

* கங்கைத்துவாரம் - கங்காதுவார க்ஷேத்திரம். புட்கரமூன்று-புட்கரத்திரய க்ஷேத்திரம். குருநகரம்-குருக்ஷேத்திரம். சோமவொலிநாதம்-சோமநாத க்ஷேத்திரம். † ஓங்காரம்-ஓர் க்ஷேத்திரம். கங்கைநதியுவரியுறுந்தலம்- கங்காசாகரசங்கம க்ஷேத்திரம். பூங்கானம்-புஷ்பவன க்ஷேத்திரம். ‡ ஆநண்பாயதுறை-கோமதீசுர க்ஷேத்திரம். § குன்றம்-திருக்கழுக்குன்றம். பயணம்-திருப்பிரயாண க்ஷேத்திரம். சோற்றுத்துறை-அன்னவதார க்ஷேத்திரம். ஆனைக்கா - இது கெசாரணியம் எனவும், சம்புகேச்சுரம் எனவும் பெயர்பெறும். + வசிட்டன்சீர்ப்பதி வசிட்டேசம்.

## தலமகத்துவம்.

### வேறு.

மொழிதருமுதிர்சடைமுதல்வனபதியிடைமுதநூலின்
வழிதருபுனலிடைமதுமமழைபொழிதருவனமீது
வுழிதருமுடல்விடினுயர்கதியுளதெனவுணர்குதன்
கழிபெருமகிழ்வொடுகழறிடவிருடிகள்கரைவாரால். (எ0)

### வேறு.

நிரைபொழியின்சுவையமிழ்திற்செவ்வழியிலுெழுகுமுனைதெய்வநாறு
முரையினியதேனுமிவற்றொருபுடையேதீர்த்தங்களுயர்விளுங்கும் [ம்
வரைமருவுசினகரங்களொருபுடையே யொருபுடையின்வரம்பின்றோங்கு
விரைமருவுபதிமூன்றுமொருங்குசிறந்தனவிவற்றின்மேவலின்றே. (எக)

ஈங்கிவைகளொருமூன்றுமொருங்குசிறந்தரிதகற்றியெளிமைத்தாகி
யோங்குமொருபதியுளதேலுரைத்தியெனவுவாக்கடலினுவகையோங்கத்
தேங்கமழுமலரிதழிச்சிவபெருமானடிக்கமலஞ்சென்னிசேர்த்திப்
பாங்குறவோர்ந்தமூந்தியதிற்பரவசனுயினியமொழிபகர்தலுற்முன். (எஉ)

வெய்யபிணியிறப்போடுபிறப்பகற்றியழிவிலதாய்மேன்மைத்தாகி
வையகமூன்றினுமதித்தற்கரிதாகிமனத்துறையுமாசுநீக்கித்
தையலொருபங்குடையோன்றனதுருவாய்த்தழைத்தோங்கித்தருமமாதி
கையமரக்கதிகாட்டிக்கதிர்பரப்பியெதிரகற்றுங்காட்சித்தாமே. (எங)

பற்றியமெய்ப்பழமறையினெறியனைத்துமியற்றியுடல்பணிக்குநோன்பால்
வற்றியெழும்பொறிமனமுமடக்கிமருத்துடனடக்கிவயங்கியோகின்
முற்றியவாமுதற்பகைதீர்த்தமலமுறுமதியயனமுதலவாற்றி
யெற்றியதீவினையாளரெய்துவதாமற்றையராலெய்தற்பாற்றே. (எச)

கொடியகடுந்தீயவினைக்குவையனைத்தும்வட்வையினிற்குறுகும்பஞ்சிற்
பொடியவழித்தகலாதபுகலாகியமலவருட்புனிதமாகி
நெடியவனேமுதற்றேவர்நீங்கரிதாய்ப்பிரளயத்துநிலையதாகி
யடியவர்கட்கினிதாகியானந்தமளித்துவளமான்றதொன்றே. (எரு)

பிறவியினியடையாதபெருந்தகையாரருந்தவத்திற்பிறங்குமேலோ
ருறவிசையுந்தகைத்தொருகாலுன்னினுமுன்னியதீமையொழிக்குஞான
வறவியலாமித்துணையுமதன்பெருமையொருவருக்குமறையோமான்ற
நெறியுடையீராதலினுனிகழ்த்துவமாய்ந்துளத்தணியுநிதியம்போன்றே.

திரைவிரியமணியினிரைசிதறுதிருக்காவிரியின்றென்பால்வன்பார்க்
கரைபரியுங்கிழக்குவரிக்கடலருகுமடலவிழுங்கழிப்பூங்கைதை
விரைசொரியவேதவனமெனும்பெயராலுலகனைத்தும்விளக்கிஞானப்
பரையுருவாய்நிரைசெறியும்பவக்கானஞ்சுடுந்தாவப்படிவமாமால். (எஎ)

மறைமுறையிற்பகர்தேவர்பெருந்தேவரெனப்படுவோர்மறைகள்வாரத்
தறையுநெறிநன்னெறியாமறமுதலாம்பொருளனைத்துமவையேநல்கி
யிறையுருவாமுயிர்க்கமலவிழியாகுமம்மறையேயிலங்கும்பூசை
கறையகலவியற்றியதிலுறைந்ததெனினதன்பெருமைகழறற்பாற்றோ. (எஅ)

அடிவருத்தமாற்றியதினொருகணமேவினர்க்கேனுமமலமாகி
முடிவகற்றும்பதமளிக்குமுன்னியதிலிருந்தவர்சீர்மொழிதற்பாற்றோ
நெடியசுரத்தரியவரைநிலத்தமர்ந்தவரற்கரியநிலையார்நாவிற்
படியவழுத்திடினுமுயர்பதியளிக்குந்தீயவினைபாற்றுமன்றே. (எகூ)

மகம்பலவும்விதியாற்றிமனுவினெறியுறப்போற்றிவாய்மையாற்றி
யிகம்பரமுமிகழாதவியனெறியும்பொறியவித்தேயியங்குகாற்று
மகம்படியவுணவொழித்தேயரியதவமுறும்பயன்களனைத்தும்வேத
முற்றுமறைவனத்தணப்போதுற்றபயன்றனிற்கலையுமுதவாதன்றே. (அo)

ஆயமறைவனப்பெருமையளந்தயனுமாயிரஞ்சூட்டவிருங்காசிற்
பாயதலையரவுருவம்பரித்தோனும்விரித்துரைக்கும்பான்மைத்தன்றாற்
காயமுறுமுயிர்க்கிரங்கிக்கருணையினலரன்படைத்துக்கலந்ததாகுந்
தூயவவன்றனைப்போலத்தொலைவரியதிருளரியுஞ்சோதியாமே. (அக)

மறையவர்தங்கொலையாதிவருத்துபெரும்பாதகமும்வயங்குமாக்கங்
குறையுமுபபாதகமுமுதலாயகொடியவினைக்குப்பையாவு
முறையுமளவினிலகற்றிநிரயவெரிமடிந்தடங்கவுறைசடுவு
நிறையுமறைமுகிலாகிநினையுமளவநுபூதிநிரப்புமன்றே. (அஉ)

தருமமுதனாற்பயனுமொன்றினொன்றுதடுமாற்றஞ்சார்தலன்றி
வருமுறையினவரவர்தமனத்துவழியளித்தொளிரும்வரம்பிற்றேனும்
பொருவில்வளநிறைந்துமதுப்பொழிந்தபலமணியிட்டிப்புனைமுன்றிற்
றிருவனைத்துந்திரண்டனையசெல்வந்தருதன்சிறப்புஞ்சிறிதுசொல்வாம்.

## தலச்சிறப்பு.

வேறு.

நானமூறியவகிற்புகைகுழற்குறநயப்பார்
வானமூடரமங்கையர்போலுறவளர்பூங்
கானமூடுறுங்கதிரவன்பசும்பரிகமழுந்
தேனளாவலிற்செய்யமாவெனவொளிதிகழும். (அச)

செழுங்கனித்திரட்குலைமணங்கமழ்தருஞ்செழுந்தேன்
விழுங்குபூந்துணர்மிடைந் * தனற்கட்டெனமேவி
யெழுங்கடிப்பொழிலிடைகடிதியங்கலற்றிரவி
மழுங்கியத்தருமன்னியேமந்தியென்றறைந்தார். (அரு)

* அறைக்கட்டெனவும் பாடம்.

பூந்துணர்ப்பொழில்பொன்னுலகத்துமேற்போகி
வார்ந்துநிற்றலின்வானொளிநீலமாய்மதிப்பார்
சார்ந்துமென்மலர்த்தாதுகுதேன்றுளிதடித்துக்
காந்திசெய்தலிற்பொற்றரைசுவர்க்கமாக்கரைவார். (அசு)

வேறு.

வானதிப்பெருக்கெனத்துகின்மாற்றரமங்கையர்விளையாட்டின்
மேனயப்பினர்வெள்கிவிண்போர்த்திடவிரிநிலாக்கதிர்சூழ்வுற்
றூனமாளிகைச்சூலமக்கங்கைநீராழமித்துணையென்றே
தானணிக்கரங்குவித்தெனமீமழைசாலுமந்தகன்போன்றே. (அஎ)

பன்மணித்தொகைபாற்படப்பந்தியிற்பரப்புமாளிகைவீதி
வின்னிழற்பரந்தொழுகியசோதியால்வெண்டிரைக்கடல்வீழ்வா
னன்னமொய்த்தொளிர்கங்கையேமுதலியவாற்றினமடர்ந்தேகுந்
தன்மையுற்றிடத்தழைத்தொளிபழுத்துவிண்டரையுறுந்தகைத்தம்மா.

மகநறும்புகையகிற்புகைசெறிந்துமேன்மணிக்கொடிமறையோது
மகவுமின்னொலிமிடைந்துவிண்மயக்கிடுமரமியமணிச்சோதிப்
பகலவன்பகன்மதியுறமுயற்கிவர்பாவையரதுகாணு
ருகவொளித்ததுதேர்ந்தருளென்றறவூடினரொளிமிக்கார். (அகூ)

ஊடலுற்றவர்பளிக்கறைமறைந்திடவுருநிழற்சுவர்த்தோன்றும்
பாடகத்தளிர்ச்சிலம்படிபணிந்துறும்பரிசறப்படர்கூரு
மாடவர்க்கவரணிமுலைநிழல்செயவளித்திடுங்குறமூரல்
சேடியிற்றிகழ்ந்தளித்திடவுறுநலச்செவ்வியிற்றிகழ்வாரால். (கூ0)

கருமுதற்பொருளுரியெனப்பாத்தியகடலகத்திணையைந்து
மொருபுடைப்பொலிந்தொழுகலிற்போகமுமுயர்பதிவதியாற்றூற்
பொருவிறந்திடுமுத்தியுமகப்புகைபொழியிருண்மணிச்சோதி
தருபகற்பொழுதாமெனவொருதலைத்தருமுரண்டணித்தோங்கும். (கூக)

இதணமேற்பொலிகுறத்தியர்கடிகிளியேனலங்கதிர்ச்சோவென்
றுதவுநற்றருப்பூந்துணர்க்கிவர்ந்திடுமொளிமறிக்குழம்பூறிப்
பதனளித்தகாழகிற்புகைகுழற்குறப்பரிந்தவண்டிரிந்தார்வஞ்
சதமகற்கணியரம்பையர்கருங்குழற்றங்கிவீங்கிசைக்கொத்தாம். (கூஉ)

பொன்னிறச்செழுந்தாதுகுபொழிலிடைப்பொழிகதிர்மணியார
மின்னுவிட்டெழவிரிபசும்பொழிலிடைவிலங்கியமடநல்லா
ரிந்நகர்ச்செழுமாளிகைமணிக்கொடியெழிலியைக்கிழித்தேற்ற
மன்னுமற்றெறுமின்படிவீழ்ந்தியல்வண்ணமெண்ணிலவாமே. (கூங)

வேறு.

வேய்ந்தசாளரமிரித்திடுங்கலையொரீஇவெளுத்துத்
தேய்ந்ததிங்கள்பின்னிறைதரத்தெளிமுகஞ்சேர்த்தி
வாய்ந்தவாடியென்றேற்றிடமதிக்கணுண்டுளியாற்
றீய்ந்திரங்கியதொளிர்முகத்தெழிற்கெனச்சிதைப்பார். (கூச)

வேறு.

கோலமாமயின்முலைக்கொடியிடைந்தொளிர்
வாலியபந்தர்மேற்படிந்துவாளரா
நாலமேற்றூக்கியநலஞ்செய்கைக்கவண்
பாலனமொழியவர்பரித்தபண்பிற்றே. (கூரு)

மலைத்தலைச்சிங்கவேறிபத்தின்மத்தக
முலைந்திடவமர்தராவூர்ந்தமைம்முகிற்
றலைப்படவீழ்ந்தறச்சமழ்த்தூத்தந்தியு
மலைத்தலைமுகிலெனவையமெய்தூமே. (கூசு)

கோட்டிடையருவிநீரேற்றுக்குஞ்சரம்
வாட்டிரண்முத்தெனத்துளிகண்மல்கமெய்
யாட்டுநலண்டமாரமுதநீர்வெள்ளத்
தூட்டியமணிவணனுருவமொக்குமே. (கூஎ)

வேறு.

வரிதருமலர்முகைவழிந்ததேறலும்
விரிசினைத்தீங்கனிவெடித்தசெய்யதேன்
கரிமதங்கலந்தெழுநீத்தங்காய்ந்திடு
மரிமதர்நெடுங்கணூரளித்தசுண்ணமே. (கூஅ)

அரம்பையங்குறுங்கனியமுதவாசினி
பரம்பியமுட்புறப்பலவின்பொற்சுளை
நிரம்பியமாங்கனிநெகிழ்ந்தபல்பழம்
வரம்பிலவுடைந்தடிவமுக்கவாய்ந்தவே. (கூகூ)

வாயுமச்சேற்றிடைவழுக்கிவல்லியிற்
சாயுநுண்ணிடைபொருந்தடங்கொள்வெம்முலை
தோயுமேற்பணிபலசொரிந்துபாய்ந்துபொன்
பாயநன்னிலமணிபதித்தபான்மையே. (க00)

மறியிளநவ்விவான்மறையவார்மது
வெறியுறுகுறத்தியர்விளங்குவெண்மதிக்
குறுமுயற்கிவர்ந்துதேங்கொளித்தவெண்ணிலாச்
செறிமதுக்குடமெனத்தேம்பலோம்பினர். (க0க)

மலர்முகங்கிழிந்ததேன்மதுரத்தீங்கனி
பலவுடைந்தழிந்தெழுபங்கம்பாவையர்
குலவியகுங்குமச்சேறுகூறுசெய்
தலர்முகத்தரியினமார்க்குமென்பவே. (௪0௨)

சூலுறுமணிவளைபுலம்பித்தோட்டல
ரோலிடவரியினமூதவொண்சிறைப்
பாலணைத்திளவனம்பரிப்பப்பாசடை
காலளித்தசைதரக்காலுமுத்தமே. (௪0௩)

விரிந்தபூவருந்தியமேதிமென்முலை
சொரிந்தபாலருந்தியவாளைதுள்ளிவான்
புரிந்தமீன்போற்பொழிற்புகுந்துபூந்தசட்
பரிந்துபொன்மணியுறைபண்பிற்குருகுமே. (௪0௪)

நறுந்தயிர்கடைதருமொலியுநாகிளந்
தெறுஞ்சினவேற்றினந்தழுவுசீற்றமு
முறுங்கடிமுழவொலியுததியோங்குமேற்
பெறுங்கடன்முழக்கெனவமுதம்பெட்பவே. (௪0௫)

கதிர்செ[illegible]பாயபல்பொரு[illegible]ார்கிழித்
ததிர்கடன்மேற்செறிகலங்களார்வன
முதிர்பெருங்காதலாலமரர்முன்னவ
னெதிர்தொழமிடைந்தொளிர்விமானமேயுமே. (௪0௬)

வரைவளங்கானகமலிந்தபல்வளந்
தரைவளந்தரும்பணைதழைத்தசால்வளந்
திரைவளமிடைந்தொளிர்செல்வமல்கியே
யுரைவளம்பெறுநறவோங்குமென்பவே. (௪0எ)

வேறு.

பணிந்தவானவர்பருமணிப்பசும்பொனிற்குயிற்றி
யணிந்தமாளிகைவெயிலகப்புறவிருளகற்றித்
திணிந்தபல்வள[illegible]
றணிந்தவானெனத்தலைநசையுறுதுளந்தளர்வார். (௪0அ)

பசும்பொழிற்புறம்பரந்துபன்மணியொடுபசும்பொ
னசும்புறுதொளிரமலனசினகரமலங்கல்
விசும்புபோகியபொன்வரைவேலைசூழ்ந்தவிர்பொற்
றசும்புமாமணித்தகடுசூழ்ந்தென்னவுந்தயங்கும். (௪0௯)

வேய்ந்தமுல்லையம்பந்தரிற்றுகிற்கொடிமிடைந்து
காய்ந்தபொற்கதிர்நெற்கதிர்கலந்தெழுங்கந்தி
சாய்ந்தபைங்குலைச்செழுங்குலைக்கனியுகுதடம்பூ
வாய்ந்தபல்வகைவயங்கொளிமண்டபமானும். (௧௧0)

பையராமுடிப்பருமணிப்படலையிற்பரித்த
செய்யகோபுரத்தணிநிழலைக்கருட்டிசூழ்ந்து
வெய்யவெங்கதிர்மேற்படவெங்கனல்வடவை
தையதாமெனச்சரிந்துயிர்த்தொகையெலாஞ்சாயும். (கசக)

குடைந்துபாற்கடற்கொழுஞ்சுவையமுதினைக்கொடுப்பான்
மிடைந்தசெஞ்சடைவிமலனதருள்பெறவேண்டி
யடைந்தமேன்மையினவரவர்க்களித்திடக்குவித்தாங்
குடைந்தவெண்டிரைக்கானலிற்புளினங்களோங்கும். (கசஉ)

வேறு.

பாடியல்பதுமராகப்பசுங்கதிர்ப்படலைசூழ்வுற்
றோடியவுதயங்காட்டுமுயர்ந்துமேற்பரந்துகூடி
நீடியமுளரிக்கானநிழல்செயநீலக்காசி
னூடியாகமுங்குயவண்டாயனமகிழ்ந்தவாவுமன்றே. (கசங)

வேறு.

நீலமாமணிமாளிகைநிழலொடுநிவந்து
பாலவாவியபணிக்கொடியருகுறப்படர்வ
ஞாலமாலளந்தோங்கிடவயன்றருநாரஞ்
சாலவார்ந்தெனத்தரளமார்தெருவொளிதழைக்கும். (கசச)

செம்மணிக்கதிர்வளர்ந்துசேண்சென்றிடவிரவி
வெம்மணிப்பணிக்கேதுவின்வரவெனவெருவி
யம்மணிக்கதிருளிடத்தொளித்திடவல்லித்
தம்மணிக்கதவடைத்தனதாமரைதளர்ந்தே. (கசரு)

வேறு.

* குடக்கனிமரத்திலேசிக்குடமுழாக்கூத்திற்குவி
கடக்கமென்கனிக்கொம்பாவிநடுவெனேந்தருந்துமீனங்
குடக்கிவின்றிரியீழ்ப்பத்தூடித்தனதடித்தென்றோத
வடக்கியமறைநசைமேன்மைப்பெருவளனுரைக்கற்பாற்றே. (கசசு)

வேறு.

வண்டிரைத்தணிவார்மலர்மதுமடைதிறப்ப
வண்டிரைத்தணிவார்நிறைமாடமாமலைமேல்
விண்டிரைத்தணிவார்முரசொலிதரவிரித்தே
விண்டிரைத்தணிவார்பசும்பொற்கொடிமிடையும். (கசஎ)

வேறு.

நாகமாலையமாகநயந்தபுன்
னாகமாலையமாகநல்லார்கணம்
போகமாலையமாகரும்பொன்னகர்ப்
போகமாலையமாகடற்பொங்குமே. (கசஅ)

---

* குடக்கனி - பலாப்பழம்.

வானகத்தலைவாரிலமாக்கதிர்
வானகத்தலைவாரியின்மண்டியே
கானகத்தலைவாரிக்கரியதேன்
கானகத்தலைவாரிசங்கன்றுமே. (கசக)

வேறு.

பரியகம்பலம்பணியணிபசியகொம்பனையார்
பரியகம்பலம்பணிமலர்வளந்தரத்தரணி
பரியகம்பலம்பாற்றவீகிழிந்ததேம்பசுங்கான்
பரியகம்பலம்பன்மலராார்பொழில்பரம்பும். (கஉ0)

பானலம்பணைப்பசுங்கதிர்பறித்தயின்மேதிப்
பானலம்பணைமுலைவழிபரந்தனவருந்திப்
பானலம்பணைப்பனித்தடமொரீஇயமீன்பரிந்துண்
பானலம்பணைப்பரந்ததேனிலஞ்சியிற்படியும். (கஉக)

வண்டலைத்தருகரமலர்வீமதுவழிந்து
வண்டலைத்தருகரமலர்க் * கரமழைவாரி
வண்டலைத்தருகரமலரிக்கதிர்வரத்து
வண்டலைத்தருகரமலர்காவிநீள்வனமே. (கஉஉ)

கயமுனிக்குழவிளம்பிடிகடிமலர்பூத்த
கயமுனிக்குழவிரிந்தமுத்திளநிலாக்காற்பண
கயமுனிக்குழவிற்றருகடலெனக்கலிகே
கயமுனிக்குழவிக்களிவண்டிசைகாட்டும். (கஉ௩)

வல்லியம்பலமாமுதலிரிதரவரித்த
வல்லியம்பலமாக்கடன்முழக்கொடுவடித்து
வல்லியம்பலமாற்றியமறுகணிவனப்பார்
வல்லியம்பலமாமணிநிழலெனவயங்கும். (கஉச)

தண்டலைத்தருக்காமலர்த்தேன்றுளிததும்புந்
தண்டலைத்தருகார்நிறைமதியமேற்றயங்கித்
தண்டலைத்தருகார்க்கடலணைமிசைத்தலங்காத்
தண்டலைத்தருக்கானடைநெடியவன்றகைத்தால். (கஉரு)

வேறு.

பன்னகம்பணிமாந்தரம்பற்றியே
பன்னகம்பணியேயும்பரவைமாப்
பன்னகம்பணியான்மதிப்பான்மைகூம்
பன்னகம்பணிமாளிகைப்பாவைமார். (கஉசா)

---

* கரமிழைவாரி எனவும் பாடம்.

வேறு.

கோடியங்கியகுடவளைருற்பொறைகூரக்
கோடியங்கியல்குவலயத்தார்மதிக்குறிசெய்
கோடியங்கியங்குணத்தவர்மறைவனங்குளிர்வான்
கோடியங்கியவிரிசடாரிருக்கையிற்குலவும். (௧௨௭)

கருகுதெண்கடற்செழுந்துகிர்க்கொழுந்தினங்கமழ்ந்தே
பருகுறும்பொழிற்சினைமிசைப்படர்ந்துசேணெல்லை
பெருகுநீருவருவர்த்துநன்னீர்நசைப்பெருக்காற்
பருகவானதிவடவைநாதமிர்த்தெனப்பரவும். (௧௨௮)

பல்வளங்களிந்தைந்திணையின்பழம்பாவி
யெல்வழங்கியசுவர்க்கமும்பிறவுறவிலங்கிச்
செல்வமல்கியதிருக்காப்புறச்செழுஞ்சோதி
யல்வயங்கியவரமியத்திருபொழுதமைத்தே. (௧௨௯)

தொழுதகைத்தவர்முத்தியும்போகமுந்துமன்றிப்
பழுதுதீர்தவிற்பன்மகப்பயன்கிலபயக்கு
வழுவுறப்பிறப்புதவியவான்றனைமாடத்
தெழுநிலாநகருமறைவனப்பெருமையாரிசைப்பார். (௧௩௰)

வேறு.

அரன்மறைவனத்துறமேய
வரன்முறைச்சருக்கமோர்வார்
பரவியப்பதத்துமேவி
வரனுறக்களிப்பர்மாதோ. (௧௩௧)

வரன்முறைச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௧௩௧.

## தோற்றச்சருக்கம்.

எனமுனிமறைவனத்திறைவனைமுறைசெயவிகலோவும்
பனவர்களனைவருமினிதுணைபுமொழிபகர்காறு
மனமகிழுமுறைவெலுமொளிபெருகுறமதுவாரு
மனகமதுறுமிலையருளவினிதுவகல்வரிதாமே. (௧)

எறிகடலருகுறுமறைவனமினியதிலினிதாமென்
றறிவுறவுரைசெயினிறிதனைவருமினையபுதமேவுங்
குறியுறவிரிவொலிபெருகிடுமவர்குறைமுவாகு
நெறியுறவருளினனுலகினிதுறுதவமிதியாவான். (௨)

புதுமதுவொழுகியபுரிமலர்வளர்பொழில்புறமேவு
முதுமறைவழிபடுமொழிதருமறைவனமுதலாகுஞ்
சதுமுகனெடியவனினைவருதகையதுதனைநாளு
நினையினுமனுபவநிலையுறுமுயர்பரநிகழ்வேயும். (௩)

ஆலாகலமெனவடர்வினையுருவுறுமதிபாவக்
கோலாகலனுடல்குறைபடவிடுமிதுகுறியாகப்
பாலார்மறைவனமிறையவரடிதொழுபரமேசன்
மேலாகியபதமுதவியதுலகிடைவியனுரும். (௪)

அதிசயமுறுமொழியறவனதுரையுறவனைவோரு
மதிநதிபொதிசடைவரதனதடிமலர்வனைசூத
னெதிர்தருபழமொழியினிதுறுமதனிலையிசையாவுங்
கதியுறவருளுதியெனவுரைசெயமுனிகரைவாரும். (௫)

வேறு.

காமமுதற்பகைதடிந்தவருந்தவத்தீருமைப்போலக்கதிகணன்கு
நாமமுரைத்திடவளிக்குமறைவனத்தின்பெருமையினைஞாலங்காக்குங்
கோமகனுமாந்தாதாவினவநரம்பிரங்குகுராற்கோற்றேனல்கும்
பாமலிநாரதனுரைத்தபடிவழுவாதுரைப்பனுளம்பற்றுவீரால். (௬)

அருந்திறல்வெம்பகையரசராவியமுதமர்க்கடலினுக்கியாருந்
திருந்திலேவேற்றடக்கையுவநாச்சுவனென்றுயர்பெயராற்சிறந்தமேலோன்
முருந்தனையமுகைமுறுவன்முற்றிழையார்கருந்தடங்கண்மூரிவெள்வேல்
பொருந்தகையென்றெதிர்மலையும்போரகற்றிக்கடற்புடவிபுரக்குநாளில்.

இழைத்தமுதங்குழைத்தனையமழலைமொழியதனுனினிமைமுற்றுந்
தழைத்தகுறுநடையானுந்தொழிலானுமறந்தருநூற்சால்பினுனு
மழைத்தகொடைவளத்தானும்வழிபடுநற்குணத்தானுமனத்துவாய்மை
யுழைத்தருமின்பிருமையினுமுதவுமகவிலனுகியுசாவிநோவான். (௮)

ஆன்ற * மறைமுனியையடைந்தவனடிப்பூங்கமலமுடிக்கணிந்தவாவுந்
தோன்றலிலனுயினருந்துறக்கமரிதறப்பயனுஞ்சூழாதின்ப
மூன்றுலகுபெறினுமுறுதெனவுரைப்பவவன்சூழ்ச்சிமுடிவினுடி
யான்றவழற்றுறையுலகினரியமகவுறுநெறியாலமையவாற்றி. (௯)

உருகுபசும்பொற்கலசத்துதகமமுதனமனுவாலுறுதிசூழ்ந்து
முருகுசெறிமலரணிந்துமுறையினபிமந்திரித்துமுளரிவாயு
மருகமையச்செறித்துமுனியகன்றவளவினிலரசனறியாதாற்றுங்
கருமமறந்ததுபருகவொருமகவாயுதரத்துக்கலித்ததன்றே. (௧௦)

---

* ஈண்டு மறைமுனி என்றது வசிட்டமுனிவரை.

உற்றதுணர்ந்திதற்குறுதியுறுஞ்செயலேதெனக்கவலையுளத்தனுகக்
கற்றமுனிவரனுணர்ந்துகலக்கமுறேலச்சுவினிக்கதிரோன்மைந்தர்
மற்றிதனுக்குறுதிசெயவல்லரெனவவர்க்கூவவந்துவேள்வி
துற்றவவிப்பாகமெமக்களித்தியெனிலளித்துமெனத்துணிந்துகூற. (கக)

நன்றெனவங்கவன்வேள்விநடாத்துதலும்பொருதுசிறைஞாலந்தாங்குங்
குன் [illegible] ொடும்படையோன்சீறவவன்கொற்றமாற்றி
யன்றவியச்சுவினிகளுக்களித்துமகவெளிப்படுத்தியாவிமேவி
மன்றலுறவருமதலைமாந்தாதாநிணங்கமழுமாலைவேலோன். (கஉ)

மறைமுழுதுமளவியதனுறையுளெனமனுமுதனூல்வரம்பதாகி
யறைகடனீருலகமகவதனைவளர் [illegible]
யிறையருளேபோலுலகமின்பமுறத்தன்பகற்றியெவையுந்தன்போற்
குறையகலவுலகளித்தான்குருமணிக்ருன்றெனத்திரண்டருவவுத்தோளான்

பரவிரவிமேலாரும்பனிமதிமண்டலமெனுநூற்பரிசுகாட்டற்
கிரவிகுலதீபனிவன்மேற்கவித்தமதியமெனவிலங்குசோதி
தரவிரிவெண்குடைநீழற்றரியலர்தம்முடிவெயிலாற்றழைத்தநீலத்
திரவிரியத்தனிச்செங்கோலெதிரெதிர்ந்துநடவியரியேறுபோன்றே. (கச)

மாற்றரசரெதிர்ந்தரசர்வடிவேலாற்கடிமலர்ப்பூவானங்காவ
லாற்றுதிரென்றகப்படுப்பானனந்தகணந்தரும்பசும்பொனயத்திஞக்கித்
தோற்றுமெயிற் * சாகேதமெனுநகரிற்சுடருமணிசொரியுமாழை
யேற்றரியாசனமீதிலிருந்தரசனொருநாளிலெதிர்ந்தானன்றே. (கரு)

தீங்கதிர்வெண்ணிலாமுழுதுந்திரண்டமதிமண்டிலமோதெய்வமாவோ
வீங்கியவிண்ணமுவியிவண்வீழ்ந்ததெனவோரொளிமுன்விளங்கித்தோன்ற
தூங்கியவெண்படமெனவுந்தோற்றியமுதிழைத்தனையசுருதிவீணை [ந்
தாங்கியநாரதன்றேன்றத்தலைவனெழுந்திருசரணந்தலையிற்றழ்ந்தே.

பொன்னரியாசனத்திரு [illegible] பூசைபுரிந்துசாயன்
மன்னியவின்மொழிபகர்ந்துமதிக்கதிரினமுதநிலாவயங்குஞ்சோதி
யின்னியனின்முகங்காணவிழைவிழியுமனமுமகிழ்ந்திரங்குங்கங்கை
துன்னியதிற்குளிர்ந்தனனின்றேற்றமெவர்க்குளதாருந்துறவின்மிக்கோய்.

அயவழலிற்பிரிவரியவானந்தமயமாகியலங்குஞ்சோதி
யியவுஞனதெரிசனத்தாலென்குலமுய்ந்தனயானும்யாக்கைவாய்ந்த
பயனிதனிற்பிறிதுளதேயெனவுரைத்துப்பணிந்தொடுங்கும்பார்த்திவனோடு
நயமுறுமஞ்சலியோடுநாரதனைமுகநோக்கிநவிற்றுகின்றன். (கஅ)

* சாகேதம் - அயோத்தி.

சொலற்கரியமகிழ்ச்சியினுளத்திலங்குமானந்தத்தோற்றங்காட்டு
நலக்குமுகந்தன்னெளியாலிறும்பூதுகண்டதுவென்னாலமுற்று
மிலக்கியநீயெவ்வயினின்றெவ்விடையினியங்குதியீங்கெவையுமாயுங்
கலக்கமறவுரைத்தியெனக்கருணைவடிவாயமுனிகழறலுற்றான். (கக)

தருமவுருவாயகலந்தழைத்தொளிரவளர்நீற்றிற்றயங்குசோதி
மருவியகவிருளேபோற்புறவிருளுமிரிக்குமறைவனத்துத்தென்பாற்
பொருமுவரிமுதலாதிசேதுவிடைப்புரிந்தாடிப்புகுவேனங்க
ணொருபுதுமைகண்டளவாவுவப்பாகியுளங்களியோடொன்றுமன்றே. ()

ஆயவிறும்பூதறத்திறுகமுறமுனக்கறைவோமறையலாகாப்
பாயகொடுவினைபயிற்றிப்பகர்ச்சியறுந்தொழில்புரிந்தப்பதியின்மேவி
மாயுறுகோலாகலனைநமன்றூதர்பிணிப்பவதுமாற்றியீசன்
மேயவுலகளித்தனனிவ்வியப்புநினைந்துளமகிழ்ச்சிமேவுமன்றே. (உக)

தாங்குமுலகொருமூன்றுஞ்சரித்தனமாற்பலகாலித்தன்மைசார்ந்த
வோங்குபதிகண்டறியேமுயர்ந்ததனிலுயர்ந்ததெனவுரைக்கற்பாற்றே
தீங்குறுமிச்சூத்திரனுந்திருந்துமருந்தவர்க்கரியசெய்கையுற்றா
னீங்கெனிலாரதன்பெருமையெடுத்துரைப்பாரெனவரசனியம்புகின்றான்.

வேறு.

ஆதிவேதமுதலுணர்ந்தாசறு
நீதியாய்தருநீயுணராதன
வோதினீடுமுலகினிலில்லையாற்
பூதியாரருள்பூண்டபொலிவினோய். (உ௩)

உற்றவேதவனத்துயரோங்குசீர்
பற்றுகாதைப்பயிற்சியின்முன்சில
சொற்றதல்லதுணர்ந்திலன்றொல்புகழ்
முற்றுமோதுதியென்னமொழிகுவான். (உ௪)

சேதுவாதியினுயதுந்தீர்வருங்
கோதுதீர்த்திடுங்கொள்கையுங்கோற்றொடி
மாதுபாகனவண்ணமுமாசற
வோதுவாயெனநாரதனோதுவான். (உ௫)

தெய்வநான்மறைமுற்றுந்தெளிவுற
வெய்துநீயறியாதனவில்லையால்
வையமேவியமன்னுயிர்யாவையு
முய்யுமாறுவினவினையோர்ச்சியால். (உ௬)

மல்குவேதவனத்தின்மலிந்தசீ
ரல்குமேன்மையருமறையாதலா
லொல்குமுள்ளமுரைப்பதற்குற்றநின்
பில்குகாதலினுவுரைபெற்றதால். (உ௭)

எண்ணறுங்கொடுந்தீவினையாவையும்
புண்ணியப்பொருள்பூத்தமறைவன
நண்ணினேய்ந்திடுநாசநவையெலாங்
கண்ணினாலுறக்காணினுமாயுமே. (உஅ)

தந்தைதாய்குருத்தாழ்குழன்மாதரா
ரந்தணர் [illegible]
வந்ததீவினையாவுமறைவனத்
துந்துகாதைசெவிப்புகவோடுமே. (உகூ)

விரிந்தவேதவனத்தின்மிகுபுகழ்
தெரிந்துரைத்தற்கரிததிற்சிற்சில
பரிந்துரைப்பன்பரிதியிற்பாயிரு
ளரிந்தகேள்வியினாயறிந்துய்தியால். (கூ0)

வேறு.

கருணையாற்சனற்குமாரன்கரைந்தவிக்காதைகாதற்
பொருண்மையாற்சிறந்தநீறுபோற்றிநீகேட்டிபூமேன்
மருவியவொருவேதாவின்வயங்கதிகாரமேனாட்
டிருமறுமார்பன்மேவித்திகழ்ந்தவைகுண்டந்தேவர். (கூக)

சென்றடைந்தரக்கர்தீமைசெப்பினர்போற்றிநிற்ப
மன்றலந்துளவோனச்சமாற்றுமின்வலிந்துசீறி
* யன்றினருயிரையீர்ந்துமுனிவரையளித்தற்கட்பொற்
குன்றனமாடமோங்குமயோத்தியிற்கொற்றவேந்தன். (கூஉ)

ஆந்தசரதன்பாற்றோற்றமா † கெனவவரைப்போக்கி
வேந்தனதாவியாயவீங்கிளமுலையார்மூவர்
பூந்தளிர்வயிற்றினான்குபுதல்வராய்த்தோற்றமுன்னா
மேந்தலவ்விராமன்பின்னோனிலக்குவனேதுவொன்றால். (கூங)

வின்முரித்தடைந்தசீதைதன்னொடுமேவிக்கானங்
கன்முரித்துயர்ந்ததோளான்கனகமான்கவர்ச்சிகாட்டப்
பொன்முரித்தனையமேனிச்சீதையைப்போக்கிமாழாந்
தன்முரித்தவன்றன்மைந்தனாற்றலோடளக்கர்மேவி. (கூச)

முழுவலிக்கவிகளீர்ந்தமுரட்குவடதனாற்சேதுப்
பழுதறவாக்கியேகிப்பஃறலையவனைப்பாசக்
குழுவொடுமுடித்தயோத்திக்கோமகனாகிமேவற்
கொழுகுழிப்பிரமகத்திதொடர்ந்தடர்ந்துருத்ததன்றே. (கூரு)

---

* அன்றல்-மாறுபடுதல். † ஆகென = ஆவெனென்று; கு, எதிர்கா லத் தன்மையொருமை முற்று விகுதி.

உருத்தெழும்பிரமகத்திக்குடைந்தொளிமழுங்கியெங்குங்
கருத்துணர்ந்தகிலங்காக்குங்களைகணுக்கவலங்காண்டல்
பொருத்தமன்றென்றுகூடிப்புனிதமுற்றகிதநீங்கத்
திருத்துதற்கிராமற்காக்கஞ்செப்பினர்தீமைதீர்ப்பார். (ஙசு)

இயற்றுநின்சேதுமூலத்திடரொழித்திடுவானிலப்
புயற்றுணியனையகண்டப்புனிதனைப்புனிதநூலின்
செயற்றுறைபூசையாற்றித்திகழ்மறைத்துதியிற்போற்றி
மயற்றுயரகற்றியின்பமருவுதிநகரின்வாய்ந்தே. (ஙஎ)

புனிற்றிளமதியங்கீறப்புதுநறுவொழுகும்பூவார்
பனித்துணரிதழிவேய்ந்தபடர்சடைப்பகவனேறு
தனிற்பொலிந்தருளுமுண்மைசாற்றினமென்றுத்தோற்று
மினிற்றிகழ்வேணிவேய்ந்தவேதியர்விதியிற்சொற்றார். (ஙஅ)

முனிவரரினையகூறமுருகுலாந்தெரியல்வேந்த
னினிதெனவரக்கரேறேரியங்கிடாதிரைக்குமுந்நீர்ப்
பனிவளர்சேதுச்செங்கைபற்றுவிற்கோடிபாய்ந்து
குனிதரக்கீறிமுக்காற்கொடுஞ்சுழிகுலவச்சூழ்ந்தே. (ஙகூ)

முக்குறும்பெறிந்துதீமைமுருக்கிமுக்குணமுமாற்றித்
தொக்குறுவேதத்துச்சிச்சுடரினைத்துணிந்தியாவு
மக்குறியதனுணேக்கியழற்றுறையடங்கவாற்றி
மிக்குயர்ந்துயிர்கட்காக்கம்விழைந்தகவிழைவுதீர்த்தார். (சo)

ஆயமாமுனிவரெட்டெட்டடுத்தநான்கமைந்தவெண்ணிற்
பாயவாயிரவர்சூழவெழுந்துவெம்பவத்தையீருந்
தூயநோன்பியற்றற்காகுஞ்சூழல்புக்குளுற்றுங்காலை
மேயசாபாலியோகமேன்மையாலுணர்ந்துசொல்வான். (சக)

பல்லுயிர்க்கின்பமேன்மேற்படர்தரப்பயக்குஞ்சீர்த்தி
மல்லலைத்தெழுந்ததிண்டோள்வலியுறுமிராமநீயென்
சொல்லுளத்தமுத்துஞ்செய்கைதுணிவெனத்துணிந்துசூழு
மல்லொழித்தினிதுகேட்டியெனவழைத்தருளினனே. (சஉ)

எத்திசையவருமேத்தவிருள்கிழித்திலங்கியோங்குஞ்
* சத்தியகிரியொன்றுண்டாற்றருமத்தினுருவமாகும்
பத்தியிற்பணைத்தமேன்மைப்பருப்பதமதன்பான்மேய
வத்தகுமுயிர்கள்யாவுமமலனதுருவமாமே. (சங)

---

* இச்சத்தியகிரியே, பின்னர் ஓர் நிமித்தத்தால் வேதாரணியமென்னும் பெயர்த்தாயிற்று. அந்நிமித்தம் முன்னர்ப்பெறப்படும்.

நினைவதன்முன்னந்தேவர்நிழன்மணிமகுடகோடி
புனைகழற்பரமன்முன்னம்பொலிந்தருள்புரிவதாகு
மனையதனெற்றியெற்றியருவினைத்திரளையீருங்
கனையரிக்கணஞ்சூழ்மென்பூக்கமழுமோர்நதியுமுண்டால். (ருச)

அந்நதியுலகமேத்தற்கமர்தருமதனின்மூழ்கிற்
பின்னனையுதரங்காணார்பிறங்குவரின்பவீட்டிற்
றன்னிகர்நதியினாமஞ் * சத்தியநதிதானாகும்
பொன்னவிர்குடுமித்திண்டோட்பொழிகதிர்ப்புலவுவேலோய். (ருரு)

வெண்ணிலவுமிழுங்கூனல்வெள்வளைவிரித்தவேலை
யண்ணனீசேதுவாற்றற்கரிக்குலமனந்தனுச்சி
மண்ணகழ்ந்தடுக்கலேந்தும்வழக்கத்துமகறதேரீசன்
புண்ணியக்கயிலைப்பாங்கரிவ்வரைபொலிந்துபூத்தே. (ருசு)

யோசனையிரண்டினோங்கியொழுகுமிந்நதியினோடுந்
தேசெனத்திகழக்குன்றிற்றிரண்டதோட்கவயன்சேர்ந்து
மூசளிநீலக்காசின்முரிந்தனவிரியக்கீண்டே
பாசொளிசேப்பச்சேடன்பணாமணிக்கதிர்கள்பாய. (ருஎ)

திரைக்கடல்கிழியவங்கட்செறித்திடச்செறிந்துதீரா
நிரைத்தவெவ்வினைகண்மாய்த்துநிருமலனுருவின்வாய்த்தே
யுரைத்தவிந்நதியினோடுமோங்கியதங்கட்சேர்ந்து
வரைத்தனுவுரவோனுள்ளமகிழ்தரமலிந்தவன்பால். (ருஅ)

வடதிசைமுகமதாகவழுங்குமந்நதியின்மேல்பாற்
குடவளைகொழிக்குந்தீர்த்தத்தருந்தவக்கொள்கைகோடி
தடவரையமுத்தவேலைத்தலைநதிகவ்வியொன்று
யுடன்மலியுயிர்கட்காக்கமுதவியொப்பிலதாயோங்கும். (ருகூ)

அவ்விடைத்தவநீயாற்றினாரமுதனையதீஞ்சொற்
கொவ்வையங்குதலைச்செவ்வாய்க்கொடியிடைக்குமரியோடுஞ்
செவ்விதிற்கடிதுதோன்றித்திருவருள்புரிந்துதீரா
வவ்வியமனைத்துந்தீரவருளுமென்றறைந்தானன்றே. (௬0)

குறையொழித்தின்பமாக்குங்குரைகடலமுதங்கோற்றேன்
கறையறவொளிருந்தீஞ்சொற்கடவுண்மாமுனிவன்கூறச்
சிறையளிப்படலைமாலைச்சிங்கவேறனையான்செப்பு
முறைவழித்துறைவழாமன்முதிர்தவமுயன்முனன்றே. (௬க)

---

* இச்சத்தியநதியே, பின்னர் அந்நிமித்தத்தால் வேதநதியென்னும் பெய ர்த்தாயிற்று. அதுவும் அங்ஙனம் பெறப்படும்.

இந்தியமவித்துக்காமத்திரையறக்குவித்துத்தூய்மை
புந்தியிற்படுத்திக்காற்றுமுதலியபோகம்போற்றி
யந்தியிற்றிகழுமேனியமலனை துருவமார்வக்
கந்தினிற்பிணித்திராமன்றவத்துறைகடவுளானான். (ருஉ)

கருகியவுருவமீசன்கழற்றுணைக்கமலங்காலப்
பருகியவமுதவெள்ளப்பரப்பெனநீறுபூப்ப
வுருகியவுள்ளநீரோடுலப்பிலன்போகைநீத்தம்
பெருகியகாலிற்கண்ணீர்சொரிதரப்பெட்பின்மிக்கான். (ருங)

பொறைமுதற்குணங்கண்முற்றும்பொருந்தியவுருவமாகு
மறைகழலிராமனிவ்வாறருந்தவமாற்றத்தோற்ற
நிறைமதிமீனத்திங்கணிகழுமுத்தரநாட்கோளி
னிறைநடுப்பகலின்முன்னமேற்றனேற்றினீசன். (ருச)

நெடுந்திசையனைத்துமேனிநிறைநிலாவெள்ளமூழ்கக்
கொடுங்குழைகிழித்தவாட்கட்குவிமுலைக்கொம்பினோடுங்
கடும்புனற்கங்கைக்காசிக்கமழ்மணிகன்னியோடும்
விடுஞ்சுடர்க்கவரிமென்பூவிண்ணவர்தூவியேத்த. (ருரு)

தோற்றினன்றோற்றலோடுந்துணைவிழியிரண்டுஞ்சோதி
நீற்றெளிருருவந்தீண்டநெக்குளமுருகிநீராய்க்
கூற்றுயிர்குடித்தசெம்பொற்குரைகழற்கமலம்பல்காற்
போற்றினன்றொழுதுவீழ்ந்துபுணர்மயிர்ப்புளகம்போர்ப்ப. (ருசா)

உளந்தெளியமுதவின்பவுருவமாயுவகைக்கண்ணீர்
வளர்ந்தனவொழுகச்செய்கைமறந்தழிந்தவசமாகிக்
களந்தளர்ந்தெழுத்திறைசைகரந்துறக்களைகண்ணுகி
விளங்கியவிசுவநாதன்விரைமலர்க்கழலிற்றாழ்ந்தே. (ருஎ)

அருமறைமுடியிற்றூயவமலவானந்தமாய
பெருகொளியாகியன்பிற்பிறங்கியவின்பமேயாய்
மருவியமனமுணர்வாக்குமதிப்பதற்கரிதாயென்பாற்
றிருவுருவெனநின்[illegible]போற்றிபோற்றி. (ருஅ)

புரிதருகுணங்கண்மூன்றுங்கரணமும்புலங்கள்யாவுந்
தெரிதருகலாதியாயகாண்டமுஞ்செய்கைஞான
மரிதருமிருளுநீங்கியசைவறவருளாய்மீது
விரிதருஞ்சோதியின்பவெள்ளமேபோற்றியென்று. (ருகூ)

பரிந்தடிபரவிராமன்பங்கயவதனநோக்கி
விரிந்தவன்புருவமாயமேலையோய்வேதநூலிற்
றெரிந்தநின்பூசையாலுஞ்செயற்கருந்தவத்தினாலுஞ்
சரிந்தனதீமையாமுமகிழ்ச்சியிற்றழைத்தேஞ்சால. (சாo)

அருந்தவர்க்கபயநல்கியரக்கர்தம்மாவியீர்ந்து
திருந்தியவுலகமின்பந்திழைத்திடச்செய்கையாற்றும்
பெருந்தகைபிரமனீன்றபுலத்தியன்பெருகுகாத
றருந்திருமைந்தன்றந்தசமுகனதனூற்றக்கோய். (௩௧)

சூழ்ந்ததுபிரமகத்தியாதலிற்றுயரவெள்ளத்
தாழ்ந்ததித்தலத்தின்மேன்மையாற்றியதவத்தினன்பால்
வாழ்ந்தனைகுளிரயாமுமகிழ்ந்தெதிர்நின்றேமாயை
வீழ்ந்தறுதீமைமுற்றும்வீட்டினையருளான்மெய்யே. (௩௨)

மன்னியகாசிமேயமணிகன்னியென்னுந்தீர்த்தந்
தன்னிலையாமேயன்றியளப்பருந்தகைமைத்தாகு
மன்னதுமுன்னைவேண்டியழைத்துடன்கொணர்ந்தேமங்கட்
சென்னியிற்பணிந்துதீர்த்தமாடுதிதிருவின்மிக்கோய். (௩௩)

சொல்லருமேன்மையோடுந்தொடர்ந்தவித்தீர்த்தந்தோயிற்
புல்லியபிரமகத்தியாதியபொக்கமெல்லா
மொல்லையினகன்றுஞானவுருவமாய்நமதுதோற்றத்
தெல்லியவுலகமேவியின்பமுற்றிருப்பரன்றே. (௩௪)

நடுப்பகற்றோற்றமுன்னோர்நயந்தனமதனூற்றீமை
விடுப்பவருச்சியிந்நீராடுதன்மேன்மைத்தாகுந்
தடுப்பருங்கங்கைநீரின்வைகறைதன்னிற்சாருங்
கடுப்புறுநன்மைமுற்றுமுச்சியிக்கமழ்நீர்நல்கும். (௩௫)

ஆதலிற்போதமிக்கோரரும்பகலுச்சியாக
மேதகுசேதுமூலம்விழைமணிகன்னிதீர்த்தங்
காதலிற்படிதல்வேண்டும்படிந்திடிற்காமமேய்ந்து
சாதலற்றின்பமாயநம்புரிசார்வரென்ன. (௩௬)

எழுந்தரன்முன்னமந்நீரிடைப்படிந்திருடீர்ந்தின்பக்
கொழுந்தெனவிளங்கியோங்குங்குணப்பெருங்குன்றமாய
தொழுந்தகையமலன்பாதஞ்சூழ்ந்தனன்பணிந்துபூமேல்
விழுந்தடிபரவியங்கைகூப்பினன்வேண்டுகின்றான். (௩௭)

அளப்பருங்கருணைவெள்ளத்தாட்டியவதனுலின்பா
முளப்பயனுதவுங்காட்சியுதவலாலுலகின்மேலாம்
வளப்பெருந்தீர்த்தமாயமணிகன்னிவரத்தின்மாயாத்
துளக்குறுபிரமகத்தியகற்றினன்றூய்மையுற்றேன். (௩௮)

பொருளெனவென்னையாள்வான்புகலுமாயெளியனாகி
யருளுருவாகிநீயேயெதிர்ந்தனையகத்தின்மேய
விருள்கிழித்திலங்குஞ்சோதியின்பமேயன்பாலின்னுந்
தெருள்வதுமுளதேநின்பூஞ்சேவடிதெரிசித்தார்க்கே. (௩௯)

வைத்தனையருணீயென்பாலன்னதுமலர்ச்சிகூரச்
சத்தியகிரியினென்றுந்தணப்பறத்தழைந்துதாமக்
கொத்தவிர்குழலியோடுங்குளிர்மணிகன்னியோடு
மித்தலைவைகியென்போலெதிர்ந்தவரிடுக்கண்டீர்த்தே. (எ0)

வெய்யதீவினைகள்வீட்டிவீடளித்தெதிர்ந்தோர்யாரு
முய்யவீண்டுறைதியன்பாலுன்னலாலுறுதியோரேற்
கையநீயருளல்வேண்டுமிவ்வரமென்னுவாய்ந்தே
தெய்வநாயகனைப்போற்றத்திருவுளமகிழ்ந்துசொல்வான். (எக)

அன்பினரிதயம்போலவித்தலமமர்தற்கெம்பா
லின்பினையுதவுநீயுமிரந்தனையதனுலென்றும்
பொன்புனையிலிங்கமாகிப்பொழிந்தருள்புனிதமேவி
மன்பதைபோற்றவென்றும்வைகுவமாசிலாதோய். (எஉ)

உருக்கவருழிகாலந்தன்னினுமொழியாதோங்கித்
திருக்கிளர்ந்துலவுமேன்மையீதுநின்சேதுமூல
மருக்கமழ்பூநீர்மேயமணிகன்னியிருளையீரு
மருக்கனேபோலநம்முன்பட்டமாயலங்குமன்றே. (எங)

இத்திறமனைத்துங்கூறியிலங்குநல்வரமுமீந்து
சத்தியநதியின்மேல்பாற்றடங்கரைதன்னின்மேவி
யெத்திசையவரும்போற்றவிலிங்கமாயிரவிதோன்று
மத்திசைநோக்கியங்கணமர்ந்தனனருளான்மிக்கோன். (எச)

சொன்மணிகன்னிதானுஞ்சுடர்விடுமிலிங்கமுன்னர்ப்
பன்மணிதிரைகள்வீசும்பனித்தடமாகிவைக
வந்நிலையுணர்ந்துதூயவறவரோடெழுந்துபோந்து
பொன்னவிர்ந்திலங்குந்தோளான்புனிதனைப்போற்றிசெய்தே. (எரு)

சூழ்ந்தடிவணங்கிப்போற்றிச்சுடர்விடுமணியும்பொன்னும்
போழ்ந்தணிகோயிலாக்கிப்பொன்னெயில்காப்பப்போற்றித்
தாழ்ந்தொளிர்சடையாற்காயதகுதியிற்றந்துவைகி
வாழ்ந்தனனுகிப்போக்குமனத்திடைக்கொண்டுசெல்வான். (எசு)

அழற்றுறைவழாதுபோற்றுமருந்தவக்கிழவர்யாரும்
புழற்றருகமலத்தோட்டிற்புரிந்தனர்சூழப்போகிக்
குழற்றிகழ்கோதைநல்லார்குவிமுலைச்சாந்தங்கோவை
நிழற்றுறைகமழயோத்தியடைந்தனனெறியினின்றுன். (எஎ)

குறும்புமூன்றகற்றிஞானக்குறியுணர்முனிவர்யாரு
மிறும்பமர்சேதுமூலத்திலிங்கங்கள்பலவுந்தீமை
தெறும்பரிசடைந்தார்முத்திசேர்தரவாற்றியங்க
ணுறும்பணியதனுன்முத்தியொன்றினருலப்பிலாதார். (எஅ)

எண்ணில்பல்காலமங்கணிருந்தபின்னியலுந்தம்பா
னெண்ணினர்சிலவராக்கநயந்தவித்தலத்தின்மேன்மை
கண்ணினருறைந்தாராதியிராமனாற்கருதிச்செய்த
புண்ணியச்சேதுவாதிசேதுவாய்ப்புகன்றதன்றே. (௭௯)

தீயுருத்தனையவாற்றற்றெறுவலியரக்கராவி
போயுறத்தருவினீழற்புரந்திடப்பொருதுபூம்பார்
தாயுருத்தரித்துக்காத்ததண்ணளியிராமன்செங்கை
வேயுருத்தழுவுங்கோலவெற்பெனத்திகழ்ந்தவில்லின். (௮௦)

கோடியிற்கிழித்துவேறுகூறுசெய்திரங்குமுந்நீர்
நாடியிற்றிகழுஞ்சேதுவத்தலைநரலைநாப்ப
ணாடினர்க்கமுதமாமென்றறைந்திடுமுலகமாசு
நீடியதீயரேனும்படிந்திடினிமலராவார். (௮௧)

அயனமே * விடுவந்திங்கட்பிறப்பருத்தோதயஞ்சீர்
நயமகோதயத்துமுற்று † நாட்குறைவிதிபாதத்தும்
பயனுறுமதியம்பானுப்பாந்தள்வாய்ப்படுநாண்மற்று
மியன்மொழிநன்னர்நாள்களெவற்றினுமிதனின்மூழ்கின். (௮௨)

கொடியபாதகங்கண்முற்றுங்கொடுந்தழற்குறுகும்பஞ்சி
னொடியிடைப்பொடிந்துநீறுறுகர்ச்சியில்பதமுமாகும்
படியினுக்கணியாயீங்குப்பண்ணிய ‡ தீர்த்தமூன்று
மடிகளதுருவமாகுமறிதியாலரசரேறே. (௮௩)

குடவளைமுழங்குங்கங்கைக்குளிர்புனற்காசியாதி
சுடர்விடும்பதிகள்யாவுந்தொடுகழலிராமனாற்று
மடலவிழ்கைதையாதிசேதுநேர்வருதற்காற்று
வடல்கெழுகடலந்தானையணிமணிமுழவுத்தோளாய். (௮௪)

வேறு.

வனைமலர்க்கமலப்பொகுட்டரசிருக்குமறையிறையூழிவாய்மடங்கிக்
கனைகடற்புடவியடங்கலுமொடுங்குங்காலையிற்காசினிகலந்தே
புனைதருமிலிங்கமனைத்துமிவ்வாதிபுண்ணியச்சேதுவிற்பொலிந்து
நினைதருங்குறியிற்புக்குடனடங்கிநிகழ்ந்திடுநீதியாய்நிறைந்தே. (௮௫)

உளந்தெளியளவினுறுபொருளுதவுமுயர்மறைமிருதியாகமநூல்
வளங்கெழுபுராணமற்றையகலைகள்யாவையும்வனைகழலிராமன்
களங்கறுமாதிசேதுபீதமலங்கண்ணுமிக்குறியிடைநண்ணித்
துளங்கொளியாகுமிதற்கொருகாலுந்தொலைவிலைசோதியிற்சுடரும். (௮௬)

* விடுவம்-விஷுவ-புண்ணியகாலம். அவை சித்திரை, ஐப்பசி மாசப்பிறப்புக்களிரண்டுமாம். † நாட்குறை-தினச்சித்திரம். சித்திரம்-குறை. ‡ தீர்த்தமூன்றுவன மணிகன்னி, வேதநதி, கோடி என்பன.

தொழும்பிரயாகைசுடர்தருங்காசிசுருதியாய்குடந்தைவன்மீகஞ்
செழுஞ்சுடர்நடஞ்செய்சிதம்பரமூழிசெறிந்திடாதிரைக்கடலூழி
விழுங்கியகாலமற்றையவிலிங்கமேதகுமறைமுதனூலு
மழுங்கறவிதன்பாலடைந்துடைந்தொழியாதாக்கமுற்றிலங்கிடுமன்றே.

பிரமமைந்ததனிற்சத்தியோசாதப்பிரமமாய்ப்பிறங்கிடும்பேற்றின்
வரமுறும்பஞ்சாக்கரமயமாகும்வளரொளியிலிங்கமீறதனு
* லாமுதற்கரவைப்பிருடிமுன்னாகவுறுவழியுணர்ந்துயர்முத்தி
தரவிரவகற்றுமஞ்செழுத்திங்குச்சாற்றுமாத்திரைப்பயன்றருமே. (அஅ)

வேலையிற்படிதல்விலக்கியதினத்தும்விரிதருமிரவிடைப்பகலின்
மாலையின்மற்றைத்தினத்தினுமிராமன்வளர்தனுக்கோடியின்மனங்கூர்
காலைநற்காலைக்கதிதருங்கொடியகடுவினைக்கோடையெற்காயுஞ்
சோலையிற்றிகழுஞ்சேதுவல்லவற்றிற்சொல்லியதோடமற்றெவையும்.

விரிவினையிருளையெரியெனத்துரக்குமேதகுமாகநற்றிங்கட்
புரிமணிகன்னியிரிதருங்கோடிப்புணரியிற்சத்தியநதியிற்
பரிவுடனுடிற்பிரிவருங்கொடியபழவினைபசையறப்பாற்றிக்
கரியுரியாடைக்கடவுடன்னுலகங்களிதரக்கலந்துவீற்றிருப்பார். (கூ0)

மாகநற்றிங்கட்சோகமற்றுணவுமாற்றியிந்தியப்பகைபோற்றிப்
போகமுற்றுதவுமஞ்செழுத்துளத்திற்பொருளெனவருள்வழிநாடித்
தாகமுற்றிலக்கமஞ்சளவுளத்திற்சங்கரன்றனதடித்தலத்தி
னேகமுற்றியற்றிச்சத்தியகிரிமேலிறைவனைக்குறையறவேத்தி. (கூக)

சுடர்மணிகன்னித்தடமுறப்படிந்துசொற்படியாற்றிடிற்சுரும்பார்
மடலவிழ்தழிக்கடவுடன்கணத்துமலிதருதலைவராய்வாழ்வார்
படர்நடைப்புரவிச்சுடரவன்றினத்துப்பற்றமையுற்றடைபரிதித்
தொட † ருபராகமிடரறக்கோடிதுன்னியதென்னுமந்நாளில். (கூஉ)

தென்புலத்தவர்க்குக்கோத்திரநாமத்திறமுரைத்தரிசி ‡ சோதூமம்
பொன்புரையவழும்பொடியினெட்கலந்தேபுதுக்கனிமதுத்துளிபொதிந்த
வின்புறுபிண்டங்குசோதகமுதலவீந்திடின்மாய்ந்தவரெரிகால்
வன்புறுநிரயப்புரையினின்றேறிமாதுயர்வேதனைமாய்த்தே. (கூங)

எழுதெழிலமரர்தொழுதெழுமகளிரிணைத்தமென்கவரிமேற்பணைத்த
செழுமணிமுழுகுமொழுகியபசியசெம்பொனிற்பம்புகிங்கிணியின்
குழுவொடுகெழுமிமழகதிருமிழுங்கொழுமலர்விழுமியவிமானம்
பழுதறவிழைவுபடர்தரவமர்ந்துபற்பலபொற்புறுமின்பம். (கூச)

---

* கரநியாசம், அங்கநியாசம், இருடி, சந்தசு, தெய்வமுதலாகப்பொருந்திய நெறிசளையுணர்ந்து. †உபராகம்-கிரகணம். ‡கோதூமம்-கோதுமை; நீட்டல் விகாரம். கோதூமம் கோதுமை என்பாருமுளர்.

விண்ணவர்வருடமெண்ணுமாயிரமும்விழைந்தபின்வேதியராகி [று
மண்ணிடைநண்ணிப்புண்ணியமறையின்வழக்கொடுமொழுக்கமேமகிழ்ந்
பெண்ணியல்பாகத்தண்ணறன்புரியிற்பிறங்குவர்பிறங்கியதெவர்தந்
திண்ணியவென்புதண்ணியதீர்த்தஞ்செறிந்தவர்சிவபுரந்திளைப்பார். (௬௫)

ஆதலிற்சாதன்மேயதங்குரவரரிநகங்கேசமென்பவற்றைக்
காதலிற்கொணர்ந்தேயேதமின்மைந்தர்கதிதருஞ்சத்தியநதியா
மோதலைப்பரப்பிற்றீதறவமிழ்த்தமுற்றுநீர்பற்றுநாண்முழுது
‡ மோதலற்றமலன்மீதலத்தமர்ந்தங்குறற்கருமின்பமேசிறப்பார். (௬௬)

வேறு.

ஈதிராமஞ்ஞதியே
நீதிராமனீதியே
கோதிராவின்மோதியே
யாதிசேதுவாயதே. (௬௭)

தோற்றச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௬௬.

---

## நாமச்சருக்கம்.

இனியசுவையமுதமெனவிருசெவியுங்குளிர்தூங்கவியன்றகாதை
முனிவரனுரைதனுரைப்பமுழுதுலகுந்தொழுதேத்தமுறைநடாவிப் [க்
பணிவருமும்மதப்பருத்தாட்டிசைப்பகட்டின்செவிப்புறம்பாற்கதிரிற்பாய
குனிதருசாமரைபோலக்குலவுபுகழ்மாந்தாதாகுறித்துச்சொல்வான். (௧)

நெருப்புகுவெங்கதிர்த்தொகையாலிருள்கிழிக்கும் பரிதிமனகிழன்ற சீதத், திருப்புகுநின்மொழிகுளிர்ந்தேசிந்தையிருள்கெடத்தேற்றுஞ்சிறப்பான்மேலும்,விருப்புறுமிப்பதிவேதவனமெனப்பேர்மேவியதுவிரிப்பாயென்னுப், பொருப்புகுதோட்பெருந்திறலான்வினவவருண்முனியவற்குப்புகல்வதானுன். (௨)

செறியுமிருளகலவெழுந்தினகரன்போலுயிரனைத்துந்தெருட்சிகூர
வறிவுதவுமறுவகையாமங்கமொடுந்திகழ்வேதமவற்றினுயுங்
குறிமருவுமிருதியதன்குறிப்புணர்த்துந்தருக்கமுதற்குணித்தநூல்க
ளுறுதியருள்புராணமிரண்டொன்பானுமிதிகாசமொழிந்தநூலும். (௩)

---

‡ ஓவுதல் எனற்பாலது இடைக்குறைந்து ஓதல் எனநின்றது.

உருவுபலகருவிகளுமொடுங்கியிடும்பிரளயத்தினொழிவுதீரப்
பரிதியெனவொளிருமறைதனையடையவவற்றினொடும்படர்ந்துபூமேன்
முருகுதருபருமலரின்முரலுமணியிசையினருமுகந்ததென்ற
லருகுலவுமடைவீசவரசவனந்துயின்மறைசையடைந்ததன்றே. (௪)

உந்திமுதன்முந்துமருத்துணர்ச்சிவழிபடத்தோன்றுமுருவமாற்றி
யந்திமதிநந்துசடையடிகடிருவடிபரவற்காயவேடம்
புந்தியுறவந்துகொடும்பொருவிறவமருவியுடற்போகமற்றே
யிந்தியமைந்துந்துமனத்திடைமடக்கிப் * பசிக்கிளங்காலிருப்பினாக. (௫)

வேறு.

சத்தியநதியின்மூழ்கித்தரங்கவண்டிரங்கும்பூவாற்
கத்திகைப்படலைமாலைக்கடுவமர்களத்தினானுக்
கத்திரன்மணியினோடுமணிந்தபிடேகமாற்றற்
குத்தரதிசையினைஞ்ஞானேருங்குவிற்கிடையினாற்றி. (௬)

விரைதருதூயவேதவமிர்தமென்றதற்குநாம
முறைபெறவியற்றிப்பூசையுபகரணங்களோடுங்
கரையொடுதினமுமாற்றிக்கனைகழலிராமற்காயும்
புரைதருபிரமகத்திநீக்கியபுனிதன்றன்னை. (௭)

குணங்குறியனைத்துநீங்கிக்குழைந்தவருளத்திலின்பாய்
மணங்கமழ்ந்திலங்குந்தூயவளரொளியதனைவாக்கு
மணங்குறவமலமாகியனந்தமாயருவாயாவிக்
கிணங்குமானந்தமாயவிறைவனையென்றுமேத்தி. (௮)

முற்றியநியதியோடுமுறைவழிபூசையாற்றிப்
பற்றிய † குறையுஞ்சாற்றிப்பற்பலநாளும்போற்றக்
கற்றையங்குழலாள்பங்கிற்கண்ணுதற்பெருமான்காணப்
பெற்றமீதமர்ந்துதோன்றப்பெருகியமகிழ்ச்சியோடும். (௯)

தொழுதெழுந்தாடிப்பாடிச்சுருதியேமுதலதம்பாற்
பழுதின்மந்திரங்களோதிப்பரமமாயொன்றாய்ப்பாசக்
குழுவகன்றமலமாகிக் ‡ கோசமற்றனந்தானந்த
முழுதுமாயுணர்வுமாயமுதல்வனேபோற்றியென்று. (௧௦)

விழிதருவாரியோடுமெய்ம்மயிர்ப்புளகம்போர்ப்பக்
கழிபெருங்காதல்கூரக்கழல்பணிந்துருகிநிற்பப்
பொழிதருகருணைவேலைப்புங்கவன்புன்மையாவு
மொழிதிறொன்றுவகையோங்கவுரைத்தனனுலகநாதன். (௧௧)

---

* பசிக்கிளங்காலிருப்பினாக எனவும்பாடம். † குறை, கல்வியறிவொழுக்கங் குன்றிய பிராமணர்களால் அத்தியயனஞ் செயப்பெற்றுத் தமது மந்திரசத்தி, வீரியசத்தி குன்றிய குறை. ‡ ஈண்டுக் கோசம் என்றது அன்னமயகோசமுதலிய பஞ்சகோசங்களை.

தோற்றநம்முருவிற்பெற்றீர்தொழும்புமாய்ச்சுடருமாய்ப்பேர்
யாற்றருங்கரையிற்பூசையியற்றினிரியாவரேனும்
போற்றுமித்தலத்துப்பூசைபுரிந்திடின்முன்னந்தோற்ற
மாற்றுவமன்பின்மிக்கார்க்களித்திடாதனவின்றுமே. (கஉ)

இன்னவாறுமக்குவேண்டிற்றீகுவமுரைத்திரென்னுப்
பொன்னவாம்பவளமேனிப்புண்ணியன்புகலவேத
முன்னலாமுறையின்யாருமொழிந்தனர்முடிவிலாதோ
யன்னவாறருளேயாகிலறைகுவமமலவென்பார். (கங)

வேண்டியவரமூன்றுகுமேலையோய்விரும்பிக்கேட்கிற்
றீண்டரும்பதிதர்தூர்த்தர்செறிந்தபாசண்டர்தீயோர்
மாண்டருங்குணமிலாதார்மறையவரென்னநாமம்
பூண்டறைந்திட * வாலாமைபூண்டனம்புனிதமற்றே. (கச)

வீரியசத்தியாவும்வீந்தனமீளநின்று
லாரியமாகியாக்கமடைந்துறுவலியினோடும்
பேரியல்புனிதமாகப்பிறங்கலொன்றென்றுபேசுங்
† காரியமனைத்துமாயுங்காலையிற்கலக்கமற்றே. (கரு)

நினதடிக்கமலம்போற்றிநிலையுமிப்பதியின்மேவி
முனமனுவுருவமாற்றிமூதுலகறியாவண்ண
மினமுறுவிலங்குபுள்ளுருத்தருவரிலிவற்றிற்காய
மனமாறுருவாயீன்றவைகண்மற்றதுவும்பேசின். (கசா)

எத்திசையவரும்போற்றுமிப்பதி, யிலிங்கம், ‡ பாதி
தத்தியோசனைவிசாலச்சத்தியநதியும், யாங்கள்
பத்தியாற்படைத்தநன்னீர்ப்பட்டமும், பரசியெம்பேர்
வைத்துலகியம்பல்வேண்டுமற்றுமோர்வரமுமுண்டால். (கஎ)

விற்பெயர்த்திங்கள்போற்றும்வெங்கதிருதயத்தாக்க
முற்றிடுவிதிபாதத்துமுதல்வநீமுனியாதெம்பா
லற்புதத்தோற்றமீந்தாயற்றைநாளியாவரேனுஞ்
சொற்படு § தீர்த்தநான்கும்படிந்துனைத்தொழுதுபோற்றின். (கஅ)

பரவையிற்பரந்ததீயபழவினைமாற்றிப்பாலா
விரவியசெல்வநல்கிவீடளித்திடுதல்வேண்டும்
வரமிவையென்னப்போற்றிவணங்கலுமதியக்கிறறி
னரவணிபெருமானன்றென்றவ்வரமனைத்துமீந்தே. (ககூ)

---

* வாலாமை-சுத்தமின்மை. † ஈண்டுக் காரியம் என்றது மாயாகாரிய மாகியபிரபஞ்சத்தை. ‡ அரையோசனை விசாலமுடைய பிரவாகிக்குஞ் சத்தியநதியும். § நான்கு தீர்த்தங்களாவன மேற்கூறிய மூன்றும், வேதாமிர்தமுமாம்.

ஆருயிர்க்குவகைபூத்தவாநந்தவமுதவேலைச்
சீருறுமொக்குள்போலுஞ்சிவகுறிசேர்ந்தொன்றுகப்
பாருறுவிலங்கும்புள்ளும்பன்மரத்தொகையும்புல்லுந்
தேருறுமறைகளாகித்தெரிவொழித்திட்டவம்மா. (உ௦)

ஆயநாண்முதலாவேதவனமெனவமர்ந்தநாம
மேயதப்பதியுஞ், சோதியிலிங்கமும்வேதநாதன்,
றூயநன்னதியும்வேதநதியெனச்சொல்வர், பூமேற்
பாயவத்தடமும்வேதாமிர்தமெனப்பன்னினாரே. (உக)

கூற்றுயிர்குடிக்குங்கோலக்குரைகழலமலன்போலப்
போற்றுமிவ்வுலகின்மிக்கபுங்கவரில்லைபூமேற்
சாற்றுமிப்பதியின்மிக்கதலமிலைதழைந்துசெந்நீ
ரூற்றிருந்தருமுக்காலுமொளிதிகழுருவவேலோய். (உஉ)

யோசனையிரண்டின்மேவியுலகுறுமொளிகட்கெல்லாம்
பாசனமாகித்தீயபரவைநீர்பருகும்வேலை
யாசனமென்னச்சோதியமலனுக்கன்பராகு
மாசனமிடைந்துவேதவனமிகமலிந்ததன்றே. (உ௩)

வேறு.

பெருமையெவரளந்தறிவார்பெறுமனைதனலங்கவர்ந்தபேதைதானு
நிருமலனதுலகணைந்துநிகர்க்கரியபேரின்பநிகழுமென்று
லிருமையினுமிப்பதிபோலின்பமுறும்பதியுலகத்தில்லைமேலாங்
குருமணிவெண்குடைநீழற்குளிர்தூங்கவுலகளிக்குங்கொற்றவேலோய்.

வேறு.

விரிதருமிக்கதைபலகலையுட்டெளிவிளைவாகும்
பரிவொடுசொற்றவரெழுதிவடித்தவர்பகர்வாரு
மிருசெவியுட்கொடுபெருமகிழ்வுற்றவரெவரேனுந்
தெரிதருமுத்தியினிலகுவரத்தருசிவனேடும். (உ௫)

நாமச்சருக்க முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் உ௭௧.

---

# மேன்மைச் சருக்கம்.

கருவிருந்துடைந்தகதிர்நறும்பாளைக்கடிகமழ்புதுமதுக்கான்று
திருவிருந்திலங்குஞ்செழுமடற்கமலநிறைத்திடுந்தேன்பொதிவெள்ளம் [க்
பெருவிருந்தென்னப்பெடையளிக்குலங்கள்பெறுஞ்சுவைபிறங்கிசைபேச
குருகிருந்தருந்தும்பெருமறைவனச்சீர்கூறெனமுனிவரன்கூறும். (க)

இழைத்தவெந்தீமையெவற்றையும்போக்குமெண்ணியபயனெலாமாக்குங்
குழைத்தவெங்கொடுநோய்த்திரளெலாநீக்குங்கோதிலாநந்தமேதேக்குந்
தழைத்தநற் ✻ சாந்திதாந்தியேபெருக்குந்தளர்மனத்திருளெலாமுருக்கும்
பிழைத்துணர்ந்தயரப்பெருகியதிருக்கும்பிரித்துளமன்பினுலுருக்கும். (௨)

இரவிபோலகைத்தினிருளையீர்ந்தளிக்குமிக்கதையிமையவராலும்
பரவுதற்குரியதவிர்மணிநிரைவெம்பரப்பினுற்பசுங்கதிர்தூற்று
மிரவெரிமரத்தினெழுஞ்சுடர்ப்பாவையிளங்கதிரொளிசெயக்கோபங்
கரவொரீஇக்களிக்குமறைவனக்காதைகேளெனமுனிவரன்கழறும். (௩)

மறைவனப்பெருமையெவரளந்தறிவார்மல்கியவல்வினைக்கானங்
குறைபடக்கனற்றுந்தாவமாமன்றிக்குலவியசித்திகட்கிடமா
மிறைமலர்க்கழற்கீழிருப்பவர்கணங்களிருடிகளிலங்குமாயோகர்
கறையறுமன்பிற்கலுந்தவர்நிறைந்துகயிலையிற்காரிகையுடைத்தால். (௪)

காட்சியாணினைவாற்கரைதலாற்றருமங்கலப்பதுகருத்தினைப்பரமற்
காட்சியாயுறைதற்கமலமாக்குவதாமனுதினங்களியளிப்பதுவா
மாட்சியார்குணங்களனைத்தையுமருளிவருத்து † முத்தாபமுமாற்றிச்
சூட்சியாலறிதற்கரியசிற்பரமாந்துணிமறைக்கிழங்கெனச்சுடரும். (௫)

கரைபொருகங்கைக்காசிநற்காஞ்சிசிதம்பரங்கதிதருபழைய
வரையிடைமருதுவாஞ்சியஞ்சுவேதவனங்கமலாலயமதமா
வுரைதருதானமுதலியபதிகளொலியினுற்கலிமெலிதீர்த்தந்
தரைமலிவதரிமுதலியவனங்கடம்பினுஞ்சால்புபெற்றோங்கும். (௬)

அருந்தவந்தானமகமனுப்போற்றலழற்செயல்பாவனையாதி
திருந்தியதருமச்செயலெலாம்வேதவனமெனச்செவிப்புலங்கேட்கப்
பொருந்தியவோசைப்பயன்கலையொன்றுபோன்றிடாபுரிந்தவெம்பாவப்
பெருந்தழல்வேதவனமெனநினையும்பெருக்கினிற்பெரிதவிந்தடங்கும். ()

குருகேர்காசிபுட்கரமேல்வைகொளும்பிரயாகையேகங்கை
பொருகடற்புணருந்தலமிவற்றொருபான்புரிதருவருடமுமேவ
வருபயன்முழுதுமொருதினத்தளிக்குமறைவனமெனினதுபோலத்
திருவளர்தானமினையமூவுலகிற்றெரிதரினில்லையாற்சிறந்தோய். (௮)

உவவுபராகமகோதயமருத்தவுதயமேயயனமொன்றொன்றைக்
கவவியதிங்சட்பிறப்புமற்றின்னுங்கதிவிதிபாதமென்றறங்கள்
குவவுநாள்வேதநதிமுதலாயகுளிர்புனலாடியேதான
மவவுறவீந்துவேதநாயகனதடிதொழவமரர்நாடளிப்பார். (௯)

---

✻ சாந்தி-பொறியடக்கம். தாந்தி-மனவடக்கம். † முத்தாபம் ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், அத்தியான்மிகம் என்பன.

எண்ணறுந்தீர்த்தமுளமறைவனத்திலிலஞ்சியேபடுகுழியேரி
நண்ணியகிணறுந்தீர்த்தமாய்ப்புனிதநல்கிடுஞ்சூரியதீர்த்தம்
புண்ணியசோமதீர்த்தமென்றிவற்றிற்பொருந்தியங்கவரவர்நாளிற்
கண்ணியாடினர்தாங்கதிர்மதிபதத்திற்கலந்துறுமின்பமேகாண்பார். (கo)

வேறு.

வேதமாநதியேயாதிமறைவனமேய்தீர்த்த
நீதியாற்படிந்துவேதநிமலனைப்பணிந்துபோற்றிப்
பாதகமனைத்துநீங்கிப்பரகதியோகஞான
மேதமில்சித்திசெல்வம்பெற்றவரெண்ணிலாதார். (கக)

அருந்ததிகேள்வன்மேவியித்தலத்தரனைப்போற்றி
வருந்தியகுட்டநீங்கிமணியணிமேனிபெற்றான்
பெருந்திருவளருஞானபாவனைபிறங்கிவாயா
திருந்தவர்புனிதரல்லான்மறைவனமெய்தற்பாற்றே. (கஉ)

சத்தியகிரியின்மேவிச்சனகனேயாதியோக
வித்தகர்ஞானம்பெற்றார்விசுவரூபனைக்சொல்பாவந்
தத்தியிந்திரனுமுய்ந்தான்றனதனுநிதிக்கோனுய
யித்தலமேவியின்னுமெண்ணிறந்தார்களுண்டால். (கங)

ஆரணவனத்துமேவியகிலமாயனந்தமாய
பூரணன்றனைப்போற்றப்புகழ்திருவின்பமாயுள்
சீரணிதருமமாதிசெறிந்திடுமீங்குத்தோற்றங்
காரணனருளாலன்றியெய்திடார்கருமந்தன்னால். (கச)

மன்பதைபறவைகீடமாமரம்புன்மற்றியாவும்
பொன்பணிமறைசைமேவித்தோற்றமேபொருந்துமாயி
னின்புறுமுத்திவாயுமியமனதுலகமேவார்
வன்புறுமரணத்தாலுமிப்பயன்வாயுமன்றே. (கரு)

பொன்னவிர்மறைசைமேவிப்பொலிதருதீர்த்தமூழ்கி
மின்னவிர்வேணிவேதநாயகன்விடங்கமூர்த்தி
யின்னறீரிராமநாதனியாழ்ப்பழித்தினியசொல்லா
ளன்னையும்பரவமுத்திதங்கரத்தனவாமன்றே. (கசு)

ஞானவிஞ்ஞானநோன்புநலந்தருகல்வியோகந்
தேனனமொழியார்மைந்தர்திருப்பெருஞ்சிறப்பேயின்ப
மூனமிலுடம்புசெவ்வியுயர்வொளிமாயணுதி
வானவர்பதங்கள்வேண்டின்மறைவனம்வணங்கல்வேண்டும். (கஎ)

வேண்டியசித்திவெற்றிமேவலர்த்தொலைத்தல்வீறு
தீண்டியவியாதிதீர்த்தறிருவளித்திடுதலாதி
யீண்டியவனத்துமேவுமிருளறவிலங்கிப்போதந்
தூண்டியவிளக்குப்போலுமறைவனந்தொழுவார்க்கென்றும். (கஅ)

பிறவிவெங்கடுவைத்தீர்க்கப்பிறங்கியவதகமாகு
மறவியையொழிக்கும்வேதவனம்பணிந்திடுதல்போல
வறவினைவிரதந்தானமருந்தவம்வேள்வியாற்றுந்
துறவியென்றிவற்ருலீசனுவந்தருடுன்னுனன்றே. (௧௯)

இமையவர்பதங்கண்மாருதிருப்பதற்கிங்குமேவி
யமைதரவிழைவார்தீமையாற்றினர்க்கார்வமின்றுந்
தமைநிகர்தவத்தோர்க்கிச்சைதழைத்திடுந்தருமமாக்கு
முமையெனவளிக்கும்வேதவனத்தினுக்கொப்பதுண்டோ. (௨௦)

பழையனபுதியதூலப்பகுதியசிறியவென்பிற்
றழைவனமேதைமேயதருமனவாக்குக்காயத்
துழையனபுந்தியோடுமுற்றபாதகங்களாதி
மழையனகண்டன்வேதவனமெனமடியுமன்றே. (௨௧)

நிரம்பியபிரமமாகிநிறைந்தொளிர்ஞானம்போல
வரம்பில்புண்ணியத்திருகுமறைவனமடைதல்வாய்மை
பரம்பியபெருமைபொய்யென்றெண்ணிடிற்பாவந்தீமை
புரம்பொடித்தவன்றனாணைமெய்யெனப்போற்றுவீரால். (௨௨)

மதிப்பெயரயனமாதியாயிரம்வருந்தியாற்றி
விதித்திடுங்கழுவாயீரைந்தாயிரம்விளைத்துவேதந்
துதித்தவைமுழுதுங்காயத்திரிமுதற்றெடங்கிப்போற்றிக்
கதித்திடுங்காசியாதிகளிவொடும்பணிந்துபோற்றி. (௨௩)

அலகறுந்தீர்த்தமுற்றுமாடியுமகலாப்பாவம்
பலகரிந்தடங்குந்தூயமறைவனம்பற்றினோம்பா
னிலவியவருடங்காறுநிறைமறைவனத்துச்சேராக்
கலர்தமைநிரயத்தாக்குங்கடிமறைவனத்துளானே. (௨௪)

முடங்குவெண்டிரைசூழ்வேதவனத்திடைமுளைத்துத்தோன்றி
நுடங்கியகொடிகளாதிநுவற்சிசேர்பொருள்கள்யாவும்
படங்கிளரரவம்பூண்டபகவனதுருவமாகு
மிடங்கிளர்பெருமைசேடனிசைக்கினுமிசையாதன்றே. (௨௫)

ஒருமுறைசேரவேதவனத்தினையொழியும்பாவ
மிருமுறைதருமமீண்டியெண்ணியதுவன்றுமூன்றே
தருமுறைமுத்தியெய்ந்துசங்கரனுருவமாவார்
மருமுறைக்கயிலையாதியித்தலமாட்சியின்றே. (௨௬)

இப்பதிதன்னிற்சேற்றமரணமொன்றெய்துமாயின்
வைப்பெனமுத்திவாயும்வானவர்தமக்குமெய்தா
தொப்பறுதலத்துமேன்மையுரைத்தனமுரைத்துமீளச்
செப்புவதென்னைஞானந்தீர்ந்தும்வீடெய்தலாமே. (௨௭)

கூறுமுனிவசிட்டன்றூயகோதமன்பிருகுகுச்ச
னூறுசுகன்பரத்துவாசனத்திரியுயர்மார்க்கண்டன்
பெறுசதானந்தன்காதிபெற்றவன்பராசரப்பேர்
சிறுவினன்புலத்தியன்காலவனெனுநீர்மைமிக்கான். (உஅ)

கண்ணுவன்முதலோர்நீறுகண்டிகைநிறைந்தமேனி
யெண்ணுமஞ்செழுத்தும்பெற்றுரியன்மறையங்கமாய்ந்தார்
நண்ணுநன்முத்திவேண்டிநகைநிலாமதியஞ்சூடும்
பெண்ணொருபாகற்போற்றிமறைவனம்பிரியாரென்றும். (உசு)

வருணனும்பிரமகத்திமாற்றியித்தலத்தினுய்ந்தா
னிருணறுங்கூந்தற்செவ்வாயுருப்பசியீயுமின்பப்
பொருணயந்தனங்கன்போற்றப்புரூரவாப்பொருந்தினன்மற்
றருணவின்மறைசைமேவியளவிலரார்வங்கூர்ந்தார். (௩0)

மணிமதிண்மாடகூடமண்டபங்கோபுராதிப்
பணியிணைமறைசைநாதற்கியற்றினர்படிகள்சூழ
வணிமணிகன்னித்தீர்த்தஞ்செழுங்கலானமைத்தோராகப்
பிணியறப்போகந்துய்த்துபபெறுவதுவீடுபேசின். (௩க)

வேறு.

ஆர்கலியுலகினமர்தலானுடலமகற்றலாலருவினைப்பிறப்பாற்	[றி
சார்தருநெறியானினைவினுல்வினையின்றருக்கெலாம்பொருக்கெனவொருக்
நீர்தருசடிலநிமலனதுலகநெறிசெலவறிவுடனுதவுஞ்
சீர்தருகடவுட்பதிமறைவனம்போற்சிறப்புறுந்திருப்பதியிலையே. (௩உ)

மறைவனமுறைவமென்றெழுந்திடையேமடியினுமடைவரும்பதங்க
ளிறையவனருளுமடைந்துவந்தவர்தாமீறிலாவின்பமேயிசைவார்
பொறையுறுமிறும்பினடவியிற்பிறந்துபோக்கருமவர்களும்புந்தி
நிறைதரநினையிற்றுதிசெயிற்கறையினீங்கியேநீங்ககன்றிடுவார். (௩௩)

என்புகவருந்திவன்புறநோற்றுமெரியெனவருவினையீர்ந்துந்
துன்பறுகதியின்முன்புறமுயல்வார்துணிவொடுமெனினுளந்தூயோ
ரன்புறுதொழிலாலின்புறமறைசையளியினிலெளிதுறவளித்தன்
மன்பதையுணராதின்புகளிழத்தன்மருடருமாயையின்வளனே. (௩௪)

ஒருகணமதனிற்பாதியேநிமிடமோதியவதனரையேனுந்
திருகியவெயிலுக்குடைந்துகாலாற்றச்செறிநிழற்கொதுங்கினரேனுங்
கருமலிபிறவிகடந்துவீடடைவர்கலிவலிமெலிதரக்காயும்
பொருவருமறைசைமாதமோர்வருடம்பொருந்திடிற்புகல்வதுமுளதோ.

வேதகானனத்துவிமலனைப்பணிந்துமின்னொடுவன்னிசேர்வெறியார்
போதணிநீழலமர்ந்துநூற்றெட்டுப்பொருவிலஞ்செழுத்துருப்புரிந்தோ
ரேதமதகன்றுமற்றையதேயத்திறக்கினும்யாதனையெறிந்தே
நாதனஞ்செழுத்துமுமையுடனோதநாடரும்வீடடைந்துய்வார். (௩௬)

விலங்கெழுபறவைவிட்டிலீகறையாங்மென்புழுமேவியபிறவு
மலங்கொளிமறைசையாருயிர்விடுநாளணிவலச்செவியினஞ்செழுத்தும்
புலம்பறப்பரமனுரைசெயுமதனாற்புரிவினைத்திரிபெலாம்போக்கி
நலந்தருகயிலைமலிந்தரனுருவாய்நயப்பர்மால்வியப்புறும்பயனே. (௩௭)

பொங்கியநிகமவனமிறும்பூதுபொலிந்திடப்பொருந்துமாசரித
மிங்கிதன்பெருமையெண்ணரிதாகுமியாவரேயளந்தினிதிசைப்பா
ரங்கதிற்றணியாவினையுமப்பதியாலளிப்பதற்கரியதோர்பயனுந்
தங்குமூவுலகத்தினுமிலையமலன்றானெனத்தழைவுறுந்தகைத்தால். (௩௮)

திருத்தகுமருத்தோதயமெனுநாளிற்செறிகுவமறைவனமெனறே
வருத்தமோடியங்கோரியோசனைபிரசாபத்தியப்பயன்றனைவழங்கும்
பெருத்திடுந்தூரமாயிடினனந்தம்பெருமகப்பேறுறுமோங்குங்
கருத்தொடுமருத்தோதயந்தனில்வேதக்கடிமலர்க்கானனங்கலந்தே. (௩௯)

நீதியினுச்சிநிறைமணிகன்னிநீரிடைநியதியின்மூழ்கி
வேதியர்தமக்குத்திலந்தனையளித்துவேதநன்னதியிடைமிளிர்பொற்
றுதினைவேதவமிர்தமேசார்ந்துதரணியைத்தடங்கடற்கோடி
மீதினின்மூழ்கிவெள்ளியையளித்தல்விதியெனவிளம்பினர்மேலோர். (௪0)

ஒல்வகைதானமுரைத்தவற்றுளொற்றியுறுபசிக்கறுசுவையடிசி
னல்வகைநான்கிற்பல்வகைநூலுநானமறைநயத்தொடுந்தேர்ந்து
செல்வகைமறையோர்தமக்களித்தியைந்ததெக்கிணைதன்னொடுந்தேசாய்
வெல்வகைவேதவிமலனுக்குளதாம்வெறுக்கையின்விரகுறவளித்தோர்.

கொலைமுதலாயபாதகமைந்திற்கூடினராயினுங்கூடி
யுலைவறவொறுக்குந்தீவினைமுழுதுமுடையரேயாயினுமவற்றை
யிலையெனமாற்றிப்புனிதராய்த்தெளிவுற்றின்பமேநுகர்வரெஞ்ஞான்று
நிலைபெறுந்திருவுமுண்மையாமுண்மைநிகழ்த்தினநீதிநூற்றுணிவே. (௪௨)

விற்பெயர்த்திங்கண்மாகமென்றிவற்றின்வெறிகமழ்மறைவனமேவிச்
சொற்பெறுந்தீர்த்தநான்கினும்படிந்துசொல்லியதானமுமாற்றிப்
பொற்பின்மாலூரத்தாயிரந்தளத்தாற்புனிதனைப்பூசையும்புரிந்திட்
டற்பொடுந்திங்களுணவொழித்திங்ஙனமர்ந்தவரறநெறிவழக்கால். (௪௩)

தங்குலந்தூய்மையங்குறவளித்துத்தந்தையின்முந்துதென்புலத்தோர்ப்
பொங்குறப்பரமன்றங்குலகளித்துப்புனிதமாம்பதத்தினிற்பொலிவார்
பங்குமைக்குதவுஞ்சங்கரன்மறைசைப்பாலணுவீயினும்பரிவாற்
றுங்கவெற்பளவுற்றெங்குமுற்றுயர்ந்துதோற்றமார்பலத்தினையாற்றும். ()

வேறு.

வார்ந்தநீர்மணிகன்னியின்வயங்கியமேல்பாற்
சார்ந்தவன்னிகிழ்த்தலத்திடைத்தங்குலத்தவர்க
ளார்ந்திடும்பரிசளித்திடிற்சிராத்தமங்கவர்தாஞ்
சேர்ந்தருங்களிதேவர்தம்பதத்திடைச்செறிவார். (௪௫)

கரியமால்வரைபோன்றுயர்விடையினைக்கதிவாய்ந்
தரியதங்குலத்தவருறவத்தலத்துதவி
னரியமென்மயிரெத்துணையத்துணையளவும்
பிரியநன்சிவபுரத்துறுமின்பமேபெறுவார். (௪௬)

மறைவழக்குறுமந்தணர்மறைவனத்தமர்ந்தே
யுறைபவர்க்கருநிதியளித்தவர்பிறர்க்குரைத்தோர்
கறையகற்றியேகண்ணுதற்பெருந்தகைகமலத்
திறைவழுத்திடுமிருபதநீழல்புக்கிருப்பார். (௪௭)

அரதனத்தொளியலங்கியமறைவனத்தமர்ந்த
வரதனுக்குளம்வழங்கியமாதவகணங்கட்
கிரதமுற்றியபாறயிரிழுதுடனென்றும்
விரதமுற்றனமளிப்பவர்வேண்டியவிளைப்பார். (௪௮)

புரிமடம்புனைந்தளிப்பவர்புரப்பவர்மனையோ
டரியபைந்துகிலாடையேமுதலியவளிப்போ
ரெரியெனத்தெறுவறுமையையீர்ந்தவரென்றும்
பரிவினப்பதியுறச்செழும்பழனங்கள்பயந்தார். (௪௯)

நறியநந்தனவனஞ்செயநற்பொருள்கொடுத்தார்
வெறிதருந்தொடைவேய்வதற்காய்ந்தறம்விளைத்தார்
மறிதருங்கரமறைசைநாயகன்சிவலோகத்
தறிவரும்பரவின்பமேய்ந்தமலமாயமர்வார். (௫0)

கடிமணம்பெறக்கன்னியைக்கண்ணுதற்பெருமா
னடியரின்புறவளித்தவர்பொருள்கொடுத்தமைத்தா
ரொடிவறுங்கிளையோடரனுலகிடையுற்றே
முடிவறும்பெரும்போகமுமுத்தியுமுகப்பார். (௫௧)

புலம்புறத்தெறுநோய்மருந்துதவியேபுரந்தார்
வலம்புரித்திரண்மணியணிமறைவனத்தமர்ந்தே
யலம்புபொற்கழலமலனையரிச்சனையாற்றற்
கிலங்குறற் ⁕ திருமுட்டிவைமுதலியவீந்தார். (௫௨)

ஆகமேமுதல்பொய்யெனத்துறந்தவரதிதி
போகமாய்வுறப்புழுங்கினர்புரப்பவரிலாதார்
மூகரங்கமற்றிழந்தவர்க்கனுதினமூசும்
பூகமார்மறைவனத்தனமளித்தறம்புரிந்தார். (௫௩)

---

⁕ திருமுட்டு-பூசைத்தட்டுமுட்டு.

எய்துமெய்ப்பயனீசனேயலதெவரிசைப்பார்
வெய்துறுங்கதிர்க்கோடையின்விரைமலர்குளிரப்
பெய்துசீதநீரளித்தவர்பெருகுமந்தரம்போன்
றைதுறுந்தனமளித்தவர்தம்பயனடைவார். (ருச)

சீதநீர்தரும்பந்தரத்தலத்திடைச்செறித்தோர்
வாதமேமுதனோய்தெறுமருந்தினைவகுத்தே
யாதர்நோய்கெடவளித்தவரருமறையாய்ந்த
மாதவம்பெறு * வரன்பெறக்கன்னியைமணத்தோர். (ருரு)

நதியபாறருங்கோவினைநாகிளங்கன்றோ
டறியுமாமறையந்தணர்க்களித்தவராருஞ்
செறியுமால்வினைத்திருக்கினைமுருக்கியேசெங்கண்
மறியுலாங்கரத்தமலனதுயர்பதிமகிழ்வார். (ருசு)

வையமேத்தியமறைவனத்துறைந்திடுமறையோ
ரையர்யோகிகளிரந்தவர்க்கனந்தினமளித்தோர்
வெய்யதீவினைவீட்டியவித்தகரவரை
யுய்யவேண்டினர்காண்கினும்வினையெலாமோடும். (ருஎ)

ஆதலாற்சிவம்வேண்டினரன்னமேமுதல
வேதகானனத்தளித்திடவேண்டுதல்விதியா
மோதுமாகநற்றிங்களினித்தலத்துற்றே
மொதுநீர்மணிகன்னியினியதியான்மூழ்கி. (ருஅ)

தீங்குதீர்தருசிவநிசியளவுமங்குறைந்து
தாங்குசெஞ்சடைத்தலைவனைப்பணிந்தவர்தடிந்தே
வீங்குவெவ்வினைவேண்டியதிம்மையின்மேவிப்
பாங்குசால்பதம்பற்றுவரமரரும்பரவ. (ருகூ)

நிகமகானனத்தந்தணர்நிலம்பெறவளித்தோ
ரகமளித்தவ § ரான்புரியமர்வரெள்ளளித்தோ
ருகவனற்றிடும்பாதகமொழிப்பர்நென்முதலா
மிகவிருனியந்தனமிவையளிப்பவரென்றும். (சுo)

வேறு.

முட்டறுஞ்செல்வத்திருவமர்ந்துயர்வர்மொழிமறைவனத்திடைமுருநார்
பட்டணிநீவிபணியணிகலவைபானகம்பழமுதல்பனிநீர்
கட்டழகார்ந்தகன்னிகைகாசுகடவுளான்கானைகார்மேதித்
தொட்டனவளிக்கிற்சுருதிநாயகன்றூட்டிணையடைந்தின்பமேதுய்ப்பார்.

---

* வரன்-மணமகன். மணப்பித்தோர் என நிற்கற்பாலது பிறவினைப் பிவ்விகுதி தொக்கு மணத்தோர் என நின்றது. § ஆன்புரி-பசுலோகம்.

வேறு.

விழிகண்மூன்றுடைவிமலனைவேதநாயகனை
யழிவிலாதுயரமலனைப்பணிந்தவற்கரும்பால்
பொழியுமானினம்பொன்மணிபூந்துகிளறுந்தேன்
வழியுமாலைநந்தனவனஞ்சந்தனமணிப்பூண். (சுஉ)

ஆடிசத்திரமாலவட்டங்கொடியாடை
வீடிலாதுயர்பழனங்கள்விரிதருதருமங்
கோடியாதியதிருப்பணிசினகரங்குயிற்றிப்
பீடிஞர்மணிப்பித்திகைமுதலியபேணி. (சுரு)

காய்ந்துகுய்கமழ்ந்தொழுகியவிழுதுதேன்கன்னல்
வாய்ந்தபாறயிர்சந்தனமஞ்சன்மாநெல்லி
யாய்ந்தவோதனமருங்கறிநெய்யுடனமலற்
கேய்ந்தநற்பொருளெவற்றையும்பத்தியினீந்தோர். (சுச)

வேறு.

எப்பொருளேனுமியன்றனவெல்லாமினியனமறைசையீசற்கோர்
வைப்பெனவீகமதூரநற்கீதவாத்தியமயிலனமடவார்
துப்பமைதீபந்தூபநீர்க்குடம்பொன்சொரிமதில்கோபுரந்தூபி
செப்பமைகலசமுட்டமுக்ககற்றிச்செழுங்களபத்தெழில்செறித்தோர். ()

வேறு.

தெழித்துழும்மலமுந்திருக்கினைமுருக்கிச்சிறையெனப்பறைசெயுங்கருவை
யழித்தழியாதவின்பவானந்தமார்ந்தெழும்பொழின்மலர்ச்செழுந்தேன்
கழித்தலைக்கமழ்பூக்கடற்சுறவுழக்கக்கவிழ்ந்தெழுமதுமழைக்கனுழி
சுழித்தலையெதிர்க்குஞ்சுருதியங்கானச்சோதிதன்றுணையடிதுறவார். (சுசு)

மாசிமாதத்துமறைவனமேவிமறைமுறையுத்தரக்கிரியை
தேசினார்மனுவிற்செய்தொழிலிழந்தார்தேசமேற்சென்றிறந்தவர்க்கும்
பாசிலைத்தருப்பையாலுருச்சமைத்துப்பயிற்றியவிதிவழிகனற்றிக்
காசறப்பிரேதக்கடனெலாமியற்றிக்கான்முளையவர்வழிகலந்தோர். (சுஎ)

தருப்பணம்பிண்டந்தழைமணிகன்னித்தடத்தினுஞ்சத்தியநதியின்
விருப்புறுதடத்துங்கரியவெட்கலந்துவிழைந்தவர்கோத்திரமுதல
திருப்புகவுரைத்துச்சிராத்தமுமாற்றநத்தென்புலத்தவரெலாந்திருவாய்ந்
தருப்புறுநிரயமொழித்தரன்புரியிலுவப்புடனுறைகையோடுறைவார். (சுஅ)

தங்குலத்தவரைத்தாங்குதல்வேண்டிற்சத்தியநதித்தடமுதலாப்
பொங்குதீர்த்தத்துப்புரிகுகசிராத்தம்புகரறுத்தவர்நலம்பொலிவார்
கங்குலும்பகலுமெனக்கதிரொருபாற்கான்றிருட்கணமெனவொருபான்
மங்குறேய்மாடம்மறைவனப்பெருமைவகுத்தெவர்வளம்பெறவிதிப்பார்.

எவ்வகையானுமெறிதிரைமறைசையெய்திடமுயறலேயிலங்குஞ்
செவ்வியவறிவுதிகழ்ந்ததேற்றெளிவாமில்லையேற்றீவினைப்பரப்பி
னவ்வியமுறுவரதிசயமுறுத்துமாரணவனத்தினையடையார்
கவ்வியநெறியாற்கதியெவன்காண்பர்காசினிககனமேற்கலந்தும். (எ0)

வேறு.

மைந்துறுசந்தியோடுவந்தனைவருத்திலாதா
ரைந்தழலாற்றலோ * டௌபாசனமற்றதீயோர்
சந்தமார்வேதமோதார்தங்குலத்தவர்கட்காய
முந்தியசிராத்தநல்காரருச்சனைமுற்றிலாதார். (எக)

கொடியபாதகங்களைந்துங்கூடியகொள்கையாரும்
வடிவெனப்பரதாரத்தைமாலுற்றுமுயங்கினரும்
படியறுபனவர்நீத்தபண்ணவர்ப்பழித்ததீயோர்
நொடிதருவேதம்விற்போர்பிறர்பழிநூற்றகீழோர். (எஉ)

உரைத்தனவன்றியாவிக்குறுதுயருறுந்தீதாகி
வரைத்தனயாவுஞ்செய்தோராயினுமறைசைமேவித்
திரைத்தலைத்தீர்த்தமாடிற்றீவினைநீங்கிச்சேம
நிரைத்தநற்பதத்துமேவிநிலைபெறுமின்பமார்வார். (எங)

வேறு.

சிதநீர்வேட்டுச்செறிதருமானைத்தெறித்தவன்றெய்வவேதியரை [று
வாதமதுற்றுவசையுரைத்தடர்த்தோன்மறையவர்க்கொலைசெய்தோன்மா
மோதிடிற்பரத்தைசூத்திரரன்னமுண்டல்களுண்டவட்கூடல்
காதலித்தருந்தல் † பதிதனதழலைக்கைவிடல்களுணன்மானும். (எச)

பாறயிரன்னம்படங்கனிகுளநெற்பசியதாதிவைமுதற்கவர்த
லூறுறுபூரிக்களவினையொக்குமுடன்பிறந்தவளிழிபுடையாள் [தாள்
பேறுடன்பிறந்தோன்மனைவிநட்புடையோன்பெறுமனையிருதுவிற் பெயர்ந்
வீறுறக்கலத்தல்குரவனதில்லைவிழைந்துறுவெவ்வினைபுரையும். (எரு)

பஞ்சபாதகத்தோடொத்தபாதகங்கள்பயின்றனராயினும்பரம
னெஞ்சலில்பூசையியற்றிடார்நாமமிசைத்திடாரிலங்கியபூதி
நஞ்சணிகண்டனன்மணிபுனையார்நாதனதுறைபதிநாடி
விஞ்சுமன்பதனுற்பணிந்திடாராதிவெவ்வினைவேட்கையரேனும். (எசு)

உருத்திரசூத்தம்புருடநற்சூத்தமொளிருமும்மதுத்திரிசுவனங்
கருத்துறுசமகமைந்தெனுஞ்சாந்திகாமருசீருருத்திரமும்
பொருத்தமதாகப்புகன்றிடாப்புன்மைபூண்டவராயினும்புனிதன்
றிருத்தியவேதவனத்தியதீர்த்தஞ்சேர்ந்திடத்தீமையற்றுய்வார். (எஎ)

---

* ஔபாசனம்-ஓர்வழிபாடு ; உபாசனசம்பந்தம் ஔபாசனம்.
† பதிதனதழல்-சிவாக்கினி.

உருவினிற்பொலிந்தோர்தருவெனத்திகழ்ந்தோருயர்குணமொழுக்கம ன்புடையோர், திருவினிற்சிறந்தோரலகினூற்றெளிவுசேர்ந்தவர்தீமையிற் றீர்ந்தோர், கருவினிற்படர்ந்தகாட்சியர்வேண்டுங்கதியினிற்களையறக்கவின் ஞேர், செருவினிற்செயித்தோரனைவருமறைசைச்சிவன்றிருவடிதெரிசித் தோர். (எ௯)

மறைவனத்திறைவன்மணியணிசெழும்பூண்வனைதுகினேத்திரமாழை
கறையறமிழுதுதயிலமேமுதலகளவினிற்கவர்ந்தவர்சாந்த
நறைதருபொருள்களரிசிநெற்பயறுநயந்தவர்நரகிடையூழி [வார்.
குறைவுறப்படிந்துவறிஞராய்க்கொடுநோய்குமைத்திடக்குலைகுலைந்தயர்

வேறு.

என்றறிந்துகரவினையெய்ந்திடா
தொன்றுமன்பினுயருமறைசையிற்
குன்றுபோல்வினைவீட்டிவெங்கோதறத்
துன்றுமின்பிடைத்தூங்கித்தொழுமினே. (அ0)

* அருத்தவாதமிதென்றழிவோதினு
ருருத்தவெந்நரகத்தினுறுவராற்
பெருத்தவெம்முலைப்பேதையொடாயினுன்
றிருத்தமாரறிவாரருட்செய்கையே. (அக)

மறைசைநாதன்மகிழமலிந்தபா
னிறைநெய்யாதிகிரப்புறவாட்டினுர்
நறைகமழ்ந்தநைவேத்தியஞ்செய்தவ
ரிறைவனுயுலகின்புறவாழ்வரே. (அ௨)

மருவிவேதவனத்திடைவாழ்துமென்
றுருகுகாதலினுலுரையாடினுர்
கருகுதீவினைமாட்டிக்களிப்பராற்
பெருகுதீர்த்தம்பிறவற்றிற்பேசினும். (அ௩)

மன்னுமாமறைநாதன்மணத்தெழி
றுன்னுசோதிவிடங்கநற்றூச்சுடர்
பன்னிராமன்பசுபதிதீர்த்தங்க
ளுன்னுவார்வினையூக்கமொழிப்பரால். (அ௪)

புனையுநூன்மணக்காலம்புலர்ந்தபின்
வனையுநூலினர்மா † சவகிரணந்
தனையுமேவினர்தாம்படிந்தித்தல
நனையுந்தீர்த்தந்தொழவினைநாசமே. (அ௫)

---

* அருத்தவாதம் - துதிவாதம். † அவகிரணம் - சிதறுதல். எனவே, தூவறுதல் என்பது ஈண்டுத் தாற்பரியமாயிற்று.

* கோசம்பத்திற்குலவியவிப்பதி
வாசமேவிமடிந்தவர்யாவரு
மீசனுருலகெய்துவரேய்ந்திடும்
பாசநாசம்படப்பதியாகியே. (௮௬)

வேறு.

சோதிமறைவனஞ்செறியாக்கால்கண்மரக்காலாந்தொழாதகையுமனை மீதுதொடுத்தகையேமடமான், பாதிதனைப்பணியாததலைசுடரின்றலையாம் பரமனடிகாணுதகண்களுழையின்கண்ணு,மாதிபுகழணியாதசெவியுமெலிச்செவியாமரன்புகழைப்பரவாதநாவுமலைநாவா,மோதிவலஞ்சூழாதவுடம்புசவமாகுமுயிர்ப்புமவன்பணியிலதேற்றுருத்தியுயிர்ப்புறுமே. (௮௭)

இந்தியங்கடொழின்மாறிநரைதிரைமூப்புறுமுன்னியங்குமூடறளர்ந்தவசமெய்தியழிந்திடுமுன்,மைந்தருமைந்தாறுகிளையுமனையுமனையாளுமாயமெனவுவர்த்தாயுண்மழைமுகின்மின்மதியிற், சந்தமறைவனமேவத்தாநினைந்தபயனுஞ் சங்கரனொடொன்றுகுந்தன்மையுமாந்தாழ்க்கிற், பந்தமுறுமுடல்சுமந்துபிறந்துபிறந்துழன்றே படுநிரயக்குழிக்கிரையாய்ப்படருறுவீர்பல்கால். (௮௮)

குழவியெனும்பருவமறியாமையினுற்கேடாங் குலவுநலம்பொலியிளமைகொம்மைமுலையவர்க்காம்,பழமையுறவருமூப்புஞ் † சத்தியினுலழிவாம் பகற்பொழுதுமனைவாழ்க்கைப்படுநிரப்பிற்பாழாம், விழிதுயிலககலவிதனைவிளைக்கவிரவொழிவாம் வெய்யகொடுநோய்பிறவாம்வெந்துயரால்வீயும் பழிபெருகவுறுமாயுளென்றுமறைவனத்தின்பாற்படர்ந்துபணிந்தமரர்பணிசெயவீற்றிருப்பீர். (௮௯)

காலனுமைக்கவர்ந்துகொளக் கரந்தனனும்பின்னே கண்ணியெனப்பொருவிடயக்கவர்ச்சியினைக்காட்டி, யேலுமளவுறிந்துயிரையெரிநிரயத்திடுமென்றெற்றெனவேயிரங்கிடுவீர்பற்றனைத்துமொருவிச், சாலுமறைவனமேசத்தளர்விலதாமறியீர்சரீரமலக்குழம்புவர்நீர்தசைநிணஞ்சேர்தடியாற் கோலுமுடைத்தீயவினைக்குவையளவிலாசை குடிப்பிறவிக்கொள்கலமாங் குறித்தறிந்துகொளுமே. (௯௦)

நிலையிலதாமுடலதனுனிலையுளதாமூர்த்தி ‡ நிகமவனத்துறுநெறியை நினைந்தடைமினிதிபோன், றலையிரவியாயுடனையளந்தளந்துகொடுபோகியாறுதலைப்பெறுமிருநான்காயிரம்பத்தாகும், குலைகுலையுமியோசனையிற்கூற்றமுறுமளவுங்கொடியநெறித்துயரெரியுங்கொடுநிரயங்கொடிதால், வலையினுறுமறிபோலமடிந்தயராதுமைகோன் மறைவனமேமருவியனூர்மாற்றிமகிழ்வீரே. (௯௧)

---

* குரோசம் கோசமெனமரீஇயிற்று. † சத்தி-இருமல். ‡ நிகமவனம்-வேதாரணியம். நிகமம்-வேதம். § எண்பத்தாறுயிரம்யோசனை.

பெருமபயனூர்மறைவனத்துப்பெருகுமருட்பெருமான்பிறங்குமெழி ன்மணக்கோலப்பேறருளும்பெரியோன், விரும்பினர்க்கோரமுதாகும்விடங்கேசனிராமன் விழைந்தகுறிச்சிவபெருமான்வேதநதியாதி, யரும்பெறனற்றீர்த்தங்களமர்ந்துபணிந்தவர்தா மடர்தருமன்புரியறியாரழல்வினையுமறியார், பொருந்துவதுசிவகதியேபிறப்பிறப்புப்பணிவாற்போயொழிதலான்மறைசைபொருவில்பதந்தருமே. (கூஉ)

சொற்றருமிங்கிவர்நீற்றைத்தரித்தவர்க்குந்துயரஞ்சூழாதுபண்ணவரிற்சோதிமதியணிந்தோன், பொற்பமருமங்கையரிற்பார்ப்பதிவானதியாம் புகனதியிற்சுடரதனுட்பொலியிரவிமனுவு, எற்புறுகாயத்திரிநூலதனிடைமாவேதமந்தணர்நால்வருணத்துளாச்சிரமமதனுட், பற்றறமுற்றவுந்துறந்தோனெறியிடையவ்வேதம்பயிற்றுநெறிமணியதனிற்பரவுகவுத்துவமே.

தாசமொழித்திடுமவற்றுட்டண்மதிதேசிகரிற்றளர்வகலவளர்ஞானந்தருபவன்மாவிளிற்கோ, நாகமதிலிந்திரனூர்சரிபொருப்புண்மேரு நறைதருகற்பகமரத்திருகமதிற்சேடன், போகமுறுமியக்கர்களிற்குபேரனிவரதிகம்பொருந்தியிணையறவோங்கிப்புகழ்படைப்பரதுபோன், மாகநடுக்கிழிவற்றின்மறைவனம்போற்றேசுமருவுபதிபிறிதிலையான்மதியுடைமாதவர்க்கே.

வேதவனத்தேகவெனத்தன்னுளங்கொண்டளவேவெய்யவினைத்திரளனைத்தும்வெருந்துகளாய்மாளு, மாதவனேமுதற்றேவரனைத்துமிதன்புகழே வழுத்துவதுமதிகாரம்வளந்தரப்போற்றுவது, நாதனணியனைத்துமணிந்திளம்பிறைவானதியு நயந்தவவர்தமக்கிரண்டேநம்மிடத்துப்பலவின், முதலினுன்மறைவனத்தினனந்தமுளசெறிந்தா லணிந்திடுமாலவைபிறிதாலாவதிலையெனுமால். (கூரு)

வேறு.

ஞானமுந்தவமும்யோகமுங்கதியுநன்னயமந்திரநவிற்று
மூனமில்வேதப்பயிற்சியுமற்றுமுயர்மறைவனமடைந்துறுத
லானமையாலித்தலமடைநீசனாயினுமதிகனுமறையோன்
முனவிர்வேதமோதியுமுருனேற்றண்ணியனுமெனத்தகுமே. (கூசு)

உயர்மறைவனத்தினேகுவார்க்குண்டியுடைமுதலாயினவளித்தோ
ரயர்பரிமேதப்பெரும்பயனடைவரணிவிழாவாரணவனத்திற்
பெயர்தரமணித்தேர்நடாயினர்கதியேபெறுவரத்தேர்தொழப்பெயர்வோர்
துயரறவேள்விப்பயனையோரடிக்கேதுன்னுவர்தொழக்கருத்துடக்கார்.

குழுவியதருமக்குவையின்மானுடர்மாக்கொடுஞ்சிறைப்புண்மரங்கொடிபுற்
புழுமுதலாகிமறைசையிற்பிறப்பர்புனிதமுத்தியும்பொருந்துவரால்
விழுமியதேவரயன்முதலாகிவீடியேமடிதலின்வேதந்
தழுவியவனத்திற்கிடமாய்ப்பிறக்குந்தன்மையோசாருதற்கரிதே. (கூஅ)

பெறற்கரிதாகுமிராசியம்பரமம்பெரியதிற்பெரியதேபேறு
மறைச்சிரமுணர்ந்தோர்மதிப்பதுமுத்திவழங்குவதரியதினரிதாந்
திறத்ததுகொடியதீவினைதீர்ப்பதழலெனத்தெறுகலிச்செருக்கா
ணிறைத்தவெம்பாவமிப்பதியிலையேனீந்துவதெங்ஙனோவினையின். (௯௯)

மக்களுந்தனமுமனைவியுமாடுமதிப்பருஞ்செல்வமுங்கிளையும்
பொக்கமேமறலிபுகுதருநாளிற்போற்றியகல்வியும்புகலாந்
தக்கதன்றெனவேமறைவனமேவிச்சங்கரற்பணிந்திடிற்றழல்போற்
றெருக்கவல்வினையுந்துரந்தமுக்கொருவித்தூயராய்த்துறக்கமெய்துவரால்.

இப்பதியமர்ந்தேயிழைத்தவெம்பாவமியற்றியதருமமேபோலக்
கப்புறவளருங்கழூஉநிலையிலதாங்களற்குறுங்குஞ்சிமாவடுகன்
செப்புறுஞ்சூலத்தலையெரிகதுவத்திர்தருமத்துயர்தீர
வெப்புறுநிரயத்தடுந்துயர்சுவர்க்கவிளைவுறவடைவையின்வெறுப்பும். (௧௦௧)

பின்னர்நற்கதியிற்பிறங்குவர்மறலிபெருநகர்புகார்புவிப்பிறவா
ரென்னவோர்ந்தவர்தாமறைவனத்தென்றுமிருடருதீவினையியற்றார்
மன்னுவர்தருமவழக்கினுண்மடிநாள்வலச்செவிதன்னினஞ்செழுத்து
முன்னவன்மொழியமுத்தராயமர்வர்முதிர்மறைஞானமற்றவரும். (௧௦௨)

நினையுமாத்திரையிற்கதிதருமறைசைநிமலனுக்கமலமாய்நிறைவார்
புனையுமாதரமார்பணிநனிபுரிவோர்புவியினிற்றேவரேபுகர்தீர்ந்
தனைவயிற்றடங்காதமலவானந்தமார்ந்தரனடிநிழலமர்ந்தே
வனையவீற்றிருப்பராதலாற்பணியேமருவுதன்மாசிலார்கடனே. (௧௦௩)

ஈங்கமர்ந்திடுவோர்க்கிருஞ்சுவையடிசிலீந்துடையில்லமான்முதல
பாங்குறக்கொடுத்தபண்பினரீசன்பணியினைப்பரிவினுற்புரிந்தோர்
தீங்கரிந்தின்பத்தேறலையளித்துச்செறியுடற்பிணிப்பினைத்தெறலாற் [ம்
றூங்கியதோற்றந்தொலைத்தலான்மறைசைசோதிதன்மயானமாய்ச்சுடரு

தலத்தினிற்சலத்திற்றரிப்பனயாவுந்தம்முடனீங்கினுநந்த
நிலத்திடைப்பதியுமாதலாற்கிடநிகருமந்தேவரையாழி
வலத்தினிற்பொலிவோன்முதலியதேவர்மனுபதம்வேண்டினுமளிக்குங்
கலத்திடைக்கமஞ்சூற்புரிவளைதரளங்கான்றிடக்கவின்மறைவனமே. (௧௦௫)

புரிவளைதிரியுங்கங்கையேமுதலபுனிதநீர்படிதலாற்பொலிசீர்
பரிவினற்குழவிபனிமதிநுதலார்படர்தருகல்விநோயின்மை
விரிதருபோகமேவுமெண்சித்திவேலைசூழ்மேதினியளித்த
லரியனயாவும்பரிவமர்மறைசையரனடிதொழவமர்ந்தடைவார். (௧௦௬)

உண்மையேசாதமிதுபழுதின்மையூதியமுவந்துரைத்தனமால்
வண்மையேயுதவுமறைவனம்போலவையகத்தில்லையான்மனத்தி
னண்மையேயுதவுநினைந்தனவெல்லாமரியவீடளவறுபோக
மெண்மையேயளிக்கு * மேடணையகற்றுமின்பமேயிடையறுதியற்றும்.

வறியவர்முகப்பமணிநிரைமாழைவயங்கணிவாரியகுப்பை
யெறிதருவளமார்மறைவனப்பெருமையீசனேயல்லதிங்கெவரே
குறிதரமுற்றமுரைப்பவரறிந்தகொள்கையேகுறித்தனவுரைத்தேன்
வெறிகமழலங்சற்கதிரிலைநெடுவேல்விறலரியேறுசால்வேந்தே. (சO௮)

வேறு.

ஒலியெனமதுரத்தீந்தேனுயிர்த்தயாழ்முனிவனுட்குங்
கலிவலிதொலையக்கூறுங்கதையினைக்கமழுங்கானம்
பொலியுமைமிசத்துமேயபுண்ணியருவப்பச்சூதன்
மலிதரவுரைத்துக்காதைவருபயன்வகுத்துச்சொல்வான். (சOகூ)

பழமொழியீதுசாலப்பயன்படும்பரமமாக்கு
மழகதிர்போலத்தீயமனத்திருளனைத்துமாய்க்கும்
விழைவொடுகேட்டார்சொற்றார்வேண்டியவிருப்பினீந்து
தழைதரவளிக்கநாதன்றனைமகிழ்விக்குந்தானே. (கசO)

அண்ணலாலயத்துவேள்விச்சாலையினமர்ந்துமேவிப்
புண்ணியகதையைச்சொற்றார்பொருந்துவர்கயிலைபூமே
லெண்ணியவேதநாதன்முன்னிருந்திசைப்பராயி
னண்ணியவின்பமுத்தியளிக்குமந்நாதனம்மா. (கசக)

மிச்சில்மண்பெற்றபாரிற்படித்தவர்விழைந்துகேட்டோ
ரச்சமார்நிரயத்தாழ்வராதலாற்புனிதமண்மே
லிச்சையாற்படித்தோர்கேட்டோர்தினந்தொறுமியாகப்பேறே
நிச்சயமடைவர்வேண்டும்பயன்களுநிறையுமன்றே. (கசஉ)

நோயவர்க்குறித்துவேதவனக்கதைநுவலிற்காயுந்
தீயநோயகல்வர்காதைசிறந்தநற்காலமோதிற்
றூயவித்தலத்துத்திங்கட்டுன்னியபயனையெய்வார்
பாயவிப்பதியின்மேவும்பயனிதுபயின்றோர்க்காகும். (கசங)

தெருடரும்வேதமோதிப்புராணங்களனைத்துந்தேர்ந்து
பொருடருமனுவையோதிப்பொருந்தியபயன்மேற்கோடி
யருடரும்பயனைநல்குமனுதினங்கேள்வியாற்றின்
மருடரும்பிறவிநீக்கும்வரம்பில்வாழ்வுதவுமன்றே. (கசச)

* ஏடணை-மூவேடணை.

வேறு.

என்றுசூதனுரைத்தவிருங்கதை
யொன்றுகாதலின்மேவியவுத்தமர்
வென்றுதீவினைவேண்டும்பொருளெலாந்
துன்றுவார்துறவார்நற்றுறக்கமே. (சசரு)

மேன்மைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩அசரு.

---

# சாலிகோத்திரச்சருக்கம்.

---

வேதவனமத்தீர்த்தமெந்தஞான்றும்வீடுதருமேனுமிகுமேன்மைநாளிற், பாதகத்துக்கழிந்துயர்வீர்கடிதுவம்மின்பாற்றுவமென்றறைபறைபோற் பரிவிஞர்க்கு, மாதலினுன்மாசமுதனன்ஞண்மேவியணிமறைக்காடவற்றினுறு ந்தீர்த்தநான்கு, மேதமறப்படிந்துமறையிறையைப்போற்றவிருணீங்கிய ருண்மேவியிருக்கலாமே. (க)

மிக்கசிவராத்திரிவந்துற்றகாலைவேதவனத்திடைமேவிவிளங்குதீர்த்தந் தக்கமுறைபடிந்துணைவுதன்னைமாற்றிச்சங்கரனைப் பூசைபுரிதன்மைநாடித், தொக்கநிசித்துயின்மாற்றித் தொழுதுபோற்றித் தூய்மறையோர்தரும் பூசைத்துறைகளாற்றப், புக்கசிறப்பொடுமறைசைப்புனிதன்பாதம்போற்றி னர்வெம்பிறவியறப்போக்கினரே. (உ)

அந்நாளிற்பிடியளவேயாயதேனுமந்தணர்பாலளிக்கிலவையனந்தமா கு, மென்ஞனுமீயினவைய்றைவற்காகுமெனவுணர்ந்துதனப்பசையற்றீக நாளுஞ், சொன்ஞலுமறியாதசுமடீர்றும்பின்ருெடர்வதொருகாசமுண் டோதுயர்கூர்தீயின், மன்ஞதுவேதவனம்வழுத்திப்போற்றிவறியவர்கட் குறுதியுறவழங்குவீரே. (௩)

இப்பதியினித்தினத்தினிம்மைமேவியிலங்கியதோர்கதையுளதாலிறை வகேண்மோ, வொப்பருமாமறையுணர்ந்தோரொழுக்கம்பூண்டோனுயர்சா லிகோத்திரனென்றுரைக்கும்பேரோன், றுப்பமருந்துகிர்ச்செவ்வாய்மனை விமைந்தர்துயர்விளைப்போர்பலருடையனுதலாலே, வெப்பனையதுயர்வறு மைமிகவுமேவிமிடிதீரக்குறுமுனிபான்மேவினுனே. (ச)

ஆங்கவன்றனேவலினுன்மறைசைமேவியடைந்துசிவராத்திரியினணி நீர்மூழ்கி, யோங்குசிவன்றனைப்போற்றியுணவுமாற்றியுறந்துயிலவ்விரவக ற்றியுமைகோன்பாதந், தாங்கியவன்பொடுபோற்றிமறைசைமேய சங்கரற் குக்குங்குலியந்தன்னையீந்து, பாங்குறநின்றடிபோற்றியன்பினுலே பத்திமி குந்துதியங்கள்பரிவிற்சொல்வான். (ரு)

வேறு.

குழவுறுமதியவிளநிலவளவுகுளிர்சடைக்குழகனேபோற்றி
பழமறைபரவிவழிபடவுதவுபதமலர்ப்பகவனேபோற்றி
மழகதிருமிழுமணியணிசுடிகைவரியரவணியனேபோற்றி
கழலடிபரவுமடியவர்மிடிமைகளைதருகளைகணேபோற்றி. (௬)

புரமெரிகதுவிநொடியிடைமடிவுபுகவருள்புனிதனேபோற்றி
யுரமெதிர்கவரவருதிருவிலியையுருவிலிசெயுமிறைபோற்றி
சுரவரியுரியுழரிபுனைவரதரதிபொதிசடிலனேபோற்றி
கரவுறமருவவருமிரவரவுகளைதருகளைகணேபோற்றி. (௭)

வேறு.

எரியனையகொடுந்தீமையியற்றிச்சோரவிடும்பையொடுங்கொடுந்துய ரத்திடையேவீழ்ந்து, தெரியுமுணர்விழந்தறியாச்சிறியேனன்பிற்செறிந்த றியேன்மறந்துடலஞ்சிதைந்தவாறே, விரிநரகுக்கிரையாகிவிழுவேனின்சீர் மெய்யடியாரிணைமறியாவெறியேனுய்வான், வரிசொரியுமதர்நீலமடமாதோ டுமறைவனத்துநிறைவரனேபோற்றிபோற்றி. (௮)

ஒழுக்கமருளுபசாரமுணர்வுசீல முயர்வுறுதியொழிதருமமுவத்தலா தி, விழுக்குணங்களொன்றுமிலேன்வெம்மைசீற்றமிடிபடிறுகொலைகளவு வேட்கைகாமம், புழுக்குடையுமுடலகந்தைபொக்கமாதிப்புலைக்குணங்கட் கிலக்காகிப்புவனிமாலால், வழுக்கியுனைமறந்துழல்வேனறிந்துவாழ்வான்ம றைவனத்துநிறைவரனேபோற்றிபோற்றி. (௯)

தருமநெறிவழுவாததவத்தினோரைச்சார்ந்தறியேனவரடிகடலைமேற் கொடேன், கருமமருவுபெரியதுயர்க்கடலிற்பட்டேகாசினியிற்பிறந்திறந்துகவ லையுற்றேன், வெருவியுனைச்சரணமெனமெலிவுதீர்க்கவிழைந்தடைந்தேனி னிப்பிறப்பில்வீழாவண்ண, மருவியுனதடிமேவிநெடிதுவாழ்வான் மறைவ னத்துநிறைவரனேபோற்றிபோற்றி. (௧௦)

கூற்றினுறுபயமொழித்தேன்பிறவிசெற்றேன்கொடுந்துயரக்கனலவி த்தேன்குடும்பங்கூடி, யாற்றுமவாவினைப்படுத்தேன்வறுமைதீர்த்தேனரியு மிரவினையடர்த்தேனவசமாகத், தோற்றியகாமாதிகளைத்துணித்தேனென் றுந்தொழும்பாகச்சுருதிவனமேயகோவைப், போற்றியருளானந்தப்புணரி மேவிப்புகலாகியன்பினுருப்பொருந்தினேனே. (௧௧)

வேறு.

எனத்தொழுதிரவுநீக்கியிரவியினுதயந்தோன்ற
மனக்களியோடுந்தூயமணிகன்னிமூழ்கிவாய்மை
யுனத்தகுகருமமாற்றியுயர்மறையொருவற்கூட்டி
யினத்தபாரணமுமாற்றியிருத்தலுமறைசையீசன். (௧௨)

மிடியறவெறுக்கையீயமேவினன்விழைந்தேயேகித்
துடியிடைமடவார்மைந்தர்தம்மொடுந்துவன்றியின்ப
முடிவறநுகர்ந்தேயென்றுமொழிசிவநிசியின்மேவிக்
கடியுறமறைசைமுத்திகலந்தனன்காதன்மிக்கோன். (கங)

பொற்சிவநிசியினற்பம்புரிந்தளித்ததுவும் * பூதி
வெற்பெனப்பயனையன்றேவிளைத்ததுவேதநாத
னற்பழுமனந்தமாகவளிக்குமித்தலத்தின்மேன்மை
யொற்கமுற்றுயர்ந்தசாலிகோத்திரனுணருமன்றே. (கச)

அகலிகையோடுகூடுமழல்வினையிங்குத்தீர்த்தா
னிகலரிவசிட்டன்மைந்தர்கௌசிகனீந்தசாப
முகவுறுபுலையத்தன்மையொழித்தனரீங்குமேவி
மகவியன்மறைசைபோலவையகத்தில்லைமன்னோ. (கரு)

வேறு.

தலமிதுசத்தியமுலகினின்மிக்கதுதணவாதே
யுலவுவினைக்குவையழலினனற்றிடுமொழியாதே
யிலகிடுமிப்பதிவிதரணமற்பமுமியல்யாதுங்
குலவுகிரிக்கிணையுறுமிதுகொற்றவகுறிநீயே. (கசு)

சாலிகோத்திரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சОஉ.

---

# பிரமோபதேசச்சருக்கம்.

இனமொருகதைமறைவனமெனவுறுபெயரெண்ணுவதுளதாமா
லனையதுபகருவனடையலரணிமுடியம்மனைசெயும்வேலோய்
கனவெனமுழுதுலகழிதரமுதல்வருகண்மலர்மலர்மேலோன்
றனதுறுதொழில்செயநினைவுறுபொழுததுதன்மையினறியாதே. (க)

இனைவுறுகவர்நெறிபலவுறவினியிதுவெங்ஙனமுளதாமென்
றனையெனவருடருமறைவனமணுகினனண்ணலதருண்மேவித்
தினகரரொளிபலவிரவியமணிநிரைசெம்மியதிரள்வாயுந்
தனைநிகரரமியநிறைபதிமருவியதன்னிலைதளர்வோவ. (உ)

எரியெனவருதுயர்விரிதருதவநெறியிடர்படுபல்கால
மரிதரமருவினனழிபசியனிலனையயில்வதுமரிதாகப்
பரிவுறபிரமனதருணெறிதெளிவுறுபரனவனுளமேவக்
கிரிதருகுமரியொடணுகிலனெனுமதுகெழுமியபடராக. (௩)

---

* பூதி-பொன்.

பரனமரழலிடையவிதனசிரநிரைபலிதூவத்
திரமுறநினைதலுமறைவனமருவியதிருவாளன்
வரமுறுகுறியுருமருவினனெழில்பொழிவடிவாகிப்
பிரமனதெதிருறமருவினனிணைவிழிபெரிதாக. (ச)

விழியெதிர்மருவியவிமலனதிருவுருவெளியாகக்
கழிபெருமகிழ்வொடுகளிதரவளரொளிகரைகாணு
துழிதரவழிதருபிறவியினெறிகெடவொளிர்பாத
மொழிபெறுதுதியொடுபரவினனிணையனமுதுவோனே. (ரு)

வேறு.

வேதத்தெளிவாகிவிளைந்தமலப்
போதத்துருவாகியபுண்ணியனே
நாதத்தொளியேநலமேநகையார்
சீதப்பிறைமேவியசேகரனே. (சு)

அனுபூதியினாரமுதாயொளிரும்
புனிதாபுகலாகியபுங்கவனே
கனிவாய்மொழிகாமர்கலந்தெழிலார்
முனிவாமுதலாகியமுன்னவனே. (எ)

வேதாடவிமேவியவித்தகனே
நாதாவுனையன்றிநயந்தறியே
னுதாரமுமாளெனையென்றடிமே
லோதாமகிழ்வோடுபணிந்தனனே. (அ)

அனமேலவனன்புறமாதரவா
லெனையாளுடையானையிறைஞ்சுதலு
மனமேவியதேதெனமாமலரோ
னெனதாந்தொழிறந்தருளென்றிடலும். (கூ)

* வெருவுற்றுயிர்வெம்பியவூழியினம்
முருவுற்றெழியாதுருவுய்ந்துயருந்
திருவுற்றனமாமறைசேர்தலினின்
றருநற்றொழிறன்முறைதந்திலதால். (கo)

எல்லைக்கிணையாகியிலங்குலக
மொல்லைத்தருமாறுலவாதொளிருந்
தொல்லைத்திருமாமறைசொற்றிலதே
லில்லைத்தொழிலெய்துவதென்றறிநீ. (கக)

---

* ஊழிகாலத்திலே வேதங்கள் நம்மிடத்துவந்தொடுங்குதலினால்.

முறை * சாதமொழிந்தருள்வேதமெலா
மறைவாமுனைரென்றயனுதரவா
லிறையோதிசைமெய்ப்பயனீயவெழுங்
கறைபோயொளியோடுகளித்தனனே. (கஉ)

களிவந்துளமேவியகாதலினு
லெளிவந்தனையென்னனையாரெதிரே
தெளியுந்தரமாவதுசெய்வதெனு
வொளிவந்தொருவாய்மொழியோதினனே. (கஙு)

எல்லாவுயிருங்கதியெய்திடுமா
வல்லாயொளிவாருமிலிங்கமதா
யெல்லார்தருமிப்பதிமீதமர்வாய்
நல்லார்தொழுதீறினலம்பெறவே. (கச)

என்றேதொழுதெண்ணியிரந்திடலு
நன்றேயெனநாதனயந்தொளிருந்
தன்றேசுதழைத்தவிலிங்கமதா
யொன்றேபரமென்னவுறைந்தனனே. (கரு)

இன்புற்றுணர்வாகியிலங்கியெழு
மன்பிற்பொலியும்பரமக்குறியாய்
முன்புற்றதுகண்டெழு † மோதமுறு
வன்பிற்புரியேகினன்மற்றவனே. (கசு)

வேறு.

ஒளிவளரிலிங்கமீதுலப்பிலாப்பரத்
தெளிவுருவாயதுசிற்பரத்தனி
வெளியெனவிளங்கியேவேதமூர்த்தமாய்க்
களிதரவின்பமேகாட்டுங்காணவே. (கள)

தேற்றியமெய்ப்பொருடெரிக்குஞானமுங்
காற்றினைமாற்றியேகணித்தயோகமு
மாற்றியதுறவுடனன்புமின்றியும்
போற்றினர்முத்தியிற்பொருந்தநல்குமே. (சஅ)

கண்ணுறினுற்றியகடியபாதகம்
பண்ணியவெரியுறுபஞ்சிற்பாறுமா
லெண்ணியபயனெலாமேயுமுற்செயும்
புண்ணியர்க்கல்லதுபோற்றற்கொண்ணுமோ. (கக)

* சாதம்-பிறப்பு. எனவே, சிருட்டி என்றதாயிற்று.
† மோதம்-சந்தோஷம்.

ஊழியுமிக்குறியொடுக்கமின்றியே
* தாழியின்மறையெலாந்தாங்கிவைகுமாற்
பாழியவினையெலாம்பாற்றற்கெண்ணுவீ
ரேழிசைமறைவனமிறைஞ்சவேயுமே. (௨௦)

வேறு.

அயற்குபதேசமளித்திடுகாதை
மயற்குறைதீரமதித்தமனத்தார்
கயற்கணிபங்குறைகண்ணுதல்பாத
மயர்ப்பறவைகியலங்குவரன்றே. (௨௧)

பிரமோபதேசச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௨௯.

---

# நியமச்சருக்கம்.

புரிநரம்பிரங்குமதுரவொண்கீதப்புதுமதுபொங்கரிற்பொலிவான்
விரிதருகமஞ்சூற்கருமுகிலடுவெண்விளங்கியகளங்கறுமதிபோ
லரமியப்பரப்பினரிவையரளிக்கவரம்பையர்நிரம்பியகளியாற்
றிரிதருமிறைவன்மறைவனம்விதியிற்சேர்பவர்செய்கையுமறைவாம். (௧)

நன்னுறுபதியிற்பனவர்தம்மருளாற்றகும்பதிபுகுந்துமீள்காறு
மனமுறநிலைவையும்பிறர்தராதுகராதவியுணவுழிபசிக்கருந்தி
மனமுறநலடக்கித்தயிலதாம்பூலமதிக்குடைபாதுகைமாற்றி
யினமுறுகருமநியதியின்வழுவாதியன்றவஞ்செழுத்தினைநவின்றே. (௨)

† அந்தணரொழிந்தோரவரவர்க்கிசைத்தவழன்முதற்கருமமற்றெவையுஞ்
சிந்திடாதொழுகித்தீர்த்தநற்பயனைச்சேர்வர்மற்றல்லவர்சேரார்
நந்தலுமண்பிறர்பானயந்திடாதிறையுநற்பயனற்றசொன்னவிலா
திந்தியமடக்கியீசனைத்தொடர்ந்திவ்வியாத்திரையியற்றுதல்கடனே. (௩)

உறைபதியதனின்மறையவர்க்கூவியுவந்தளிவந்தனவுதவிக்
கறையறமனச்சங்கற்பமுமேவிக்கரிசொழித்ததர்முறைகடந்தே
யிறையவனுறையுமறைவனமடைந்தேயியற்றியபயிற்றியவினையின்
சிறையுறுமயிருங்குறையுறமழித்துத்தீம்புனலாம்படிபடிந்தே. (௪)

---

* தாழி-சாடி. † அந்தணரும் ஒழிந்தோருமென்க. அல்லவர், நித்திய கருமாதிகள் விட்டவர்.

அந்தணர்முன்னர்த்தந்தசங்கற்பத்தாக்கியவினையெலாஞ்சாற்றித்
தந்தியிற்கலன்களுந்தியகோடிசத்தியநதியிவற்றாடிப்
* பந்தியிற்றேவர்ப்பணியுமுனுபயபாதமேற்பரமனைப்பணிந்து
நந்தியிற்பொலிவுதருமணிகன்னிநற்றடமுற்றாடன்மூழ்கி. (௫)

உரம்புனலூறநின்றாறும் † பவமானத்தோர்ச்சியின்மார்ச்சனமாற்றிக்
குரம்புரம்புனிதங்கொடுத்தகோமயமுங்குஞ்சியிற்கொண்டுநெஞ்சகத்துப்
பரந்துருபதமுமிரணியசிருங்கப்பதிகமுங்கதிதரப்பயின்றே
நிரம்பியபுனலுளிருபிறப்பாளர்நியதியிற்படிவதுவிதியே. (௬)

சுருதிநூற்கருகரல்லவர்மடவார்சுடருமஞ்செழுத்தினைவழுத்தித்
திருவநீர்படிகமருவுநீர்க்கடனித்திறத்துறமுடித்தபின்றேசு
கருதியேபுரியுங்கேத்திரசிராத்தங்கரியவெட்டருப்பணம்பிண்டம்
பொருவறத்தத்தங்குலத்தவர்தழையப்பொக்கமற்றக்கணம்புரிந்தே. (௭)

உளப்பசையகற்றியளப்பருமறைகளுணர்ந்தவர்ப்புணர்ந்திடவொளிர்பொ
வளப்பணி§குடப்பான்மண்ணையான்பண்ணைவனைதுகிலினையனவழக்கா [ன்
றளப்பறவளித்தேயழிபசிக்கழியாதன்றுபவசித்துமற்றையநாட்
களப்பழமிடற்றான்கழலிணைபணிந்துபாரணங் § கவிகையோடாற்றி. (௮)

நீங்கறவமர்ந்துதாங்கருதியநாட்செலவவர்திரிவிதகரணந்
தாங்கியபிறவிவீங்கியநூற்றிற்றரும்பெருவினையெலாந்தகர்த்தே
யோங்கியதிருவிற்பாங்குறவைகியுறுமுடலிறுமுறையுதிப்பத்
தேங்கியவின்பந்தூங்கியபதத்துச்சிவன்கழற்சேவடிசேர்வார். (௯)

வேறு.

உலகமூன்றினுமிதுவெனவுறுவினையகற்றி
யிலகுநற்பதமளித்திடும்பதியிலையிதனு
லலகினற்றவமாற்றினர்க்கல்லதிவ்வமலங்
குலவுநற்பதிகூடுதற்கெளியதோகுறிக்கின். (௧௦)

---

* ஈண்டுப் பந்தியிற்றேவர் என்றது மணிகன்னிதீரத் திசானதிக்கில் வீற்றிருக்கும் தண்டபாணியையும், வைரவக்கடவுளையும் எனவறிக. முதல் வேதாரணியேசுரரையும், அதன் பின் தண்டபாணியையும், அதன்பின் வைரவக்கடவுளையும் வணங்கி, அதன் பின்னரே மணிகன்னிகையில் ஸ்நானஞ் செய்வது விதியாகலின், பந்தியிற்றேவர்ப் பணியுமுனுபய பாதமேற் பரமனைப்பணிந்து என்றார். † பவமானமென்னும் வேதமந்திரோச்சாரண சகிதமாகச் சரீர அழுக்கைத் தேய்த்து. மார்ச்சனம்-துடைத்தல். துருபதமும் இரணியசிருங்கமுமாகிய வேதமந்திரங்களைச்செபித்து. § குடப்பால்-பசுப் பால். குடம்-பசு. § கவிகை-ஈகை.

வேறு.

காய்வினைமுற்றுந்தீயெனவுற்றேகடிகாமர்ப்
பாயருள்சுற்றுமாயமகற்றும்பதியீதா
லாய்பவரற்றஞ்சாயவ்வளித்தங்ககன்ஞாலந்
தாயெனமற்றுஞ்சேயினளிக்குந்தனிவேலோய். (கக)

நியமச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சகூச.

---

# சேதுயாத்திரைச்சருக்கம்.

பருவமாறும்பயனையெக்காலமும்பரப்புந்
திருவிஞகரமாகியமறைசையிற்செப்பும்
பொருவில்யாத்திரையப்புரியமர்ந்தவர்போந்து
மருவிஞரவரியர்வருமாற்றுதல்வழக்கே. (க)

சேதுயாத்திரைமுதலியபுரிந்தவர்தேறற்
போதுசூழ்தருமறைசையிற்புரிவுடனுறைந்த
கோதுதீர்பயன்குறுகுவர்குறித்தனவுறுமான்
மாதுபாகனுமகிழ்ந்திடுமெனமுனிவழங்க. (உ)

வேந்தனுழ்கடன்மேகலைமேதினிமடந்தை
காந்தனேரறக்களித்துவெங்கவலைவான்கடலை
நீந்துமெற்கரனெடுங் * கதைக்கரந்தளர்நீங்க
வேந்துமையநீயாத்திரைநெறியியம்பெனவே. (ங)

தெரிக்குமாமறைவனத்திடைச்சேதுயாத்திரையை
விரிக்குமேலவர்நலிவுறுர்வினையெலாம்வீழ்ப்பர்
தரிக்குஞ்சீர்க்குருக்கேத்திரமும்முறைசரித்தோர்
பரிக்குநற்பயனொருமுறைமறைவனம்பயக்கும். (ச)

என்புகத்தரு † மதிப்பெயரயனமீரைம்பான்
வன்புறத்தரும்பயனையுந்தெற்குமானசத்தி
னின்புறத்தருமியாத்திரையெட்டினற்பயனு
மன்புறத்தருமறைசையோரியாத்திரையதனுல். (ரு)

---

* கதைகளாகிய கைகளானவை தளர்வுநீங்கத் தாங்கும்.

† மதிப்பெயரயனம்-சாந்திராயணம்.

செங்கண்மாயவனியாத்திரைமுன்செய்துதேனார்
வெங்கண்மாபதிச்சேதுயாத்திரைசெயுமேலோர்
திங்கண்மாமுடிச்செல்வனாயவன்புரிதெளிவார்க்
தங்கண்மாநிலத்தரனொடுமமர்ந்துவீற்றிருப்பார். (௬)

பிரமயாத்திரைமும்முறைபேசுமானசமாய்
விரவியாத்திரையெண்முறைகாசியின்மேன்மை
பரவியாத்திரைப்பயனெலாமறைவனம்பயிலா
தரவினாற்றியசேதுயாத்திரையொன்றுதருமே. (௭)

முற்றுமெய்ப்பயன்முனிவரன்மொழிசெயவேந்தன்
கற்றுநூற்கருத்தளந்தறிகடவுண்மாமுனியே
பற்றுமித்தலைச்சேதுயாத்திரைவிதிபரிவாற்
சொற்றுளத்திருடொலையெனநாரதன்சொல்லும். (௮)

முன்னர்நாளரியாத்திரைமொழிமுறையாற்றி
யின்னதீர்தரத்தரையிடைத்துயின்றினிதெழுந்த
பின்னர்வைகறைக்கடன்முடித்தழல்விதிபேணி
நன்னர்மேயசங்கற்பமுநவையறவாற்றி. (௯)

ஆற்றுநற்றவரரன்புரி * கிளையொடுமமர்வான்
றேற்றுமிப்பதிச்சேதுயாத்திரைசெய்கேன்றீமை
மாற்றுநீயெனமறைவனச்சோதியைவணங்கிப்
போற்றுநீர்மணிகன்னியிற்படிந்தருள்புரிந்தே. (௧௦)

அறையுமா † மணிகன்னியீசன்றனையருச்சித்
திறையதாகியகாசிவிச் சுவேசனையிறைஞ்சி
நறைகொடுண்டிவிநாயகனுமமார்வடுக
னுறையுண்மேவியங்கவர்க்குபசாரங்களுஞற்றி. (௧௧)

கூறுமுனிப்பெயர்க்கூவலிற்படிந்திருட்குழாங்க
டேறுமணித்திரைச்சத்தியநதியினைச்சேர்ந்து
மறுவில் ‡ கற்கொடைமுதலியவழங்கிமாகடலி
னாறுநதிப்புனல்படிந்துநற்றானமுமுதவி. (௧௨)

---

* ஈண்டுக் கிளை என்றது இருபத்தொருதலைமுறைச் சுற்றத்தை என அறிக. † மணிகன்னியீசன் மணிகன்னிகேசன். வடுகன் - காலவைரவர்.

‡ கற்கொடை, ஸ்நானபலத்தை அபகரிக்கும் பிப்பிலாதி என்னும் பைசாசத்துக்கு அஃதபகரியாமைப் பொருட்டுப் பலியாகப் பாஷாணதானஞ் செய்தல். முதலிய என்பதனால் பழம், தாம்பூலம், தக்ஷிணை முதலியனவுங் கொள்க.

அந்நதிக்கரையலங்கொளியிலிங்கமாயமரு
மின்னவிர்த்தவேகாம்பரன்காளத்திவிழைந்தோன்
பன்னகச்சடைக்குடந்தையம்பராபரன்கூடற்
பொன்னகர்க்கிறையேகமலாலயப்புனிதன். (கங)

தீதிலாதகேதாரமேன்மேயசிற்பரனைப்
போதுதூயருச்சனைபுரிந்தடிமலர்போற்றி
வேதமாநதிதன்னையும்பணிந்துபின்விடைகொண்
டாதி * யக்கினிதீர்த்தத்தினடைந்துகல்லளித்தே. (கச)

வாரியிற்படிந்ததன்கரைமருவியேவயங்குஞ்
சீரியற்பெறு † மிலிங்கமூன்றீச்சுரஞ்சேர்ந்த
பாரியற்பரவன்னமும்பரத்திரவியமுஞ்
சாரியற்பிரதிக்கிரகப்பெயர்தானும். (கரு)

உரைத்தவீசரைப்பணிந்துபோ ‡ யுருத்திரகோடி
விரைத்ததீர்த்தத்துக்கற்கொடுவேலையின்மூழ்கித்
தரைத்தலைப்பணிந்தகன்றுபோய்க்கொடுவினைசாயத்
திரைத்தசேதுவைப்பணிந்துசங்கற்பமுஞ்செய்தே. (கசு)

§ பிப்பிலாதியென்றுரைத்திடுமனுமுதற்பிறங்கச்
செப்புமெட்டினுற்சிலைக்கொடைமுதலியசெய்தே
தப்பிலாச்சமுத்திரவயுநவப்பெயர்சதுர்த்தி
கப்பிலாதுறத்துவாவிதிமந்திரங்கரைந்தே. (கஎ)

+ இரணியசிருங்கமாதிமனுவெலாமியம்பிவேலை
பரவியேபடிந்துமூழ்கித்தருப்பணம்பயிலவாற்றிக்
கரவறுசிராத்தம்பொன்னிற்கேத்திரபிண்டங்காரெட்
டரு[illegible]ம்புலந்தவர்தமையச்செய்தே. (கஅ)

---

* இவ்வக்கினிதீர்த்தம் அகத்தியான்பள்ளிக்குநேரே சமுத்திரத்துள்ளது. † ஈச்சுரஞ்சேர்ந்த இலிங்கமூன்றுவன பரான்னேசம், பரத்திரவியேசம், பிரதிக்கிரகேசம் என்பன. ‡ இவ்வுருத்திரகோடி குளகேசர்சந்நிதிக்குநேரே சமுத்திரத்துள்ளது. § பிப்பிலாதிமுதலியன வேதமந்திரங்கள். செப்பிமேட்டினுர் சிலைக்கொடை முதலிய செய்தே எனவும்பாடம். சமுத்திரவயுநவமென்னும் மந்திரத்தை நான்காம் வேற்றுமையுருபீறுகச் செபித்து. அது சமுத்திரவயுநவாய என்பது. அய என்பது ஆரியத்தில் நான்காம் வேற்றுமை யுருபு. ஈண்டுச்சதுர்த்தி என்றது நான்கனுருபை. துவாவிதி மந்திரம்-துவெள இதி மந்திரம்; இரண்டென்னு மந்திரமென்பது பொருள். துவெள என்னும் பதத்தை முதலாகவுடைய மந்திரமென்பது தாற்பரியம். + இரணியசிருங்கமுதலியன வேதமந்திரம். பொன்னிற்கேத்திரபிண்டம் பொற்காசை மேல்வைத்த க்ஷேத்திரபிண்டம.

வெள்ளியின்றுனமாதிவேதியர்க்கருளிவேண்டி
யுள்ளியதுணர்த்திமீள்கமற்றையினுக்குரியரல்லார்
தெள்ளியஞ்செழுத்துமோதிச்சேதுவிற்படிந்துசெய்க
வள்ளியதானமீண்டோர் * சித்தராச்சிரமமன்னி. (௧௯)

சித்தரைப்பணிந்துபோற்றி † வடதருச்சென்றுசூழ்ந்தே
யத்தகப்பரவித்தூயகுளகனுலயத்தையண்மிப்
பத்தடுத்தொன்றுமேயவுருத்திரர்பரிந்ததீர்த்த
நத்தெழப்படிந்துபோகியமுதபுட்கரணிநண்ணி. (௨௦)

பத்தியிற்படிந்துபோந்து ‡ கௌளதீர்த்தத்தும்பாங்காற்
புத்தமுதுருவமாயகுளகனைப்புரிந்துபோற்றி
யத்தனதருகுமேற்கின்முத்தியீசனையுமாரின்
கொத்தவிழ்சடைக்கந்தேசன்றன்னையுங்குறித்துப்போற்றி. (௨௧)

கணபதிதனையும்போற்றிக்காரிகை § யுமையாள்காமர்
மணமலிபொய்கைமூழ்கிமாதவளுவப்பநல்கிக்
குணமலிகன்னிதானங்குறுமுனியிருக்கைமேவி
யிணர்தருமிரவியீராறியற்றியதடத்துமூழ்கி. (௨௨)

இனியபாலரிசியென்றவிவற்றினென்றளித்தே ┼ யங்கிப்
பனியபுட்கரணிமூழ்கிப்பரிவுடனசத்தியேசன்
புனிதவீரடி ○ யுலோபாமுத்திரைபுணர்த்தவீசன்
கனியுமத்திரியினேடுகண்ணுவன்கருதுமீசன். (௨௩)

பணிந்தெழுந்தியமன்றீர்த்தந்தும்புருபட்டம்பாரை
யணிந்தநாரதன்றனுவியாடியேயமலமாகித்
திணிந்தவாச்சிதைத்துமீளத்தெளிமணிகன்னியாடித்
துணிந்தவன்போடுவேதநாதனைத்தொழுதுபோற்றி. (௨௪)

இராமநாதனையும்போற்றியிலங்கியதூபந்தீபம்
விராவுபாயசந்தாம்பூலம்விரிவுடன்விதியினல்கிப்
பராவியதுதியுமாற்றிப்பணிந்துபின்பகலைப்போக்கி
யிராவினையகற்றிமாற்றியிந்தியக்கவலையீர்ந்தே. (௨௫)

---

* இச்சித்தராச்சிரமம் சித்தாச்சிரமம் என வழங்குகின்றது. இது ஆதி சேதுவுக்கு மேற்கேயுள்ளது. † வடதரு-ஆலவிருக்ஷம். இவ்வேகாதச ருத்திரதீர்த்தம் குளகர்கோயிற்சமீபத்துள்ளது. ‡ கௌளதீர்த்தம் கௌளபுட்கரணி. கந்தேசன், சுப்பிரமணியக்கடவுள் பூசித்த சிவலிங்கப்பெருமான். § உமையாள்பொய்கை உமாசரசு. மாதவள்-அம்மாது. குறுமுனியிருக்கை அகத்தியான்பள்ளி. இரவியீராறியற்றியதடம்-துவாதசாதித்த தீர்த்தம். ┼ அங்கிப்பனியபுட்கரணி-அக்கினிபுட்கரணி. இது அகத்தியான்பள்ளியிற்சிவாலயசந்நிதியிலுள்ளது. ○ உலோபாமுத்திரீசன், அத்திரீசன், கண்ணுவேசன்.

கதிரவனெழுந்தகாலைக்கடன்முறையனைத்துமாற்றி
விதிவழிமறையோர்க்கன்னம்வெறுக்கையோடளித்துமேவிப்
பதிகொள்பாரணமுமாற்றப்பயனுறும்பரிவிற்செய்க
* மதியினிற், பருவந்தன்னின், வருடத்தினேனும், வாழ்வார். (௨௬)

ஆதிதன்புரியிற்சேதுயாத்திரைமுடியுங்காறும்
பாதுகைகுடைதாம்பூலம்பயனில்சொற்பரிந்துநீக்கி
யோதுபவாசமேவியுஞற்றுகவுஞற்றுமேலோா
காதிவெவ்வினைகண்முற்றுங்கண்ணுதல்கழலிற்சார்வார். (௨௭)

வேறு.

தளருமூப்பினர்நோயினர்வலியிலார்தகுஞ்சீர்
வளருமிக்கதைமதிக்கவப்பயனுறுமருள்வாய்ந்
துளருமந்தணர்வதைமுதற்றீவினையொழிக்குங்
கிளரும்யாத்திரைபுரிகிலாருடற்பயன்கெழுவார். (௨௮)

சேதுயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சஉக.

---

# தக்கிணமானசயாத்திரைச்சருக்கம்.

இன்னம்வேறொருயாத்திரையியம்புவனிலங்கொளிமணியாரம்
பொன்னங்குன்றெனப்பொலிதடங்குலவுதோட்புரவலவதுகேணீ
முன்னர்நாளயின்றொருபொழுதறநிலைமுறைவழிச்சங்கற்ப
மின்னல்போயறத்தக்கிணமானசமிழைக்குவனெனச்செய்தே. (௧)

வேறு.

காலையழற்கருமமுதற்கடன்முடித்துவெய்யவினைகடிவானன்னூற்
பாலையுறுதக்கிணமானசமாயயாத்திரையான்பரிவினுற்ற
மாலையிளமதியணிந்தாய்வயங்குமநுமதியீந்துமகிழ்தியென்று
மேலையுலகமரர்பணிவேதநாயகற்போற்றிவிடையுங்கொண்டே. (௨)

பனவரநுமதிமேவிவைகறையிற்கோசிகனீர்ப்பட்டமூழ்கி
முனமருவு†சமிபரவிமுனிவரருக்கனமுதலமுறையினீந்தே
யனகமுறுமரீசியொடுகிருதிதருந்தீர்த்தத்தினடைந்துமூழ்கிக்
கனகமுழுந்துடனருளிச்சத்தசாகரதீர்த்தங்கலந்துமூழ்கி. (௩)

---

* இவ்வியாத்திரையை, மாசந்தோறும் செய்க. அதுகூடாதாயிற் பருவந்தோறும் செய்க. அதுவுங்கூடாதாயின் வருடந்தோறுமேனும்-செய்க.

† சமி-வன்னிவிருக்ஷம்.

வாவியிருந்திசைகடோறுமலிந்தபெரும்புனல்படிந்துமணிவழங்கி
மேவிமனுதீர்த்தத்திற்படிந்தெழுதும் * புத்தகத்தைவிருப்பினீந்து
காவிமலர்சஞ்ஞைதருமிலஞ்சியினிற்கலந்தாடிக்கசிவினொடு
நாவிகமழ்ந்தூறியநெய்த்தானமறையவர்மேவநயப்பினல்கி. (௫)

திசைமுகங்கடோறும்போற்றுந்தினகரன்சேர்சூரியபுட்கரணிசேர்ந்தே
நசையினொடும்பணிந்†தானைநல்கிரவியீசனையுநயந்துபோற்றிப்
பசையுறுபாயசந்தீபம்பரிந்தளித்துச்சோமனருள்பட்டமூழ்கி
வசையறவெண்டுகிற்றானம்வழங்கிமறையவர்தமக்குமகிழ்ச்சியோடும். ()

வலிநீலன்றடமூழ்கியஞ்ஞானமோசனமாம்வாவியேய்ந்து
‡ கலிநாசமலிதீர்த்தங்கலந்துவிசுவத்தேவர்கமழுந்தீர்த்த
வொலியாரும்புனல்படிந்துபணிந்துவிசுவேசனையுமுவந்துமூழ்கி
மெலிவீருஞ்சத்தமருத்துறுந்தீர்த்தந்தானியமும்விருப்பினீந்தே. (௬)

அறநெறியான்மருத்தீசன்றனைப்பணிந்துநெய்த்தீபமாற்றிப்போற்றி
விறன்மருவுசாம்பவன்றன்கயமணுகிச்சங்கற்பம்விளைத்துமூழ்கி
நறமலர்சூழ்கேத்திரபிண்டாதிகுலத்தவர்க்களித்துநல்கித்தான
மறமருவுமனவாக்குக்காயத்துப்படைத்தவினைவருத்தமெல்லாம். (௭)

தீர்த்திடுகவெனத்தீர்த்தப்புனலருந்தியென்றீமைசெகுத்திசேர்ந்தா
ரார்த்திதணிப்பாயெனவேயருக்கியமீந்தாச்சியமுமறவோர்க்கீந்து
தார்த்தடந்தோட்சுசேனனருந்தடமூழ்கித்தாம்பூலதானமாதி
பார்த்தலையிற்சுரர்க்களித்துப்பணிவினொடுமேற்றிசையைப்பரிந்துகாக்கும்.

வருணனெடுங்கயத்தடைந்துமறையினவற்குரியமனுவழுத்திமூழ்கி
யருணயந்தவருணேசனருச்சனையும்புரிந்தவன்முன்னசுவதானங்
கருணையுறவழங்கியபின்பரத்துவாசன்றீர்த்தங்கலந்துமூழ்கித்
தெருணயந்து§கோதூமதானமளித்தஞ்செழுத்துஞ்சிறக்கவோதி. (௯)

வீரசத்தியொழித்தருளும்விநாயகனைப்பணிந்தவற்குவிளக்குத்தேங்காய்
மூரனெடுமோதகமுங்கன்னலுமீந்தணியுமணிகன்னிமூழ்கி
யார்வமொடுபணிந்தரனையத்தினத்திற்றுயிலுணவுமகற்றிப்பின்னு
னீரமுடனந்தணருக்கூட்டியபின்பாரணமுமியற்றல்வேண்டும். (௧௦)

---

* புத்தகதானஞ் செய்து. † ஆனைநல்கி-கோதானஞ்செய்து. ‡ கலிநாசதீர்த்தம். விசுவதேவர்தீர்த்தம். சத்தவாயுக்கள் தீர்த்தம். § ஸம்கிருதநூலார் கோதூமம் இயற்பெயரெனக்கொள்வர். தமிழ்நூலார் கோதுமம் இயற்பெயரெனகொள்வர். இக்கொள்கைவேறுபாடு மேலுங்குறிப்பிக்கப்பட்டது.

தக்கிணமானசமாகச்சாற்றியயாத்திரைபுரிந்தோர்தங்கடமை
யக்கணமேவிடுத்தமலனருள்பெறுவர் * கிருச்சிரமெட்டமைத்தார்பேறு
தொக்கனவாமற்றையநாள்சுடர்த்தினத்திற்பதின்மடங்காஞ்சோமனுளின்
மிக்கசதகுணமாகும்புருணசத்தித்தீவினையும்விளியுமன்றே. (கக)

தக்கிணமானசயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சசுஉ.

## பிரமயாத்திரைச்சருக்கம்.

பிரமயாத்திரைபேசுவங்கேளினிப்பிறங்கியமகரத்தே
விரவுமம்புலிவிளங் † கபிசித்திடைமேவுநாள்விதிமுன்போற்
பரவவாதரித்தபரபக்கப்பதினுன்கினிற்பரிவோடும்
வரமதாமணிகன்னியின்மூழ்கியேவருநியதியுமாற்றி. (க)

வேதநாயகற்பணிந்துவெவ்வினையினைவீட்டியேமெய்ஞ்ஞானம்
போதநல்குதியென்றுரைத்துப்புறம்போந்துபோதகத்துண்டி
நாதனுர் ‡ மணிகன்னிவீரக்கொலைநடுக்கியநயினுர்தம்
பாதமூலமும்பணிந்துதெங்கின்கனிபரிந்தளித்தருள்பெற்றே. (உ)

கவயன்றீர்த்தமுங்கவாக்கனற்றீர்த்தமுங்கலந்துடன்படிந்தாடிச்
சுவையுறுங்கனியளிக்கதாம்பூலமுங் § கந்தமாதனன்றாய்நீர்
குவவுதீர்த்தத்திற்படிந்துசந்தளித்தபின்குளிர்மருத்துயர்தீர்த்தம்
நவையறப்படிந்தெட்படுபிண்டமுநற்குலத்தவர்க்கீந்தே. (ங)

வாயுவீசனைவணங்கியஞ்சமுதமும்வழிதரப்பொழிந்தானும்
பாயசான்னமும்பச்சிலைகாயுடன்பரிந்தளித்தவணேகித்
தூயநீர்ப்பிரமன்றருதீர்த்தமுந்தொழுதுபூசுரர்க்கூட்டி
யாயுமப்பிரமீசற்குநிவேதனந்தூபதீபமோடாற்றி. (ச)

மேவிவாணிபேர்த்தீர்த்தமும்படிந்துபொன்வேதியர்க்களித்தேகிப்
பூவினு ‡ ரயன்பொய்கையைப்போற்றியேபுனிதநீர்படிந்தாடி
நாபிநீருறநின்றவன்றிருவுருநட்டுளத்தணியாகக்
காவிவாள்விழிவாணிசாவித்திரிகவின்பெறவிருபாலும். (ரு)

---

* கிருச்சிரம் கிருச்சிரவிரதம். புருணசத்தி-கருச்சிதைத்தல். † ஈண்டு அபிசித்தாவது தைமாசத்துக்கிருஷ்ணபக்ஷத்துச்சந்திரன் உத்தராடநக்ஷத்திரத்தின் நான்காம் பாதத்தினும் திருவோண நக்ஷத்திரத்தின் முதனுன்கு நாழிகையினும் நான்குவிநாடியினுஞ் சஞ்சரிக்குந் தினமாம். ‡மணிகன்னிகையிலே விதிப்படி ஸ்நானஞ்செய்து. § கந்தமாதனன் ஓர்குரக்குச் சேனுபதி. ‡ பிரமதீர்த்தமும் வேறு, பிரமசரசுவும் வேறு.

அக்கமாலைகுண்டிகைவரதாபயமாகியகரநான்குஞ்
செக்கர்மேனியுந்திகழ்மணிக்கிரீடமுந்திருமுகமொருநான்குந்
தொக்கசூரியர்,சந்திரர்கோடியிற்சோதி,சீதளமாக
மிக்கவேதனைநினைந்துரைநாவுற * விரிஞ்சனதிருக்காறும். (சு)

† பிரமஞானமுன்னுமிருமூன்றையும்பேணிமும்முறைமூழ்கி
யுரவினுசமனஞ்செய்துகாய்த்திரியோதருக்கியமீந்தே
பரவுநீர்விதி, பங்கயயோநியே, பிரம, னீச்சுரன், பார்மேற்
குரவனுன்முக, னிறை, பிரசாபதி, குலவியவமரேசன். (எ)

வேறு.

இரணியகருப்பன், ருதாப், பரமேட்டி, ‡ யீன்றோன்றந்தை,
யரணமாதிருநாமத்தாற்றருப்பணமாற்றிமூழ்கி
முரணகமருடனாந்தருப்பணமுறையினுற்றிக்
கிரணமார்கரையினேறிக்கேத்திரசிராத்தஞ்செய்தே. (அ)

நெய்வழிந்தொழுகுமன்னமறையவர்கிமிரவூட்டிக்
கைகமழ்சாந்தமாமைழகாயடையளித்துக்காதன்
மெய்தருபிரமஞானம்வேண்டி §வெண்ணீறும்பாவ
மையறவணிந்தெட்டாயவசுக்கடம்வாவிமூழ்கி. (கூ)

காசிபதீர்த்தமன்னேன்பன்னியர்காமர்தீர்த்த
மாசறமூழ்கிக்காசிபேசனதடியும்போற்றித்
தேசமர்தூபந்தீபஞ்செறித்துயர்திருமால்பட்ட
மாசறுதிருவின்றீர்த்தமகிழ்ந்து o தாமரையுமீந்தே. (கo)

அரிதொழுமரனைப்போற்றிக்காளிபொய்கையினுமாடி
வரியுமூந்தளித்துத்தெவ்வுமாய்க்கௌத்தருமதீர்த்தம்
பரிவொடுமாடிப்பாவநாசத்தும்படிந்தெதிர்ந்தோர்
முரிதரு ┼ மயிந்தன்வாவிஞானவாவியினுமூழ்கி. (கக)

வேறு.

கசிவொடுங்கங்கேசனைப்பூசித்தகன்று = துவிதன்மலர்க்கயத்துமூழ்கி
விசிதருகாற்றீசனையும்பணிந்துமணிசன்னியினின்மேவிமூழ்கிப்
பசியசமிமூலத்தினைஞ்செழுத்தாயிரமிரண்டுபயிலவோதி
நிசிமருவுந்துயின்மாற்றிவலமேவிநிகமவனநிமலற்போற்றி. (கஉ)

---

* பிரமாவினது வேத இருக்கு ஆறனையும். † பிரமசூக்தமந்திரமாறனையும். குரவனுகிய நான்முகனெனக்கூட்டி ஓர் நாமமாகக் கொள்க. ‡ ஈன்றோன்றந்தை-பிதாமகன்; ஓர்நாமம். அகமருடணஸ்நானம்-பாவத்தையழிக்கும் ஸ்நானம். § வெண்ணீறு பிரமகுண்டத்துள்ள வெண்ணீறு. o தாமரையுமீந்து - பத்மதானமுங்கொடுத்து. ┼ மயிந்தன்-ஓர்குரக்குச்சேனுபதி. = துவிதன்-ஓர்குரக்குச் சேனுபதி.

வேண்டியனவிளக்காதிவிரைந்தளித்துமெய்ஞ்ஞானம்வேண்டிப்போற்றி
மீண்டியன்மாவிரவியெழுப்படிந்துதொழிலியற்றிமறைமேலோர்க்கூட்டி
யாண்டியல்பாரணமாற்றியமர்கவிதியாத்திரைநன்களிக்குஞான
மீண்டியமாமறைசையிறைக்கிஃதியற்றியருள்சிறந்தாரெண்ணிலாதார். ()

வேறு.

தோற்றியசுவேதகேது*வெஞ்ஞவற்கியனேதூய்மை
யாற்றுகேகயனற்சேதியரசொடு†சனகனேனோர்
போற்றியாத்திரையோர்நாளிற்புரையறுஞானமேவி
மேற்றிகழ்சீவன்முத்தராகியேவிளங்கினாரால். (௧௪)

மலரவன்ஞானுமிந்தயாத்திரைமருவித்தன்சீ
ரலர்கயக்கரைமாமேதத்தரன்றனையருச்சித்தாற்றி
யுலகருள்சிருட்டிமேவியுமையுடனெதிர்ந்தகோனைப்
பலமுறைவணங்கியீசவரமிதுபணித்தியென்பான். (௧௫)

எளியனேனியற்றுமிந்தயாத்திரையெவர்களேனு
மளியினலியற்றிக்குண்டத்தமர்ந்தநீறணியின்ஞானத்
தெளிவினையளித்தியென்னச்சிறப்புடனளித்துஞானங்
களியுறவிதிக்குமீந்துகடவுளுங்கரந்தானன்றே. (௧௬)

வேறு.

எய்த்தமருங்குருப்பசியைப்புரூரவாயரத்திரையீங்கிதனாலேய்ந்தா
‡ னுத்தரமானசங்காசியாத்திரையினுஞற்றுமவருறும்பேருகு
மத்தனையுமீதுசதமதியயனங்கிருச்சிரமாயிரத்தின்மேன்மை
வைத்தபயன்றரும்பிரமயாத்திரையைவகுத்துரைத்தோம்வள்ளாலின்னும்.

பிரமயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௭௭௧.

---

# உத்தரமானசயாத்திரைச்சருக்கம்.

ஓங்குமுத்தரமானசயாத்திரை
நீங்குநீர்தரச்செப்புவன்செய்விதிப்
பாங்கு § முற்றினந்தொட்டுப்பயின்றபின்
றூங்குசங்கற்பமேவித்தருக்கினால். (௧)

---

* யாக்கியவற்கியர். † சனகராசா. ‡ காசிப்பதியிலேயுள்ள உத்தர மானச யாத்திரையும், ஈண்டுள்ள பிரமயாத்திரையும் பலனாற் சமமாமென் பது கருத்து. நூறுசாந்திராயணபலத்தையும், ஆயிரங்கிருச்சிரபலத்தை யும் இது தரும். § முதனாள் அற்ப போசனஞ்செய்து.

விடியல்வேதவமிர்தம்விளங்குநீர்
கடியின்மூழ்கிக் * கலைக்கடனாற்றியே
படியின்மேவுபுலத்தியன்பட்டமே
நெடிதுமாடியருக்கியநீதியால். (உ)

வாணிகேள்வன்மனத்தெழுமைந்தனே
யேணின்மிக்கவரக்கரையீன்றிடும்
பூணிஞயபுலத்தியனேயுனக்
காணியாமென்றளித்தயனண்ணியே. (௩)

புலகதீர்த்தம்புரிந்தபினங்கிரா
விலகுதீர்த்தமியற்றியுசத்திய
னலகிதீர்த்தம்படிந்தயனங்கிராக்
குலவுசத்தியற் † கிந்தறல்கோதற. (௪)

விண்ணுளார்குரவன்றடமேவியே
தண்ணெனீரிற்றருப்பண ‡ முன்னரே
யெண்ணுவாற்குமிவற்குமியற்றியே
நண்ணுபொன்வெள்ளிநல்கவிரண்டினும். (௫)

§ வெள்ளிபொய்கையருக்கியம்வீழ்த்தபின்
னுள்ளிமூழ்கிப்பிருகுவென்றோதிடுந்
தெள்ளியார்கட்கருக்கியந்தீவினை
விள்ளவீந்தவண்வெள்ளியுநல்கியே. (௬)

+ மாதுசுந்தரிபொய்கைமருவியே
o சாதவேதசுதான்முதலைஞ்சிருக்
கோதிமூழ்கியுமூந்தளித்தானமே
காதுருத்திரதீர்த்தங்கலந்தரோ. (௭)

பே = சுருத்திரசூத்தப்பெருமறைத்
தேசதாயசிவமந்திரமெலா
மாசினீர்படிந்தோதியரனையோர்ந்
தேசில்கேத்திரபிண்டமுமீந்தபின். (௮)

---

* காலைக்கடன் கலைக்கடன் எனக் குறுகிற்று. † தருப்பணஞ்செய்து. ‡ முன்னரேயெண்ணுவான் வருஞ்செய்யுளிற்குறிக்கப்படுஞ் சுக்கிரன். § வெள்ளிதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தபின், அதிலே வெள்ளியின் பிதாவாகிய பிருகுமுதலானவர்களுக்கு அருக்கியத்தைப் பாவந்தொலைக என்று பிரார்த்தித்துக்கொடுத்து. + தார்க்கைதீர்த்தம். o சாதவேதசு முதலிய ஐந்து இருக்குக்களை ஓதி. = தற்புருஷருத்திரசூக்தம்.

*காலவங்கியின்கூபங்கலந்தவட்
சாலுமீசனருச்சனைதாங்கியே
பாலுமைக்கருள்பண்ணவற்போற்றியே
சேலுலாவும் † பராசரன்றீர்த்தமே. (க)

சென்றுமூன்றினுமூழ்கியச்சீர்முனிக்
கன்றுநல்குமரன்குறிபோற்றியே
யொன்றுகாதல்வசிட்டனுறையுளி
னன்றுமேவுமிலஞ்சிநனைந்தரோ. (கo)

ஏழுதாயவிருடிதருப்பணம்
வாழவீந்துமறையவர்க்கூட்டியே
§ கேழணிந்துகிளர்வசிட்டேசனெற்
போழணிந்தவன்பூசையுமாற்றியே. (கக)

கோதமன்றடமூழ்கிக்குலவிருட்
காதபம்புரை o யூகமளித்தரும்
போதமேவிமுழுதும்புணர்ந்திடு
நாதனைச்சென்றருக்கியநல்கியே. (கஉ)

கன்னற்கட்டிகடவுளர்க்கீந்துபின்
மன்னிவேதவமிர்தமலிந்தநீர்
மின்னவாடி ‡ வித்தியேசனைப்பூசியா
முன்னுமாமணிகன்னியின்மூழ்கியே. (கங)

வன்னிமூலமகிழ்ந் = திரண்டொன்றுட
னுன்னுமாயிரமஞ்செழுத்தோதியே
பொன்னினீள்சடைப்புண்ணியற்போற்றியே
யின்னல்சார்வினைதீரென்றிறைஞ்சியே. (கச)

துஞ்சிவெய்யபொறியின்றுடக்கற
விஞ்சுசெய்கைவிடிந்தபின்னாற்றியே
யுஞ்சுவேதியர்க்கூட்டிப்பின்பாரண
மஞ்சுசெய்தவர்வல்வினைமாட்டுவார். (கரு)

---

* காலாக்கினிருத்திரதீர்த்தம். † பராசரன்றீர்த்தமூன்றெனக்கூட்டுக. அது புட்கரணித்திரயம். §கேழணிந்து-தூபதீபங்களினாலே பூசித்து. o யூகம்-தருக்கம். அந்தகாரத்துக்குச் சூரியன்போலுந் தருக்கநூலைச்செய்துதந்து, அரிய அறிவைப்பொருந்தி எல்லாவற்றையுமுணர்ந்த அக்கௌதம முனிவரையடைந்தருக்கியங்கொடுத்து. ‡ வித்தியேசன்-ஞானேசன். இவர் வேதாமிர்ததீர்த்தத்தின் கீழ்கரையில் வீற்றிருப்பவர். = பஞ்சாக்ஷரத்திலே மூவாயிரமுருச்செபித்து.

இந்தயாத்திரையாவர்களாயினுஞ்
சிந்தையாற்செயத்தீவினையீர்ந்திடும்
புந்தியார்திரிசங்கொர்புலையனாய்
வந்தியாத்திரைசெய்துவிண்வைகினான். (கரு)

இங்கியம்பியயாத்திரையிப்பதித்
திங்கள்விட்டமலசலத்தீங்கெனும்
பங்கநீக்குமிருதுபயின்றவை
மங்கநீக்கிடுந்தக்கிணமானசம். (கஎ)

வேறு.

மூன்றிருதிங்களுமொழிந்ததீவினை
வான்றுயர்பிரமயாத்திரையின் * வைகுமா
லூன்றியவருடமுமுளூற்றுந்தீவினை
யேன்றுடனழித்திடுஞ்சேதுயாத்திரை. (கஅ)

தோற்றியநாண்முதற்பாதிதோய்வினை
யாற்றியமாற்றுமுட்கிரகயாத்திரை
சாற்றினமியாத்திரைதன்னைமூவுல
கேற்றியமாலியாத்திரையியம்புவாம். (கசு)

உத்தரமானசயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சகூஅ.

---

# விட்டுணுயாத்திரைச்சருக்கம்.

முன்னைநாளொழிந்துணவுமறநெறியான்விடியன் மூழ்கிவேதாமிர்த மொழிதருசங்கற்பம், பன்னியேவித்தேசன்பதம்பணிந்துவடுகன்பரிதீர்த் தம்படிந்தனுமன்பட்டமுவந்தாடி, மன்னுமளகேசனுயர்பொய்கைமகிழ்ந்த தன்கண்வழங்குகதானியதானமற்றதன்பின்னிராமன், பொன்னவிருந்தட மூழ்கியிலக்குவன்றன்கயத்துப்புரிந்துதருப்பணம்பிண்டஞ் சீதைமடுப்புணர்ந்தே. (க)

* வைகல்-கழிதல்.

புனலி*னிரணியவருணமிதுமுதலாமிருக்கைப்புகன்றிடுகபுகன்றதற்பின் பூவினுறைதிருவுக், கனகமுறுதருப்பணமுந் தனதுதருப்பணமுமளித்ததன் பின்மாயவன்றனுலயத்துச்சென்றே, வனமருவுதுழாயானைச்சேதுமகிழ்ந்த ளிக்கும்வானவனைப்போற்றிமறைவனத்திடையென்வாழ்க்கை, தனதுகுறை யறவருளிச்சேதுயாத்திரைக்குந்தருதியனுமதியென்றேதாழ்ந்துபணிந்தெழு ந்தே. (௨)

வேறு.

முற்கடனொழித்திடுமிரணமோசன
நற்புனல்படிந்தபின்னலியுந்தீவினை
யெற்றுசாவித்திரியிலிங்கம்போற்றியே
யற்புடன்றுதித்தபின்னருளின்மேவியே. (௩)

வேறு.

சூற்பணிலமலறுபுனற்பகீரதியாயிரமாய்த்தொடுகடலிற்படியுமலர்த் துகளகில்சந்தணிபொன், மேற்பொலிகாவிரியாறுநூறுமுகமாகவிரிகடலிற் படியுமதின்விண்டுமகிழ்ந்தழைப்பப், பாற்படுமோர்முகஞ்சேதுமூலமதிற்ப டர்ந்துபரவையுறும்வேதநதிபரிவினொடும்படிந்தார், நாற்பயனும்பெறவரு ளுநனைந்துசங்கமேசனற்றுளும்போற்றியங்கணயந்தவிலிங்கமுமே. (௪)

‡ பரநிந்தையீசனையுமார்க்கண்டேசனையும்பணியு மரமகளிர்பெயர்ப ரித்திடுமீசனையுஞ்,சிரமுறவேபணிந்தெழுந்துகுமுததீர்த்தத்துமங்குசுமான் றீர்த்தத்துஞ்செயப்படிந்துதருப்பித், தரவமணிகனனிநன்னீர்படிந்துசமிமூ லத்தாயிரமஞ்செழுத்துரைத்துச்சித்தேசன்றனையும், பிரமவுருவிராமநாத னையுமடிபோற்றிப் பெருகுமருண்மறைவனத்துப்பெருந்தகையைப்பணிந் தே. (௫)

விடங்கேச § னுங்காரவிநாயகன்யாழ்பழித்தமென்மொழியாளடிபணி ந்துவிடைகொடுபோயகத்தி,னிடம்பாயவைசுவதேவத்தினையுமியற்றியியன் மறையோர்க்கூட்டியபின்னினிதருந்தியமர்க, வடம்பாவுபக்கத்திற்றுவாத சியிற்செய்யின்வல்வினையோர்பக்கத்தின்மதித்ததெல்லாமாயு, மிடம்பாய வரவணையான்யாத்திரையைச்சேதுமேயயாத்திரைமுன்னுளிழைக்கபயன் விழைவோர். (௬)

---

* இரணியவருணமாகிய இதுமுதலிய இருக்கை. தனதுதருப்பணமா வதுதீர்த்ததருபணத்துக்கு அங்கமாகச்செய்யுந் தன்று நித்தியதருப்பணம்.

‡ பரநிந்தையீசன்-பராபவாதேசன்;பிறர்குற்றந்தூற்றுந்தோஷத்தை நீக்குமீசன் என்பது பொருள். அரமகளிர்பெயர்பரித்திடுமீசன் அப்சரேசு வரன். அப்சரஸ்திரீகள்-அரம்பை முதலிய தேவதாசிகள்;பாற்கடலிற் பிறந் தவர்களென்பது பொருள். அவர்கள் பூசித்தமையின் அப்பெயர்த்தாயிற்று.

§ உங்காரவிநாயகன்-வீரகத்திவிமோசகர். வடம்பாவுபக்கம்- பக்கவட் டம்; இருபக்ஷங்கடோறு மென்பது கருத்து. வைசுவதேவம் - பிராமணர் நித்தியகருமத்தொன்று; பிதிர்களது திர்ப்தியின் பொருட்டுச்செய்வது.

வேறு.

மாலியாத்திரைவாய்மொழி
நூலைநித்தநுவன்றவர்க்
காலமாமெனவன்றவாக்
கோளுமாவினைகுன்றுமே. (௮)

விட்டுணுயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௦௫.

---

# அந்தர்க்கிரகயாத்திரைச்சருக்கம்.

அடையலர்கண்முடிவெயில்சூழலங்கலடியரசேயந்தரெனுமுட்கிரக யாத்திரைநீயறிவாய், நடைபயிலத்தினந்தொறுமீதியற்றுதலேமுறையாகநா டு* திரவாரத்துப்பூரணையினலஞ்சேர், தொடைதருமூன்றுடனடக்குந்திதி யோகநாளிற்றொடங்கியவைதிருதிவிதிபாதத்துத்தோற்று, மிடைதருமாதப் பிறப்பினயனத்துவிடுவத்தேதமறுந்துவாதசியினிலங்குமரிதினத்தும். (௧)

† பன்னிருதிங்களிற்சிறந்தநாட்டனதுதோற்றம்பயின்றிடுநாளிவை களினும்பரித்திடலாம்பான்மை, முன்னியகற்கொடையாதிவேதநதிப்புணரி முகத்தளித்துமூழ்கியபின்றருப்பணமுமுறையா, லுன்னுதுருபதமாதி,யஞ் செழுத்துநூறுமுரைத்துமகாவாக்கியமுமொலிதருநீர்க்கடனுய்ப், பன்னு தருப்பணம்புரிந்துகேத்திரபிண்டாதிபலியளித்துப்பரமனெதிரிரணியமும ளித்தே. (௨)

அக்கூலத்தம‡ராமிரேசனைக்காளத்தியாதிதனைக்கும்பீசன்றனையணியா ர்கூடற்,சொக்கேசன்கமலைநகர்ச்சோதியைக்கேதாரச்சுடரினையுமடிபரவித் தோமறு§மிந்திரன்றன்,மைக்கோலத்தடமூழ்கி ○மகேந்திரவீசனையும்வண ங்கிநளன்றீர்த்தத்தும்பாயசமும்வழங்கிப், புக்கோதுதமிழ்முனிவன்கூபத் தநீராற்புரோக்கித்தேயச்சுவினிபொய்கையினிற்படிந்தே. (௩)

---

* திரவாரம்-சனிக்கிழமை. மூன்றுடனடக்குந் திதி யோகம்-திதித் ரயம்,யோகத்திரயங்கள். அரிதினம்-ஏகாதசி. † பன்னிருதிங்களிற்சிறந்த நாள்-அவ்வம்மாசநாமநக்ஷத்திரதினம். அந்நக்ஷத்திரங்களாவன:—சித்தி ரைக்குச் சித்திரையும், வைகாசிக்கு விசாகமும்,ஆனிக்குக்கேட்டையும், ஆடிக்குப்பூராடமும், ஆவணிக்குத் திருவோணமும், புரட்டாசிக்குப்பூரட் டாதியும், ஐப்பசிக்கு அச்சுவினியும், கார்த்திகைக்குக் கிருத்திகையும், மார் கழிக்கு மிருகசீரிடமும், தைக்குப்பூசமும், மாசிக்கு மகமும், பங்குனி க்கு உத்தரமுமாம். தனது தோற்றம்பயின்றிடுநாள்-சன்மநக்ஷத்திரதினம். ‡ ஆமிரேசன்-ஏகாம்பரநாதசுவாமி. § இந்திரதீர்த்தம். ○ இந்திரேசன்.

மெய்குளிரும்புனலளித்துவியாதன்ருடீர்த்தமேவி* வியாதேசனையும்
விழைந்தருள்கோகரணச், செய்யசடைமுடியனையுமாடகேசனையுஞ்சித்திர
குத்தேசனையுஞ் சிறப்புடன்பூசித்தே, மொய்வலியங்கதன்றடத்துப்படிந்து
கனியளித்தேமோகமறச்சுக்கிரிவன்மூசுதடமூழ்கி, வெய்யசனிபொய்கையி
னுமேதருகாரானவேதியர்க்கீந்தகமகிழ்வேதாமிர்தமும்படிந்தே. (சு)

மண்ணினையந்தணர்க்களித்துவித்தையினுக்கீசன்மகிழ்பூசைபுரிந்தஞ்
சுமான்றீர்த்தம்படிந்தே, நண்ணியநற்றுகிலளித்துப்பாண்டவர்தீர்த்தத்துந
னைந்துசெழும்பொன்னளித்துநலந்தருகக்கிவான், பண்ணியதீர்த்தம்படிந்து
கன்னிகையைத்தானம்பண்ணிடுககவுசிகன்றன்பட்டத்தும்படிந்தே, தண்
ணியல்பூசினித்தானஞ்சரித்தபின்னுகேசன்றுள்பணிந்துவீரகத்திவிமோசக
ன்றுள்பணியே. (ரு)

மோதகமீந்தடைநாசிகேதுவினுச்சிரமமூசளிசூழ்புன்னுகமுறைவணங்
கி †யமுத, மேதருகூபத்தாபோ வெனுமிருக்கானனைந்து மெல்லியல்யா
ழைப்பழித்தமென்மொழியைப்பணிந்தே, தாதவிழ்மென்போதடைகாய்த
ழல்விளக்குத்தூபந்தந்துபரமானந்தகூபத்துஞ்சார்ந்தே, போதவிழ்நீர்பு
ரோக்கித்துக்கேத்திரபாலனையும் பொருவினந்திபிருங்கியையும்புகழ்ந்துப
ணிந்தெழுந்தே. (கா)

சாத்தாவையருச்சித்துப்பாலடிசிலளித்தேதக்சவநுமதிமேவி ‡ லளிதே
சன்றனைநூற், பாத்தாவுசராசந்தேச்சுரனையெழுஞ் § சோமன்பணித்தபர
மேசனையும்பரிவினருச்சித்தே, மாத்தாள்வெண்மருப்பினுயர்வராகமூர்த்தி
யையும்வயங்கரிச்சந்திரேசனையும்வணங்கிவளருலகங், காத்தானுந்துண்டி
விநாயகனைநறுந்தேங்காய்கன்னலிலட்டுகெங்கனியாற்காமுறப்பூசித்தே.

o காரிதனைவடையாதிகலந்தருச்சைமருவிக்கமூமணிகன்னிசன்வாசு
கியீசனையும்,நேரில் = பருப்பதவீசன்றனையுமருச்சித்தேநிகழ்கங்கைக்கேசவ
னையிராமேசனிழலார், வேரிதருமாகாளேசனையுமடிபரவிவேண்டியபின்ம
ணிகன்னிவிழைந்துபிண்டமளித்தே, பாரிலுயர்காசியரன்பூசையினைப்புரி
ந்துபயின்றிடுகசமிமூலத்தஞ்செழுத்தும்பகர்ந்தே. (அ)

---

* வியாதேசனையும், கோகரணேசனையும், ஆடகேசனையும, சித்திரகுத்
தேசனையும், வியாததீர்த்தக் கரையிற் பூசித்து. காரான்-காராம்பசு.

† இவ்வமுதகூபம் - அம்மை சந்நிதியிலுள்ளது. ஆபோ எனுமிருக்கு
ஆபோ என்பதை முதலாகவுடைய இருக்கு. இருக்கு-வாக்கு.

‡ லளிதேசன் என்புழி, லளிதா என்றது அம்மையை. § சோமேசன்.

o காரி-காலவைரவர். = பருப்பதேசன். காசியரன்-விசுவநாதன்

வருத்தமறச் * சித்தேசனருச்சனையைப்புரிந்தேவயங்குவிடங்கேசனையுமிராமநாதனையுங், கருத்துறுசிந்தாமணிநற்சற்பகத்தைமுத்திக்கதவமுயரீசனையுங்கனிவினொடும்பணிந்தே, திருத்தமுறுந்திரிகோடிதீர்த்தமதுதன்னைச்சேர்ந்தாபோகிட்டேதிதிகழுமனுவாதி, பொருத்தமுறவுரைத்தாடியன்னபூரணியைப்பூசித்துப்பொன்வழங்கிநகுலேசற்புரிந்தே. (கூ)

பணிந்துசபாபதியாயபரம்பரனைத்தேவ பத்தசபாநாதநினையடிபரிந்து சரணா,வணிந்தவெனைக்காத்தருளென்றறைந்துபணிந்தேகி யருண்மறைசைப்பெருமானையாரமுதைப்போற்றித், திணிந்தவிருளகன்றோடச்சிதானந்தத்தெளிவாந்தேசுருவாயளப்பரியசிவமாகியுளத்தே, துணிந்தவர்கட்கமுதூறிச்சுருதிமுடிக்கமலத்துடக்கவிழ்க்குமருட்சுடரே துயரறுக்குமருந்தே.

கூற்றுடலம்பொடியாகக்குரைகழற்றாமரையின்குறியநுதிநிமிர்த்தருளுங்கோதிலருட்கடலே, தோற்றுசராசரமாகித்துறவாதேதுறந்துதுணையாகியளித்தருளுஞ்சுருதிவனக்கனியே, வேற்றுருவமுணர்ந்தறியேன்விழுத்துணைநீயலதுவேறுமிலேன்வினைக்கடற்கேவீழ்ந்தயராதளித்துப், போற்றுமுணர்வளித்தருள்செய்தந்தையனைசுற்றம்பொருள்புகலுநீயலதென்புந்தியினொன்றிலையால். (கக)

எனப்பணிந்துபாலடிசிறாம்பூலந்தீபமினியநறுந்தூபமுதலியன்றனவுமளித்தே, நனத்துயிலிற்செய்வதெல்லாமருச்சையெனக்கொண்டேநயந்தருணீயெனப்பணிந்துமணக்கோலமிறைஞ்சி, மனப்படுநைவேத்தியமும்வழங்கிவிடைகொண்டேமறையவர்கட்கூட்டியவர்மனமகிழவளித்தே, யினத்தினொடுமயின்றிடுகயாத்திரையாயிரமாயியன்றபரிமேதத்தின்பயன்றனையீந்திடுமே. (கஉ

மதியயனஞ்செறிபிரசாபத்தியமாயிரமுமதித்தவயுதமுங்காசிமரணமறையந்தத், ததிபலவுமுளத்தமைத்தல்யாத்திரையீதமைத்தல்சமனாகும்பயனிதனைத்தானவிலமுத்தி,பதியருளு†முன்னாளினொருநாளினமைக்கபண்ணிடுகவாண்டுதொறுந்திங்கடொறும்பயில்க, புதியதினந்தொறுமுடிக்க சாலோகமுதலாப்புகன்றபதமுறையினாறும்புரிந்திடுதல்கடனே. (கங)

---

* சித்தேசன் - சமியின் கீழிருப்பவர். சிந்தாமணிவிநாயகர்-வேதவனவிநாயகர். முத்திக்கதவமுயரீசன் -மோக்ஷத்துவாரேசுவரன்; இவர் சிந்தாமணிவிநாயகருக்கு பிற்பாகத்திருப்பவர். ஆபோகிட்டேதி என்பதை முதலாகவுடைய வேதமந்திரம். நகுலேசர்அன்னபூரணியோடுகூடவீற்றிருக்குஞ்சிவலிங்கப்பெருமான். † உன்னாளினொருநாளினமைக்க- உன் ஆயுசுக்குள்ளே ஒருதினமேனும்இவ்வியாத்திரையைச்செய்க.

யாத்திரையீதமையாதுமறைவனத்திலிருப்போரிரந்திடுநாயிறைச்சிய யின்றிடுபவர்பின்வடுகன், கூர்த்தவெரித்தலைச்சூலக்கொடுந்துயரமுழப்பர் கோதறுமித்தலமறம்போற்கொடியவினைவளர்க்கும், காத்திரத்தினுறுமல நீர்கோழைவழிபித்தங்கழித்திடுதீவினைமொழிந்தயாத்திரையேகடியு, நேத் திரமில்லவர்போலிவ்வியாத்திரையையிழந்தோர் நெடுந்துயரமுழந்துடல நீத்தனவேயயில்வார். (கச)

ஆதலினுற்றிங்கடொறுமாண்டுதொறுமேனுமாதரிக்கயாத்திரையையா ங்கிதனைப்புரிந்தே,காதலினுன்மறைவனத்துவாழ்பவர்தங்குலத்தார்கண்ணு தலோனண்ணுலகங்கலந்தவனோடுறைவார், போதலருமறைவனத்திவ்வியா த்திரையைப்புரியார்புரிந்தளித்த*வவ்வியகவ்வியங்கடமைப்புலவோ, ரேத முறுநிந்திதமாயிகழ்ந்திடுவரதனால்யாத்திரையைமறவாதேயியற்றிடுகவறி ந்தோர். (கரு)

வேறு.

நிகமவனத்துறைவார்கள்புனிதராகிநிச்சவினைக்கச்சமொடுநிலவல்வே ண்டு, மகவமுனமுரைதருயாத்திரைகட்செல்லா மற்பமாய்முன்னுளுண் டைம்பொறியுமடக்கிப், பகலெழநீர்படிந்துபயன்படுசங்கற்பம்பரித்தெழுந் துகயந்தொறுமெட்பாயதருப்பணமுந்,தகவுறுபிண்டமுமளித்தேயியன்றன வுமுதவித்தழைத்தநியமத்தோடுசார்தல்கடனுமே. (கசு)

வேறு.

பகர்ந்தயாத்திரைபயின்றிடினிப்பதிபயனு
மிகர்ந்தவர்க்கிருளியற்றிடுமிக்கதையிசைப்பார்
முகந்தவெவ்வினைமுருக்கிடுமென்றியாழ்முனிவ
னுகந்தவேந்தனுக்கோதினனென்றனனுரவோன். (கஎ)

அந்தர்க்கிரகயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் ௫உஉ.

---

# கக்கீவச்சருக்கம்.

முனிவரனினையகூறமுருகுலாந்தெரியன்மூசும்
பனிவளர்குடுமித்திண்டோட்பரிதிவேனிருபன்பாரி
னினியனகனியக்கூறுமெந்தையாத்திரையீதாற்றி
நனிவரும்பயனைப்பெற்றோர்யாரெனநவிற்றுகின்றான். (க)

---

* அவ்வியம்-தேவபலி; அவிப்பாக முதலியன. கவ்வியம்-பிதிர்பலி; பிண்டமுதலியன.

புரியிடைமருவியாவிபுகரறவுறையுநாளுட்
பரிவுடனொருகாலேனும்பற்றியாத்திரையோராறுந்
தெரிதரவிளைத்தோர்போகந்தெளிதருமுத்திகைவாய்ந்
தரியனவுறுவர்கக்கிவரனெனவரசரேறே. (உ)

எனமுனியியம்பக்கோமானியம்பியகக்கிவானும்
பனவனதோற்றமாதிபயனளவுரைத்தியென்று
வினவினன்பணியத்தீயவெவ்வினையிரிக்குங்காதை
மனமகிழ்மனுவின்மைந்தகேளெனவகுத்துச்சொல்வான். (ங)

வண்டினமறையினூர்க்கு * மலர்முகமறையோன்வாங்குந்
தெண்டிரையுலகந்தேற்றுமரீசியத்திரிதீங்கொல்கக்
கண்டவங்கிராவசிட்டன்புலத்தியன்புலகன்காமம்
விண்டவப்பிருகுதக்கன்கிரதுமேதக்கயானே. (ச)

என்னவீரைந்தினீண்டும்புதல்வரையினிதினீன்றான்
மன்னுசித்திரசிகண்டியங்கிராமைந்தனாகி
முன்னுசத்தியனைப்பின்னர்வியாழத்தைமுறையிற்பெற்றான்
பொன்னியற்பெயரோன்றேவர்குருவெனப்பொலியுநாளில். (ரு)

பழுதறுமோரையொன்றுபண்புறத்தோற்றவாய்ந்து
தொழுதகுமிதனின்மைந்தன்றோற்றுமேற்சுடரேபோல
முழுதுலகளிக்குமென்றுமுன்னித்தன்மனையினேகிக்
கெழுதகுகற்பின்மிக்ககிழத்தியைக்காணுனாகி. (சு)

முறையினிற் † சேட்டனில்லாண்முற்றிழைமுயக்கம்வேண்ட
நிறைதருகருப்பமுள்ளேனினைப்பரிதெனவுநேர்ந்து
சிறைதரப்பற்றிச்சேரச்சேயிழைகுறியுட்சேய்தான்
மறைவுறவிருவர்க்கிங்குவைகிடமில்லையென்றே. (எ)

வழிமறைத்திடவுநீங்காவலியிற்சுக்கிலத்தைவாய்த்துப்
பொழிவுறக் ‡ களியிற்போகம்புதைத்தநின்றனக்குப்போக
விழியெனச்சபித்துநீங்கமெல்லியறன்பால்வேத
மொழிதரத்திருவின்மிக்காரிருவருமுளைத்தாரன்றே. (அ)

---

* மறைமுகமறையோன் எனவும்பாடம். யான் என்றது நாரதமுனிவர் தம்மை எனவறிக. † சேட்டன் தமையனாகிய உதத்தியன். ‡ களி-கட்குடியன். ஈண்டுப்போகமென்றது போகத்தானமாகிய பெண்குறியிற் கருப்பநாடியை. இனிப்போகம் என்பது பாம்பின்படமெனவும் பொருள் படுதலின், அஃதீண்டாகுபெயராய்ப் பெண்குறியை உணர்த்திற்றென்றலு மொன்று.

ஓரையிற்கருப்பமுற்றேனுதித்திடவவன்று * யோங்குஞ்
சீரையுற்றிவனைநீயேதாங்கெனச்சீவன்றனு
மேரைநீபற்றுகென்னவியற்பரத்துவாசனெனி
வீரையிற்கதிரேபோலவிண்முதல்விளக்கினனே. (௯)

சிற்றுதரத்துமுன்னஞ்சேர்ந்தவன்செறியுஞ்சாபத்
தற்றிருகண்ணுந் † தீர்க்கதமனெனவறையுநாமம்
பெற்றுணர்வாயநாட்டப்பெயரொடும்பிறங்கிவேத
முற்றியவனத்தினில்லாளொடுந்தவமுறையிற்செய்தான். (௧௦)

அருந்தவந்திருந்தவேதவனத்துறையமலனானுங்
கருந்தடங்கண்ணியோடுமகிழ்ந்திடக்கரிசின்றுற்றப்
‡ பெருந்தகையருளாற்கக்கீவானெனும்பெயரோன்பெட்பான்
முருந்தனமுறுவற்செவ்வாய்முற்றிழைவயிற்றினுற்றான். (௧௧)

எற்றிகழோரைத்தோற்றமேயினன்றனக்குத் § தோற்றம்
பற்றியகரணமாதிப்பரிசெலாம்பழையவேதஞ்
சொற்றருமறையினாற்றிச்சுருதிநாறருமென்சாகை
முற்றுபநயனமோர்ந்துமுடித்தனன்முனிவர்கோமான். (௧௨)

மூந்துமாச்சிரமந்தோற்றமுகிழ்த்தென ‖ முஞ்சிபூநீர்
நந்தியகரகந்தண்டுநவையில்கோவணமுந்தாங்கி
யிந்துவிற்பிரசாபத்தியத்தியல்விரதமாதி
தந்துறப்பயிற்றிவேதமுழுவதுந்தழையச்சார்ந்தே. (௧௩)

---

* ஓங்குஞ்சீரையுற்று என்பது தந்தையைப்போன்றிருக்குந் தன்மையைப்பார்த்து என்னும் தாற்பரியத்தின்மேற்று. ஏரை - அழகுடையாய். ஒருவர்க்கொருவர்நீயேதாங்கென்று அன்னைதந்தையர்இருவராலும் தனித்தனிசொல்லப்பட்டமையின், அக்குழந்தைக்குப்பரத்துவாசன் எனக்காரணப்பெயர் உளதாயிற்று. பர-தாங்குதல். துவா-ஈண்டிருவர். சம்-உண்டாதல். † தீர்க்கம்-நீட்சி. தமம்-அந்தகாரம். எனவே, தீர்க்கதமன் என்பதற்குப் பிறவியந்தகர் என்பது பொருளாயிற்று. உணர்வாயநாட்டப்பெயர் பிறக்கினாசட்சு என்பது. ‡ பெருந்தகை - சிவபெருமான். § தோற்றம்பற்றிய கரணம்-சாதகன்மம். ‖ முஞ்சி முஞ்சிப்புல்லு. இது கயிறுக்கிஅரையிற்றரித்துக்கொள்ளப்படுவது. இந்துவிலியல்விரதம், பிரசாபத்தியத்தியல்விரமெனத் தனித்தனிகூட்டுக. இந்துவிலியல்விரதம் சாந்திராயண விரதம். பிரசாபத்தியம் பிரமாவினாலே நியமிக்கப்பட்டது. பிரசாபதி-பிரமா. ஒருயர்ந்தசாதிப்பசு யாதுவிலைபெறுமோ அவ்விலைப்பணங்கொண்டுசெய்யும் ஓர்விதசற்கருமமே பிரசாபத்தியவிரதமென்க.

* குருகுலந்தன்னினல்கிக்கோதறுபயிக்கங்கோலந்
தருமுறைகவர்ந்துதந்தைக்குய்த்தனுமதியாற்முனும்
வருமுறையயின்றுகாலவமுவறவழங்கிவாய்மைத்
திருமறைப்பயனுமாய்ந்துசேர்முதுக்குறையின்மிக்கான். (கச)

அறிவினுனுய்ந்துதந்தையடியிணைபரவியோர்நாட்
குறியுறுமெனதுமாற்றங்குறிக்கொணீகுலவுந்தோற்றஞ்
செறிவுறுமக்கள்யார்க்கு † மிரணமாய்ச்செறியுந்தேவர்
நெறிதருபிதிர்கணீடுமிருடிபேர்நிவந்தமூன்றே. (கரு)

ஆங்கவற்றிருடிநாமத்தணைவதுன்னருளினுனுல்
பாங்குறப்பயிலப்போயதேனையபருமவல்குற்
றேங்குழற்றிருவைவாய்ந்துதீர்ப்பவத்திருவுமுன்னுற்
ருங்குவதளித்திதாழாதெனமுனி ‡ சமழ்த்துச்சொல்வான். (கசு)

நோக்கிழந்திளமைநீங்கிநரைபுகநுணுகிநீதந்
தாக்கியகிழங்குபல்காயாதியினமர்ந்துவாழ்வேன்
றூக்கியென்செய்கேனீயேசுடர்முடியரசர்ச்சாரி
னீக்குவரன்றியீசனளிக்குநீயிரந்துபோற்றின். (கஎ)

இயன்றதுபுரிதியென்னவெழுந்தடிபணிந்துபோற்றிப்
பயன்றருமுனதுபாதப்பணியன்றிப்பசையால்வேறு
முயன்றியாதடைவதாக்கமுதிர்தருப்போன்றுசான்று
நயன்றருமறத்தையோவிநலனெவர்நண்ணினுரே. (கஅ)

திருத்தகுதெய்வமாக்கஞ்சிறந்தருளரசுநிமை
முருக்கியதவஞ்சீராதிமுதல்வநின்பாதமூலத்
தருத்தலையேவலாவிதழைப்பதுன்னருளான்மற்றோர்
கருத்திலேன்கடனுமற்றுன்கருணையாற்கழிப்பனென்றே. (சகூ)

விரும்பியவேவலாற்றிவிழைந்தவன்வேதநாத
னரும்பியகருணைபோலுமணிகன்னியங்கிதிக்கிற்
பெரும்பெயர்த்தந்தைவைக § வுடசமொன்றமைத்துப்பின்னுங்
கரும்பியறீநீர்வாவியதன்முனங்கடிதிற்செய்தான். (உ௦)

மணிதெளித்தனையதூய்நீர்மணிகன்னிமருங்கிற்பாவந்
துணிதரமுப்பதாயவிற்கிடைதொட்ட ௦ தீர்த்தத்
தணிபெறநானமாதியாற்றியேயறவோன்வைகப்
பணிவொடுகக்கீவானுமேவலிற்பயிலுநாளில். (உக)

---

* குருகுலம்-குருமனை. அல்கல்-தங்கல். † இரணமூன்ருவன தேவர் கடன், பிதிர்கடன், முனிவர்கடன் என்பன. இரணம்-கடன். ‡ சமழ்த்தல்-வருந்தல். § உடசம்-பன்னசாலை. ௦ இதுவே கக்கீவதீர்த்தம்.

கறையறுமதியத்திங்கட்கதிரௌமுத்தத்தாம
முறைதருகுடையினீழனிலமகளோகையுள்ள
நிறைதரவளித்துநேரார்நெஞ்சகமஞ்சிநாளும்
பறைசெயப்பணித்தவைவேற்பாண்டியனுட்டினின்றும். (உ௨)

எழுந்ததோரமலச்சீர்த்தியதனையுமிறைவகேண்மோ
கொழுந்தவிர்குவவுத்திண்டோட்கொற்றவற்கற்றைநாளிற்
றெழுந்தகுமறத்தாலோர்பெண்டோற்றினள்சுதையிற்றூய
செழுங்கதிர்குழைத்துத்தீட்டுஞ்சித்திரப்பாவையன்னாள். (உ௩)

இருட்புரிந்தனையகூந்தலெழின்முகமெதிர்ந்திராவோ
டுருட்கதிர்மதியந்தோற்றமொழித்துவர்த்துவரிபாய
வருட்கழைமாரற்கியவக்கழையருகினேடிச்
சுருட்குழைதடவுநீலத்துணைவிழிப்பணைமென்றோளும். (உ௪)

வரிச்சிலம்பரற்றுஞ்செய்யமலரடிவனப்புவாய்ந்து
குருத்தனகுறங்குகாமக்குளிர்நதிப்புளினம்போலப்
பெருத்தொளிர்பருமவல்குற்பெயர்தழீஇப்பொருளைக்காணுக்
கருத்தருநுசுப்புப்பூகக்கண்கரிகளத்தினேரும். (உ௫)

பெற்றொளிர்காமவல்லிப்பேரெழில்வனப்பின்மல்கி
யுற்றவர்மனமுங்கண்ணுமுண்டிடுமுருவினுகிப்
பற்றியகாமச்செவ்விப்பயன்குழைப்பாங்கிற்சொல்லக்
கற்றனகரியவாட்கட்காரிகைகவினவாய்ந்தே. (உ௬)

நெறிப்புறவொளிருமேனிநிழல்செயநெரிந்தகூந்தல்
வெறித்தமைக்குழம்புதூவவியனுலகனைத்துமுண்பான்
குறித்தடங்கியவெங்கூற்றமுகிழ்த்தெனக்குலவிக்கோங்கிற்
செறித்தமென்முகையிற்கொங்கைதிகழ்தரத்திருவின்மிக்காள். (உ௭)

கடிமணப்பருவங்கூருங்காரிகைதன்னைக்காணூஉப்
படியினைப்புரக்குஞ்செங்கோற்பாண்டியன்பதிவினுவக்
கொடியெனவொல்கிநான்குகோட்டுவெள்ளானைமேல்கொண்
டொடிவறவருவோற்காயினுரியன்மற்றெழிதியென்ன. (உ௮)

கனங்குழைநியமச்சூழ்ச்சிகற்பகநிழலிற்றேவ
ரினந்தொழவைகுந்தேவினிடத்ததாலிதற்குத்தேற்ற
மனங்கொளுஞ்செய்கைகாணேன்வாய்வதுமரிதுமாமை
யனங்கனுமவாவுங்காலமாயிழைக்காயதின்றே. (உ௯)

ஆருயிரனைத்துங்காக்குமரனருட்செய்கையல்லா
தோருவதுளதோவென்னவொழிதலுமுலகமீதே
வாருறுமுலையினுட்கோண்மலிந்தசீர்பரந்துவேத
மோருருவாயகக்கிவான்செவியுற்றதன்றே. (௩0)

சிந்தையிற்சீர்த்தியோடுசேயிழைவனப்புமல்கத்
தந்தையினேவல்போற்றுந்தனையனைத்தந்தைநோக்கி
யெந்தையுன்மனத்துவைகுமேர்திழையுனக்குப்பாரி
முந்தையூழ்முறையினென்னமொழிந்தனன்முனிவர்கோமான். (௩௧)

சாற்றிய * தந்தைதீர்க்கதமன்றனைத்தனையனோக்கி
நாற்றிசைபரவுநான்குகோட்டுவெண்ணுகமீது
தோற்றினற்குரியளாகுந்தூமொழிசுருதிவாய்மை
யாற்றியவறிவவெவ்வாறளியனேற்காவதென்ன. (௩௨)

மொழிந்திடுமாற்றங்கேளாமுருகலர்பெருகாறி
வழிந்தெழுமதுவார்வேதவனத்துறைவரதனேநந்
தொழுங்குலதெய்வமாகிச்சுடர்தலாலரியதுண்டோ
வழிந்திடலவலமெல்லாமவனருளாகுமன்றே. (௩௩)

இயற்றலுமியலுஞ்செய்கைமாற்றலுமியலவேறு
பயிற்றலுஞ்சராசரத்தின்பயிற்சியும்பரனலாகு
மயற்றுகளகற்றியன்பால்வழிபடவாயுமெல்லாம்
புயற்களத் † தமலற்கன்புபொற்றருப்போலுமன்றே. (௩௪)

முன்னமுன்னுள்ளமோர்வான்மொழிந்தனன்வேறதாக
வென்னதுதவத்தின்மேன்மைகாண்டிநீயிழைத்தவேவற்
கன்னதுவாயுமற்று ‡ மாறியாத்திரையுமாற்றிப்
பொன்னவிர்சடையாற்போற்றிற்பொலிதரும்புரிதியென்றே. (௩௫)

மிக்கயாத்திரையீதாற்றிவிழைபவர்க்கரியதேனு
மக்கணமருளுமேன்மையவரிடையருளுங்கூருஞ்
செக்கரஞ்சடையானென்னத்திருவருள்பெற்றுத்தேசார்
தக்கயாத்திரையோராறுமியற்றினன்றருமமிக்கான். (௩௬)

தான்முயன்றியற்றும்பட்டந்தன்னினுமூழ்கித்தந்தை
வான்மகிழ்சரணம்போற்றிமழமதிக்கதிர்க்குமாறுய்த்
தேன்மலிகொன்றைவேதவனத்தரன்சிறந்தசெங்கேழ்க்
கான்மலர்ப்பாதம்போற்றிக்கண்கணீர்கலுழிபாய. (௩௭)

---

* தந்தையாகியதீர்க்கதமன் என இருபெயரொட்டுப்பண்புத்தொகை. † அமலனிடத்து வைத்த அன்பானது பொற்றருவைப்போல வேண்டிய வெல்லாங் கொடுக்குமென்க. ‡ ஆறியாத்திரைகளாவன சேதுயாத்திரை, பிரமயாத்திரை, தக்கிணமானசயாத்திரை, உத்தரமானசயாத்திரை, விட்டுணுயாத்திரை, அந்தர்க்கிரகயாத்திரை என மேலேகூறப்பட்டனவாம்.

உருகியவன்பிற்பூமியுடலுறப்பணிந்துபோற்றிக்
கருகியவிருள்போயுள்ளத்தருட்கதிர்கலப்பக்கண்ணிற்
பருகியின்புருவமாகிப்பன்முறைபணிந்துபண்பாற்
பெருகியவுவகையோடுந்துதிபலபேசலுற்ருன். (கஅ)

வேறு.

பொய்ப்படக்குழியிற்புரைபடச்சுழற்றிப்புகர்படுபுழையிடைப்புகுப்பா
னெய்ப்பறச்சுழன்றுகைப்படுத்தெனையுமெல்லையில்விடயமேற்ருவு
மைப்படுபொறியைமனமுடன்மடக்கும்வழியிலேன்மறைவனத்தமர்ந்த
மெய்ப்பொருள்கமலச்சரணமேயரணுய்மேவினனுவினன்வினையே. (கசு)

புலிங்கமார்கனலிற்புகன்மறைச்சிரத்துப்பொருளினைப்புகரறவிளக்கு
* மிலிங்கமாறுணர்த்துந்தேசிகன்முகத்தானிலங்கியபரந்தெளிந்தறியேன்
குலிங்கமாயிகல்வேன்குறிகுணமவத்தைகூடிடுமுடற்கியான்கரியே
யலிங்கமென்றுணர்ந்துமையமாயடைந்தேனுரணவனத்தநின்சரணே. (சo)

தனுவொருமூன்றுமுலகமுமவத்தைத்தன்மையுமுடலதற்கிடமாய்
மனுமுயிர்கரியென்றுணர்ந்தவற்றுண்மை†மதிப்பதுமனனமாகேள்வி
யனுதினஞ்சமாதியால்விப்ரீதமகற்றியானந்தமாயுறையப்
பனுமறைவனத்துப்பரஞ்சுடர்சரணபதுமமேயரணெனப்பணிகேன். (சக)

பரசிவமனந்தம்பூரண‡மமேயம்பார்ப்பதிகாந்தமானந்தந்
திரமுறுமேகஞ்சிற்பரமசங்கந்தேசுசால்சுயம்பிரகாசம்
வரமுறுமறைசைமணிசரணரணுய்மதித்தனன்மாயையின்வலிபோய்ப்
பிரமமாயுறையுஞ்சனகனேமுதலோர்பெற்றிடும்பேற்றினைப்பெறவே. (சஉ)

வேறு.

புரிசடையமல o பரமகல்யாணபூரணவாரணவனத்த
வரியயனமரரறிவறவொளிருமனந்தவானந்தமாவசல
தெரிதருகரணமிரிதரமருவுசிற்பரவற்புதசீதம்
விரிதருமமுதமதியினுட்புகுதும்விகிர்தனேவேதநாயகனே. (சஙு)

போற்றியென்றிறைஞ்சக்கூற்றுயிர்கவர்ந்தபுங்கவன்செங்கண்மால்வி
டைமேற், ருேற்றினனமரர்நாற்றிசைபரவத்தொழுதெழப்பழுதில்கக்கிவா,
னூற்றியவிழிநீர்சாற்றுமன்புருவோயுவந்தனந்துதியினுமதியா, லாற்றியாத்
திரையிற்றேற்றியவரநீயறையெனுமிறையெதிரறைவான். (சச)

---

* இலிங்கமாறு-சிக்ஷைமுதலியவேதாங்கங்களாறு. குலிங்கம்-காக்கை. அவத்தை அவத்தாத்திரயம். கரி-சான்று. அலிங்கம் இலிங்கமல்லாதது. இலிங்கத்தன்மை அறியாதிருந்தும் தேவரீரை யடைந்தேன் என்பதாம். † மதிப்பது-தியானித்தல். மனனம்-பற்றுதல். கேள்வி-சிரவணம். சமாதி-நிட்டைகூடல். ‡ அமேயம் - அளவிடப்படாதது.அசங்கம்-பற்றில்லாதது. o பரமகல்யாண-மேலான மங்கலத்தை யுடையவரே.

வேறு.

மயக்குமாயையாலுலகுயிருளதெனமதித்து
நயக்குமாறறவாவியுநீயெனநயந்தே
வியக்குமேன்மையுமுற்று*நின்னுருவமேவேறு
பயக்குமொன்றிலையென்பதும்பணியெனப்பகவன். (சரு)

இன்னநல்வரமீந்தன†முடலுடனியன்று
மன்னுமார்வினைமாய்த்திடப்பாண்டியன்மகளாம்
பொன்னவாமுலைப்பூவையைமணந்துநற்புதல்வர்
நின்னையொப்பவர்ப்பயந்தருமகமெலாநிறைத்தே. (சசு)

கடனனைத்தையுங்கழியினமோர்வரங்கனிவாற்
றடமியற்றினையத்தடநின்பெயர்சார்ந்தே
யுடலியற்றியதீவினையாடினர்க்கொழித்தே
யிடனுடைத்தலத்திலங்குகவென்றனனிறைவன். (சஎ)

இறைவனம்மொழிகூறலுமுனிமகனிறைநீ
யுறையுமாதயிராவதப்பிடர்த்தலையலங்கி
யுறையுமாங்கவற்குரிமைபூண்டனளேனையொக்குங்
குறையுளாற்கரிதென்றிடக்கூறினன்குழகன். (சஅ)

நேயமார்தருபாண்டியனிருக்கையைநினைந்தே
யேயவேகுழியிலங்கிராமேச்சுரத்தெல்லை
பாயநம்மருட்பான்மையாற்குறுமுனிபட்டத்
தாயநற்களிறடைந்துனையேந்திடுமடைவாய். (சகூ)

என்றுகூறியவ்விலிங்கமாய்மறைந்தனனிறைவன்
றன்றுகாதலான்முனிமகன்வழிக்கொண்டுதொடர்பாற்
சென்றுசீரிராமேச்சுரத்தகத்தியதீர்த்தத்
தன்றுகண்டுவெள்ளானைமேலிவர்ந்தனனம்மா. (ரு௦)

வெள்ளிமால்வரைமேல்கொளும்விரிசடையோனிற்
புள்ளிமாமுகக்களிற்றின்மேற்பொலிந்துபாண்டியனை
யுள்ளியேகலும்வேட்டையாலவ்வழியுற்றோன்
றெள்ளியோர்ந்தனன்பாண்டியன்சிறுவன்யாரென்றே. (ருக)

ஆய்ந்தமைச்சனையழைத்தயிராவதப்பிடர்மேல்
வாய்ந்தமாதவன்றன்னுழைவழிபடுமொழியா
லேய்ந்ததென்னிவண்யாவனீயெனவினுயிருள்போய்
மாய்ந்துதீர்தரவழங்கெனவேகினன்மகிழ்வால். (ருஉ)

---

* நின்னுருவமே வேறு பயக்குமொன்றிலை என்றது சீவன்முத்தியை.
† உடலுடனியன்று மன்னுமார்வினை பிராரத்துவம்.

பரிவினுனணைந்தருமுனிபாலனைப்போற்றிக்
கரியின்மீதுயர்கடவுளோயாரைநீகாட்சிக்
கரியையேகுவதெங்ஙுநானிங்ஙுனையாய்ந்து
தெரியவேவியபாண்டியனமைச்செனச்செப்ப. (ருக)

மற்றவாய்மொழிகேட்டியான்வானவனல்லே
னற்றவத்தருமுனிமகனயந்தபாண்டியன்சீர்
பெற்றகன்னியைவேட்பதற்கரனருட்பெட்பா
லுற்றகாரியமென்றிடவமைச்சனுமுவந்தே. (ருச)

ஏகிமன்னவற்கியம்பலுமிலங்கிழைப்பணைத்தோட்
பாகினன்மொழிபகர்ந்தசூள்பழுத்ததென்றெழுந்து
போகிமாதவப்புதல்வனைப்பணிந்துநின்புரிவற்
ருகினையயான்பாண்டியனென்பவனுமே. (ருரு)

ஆன்றபேரறத்தணிதிரண்டகலிடத்தெதிர்ந்தாங்
கின்றதையலையியன்மறையொழுக்கினிலெரியே
சான்றதாயிடத்தருகுவன்கோடிநீயென்ன
வேண்டுமென்னவற்கினிதெனமுனிமகன்விளம்பும். (ருசு)

வேலையின்னெலிவிழாவொலிமறையொலிவிளங்குஞ்
சாலைமாமகச்சடங்கொலிதழைத்திடத்தடம்பூஞ்
சோலைசூழ்மறைவனத்திடைச்சுருதிநூற்றுறையின்
* மாலைமாற்றுமென்றந்தையுண்மகிழ்ந்துமன்னினனால். (ருஎ)

அனைய தீர்க்கதமாவெனப்பெயர்பெறுமறவோன்
றனையனுமெனக்கவனருடலைமிசைக்கொண்டே
நினையுமாறெனவரசனுமமைச்சனைநீபோய்த்
துனைவினுங்கவற்கொணர்கெனவேகினன்றுணிவால். (ருஅ)

கானகம்பலகடந்துதன்வளமெலாங்கவர்ந்து
வானகங்கழிகாலையிற்கிடந்தெனவயங்கி
† யானகம்பலதுவைத்திடவொலிக்கடலாகுந்
தேனகம்படுசோலைசூழ்மறைவனஞ்சேர்ந்தான். (ருகூ)

முனிவனீரடிமுளரியிற்பணிந்துநின்புதல்வற்
கினியனுகியபாண்டியன்புதல்வியையீவான்
றுனியினன்மொழிசொல்லெனவிடுத்தனன்றூயோய்
கனிவினுயவன்மந்திரியானெனக்கரைந்தே. (கூ0)

* மால்-ஈண்டுச் சந்தேகவிபரீதங்கள். † ஆனகம்—வாத்தியப்பொது.

விரைவினேகெனவிழைந்தவன்றேர்மிசைமேவித்
திரையிரங்கிராமேச்சுரத்தவனுழைச்சேர
வரையனேய்ந்தவனடிதொழுதருந்தவத்தறவோய்
கரைவிலுனைக்கண்டதெத்தவப்பயன்கடியேன். (சுக)

என்றுநன்மொழியியம்பியென்புதல்வியையியல்பாற்
றுன்றுநின்மகற்களித்திடத்துணிதியென்றுரைப்ப
நன்றுநின்குலத்தியற்கையாற்றவமுனிநயப்ப
வொன்றுமென்றுபேருவகையோடுரைத்திடவுரவோன். (சுஉ)

அரியமாதவரந்தணரரசரையழைத்தே
யுரியவோரையின்மறைவழியழற்றுறையோங்கக்
கரியவாட்கயற்கண்ணியைமணந்துகக்கிவான்
புரியநல்கியேபுகலருமகிழ்ச்சியிற்பொலிந்தான். (சுங)

இலங்குபன்மணியானினம்பழனவூரிமைக்கும்
பொலங்கலம்பலபுரிவொடுமளித்திடப்போகிக்
கலங்குதெண்டிரைவளையொடுகருமணிபுரட்ட
வலங்கிராப்பகற்பொருவபோன்மறைவனமடைந்தான். (சுச)

பயந்தமாமுனிதன்னொடும்பரிவுறும்போகம்
வியந்துவேண்டுவநுகர்ந்துபன்மகங்களும்வேட்டு
நயந்தஞானமுமுத்தியோடணைதரநலத்தா
லுயர்ந்துமல்கினனியாத்திரையாறிலுரவோன். (சுரு)

வேறு.

கருதியாத்திரையாற்றிடுகக்கிவான்
சுருதிமாவனந்தொட்டநற்பட்டமே
பரிதிபோலிருள்பாற்றும்படிந்திடின்
வருதியானமறுமையுநல்குமே. (சுசு)

முன்னியன்னதின்மூழ்கிமுகிணைகைக்
கன்னிதானமளிப்பவர்காண்பய
னுன்னியாரளப்பாருலவாப்பயன்
பன்னியாடப்பவத்தையும்பாற்றுமே. (சுஎ)

வேறு.

யாத்திரைவிழுப்ப
மேத்தினனறிதி
வேத்தியலருத
பார்த்திபவினிதே. (சுஅ)

கக்கிவச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருகூ0.

# வன்னிச்சருக்கம்.

நரைதிரையொழித்திடுநறியதீங்கனி
யுரையெனப்பொலிதலாலுள்ளத்திச்சையே
வரையெனப்பொலியுமான்வன்னியிப்பதி
விரைதருமிக்கதைவிளம்புவாயென. (௧)

வேந்தனீதுரைத்தலும்விழைந்துநாரதன்
பூந்துணர்மதுத்துளிபொழியும்வன்னியீங்
கேய்ந்ததுமதனியல்பெனைத்துங்கூறுவன்
மாந்தரிற்றேவநீமதியென்றோதுவான். (௨)

அருவியுமதியெனவமுதவெண்ணிலா
மருவொளிவார்தலுமயங்கிமாமதப்
பொருகளிறொளியினிற்புழைக்கைநீட்டியே
யுருவுறுநிழற்கரியொளிப்பப்பாயுமே. (௩)

வானகநிறைமதிவயங்கல்போலெழுங்
கானகநடுவுறைகயிலைமாமலை
யானகவொலிக்கெதிரதிர்ந்திராவணன்
றானகமுறைமறைசாற்றுந்தன்மைத்தே. (௪)

அறமலர்முகிழ்த்தபூந்துணரினாசறு
நிறமலரவ்வரைநெருங்கிச்சூழ்தருந்
திறமலிபொருப்பினுட்சிறந்துதெய்வமார்ந்
துறமலிசத்தியகிரியொன்றோங்குமே. (௫)

அன்னதுகயிலையோ * டழுக்கற்றுங்குயர்
பொன்னவிர்குடுமியிற்பொலிந்துநூற்றெனப்
பன்னருமியோசனைப்பரப்பினாயிர
மென்னநீள்யோசனையுயரமெய்துமே. (௬)

முடியிரண்டியோசனையகலமுற்றியே
கடிதருநறுமலர்கமழ்ந்துகாயத்திற்
பொடிமணிதாதுவிற்பொலிந்துபொற்றருப்
படிநிழற்கின்னரர்பயிலும்பண்பிற்றே. (௭)

வெள்ளியங்கிரிவிருப்பொருவிவீங்கொளி
யுள்ளிநன்கிம்மலையுறையுவப்பினாற்
றெள்ளியதித்தலைச்செறிந்துகாசிப
னள்ளியவருந்தவம்புதல்வர்க்காற்றினான். (௮)

---

* அழுக்கற்றுங்கு— அழுக்காற்றைச்செய்தாற் போல.

ஆற்றியவருந்தவத்தமலன்முன்புறத்
தோற்றினன்ஞேற்றலுந்தொழுதுதூய்மறை
போற்றியவிசையிறைற்புகழ்ந்துபோற்றியக்
கூற்றயரடிமலர்குழையத்தாழ்தலும். (கூ)

முனிமுகநோக்கியேமுதிருங்காதலா
லினிதுறுபுதல்வரையெய்துவாயெனுக்
கனிவொடுகூறியாங்கடிதுதோற்றுதற்
குனியதொர்காரணமுணர்கென்றோதுவான். (௧0)

மழலையஞ்சின்மொழிமதுரத்தேன்சொரி
குழவியங்குமரனைக்கொடுங்கையேந்தியே
நிழன்மணியிவ்வரைநெற்றிமேன்மகிழ்ந்
துழல்விளையாட்டினுலுமையுலாவினள். (௧௧)

இளந்தளிர்நலங்கவர்ந்திலங்குநல்லெழில்
வளம்பிறிதாகலுந்தளர்ச்சிவாட்டமு
முளந்தெளிதோழியருரையுமோரையு
மளந்திலள்பான்முகக்குழவியன்பினல். (௧௨)

* புறம்பொலிநம்முயிர்போலுமங்கைதன்
றிறம்பலவுணரவுஞ்சிரமந்தீர்க்கவு
நறுங்குழறளர்சமியென்னுநம்முளத்
தறம்பொலியேவலிற்சமியதாகியே. (௧௩)

பனியிணர்ப்பாசிலைபரப்பியின்னிழற்
கனிமதுத்துளியொடுகலந்துவீசலின்
முனிவுறுதளர்வகன்றின்பமுற்றினள்
வனிதையர்திலகமாய்வயங்குமங்கையே. (௧௪)

வளர்விளையாட்டொடுதளர்ச்சிமாற்றியே
யுளர்சிறையளிக்கமுதுயிர்க்கும்வன்னியின்
கிளர்நிறங்கண்டரிக்கெண்டைக்கண்ணினு
ருளமுறுமுறுவலோடொல்கிமெல்லென. (௧௫)

---

* அகத்தின்கணன்றிப் புறத்தின்கட்பொலியும் நம்முயிர்போலும் மங்கையது விளையாடல்களைப் பார்த்தறியும்பொருட்டும்,அவ்விளையாடற் சிரமந்தீர்க்கும்பொருட்டும்,நறுங்குழலினது சிரமத்தைப்போக்கென்னும் நம்மனத்ததேவலான் நாம் சமிவிருக்ஷமாகி என்க. சமம்-போக்கல். சமமெனினும் சமனமெனினுமொக்கும்.சமி-போக்குவது. இவ்வன்னிவிருக்ஷம் உமையம்மையினது விளையாடற் சிரமத்தைப் போக்கினமையாற் சிரமாபநோதனம் எனவும் பெயர்பெறும். அபநோதனம்-போக்குதல்.மங்கை-ஈண்டு நித்தியகன்னிகை என்னும் பொருட்டு.

பரிபுரமரிச்சிலம்பரற்றப்பன்மலர்
புரிநறுங்கருங்குழற்பொம்மல்வெம்முலை
தெரியுமெம்முருவெனத்தெளிந்துபோற்றியே
யுரிமையிற்பரிவொடுமுவந்துவேண்டினள். (கசு)

வேறு.

எண்ணருங்கருணைகூரவெள்ளிடையருளாலீங்குப்
புண்ணியவுருவமாகப்பொருந்திணையென்றுமேவிக்
கண்ணிணைகுளிரநின்றுகளைதவிர்த்திடுதியென்றுப்
பண்ணமர்மொழியாள்வேண்டநின்றனம்பாற்றித்தாபம். (கஎ)

பிதிர்சுணங்கரும்புங்கொங்கைப்பெய்வளைவேண்டநின்ற
தெதிருனக்குற்றவள்ளியிதுவதனிலங்குஞ்சார்பின்
முதிர்தவமுயன்றவாற்றுன்முன்னுனக்கெளிதுதோன்ற
வுதிர்கனியுமிழுந்தீஞ்சொ * லும்பலுமுற்றுயன்றே. (கஅ)

இயம்பியவள்ளிநீழலிலங்கொளித்திங்கட்புத்தேள்
நயம்படுசெறிவான்மிக்க † வோடதிநாதனுன்
வயம்பெறுமவுணர்சாய்வானித்தலைவானநாடர்
சயம்பெறக்குமரன்சேருபதியபிடேகஞ்சார்ந்தான். (கசு)

இத்தருநீழன்மேவியெம்மிடைச்சனகன்முன்னோர்
புத்தமுதனையஞானம்புரிவுடன்மகிழ்ந்துபெற்றார்
கொத்தவிழ்நிழலினற்பங்குணத்தனவேனுங்குன்றாய்
முத்தியைநல்குமீயுமொழிந்தனயாவுமன்றே. (உ0)

அஞ்செழுத்தொருகாலீங்குப்பகரினுமனந்தமாகி
வஞ்சமுற்றியவெம்பாவவாரியைவறளவாக்கி
நெஞ்சமுற்றமலமாகநீடருணிறைத்துநந்நாட்
கஞ்சமுற்றின்பமேவிக்கலந்துறவளிக்குங்கண்டாய். (உக)

வேறு.

எனவுரைபகர்ந்தரனேகக்காசிபன்
றனதுறுநிலையிடைச்சார்ந்துவைகிறு
னனையகுன்றிராமனன்றணைசெய்காலையிற்
றனைதருகவயனுற்றேண்டப்பட்டதே. (உஉ)

விற்றிறலிராகவன்வெற்றிமேயவன்
கற்றிரளிலங்கையைக்கருதிக்கார்க்கடற்
பற்றணையியற்றியஞான்றுபார்வயி
னற்றழிதரக்கிரியரிகளாற்றினர். (உ௩)

* உம்பல்—பிள்ளை. ஓடதி-மரமுதன்மருந்து.

நெருங்கியகிரிக்குலமகழ்ந்துநீர்நிலஞ்
சுருங்கியவணேசெயத்தொடங்குங்காலேயிற்
பொருங்கயமுழுவலிக்கவயன்போயதன்
மருங்குறைசத்தியகிரியைவௌவியே. (உச)

அத்தியினிடுதலுமழூர்தியாயிரந்
தொத்தியயோசனைசுடரும்பாரள
வொத்தினிதுச்சியினெளிரும்வன்னியு
முத்திமென்கனிதரமுகிழ்த்தமூயதே. (உரு)

இந்நிழலிராகவனியற்றிநற்றவந்
துன்னியகத்தியைத்தொலேத்துத்தூயனய்
மன்னினன்கடிதரன்மகிழ்ந்தவாய்மையாற்
றன்னிகர்கவுசிகன்றனுஞ்சார்ந்தரோ. (உசு)

பெருந்திசைநான்கினும்பெருகுநற்றவந்
திருந்தியவாற்றியுஞ்செம்மைசேர்கலான்
வருந்தினன்மறைவனவன்னிவார்நிழற்
பொருந்தினன்பிரமமாம்புனிதத்தன்மையே. (உஎ)

* பொன்றிரள்பூந்துணர்பூத்தவன்னியின்
மன்றிரிசங்குநோற்றமாண்பினன்
மின்றிரள்விமானமேன்மேவிவாழ்ந்தன
னன்றியுமிருடிகளனந்தமாயினர். (உஅ)

வார்தருசமியிடைமன்னிமாதவஞ்
சீர்தருஞானமெண்சித்தியெய்தின
ரேர்தருதவஞ்செபந்தான†மீரெரி
யாரழலிதன்கணென்றனந்தமாகுமே. (உகூ)

வேறு.

அன்னமீந்தவரிதனகத்தரன்புரியணைவார்
பன்னுமாமறைப்பனவருக்களித்திடிற்கயைமின்
மன்னவாற்றியசிராத்தநற்பயன்றருமறைதேர்
முன்னவர்க்‡கினன்றினமரிதினஞ்செயுமுறையால் (௩௦)

---

* வன்னிப்பூப் பொன்னிறமாகலிற் பொன்றிரள்பூந்துணர் என்றார். † ஈரெரி இரண்டக்கினி. பின், ஆரழல் எனவே, மூன்றக்கினி என்றதாயிற்று. அம்மூன்றக்கினிகளுட் காருகபத்தியம் கிருகத்தாச்சிரமத்திற் குரியது. ஆகவனீயம் யாகாதிகளுக்குரியது. தக்ஷிணக்கினி அபரகிருத்தியங்களுக் குரியது எனவறிக. ‡ இனன்றினம் ஆதிவாரம். அரிதினம் ஏண்டுத் துவாதசித்தினம்; ஏகாதசித்தினமன்று. செயுமுறையாலாற்றின் என முன்னர்க் கூட்டுக.

* ஆற்றினட்டகஞ்சோடசங்கயைப்பயனளிக்குந்
தோற்றுவாவினிற்சதகுணமாயிரந்தொடர்பாற்
சாற்றுமாவிதிபாதத்துத்தருமகமாகந்
தேற்றுநாட்செயவாயிரமூன்றுறச்செறியும். (௯க)

அயனமேற்பதிறுயிரம்விடுவமவ்வாறும்
பயனதாமுபராகத்தினிலக்கமாம்பலன்கள்
சயனமாமருத்தோதயமகோதயந்தம்மில்
வியனதாகியகோடியாங்கயைதரும்விளைவே. (௯உ)

எத்தினத்தினுமித்தலையளித்திடிற்கயையின்
வைத்தருத்தியபயனுறுமொருபிடிவரம்பும்
பைத்தமேருவிற்பயன்படும்பயின்றனவெல்லாஞ்
சித்தமார்தருசித்தியாம்வன்னியின்சிறப்பால். (௯௩)

பாசிலைப்பரமாகியவன்னியைப்பணிந்தே
தேசுசாலிலைதரித்திடினிரவுறுதீங்கும்
பேசுநோய்களும்பிரிந்திடுமண்முடிப்பெய்யி
னுசிலாமுத்தியணைந்திடுஞ்சித்திகளனைத்தும். (௯௪)

வேறு.

முற்றிடுஞ்சித்திகள்வன்னிமூலமே
பற்றிடவுடன்றரும்பரப்பும்பல்குணந்
துற்றசைகிடவன் † றுனியினுலுற
வற்றமிறேவலன்மறைசையண்மியே. (௯௫)

பொலிமணிகன்னிநீர்மூழ்கிப்பூந்துணர்
மலிதருசமியடிவைகிமந்திர
மொலிபெறவுரைத்தயனுலகமெய்தினுன்
கலிவலிதொலைந்திடுஞ்சமிகண்காணவே. (௯௬)

வேறு.

வன்னிவரத்தது
பன்னினமிக்கதை
முன்னினர்பெற்றவர்
மன்னவமுத்தியே. (௯௭)

வன்னிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬உ௭.

---

* ஆதிவாரத்தில் எண்மடங்கு பலனும், துவாதசித்தினத்திற் பதினுறு மடங்கு பலனு மளிக்குமென நிரனிறையாகக் கொள்க. அட்டகம் எட்டின் கூட்டம். மகமாகந்தேற்றுநாள்-மாசிமாசத்து மகநக்ஷத்திரதினம். † துனி-மனவைரம். சைகிடவ்வியமுனிவரிடத்துக்கொண்டமனவைரத்தினுலென்க.

## பஞ்சாக்கரச்சருக்கம்.

புரிநரம்பிரங்கிசைப்புதியவின்மது
விரியுநின்வீணையினெழுந்தமெல்லிசைப்
பரிதருமுளமெனப்பகர்ந்தசாதையிற்
றெரிதருமென்மனவிருப்பஞ்சென்றதே. (க)

பகர்தருகாதைமுன்பரிந்தவெண்ணில
வகருறுகொழும்புகையணியினுகமே
நிகர்தருமறைவனநீர்மைபோலவே
புகரறுமின்பமேபுரிந்ததல்லவே. (உ)

வன்னியினீழலஞ்செழுத்தும்வாய்ப்புற
வுன்னிடிற்பயன்பெரிதுதவுமென்றுமுன்
பன்னினையம்மனுப்பயிற்றும்பான்மையு
முன்னியபயனையுமொழிகுவாயென. (ங)

மன்னவனுரைசெயமகிழ்ந்துமாமுனி
யன்னதன்பெருமையையகிலமாகிய
முன்னவனன்றியாரறிவர்மொய்குழற்
கின்னணமியம்பினனீசனென்பவே. (ச)

எண்ணறுமந்திரத்தியற்கையாவையு
முண்ணிகழ்ந்துறவுமையுணர்ந்திவற்றினுற்
கண்ணியபெரும்பயன்காண்பதின்றெனுப்
புண்ணியனடிபணிந்தன்பிற்போற்றவே. (ரு)

பானலங்கண்ணுமைபரிவுதீர்தர
வானனமொன்றினென்றுகவஞ்செழுந்
தூனமிலொலியொடுமுதித்தவாலவை
வானமர்தாரகத்துருவம்வாய்ந்தவே. (சா)

மறைகளுமாகமவழக்குமற்றைய
விறையவனூல்களும்யாவுமஞ்செழுத்
தறைதருபொருள்விரித்தறையுமாதலாற்
பிறைதவழ்சடையவனனையபெற்றிய. (எ)

அஞ்செழுத்தமலனதுருவமஞ்செழுத்
தெஞ்சலிறிருநடமிறைவனைந்தொழி
லுஞ்சுறுநெறிபொறிகரணமூழ்படு
மஞ்சமர்பொருளெலாமவைகளாகுமே. (அ)

அரனெடுமெஞ்செழுத்தயிக்கமாகியே
யுரனுறவொற்றுமையுற்றுநிற்றலாற்
பரவுயிர்நீங்கரும்பதியைப்பற்றுமா
றிரவிரியருளெனவிலங்குமென்பவே. (கூ)

விதிவழிமந்திரமுணர்ந்துமேன்மைசால்
பதியுருவாகியகுரவன்பாற்பகர்
மதிநிலமளிக்குமிம்மனுவுக்கங்கமாங்
கதிதருமிருடிமுன்னையகாட்சியும். (௪0)

கரமுதலாகியநியாசங்காமர்சீர்
தரவிரிதியானமுஞ்சாற்றுமூவகை
பரவியவுரைவிதிப்பண்புமோசையும்
விரவியவாய்ந்தபின்விளைத்தல்வேண்டுமே. (௪௧)

மனுவினுளரசெனமதித்தமாமனுப்
பனுமுறையறிந்துளம்பதித்துப்போற்றிடிற்
றனுமுறைமூன்றினுந்தழைத்தவல்வினை
யுனுமுனமெரியுறுபஞ்சினேயுமே. (௪௨)

வருணமாச்சிரமமாம்வரம்புங்காலமுந்
திருமலிதேசமுஞ்சேர்ந்திடாதுயிர்க்
கிருமையுமுதவிமேலின்பமீந்தயர்
கருமலிபிறவியுங்காயுங்காட்சிய. (௪௩)

எத்தலத்துரைப்பினுமிரித்துத்தீவினை
கைத்தலமுத்தியுங்காட்டுமாயினுஞ்
சித்திசேர்தலத்திடைச்செப்பிற்சீர்தரு
மத்தலமுணர்த்துவனரசகேட்டியால். (௪௪)

நலம்பெறுமந்திரநவிற்றநன்மைசா
றலம்பலபுடவியிற்றழைக்குமாங்கவற்
றலம்புநீர்நாவலந்தீவினுள்சில
வுலம்படுதோளினுயுரைப்பனேர்தியே. (௪௫)

பெருந்திரைமணிப்பிரயாகைநைமிசந்
திருந்தியகயைதிருக்காசிமானதம்
பொருந்தியவிலந்தையங்கானம்பொற்கரி
வருந்துகேதாரமேமந்தராசலம். (௪௬)

* சித்திரசிலைப்பெயர்த்தானந்தேசுறு
மத்திரியம்பகமாதியேழென
வைத்தகோதாவிரிமல்லிகார்ச்சுன
முத்தணிகாஞ்சிமாமூதூகுன்றென்பவே. (கஎ)

ஓதியபுண்ணியதலத்தினுண்மையா
லாதியமறைவனமதிகத்தோங்கலி
னேதமிலத்தலத்தியம்புமாயிரத்
தூதியமிதனிலொருருவினுண்டரோ. (கஅ)

விரைதருமறைவனமேவிமேன்மைசான்
றுரையுறுமஞ்செழுத்தொழுங்கினோதியே
பரைதருமுத்தியிற்படிந்துளார்தமைக்
கரைதரினெண்கரைகடக்குமென்பவே. (கக)

அருக்கனற்றினத்துறுமமையினுசெலா
முருக்கிடுமாமணிகன்னிமூழ்கியே
பெருக்கிநின்று†யிரப்பத்திற்பின்னிரண்
டிருக்குறுமஞ்செழுத்தியல்பினெண்ணினோர். (உ0)

ஆற்றியதீவினையழித்தெண்சித்தியும்
போற்றியவுலகினிற்பொலிவரன்னவர்
தோற்றமேகாணினுந்தொடர்ந்தவிப்பிரர்ச்
சாற்றியகத்தியுந்தளர்ந்துசாயுமே. (உக)

இணையறுமித்தலத்தியல்புதேர்ந்தருட்
புணையுறுமஞ்செழுத்துளத்துப்பூரியா
வணைதருமுக்குறும்பரிந்த‡வையரித்
துணையெனற்கரியரித்தலத்துத்துன்னினோர். (உஉ)

---

* சித்திரசிலை என்னுந்தலம். தேசுறுமத்திரி அருணாசலம். அம்பகம் திரியம்பகம். ஆதியேழெனவைத்தகோதாவிரி சத்தகோதாவிரி. இன்னும், என்ப என்றமையாது, ஓதிய எனமிகுத்துக்கூறலான், ஸ்ரீசைலம், தீர்த்தபருவதம், கோபருவதம், சங்காத்திரி, சூலபருவதம், கந்தகிரி, சித்திரகூடம், மகஷிமலை, (மகஷி-ஈ.) கௌசாரணியம், பிரமேசுரம், வீமவனம், மார்க்கண்டேயம், மத்தியார்ச்சுனம், கோமதீசம், மாயூரம், பாசுபதம், மாகாளம், தாண்டேசுரம், பிரயாணேசம், வில்வவனம், வன்மீகம், என்னும் தலங்களும் பஞ்சாக்ஷர செபத்திற்கு விசேட முடையன வாகலின், அவற்றையுந் தழீஇக்கொள்க. † பன்னீராயிரமுருச்செபித்தவர். ‡ ஐயர்-தேவர்.

உளந்தெளிகபிலன்முன்னுறுத்தயோகிக
ளளந்தறிவியாதன்முன்னையவந்தணர்
கிளர்ந்தெழு*வாலகில்லியர்கள்கேடிலிவ்
வளம்பதிவைகினன்முத்திவாய்ந்துளார். (௨௩)

எறிதிரைமறைவனத்தியாவராயினுஞ்
செறிதருமஞ்செழுத்துளத்திற்சேர்த்தினு
ரறிவருமுத்திதங்கரத்துளாக்கினர்
வெறிகமழிலங்கிலைவெயில்செய்வேலினாய். (௨௪)

சொற்பலபெருக்கியென்சுடருமஞ்செழுத்
†தற்புதமொருமுறையறையுமன்பினர்
பொற்புறுமறைகளுன்கங்கம்பூரியா
வெற்படவோதினபயனையெய்துவார். (௨௫)

பாவனைநியாசமுமியற்றும்பண்புமற்
றேவரேயெனினுமிங்கியம்பினிப்பயன்
காவலநெறிமுறைகணித்தகற்பினர்
தேவரேமறைவனஞ்சேர்ந்தசெய்கையார். (௨௬)

ஆகையாலஞ்செழுத்தகத்துளாக்கியே
யோகையாலிப்பதியுரைத்தல்வேண்டுமாற்
பாகையார்மென்மொழிபங்கனற்பத
மீகையான்முத்தியுமெளிதினெய்துமே. (௨௭)

துத்தியம்பஃறலைப்பாந்தள்சோர்வுறு
தித்தலந்தாங்குதோளிறைவவிக்கதை
புத்தியுமுத்தியும்புரக்கும்புண்ணியம்
பத்தியிற்கேட்டியாற்பரிதிவேலினாய். (௨௮)

மின்னுசாகல்லியபுரத்துமேவிய
பன்னுசீர்‡வேதபப்பனவன்பாயசீர்
மன்னினன்வேதநூல்வழக்கின்வாழ்பவன்
றன்னுயிரெனவுயிரளிக்குந்தன்மையான். (௨௯)

---

* வாலகில்லியர்கள் பிரமாவின்புத்திரர்கள். பிரமாவின் பின்புறத்திற் பிறந்தமையால் வாலகில்லியரெனப்பெயராயிற்று. இவர்அறுபதினாயிரவர்.
† அற்புதம் - ஒரெண். ‡ வேதபப்பனவன் - வேதபனென்னும் பெயரையுடையபிராமணன்; வேதத்தைப்பான்ம்பண்ணினவன் என்பது பொருள்.

நெடியநாட்டன்பதிவைகிநேரிலான்
முடிவறுதீர்த்தயாத்திரையின்முன்னினான்
படியமர்தீர்த்தங்கள்படிந்துபற்றினாற்
கடிகமழ்மறைவனங்கண்டுகாதலால். (௯0)

தீவினையிருள்கெடத்திகழுந்தீர்த்தநான்
காவியினழுக்கறமூழ்கியன்பினாற்
பூவியலருச்சனையாற்றிப்பொங்குசீர்
நாவியலஞ்செழுத்துளத்துநாடியே. (௯௧)

மறைவனங்காதலால்வைகிவாழ்பவ
ணிறையவனிசியெனவிலங்குநாள்வரக்
கறைகெழுமிடற்றவற்கலந்தவன்பினா
னிறைதருபூசனைநிகழ்த்திநீர்மையால். (௯௨)

துஞ்சலற்றிரவிடைத்துகளற்றோங்கிய
வஞ்செழுத்துளத்துறவழுத்தியார்வமோ
டெஞ்சலுற்றிடாதுரைத்திருந்துபின்சிவன்
கஞ்சநற்றாளிணைக்கதியின்மேவினான். (௯௩)

ஆதியாச்சிரமமாரந்தணாளனுக்
கோ*தவகிரணமுற்றதாயிடி
னாதனன்மறைவனநண்ணித்தீர்த்தங்கள்
காதலினாடியக்கடவுட்போற்றியே. (௯௪)

ஒருபதினாயிரமுரைக்கினஞ்செழுத்
தருவினையொழிந்திடு, † மகத்தின்மேவினான்
வருமதிற்பாதியாம்,வனத்தினான்றனக்
கிருமடி, யதிதனக்கிலக்கமாகுமே. (௯௫)

‡ பட்டினியைந்துநாட்,பாதி,பத்துநா,
ணெட்டியல்மாதமு,நிரையினாயிடு
மொட்டியமறப்பினாலுற்றதீங்கினுக்
கெட்டியவுருவினானிசைத்ததாகுமே. (௯௬)

---

* அவகிரணம்-சிதறுதல். எனவே, தவறுதல் என்றதாயிற்று. இதுமேலுங்காட்டப்பட்டது. † அகத்தின்மேவினான் - கிருகத்தன். வனத்தினான்- வானப்பிரத்தன். யதி - சந்நியாசி. ‡ நால்வர்க்கும் முறையே உபவாசம் ஐந்துநாளும், இரண்டரைநாளும், பத்துநாளும், ஒருமாதமுமாம் என்க.

அறிந்துளம்பல்லநாளாற்றினூர்வினை
யெறிந்திடுநற்பரிகாரமில்லையாற்
* றுறந்தவர்போற்கலன்றுறந்ததோகையர்
செறிந்தவர்மறையுளான்போலச்செய்கவே.　　(௬௭)

வன்னிகிழஞ்செழுத்துரைத்துமாதவர்க்
கன்னமதளித்தவரமலனுருவ
நுன்னினென்றுலப்பிலாப்பயனுற்றோங்கிடு
மன்னநீமனத்திதுமதித்தியென்றனன்.　　(௬௮)

வேறு.

அக்கரமைந்தின்
பக்கமறிந்தே
மிக்கவர்வீடார்
தக்கவர்தாமே.　　(௬௯)

பஞ்சாக்கரச்சருக்க முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் ௬௬௬.

---

# பிரதக்கிணச்சருக்கம்.

மறைவனநாதனைவலஞ்செய்மாதவத்
துறையினைமுனிவரசொற்றியென்னவே
கறைதபவருளினன்கருணையாற்கனிந்
தறைகடலுலகினையளிக்குநீர்மையான்.　　(௧)

நாதனைவலஞ்செய்வனென்றுநாடவே
பாதகமாயினமுற்றும்பாறியே
காதமதுற்றிடுங்கருதியாற்றிடி
னேதமின்முத்தியுமெய்துமென்பவே.　　(௨)

வேறு.

மறைசையண்ணலைவலஞ்செயவங்கவன்மகிழூங்
குறைவில்பூசையாம்பூசனையாற்றியுங்கோயின்
முறைவலஞ்செயாரருச்சனைப்பயன்பெறார்முற்று
மிறைவன்பூசனைவலமுறச்சூழ்ந்திடுமியல்பே.　　(௩)

---

* அமங்கலிகள் சந்நியாசிகளைப்போலவும், சுமங்கலிகள் பிரமசாரி யைப்போலவும், மேற்கூறிய பிராயச்சித்தஞ்செய்துகொள்க என்பதாம். செறிந்தவர் கலன்செறிந்தவர். மறையுளான் பிரமசாரி.

மாயனேமுதற்றேவருக்கெண்ணிருவகையா
லாயநல்லுபசாரமேயருச்சனையாகும்
பாயமாமறைவனத்துறைபரமனுக்கன்பா
லேயுமாவலஞ்செய்தலேயருச்சனையென்ப. (௫)

சுருதிநாயகன்சூழ்வெனுங்கலுழனைத்துணிவாற்
கருதினுற்றியவினையெனுமரவெலாங்கரியும்
பரிதியாம்பிரதக்கிணம்பாவமாமிருளை
வெருவிமாய்தரத்துரந்தருள்விழியினைவிளக்கும். (௬)

வாக்கின்மந்திரந்தோத்திரமனத்திடைத்தியான
மாக்கியேகமஞ்சூன்மகளலங்குநீர்க்கும்பந்
தேக்கிமென்சிரத்திருத்தினணடந்தெனச்செல்க
தூக்கின்மாற்றியதொடர்வினைநெறியினைத்துறந்தே. (௭)

ஒருகையாற்றொழலொருபிரதக்கிணமுலவாத்
திருகுவெஞ்சினச்செய்கைவீண்பயனிலசெப்ப
லொருவுவாமத்தினிறைஞ்சுதலுருவுறச்செபித்தன்
மருவலென்றிவையியற்றியபுண்ணியமாய்க்கும். (௮)

தீங்குதீர்தரத்திருமறைக்காட்டுறைதேவைப்
பாங்குசூழ்வலஞ்செய்திடிற்பாதவைப்பொன்றிற்
கோங்குவேள்விகளொருபதினுயிரமுஞற்றத்
தாங்குபுண்ணியமனைத்தையுஞ்சார்குவர்சரதம். (௯)

வேறுவேண்டியசெய்யினும்வேதநாயகற்குக்
கூறுநற்பிரதக்கிணம்போலுளங்குளிரா
மாறுதீர்வலம்வந்திடிற்கடிதுளமகிழ்ந்தே
நாறுசெஞ்சடைநாதன்வேண்டியவரநல்கும். (௰)

வெறிகமழ்ந்தணிவேய்ந்தொளிர்தேர்பயில்வீதி
நெறியினுற்பிரதக்கிணஞ்செய்தவர்நீடி
மறிதருங்கொடுநிரயவெவ்வழலினைமாற்றிப்
பொறிதரும்பயன்புணர்ந்துடன்புண்ணியராவார். (௧௦)

அங்கமார்வலமவ்வயிற்செய்திடுமறவோ
ரெங்கள்வார்சடையிறைவனேடின்பமுற்றிருப்பார்
தங்கமார்தரப்பத்தியினித்தியஞ்சூழ்வோர்
செங்கண்மான்முதற்றேவரைவசஞ்செயுந்தேவர். (௧௧)

* பணிந்தெழுந்துபின்பணிந்தெழுந்திங்ஙனம்படிமீ
தணிந்துசூழ்பவர்க்கயுதமாமிலக்கமொன்றுற்றத்
துணிந்தநற்பயனென்றளித்திடும்பவத்தொடர்ச்சி
தணிந்தநற்கதிதருமிதுதாழ்வறத்தழையும். (கஉ)

† வலத்துமற்றையவிடத்தினும்வலமுறவரினே
நலத்தசவ்வியமேயபசவ்வியநாமம்
புலத்தினலிதுபுரிந்தவர்புனிதராய்ப்பொன்பூ
நிலத்தின்மேவுவர்நிரயமங்கவர்தமைநிணையா. (கங)

‡ விடையடைந்து, பின்சண்டனதருகுறமேவி,
யடையவேற்றினைச், சோமசூத்திரமுற, வானின்
புடையுஞ், சண்டனே, சூத்திரம், போற்றியசண்ட,
னடைவின்மூரி, யென்றென்பதுமிம்முறையாற்றின். (கச)

சோமசூத்திரவலமெனச்சொல்லுவர்தொல்லோர்
நாமமின்னதற்கிப்பிரதக்கிணநயந்த
காமநல்கிடுமறைவனமேயகண்ணுதலுக்
கேமமார்வலஞ்சித்திகளெண்ணிலவீயும். (கரு)

---

* பணிந்தெழுந்துபின் பணிந்தெழுந்திங்ஙனம்படிமீதணிந்துசூழ்தலைக் கும்பிடுதண்டமென்ப. அயுதமாமிலக்கம்-பதினாயிரமிலக்கம். † இது சவ்வியாசவ்விய பிரதக்கிணமெனப் பெயர்பெறும். சவ்வியம் - வலம். அசவ்வியம்-இடம். அசவ்வியமெனினும் அபசவ்வியமெனினு மொக்கும். இனி அபசவ்வியம்-வலம்; சவ்வியம்-இடம் என்பாருமுளர். ‡ முதல் நந்தியைத்தரிசித்து, உ-வது இடமாகச்சென்று சண்டேசுரரைத்தரிசித்து, ங-வது திரும்பி வலமாகச்சென்று நந்தியைத்தரிசித்து, ச - வது வலமாகச்சென்று சோமசூத்திரத்தைத்தரிசித்து, ரு-வது திரும்பி இடமாகச்சென்று நந்தியைத்தரிசித்து, சு-வது இடமாகச்சென்று சண்டேசுரரைத்தரிசித்து, எ-வது அங்கிருந்து மீண்டுசென்று நந்தியைத்தரிசியாமல் வலமாகச்சென்று சோமசூத்திரத்தைத்தரிசித்து,அ-வது மீண்டு இடமாகச்சென்று நந்தியைத் தரிசியாமற் சண்டேசுரரைத்தரிசித்து, கூ-வது நந்தியைத்தரிசிக்கின், இது சோமசூத்திரப் பிரதக்கிணமெனப் பெயர்பெறும்.இத்துணையும் ஒருபிரதக்கிணமாம். இங்ஙன மும்முறை செய்யப்படும். சோமசூத்திரம்-கோமுகை. இச்சோமசூத்திரப் பிரதக்கிணம்பிரதோஷகாலத்திற் செய்வது உத்தமோத்தமம். பிரதோஷம் என்பதற்கு இராப்பொழுது பிரவேசிக்குங்காலம் என்பது பொருள். இதற்கு இரசனிமுகம் எனவும்பெயர். இரசனி-இரா. இனி இரசனி என்பதற்கு மஞ்சல் எனப்பொருள்கொண்டு, மஞ்சல்வெயின்மாலை எனத்தாற்பரியங்கூறலுமொன்று. திரயோதசித்தினத்திற் சூரியன் அஸ்தமயனமாவதன் முன்னும்,அஸ்தமயனமான பின்னுமாகிய இருகூற்று ஓர் சாமமே பிரதோஷகாலமெனவறிக. இப்பிரதக்கணத்திற் கோமுகையெல்லையைக் கடவாமைபோலச் சண்டேசுரரெல்லையைக் கடவாமையும் ஆன்றோராசாரமென்பதுயுத்துணர்ந்து கொள்க. மூரி-இடபம்.

* இலங்குநல்வலத்தியற்றலொன்,ருயிரமிடத்தின்,
வலம்புரிந்திடலோடிடமிலக்கமா,மண்மேற்
புலம்புரிந்துறப்பணிதலாற்புண்ணியங்கோடி,
யலங்குமேனியாலனந்தமாம், வலம்வருமறனே. (கசு)

வேறு.

வெளிதருவீதியினிவற்றைமேவிடிற்
களிதருமனந்தமாங்காளமாமுகின்
மூளிதருபயிர்க்கெனமுறையிற்சூழ்தலாற்
றெளிதருஞானமுங்கதியுஞ்சேருமே. (சஎ)

எவ்வணமாயினுமறைசையீர்ஞ்சடைச்
செவ்வணமேனியற்றெளிந்துசூழ்வரின்
மைவணப்பிறப்பறும்வாயுமுத்தியு
முய்வணமுணர்ந்தவர்க்குண்மையுண்மையே. (சஅ)

வேறு.

மறைவனமருவிய
விறைவனைவலமுற
முறைதருமுணர்வொடு
நிறைவதுகதியே. (சகூ)

பிரதக்கிணச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சுஅரு.

---

# மணவாளக்கோலச்சருக்கம்.

மாற்றலர்தமுயிரனைத்துமருநசையாற்பருகியருவயிற்றினுலே [ன்
யூற்றுவபோற்கதிர்முகத்தினெளிகாலுந்தழல்வேற்கையுலஞ்செய்தோளா
கூற்றடருங்கொடுங்களிற்ருன்குறுகலர்தமுறுமருமங்குழையப்பாயுங்
காற்றனையகடும்பரியாணிரவிகுலதீபமெனக்காட்சிமிக்கான். (க)

மாந்தாதாவெனும்பெயரான் மனுமுதனூறெரிவழக்கின்வையமாளும்
வேந்தாயபெருந்தகையான் வீணைமுனிநாரதனைவிழைவினேக்கித்
தேந்தாயவேதவனச்சிறப்புமுனசெவ்வழிபோற்சிறந்தவாக்கு
மாந்தாதார்†மரமாதல்வண்மையுறுநரராதல்வசையிற்றுமே. (உ)

---

* வலம்வருதல் ஒன்று ஒன்றேயாம், இடம்வருதல் ஒன்று ஆயிரமாம், வலமுமிடமுமாக வருதல் ஒன்று இலக்கமாம், கும்பிடுதண்டம் ஒன்றுகோடியாம், அங்கப்பிரதக்கிணம் ஒன்று அநந்தமாம், பயன்றருமென்க. † மரமாதல் - மரமாகுக.

குறுமுனிவன்குளிர்தூங்கக்கொடுத்தவெழின்மணவாளக்கோலங்கூறு
முறுமுறையேபணித்ததெனவுரைத்தனையான்மணக்கோலமுற்றவாறு
மறுவறுசீர்க்குறுமுனிவன்வரலாறுமரபினொடும்வழாதுகாமந்
தெறுமுனிவவுரைத்தியெனச்செய்தவநாரதன்மகிழ்ந்துசெப்பலுற்றான்.

முன்னமொருகாலிருள்கூர்முருட்டுமனத்தக்கனிலாமுகிழ்த்ததாரப்
பொன்னவிருஞ்சடைமுடியான்புடைவயிரத்தொருவேள்விபுரியத்தந்தை
யென்னவுமையவன்மகத்தினெய்தவிகழ்ந்திடுமதனாலிகழ்ந்தோன்வேள்வி
மன்னமரரனைவரொடும்பொடியாகவழித்திமயமகிழ்ந்தாண்மன்னோ. (௪)

மணிவயிரத்தெழும்பசியவல்லியெனமுளைத்தளவில்வனப்புவாய்ந்து
துணியவிருட்டொகைமேனிச்சுடர்பரப்பியணியனைத்துஞ்சுவையினோடும்
பணியவுருவெனக்கவின்றுபல்பணியுமெழின்மறையும்பரிசுதாங்கிப்
பிணியனையதவத்தமலன்பேசுமணங்கடிகலக்கப்பிறங்குமெல்லை. (௫)

முறுக்கவிழ்நறைக்கமலமுதலோனைமுதலாகமொழியுந்தேவர்
மறுக்கடியுமறைமுனிவருருத்திரரவ்வகைபலவாமாண்பினோருங்
கறுக்குமுளத்தவுணரினங்கடிபூதமுதலாயகணங்கண்மேவப்
பொறுக்கரிதாய்த்தாழ்ந்துவடாதெழுந்ததுமேற்றெனாதுபுலம்புகருற்றம்மா

நிலந்தளர்ந்துசமனோவிநின்றநிலைபரமேசனினைந்துமேன்மைப்
புலங்கலந்தகுறுமுனிவன்றனைநோக்கியரியதவப்பொலிவுசான்ற
வலந்தழையுநீமலயத்திடையேகிக்கடற்புடவிவளையாவண்ண
நலந்தழுவச்செய்தியெனநவின்றுமுனநிகழ்ந்ததுநவிற்றுகின்றான். (௭)

மேருவொடுவிந்தவரைவெம்பகைகூர்ந்தகந்தைமிகமேவிவீணை
சாருமுனிதனைவினவத்தடமேருவலியதெனத்தரியாதாகிக்
காருலவுககனமொடுதிசையனைத்துங்கவ்வியெழுங்கதிரோனாதி
யூருமுயர்கோளியங்காவகைதடுப்பமறைவழக்கமொழிந்ததன்றே. (௮)

பதைத்தமரரிந்திரனைப்பணிந்தவனோடயற்குரைப்பப்பதுமன்செங்கைக்
கதைத்திருமாற்குரைப்பவரி†கணத்தோடுநமக்குரைத்துக்கலங்கச்சோதி
புதைத்தொளிரவ்விந்தகிரிப்புரிவொழித்துமேலெழுமப்புடவிவீக்கஞ்
சிதைத்திடுதிபோதியெனத்திகைத்தவசமுறக்கலங்கித்தேம்பினின்றே. (௯)

பெறற்கரியமணக்கோலப்பெருக்கினெழுமெழினீத்தம்பிரிந்ததாக
முறற்கடியேன்செய்தவினையுலப்பிலவோவெனக்கலுழவும்பர்கோமா
னறற்கரியசுருட்குழலோடமருமணக்கோலமுனக்கமலவாழ்வு
பெறற்கருளமறைசையெண்ப்பேருலகுதொழுதேத்தப்பிறங்குமங்கண். (௧௦)

† கணம்-தேவகணம்.

உலகமுறையொடுங்கிடுநாளுயர்மறைகளதன்கணுறைந்துலவிநம்பா
லிலகியிடுங்கயிலைமுதலெப்பதியுநமக்கதுபோலின்பநல்கா
வலகிறந்தபெருமையுரைப்பரிய * தியாமியத்தளக்கரான்றகூலங்
குலவியிடுமெழுதியெனக்குழைந்தகுறுமுனிமலயங்குறித்துச்செல்வான்.

குழவிமதியொழுகுநிலாக்கொழித்தகுருநிறச்சடையெங் குழகன்மேய
விழவணியும்பதியிறைஞ்சிவிந்தவரையுயர்ச்சியறவிரும்பிவிண்ணோர்
தொழவழியைவிடுதியெனுவகங்கையுறவடக்கியதன் றுணிவுதீர்த்திட்
டழகழியும்புடவியுயர்வகற்றியுலகளித்தவலமனைத்துமாய்த்தே. (சஉ)

வெல்வலமுங்கருமாயவிகற்புமொழித்தடவியிடைமெவிவேதச்
சொல்வலமாதவரையவர்வடிவுகொடுகொடுங்கொலையேதொடங்கிவாழு
மில்வலன்வாதாவியெனுமிருவரையும்பெருவரைபோலிடியவாற்றி
யல்வலனீத்துலகனைத்துமழிவிலதாமின்பத்தினழுத்தவாய்ந்தே. (சஙூ)

தளவமலரிளமூரற்றபனியப்பூங்கொம்பினொடுந்தழைத்தகாமர்
வளமருவுமணக்கோலமறைவனத்துத்தருதுமெனும்வாய்மைநாடிக்
களமருவுமருமணியுங்கரவலையுமராவணையுங்கமலமாவுந் [தான்.
துளவமுகிலெனப்பொலியுந்துறையுவரிமறைவனத்தைத்தொழுதுசேர்ந்

மறைமருவுமகவழக்கும்வருணமுறைதருவழக்குமனுவினுடி
யிறைநடவுதுறைவழக்குமிளமுலையார்மழைதருங்கற்பியலுமாறுஞ்
சிறையகிளிப்பறவைகளுந்திகழுமறையொலிவழுவாத்திறனுமாகப்
பிறைதவழுமரமியமார்பிறங்கொளியுமறங்குளிரும்பெரியசால்பும். (சரு)

புரிவலைகள்பரிவினொடுபொழியுமணிநிலவுமிழப்புதியசாந்திற்
றருகலவைசிதறியொளிதருகூடருநளிர்குடமூர்தயங்குவீதி
வரியளிகண்மதுவயிலமலருமலர்துதையவளர்வளமுநாடி
யரியமுனிகளியினொடுமதிசயமுமுறமருவியமைதியாக. (சசு)

நொடிவரியகொடியவினைநொடியினெரியெனவடருநோன்மைத்தாகி
மிடியகலவடிவினொடுவிழைவுதருபொருளுதவுவேத்தீர்த்தஞ்
செடியுடலமுடையுதறுதிருவமணிசன்னிதிகழ்சேதுக்கோடி
படிகமழுமலரடவிபடியுமறைவனதீர்த்தம்பலவுமாடி. (சஎ)

வேறு.

புனிதனுலயம்புகுந்துளம்புரிதரமேவிக்
கனிவினேடுயர்சிவகுறிகண்டுகண்களித்தே
பனியநீர்விழிப்பரப்பொடும்பாங்குறப்பணிந்தே
யினியதோத்திரமியம்பினன்புறஞ்செலற்கெழுந்தான். (சஅ)

---

* யாமியம் - தெற்கு.

கோடியுத்தரத்தாலயத்தெற்கிடைக்குறியா
ரூடிவேலையின்மேற்றிசையிருப்பெனநயந்தே
வீடிலாச்சிரமத்திடைவேதநூல்விதியா
லாடிபோற் * சிகதத்திநூலிலிங்கமுமாற்றி. (௧௯)

தேறுபாவனைதெளிமனுத்திறத்தொளிர்சிவன்சீ
ரூறுமக்குறியதற்குருவுறவமைத்துணர்வாய்
வீறுசிற்பரவிமலவானந்தமாயுயிர்க்கோர்
பேறுமாம்பரத்தமூர்த்துமாவாகனம்பெய்தே. (௨௦)

சுத்தியைந்தொடுமந்தரியாகமூர்த்திசில்
பத்தியாற்சமைத்தருச்சனைபல்வகையாற்றித்
துத்திவெம்முலைத்தோகைக்குஞ்சொன்முறையருச்சை
முத்திசேர்வகையியற்றினன்முனிவர்கண்முதல்வன். (௨௧)

நிரந்தபூசனையனுதினநியதியோடாற்றிப்
பரந்தவன்பினூற்பரன்மறைப்பஃறுதிபகர்ந்தே
வரந்தருங்குறிவலஞ்செய்துவானவன்வலத்தே
யரந்தையீருமஞ்செழுத்தினைநெஞ்சுறவடைத்தே. (௨௨)

ஓதியெண்ணறவோசைபோலேகமாயுயிரா
யாதியாயுளத்தானந்தவடிவமாயலங்குஞ்
சோதியாயுறுந்துகளறுஞ்சமாதியிற்றோய்ந்து
மோதிமோகமேமுதலியமூவிருமூரணும். (௨௩)

நந்துமிந்தியத்தந்தியைப்புந்தியினடுக்கிக்
கந்தினந்திபோற்பந்தியங்கழலுறக்கட்டிச்
சந்திவந்தனைக் † குந்தியொன்றருகுறச்சமைத்தே
யந்திதந்தொளிரெந்தையைச்சிந்தைசெய்தமர்ந்தே. (௨௪)

அழிவிலாமுதலாகியவாரணவனத்துப்
பொழியுமாகருணைப்பெருமான்கழல்போற்றி
விழிகணீர்மல்கவிழைந்தொளிர்விம்லவானந்தச்
சுழியிணுண்மணத்தோற்றமென்றேவெனத்தொழுதே. (௨௫)

பதனழிந்தவிசருகுகாற்றின்னனபசியின்
கதனழிந்தறக்கற்பனையாற்றியேகாய
மதனழிந்தறவற்றியேயருந்தவவடிவாய்ப்
‡ புதனமர்ந்தனஞச்சிரமத்திடைப்பொலிந்தே. (௨௬)

---

* சிகதம்-பெருமணல். † உந்தி-யாறு. ‡ புதன்-அறிஞன்; என்றது, ஈண்டகத்தியமுனிவரை.

அற்றைநாண்முத*லகத்தியாச்சிரமமென்றருட்பேர்
மற்றையப்பதிபெற்றதுவழிபடுமிலிங்க
மொற்றையாழியாற்குடைந்திடுமிருளெனவுலவாப்
பற்றையுற்றவெவ்வினைத்திரளனைத்தையும்பாற்றும். (உஎ)

கண்டுபோற்றினர்க்கெண்டருநயம்பலகலந்து
மண்டுபோகமுமுத்தியும்வரம்பெறவழங்கற்
குண்டுநாமெனவொழிந்ததக்குறிபணிந்துறுவார்
தொண்டுவானவர்சூழ்தரவாழ்பதந்துறுவார். (உஅ)

குறுமுனிப்பெயர்க்குணகடலியற்றியகோல
முறுமலர்த்தடமாடினருலப்பிறீவினையா
மறுவகற்றியேமாறிலாவரகதிமகிழ்ந்து
பெறுவர்முத்தியுமகத்தியன்பெற்றபேறுரைப்பாம். (உகூ)

பொருவருந்தவமாற்றியேசாதகப்புட்போற்
பருவமாமுகிற்பரப்பெனப்பரிமணக்கோல
முருகுகாதலாற்பருகுநாளென்றெனவுளோந்துட்
கருகுமாறுபோய்க்கழிந்தனகணிப்பறுகாலம். (௩O)

வேறு.

பல்லுயிரனைத்தும்போகப்பரவையிற்படிந்தேமுத்தி
புல்லுதற்கணங்கிஞூடும்பொருந்தியகோலமென்றே
வொல்லுவதென்றுதாகமுற்றுளோந்துருகிச்சோர
வில்லுமிழ்கயிலைமேயவித்தகன்விளக்கஞ்செய்வான். (௩க)

கரிநிரையருவிநீத்தங்கதிர்மணிகரத்தின்வாரி
விரிவொடுசிதறவானவில்லெனவில்லிற்றுகை
புரிதருமிமயத்தந்நாட்பொலிமணச்செய்கையாவுஞ்
சுருதிமாவனந்திற்காட்டற்கெழுந்தனன்சுருதிநாதன். (௩உ)

பளிங்கரிந்தருகுசெங்கேழ்ப்பதுமராகத்துத்திண்ணை
விளிம்புறமின்னுக்கான்றவேதிகைவயிரத்தாற்றி
வளம்படுதுகிரின்மீதுவார்ந்தபொன்வரித்துச்சேர்த்தித்
துளும்புவெண்ணிலவார்முத்தத்தொகுதிவேய்ந்தகவித்தோன்ற. (௩௩)

மாணிறக்குருதிபோற்செம்மணிநிழற்பித்திமாகங்
காணிறமணிச்சோபானங்கதிர்கெழுபசுங்கோமேதம்
வாணிறமுகடுபோற்றிமண்டபமலியநானந்
தானுறப்பனிநீர்தூவித்தண்ணெனமண்ணிப்பின்னும். (௩௪)

---

* அகத்தியாச்சிரமம் அகத்தியான்பள்ளி.

காழகிற்றுணியுங்காதங்கமழ்நறுஞ்சாந்துங்காசிற்
சேழ்படமெழுகித்தேனுங்கிளரொளிச்சுரும்புங்கீத
யாழ்செயமுருகுநாறியிணர்மதுத்துளிக்குமாலை
தாழ்தரமணியிற்செய்ததாமமுநாற்றிநாப்பண். (௩௫).

செறியிருள்கிழிக்குஞ்சிந்தாமணிக்கதிர்சேர்த்துச்சேடன்
பொறியவிர்பணத்தின்காசுபொழிகதிர்ப் * புஞ்சம்பூரித்
தெறிகடலிரவிபூத்தவிளங்கதிர்க்குழுவுநாணக்
குறியுறுமரிகடாங்குங்குரூஉச்சுடரணையொன்றிட்டார். (௩௬).

செழுமணிவரையினுச்சிதிகழ்மதியுமிழுஞ்சோதி
குழுவியவமுதமாரிக்குளிரொடுங்குலவலேபோன்
முழுதுலகமருந்தேவர்முனிவரரியோகர்மூசிக்
கெழுமியகணங்கள்சூழவிருந்தனன்கேடிலாதான். (௩௭)

அவ்வரையுலகமேவுமணியெலாமமுதமூறிச்
செவ்வியிற்றிரண்டாலன்னதிருந்தெழிற்றேவிதன்னை
நவ்வியிற்றிருமுன்னாகுநங்கையர்கூடிநான
மவ்வலங்குழற்குச்செய்வான்மஞ்சனச்சாலைசார்ந்தார். (௩௮)

விரையொடுதுவருங்கூந்தன்மெல்விரல்சேப்பக்கீறி
வரைதருநானமூறிமதுமலர்மிடைந்தநீராற்
றிரைமணிகழீஇயதென்னக்கழுவிமெய்திகழப்பொன்சேர்த்
தரைதருவிரைமென்சாந்தினணிநலமமைத்துப்பின்னர். (௩௯)

பொன்னிலத்தெழுந்துகாமம்பொழிந்தெழிற்போதுசூடி
மின்னியவரக்குச்சூழ்ந்துமிளிர்பசுங்கொம்பேபோலச்
† சென்னியிற்பட்டுச்சூழ்ந்துதிகழ்மணிக்காஞ்சிசேர்த்தி
யிந்நிலமதிக்கலாகாதெழுதுபொற்கலிங்கஞ்சூழ்ந்தார். (௪0)

அஞ்சனமிருளிற்சேர்த்தியவிர்நெறிக்கம்பியாக்கிப்
பிஞ்சிளமதிமேற்பெய்துமணியுறைபிரித்தல்போலச்
செஞ்செவிக்குதலைச்செவ்வாய்த்தேமொழிதிகழுங்கூந்த
னஞ்சிழைத்தனையநாட்டநலம்பெறத்திருத்தினாரே. (௪க)

குழைபொருதலங்குநீலக்குளிர்மலர்க்கொள்ளைசீறி
விழைகயல்வெருவ‡வோட்டிவிற்பொரவிலங்கிநீண்டு
தழைதருமமுதத்திங்கட்டண்ணிலாவூடுதாவு
மழைமதர்நெடுங்கட்காப்பின்மைபெறவரித்தார்மன்னோ. (௪உ)

---

* புஞ்சம்-நூற்குஞ்சம். † உத்தமஸ்திரீகள் வெளிவருகின்றுழிச் செம்பட்டினுன் முக்காடிடுதல் வழக்காறாகலிற் சென்னியிற் பட்டுச்சூழ்ந்தென்றார். இந்நிலவுலகத்தையும் விலையாக மதிக்கலாகாத பீதாம்பரமென்க. ‡ ஓடி எனவும் பாடம்.

சலஞ்சலமென்னச்சோதித்தண்மணிதாங்கிநாகு
நலம்பெறுகந்திமின்னுநற்கதிர்சூழ்ந்ததேபோற்
கலம்பெறுகழுத்தும்பச்சைக்கதிரிளங்காமர்வேய்போய்ப்
புலம்படுமடவிசேரப்பொலிந்தெழின்மலிந்ததோளும். (சங)

நுண்டுகிற்காவிதாங்கிநுடங்கிடைநுணுகிநோக்கி
னுண்டெனப்பொருதுவிம்மியொளிமுகங்கருகிவீங்கித்
* தண்டமுமருப்பும்பேதைத்தன்மையருவமைசாற்றக்
கொண்டமுதரற்குத்தேசார்குலிகச்செப்பனையவாகி. (சச)

பொருமதக்களிற்றைவல்லிபுணர்த்தல்போற்குழைந்துபொம்மற்
பெருமுலைமருமஞ்சாலவிடங்கொண்டுபெருக்குமாயிற்
றிருவுலகில்லையென்னத்தெளிந்தொளிர்வல்லிபெய்தாங்
குருவமர்தொய்யிலுனைத்துருவுறவெழுதினால். (சரு)

எல்லையற்றுயர்ந்துபாயசராசரமிருக்குமாலின்
மெல்லிலைக்காமர்வெள்ளச்சுழியின்மேலிலங்க†மூன்றும்
புல்லுமூவல்லியாயவயிற்றிடைப்பொழியுங்காசு
வில்லிடப்பட்டஞ்சூழ்வித்திரதனமிளிரச்செய்தார். (சசு)

மலர்தலையுலகந்தாங்கும்வரிப்படமணித்தேர்த்தட்டி
‡ னிலகியேர்பரந்துசாலவிளங்கதிரொளியராவிக்
குலவியகாமவெள்ளங்கடந்திடக்குழகன்கூடி
நிலவியகதலித்தண்டாங்குறங்குநேர்நிகழ்த்தினம்மா. (சஎ)

மாரனதூணிபோலவயங்கியகணைக்காலாமை
யேரிளம்புறமேபோலும்புறவடியிலகநீவிச்
சீரிளந்தளிர்நுண்டாதுசெறிசெழுங்கமலச்செவ்வி
யீரடியரத்தஞ்சேர்த்தியிளம்பிறையுகிர்க்குமேய்வான். (சஅ)

நெய்படநெறித்துநானநீவியகுழற்குத்தோற்றஞ்
செய்மணி§யுத்தியோடுதிருப்பிறைமுதலசேர்த்தி
மொய்வரிவண்டுமூசிமுரன்றிடமுருகுநாறிப்
பெய்மதுமுல்லைமாலைசண்பகம்பிறங்கப்பெய்தே. (சக)

---

* தண்டம்-யானைத்துதிக்கை. † மூன்றும்-மூன்றுமடிப்பும். பட்டம்-உதரபந்தனம். இதனைத்தற்காலத்து ஒட்டியாணமெனவழங்குப. ‡ இலகி பெயர். எனவே, அல்குல் என்றதாயிற்று. இலகியினின்று மேர்பரந்து குலவிய வெள்ளமென முடிக்க. அராவி - மழுக்கி. § உத்தி - சீதேவியென்னுந் தலைக்கோலம். பிறை-சந்திரப்பிறை, சூரியப்பிறை. முதல என்பதனால் எதிர்முகமஞ்ஞை,வலம்புரி என்னுந் தலைக்கோலங்களையுந் தழீஇக்கொள்க.

தீங்கதிருமிழுந்திங்கட்செழுஞ்சுதைகவரச்செம்பொன்
வாங்கரவிருளினூடுவழிக்கொண்டுவணர்தல்போல
வோங்குபொற்சுட்டிசேர்த்தியொண்குழைகபோலத்தூடு
தேங்கொளி*மகரந்தெண்ணீர்மகரமேதிகழச்சேர்த்தார். (ருo)

ஆடகக்குவட்டிற்சூழ்ந்தவமுதவெண்ணில்வேபோல
நீடரமுத்தமாலேநிழல்செயக்கொங்கைவேய்ந்து
நாடரவொழுங்குசுற்றிநாகமைக்கிடத்தன்மின்போ
லோடரவொழுங்குசுற்றியொளிப்படந்தூக்கல்போல. (ருக)

தோள்வளை†சரியுஞ்சேர்த்திக்கைத்தலஞ்சுடரவாக்கி
வாள்வரிமணியும்பொன்னும்வளரொளிப்பருமமற்றும்
வேள்படவிழித்தபெம்மான்விரகுறச்சூட்டிமின்னுக்
காள்படoமகரப்பூணுங்குறங்கின்மேற்கவினச்சேர்த்தார். (ருஉ)

அரிமணிச்சிலம்புசெம்பொற்கிங்கிணியலங்குஞ்சோதி
வரியுநூபுரமுஞ்செய்யசீறடிவயங்கச்சூட்டிப்
புரிமலர்க்கொம்பனுடன்பொழியுமோர்மறைத்துப்பூங்கேழ்
விரியுமுத்தரீயமற்றும்விழைவுறமேவிவேய்ந்தார். (ருங)

குயிற்றியமகளிர்மேனிக்கொழுஞ்சுடர்ப்படலேகான்ற
வெயிற்றிரட்பரப்பின்சூழ்கிவிம்மிதமெய்திவீறு
கயிற்றினிற்பாவைபோலக்காட்சியற்றறிவுங்காண்புந்
துயிற்றியதென்னத்தம்மொத்துறவினைத்தோற்றஞ்செய்தார். (ருச)

அரும்பெறலமுதமீன்றவவயவத்தெழுந்தகாமம்
விரும்பெழிற்பரந்தவெள்ளவீக்கத்தின்வெற்புமேய
பெரும்பொருளவையுழ்கப்பெருகொளிவிரித்துத்தேன்சோர்
கரும்பனகுதலைச்‡செவ்வாய்க்காரிகைகவின்றதன்றே. (ருரு)

சராசரமனைத்துமோராற்றருமெழிற்சுவையுஞ்சால்பு
மராவருமல்குலாட§னமிசத்தினணுவேயாயின்
விராவிரும்பூதமுண்டோமெய்யதாய்வேதமீதே
யொராதொளிர்பரமானந்தவொளியிதுவொன்றுமன்றே. (ருசா)

பாற்கடனுரையிற்றூயபணிப்படம்பாரிற்போக்கி
மேற்படக்கலவைதூவிவிரைமலர்பொதுளவேய்ந்து
காற்கொசிகொம்புமின்னுங்கற்பகக்காமவல்லி
போற்பரனிடத்துப்பொன்னேப்பொன்னனூர்புகுமாசெய்தார். (ருஎ)

---

* மகரம் சுறவினது அங்காந்தவாய்போலச் செய்யப் பட்டமகரப்பகு வாயென்னுந் தலைக்கோலம். † சரி-கைச்சரி. o ஈண்டு மகரப்பூண் என்றது குறங்குசெறி என்னும் ஆபரணத்தை. ‡ செவ்வாய் பண்புத்தொகை நிலைக் களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. காரிகை-அழகு.§அமிசம்-அம்மிசம்.

நிழன்மதியமுதமாரிநிழற்றல்போன்முத்தமாலை
பொழிகதிர்க்கவிகைநீழற்பொதுளியபோதின்மீதே
யுழன்மருங்கொசியமெல்லென்றெண்சிலம்பரற்றவொல்கி
யெழிலெழுஞ்சோதிபாயவிடமெலாமூழ்கவேய்ந்தாள். (௫௮)

நிறையொடுநாணுங்கூரநீர்பொருகமலம்போல
விறைமுகமிறக்கிவேர்வுமிலங்கியநுதலிற்பூப்ப
மறைவழிவிரிஞ்சனூற்றுமணத்தழற்புகையின்வாளார்
கறைமலிநெடியவேற்கட்கடைசிவந்தமர்ந்தகாலை. (௫௯)

நாணுளமலைப்பநங்கைநகைமுகஞ்சிறிதுகோட்டிப்
பூண்முலைநோக்கிநீலம்புறங்கொடுத்திட்டவாட்க
ணீணெடும்புருவவிற்கீழ்நிழல்செயுநோக்கமைய
னேண்மலிமார்பம்வீழவையனுமெதிர்ந்துநோக்க. (௬0)

ஒன்றெனவெழுந்தவேட்கையுலப்பறவுவகைநீத்தஞ்
சென்றனகரையுங்காணாவின்பவெள்ளத்துச்சேர்ந்தார்
நின்றனர்பலருங்காணார்நிமலனுநிமலைதானு
மன்றவருழிபோ * லானந்தகேவலர்களானார். (௬௧)

ஒருவரையொருவரின்றியமைகலாருவமையில்லார்
திருவினிற்பெருகுநீரார்சிறப்பினுஞ்சிறப்பின்மிக்கார்
கருவியினளக்கலாகாக்காட்சியார்கவினும்வேண்டும்
பொருவருமுருவாரிங்ஙன்பொலிந்தனர்புவனம்போற்ற. (௬௨)

இன்னணமணந்தகோலத்தெழிலெலாமிறைவன்காட்ட
முன்னியன்முனிவன்கண்கள்முகிழ்ப்பறப்பருகிமூடும்
பன்னரும்பரமானந்தப்பரவையுண்மூழ்கிப்பாசம்
பின்னுறவுவகைநீத்தப்பெருக்கலைந்தமலமாகி. (௬௩)

மத்தரின்மயங்கியாற்றும்வழிமறந்தவசமாகிப்
பித்தரிற்பிதற்றியாடிப்பிறழ்தரவிழித்துப்பெட்பால்
வைத்தவன்புருவமாகிமனங்கரைந்தலையவாழ்த்து
மத்தவன்செய்கையாரேயளந்துரைசெய்யவல்லார். (௬௪)

களிதருகடியுற்றுங்குக்கமழ்நறுக்கமலமாந்து
மளியெனவயர்ந்துபேச்சற்றமலவானந்தமேன்மை
யொளிதருமுருவாயெல்லாவுருவமுந்தானேயாகித்
தெளிதருமுணர்வாய்த்துதிபலசெப்பலுற்றான். (௬௫)

---

* ஆனந்தகேவலர் கேவலாவத்தையிற் பேரின்பப்பெருக்கினர். கேவலம்-தனிமை.

ஒருபொருளின்றியெல்லாமொழிந்தநாளொழியாவின்பப்
பெருமுதலாகிமுற்றும்பிறக்கமாய்ப்பெருகும்போக
வருவமாயசலமாகியசண்டமாயனந்தமாகிக்
கருவுமாய்க்கரிநீயென்னுங்காட்சியற்றமலமாகி. (கசசு)

மனமொடுவாக்குமற்றுமறைகளும்வயங்குமேன்மை
கனவினுமறியாதோங்குங்காட்சிநீகருணைமேவி
முனமுறுபழக்கமாகிமூர்த்தியற்றேரிற்றன்மை
யினதெனவறியலாகாமாயையையினிதுநோக்க. (கசஎ)

வீற்றுவீற்றாகியெல்லாப்பொருளுமாய்விளங்கத்தோன்றுந்
தோற்றமெய்க்களித்ததிச்சைத்தொடர்புறத்துணிவிலோர்க்க
மாற்றிலையாயினென்னுமமழிந்திடுதொழிலெங்காகும்
பேற்றுறுமாக்கநின்கட்பேறலாற்பிறிதுமுண்டோ. (கசஅ)

அயன்றனையீன்றுவேதமனைத்தையுமருளியாக்க
முயன்றனையுலகங்காக்கமுகுந்தனைமுத்தியாய
பயன்றருபொருளுநீயேயல்லவர்பாலிற்பற்று
ணியன்றிடினுமிக்குத்திக்கையினைத்தவராவரன்றே. (கசகூ)

பிறவியங்கடலிற்றுன்பப்பெருங்கராவீர்ப்பப்போத
மிறவியலைந்துமாயவிந்தியவலையினெற்றுண்
டறவியலின்றிவேட்கையழுவத்தினழுந்தியார்வந்
துறவியலென்னையாண்டசுருதிநாயகனேபோற்றி. (எo)

சுற்றமுந்துணையுநீயேதுணிவுநீதுணிவிலுறைய
பற்றுநீநின்னையல்லாற்பரகதிக்குறுதிகாணேன்
கற்றவர்க்கினியாயன்பர்களைகணேகாதல்சான்ற
பொற்றிரட்குன்றேவேதநாதனேபோற்றிபோற்றி. (எக)

* குறிப்பதற்கரியஞானக்கோதிலின்புருவமாகிப்
பொறிப்படவல்குற்சாயற்பூவையாய்ப்பூதமாதி
நெறிப்படுமுலகமாவிநிரையுமாய்நிமலமாகிச்
செறிப்புறுமிமயமீன்றசெல்வமேபோற்றிபோற்றி. (எஉ)

என்புநைந்துருகிப்பார்மேலின்னணம்பரவிப்போற்றி
முன்பெலாங்கண்ணீர்வாரப்புளகமெய்ம்முழுதும்போர்ப்ப
வன்புருவாகிநின்றவகத்தியன்றன்னைநோக்கி
யின்புறுமமுதத்தீஞ்சொலியம்பினனிமையோர்கோமான். (எங)

---

* இது மணவாளக்கோல நாயகி துதி.

செயற்கருந்தவத்தாற்சிந்தைத்தெளிவுறுஞ்செயலான்ஞாலம்
வியப்புறுங்குணத்தாலன்பின்மேன்மையால்விழுப்பந்தன்னான்
மயற்றெறுஞ்சமாதித்தூயமாட்சியான்மிக்கோய்வாய்ந்த
வுயர்ச்சியாம்வரங்களீதும்வேண்டுவவுரைத்தியென்ன. (எச)

குழைந்துளமுருகித்தேவர்குழாமறைமுனிவர்கோவி
னுழைந்தறவுருகிநோற்றுநோக்குதற்கரிதாயின்பந்
தழைந்தொளிபழுத்தசோதிதமியனேற்களித்தாய்காண
விழைந்துறுமிதற்குமேலாய்வேண்டவுமொன்றிங்குண்டோ. (எரு)

என்றவனுருகிப்போற்றியிணைர்ப்பசுங்கொடிசேர்மின்னுக்
குன்றெனவொளிருஞ்சோதிகொண்டுலகுன்னையேத்த
மன்றலங்கோலமென்றுமன்பதைபோற்றிவாழ்தற்
கொன்றுதிமறைசைமேவியுன்பெயர்தழைகவென்றே. (எசு)

தொழுதவற்கின்பமெல்லாஞ்சொரிந்துமேற்சுடருஞ்சோதிக்
குழுவுறுகுறியின்மேல்பாற்குணதிசைநோக்கிக்கோல
மெழுதியவணைமேற்றேவரேவரும்போற்றமேவும்
விழுமியபொருளைப்போற்றிவீழ்ந்துவிண்ணப்பஞ்செய்வான். (எஎ)

என்னையும்பொருளதாகவித்திறமளித்தாயென்னிற்
பின்னையேதுரைத்துச்செய்கேன் * பெரும்பெயர்க்கடவுள்போற்றி
யன்னையேபோற்றியென்றுபணிந்திடவமலமாகித்
தன்னையேநிகர்த்தான்பின்னுந்தவமுனிதன்னைநோக்கி. (எஅ)

வேண்டியதுரைத்தியென்னவேதமாவனத்துமேவி
யீண்டினர்தருமமாதிநாற்பயனினிதினெய்ந்து
தூண்டியவிளக்குப்போலச்சுடர்கயான்றுறவாமேன்மை
பூண்டிடவின்பமாரிபொழிந்துமுன்பொலிந்துதோன்றும். (எகூ)

சித்திரைத்திங்கள்பக்கஞ்சுக்கிலஞ்செய்யோன்வாரந்
தொத்துசத்தமிநாளுச்சித்தோற்றிணையிந்நாண்மேவி
யித்தலத்தீர்த்தநான்கும்படிந்துனையிறைஞ்சிவன்னிக்
கொத்தலர்நீழற்பஞ்சாக்கரமனுக்குணித்தமேலோர். (அ0)

மாசிநன்மகத்திலோடுபூரணைமருவுநாளின்
மூசளிமுருகுமாந்திமுரன்றுகண்படுக்குங்கூந்தற்
பாசிழைப்பரவையல்குற்பன்னியோடமருங்கோலத்
தீசநிற்பணிந்துபோற்றியிறைஞ்சியவியல்பின்மிக்கோர். (அக)

---

* பெரும்பெயர்-மகாவாக்கியம்.

* கோசமொன்றதனினின்னைக்குறித்தியான்பூசையாற்று
மாசறுகுறியத்தீர்த்தமகிழ்ந்தவர்யாருமேவும்
பாசமதகன்றுவீடுபடர்தரவளிப்பாயென்றுத்
தேசுறுமுனிவன்போற்றித்திருவடிபணிந்துநிற்ப. (அஉ)

அரந்தையீர்பெருமான்வேண்டும்வரமளித்தனைவரோடுங்
கரந்துவேற்றுருவமாகிக்காட்சிதந்தின்றுங்காதல்
வரந்தரவமர்ந்துவைகிமகிழ்கின்முன்வனிதையோடு
மிரந்தவர்ப்போற்றினிம்மைமறுமையுமெளிமையாமே. (அங)

மனக்களிநசையுநீங்காதகத்தியன்மருவியாங்கே
யனக்களிநறுந்தாதூட்டுமப்பதியருத்தயாமத்
துனக்களியுதவுங்கோலமனுதினமுவந்துநோக்கித்
தனக்களியாயகோசத்தெல்லையிற்றங்கினுனே. (அச)

இடையறநிமிருங்கொங்கையேந்திழைபாகன்மேய
வடைவிதிப்பதியின்மேன்மையளக்கலாந்தகைமைத்தாமோ
கடைமணிதிணியும்வேலோய்கருதெனக்கனிந்தவீணைத்
தொடைமுனிமாந்தாதாவுக்குரைத்தனன்றெருகுத்துமன்னே. (அரு)

வேறு.

இவ்வெனநைமிசமேயவிருந்தவ
ருய்வகைசூதனுரைத்தனனிக்கதை
யவ்வியமின்றியறைந்தவர்கற்றவர்
செவ்வியகேள்வியர்சேர்வதுவீடே. (அசு)

மணவாளக்கோலச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் எஎக.

---

# விடங்கச்சருக்கம்.

முடங்குதெண்டிரையினூறுமுதிர்சுவையமுதம்போல
வடங்குளத்தமுதமூறியருட்குறியுதவலாலே
தொடங்குமாதரவுமேலுந்துகடபுமொழியிற்சோதி
விடங்கரீங்குற்றவாறும்விளம்பெனவிளம்பலுற்றான். (க)

---

* குரோசம் கோசமென மரீஇயிற்று. இது மேலுங் காட்டப்பட்டது. குறி அகத்தியான்பள்ளிக் குறி. குறி-சிவலிங்கப்பெருமான்.

வாட்டுணைமறவாமன்னர்மணிமுடிவயிரஞ்சிந்துந்
தாட்டுணைசிறந்துதெவ்வுத்தடக்கைமாத்தறுகண்வெம்போர்த்
தோட்டுணைமதத்திறைற்றந்தூரந்துயிர்க்கவளமாந்திக்
கோட்டுணையுணவதாகவவர்புலங்கொண்டதன்றே. (உ)

பொருட்பசைவல்லினைப்போகவெங்கந்துசீறி
யருட்குணத்துலவித்தூயவமைச்சராயறிவிறைடி
மருட்டெறுநீதிவீதியொழுக்குறவளாகந்தாங்கித்
தெருட்டழற்சாலைமேவுஞ்சீற்றமாலியானையன்றான். (ங)

உடைதிரைஞாலமுற்றுமொளிமதிக்குடையினீழற்
புடையுறவானமுற்றும்புகழ்க்குடைபுரக்குநீரா
னடையலர்குருதியூற்றினணங்குறநிணங்கடுவே
முடைமலிகுடுமிவெள்வேன்முசுகுந்தன்முருகற்போல்வான். (ச)

பொன்னெயிற்குடுமிபோழ்ந்தபுதுமதிச்சுதைமென்சாந்தின்
மின்னவிர்புரிச் * சாகேதம்விளங்குதன்பெயரினுதித்
தன்னயலெழுத்துநீக்கத்தரும்பெயருடையோன்றன்னின்
மன்னவர்மன்னன்மேவிமகிழ்ந்துலகளிக்குநாளில். (ரு)

தீப்பொறிசிதறுஞ்செங்கட்டிருகுவெஞ்சினத்துத்தீப்பேழ்
வாய்ப்புலியனையசீற்றமலிந்ததானவர்க்குமார்வந்
தாய்ப்பொருஞ்சுரர்க்கும்வெம்போர்தழைத்துவெங்கூற்றிற்றக்கா
ராய்ப்பொருதடர்த்துச்சீறியமர்செய்தாரளப்பில்காலம். (சா)

ஞாட்பினுட்பொருதவானோர்நவ்வியிற்பதைப்பச்சீறுங்
கோட்புலித்திரளேபோலக்கொடுந்திறலவுணர்சீறி
வாட்படைச்செருவின்மாய்க்கவானவர்மகவானோடுஞ்
சேட்படவோடிக்கையற்றரியுழைச்சென்றகாலை. (எ)

முதிர்வலியவுணர்க்காயுமுரட்டிரண்மூரித்திண்டோ
ளதிர்கழலவனிகாக்குமுசுகுந்தனன்றியாரே
யெதிர்மலைந்திடுதல்வல்லாரென்றிடவிலங்குமுச்சிக்
கதிர்பொருகமலம்போலிந்திரன்முகங்கருகிற்றன்றே. (அ)

கடவுளர்க்கரசனுகிக்கற்பகங்கமழுநீழற்
சுடருலகளிக்குமேன்மைசுழிந்ததுதுயர்கூர்மக்கட்
படர்தருபிறப்புப்பீடுபடைத்ததிங்கென்னின்யாண்டு
மிடர்தரும்பிறப்புமேன்மையிருந்தவமியற்றுமன்றே. (கூ)

---

* சாகேதம்-அயோத்தி. இம்முசுகுந்தச் சக்கிரவர்த்தியின் இராசதானி கருவூர் எனக்கந்தபுராணத்துக் கூறப்பட்டது. முசுகுந்தனென்னும் தன் பெயரின் முதலெழுத்துக்கயலெழுத்தை நீக்க முகுந்தனென்றாகும். முகுந்தன்-விஷ்ணு.

கள்ளியிற்பிறந்ததேனுங்காரகில்கமழுந் * தென்றற்
பள்ளியிற்பிறந்துங்காயும்பணைமணம்பயத்தலின்று
மொள்ளியரியாண்டுத்தோற்றமேயினுமுயர்வாரென்றுத்
தெள்ளிமாலரசன்றன்பாற்றேவரைச்செல்கவென்றான். (௧௦)

அன்னவரேகிவானத்தணியெலாங்கவர்ந்துபூமேன்
முன்னவனியற்றியாங்குமூசியவளச்சாகேதப்
பொன்னகரடைந்துவானப்புரந்தரன்பொலிவுந்தான்புல்
லென்னவீற்றிருந்தவேந்தற்கியம்பினரிடுக்கணெல்லாம். (௧௧)

வலியபோரென்னத்தோள்கள்வளர்ந்தனமதர்த்துவீங்கிப்
பொலிவொடுநோக்கினன்றேபோதுதுமென்னத்தன்போ
லொலிகெழுமுலகங்காத்தற்கொளிறுவாட்டடக்கையொன்றூர்ப்
பலிகொளுந்திறல்வேன்மைந்தற்பணித்தெழூஉப்படர்வதானான். (௧௨)

பருமணிகுயிற்றுந்தேர்மேற்பரிதியுநாணவேறி
யுருமெனமுரசமார்ப்பவுமிழ்மதக்களிறுபாய்மா
விருநிலங்கிழியவேகுமிவுளியம்பொலந்தேரேற்றார்
வெருவருஞ்சேனைசூழவிண்ணகநண்ணினானே. (௧௩)

மிடைதருதேவர்சூழவெந்திறலவுணர்மேவி
யடைதருபுரிசைமுற்றியரண்பொடிபடுப்பவஞ்சார்
புடைதருதானைசூழப்போர்க்கெழுந்தவுணரார்ப்பக்
கடையுகக்கடலிற்சேனைக்கலியொலிகலந்ததன்றே. (௧௪)

சிந்தழற்சிறுகட்கைம்மாவுரற்றாலிசிரிக்கும்பாய்மா
வெந்திறற்கனைக்குமோதைவிரைந்ததேரரவம்வீங்க
வந்தரத்தமரரோடுமவுணர்போராற்றச்சீற்றக்
கொந்தழற்பரப்பிற்செய்யகுருதிநீர்பரந்ததம்மா. (௧௫)

விண்ணவரவுணர்சேனைவீற்றுவீற்றாகநூறக்
கண்ணழல்கதுவச்சீறுங்கடாக்களிறென்னக்காய்ந்து
பண்ணவருடலங்கீறிப்பதைபதைபதைத்துநெஞ்சந்
துண்ணெனவமரர்சாயத்தானவர்துரந்துகிற்ப. (௧௬)

சினத்தவிந்திரனைச்சீறிச்செருக்கழித்தவனுவாவுங்
கனைத்தெழுங்கலினமாவுங்கஃறெனச்சுற்றிவீசத்
துனைத்துறுவிசையிற்போகிப்பாற்கடற்சுழியிற்றோய்ந்து
நனைத்தெழவதனிற்றோற்றநாட்டவர்காடச்செய்தார். (௧௭)

---

* தென்றற்பள்ளி-பொதியமலை. பணை-மூங்கில்.

இரிந்திருந்திசைகடோறுமிமையவர்சிதறவெம்போர்
புரிந்ததானவர்களார்ப்பப்புடவியிற்புழைக்கைவேழந்
திரிந்துழல்கவனப்பாய்மாத்தேர்படைசெறிந்துசீறிக்
கரிந்துறவவுணர்சேனைக்கடலிடைக்கலந்ததன்றே. (கஅ)

விற்பொருகணையும்வேலுங்கணயமுஞ்சிறவும்வித்திக்
கற்பொருதிணிந்ததோளாற்கணலெனக்கதுவிமாற்று
ரெற்பொருநரம்புந்தோலுமிறைச்சியுமாகநூறிப்
பற்பலகூறுசெய்தேயவுணர்தம்படையைப்பாற்ற. (கக)

மாற்றலர்தலைவர்சீறிமன்படைவருத்தவேந்த
னேற்றனனிவுளித்திண்டேரெறூழ்வலிமுழவுத்தோளான்
கூற்றெனவெதிர்ந்துவல்லேகொடுமரங்குழைத்துச்செங்கட்
சீற்றமார்பொறியிற்காயுஞ்சிலீமுகஞ்சிதறினானே. (உ0)

வெஞ்சிலையவுணர்தாமும்வெருவருமரவிற்சீறித்
தஞ்சிலைகுனித்துத்தூவுந்தழற்சரமுழுதுமாற்றி
நஞ்சரவுருமுற்றுங்குருடுங்கவெம்பகழிநெய்த்தோ
ரஞ்சனவரைச்சிந்தூரவருவியினலைப்பவெய்தான். (உக)

பற்றலர்பின்னுமீண்டிப்பருப்பதம்பகழிசூல
மற்றெறுகுந்தம்வெள்வேல்கப்பணமசனிபோல
முற்றியதண்டம்வீசிமுரட்சமம்புரிந்துமூள
வற்றமிலரசர்கோமானறுத்தவையனைத்தும்வீழ்த்தான். (உஉ)

கார்முகம்பிறையிற்கோலிக்கனலுறுகாற்றிற்காயுங்
கூர்முகப்பகழிமாரிகொடுந்திறலவுணர்சாய
நீர்முகந்தெழுந்தகொண்மூநிலத்தெனநெடியயாக்கை
பார்முகந்துறுமவீழ்த்துப்பரப்பினன்பரிதிவேலான். (உங)

குளிறுவெஞ்சினமால்யானைகுரகதங்கொடிஞ்சித்திண்டே
ரொளிறுவாட்படைக்கைவீரருருத்தெரியாதுவீழக்
களிறுபூங்கயத்தின்மாயக்கலக்கியேகருதலார்தாம்
வெளிறுவாய்ந்திரங்கவொள்வாள்விதிர்த்தடல்விளைத்துமிக்கான். (உச)

கரஞ்சிரமூருக்கண்டங்கடியடிகதுவிப்பாய
வுரஞ்சிரமுருவிச்சிந்தவுருமெனவுரறியார்த்து
வரஞ்செறியவுணர்வேந்தர்வரையுரங்குலிசம்போல
வுரஞ்சயமுடையவேல்பாய்ந்துருவவீழ்த்துயிருங்கொண்டே. (உரு)

வெந்திறலவுணர்முற்றும்வீழ்த்திடவொழிந்தோர்வீறுந்
தந்திரமொழிந்துசாயத்தறுகண்வெம்படையைச்சாடுங்
கந்தடர்களிறுபோலுமுசுகுந்தன்களித்துஞாட்பின்
வந்தெதிர்பகைவர்க்காணுன்வாலவைமுழக்கினானே. (உசு)

வாயுறுவளையினோசைகேட்டுடன்மகிழ்ந்துமாழ்கிப்
போயுறுமமரர்முற்றும்புரந்தரனோடுமேகித்
தாயுறுமன்பிற்றுங்குமுசுகுந்தற்றழுவித்தாங்க
டோயுறுதுயரிற்றீர்ந்துவாழ்கெனநுவன்றுசொல்வார். (உஎ)

விறற்படைக்குலிசனீற்றிவேழமம்மனையினூற்றித்
திறற்படுமவுணர்முற்றுஞ்செருவினிற்செகுத்துவேலை
யறற்படுமுலகமேவியமரர்நாடளித்தநின்னூற்
பெறற்படுமரசிதென்னப்பேசுபுகொண்டுபேர்ந்தே. (உஅ)

அரியொடுமணைமேன்மேவுவித்திடவாண்மைமுற்றும்
பரிவினர்பாடமேனிப்பன்மயிர்ப்புளகம்பாயக்
கரியவன்மேனிகண்ணீர்கான்றிடப்பொருதுகாய்வுற்
றெரிவுறுநீரென்றெண்ணுமின்பநீராக்குமன்றே. (உகூ)

இன்னணங்கூத்தும்பாட்டுமிரங்கிசையாழுங்கேட்கு
மன்னனையவன்கைப்பற்றிவளம்பொழிமனையும்வாழ்வும்
பொன்னகர்வளமுங்காட்டப்புரிவுடன்மகிழ்ந்துமேவித்
தன்னகர்மறந்துவைகுந்தலைவனைமறித்துமோர்நாள். (௩௦)

வேறு.

குழவிமென்னடையிற்குலவியமலயக்குளிர்தரும்புனிற்றிளந்தென்றல்
விழவணிசாரற்சந்தனப்பொதும்பர்விரைமணங்குளிரொடுங்கவர்ந்தே
மழலைவண்டிரங்குந்தடமலர்ச்செழுந்தூண்மதுமழைவாரிவாய்மடுத்துக்
கிழவரிற்றெருந்திதளர்தரவியங்கிக்கிளர்ந்திளைப்புளர்ந்தகற்றிடவே. (௩க)

பருமுகைவெடித்துக்களிநறுவொழுகும்பாசிலைமுசுமந்தாரங்
குருநிறக்குயிலும்பெருவரிச்சுரும்புங்குடைந்துகூஉய்மிடைந்திசைபயிற்ற
முருகுறத்தருந்தாதழிபழச்செழுந்தேன்மொய்த்துதிர்முதிர்கனிமாந்தித்
திருநிழற்கவின்றுசென்றுகண்படுப்பச்செவ்விதிற்*சிறையெனச்செயுமால்.

கற்பகமாரஞ்சந்தனந்தேக்குக்காரகில்†கருப்புரமருது
நற்பழமுதிர்க்குமாமிரந்தேமாநறுங்கனிநெல்லிபுன்னாகம்
பொற்பமர்பழுக்காய்ப்பசுங்குலைக்கமுகுபொற்குடத்தெங்கொடுகோங்கம்
விற்படர்தளவமல்லிகைபிச்சிவெறிகமழ்சண்பகம்வில்வம். (௩௩)

மெல்லிணர்ப்புதுப்பூவல்லரிவிரையால்விரிந்தெழுகாதமும்பரந்து [தே
புல்லியமணத்திற்பொறியளிக்கணங்கள்பொம்மெனமுரன்றிடப்பொலிந்
யெல்லிதன்கதிரற்றிருள்செறிந்தறியாதிரதனவிளவெயிற்படலை
வில்லியன்மணித்தூண்மண்டபநாப்பண்விளங்கியதண்டலைமேவ. (௩௪)

---

* சிறை-அடிமை. † கருப்புரம்-ஓர்விருக்ஷம்.

கைதழீஇக்கொடுபோய்க்கமழுநந்தனப்பேர்க்கதிர்வளங்காட்டிடக்களித்தே
கொய்தளிர்ப்போதுங்குறுந்துளிநறுந்தேன்குலவியநலமலியிணரு
மைதருபொதும்பர்பருவமோராறுமருவளர்ந்தருபொழில்வனப்பு
மைதெனநோக்கியரும்பொலந்தவிசினடுத்தசெந்தாதணையமர்ந்தே. (௩௫)

இந்திரனிலைமையளித்திடுமிறைவனீயெனுமிழிபிலனெனவே
முந்துறமகிழமுருகுலாந்தெரியன்முதிர்வெயிற்கதிர்மணியாரம்
பைந்தளிர்கமழும்பொலந்துகில்சாந்தம்பணிமதுப்பழமதுவருக்கந்
தந்தெதிரேந்தவிரக்குமுன்னளிக்குந்தன்கைபோற்றருவினைமகிழ்வான். ()

நந்தனநடுவிற்செந்தளிர்ப்*பரிதிநளிவெயிற்சுழிதராநாறுஞ்
சந்தனப்பொதும்பிற்றழன்மணிக்கோயில்சார்வதுகண்டவட்சார்ந்தே
சுந்தரமுழுதுமொருவடிவாயசோதியைச்சுருதிநூன்முடிவை
யிந்திரற்குயிரைக்கந்தரங்கறுத்தவிறைவனையேகநாயகனை. (௩௭)

நாகிளந்திங்கட்குறுநிலாவேணிநம்பனையும்பர்நாயகனைப்
பாகனமென்சொற்பவளவாய்முறுவற்பணைமுலைப்பனிமலர்த்தடங்கட்
டோகையோடாயதுறவியையமலச்சுடரினைத்துளக்கறைப்பருவாய்
வேகவாளரவப்பணிவிடங்கேசவிமலனைக்கண்டனன்விறலோன். (௩௮)

காண்டலுங்கண்ணீர்கவிழ்த்துமெய்ப்புளகங்கலந்துறக்கனிந்துளமுருகிப்
பூண்டவன்பதனாற்பொழியுமானந்தப்புணரியிற்படிந்தனன்போற்றி
மீண்டிடற்கரிதாய்மெல்லெனவேகிவேண்டியிந்திரன்றனைவிழைவா
னுண்டலைவணக்கவிரந்தனன்பல்காலதனைநல்குதியெனவே. (௩௯)

இரந்திடாவிறைவனிரந்தனனென்றுவீசனேயேகினந்திருவுங்
கரந்திடுமெனவேகருதிமற்றுபாயங்கணித்தவன்காளைநாளை
வரந்தருவிடங்கற்கொள்கெனவுரைத்துவரிசையிற்பற்பலவழங்கி
நிரந்தாமுறையுமனையிடைநிறுவிநினைந்தனன்விசுவகன்மாவை. (௪௦)

தனியழைத்தவனைத்தழையெழில்விடங்கர்தாமெனவேறுருத்தருதி
துனைவினென்றுரைப்பக்கொடுவரமுன்னைச்சோதியைக்கரந்தவர்நிலையிற்
புனிதமாமுருவையமைத்தனன்மறுநாட்பூபதிதனைமுகநோக்கிக்
கனிவொடுங்கொண்டுன்புரியினிற்போதிகடிதெனக்காவலனேகி. (௪௧)

சினகரங்குறுகிமுனைவனைக்காணத்திருந்தியநற்குறிமுன்போ
லனகமுற்றிடாமையறிந்தரிக்கிதேயன்றெனப்பின்னருமமைந்தே
முனமெனவளிக்கவாறுமிவ்வகையேமொழிந்துமுன்னையவருண்மூர்த்தி
தனையருளென்றுதழைத்தநன்மொழியாற்றாழ்ந்திடச்சசிபதிதளர்ந்தே.

---

பரிதி-ஒளி. நளி-கூட்டம், நெருக்கம்.

மாற்றருநன்றிமறந்திடிற்றீமைவருமெனமுன்னமேமகிழ்வாற்
போற்றியவுருவையேயவணமைத்துப்புரவலகொள்கெனப்புகல
வேற்றனனுகியினிதெனமகிழ்ந்தேயின்பமாயிலங்குளங்கனியத்
தோற்றுமிம்முதலேயென்றிடவளித்தச்சோதிபோலியற்றியவாறும். (சரு)

நின்பொருட்டாகவந்தனநீயேநிலத்திடைத்தாபனஞ்செய்தி
நன்பொருட்டென்னநன்றெனமகிழ்ந்துநலந்தருநாதனைப்போற்றி [ப்
யின்பொடுவிடைகொண்டிமையவர்வாழ்த்தவிலங்குவாட்படையொடுமேகி
பொன்புனைமாடப்புதுநிலாவெறிக்குமயோத்தியிற்புக்கனன்புகழோன். ()

கழிந்தபின்சிலநாட்கதிர்மணித்தேரிற்கவர்ந்தவித்திருவுருப்புராண
மொழிந்தநற்றலத்துத்தாபனஞ்செய்யமுன்னியேமுதிருமெய்ஞ்ஞானம்
பொழிந்தவாரூரின்முதலுருவிரண்டாம்புனிதன்மாமறைவனம்புணரி
வழிந்தநாகையினின்மற்றுநள்ளாற்றின்மருவுகாறுயலின்மன்னே. (சரு)

கோளிலிவாய்மூரென்றிவற்றமைத்துக்*குலவியதிருவிழாவாற்றி
யாளியமொய்ம்பனமர்ந்தனனேனுமணிமறைக்காட்டமர்விடங்கர்
தாளிணைமலரிற்றழைத்தவன்பாகித்தாஞெருநாண்மறவாது
மாளிகைவலஞ்செய்தனுதினம்போற்றிவாழ்ந்தனன்வையகம்போற்ற.(சசு)

தருநிழலளிக்குந்தலைவனுமளக்குந்தன்மையற்றோங்கியமேன்மைப்
பொருவருமறைசைபுகுந்தனுதினமும்போற்றுவன்புண்ணியப்பதியென்
றருள்சிவன்றானுமிப்பதிப்பெருமையாலொருவாதிதினமர்ந்தான்
திருவிடங்கேசற்போற்றினரின்பத்தெளிவுறுமுத்தியிற்சேர்வார். (சஎ)

கொடுமரமிரவிகுலவுநாண்மாகங்குறித்தபூரணையி†ஞதிரையிற்
படுமிரவதனிற்பயில்விடங்கேசற்பணிந்தவர்பத்தியாற்பரவி
விடுசுடர்விமானத்தரனுலகடைவர்வெவ்வினைவீட்டுவாரெனன்று
நெடுமரம்பறவைவிலங்குகண்முதலநிலமுயவஞ்செழுத்தியம்பும். (சஅ)

வேறு.

இன்னமும்புண்ணியதினத்தியாவரும்
பன்னியவிடங்கரைப்பணிந்துபோற்றுவா
ரின்னறீர்ந்தின்பமேயெய்வராதலாற்
பொன்னவிர்மறைவனம்போற்றல்வேண்டுமே. (சகூ)

---

* சத்தவிடங்கர்களுக்கும் அவ்வத்தலங்களில் அம்மையும் அபிஷேகத் திருநாமங்களாவன:—திருவாரூர் - வீதிவிடங்கர். திருமறைக்காடு - புவனிவிடங்கர். திருநாகை-சுந்தரவிடங்கர். திருநள்ளாறு-நகரவிடங்கர். திருக்காறுயல்-ஆதிவிடங்கர். திருக்கோளிலி - அவனிவிடங்கர். திருவாய்மூர் - நீலவிடங்கர். என்பனவாம். டங்கம்-உளி. விடங்கர்-உளியினுற் செய்யப்படாதவர். இச்சத்தவிடங்கர்களுக்கும் சத்தவித நடனங்களுள. அவைகளை நேர்ந்துழிக்காட்டுதும். † ஆதிரை-மார்கழித்திருவாதிரை.

மறைவனமுறுதவர்மனிதராவதிற்
குறைபடுமரத்துருக்கோடனன்மையா
மிறைவிடங்கேசனீங்கெய்துமாறெலா
முறையியம்பினனினிமொழிவதென்னென்முன். (ருo)

வேறு.

நரபதிக்குயர்நாரதனேதிய
வுரையைநைமிசமுற்றவர்க்கூழ்முறை
பரவுசூதன்பணித்தனனிக்கதை
வரவுகேட்பவர்வானுலகாள்வரே. (ருக)

விடங்கச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அஉஉ.

---

# இராமநாதச்சருக்கம்.

தெளித்ததண்மதிபோன்றுளந்தேசுற
வளித்தநற்கதையாவியருளிடைக்
குளித்ததாலினங்கூறுதிகோதறக்
களித்தசிந்தையினய்கதிகாணவே. (க)

வீரகத்தியின்வெம்பிவிடுத்திடற்
கூரகத்தினுணர்ந்தவிராகவன்
ஞூரகத்துருச்சங்கரற்காக்கியே
பாரகத்திற்பரித்தனனென்பவே. (உ)

முந்துசேதுவினயமுறைமையாற்
சிந்துமாறிலதாயதன்றீங்குபின்
னுந்துமாறெவராலெனவோர்ந்துள
நந்துமாறுநவில்கெனநாரதன். (ஈ)

வேறு.

கலிவலிதொலைத்திடுங்காதையீங்கிது
வலிகெழுதோளினய்மகிழ்ந்துகேண்முனம்
பொலிதருமிராகவன் * புறவம்போந்துபோ
ரொலிதருமிராவணனேடுமுற்றியே. (ச)

---

* புறவம்-காடு.

குன்றுகள்பொடிசெயுங்கும்பகன்னனை
யன் * றதிகாயனையமரர்கோன்புறங்
கன்றியமைந்தனையாதிகாய்ந்தவர்க்
கொன்றனனிராவணனோடுங்கோளற. (ரு)

மாற்றலர்பகையறமாற்றிவான்பணி
யாற்றியவிபீடணற்கரசுநல்கியே
தேற்றியசானகியோடுந்தேவராற்
போற்றியபுட்பகத்தேறிப்போந்தனன். (சு)

வேறு.

பிரமகத்திதொடர்ந்துபிணித்திட
நரலையுற்றெளிர்சேதுவினப்பனோர்
பரமநற்சிவலிங்கம்பதிட்டித்து
வரமிகுத்துயர்பூசைவகுத்தனன். (எ)

தருமமார்சிவபூசைசமைத்திடப்
பிரமகத்திபிரிந்ததுதேறியே
பருமவல்குற்கிழத்தியும்பண்பினு
தரமிகுத்தொளிர்தம்பியுந்தானுமாய். (அ)

வெய்யவெம்படைசூழ்தரமேதகு
வையமீதுவருபவன்வாரிதி
யையசேதுவிற்கண்டன ‡ னிருட்
பையனுளமுக்காகியபான்மையாள். (கூ)

வேறு.

கரிபுரிந்தனையமெய்க்கதமுங்காரிகை
யரிவையித்தலையினியாரையென்றலுந்
தெரிதரக்கடன்முழக்கவிந்துதென்றிசை
யரிவுறமுழக்கினள்பகர்தன்மேயினள். (க0)

வேறு.

வெற்றிமேவியுற்றவீரர்வீறுசாயநூறிடுங்
கொற்றமாரிராவணற்குமைத்துநீகுறைத்தலாற்
பற்றிமேவுவீரகத்தியானெனப்பகர்ந்துநின்
சுற்றமோடுநீயுமாவிதொலையின்மீள்வனென்றதே. (கக)

---

* அதிகாயன் - பெரிய சரீரமுடையவன். அமரர்கோன்புறங்கன்றிய மைந்தன்-இந்திரசித்து; இந்திரனை வென்றவன். ‡ இராவணன் பிரமகுலத்திற் பிறந்தமையின், அவனைக்கொன்ற பாவம் பிரமகத்தியாகி, இராமலிங்கப்பிரதிட்டையினால் இராமேசுரத்தின் நீங்கிற்று. அவன் வீரனுமாதலின், வீரகத்தியும் இராமனைத் தொடர்ந்ததென்க.

கொலைகலந்துபுகலும்வெஞ்சொல்குலவல்கண்டுகோமகன்
னிலைகலங்கிநெடிதுநின்றுநினைவுசாலவினவுரு
வுலையுநெஞ்சமுறுதிகண்டிதொழியுமாறுமுளதெனு
வலைகலந்தகறையிலிங்கமமரமேவு * சபரியால். (கஉ)

சேதுமீதிலாதிபூசைசெய்யவேருமீதெனுப்
போதமேவிநீதியானபோதுகாயவாணிதா
னீதினேகிடாதுசாலுமேதுவேறிதற்கெனுக்
கோதிலாவுபாயநீடுகுறியையோதவறிதியால். (கங)

வேறு.

இரைத்தெழுஞ்சேதுநாப்பணின்னமுங்குறியொன்றாக்கி
வரைத்தனுவுரவோன்றன்னைவழிபடும்பூசையாற்றிற்
குரைத்தெழுவீரகத்தியொழிந்திடாகுனிவிற்றாங்கும்
விரைத்தலைமாலைவேய்ந்தவீரவேறுறுதியுண்டால். (கச)

உலகினுக்கணியதாகவொளிர்திருவாரூர்த்தென்பா
லிலகியதைவைக்குமேலாயின்பமேயளித்துப்பூமேற்
றிலகமேபோலமல்கித்திருவளஞ்செறிந்துசேர்த்தா
யலகறுமேன்மைத்தாகிமறைவனமமர்ந்ததன்றே. (கரு)

அப்பதியடைந்துதூயவிலிங்கமொன்றருளினாற்றிச்
செப்பிளமுலையாள்பங்கிற்றேவனைத்தெளிந்துபூசை
வைப்பெனவாற்றிப்போற்றின்மறித்தெதிர்வீரகத்தி
வெப்புறுமிரவிமுன்னரிருளெனவிளியுமன்றே. (கசு)

அன்னதுபின்னராகத்தண்டகத்தளித்தவாய்மை
தன்னயல்குறுகநந்திக்கிராமத்துத்தவத்தின்மேவி
மன்னியபரதனின்சீர்வரவெதிர்காணுனுகி
யின்னலுற்றெரியின்மாய்வானிந்தனமடுக்கினானே. (கஎ)

இனிச்சிறிதளவுதாழ்க்கினெரியிடைமடியுமாயிற்
றுனித்திடுந்துயரமெண்ணிற்சுடுவதுதுணிந்துதூற்றும்
பனித்திரைக்கரையினீங்கிப்பவனனிற்கடிதுபோகித்
தனித்திடுபரதனுக்கந்தந்துபின்னயோத்திசார்ந்தே. (கஅ)

சூன்முகில்வரவுபார்க்குஞ்சாதகத்தொகுதியேபோ
னீன்மணிவண்ணனென்றோவருமெனநினைந்துவாடி
மான்முதிர்புரியுளார்கண்மகிழ்ச்சியின்மலிவர்வாயுந்
கோன்முறைமருவிப்பின்னோன்குறைமுடித்தமர்ந்தபின்னர். (கக)

* சபரி-பூசை.

மறைவனமருவிவேதவழிதரவிலிங்கந்தாபித்
திறைவனைப்பூசையாற்றியின்பமேயெய்திவாழ்தி
யறைகழலிராமநீயங்கமைத்திடுமிலிங்கங்கண்டோர்
கறையறக்கயிலைமேவிக்கரையறுமின்பங்காண்பார். (உ0)

* முன்னர்நீயியற்றுஞ்சேதுமறைவனமுறுதலாலே
யன்னதினமைத்தலிங்கமிம்முறையாற்றுஞ்சோதி
தன்னிகர்பயனைநல்குந்தாழ்வறச்சார்ந்துபோற்றிப்
பன்னருமறையோர்க்குன்பேர்பயிறருகிராமமாற்றி. (உக)

சிவகுறிவிதியினாற்றியருச்சனைசெய்யிற்சீறும்
பவமெனவீரகத்திபாறிடும்பயத்தினோடுங்
கவலைநீயொழிதிவேதநாயகன்கருணையாலே
தவலருமாற்றநின்பான்மொழிகெனச்சார்ந்துளேனால். (உஉ)

பூதநாயகரிலென்பேர்போற்று†பிங்கிருடியென்றே
யோதுவருன்னைவேண்டியுரையெனவுரைத்தேனென்னக்
காதலின்வேதநாதன்கழலிணைகருதிப்போற்றி
யாதரமிகுந்துசேனையார்த்திடவயோத்திசேர்ந்தான். (உ௩)

கொற்றமார்ந்திலங்குமேன்மைக்கோசலத்தரசனாகிக்
கற்றவரமைச்சர்சூழக்கண்ணிமையென்னக்காவல்
பெற்றுலகளித்துத்தன்போற்பிறர்க்கருள்பெரிதும்பேணிச்
சுற்றமுந்தம்பிமாருஞ்சுடர்மதியுடுவிற்சூழ. (உச)

வீற்றிருந்திரவிநற்சேய்விபீடணனனுமனாதி
யாற்றியதிறலோர்யார்க்குமளப்பிலவருளிப்போக்கி
நாற்றிசையவரும்போற்றநயந்துழியொருநாணண்ணித்
தோற்றியதிரவின்முன்னஞ்சேதுவிற்றோற்றியாங்கே. (உரு)

எரிந்தசெங்குஞ்சியோடுமிரவுருக்கொண்டதேபோற்
கரிந்தவெவ்வுருவங்காணக்கலங்கினன்கடவுளாமர்
தெரிந்தவைந்தெழுத்தினோடு‡மிராக்கதஞ்சிதைத்துத்தீமை
யரிந்திடுமனுவினோடுமுருத்திரமனைத்துஞ்சொற்றே. (உசு)

குறைப்பொழுதிரவுபோக்கிக்குறுகியகாலையாற்று
மறைத்திறமியற்றித்தானம்வரன்முறைவிளங்கவாற்றிப்
பறைக்குரற்கடியவீரகத்தியின்பான்மையெல்லா
நிறைத்துறுமவையோர்க்கோதிவசிட்டனை§நிகடங்கூவி. (உஎ)

---

* முன்னர் நீயியற்றுஞ் சேது என்றது ஆதிசேதுவை. † என்பேர் பிங்கிருடி என்று ஓதுவர் எனக் கூறிற்றெனக. ‡ இராக்கதப்பேயைக் கெடுத்துத் தீமையையழிக்குமந்திரத்துடன். § நிகடம்-சமீபம்.

வணங்கியாகாயவாணிவழங்கியமாற்றங்கூறிக்
குணங்குறியுயர்ந்தோய்வேதவனத்திடைக்குறுகிப்பூசைக்
கிணங்கியவிலிங்கமாற்றியெரியுருவீரகத்தி
யுணங்கியவிரியாநல்கென்றுரைத்தனனுவகையோடும். (உஅ)

விற்றிறன்மிக்கோன்கூறவேதியன்விழைந்துவேதம்
பற்றியவனத்தின்மேன்மைபகர்வதற்கெளிதோபான்மை
சொற்றவர்நினைவோரேகத்துணிபவர்தொடர்ந்துமேவி
யுற்றவர்தொழுவோர்க்கெல்லாமுயருலகளிக்குமன்றே. (உகூ)

மூன்றுலகதனிற்பாரேமுறைமையினதிகம்பாரி
னொன்றெழுநாவற்றீவாமதனிற்பாரதமாமங்கட்
டோன்றுதென்றிக்குத்தெற்கின்மறைவனஞ்சுடருமேன்மை
யீன்றதுபரனேபோலவெவற்றிற்குமேலதாமே. (ஙo)

ஒன்றெனவுணருஞானமொழிந்துயர்முத்திசேர்வோர்
குன்றெனவுயரும்பாவக்கொள்ளைகள்பரிகாரத்தை
யன்றியுந்தீர்ப்போர்வேள்வியன்றியேசுவர்க்கமாள்வோ
ரின்றியேதீர்த்தமுற்றுமெய்துநற்பயனையெய்வார். (ஙக)

நித்தியகருமமெல்லாம்விடுத்துவிண்ணிலத்துச்சேர்வோர்
பத்தியிற்றொழுதுவைகமறைவனம்பயன்கண்முற்றும்
வைத்தினிதுதவுந்தூயமாமறைவழுத்திப்போற்றுஞ்
சத்தியகிரிபோவில்லைத்தரணியிற்சார்துமென்ன. (ஙஉ)

குறுகிலவரும்பவுள்ளங்குளிர்ந்துடன்குறுகுமொன்னார்த்
தெறுவலிப்பரதன்றன்னைத்திருவுறவமைத்துத்தேறு
மறுவறுகற்பிற்சீதையிலக்குவன்மற்றைத்தம்பி
பெறுமுறைவசிட்டன்பின்னரேகிடப்பெயருங்காலை. (ஙங)

வெஞ்சினவீரகத்திவெரின்புறம்வெருவமேவ
வஞ்சினனாகித்தேரின்மறைவனமடையவார்த்து
கஞ்செனமுழங்கிக்காய்ந்துநலிந்திடுமோசைநாடிக்
குஞ்சரமுகவன்கோபங்கொண்டனன்கூற்றுமுட்க. (ஙச)

மேற்றிசையரவங்கேளாவெங்கடம்வெகுளியோடு
மூற்றுமாமுகத்துவேதவனத்துறையொருவன்சீறிப்
போற்றியகிழக்கினேக்கம்பொருக்கெனமேற்காநோக்கிக்
காற்றெனக்கதழும்வீரகத்தியைக்கண்ணிற்கண்டான். (ஙரு)

கருஞ்சினவுருவங்காணுக்கான்மலரெடுத்துங்காரத்
தொருங்கறமடியவீழ்ப்பவுடைந்தருண்டோடிமாய
மருங்குறுமிராமன்கண்டுமனக்களிவாய்த்துவானம்
பொருங்கயமுகத்தோன்பாதம்போற்றினன்பரவலுற்றான். (ஙசா)

விரிதலையுலகங்காக்கும்விழுப்பொருளாகிவேண்டும்
பரிவினர்க்கமுதமாகிப்பரிவிலார்க்கிடையூறீந்து
கரிபரிவதனமேவிக்கணகணுயென்னைக்காய்ந்த
வெரியுருவீரகத்தியிரித்தருளிறைவபோற்றி. (௩எ)

விநாயகனென்னுநாமமேன்மையான்மேவிவேத
முனயகமுகிழ்த்தசோதிமூர்த்தியாய்முதலுமாகிப்
பினயகம்புறமுமாகிப்பீடுசாறேவர்வந்தி
தனயகமெனக்குமாற்றுந்தலைவநின்சரணம்போற்றி. (௩அ)

என்னவாதரவிற்போற்றியிபமுகத்தெந்தையேதந்
துன்னவாய்வீரகத்திதொலைத்தருடுணிவினென்னப்
பன்னவாதரவிற்றீர்த்துப்பயமொழித்திடுதியென்னப்
பொன்னவாஞ்சரணம்போற்றிப்போயினன்புனிதற்போற்ற. (௩௯)

இனையமேன்மையாரிறைவனையிமையவர்போற்றிப்
புனையுமாமலர்ப்பொலந்தொடைபுழுகெனப்பொங்கி
நனையுமாமதநம்பனைநாகிளங்கன்றை
நினையுமாத்திரைநீங்கிடுங்கொடுவினைநீருய். (௪0)

பணியவெவ்வினைபாற்றிடும்பயமெலாம்படுக்கு
நணியநல்கிடும்வேண்டியவரமெலாநாட்டு
மணியவண்டினம்வார்செவிகொழித்தகாற்பதரிற்
றணியவார்தருகரிமுகக்கணபதிசரணே. (௪௧)

போயிராகவன்பொழிமணிகன்னியிற்புணரி
பாயவேதமாநதியினும்பரிவுறப்படிந்து
தூயனுகியேமறைவனச்சோதியைவிடங்க
னுயநாதனைமணவணிமேயவாரமுதை. (௪௨)

தொழுதுகண்கணீர்சொரிதரத்தோத்திரஞ்செய்தே
முழுதுமாகியமுதல்வனைமுதிர்பெருங்காதல்
விழுதுமேற்படமேவியேவிழைந்துநன்னளிற்
பழுதநீ*ரபிசித்தெனுமோரையிற்பரிவால். (௪௩)

வேதநாயகற்றெற்குறவேதநூல்விதியாற்
காதலார்தரு†தேசிகன்கருதியநெறியா
னுதனர்சிவலிங்கமொன்றமைத்துளாயந்தே
யேதமீர்தருபூசனைவிதிவழியிழைத்தான். (௪௪)

---

* அபிசித்துமுகூர்த்தத்தில். † தேசிகன் என்றது வசிட்டமுனிவரை.

பொழியுநல்வளம்பூத்த*ஊர்பூசுரர்க்களித்தே
விழிகண்மூன்றுடைவிமலனுக்கெண்ணிலவீசிப்
பழியிணுகியவீரகத்திக்கடிபாற்றி
யழிவுபோயமர்ந்தயோத்தியையடைந்தனனையன். (சரு)

வெய்யவெஞ்சினத்தடையலர்மிடலொடுவீர
னையவார்த்திடுநாரிவின்ருதனுமிராம
னுய்யமாநிலமுஞற்றியசிவகுறியுவந்தோர்
பையராவிடுதிங்களிற்பாவமீர்ந்தொளிர்வார். (சசு)

வேறு.

திருமலியிராமநாதன்சேவடிதொழுதார்மீண்டு
கருவழிபுகுதார்வீடேகாண்பர்முன்சேதுமீதிற்
றருசிவகுறிகண்டோரிற்றழையுமிக்குறியும்பாவப்
பெருவலியிரித்துமுத்திபெறவருள்பெய்யுமன்றே. (சஎ)

வேதநாயகனைப்போற்றிமேவினரிராமநாதன்
பாதமேபணியாராயிற்பயன்பெருரதனுற்பற்றி
மாதவர்பணிதல்வேண்டும்வரதனைவாழ்வுநல்கு
மேதமதகற்றுமின்பமீந்திடுமென்றுமென்றும். (சஅ)

வேறு.

பிரமகத்திமுன்பேணியகுறியினுன்மாற்றி
யரவொலிக்கழலிராகவன்கணபதியருளால்
வரமதுற்றிடுமறைவனச்சிவகுறிவனைவா
னுரமணித்திடும்வீரகத்தித்துயரொழித்தான். (சகூ)

வேறு.

விரவுவீரகத்திசாயவிளைவதாகுமிக்கதை
பரவினார்படித்துளோர்கள்பரமனேடுபொற்பதி
தரவினுதொழித்துமேவுதகவின்வாழ்வுதுய்ப்பராற்
புரவுநீடுகொற்றமேயவரசவீதுபொற்பதே. (ருo)

இராமநாதச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அஎஉ.

---

* இங்கே ஊர் என்றது இராமசந்திரபுரத்தை. இக்கிராமம் இராமனுற் சற்பிராமணர்களுக்குச் சர்வமானியஞ்செய்யப்பட்டமையின், இப்பெயர்த் தாயிற்று. இது வேதாரணியத்திற்கு மேற்கே அரையோசனை தூரத்திருக் கின்றது.

# தனபாலச்சருக்கம்.

இன்னமொருகதையினியதியம்புதுங்கேளளகைநகர்க்கிறைவனருங்
கன்னவிறேருளவனமைச்சர்தமிலுயர்ந்தோன்றனபாலன்காட்சிமிக்கான்
மின்னவிருமருங்கருக்கும்வெய்யமுலைக்கிருதாசிவிரகவேட்கை
யின்னல்செயவவளோடுமிரவுபகலவன்கலவியியற்றினனே. (க)

விழுங்குமமுதனசாயன்மெல்லியலாடருங்கலவிவேலைமூழ்கித்
தொழுங்குலநாயகனையதோன்றலையுமறந்தமரத்தொலையன்னாளி
லழுங்குநிலையவமதியையளகேசனுணர்ந்தவனையவனிமீதே [ய்.
யொழுங்கொழியுமதகரியாயுறுகவெனச்சபித்தனனுலொளிகால்வேலோ

மாற்றலருங்கொடுஞ்சாபந்தனபாலனுணர்ந்துமதிமயங்கிமன்னற்
போற்றியருளெனவுரைப்பக்கரியுருவாய்மறைவனத்துப்புகுந்துமுன்னைத்
தேற்றமுறக்கமலமலர்பலகொணர்ந்துசுருதிவனத்தேவின்கோயி
லாற்றுபலிபீடத்தினருச்சனைபன்னிருவருடமமைத்துப்போற்ற. (ங)

ஒழிந்திடுமிச்சாபமெனவுரைத்தருளவுடன்களிற்றினுருவமாகி
வழிந்துமதப்பெருகுமறைவனமேவிக்கமலமலர்வளைக்கைவாரி
யிழிந்தபிறப்பறுகவெனப்பலிபீடமிசைத்தூவியிறைஞ்சியேத்தக்
கழிந்தனபன்னிருவருடமிம்முறையாற்றினம்போற்றிக்கமலஞ்சாத்த, ()

சுருதிவனத்திடைமேவுஞ்சோதியவனுறுஞ்சாபந்தொலைத்தலோடும்
பரிதியெனவொளிவாய்ந்துபழையவடிவினுஞ்சிறந்துபரமன்பாதங்
கருதிவழிபடுநெறியாற்பணிந்துவிடைகொடுகனகங்கலந்துவேய்ந்த
குருதிமணிவிமானமிசைக்கொண்டளகையடைந்தரசற்குறுகிப்போற்றி. ()

மல்லல்வளஞ்செறிந்தெழிலார்மனைவியொடும்புதல்வர்வழிபாடுசெய்ய
வல்லல்களைந்தருண்மேவியமர்ந்தனனுவிந்திரனேயாதியாக
வெல்லையிலார்மறைவனத்தினெய்தியரனடிபோற்றியிணையிலின்பம்
வல்லையடைந்தனருலகின்மறைவனம்போலிலங்குபதிமற்றுமுண்டோ. ()

வேறு.

கரிபரிவுதீர்த்த
விரிகதையையோர்வார்
தெரியுமருண்மேவு
பெரியவர்களாமே. (எ)

தனபாலச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அஎக.

## மாவலிச்சருக்கம்.

அளவணுவாயினுமறைசையாற்றற
முளமகிழ்வெற்பெனவுயருமென்பரா
லிளமழைதவழ்பொழிலீங்குற்றிவ்வகை
வளமுறலுற்றதேல்வழங்குவாயென. (௧)

கேட்பவர்க்கின்னருள்கிடைக்குமிக்கதை
வாட்டிறற்குரிசினீமனக்கொள்வாயெனுக்
கோட்படுமிருணிலகுலைத்துக்கோதிலாற்
காட்படுமுனிவரனருளினனரோ. (௨)

பெயர்தருகாலமொன்றதனிற்பெட்பினு
லயர்தருமிரவிடையாற்றும்பூசனை
யுயர்வுறவமைத்தணி * சீப்புமுய்த்துடன்
மயரறுமந்தணன்மனையினேகினன். (௩)

ஆயவக்காலையேயங்கண்மேவிய
தாயநல்விளக்கணைசமயமுற்றிட
நாயகனிளங்கொடிநளினமென்முகத்
தேயவோர்நன்மொழியியம்பினனரோ. (௪)

ஈங்குவந்திவ்விளக்கியாவராயினும்
வீங்கிருள்கிழித்திடவிளக்குஞ்செய்வரேல்
வாங்குதெண்டிரையுறுவைப்பும்வானமு
மாங்குறுமரசவர்க்களித்துமென்னவே. (௫)

நளியிருள்செறிவுறவடைத்தநற்கத
விளிபெறவிரித்திவணெய்தியாவரே
யொளிசெயவல்லுநரென்னவூறுதேன்
கிளிபெறுசொல்லினள்கிளக்குமெல்லையே. (௬)

மணங்கமழ்நெய்கவர்ந்தருந்தவன்பசிக்
குணங்கியபுல்லெலியூக்கநூற்றிரி
வணங்கியசெழுஞ்சுடர்மல்கிவாரொளி
யிணங்குறவாலயமிலங்கிற்றென்பவே. (௭)

விளைந்ததுகண்டொளிவீசுவெண்ணிலா
வளைந்தணியாம்பலுறமுதவாயினு
டளைந்துகுளுறுவரந்தன்னைச்சார்பசிக்
குலைந்துறுபுல்லெலிக்குதவனன்றென. (௮)

* சீப்பு- கதவு பூட்டும் தாழ்.

பஞ்சியஞ்சீறடிப்பணைத்தமென்முலை
வஞ்சியங்கொம்பனுள்வகுத்தமென்மொழி
குஞ்சியிற்கொண்டுளங்குளிர்ந்துகோன்முறை
விஞ்சியவுலகெலாம்விரவநல்கினன். (௯)

எறிசுடர்மணிவிளக்கியாவராயினும்
வெறிகமழ்மறைவனவிமலற்கேற்றினர்
பொறிபெறவுலகெலாம்புரந்துபோதமா
யறிவருமுத்தியுமடைவராமரோ. (௧௦)

அணைதருவிளக்கொளியாக்கும்புல்லெலி
யிணையறுதிருவினையெய்திற்றுதலாற்
றுணையுறத்தனிச்சுடர்தூண்டினர்களும்
பணையுறுகிளையொடும்பரிப்பரின்பமே. (௧௧)

கிளர்ந்தெழுசெழுஞ்சுடர்கெழுமிநால்விரல்
வளர்ந்துறமேற்படவயங்கவாற்றின
ரளந்தறிவருந்திருவடைந்துபின்னரு
முளந்தெளிமுத்தியுமுறுவரென்னவே. (௧௨)

முனிவரன்மொழிதலுமுரித்தானையான்
குனிதருங்கொடுஞ்சிலைக்கொற்றமாவலி
பனிதருபசுந்துழாய்ப்பகவன்பண்பின
லினிதுறுதிறமினியியம்புவாயென. (௧௩)

சொற்றனன்மறைவனச்சோதிநல்வரம்
பெற்றடல் * விரோசனன்பிள்ளையாகியே
மற்றடந்தோண்மறவலியின்வண்மையா
லுற்றனன்மாவலியென்னவோர்பெயர். (௧௪)

முற்பிறப்புணர்ந்துமாமுரிமெய்வலி
வெற்பெனப்பணைத்ததோள்விறலின்மீதுயர்
கற்பொடிபடநிமிர்கதழ்வெந்தானையோ
டெற்படுபொன்னகரெய்திமுற்றியே. (௧௫)

உருமென முரசறைந்தொளிறுவாட்படைக்
கருமுகிற்கரிநிரைகடாவிக்காற்றெனத்
தெருமருபரித்திரள்செறித்துத்தேர்நிரீஇப்
பொருகடன்முழக்கெனப்பொங்கிப்போர்செய. (௧௬)

---

* மாவலி விரோசனன் மகனாதலின், இவனுக்கு வைரோசனன் எனவும் பெயர்.

விண்ணவர்வெஞ்சினமேவிவெம்பியே
கண்ணகன்பறந்தலேக்கலந்துகாரிருட்
கெண்ணமார்பரிதியினெரிப்பதானவர்
புண்ணமர்ந்துறவுறப்போரும்பூத்தவே. (௧௭)

ஒருவரையொருவரேயொறுக்கவுன்னியே
குருமணிவருணனுங்கொடுங்குப்பாண்டனுந்
தருமனு * நரகனுஞ்சம்பரன்னுட
னிருநிதிக்கிழவனுமேனையாவரும். (௧௮)

† வேறுவேறடல்செயவெகுண்டுவாசவன்
பாறுசூழ்வச்சிரம்பகைவர்பற்றற
நூறுமாவிடுத்திடநொடியிற்றானவர்
கூறுகூறுற்றனர்குலேந்தசேனையே. (௧௯)

வேறு.

இரிந்திடுஞ்சேனைகாணுவெரியெனச்சீறிவானி
தெரிந்துமாவலிகால்கோலிச்சிலேயினைத்தெவ்வராவி
கரிந்துகுகணைகள்வானங்காவலன்கடியமார்பம்
பொரிந்துகவயுதந்தூவிப்பொருவிறேர்கடவிப்போந்தே. (௨௦)

கொடுங்கணையதனிற்பாதிகுலவியவருணன்மேனு
மடுந்திறனடுவன்மேலம்பாயிரநான்குந்தூவி
விடும்படைபலவும்வேறுவேறுசூழமரர்மீது
தொடுந்தழல்போலத்தூவித்தோளுரந்துணிந்துவீழ்த்த. (௨௧)

சிந்தியேயமரர்முற்றுஞ்சிதைந்துடல்சிங்கவேற்றுற்
றந்தியினுடைந்துசாயவிந்திரன்றரியானாகி
யுந்திவெண்களிற்றைவல்லேமாவலியுரத்தினூக்க
முந்தியவயிரவொள்வாளெறிந்தனன்முழங்கியார்த்தான். (௨௨)

வீசியவயிரம்வீட்டிவெறிகமழ்ந்தணங்குநாறி
மூசியதண்டினன்னேன்முடிபொடிமுதிரமோத
வாசவனயர்ந்துவீழமாதலிவையமேற்கொண்
டாசையின்புறத்துமேவியமரரையடைவித்தானல். (௨௩)

அரிமுரிந்தடங்கத்தெவ்வரமரழித்தடர்த்துத்தேவர்
புரியமர்ந்தரசனுகிப்புதுமதுவுதிர்மந்தாரம்
விரியுநந்தனத்துவானமெல்லியர்பரவிச்சூழத்
தெரிநரம்பிரங்குநல்யாழ்தேனெனச்செவியுட்செல்ல. (௨௪)

---

* நரகன் நரகாசுரன், சம்பரன் சம்பராசுரன். † இதுவே தொந்தயுத்தம். தொந்தயுத்த மெனினும், சங்குலிகயுத்த மெனினுமொக்கும்.

வீற்றிருந்தரசுமேவிவிழைந்தனனேனுமென்பூ
லூற்றிருந்தொழுகுந்தீந்தேனுறைதருமறைசையொண்ணூ
லாற்றருந்தீபமேற்றியரன்கழல்போற்றியன்று
போற்றிருந்துயருந்தீபப்புதுப்பணிபுரியுமென்றும். (உரு)

மாவலிவலியின்மேவிவானநாடளிக்கத்தேவ
ராவலினரசனோடுமயன்றனையடைந்துநின்சீ
ரேவலினினிதுவாழ்ந்தேமிவ்வரையிரங்கிக்காக்குங்
காவலில்பைங்கூழ்போலக்கழிந்தனங்காத்தியென்ன. (உசு)

உள்ளகமுருகித்தேவரோடுந்திருமறைசைமேவி
வெள்ளநீர்படிந்துவேதவிமலனைப்பரவிப்போற்றிக்
கள்ளவிழ்போதுதூவிக்கடவுளரிடுக்கண்கூற
வள்ளறானாழியானைவரத்திருவுள்ளம்வைத்தான். (உஎ)

முன்னனுமறைசைமேயமுதல்வனைமுகுந்தன்மேவிப்
பொன்னவிர்கழற்காற்செய்யபுதுமலர்புனைந்துபோற்றி
யென்னையுநினைக்கவேண்டிற்றென்னெனவிறைஞ்சிக்கூறத்
தன்னனுமுன்னமேயசங்கரன்சாற்றலுற்றான். (உஅ)

மணியுருக்கமழுங்கோயில்வளர்நமக்கொருவன்பூசை
தணிவறவிரைவினாற்றித்தாழ்கதவுறுத்தியேக
வணிவிளக்கவிவதாகவணைந்தெலிதூண்டக்கண்டு
பணிதருமுலகமூன்றுமதற்கெனப்பாலித்தேமால். (உகூ)

எலியதுவலியனாகியிந்திரனாகிவானோர்
மெலிவுறவடர்த்துநாகம்விழைதலால்வெம்பிவானோர்
பலிபெறநம்பான்மேவிப்பகர்ந்தனர்பதுமனோடுங்
கலிகெழுகிரடோணியேகாத்தளித்திடுதியென்றும். (௩0)

தோற்றியபுதல்வர்சுற்றமாயினுந்துயரந்தேவர்க்
காற்றினர்தம்மையெல்லாமடர்த்திடல்*சாமிக்காதல்
போற்றிநீயறிதியன்றே†புங்கவர்நமதுபொற்பி
னாற்றியவடிவமாகுமாதலாலளித்தல்வேண்டும். (௩க)

அறந்தருமதிதிதன்பாலமைந்தகாசிபற்குநீபோய்ப்
பிறந்தவர்க்கின்பம்பூரித்தமரரைப்பெரிதும்பேணிச்
சிறந்தவரரசுநல்கச்செல்கெனச்செங்கண்மாயன்
புறந்தருநெறியிற்போற்றிப்போயிரும்புவனம்போற்ற. (௩உ)

---

* சாமிக்காதல் - எசமானனுக்குக் கடமையாதல். சாமி-எசமானன். தேவர்கள்நமது வடிவமாயிருத்தலால், நாம் அவர்களைப் பாதுகாத்தல் வேண்டும்.

புனையிழையதிதிதன்பாற்புதல்வனாய்த்தோற்றிப்பூநீர்
நனைதருகுடுமிமார்பினயந்தநூல்கரகந்தண்டு
துனைதருசரியமானின்றோலொடுத்தரீயமுஞ்சி
யினையனபிரமசாரியெனப்புனைந்திலங்குமெல்லை. (௬௩)

* திருமறுமார்பனுள்ளந்தேங்களியுதவவேள்வி
யொருமையினூற்றற்குன்னிமாவலியுயர்வினோடு
மருமறைமுனிவர்க்கூவியாரணமுறையினாய்ந்து
பொருவருவேள்விநாளும்பொற்பொடும்பொலியுங்காலை. (௬௪)

இழுதுவெங்கடிகளூறுமியாசகத்திற்பிரமசாரி
தொழுதகுமுருவமாயமாயவன்றோன்றப்போற்றி
முழுதுணர்முனிவரோடுமிருத்திடமுற்றுமோர்ந்து
பழுதறுவெள்ளிசேர்மாவலிக்கிதுபரிவிற்சொல்வான். (௬௫)

அயலவரறியும்வார்த்தையன்றிஃதகத்துக்கொண்ணீ
புயல்வணன்பிரமசாரிபோற்புனைந்துருவமாறி
வியலிடமடிகண்மூன்றுவேண்டுதற்குன்பால்வந்தான்
செயலதுசெய்வதன்றேசெய்திடிற்றீங்குண்டென்ன. (௬௬)

கருங்கடல்வண்ணனீங்குற்றிரக்குமேற்கரப்பனாயிற்
பெருங்குறையிதனினுண்டே†பேணியவேள்வியார்க்கே
யருந்தவமாதியாயவாரருள்வேண்டியாக்கை
வருந்துவதறவோரென்னமாவலிவகுத்துப்பின்னும். (௬௭)

அடியளவன்றியாவியளவினுமளிப்பனென்ன
முடிவுரைத்தமருங்காலைமுகுந்தனவ்வுருவொடேகப்
படிமிசைப்பணிந்துபோற்றிப்பாத்தியமுதலவீந்து
கடியனேன்றன்பால்வந்தகாரியமென்னையென்ன. (௬௮)

‡ அடியொருமூன்றுமேவற்கருளெனவருகுகின்ற
கடிகமழ்கூந்தற்செவ்வாய்க்காதலிதன்னைநோக்கிப்
படியளித்திடுதற்காயபசியபொற்கலசத்தெண்ணீர்
கொடியினிற்கொணர்தியென்னக்கொணர்ந்தனளுக்கலோடும். (௬௯)

---

*விஷ்ணு உவக்கும்பொருட்டு ஓர் யாகஞ் செய்தற்கெண்ணி. ஈண்டுநாறுமென்பது தொடங்குமென்னுங் கருத்தின்கண்வந்தது. † நான்பேணிச் செய்கின்ற இவ்வேள்வி யாருக்கு. அரியதவமுதலிய வற்றினாலே எவரருளைப் பெற விரும்பித்துறவிகள் சரீரந் தவத்தான் வருந்துவது. ‡ ஓராச்சிரமஞ் செய்து, அதிலே நான்தங்குதற்கு மூன்றடிமண் தரல்வேண்டுமென்று கேட்க.

அங்கைநீர்பெய்திதானமாற்றுதற்கென்னவாங்கே
மங்கைநீரொழுக்கசமூக்கின்வார்தரலின்றிமாளச்
சுங்கனங்கடைத்தசூழ்ச்சிதுணிந்துமால்சுடர்செயோர்கண்
பங்கமுற்றழியவங்கைத்தருப்பையைப்பணித்தானன்றே. (சo)

தருப்பையின்னுனியினோர்கண்சரிந்தனன்கவியுந்தண்ணீர்
மருப்புனைமூக்கின்வாரமாவலியேந்திமாயோன்
விருப்புறுமடிகண்மூன்றும்விரகுறவளித்தான்வேண்டுந்
திருப்பறவேந்திவேறுசெறிப்பதற்கெண்ணிச்செய்வான். (சக)

வடவரைபடியினாகவளர்ந்துயர்வானமுற்றுங்
குடையெனவொருதாட்காக்கிக்குவலயமொருதாட்கொண்டே
யிடையினியொருதாட்கேதென்றிசைப்பமாவலியுமெண்ணித்
தடமலர்முடியைநீட்டத்தாண்மலரழுத்தினானே. (சஉ)

அழுத்தியவடியிற்சோருமவன்றனைப்*பணித்தாம்பார்த்து
வழுத்தியவானோர்காணப்பாதலமருவவைத்தே
யிழுக்கியகருமந்தானமெரியெழாதியற்றும்வேள்வி
முழுப்பயன்பலியினல்கிமுறையுறமுகுந்தன்செய்தான். (சங)

மறைவனமேயவள்ளலருளினால்வலியமாயன்
முறைமையிவ்வாறுசெய்தான்முழுவலியுடையரேனு
மிறையவர்தேவர்பார்ப்பாரீசனதடியார்க்கென்றுங்
குறைசெயார்செய்வாராயினடர்த்திடுங்குழகன்றானே. (சச)

வேறு.

† அண்ணறன்பொருளாகியவாச்சிய
முண்ணவந்ததுணர்விலதாதலி
னண்ணியின்பநயந்தவொளியினா
னெண்ணமின்றியிடுக்கணுமுற்றதே. (சரு)

---

* நாகபாசத்தினாலே கட்டி. தவறியகிரியை, தவறியதானம், அக்கினி சுவாலியாதிருக்கப் புகையின்மீது செய்யும் யாகமாகிய இவற்றின் முழுப் பிரயோசனத்தையும் மாவலிக்கு உணவாகக்கொடுத்து.

† தீபத்தைத்தூண்டிப் பிரகாசிப்பித்த புண்ணியத்தால் இன்பமடைந்து, சிவத்திரவியமாகிய நெய்யையுண்ணவந்தபாவத்தால் எலி துன்பத்தையுமடைந்ததென்க.

வேறு.

களியுறமேவலி
னெளிதுறமாவலி
வளிதுறுகாதையி
னொளிபெறுவார்களே. (௫௬)

மாவலிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௨௫.

---

# பிரமசாரிச்சருக்கம்.

நாவினின்சுதைபழுத்தெனநலமலிகேள்விப்
பாவினின்சுவைபருகியமனுமகற்படைக்கும்
பூவினன்றரும்புரிநரம்பிரங்கிசைபொழியாழ்
மேவினன்றனைவினயமோடின்னனவிளம்பும். (௧)

நிறையொழுக்குறுமந்தணன்சிறுவனன்னெறிநீத்
தறைகுழற்றனதனையொடுமணைதரும்பாவ
மறைவனத்திடைமாய்ந்ததென்றோதினைவகுத்துக்
கறையகற்றியகதைவிரித்துரையெனக்கழறும். (௨)

இராமசந்திரபுரத்திடையிலங்கியமறைநூற்
பராயணன்பலபனுவலுஞ்சோதிடப்பரப்பு
நிராமயன்றருநீதியுமோதியநெறியா
னராவணங்கிடையோடுமெப்புரத்தினிதமர்ந்தான். (௩)

பனவனன்னவன்பணிசெயும்பருமமாரல்குன்
மனமிலங்கியமனைவியுமனமகிழ்காத
றினமலிந்திடவொழுகுநாட்சிறுவனைத்திருவா
ரனமனுள்பயந்தளித்தலுமாயநாளறவோன். (௪)

நிலையினின்றிடுங்கோட்களினிலைகளுநோக்கு
முலைவகன்றிடவொழுங்குறக்கணித்தனனோர்ந்தே
கலைமயங்கியதீவினைப்பரப்பெலாங்கண்டா
னுலைவினோடழிந்துளத்துறவச்செயலுரைப்பான். (௫)

தோற்றமேவியமதலையீரெட்டெனத்தொடரு
மாற்றலார்தருபிராயத்தினன்னைதோண்மணந்தே
தேற்றமீர்மதுக்குடித்தடித்தானுயிர்செகுக்குங்
கூற்றமாயதெங்குடிக்கெனக்குழைந்துளங்குலைந்தான். (௬)

துன்பினுற்சிலநாட்செலவாருயிர் துறந்தா
னன்பினுற்றருமைந்தனுமத்தனுக்காய
முன்பினுற்றிடுமுறையெலாமுடித்தபின்முடிந்தோன்
வன்பினுற்றியசாதகப்பயனெலாமதித்தான். (எ)

ஆய்ந்தவெந்தைசொற்பழுதுருதவ்வினையகற்றற்
கேய்ந்தசெய்கையேதில்லிடையிவளொடுமிருக்கின்
வாய்ந்திடும்பவமுலகின்மேற்றிரிந்ததுமாய்ந்து
தீர்ந்திடும்படிசெய்வனென்றெழுந்தனன்சிறுவன். (அ)

கொடியதீவினைக்குவையெலாமெரித்திடுமாரூர்க்
கடிதுபோய்க்கமலாலயக்கயத்திடைமூழ்கி
யடிகளாயவன்றீகரைப்பணிந்துபோயார்க்குங்
கடியகாவிரிபடிந்துதன்கடனெலாங்கழித்தான். (கூ)

குடந்தைநாயகனடியிணைதொழுதகங்குழைந்தே
மடந்தைபாகனைப்பணிந்திடைமருதிடைமரபா
லடைந்துதீர்த்தமுமாடியேபணிந்துநீங்ககன்றே
யிடைந்துபோயறக் * கவுரிமாயூரத்தினெய்தி. (க0)

பரவியேகியே † வயித்தியநாதனைப்பணிந்து
பிரமமாபுரம்வணங்கியேபெருஞ்சிதம்பரம்போ
யரவமார்சிவகங்கையிற்படிந்தனையவளோ
டிரவினுடிடுமெம்பிரான்றனைத்தொழுதிரந்தான். (கக)

நன்னலம்பெறுகாஞ்சியும்பணிந்துபோய்நகையார்
பொன்னலம்பியார்கையன்காசியிற்புகுந்தே
யன்னமார்மணிகன்னியிற்படிந்தகிலமுமாய்
மன்னுவிச்சுவநாதனைப்பணிந்தனன்மகிழ்ந்தான். (கஉ)

அருந்தவர்க்குயிராம்பிரயாகையினுடித்
திருந்துசீர்க்கயைமேவினன்சிராத்தமுமாற்றி
வருந்துமாற்றினன்மீண்டனன்மலிதருந்தீர்த்தம்
பொருந்தும்வேட்கையிற்சாதகமறந்திவட்போந்தான். (கங)

நெடியவன்சகநாதமும்பணிந்து ‡ நீராழிப்
படிதருந்தொழிலாற்றியேபருப்பதமாகி
யடிகடன்பதியணைத்தொடும்பழமலையடைந்து
நொடிதருங்கமலாலயந்தொழுதனனேற்பான். (கச)

* கவுரிமாயூரம்-உமையம்மை மயூரமாகிச்சுவாமியைப் பூசித்ததலம்.
† வைத்தீசுரன்கோயிலில் வைத்தீசுரரை வணங்கி என்க. ‡ சமுத்திரஸ்நானஞ் செய்து. பருப்பதம்-ஸ்ரீசைலம். பழமலை-விருத்தாசலம்.

ஆயசீர்ப்பதியகன்றுதன்பதிச்செயலாய்வா
னேயவேகினனிரவிமேற்றிசைக்கடலெய்த
மேயசந்தியுமாற்றித்தன்பதியிடைமேவிப்
பாயசீரழிந்துறுவதுங்கண்டிருள்பரக்க. (கரு)

* ஒழிந்தவில்லிடை [illegible]
னழிந்தவெம்பசியாலொருமனையிடையடைந்தே
கழிந்தமங்கலக்கயினியைக்கண்டவள்கறிகாய்
மொழிந்துநல்கிடவயின்றபின்னீர்நசைமுதிர்வால். (கசு)

சீதநற்புனல்வேண்டிடவிவணெடுந்திளைக்குங்
காதலுற்றிவன்கரவினலன்றியேகலக்குஞ்
சேதமுற்றிடானென்றுதண்புனலெனக்கிழியாற்
கோதுற்றகட்கொடுத்தலுமுணர்ந்திலன்குடித்தான். (கஎ)

குடித்தகாலையேவெங்களிகொண்டுமேற்கூரத்
துடித்தெழுந்துவெங்கதையினேனுயிர்துறக்க
வடித்தொழிந்திடவாயினன்பரவசமென்றே
பிடித்தணைந்துறமுயங்கினளிரவெலாம்பெரிதும். (கஅ)

முற்றுகாதலான்முயங்கிடவிரவியுமுளைத்தான்
பற்றுநீங்கியபனவனுமுணர்ந்துயிர்பதைத்துக்
கற்றைவார்குழலாரைநீபென்னலுங்கயினி
யுற்றவாறெலாமுணர்த்துவாளிப்பதியுள்ளோன். (கசு)

நெறியுணர்ந்தொளிரந்தணன்மனைவியாணிறைந்த
வறிவினற்கொருமைந்தனையளித்திடவவனுட்
குறியுணர்ந்திவன்குடித்துவெங்களிமதுக்கோவு
மறிதரும்படிமாய்த்தனைதன்னையுமணைக்கும். (உ0)

தீயனென்றுதன்புதல்வனதீங்கெலாந்தெளிந்தே
காயமோவினன்காதலனிவ்விடைக்கழன்று
னேயநேன்செயலிவ்வணமென்றிடவிதியின்
மாயமோர்ந்தனன்மனம்பதைபதைத்துமண்மறிந்தான். (உக)

எந்தைசொன்மொழிசத்தியமாயதென்றெழுந்தான்
முந்தைநூன்முறையழித்தனன்யானெனமொழிந்தா
னிந்தையீங்கிதன்மேலிலைநிலத்திடையென்று
னந்தகோவிதுவருவதேயெனக்கெனவயர்ந்தான். (உஉ)

---

§ ஒழிந்த இல்லிடை-இனி உண்பதற்குப போய் நுழையும் ஒருவீடொழிந்த ஏனை வீடுகளில்.

அன்னையைப்புணர்ந்தானுயிர்செகுத்துமட்டருந்தி
முன்னையிப்பெரும்பாதகமூன்றொருங்கியற்றி
யின்னலுற்றவர்க்கேட்டிலனின்றியானல்லாற்
பின்னரிப்பெரும்பவஞ்செயும்பேதையுமிலையால். (உங)

கொடியதீவினைநரகிடைக்குமைப்பதன்முன்ன
முடிதனன்றெனமுன்னியேசினத்தொடுமூரி
வடியவாளினாற்சிரத்தினையறுத்திடமறைசை
யடிகளீரும்வாட்கரத்தினையங்கையானகற்றி. (உச)

வீங்குபேரருட்கருணையாலவனெதிர்மேவித்
தாங்குநின்சிரமரிந்திடறவிருதிதழைத்த
தீங்குதீர்வகைசெப்புதுங்கேளெனத்தேவர்
பாங்குசூழ்தரப்பணித்தனனுலகெலாம்பணித்தான். (உரு)

ஈட்டுதீவினையனைத்தையுமெரியுறசருகின்
மாட்டுநல்லறம்வளர்த்திடுநம்பதிமறைசை
காட்டுதீர்த்தத்திற்கலந்தாடனுடியேசுரிசு
வீட்டுவாயெனவிளம்பினன்விரிசடைவிகிர்தன். (உசு)

விலங்கிவில்லுமிழ்மணிகன்னிவேததீர்த்தத்திற்
கலங்குதெண்டிரைக்கோடிவேதாமிர்தங்காரார்
நலங்கொடீர்த்தத்தினாடியேநம்மடிபோற்றித்
துலங்குவாயெனச்சொற்றிடமறையவன்சொல்வான். (உஎ)

தாங்கருந்திருக்கருணையாலென்றுயர்தவிர்ப்பா
னீங்குமேவினையுய்ந்தனனேழையேனின்று
டீங்குதீர்வதெவ்வகையெனத்தீர்த்தங்களாடி
ஞேங்குமென்றுரைத்தொளிந்தனனுலகெலாமொளித்தான். (உஅ)

தெய்வநாயகனருளினாற்றீர்த்தங்களனையாங்
தையறன்னொடுமாடியேசங்கரற்பணிவான்
வையமீன்றருளனையொடுமறைவனத்தமர்ந்தோன்
செய்யசேவடிபணிந்தனன்றோத்திரஞ்செய்வான். (உக)

## வேறு.

புங்கவரெவரும்போற்றியென்றிறைஞ்சப்பொன்னடிக்கமலவாழ்வளிக்குஞ்
சங்கராபோற்றிசராசரமனைத்துந்தந்திடுந்தலைவனேபோற்றி
திங்களங்குழவிச்செழுநிலாப்பரக்குஞ்செஞ்சடைச்செல்வனேபோற்றி.
யங்கணாபோற்றியாரணவனத்தின்மலவானந்தனேபோற்றி. (௩0)

விரிந்ததீவினைகள்வீட்டியேயெதிர்ந்துவிண்ணவர்க்கரியநீயெளிதே
பரிந்தெனையாண்டபெராவமுதாயபணிப்பருங்கருணையேபோற்றி
தெரிந்தவருளத்துத்தேசுருவாகிச்சிறையெனக்கறைசெயுமலத்தை
யரிந்தருளாயவாரணவனத்தினமலவானந்தனேபோற்றி. (ஙக)

சிறுவனிவ்வாறுசிவன்கழல்போற்றச்சிறந்ததாய்தேவிசேவடியே
குறுகினள்போற்றிக்குவலயமளிக்குங்கோதிலாவமுதமேமிமய
மறுவிலாமணியேகிளரொளிவனப்பார்வல்லியேவளரிளமுலைமே
லூறுகிலாமணிப்பூணொளிர்தருமூராலுயருமையம்மையேபோற்றி. (ஙஉ)

எனப்பணிந்தேத்தவீசனுமுமையுமிருவருங்களியினாலெய்தும்
வனப்புறுதத்தம்பதவிகளளிப்பவாழ்ந்தனர்வல்வினைபோழ்ந்தார்
மனத்துயர்ஞானயோகமேதுறவுமகமகங்குழைதருமன்பு
மினத்துறவத்தும்வேதாரணியகனைப்பெறிர்திருவின்பமீடைவார். (ஙங)

வேறு.

பிரமசாரிபெருகியதீவினை
யுரமதீர்கதையுள்ளினர்கேட்பவர்
பரமனீரடிபற்றியவன்பினால்
விரவுதீவினைவீட்டிவிளங்குவார். (ஙச)

பிரமசாரிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஙக.

---

# கோலாகலச்சருக்கம்.

தேனிழைத்தனதீவியமென்மொழி
யூனுருக்கியுளங்குளிர்செய்தலாற்
பானுரைக்கதிர்பாயகின்மெய்யெனச்
சானிரைத்தகதையுந்தழையுமால். (க)

பிரமசாரிபெருகியதீவினை
விரைவினீங்கினன்மெய்யுணர்வின்றியே
கரவினூற்றியகாட்சியிற்கண்டுளம்
பரவுதீவினைபாற்றற்கரியதால். (உ)

உட்குமுள்ளமுணரினுமுண்மே
கொட்குந்தீக்குறிசெய்யுங்கோலாகல
னட்குந்தூய்நயத்திறைராமையிற்
பெட்குந்தன்மையுரையெனப்பின்னரும். (ங)

அறிவுமுற்றியடைபெரும்பாதகக்
குறியகன்றிடுங்கொள்கையின்றவ்வினை
செறியுந்தீயதிறத்தவர்தீர்தரு
நெறியுமில்லைநிகமத்துநீதியோய். (௪)

போயவாறும்புனிற்றிளவெண்மதி
மேயசெஞ்சடைவிண்ணவன்றன்பத
மாயவாறுமருளெனவாரணம்
வாயவாயுமுனிவன்வழங்குவான். (௫)

நீடுதெண்டிரையாடைநிலமகள்
கூடுமின்பிற்குளிர்ந்துறக்கோதிலா
தாடுதிண்டிறற்றோள்வலியாற்றிய
பீடுசாலும்பெருந்தகைகேட்டியால். (௬)

சங்கைநீயெனத்தந்துதடமலர்ச்
செங்கணாரன்சேவடிபோற்றியே
யங்கைகூப்பிவினவவருளிய
தெங்கணாதனின்மொழியேமமால். (௭)

செவியினூடுதிருத்தகச்செல்லுமே
லவியுந்தீயவருவினையாவையுங்
குவியுமின்பங்குழகனுவக்குமாற்
புவியின்மேம்படும்போற்றிப்பொலிதியால். (௮)

ஓங்குபொன்னெயிற்கேதனவொண்கசை
யாங்குறுங்கதிர்மாலையறைந்திடத்
தாங்குவேகத்துச்சாகல்லியப்பெயர்த்
தீங்குதீர்புரமுண்டதிற்*சேர்ந்துளான். (௯)

இறந்தகாலத்திறைமறைவேதியர்ப்
புறந்தருஞ்செயலான்†புவிவர்த்தனன்
கறங்குதெண்டிரைவையங்கதிரென
வறந்தரும்பரிசாலளித்தானரோ. (க0)

அன்னவேந்தற்கரிவெங்குருளைபோற்
பன்னிலக்கணமுற்றும்பரித்தொளிர்
மன்னர்‡மைந்தனுதித்தனனம்மு
மின்னதாமிரபுச்சனென்றெய்துமே. (கக)

---

* சேர்ந்துளான் என்றது கோலாகலனை. † புவிவர்த்தனன் என்பது சாகல்லியபுரவரசன்பெயர். ‡ அம்மைந்தனுக்குத் தாமிரபுச்சன் என்பது பெயர்.

ஆறிரண்டுறுதிங்களினைப்பெயர்
கூறியந்தணர்க்கூஉய்க்கொடைமேம்படப்
பேறினீந்திப்பிறங்கிடப்பின்னர்நீ
மாறிலாத்தொழில்செய்துவருகென. (௧௨)

பற்றியேவல்பரிக்கப்பணித்திடுங்
குற்றமேயுருவாயகோலாகலன்
பெற்றசூத்திரசாதியிற்பேறுளான்
மற்றமைந்தன்வளரவளர்ந்தவன். (௧௩)

உணர்வொழிந்துமருட்கடலுய்த்திடப்
புணர்மறத்தவிளமைபுகுதலு
மணர்களிக்கவுங்காமர்தவசமாய்த்
துணரின்மொய்த்திடுந்தூர்த்தரிற்கூடினான். (௧௪)

காவிநீலக்கருங்கட்கடையினு
லாவியீருமணங்கனவேசையர்
தூவியந்துகிற்சேக்கையிற்றோய்ந்தவ
ரோவியாவியொருகணமின்றென. (௧௫)

சிலம்பரற்றியசீறடிசென்னியிற்
பலம்படுத்திப்பரித்தபுலவிதீர்த்
தலம்புமேகலையார்ப்பவமுதனார்
சலம்பொறிக்குங்கலவியிற் * கன்றினான். (௧௬)

தந்தைதந்தைவழிமுறைச்சார்ந்தன
முந்தையாயமுழுநிதியாவையுஞ்
சிந்தைமேயதெரிவையர்க்கீந்தவ
ரந்தைவந்துமுறுவலரும்பியே. (௧௭)

இன்னரம்பினிரங்கிசையாடலாற்
கின்னரம்பணிபாடற்கிறியினு
னன்னரம்பயினாட்டநலங்கொளீஇ
முன்னரம்பையர்போற்பலர்முற்றவே. (௧௮)

பூணிழைத்தபுணர்முலைப்பொன்னகர்க்
காணியாயகழைச்சிலைவேள்கணைத்
தூணியாகிச்சுரும்புறுதூர்த்தருக்
காணியாய்மருந்தாற்றலரும்பொருள். (௧௯)

ஏரணிந்தபிறர்மனையேழைமார்
வாரணிந்தவனமுலைமூழ்கியே
தேரணிந்தொளிர்வீதிதெருத்தொறு
மூரணிந்தமருந்தினுலாவுமால். (௨௰)

* கன்றல்-மிகுதல்; 'கன்றியகற்புடைக்கனலிமாமுகன்' என்பதுமுணர்க.

அறிவழிந்தனைதந்தைபருங்குலம்
பொறியரிந்திடும்புண்ணியர்சொற்றிடு
நெறியிகழ்ந்திகழ்ந்தேநிறைபாதகக்
குறியினின்றுகோலாகலக்கோதினான். (௨௧)

அன்னைதன்வழியத்தனருந்தனந்
தன்னதென்றளவற்றதனமெலாம்
பொன்னனார்கட்களித் * திலம்பூண்டவன்
முன்னமேவிமுறைபிறழ்ந்தெண்ணுவான். (௨௨)

கள்ளவெந்தொழிலாற்றிக்கடிநக
ருள்ளகொண்டுறுமின்பமுறுதியெண்
றள்ளனாறியவப்பதிபச்சுற
நள்ளிருட்கரவாற்றினனாடொறும். (௨௩)

காவன்மேயினர்கண்டெனன்றவ
னாவறீரப்பிடித்தடித்தார்த்திட
மேவருங்கிளையோர்கள்விடுத்தபின்
றூவரும்பொதுமாதருந்தூற்றலும். (௨௪)

வெறிதருங்கள்விழைந்தரிவெந்தடி
யறிவழிந்தவெங்காமமுன்னூர்ந்தவன்
பொறியழிந்துபுகலறப்போயில
நறியமென்குழற்றாய்நலநண்ணுவான். (௨௫)

தனியிருந்தவத்தாய்நலஞ்சார்ந்திடப்
பணிமலர்க்கரம்பற்றிப்பணிமொழி
யினியநல்குவணிம்மறையேயெனத்
தணியிலாளுமங்கெய்திடச்சேர்வினான். (௨௬)

பாயன்மீறுவலிதிற்படுத்துளத்
தூயசெய்கையனைத்தையுமாற்றிட
வேயதோளிவெருவிவிளங்குளந்
தூயளாகியினையனசொல்லினாள். (௨௭)

மைந்தனீமதுமாந்துங்களிப்பினால்
வெந்திறற்றொழின்மேவினையேயலாற்
கொந்தழற்கட்குறுங்கடிகொண்டதோ
நந்துமோகமருந்துநயந்திடோ. (௨௮)

---

* இலம்-வறுமை.

சூதுகன்றியதூர்த்தரிற்கூடியோ
யாதுகாரணமெண்ணலனீங்கிது
கோதுகொண்டகுறியிது கூடினார்
மாதுயர்க்கொடுங்கும்பியின்மாள்குவார். (௨௯)

பிரமவேதியர்ப்பேசுங்கொலையினுங்
குரவனாயிழைகூட்டுங்கொடியதாற்
கரவினன்முறையல்லவற்காதலாற்
பரவினார்நிரயக்குழிபற்றியே. (௩௰)

பல்லகாலம்பரம்பெரிப்பாழ்நர
கல்லனேயுற்றழுங்குவராதலா
னல்லவேண்டினயந்தெறுமித்திறம்
வல்லையோவல்வழக்கெனமாசினான். (௩௧)

முறையெனச்சிலமுற்றினர்மூழ்குவர்
கறையெனச்சிலசத்தினைகாமுறும்
பிறைநுதற்பெருந்தோணலம்பெட்டலாற்
குறையெனக்கிலையின்பங்குறுகுமால். (௩௨)

மாய்ந்தபின்னெனின்வஞ்சவழக்கினால்
வேய்ந்தவெம்மொழிமேவியபேதைநீ
தோய்ந்திடென்றுவலிதிற்றொடக்கியே
காய்ந்தமோகக்கலவியிற்கன்றினான். (௩௩)

ஊறுகாதலிவணலமுற்றிடின்
மாறுகொள்ளுமிவனெனமாசினா
னூறுதந்தைக்குதவியுலந்தபின்
னாறுபூங்குழனன்னலநண்ணினான். (௩௪)

ஒன்றுமின்பமுனக்குதவுற்றவன்
பொன்றினானறும்பூங்குழல்பூமதுத்
துன்றுவெந்தடிதூற்றினந்தோய்ந்தனை
நன்றுவாழ்கெனநண்ணினானொடாறும். (௩௫)

அணங்கனாளுமருவினைத்தீமையா
லுணங்கிடாதுறவாகவொழிவிலா
மணங்கலந்துமகிழுவம்மன்னனார்
கணங்களாலஃதாய்ந்துகவற்றினான். (௩௬)

வேறு.

அப்புரநீக்கிடநீங்கியாயிடை
வெப்புறுகொடுஞ்சுரமேவிமேதினி
வைப்புறுபல்பதிவைகுநாளவர்க்
கொப்புறுபுதல்வருமுபயராயினர். (௩௭)

கொடியவெவ்வடவியிற்கொண்டுபோக்குறும்
படியுறுவேதியர்பலரைமாய்த்தவர்
முடியவப்பொருள்கொடுமுற்றிப்பற்றுயி
ரடியறவதைத்தவையார்ந்தூர்ந்தபின். (௩௮)

உற்றிடுபுதல்வருமுருகுகாதலாற்
பெற்றிடுமனைவியுந்தானும்பேர்ந்துபோய்ச்
சுற்றியநல்வினைத்தொடர்ச்சியால்வினை
யெற்றிடுமறைவனமெய்தினரோ. (௩௯)

வேறு.

வழங்குமாமறைவளரொளிமைந்தர்தாமகிழ
முழங்குமோதையுமுதிர்மறைப்பயன்றருமுறைநூ
றழங்குமோதையுந்தழலவிர்வேள்வியிற்சாற்றுங்
குழங்கொளோசையுமுழவொலிகீழ்ப்படக்குலவும். (௪0)

நான்முகந்துறந்தரும்பொருள்பன்முகநவிற்று
நூன்முகந்தெரியயனனவேதியர்கோன்புந்
தேன்முகந்தனசின்மொழிமங்கையர்தேனிற்
பான்முகந்தனவொழுக்கமும்விழுப்பமும்பண்பும். (௪௧)

தெய்வமாமறைவனமெலிதிருவுருமேவி
வையமேழினும்வளரொளிபரப்பியவனப்பு
மையவாவியமழைமதர்நெடுங்கணாளோடு
மையன்மேவியபெருமையுமாரணவனமும். (௪௨)

கண்டுகண்குளிர்ந்தண்டியீங்குளதெனக்காமங்
கொண்டுவேதயாற்றடைகரைக்குடிசையின்மேவிப்
பண்டுதான்செயும்பயிற்சியிற்பல்வினைபயிற்றி
யுண்டுவாழ்ந்தனனோரிருதிங்களங்குவப்பால். (௪௩)

முடியுநாள்வரமுடிந்தனனங்கவன்முடிநாட்
கொடியவெம்புலிகுடிசையிற்கொன்றிடமனையு
கொடியுமைந்தருமடிந்தனர்மடிதரநொடியிற்
கடியதூதுவர்கலந்தனர்கயிற்றொடுங்காய்வார். (௪௪)

வெங்கனற்படிவங்கொடுவேற்றுயிர்விழுங்கு
மங்கியுட்படுத்தரிந்துவெந்தசையிணையவித்துப்
பங்கிசெய்தடும்படுகுழிக்கும்பியுட்படுத்துச்
சிங்கிசெய்திடப்பற்றுமின்றீயனையென்றே. (சரு)

சுருக்கியங்கவன்கழுத்தினைத்தோட்படுகதையான்
முருக்கியீர்த்திடமுதல்வனுமுக்கணெம்பெருமான்
றிருக்கிளர்ந்தொளிர்மறைவனமேவியசிவனுங்
குருக்குமன்பொடுநின்றதன்றூதருக்குரைப்பான். (சசா)

மதிப்பருங்கொடுந்தீவினையாற்றியேமறலிக்
கதிக்குறுந்துணைகாண்பருங்கயவர்களேனுந்
துதிக்குமம்மறைவனத்திடைத்துறப்பரேலுடல
முதிக்குஞானநம்முண்மையுமுணர்ந்துவீடுறுவார். (சஎ)

நடுவன்றூதுவர்நலந்தருமித்திறநாடார்
கொடுவன்செய்கையினிறந்தகோலாகலற்குமைத்தல்
வடுவன்றென்றறவலிந்தனரவர்தமைமாற்றிக்
கடுவன்கூம்பணிகலநடாய்நம்பதிகாண்மின். (சஅ)

என்றுசால்புரைத்தேவிடவெரிவிரிபசும்பொற்
குன்றுபோலுயர்விமானமுநடவினர்குறுகிக்
கன்றுமுள்ளமுங்கனற்குறுங்குஞ்சிவெங்கடுங்கண்
வன்றிறற்கொடுந்தூதரைக்கூஉயிதுவகுப்பார். (சக)

பரிசவேதியிற்பசும்பொனுமிரும்பெனப்பாவ
மிரியநன்மையுற்றிலங்குகோலாகலனிருந்தோன்
முரியவீக்கியமுரனொழிந்திடுமெனமூரிக்
கரியதூதுவரவர்க்கெதிரின்னனகரைவார். (ருo)

பாதகக்கொடும்பரவையாற்றியவிவன்பாவ
மேதமுற்றிடுமுரைக்கினுமிவற்கிலையென்றுங்
கோதகற்றிடுகொள்கையென்றிகழ்ந்தவர்குறியார்
போதகச்சினம்பூத்தலும்புங்கவன்பூதர். (ருக)

எரிபரந்தவெங்காற்றெனவெருளியோடேகிப்
பரிவுறுஞ்சமன்றூதரைத்தரைமிசைப்பணைத்தோள்
புரிதருங்கரஞ்சிரமறப்பொடித்தவர்புரளா
விரிதரும்படியடர்த்தவரேங்குபுநீங்க. (ருஉ)

ஒடுங்குமெய்ப்புறத்துறும்வடக்கட்டினுலுடைந்து
நடுங்கிநாவுலர்ந்தயர்ந்தகோலாகலனயப்பக்
கடுங்கயிற்றுறுங்கட்டினையவிழ்த்தவன்காதற்
படுங்கதிர்ப்பணிவிமானமீதேற்றினர்பரிவால். (ருங)

அங்கவன்றரும்புதல்வருமனைவியுமழியாப்
புங்கவன்றருவிமானமேற்பொலிந்துடன்புரிவாற்
றங்கவன்பொடுஞ்சார்ந்துவெந்தூதர்பாற்றந்தி
சிங்கவன்கையிற்றீர்த்தெனமறைவனஞ்சேர்ந்தே. (௫௪)

கண்ணுதற்பெருமானடிக்கமலமுன்காட்டப்
புண்ணியப்பொருளாகியபுங்கவர்கோமா
னுண்ணிகழ்த்திடுமுணர்வளித்தொளியுறவியோகம்
பண்ணினர்க்கரும்பதமளித்திடமிகப்பரிந்தான். (௫௫)

ஆற்றுதீவினையளப்பிலவாயினுமமலன்
போற்றுநற்பதிமரித்திடும்புண்ணியப்பொலிவான்
மாற்றிவெவ்வினைமகிழ்ச்சியோடானந்தவளங்கான்
றூற்றிருந்திடும்பதத்திவர்மூவருமுறைந்தார். (௫௬)

முறுகுவெஞ்சினக்கணங்களாற்கரஞ்சிரமுரிந்தே
மறுகியோடியதூதவர்*யமனிவாய்மன்னிக்
குறுகிவாறெடுகுவலயத்துயிரெலாங்குழுமச்
சிறுகுவாயிலிற்சென்றனர்செவ்வியேதெரிவார். (௫௭)

எண்ணகன்றிடுநோய்களுமிருவினைத்திரளுங்
கண்ணகன்றிடுங்கவலையேமுதலியகளையு
மண்ணகன்றிடுமனுமுதனூல்களுமற்றும்
விண்ணகந்தருமுருக்கொடுபேரவைவிளங்க. (௫௮)

கரியமேகமொன்றெரிபசும்பொன்வரைகலந்தாங்
கரிகளாற்றிடுமணைமிசையமரரேத்தெடுப்பப்
புரிவினோடமர்ந்திடுநடுவன்றனைப்போற்றிப்
பரிபவம்படுபரிசெலாம்பகர்ந்தனர்பணிந்தார். (௫௯)

மொழியுமங்கவர்முரணழிசெய்கையுமுன்னு
விழியுமுள்ளமுமெரியெழவெகுண்டுநேர்விழித்தே
பழிகொடுவினைப்பயத்தவற்கிந்நலம்படுமே
லழியுநம்மரசென்றறவழன்றனனறைவான். (௬௦)

பக்கநின்றவச்சித்திரகுத்தனைப்பார்வந்
தொக்கவீங்கிவன்சூழ்ந்திடுநல்வினைத்தொடர்ச்சி
மிக்கதுள்ளதேல்விளம்பெனவிரைவினாராய்ந்து
தக்கதின்றெனத்தழலெனவெழுந்தனன்றருக்கால். (௬௧)

---

* யமனி-யமபுரி.

செங்கண்மேதிமேற்கருமுகிற்றலைமிசைச்சிறந்த
வங்கண்மாநிலமழித்திடுவிடமெனவமர்ந்தே
தங்கணுகியதண்டமும்பாசமுந்தாங்கி
யெங்கணுயகன்முன்னெழின்மறைவனமேய்ந்தான். (சுஉ)

காமமேமுதலறுபகைவேரறக்களைந்து
பூமமாகியபொருளொடுமிரண்டறப்புணர்ந்த
வேமமாதவர்யோகிகளிடர்வினையொழிக்கு
நாமமார்தருகங்கையேமுதலியநதிகள். (சுஙு)

மடல்விரித்தளிமதுத்துளிவளர்த்தநற்றுளவத்
தடன்மிகுத்ததோண்முகுந்தனேயாதியவமரர்
மிடலுடைக்கணவேந்தர்கண்மிடைந்துசூழ்ந்தரற்றுங்
கடலுடைத்தனதோத்திரவேத்தொலிகறங்க. (சுச)

அளிக்குமின்புறுமமுதவெண்ணிலாக்கதிரனைத்துங்
களிக்குமின்சுவையேரெலாமொன்றெனக்கலந்து
தெளிக்குநல்லெழிற்றிருமணக்கோலமார்சிந்தை
யொளிக்குமாமுனிக்குதவியதுலகெலாமுவப்ப. (சுரு)

கண்வழக்கறக்கதிரொளிகான்றிடும்பளிக்குத்
தண்வரைப்புறஞ்சார்பசுங்கொம்பெனச்சாயற்
பெண்ணுருப்பெறும்பெரியவின்புருவமாம்பேதை
யுண்ணிரப்புறுகாதலாற்களித்துளமுருக. (சுசு)

தரித்தெவற்றையுந்தாங்கியசத்தியேமுதற்றீங்
கரித்துளத்தருளாக்கிடுஞ்சத்தியேயளவாய்
விரித்தவாதனமேற்றனதிச்சையால்வினைப்பாற்
றெரித்திடும்பரையாகியதிருவுருவோடும். (சுஎ)

வீற்றிருந்தருள்விமலவானந்தமாய்விளங்கித்
தோற்றமிவ்வுலகனைத்தினுஞ்சுடரொளிதூங்க
வேற்றிலங்கியவிறைவனையெல்லையின்வணங்கிப்
போற்றியேபணிந்தெழுந்தணிப்பின்னரும்போற்றி. (சுஅ)

அலகிறந்தமலமாகியனந்தவானந்தமேயா
யுலகொடுமனமும்வாக்குமொழித்தரீயுலகமாகி
யிலகினைநின்னையல்லாதிவையிலையிருளிற்பாசங்
குலவியவரவுபோலக்குறிக்கொளிற்கோதிலாதோய். (சுகூ)

உண்மையாய்க்கருமைபொன்மையுருவமாயுவக்குமன்பர்க்
கண்மையாய்ச்சேய்மையாகியணுவினுக்கணுவாயாக்கர்
திண்மையாய்ப்பெருமைக்காருந்திருவுமாய்ச்சேர்ந்தவெம்மை
தண்மையாய்முற்றுமாகிச்சராசரத்தலைமைசார்ந்தோய். (எO)

நெறியுறுநிலைமையாகிநிினைவொடுநிலைமைநீங்கிப்
பொறியுறுகரணமுற்றும்புணர்ந்திடாதருவமாகி
யறியுறுமறிவுக்கெட்டாவனந்தவானந்தமாகி
வெறியுறுமிதழிவேய்ந்தவேதநாயகனேபோற்றி. (எக)

உரையொடுமனமும்வாக்குமொழிவுறவொழியாதோங்கிப்
பரையுருவாகியப்பாற்பற்றுறுபரமமாகித்
திரையறுமுததிபோலச்சிற்பராணந்தமாய
விரைதருமிதழிவேய்ந்தவேதநாயகனேபோற்றி. (எஉ)

பெறுமுறையுலகமேவிப்பிறங்கியபொருளுங்காய
முறுமுயிரனைத்துமாய்வுற்றுறுதுகளாகியண்ட
மறுவில்சூனியமாயோர்ச்சிவழக்கறுகாலையாய
வெறுவெளியாகியோங்கும்வேதநாயகனேபோற்றி. (எங)

தோற்றமுமீறுமாதியந்தமுந்துறந்துதோயா
தாற்றியவுலகந்தோற்றியழித்திடுமாடன்மேவிச்
சாற்றியநெறியின்மேயார்தம்முளத்தமுதமாகி
வேற்றியலின்றிமேவும்வேதநாயகனேபோற்றி. (எச)

நின்னளந்தறிந்துபோற்றுநிலைமையெற்குளதேநேமி
மன்னளந்தறியான்பூமேல்வள்ளலும்வகுத்தவாற்றி
னின்னணம்பயின்றேனெல்லாவேதமும்பொறுப்பாயென்றுப்
பொன்னடிபுகழ்ந்துபோற்றிப்புண்ணியனருகுசேர்ந்தே. (எரு)

## வேறு.

* வீசுபாசமுந்தண்டமும்விரும்புமுத்திரையு
மாசிலாமணிதன்முனம்வைத்ததிகார
மாசிலாயினியமையுமேலாக்கமுமழித்துப்
பேசுமாறிலேனெனப்பணிந்தெழுந்திடப்பெரியோன். (எசா)

அஞ்சிநஞ்சினுனடக்கமுமடக்கருஞ்சினமும்
வஞ்சிபங்கினுணர்ந்தவன்மகிழ்வுறநோக்கிக்
குஞ்சிமேலுனதாணையேகொண்டவரல்லா
லெஞ்சிறுரெவருரையெனவியம்பலுமியமன். (எஎ)

பணித்தநாண்முதற்பல்லுயிரனைத்துமென்பாசம்
பிணித்ததல்லதுமற்றதன்றொழில்பிறழ்ந்திலதா
லணித்தநாளினிலயர்ந்தகோலாகலனுவி
குணித்துவந்தவரேவியதூதுவர்கொள்வான். (எஅ)

* காலபாசத்தையும் காலதண்டத்தையும் விரும்பப்படும் முத்திரைக் கோலையும்.

அடுத்ததூதரையடர்த்தவனூர்வமோடமர
விடுத்தவேட்கையர்மேவரும்பதத்தினில்விடுத்தார்
கடுத்தவாறிதுகனவிலுநல்வினைகருதான்
றொடுத்ததீவினைசொல்லளவல்லவாற்றாயோய். (எகூ)

ஈட்டுதீவினையெண்ணிலவியற்றியாற்கின்பங்
கூட்டுமேயெனிற்குவலயத்தருமறைக்குறியாற்
காட்டுமாமகமருந்தவங்காமமேமுதல
மாட்டுநல்லறந்தானமென்றிவற்றையார்மதிப்பார். (அ0)

நன்மையாற்றினர்தீயவரென்றியானடாத்துஞ்
சொன்மைமாண்டதுசுருதியாற்றிருவழித்துணியுந்
தன்மையின்றியேதாங்கருதியநெறிதாழும்
புன்மைபூண்டதுபுவியெனவுவர்ப்புறப்புகன்றான். (அக)

வேறு.

கூற்றுவனிவ்வணங்குறிப்பிற்கூறலு
நாற்றடக்தோளுடைநம்பனன்றெனாச்
சாற்றுகோலாகலன்சமைத்ததீமையாற்
சேற்றுறுகும்பியேதிளைப்பனாயினும். (அஉ)

பருமையினால்பலபயிற்றும்பான்மையே
தருமநீயறிதிநந்தழைத்தநல்லற
மருமையினுண்மையாமறிதலன்னதா
லிருமையுமுறுமெவரெய்தற்பாலரே. (அங)

வையமேற்சிவபுரமானமாநில
முய்யநம்பதிபலவோங்குமாங்கவை
வெய்யதீவினையவர்விழைவின்மேவினு
மையமினம்பதமளிக்குமுண்மையே. (அச)

காதலற்றவர்வினைக்கயவராயினு
மேதமினம்பதிவிறப்பராயிடிற்
போதவிழ்புதுமதுப்பொழிந்துபொன்னிறத்
தாதவிழ்நம்பதஞ்சார்வர்திண்ணமே. (அரு)

சேர்ந்தகோலாகலன்றீமையாவையு
மார்ந்தநம்மறைவனத்தலங்குதீர்த்தமேல்
வார்ந்தொளிர்காற்றினான்மாற்றிமாய்வினு
லார்ந்தனன்விமானமேலுறுதியெய்தினன். (அசு)

உரைத்தனயாவையுமுள்ளங்கொண்டுநீர்த்
தரைத்தலைநம்பதிதங்கினுர் * கணத்
தரைத்துணையாயினுமவரைவெளவியே
குரைத்தடல்செய்திடுங்கொள்கைமாற்றியே. (அஎ)

பாசமுந்தண்டமும்பரித்துப்பல்லுயிர்
நேசமொடுன்ருழினிகழ்த்துவாயென
மூசளிபரிவுறுமுளரிநாண்மல
ரீசனதடிமுடியிறைஞ்சியேத்தியே. (அஅ)

பரந்துலகனைத்துமுட்படுத்துப்பாற்பட
நிரந்தபேருணர்வெலாநினதுநீடிரு
டுரந்துநீயளித்தவத்துணையதேயெமக்
கரந்தையேம்பிழைபொறுத்தளித்தியென்னவே. (அகூ)

வீழ்ந்தடித்தாமரைவிரும்பிமெய்யுறத்
தாழ்ந்துபின்னரனருடலையிற்ருங்கியே
சூழ்ந்தெழுந்தூதவரோடுந்தோமற
வாழ்ந்தனனென்றுபோய்யமனிவைகினுன். (கூ0)

வேறு.

இனையநற்கதையீசனிலங்குதோட்
புனைதுழாயவற்கோதியபோற்றியே
நினையவெவ்வினைநீக்கிநிழற்றுசீர்
வனையுமாலுலகேற்றிடுமாட்சியால். (கூக)

ஆதிசேதுவளக்கரினுடியே
போதியானிப்புதுமைபுலங்கொளாக்
கோதிலானந்தமேவிக்குலாயது
நீதியாயறியென்றனனீர்மையால். (கூஉ)

வேறு.

இறும்பூதுபலதருமிப்பதிபோலவியனுலகத்தில்லைவல்லே
வறும்போதுகழித்தியலும்வல்வினையாலுளங்கருகிவாடல்வேண்டா
நறும்போதுகமழ்வேதவனமருவிக்கணமேனுநயப்பிருவி
தெறும்போதுபெறற்கரியசிவபதமாம்பேரின்பந்திளைக்கலாமே. (கூரு)

பெற்றிடுநல்வினையுடையேம்பெருகியதீவினையுடையேமென்றுபேதம்
பற்றிடுமின்களிதுயரப்பான்மையொரீஇவேதவனம்பரிவீராயிற்
சுற்றியதீவினையினெடுந்தொடக்கறுத்துப்பவநீக்கிச்சுருதிமீதா
மற்றிணையில்பதமளித்துவாழ்விக்கும்வேதவனவள்ளன்மாதோ. (கூச)

---

* கணத்தரைத்துணையாயினும்-அரைக்கணமளவாயினும்.

வேறு.

மதிநிலைவுறவெருவருவினைமறைசையின்மடிவாமேற்
புதியனபழையனவருவினைமடிவனபொருளாமே
யதிர்கடலுலகினிலிதுநிகர்பதியிலையடல்வேலோய்
பதியிலைதருமறைவனமெனமனனொடுபணிவாயே. (கரு)

நாரத * னிருள்வலிவழிவருநரபதிநலமேவப்
பாரதியுரைசெயுமதன்வழிபழமொழிபகர்சூத
னாரணவொலிதருமேரணிகைமிசமதின்மேவுஞ்
சீரணிமுனிவரர்க்கோதினன்வரன்முறைதெளிவாக. (கசு)

கோலாகலச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,0டுரு.

---

# குளகேசச்சருக்கம்.

சொல்லும்பொருளுஞ்சுவையாயமுதம்
புல்லும்பொருளாசைபுகுத்தலினு
லல்லும்பகலும்மொழியாதரவே
செல்லும்முரையாய்தெளிதேசிகனே. (க)

இளமாமழையீர்ம்பொழில்வேதவனங்
குளகேசனுறுஞ்செயல்கூறுகெனு
வுளமார்தரவோதினனென்னலர்தங்
கிளர்மாமுடிசிந்தியகேசரியே. (உ)

குழைவாலரசோதியகோதறுசொற்
பிழையாதருமாமுனிபேசினனுல்
விழைவாயுயர்விண்ணொடுமண்ணகமுந்
தழைவாயுற † வாதிதரித்திடுநாள். (ந)

வஞ்சத்துயர்தானவர்வானவரு
நெஞ்சொத்தொருபாயநினைந்தனரா
லஞ்சத்‡திரையாதியமர்ந்துறுமே
லெஞ்சற்றயர்மானுடர்யாமெனவே. (ச)

---

* இருள்வலி-சூரியன். † ஆதிதரித்திடுநாள்-ஆதியிலேதங்குங்காலத்து. ‡ திரை, நரை, சாக்காடு, பசி முதலியன எம்மிடத்துளவாயின், யாங் குறைந்தயருமானுடகதியினரென்று.

பாலாழிகடைந்து*பணித்திடவே
மேலாமமுதெய்திவிழைந்தனமே
லேலாவிவையென்றெழுமந்தரநட்
டோலாவலோசோவெனவுய்த்தனரே. (ரு)

வேறு.

துளையெயிற்றரவுநாண்கொளுவித்தோள்களா
லுளைவுறத்தானவரமரரொட்டியே
களைதரக்கடைதலுங்கலங்கியோலமிட்
† டளைதரத்தாழியினுழியாயதே. (சா)

அலைகடல்வயிறுளைந்தரற்றியான்றபான்
முலையணிசுரபியைமுன்னமீன்றுபின்
மலைகருவிழியிணைமதர்த்த‡வாருணி
யிலைமலிதருவிணையீன்றதென்பவே. (எ)

ஆரெழில்வனமுலையமுதச்சாயலா
ரேர்மலியரம்பையர்தம்மையீன்றுபின்
வார்கதிரொழுகியமதுரவாய்மது
நீர்தருபிறையிணைநிமலற்கீந்ததே. (அ)

வெண்டுகிலிடையினின்விளங்கத்§தேவர்தம்
பண்டிதற்பயந்தபின்பல்லநாள்செல
வுண்டுலகனைத்தையுமுருக்குமொள்ளழல்
விண்டெனக்கொடுவிடம்விரிந்துதோன்றியே. (கூ)

பாற்கடன்முழுவதும்பருவவெண்மதி
மேற்கதிர்விழுங்கிருள்வேகவெம்பணி
போற்கவர்ந்தடர்களிற்றினத்திற்புங்கவர்
தோற்கருந்தானவர்த்தொடர்ந்துசுற்றவே. (க0)

மான்முகத்துறவவன்மயங்கிவார்கதிர்ப்
பான்முகக்கயிலையிற்படர்ந்துபற்றலுந்
தேன்முகத்தொழுகியதிங்கட்டேவர்தங்
கோன்முகப்பரிதியிற்குலவுங்குன்றமே. (கக)

---

* பணித்தல்-கொடுத்தல். † பாற்கடல் தயிரைத்தரிக்குஞ் சாடியைப் போலாயிற்றென்க. ‡ வாருணிதேவியையும்,பாரிசாதமென்னுந் தருவையும் ஈன்றதென்க. வாருணி - இலகரிவஸ்துக்களின் அதிதேவதை. § தேவர்தம் பண்டிதன் என்றது தேவவைத்தியனாகிய தன்வந்திரியை.

மணிமுடியுடைதரவெறியும்வார்பிரம்
பணிதருதேவினதருளினுங்கவர்
பணிதருகோயிலுட்பரமன்பாதமே
லணியெனமணிமுடியமைத்துக்கூறுவார். (கஉ)

ஊழியினெமையொருங்குண்ணவெண்ணியே
யாழியினெடுங்கடுவடர்த்ததென்றலும்
பாழியினதுகரப்பதுமத்தாக்கியே
பூழியினயின்றனன்புவனம்பூப்பவே. (கஙு)

கடுவயின்றன்னதுகளத்திருக்கியே
வடுவறுதேவரைவருத்தமாற்றிநீர்
தொடுகடற்கடைந்திடற்கேன்றுமின்னரூ
துடுபெதிசகத்திரவுருவினென்றிட. (கச)

விடைகொடுபுங்கவர்மேவிவேலையைக்
கடைதலுமலையடிகலந்துபாதல
மிடைதலுமனைவரும்வெருவிச்செய்கையற்
றுடைதலுமால்கடலூடுபோகியே. (கரு)

கருமுரட்புறமுறுகமடமாகியே
வெருவறமந்தரம்வெரிநிற்றாங்கியே
மருவினன்முன்பெனவைப்பவாசுகி
தெருமரக்கடைந்தனர்திரண்டதோள்களால். (கசா)

ஓலமிட்டலைகடலுமிழ * மார்ச்சனி
நாலமுற்கலதியுநஞ்சிற்றேன்றினுள்
பாலியற்குஞ்சரத்தோடுபாய்கதிர்
வாலியகவுத்துவமணியும்வந்ததே. (கஎ)

கரிபரியிந்திரன்கவரக்கால்கதிர்
விரிமணிக்கவுத்துவம்விண்டுவேய்ந்தனன்
பரிபுரமிழற்றியபாதபங்கயத்
தரிமதர்மழைக்கணேரமுதச்சாயலாள். (கஅ)

பொறிச்சுணங்கரும்பியபொம்மல்வெம்முலை
யெறித்தசெங்கதிர்ப்பணியேய்ந்துதாமரை
வெறித்தடமலர்மகண்மேவிமாலுரங்
குறித்தனளமர்ந்தனள்குலவுங்காலையே. (கக)

---

* கலதியும் மார்ச்சனி கையிற்றூங்க மேற்றேன்றிய கஞ்சுபோலத்
தோன்றினுளென்க. கலதி-மூதேவி. மார்ச்சனி-துடைப்பம்.

சுடர்விரித்தாரமுதொளிருஞ்சோதியா
யிடர்கெடத்தோற்றலுமமரரேந்தியே
படர்தருகளியொடும்பரவிப்பைந்துழா
யடர்முகின்முனமமைத்தன்பிற்போற்றலும். (உ0)

நறுமலர்த்தாமரைநாபனடியே
* யிறுகுறச்செறிதருமினியதெள்ளமு
தறுமணித்தசும்பினுளுறுத்தியூர்தரப்
பெறுமமுதிளகியவமுதம்பெட்பவே. (உக)

† விண்ணவர்மகிழ்வுறவருத்திவிஞ்சிய
தண்ணமுதினையுமோர்தசும்பினுக்கியே
யெண்ணமர்வாயுவையிவற்றையிந்திரன்
கண்ணமராவதிக்காவல்செய்கென. (உஉ)

புங்கவரீந்தருள்புனிதப்பொற்கட
மங்கையினேந்தியவ்வனிலனேகியே
கொங்கணிமறைவனங்குறுகப்பொற்குடம்
பங்கமுற் ‡ றொன்றுசெம்பாரில்வீழ்ந்ததே. (உ௩)

வீழ்ந்துடைந்திறுகியவமுதம்விற்புறஞ்
சூழ்ந்தொளிரிலிங்கமாய்த்தோன்றவானவர்
வாழ்ந்திடற்கேதுவாமிதனைமாற்றினேன்
றாழ்ந்தனரெனினெனுமென்றுசாம்பியே. (உ௪)

கையறுதுயரொடுங்கலங்குகாலையாங்
குய்வகைநாடியவும்பர்மான்முதற்
றெய்வநாயகனுறைமறைசைசேர்ந்துகா
ணைவதுகண்டுளநடுங்கினார்களே. (உ௫)

இறையவர்நடுக்கமுமிலிங்கத்துண்மையுங்
கறையறவுணர்ந்துமால்காற்றைநோக்கியே
குறையுறவருந்தனீயென்றுகோளொடு
மிறையுறுவானவர்விளங்கக்கூறுவான். (உ௬)

---

* அமுதம் இறுகியும், இறுகாதும் இருதிறனாகத் தோன்றிற்றென்பது தாற்பரியம். † இளகிய அமுதைத் தேவர்க்கருத்தி, அதில் விஞ்சியதை ஓர்குடத்தும், இறுகிய அமுதை மற்றோர்குடத்தும் அமைத்து, அவ்விரு குடங்களையும் வாயுவை அமராவதியிற் கொடுசென்று வைத்துக் காக்க என்று கூற என்பது கருத்து. ‡ ஈண்டு ஒன்றென்றது இறுகிய அமுது வைத்த குடத்தை.

சாற்றின்மேற்கடுஞ்சினஞ்கதுவக்காய்தலை
மாற்றுமினன்னவன்மடமையாற்கடம்
வீற்றுறமேவியதன்றுவீறுசா
லேற்றுடையிறைவனாலெய்திற்றாகுமே. (உஎ)

இடங்கரிற்கடினமுற்றிறுகுமின்னமு
தடங்கலுந்திரண்டொளியாகுமிக்குறி
முடங்கிளரிளமதிமுகிழ்த்தசெஞ்சடைப்
படங்கிளரரவணிப்பரமமாகுமே. (உஅ)

ஊறுமின்னமுதமக்குளுற்றுங்காரியந்
தேறுமிச்சிவகுறிதிருவினல்குமான்
மாறுகொண்டழிவதைமாற்றிமல்கிய
பேறுதவாலயம்பேணுமென்னவே. (உகூ)

துளவணிகரியமால்சொற்றநன்மொழிக்
குளமகிழ்வெய்தியவும்பரோங்கிய
வளமலிசினகரம்வள்ளற்காற்றுவா
னளவறிதச்சனையழைத்துச்செய்கென. (௩0)

காய்ந்தபொன்காசொடுகலந்துகாமுற
வேய்ந்தொளிமிளிர்தரவிரைவினாற்றலு
மாய்ந்தநூல்விதிவழியமரர்பூசனை
வாய்ந்துறவியற்றினார்மலிந்தபேற்றினார். (௩க)

குழைதருமன்பொடுகுளிர்ந்தபூசனை
மழைவளர்கண்டனுக்கியற்றிவானவ
ரிழைவளர்வனமுலையிமயமென்கொடி
யுழைவளர்குன்றினையுவந்துபோற்றுவார். (௩உ)

வேறு.

புனிதவாரமுதிற்றோன்றும்புராதனபோற்றிபோற்றி
வனிதையோடமலமாகிமகிழ்ந்திடும்வள்ளல்போற்றி
தனிதருமுதலதாகிச்சராசரமாகித்தாமம்
பனிதருதிங்கள்வேய்ந்தபரஞ்சுடர்போற்றிபோற்றி. (௩௩)

ஆனந்தவுருவமாகியமலமாயறிவுமாகி
வானந்தமாயவெல்லாவுலகுமாய்மதித்தலோடுந்
தானந்தமின்றிச்சத்தாய்த்தற்பரந்தானாயின்ப
மோனந்தநிலைமையாகுமுதல்வனேபோற்றிபோற்றி. (௩௪)

அயன்முதலாயதேவர்க்கவ்வவர்துறைகளாற்றிப்
பயனுறவளித்துக்காக்கும்பகவனேபோற்றிபாச
மயமறுத்துணர்த்தயோகர்மனத்துளாய்போற்றிவாய்ந்த
செயன்முதலாவிக்கிந்தேதெளிவருள்செல்வபோற்றி. (௩௫)

எனத்தொழுதிறைஞ்சலோடுமிருள்கிழித்திலங்குஞ்சோதிக்
கனப்பசுங்குன்றம்போலக்கடவுளர்முன்னர்த்தோன்ற
மனத்துறுகவலைநீங்கிமண்மிசைப்பணிந்துபோற்று
மினப்பெருங்கிளையைநோக்கியெம்பிரானியம்பலுற்றான். (௩௬)

* ஆரமுதேசனென்றேயகிலமும்பரவிப்போற்ற
வோர்தரவமலமாயவுருத்திரகோடிமேவிச்
சீர்பெறவுறைவமிங்கியாஞ்செறிதலாற்சிறந்தவிப்பார்
கூர்தருபோதமிக்கீருருத்திரகோடியாமே. (௩௭)

கோடியினுதிமூழ்கியுருத்திரகோடியாய
பாடியினுறையுமெம்மைப்பணிந்திடிற்படியாதாகி
வாடியவினைகள்வீட்டிவாழ்வருள்போகமூட்டி
நீடியவீடுகாட்டிநிகழ்த்துதுநீவிர்கேட்டிர். (௩௮)

பூந்துணர்த்தருவினீழற்பொலிகுவீர்பூசையாலுந்
தேந்துளிசிதறுமின்சொற்றுதியினுஞ்சிந்தையார்வ
மேய்ந்தனம்வரங்கள்வேண்டுமென்றிடவமரர்பூமேன்
மாந்தரின்னலரகளாதிவந்துருதளித்திமற்றும். (௩௯)

வெந்திறலவுணர்க்கஞ்சிவீடுதன்மாற்றிநின்பாள்
முந்தியவன்புதந்திங்காளெனமுறையிற்போற்ற
நந்தியெம்பெருமானச்சநரைதிரைசாவுநாடா
திந்தியமகிழ்ச்சிமேவுமெனவுரைத்தேகினானே. (௪௦)

மறைதருஞ்சுடரைப்போற்றிவானவர்வானமுற்றார்
நிறைதருமன்பிற்போற்றிநெடியவனிலையிற்சேர்ந்தா
னறைதருமமுதவீசனடியிணைபணிந்தோரார்வ
முறைதரமாடுசூழ்ந்தோருவந்தனவுதவினோரும். (௪௧)

பணிபலவியற்றினோரும்பன்மலர்சாந்தம்பாலா
னணிதுகில்விளக்கமன்னமளித்தவரங்கணன்னந்
தணிவறப்பசித்தார்க்கீந்தோரந்தணர்தழையச்செய்தோர்
பிணியறச்செல்வமேவிப்பிறங்கியமுத்திசேர்வார். (௪௨)

---

* அமுதகடேசர் என்று. கடம்-குடம்.

இன்னமுதுருவமாகுமிக்கதையிரவிபோலத்
தன்னகவிருளையீர்ந்துதயங்கொளிதழையவாற்றிப்
பன்னலமளிக்குமென்னப்பரம்பரன்குளகநாம
மன்னியவாறுநீயேவழங்கெனவகுத்துச்சொல்வான். (சங)

கழிந்ததோர்காலந்தன்னிற்கரைபொருதிரங்கும்பூநீர்
வழிந்தெழுதரங்கமேயநருமதைவளருங்கூலம்
மொழிந்தொளிர்வேதமாதிமுனிவறப்பயின்றுமோக
மொழிந்தவன்சுவேதனென்பானுயர்தவத்துருவமானான். (சச)

அருந்ததியனையகற்பினவன்மனைக்கிழத்திநாமந்
திருந்தியசுசீலையாகுந்திருவினுமுருவமிக்கா
டருந்திருமைந்தன்சீலந்தவம்பொறைசால்புகல்வி
பொருந்தியகுளகனென்பான்புண்ணியம்பூத்தநீரான். (சரு)

மூவருந் * தூவலாற்றங்கரைமிசைமுப்பலுநோன்பிற்
றேவருமுவப்பவைகிச்செறிந்தனர்செல்லுங்காலம்
பூவருமாரிகுன்றியத்தலைபொலிவுமாற
யாவருமங்கணுள்ளாரிடைந்துதென்றிசையினேக. (சசா)

சொற்றருசுவேதன்றானுந்†குறுமுனிதுயரநீங்கிப்
பற்றுமாச்சிரமந்தன்னிற்பைந்தொடிபாலன்மற்று
‡நற்றவரோடுமேவிநடுவுறுநகரந்தேசம்
பற்றறப்போகிவேதவனத்தினைப்பணிந்துபோற்றி. (சஎ)

முனிவனாச்சிரமமேவிமொழிதமிழ்முனியைப்போற்றக்
கனியொடுமிருக்கைநல்கிக்காய்கிழங்காதியாய
வினியனபலவுநல்கியிருடிகட்கியைபினாற்ற
நனிபலகாலம்வேதநாதனைப்போற்றிவாழ்ந்தார். (சஅ)

அருந்தவச்சுவேதன்றானுமமுதமாமிலிங்கமேவிப்
பொருந்தியதலத்துமைந்தன்பூங்குழற்பூவையோடு
மிருந்தவர்சூழமேவியிறைவனைப்போற்றிமாற்றி
வருந்தறநெடுநாண்மேவிமகிழ்வொடுவைகுநாளில். (சகூ)

தோன்றலாங்குளகனோர்நாட்சுதைபதிந்துருவச்சோதி
யீன்றொளிரிலிங்கமாயவிறையுளமுவப்பவெண்ணிச்
சான்றதாய்நிறைந்தசோதிதன்னையேயுளத்துளாக்கி
யான்றபூசனையேசெய்தானாற்றியவகைவுஞ்சொல்வாம். (ருo)

---

* தூவலாற்றங்கரைமிசை - தூவலையுடைய நருமதாநதிதீரத்தில். † குறுமுனிதுயரநீங்கிப்பற்றுமாச்சிரமம் - அகத்தியான்பள்ளி. ‡ நற்றவர் பதினாயிரவர் என முதனூலிற் கூறப்பட்டது.

மருத்தினையொடுக்கியோகவல்லவர்முனிவர்வானோர்
கருத்தினையடக்கியோடுங்கவற்சியற்றுளத்துப்பூசை
திருத்துதலரியதாகுஞ்சிவனருட்செய்கையார்க்கே
குருத்திடுமுணர்வுகூடுங்கோதறுமின்பமாமே. (௫௧)

வேறு.

இலவெனவிலகியொளிதருகயிலைநிழலரியணை, யதன்*பீடங்
குலவியகமட, மலர்தலையுலகுகொளும்படைவிகள்பாத்திரமா,
இலகியயமுனைகாவிரிமதியமியல்பிரயாகையென்றிவையோர்
கலவியவுதகமருக்கியமுதல, கங்கையம்புனலபிடேகம். (௫௨)

புனை†துகிலாரமெனவிரிதிசையும்பொலியவாகாயநீணதியு,
நனைதருமலருமுடுநிரை, மதியநலமிகுசந்தன, நகையார்
வனையணியிரவிபதின்மரோடுருவர், வாசுகிமார்பணிநூலுங்,
கனைதருகடகமுதலியபணிகள்கலையணலரவமற்றையவே. (௫௩)

மேகமேதூபந், தீபமேகிரகம், விரிதருநதிக‡ணீராசம்,
வேகமார்வாயுவிலகியதாலவிருந்தமேசாமரை,வேள்வி
யாகமார்வன்னி, கடல்களேயான்பா, லன்னமிரேழுலகனைத்துந்,
தாகமார்கறியுமோடகிமுதலதருவெலாந், குலாசலமபூபம். (௫௪)

§ பக்கமார்வரைகணறுங்குளங், ககனம்படரொளியாடி, தாம்பூல
மிக்கமாமணிக,ளொழிந்தனவெவையும்வேண்டியபொருள்களுக்கொண்டு
தக்கமாபூசைசமைத்தனனுளந்தகவுறுபூசையாற்றியபின்
னக்கணைத்தொழுதுநயந்தவன்பாதநலமலிதுதிபலநவில்வான். (௫௫)

வேறு.

பாற்கடற்பிறந்தவமுதுருவாயபகவனேபல்லுயிர்க்கரசே
நூற்கடனுணித்துநுணங்கியகேள்விநோற்றவராற்றல்சால்கொள்கை
மேற்கடனுயவீடருள்வேதவிழுச்சிரத்தமுத்துமாமணியே
மாற்கடனேமிவழங்கியவாழ்வேவஞ்சியனேனறியுமாறருளே. (௫௬)

வழிபடுகுழவியழிதரவெதிருமறலினைமறலிவாயுதிரம்
பொழிவுறவிழிகள்சுழல்செயவலரும்புதுமலர் ◐ நொதுமல்சேரடியாய்
பழிதருகுழியினிழிவுறுபிறவிபடர்மிடியிடருறுகடல்வாய்
யுழிதரல்கழியவழிதரல்நினையாயுனையலானினையுமாறிலனே. (௫௭)

---

* பீடம்-பத்திரபீடம். பாத்திரம்-பூசைப்பாத்திரம். மதியம்-சந்திரபாகை. † துகிலும் முத்துமாலையும் முறையே திக்கும் ஆகாயகங்கையும் என்க. ‡ நீராசம்-நீராஞ்சனம்; ஆலாத்தி. யாகங்கள்-நித்தியாக்கினி. § குலாசலங்களின் பக்கமலைகளாகிய பரியந்தபருப்பதங்கள் வெல்லம். ◐ நொதுமல்-நொய்ம்மை, பற்றிகவின்மை.

வேறு.

ஆதிநாயகனேபோற்றியமலனேபோற்றியானின்
பூதியார்புனிதாபோற்றிபுராதனபோற்றிபோற்றி
சோதியாயகண்டமாயதோற்றமாய்த்துறவாவின்பக்
கோதிலாவமுதேபோற்றிகுளகனேபோற்றிபோற்றி. (ருஅ)

இனையனபரவிப்போற்றவினியவாரமுதமூர்த்தி
கனைசுடர்க்கற்றைகான்றகதிருலகனைத்துமூழ்கத்
தினைவெதிர்நிற்றலோடுஞ்சுருதிநாயகனைப்போற்றி
வனைதருகண்ணீர்வாரவார்மயிர்ப்புளகம்போர்ப்ப. (ருக)

என்புநைந்துருகிச்செய்கைமறந்தெழுந்திறையோன்முன்ன
மன்பிறுனிருத்தஞ்செய்யவங்கையாற்றமுவியார்வ
முன்புறநோக்கிவேண்டும்வரந்தரமொழிதியென்ன
நின்பதத்தன்புநீங்காதருளெனநிகழ்த்திப்பின்னும். (சு0)

அடியனேன்பெட்டிரீயமர்ந்திடவேண்டுமார்வங்
கடியுமென்றந்தையாயெங்காதலர்கலந்துமேவும்
படியெலாம்வறுமைதீர்ந்துபயன்றரவளிப்பாயென்று
முடியினுற்பணியநல்கிக்கரந்தனன்முழுதுமானோன். (சுக)

அந்தநாண்முதலதாகக்குளகனென்றறையுநாமம்
வந்ததாற்குளகன்றானுமலரடிவணங்கிப்போற்றித்
தந்தைதாய்சூழ்ந்தமேலோர்தம்மொடுமங்கண்மேவிச்
சிந்தையார்வறுமைதீர்ந்துசிவனருள்சேர்ந்தானன்றே. (சுஉ)

முரிதிரைக்கோடிமேயமுன்னவன்றோற்றநாமம்
பெரிதுறப்பெற்றவாறுபேசினமிச்சீர்கேட்போர்
விரிதரச்சொல்வோர்யாரும்வெவ்வினைவீட்டியின்பம்
புரிதருமுத்தியெய்வார்புனிதாரய்ப்புவியின்வாய்வார். (சுங)

வேறு.

இளகேசிலிரும்புறவேர்மலருங்
குளகேசனிருங்கதைகொண்டுணர்வார்
பளகேசரிபான்மையராயமர்வா
ரளகேசனெனப்பரனாருருளே. (சுச)

குளகேசச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,ககக.

---

# சபைச்சருக்கம்.

மழைவளர்தடக்கைவிழையுமாந்தாதாமறைமுனிநிறைமொழிகேட்டுக்
குழைதருமுளத்தோடறவநீமுன்னங்கூறினைகொழுஞ்சுவைநறுந்தேன்
கழைவளர்சாரன்மறைவனத்தமர்ந்துகதிதருஞ்சபைபலவென்றே
தழைதரவவற்றின்றன்மையுஞ்சேய்மைதன்னையுஞ்சாற்றுதியென்ன. (க)

எல்லையில்கதியும்வல்லையேயருளுமெண்ணிருசபைதரும்பயனு
நல்லைநீகேட்டியல்லைவேர்மாட்டிநலந்தருபயனெலாங்காட்டி
முல்லைசூழ்வேலிபுல்லுமாமறைசைமுழுமுதற்றெழுதருமன்பை
யொல்லையேநாட்டிச்செல்வமாவீட்டினுய்த்திடுமெனவுரையூட்டும். (உ)

† வளங்கெழுதில்லைவனச்சபைமேல்பான்மற்றதன்பின்னர்மாசபையாங்
களங்கொளுமுலோகதருமிணிசபைபின்கலந்திடும்பஞ்சயோசனையின்
விளங்கியகோணகும்பமென்பெயரான்மேவியதீர்த்தமற்றதன்கண்
ணுளங்கொளுமுமையோடுறைந்திடுமீசன்யோசனையிரண்டரையதன்மேல்

வேறு.

‡ கன்னகுச்சநான்காவதாங்கதழ்கதிர்த்திக்கின்
மன்னியுற்றிடுஞ்சங்கரன்மற்றதன்கீழ்பாற்
றுன்னுமத்திசுவேதவனப்பெயர்ச்சபையாம்
பன்னுபஞ்சமமற்றதற்கியோசனைபாங்கின். (ச)

வடதிசைப் § புரிகாளியாமற்றதன்கீழ்பாற்
கடலயற்பிரவேசனியங்கதிற்களத்து
விடமடக்கியமதிச்சடைவிமலன்வீற்றிருந்தே
யிடரகற்றுவன்மற்றதேழாவதாமியம்பின். (ரு)

---

† முதலாவது சபை தில்லைச்சபை; மேல்பாகத்தில்; இது ரகசியம். இரண்டாவது சபை கீழ்பாகத்தில் மகாசபையாம். இது சிற்றம்பலம். மூன்றுவது சபை உலோகதருமிணிசபையாம். இது கும்பகோணம். ‡ நான்காவது சபை கன்னகுச்சசபை. இதற்குத் தக்ஷ சபை எனவும் பெயர். இது திருப்பறியல். ஐந்தாவது சபை சுவேதவனசபை. இது திருவெண்காடு. இதை வழிபட்டுய்ந்தது அத்தியாகலின், அத்திசுவேத வனசபை என்றார். § காளிபுரி என மாறுக. ஆறுவது சபை காளிபுர சபை. இது திருவாலங்காடு. ஏழாவதுசபை பிரவேசனிசபை. இது, காவேரி சமுத்திரத்தோடுபிரவேசனஞ் செய்வது எனப்பொருள்படுதலாற், காவிரிப்பூம் பட்டினமென்பர். பிரவேசனம்-வாயில், பிரவேசித்தல்.

இங்கிதற்கயற்றக்கிணைத்திலங்கிய* காம
னங்கநாசனியட்டமியாஞ்சபைநவமி
துங்கமார்தருகாலநாசனிநமன்றலைய
வெங்கணாயகனடர்த்திடவிலங்கியவிடனே. (௬)

காலியோசனையசத்திதன்காறிசைகலந்த
பாலிரண்டரையோசனைப்† பாவநாசனியாம்
வாலிதாஞ்சபைதசமியாமற்றதின்வயங்குஞ்
சூலியாழியுந்தரித்தெலாந்தானெனச்சுடரும். (௭)

அச்சபைக்குமேற்கருகினிற்§சுகிர்தயதான
முச்சரித்திடிற்றீவினையொழித்திடுமுமைகோ
னச்சியங்கதிணகர்வேட்டுவர்விலங்கோடு
நிச்சமாவிளையாடியேசிவையொடுநிலையும். (௮)

சொற்றவச்சபைத்தக்கிணக்கீழ்த்திசைத்துணிவே
பற்றியோசனைமூன்றரைப்பாங்கினிற்பரிவா
லுற்றசேடனதருச்சை‡காரோணமென்றோங்கு
மற்றதன்கணேயிலிங்கமாய்வரந்தரும்வரதன். (௯)

பாசமுத்தலைச்சூலமும்பரித்தனன்பணித்தோ
ராசகற்றியேசித்திகளனைத்தையுமளிக்கு
மூசுமங்கதன்றக்கிணமூன்றியோசனையிற்
பேசவேதவனப்பெயர்த்○தீர்த்தமேபிறங்கும். (௧௦)

---

* எட்டாவதுசபை காமாங்கநாசனிசபை. இதற்குச் சம்புவிநோதசபை எனவும்பெயர். இது திருக்குறுக்கை. ஒன்பதாவதுசபை காலநாசனிசபை. இது திருக்கடவூர். † பத்தாவதுசபை பாவநாசனிசபை. இது துர்க்கிருதநாசனிசபை எனவும் பெயர்பெறும். இது திருவிற்குடி. சூலத்தையுடைய சிவபிரான் சக்கரத்தையுந் தரித்தது. § இச்சுகிர்தயதானத்துக்குச் சுப்பிரமமெனவும் பெயர். இத்தானத்திலே சிவபிரான் உமாசமேதராய்ச் சிவகணநாதர்களோடும், வேட்டுவர்களோடும், விலங்குகளோடும் விளையாடி வீற்றிருப்பர். ‡ பதினொராவது சபை காயாரோகணசபை. இது திருநாகை. இங்கேபுண்டரீகமாமுனிவரைச் சுவாமி ஐக்கியஞ்செய்துகொண்டமையால், இதற்குக்காயாரோகணம் எனப் பெயராயிற்று. காயம்-மேனி. ஆரோகணம்-ஏறுதல். காயாரோகணம் காரோணம் என மரீஇயிற்று. சிவபெருமான் தம்மோடு பிரமவிஷ்ணுக்கள் இருவரையும் சேர்த்துக்கொண்டு மும்மூர்த்திவடிவாயிருத்தலின், இப்பெயர்பெற்றதென்றலுமாம். ○ தீர்த்தம்-பரிசுத்தம். அஃதீண்டாகுபெயராய்ச் சபையையுணர்த்திற்று.

இலங்குமிச்சபைபன்னிரண்டாவதாமிதன்பா
லுலங்கொடோளிராவணனற*மெம்மிடத்துணர்ந்தா
னலங்குமிங்கிதன்வாயுதிக் †சருத்தமுமிரண்டும்
விலங்கியோசனையகத்ததோர்மேன்மைசாதீர்த்தம். (கக)

அதிதியங்கறலிடைத்தவமாதரித்தடியார்
கதியதாம்பரம்பரன்றனைக்கதிர்க்குழாந்திரண்டாங்
கெதிர்தரும்படிபுனலிடையெழுதரவெதிர்ந்தே
முதிருமன்பினுன்முன்னியமனக்குறைமுடித்தாள். (கஉ)

ஆயதற்கிருகுரோசத்திற்‡பதுமமோடடுத்து
மேயமாவனபெயர்த்தொருதீர்த்தமேல்விண்ணோர்
நாயகன்றெழுவுத்தரநயந்திடுங்கால
கேயனன்னதிற்படிந்துயர்தோள்வலிகிடைத்தான். (கங)

அன்னதற்குமேற்கலாவதியாஞ்சபையனிலன்
மன்னுதிக்கினிற்றழைத்துமாமகிமையான்வயங்கிப்
பன்னகப்பணிப்பரனுமைபரிவுசெய்பாலா
மின்னலுற்றவரில்லையாலிச்சபைகண்டோர். (கச)

உள்ளுமப்பயனுதவலாலமரருமுவப்பின்
விள்ளுதற்கரிதிதுபதின்மூன்றதாய்விளங்குங்
கொள்ளுமுச்சபையின்னமுமுளகுறித்தென்னுற்
றெள்ளுதற்கரிதவைதமைவியாதனேதெளியும். (க௫)

ஆறுமீருகொண்டணிபெறுமைந்திரண்டாய
பேறுசால்சபையுரைத்தனமிச்சபைபேணின்
வீறுமாதவப்பயனெலாமளித்திடுமேன்மை
கூறுவார்சொலக்கேட்பவர்வினையெலாங்குன்றும். (கசா)

வேறு.

யடியுயர்சபைபதினாறும்
விடியலினினைபவர்விழைவா
னெடியவனனைவருநெடியோ
னடியிணையமர்கதியடைவார். (கஎ)

சபைச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,சஙசா.

---

*எம்மென்றது நாரதமுனிவர் தம்மை என்க. †இரண்டரையோசனை.
‡ பதுமமோடடுத்து மேயமாவனப்பெயர்த்தொருதீர்த்தம் - பதுமவன மென்னும் பெயரையுடைய தீர்த்தம்.

# வேதவனச்சபைத்தோற்றச்சருக்கம்.

பூந்தாதுபரந்ததருப்பொற்சிகரமெனப்பொலிதோண்
மாந்தாதாவீணைமுனிமதுரமொழிமாந்தாதா
ராந்தாயகடன்முழ்கினடைவதெவனென்றுமுனி
வேந்தாயவறவனெதிர்வினயமொடுவிளம்புவான். (க)

வேறு.

பாரினிற்சிவபுரியென்னப்பல்வளத்
தேரினிற்பொலிதருமறைசையின்பமே
நாரினிற்பணிதரநல்குநற்பதி
சீரினிற்றிகழ்சபைத்திறங்களோதியே. (உ)

ஒளிதருமிச்சபையுவந்துபோற்றவே
களிதருமின்பமேகாட்டித்தீவினை
யெளிதெனவகற்றிடுமினியயோகமுந்
தெளிதருசித்தியுங்கதியுஞ்சேர்க்குமே. (ங)

கறைவனங்கழித்திடுங்கதிரினிச்சபை
யுறைவனமறைவனமுலப்பினன்மையே
நிறைவனமிறைவனநீர்மையாவது
முறைவனமளித்திடுமூலமென்னவே. (ச)

தெரிதரவுணர்த்தினேசிறந்தவிப்பதி
புரிதருசபையினிப்புணர்ந்தவண்ணமும்
பரிதருபயன்றருபண்பும்பாயசீர்
விரிதரவுணர்த்தெனவிளம்பன்மேயினான். (ரு)

வேறு.

மலரவன்றந்தமைந்தன்காசிபன்வயங்குவாட்கண்
ணிலவொளிர்குமுதச்செவ்வாய்த்திதியிடைநிறைந்தகாதற்
குலமுறவீன்றமைந்தனிரணியன்குறிப்பினுற்றும்
புலமுறவரியநோற்றுப்புவனமூன்றளிக்குநாளில். (சு)

கடவுளர்க்கியற்றுஞ்செய்கையனைத்துந்தன்கண்ணவாக
வடமுறவியற்றவாக்கிமலிசுடர்க்கதிர்களாதி
படர்தொழிலாணையாற்றிப்பகவனெனென்றுபாய
தடமுறுபுவனமூன்றுந்தன்வழியொழுகச்செய்தே. (எ)

ஆழிமாலிடையிற்செற்றமகத்துறவளிக்குநாளில்
வாழிய*பிரகலாதன்மைந்தனைவரிவண்டார்க்கு
மேழிசைத்துளபமாயனிசையெடுத்தியம்பவோர்நா
ளூழியினழியுமாலோவுயர்முதலென்றுசீறி. (௮)

உருமெனமுழங்கிமைந்தனுயிர்கவர்ந்துண்ணவெண்ணக்
கருகியசிறுவனுள்ளங்கலங்கினன்கருதலோடுந்
திருகுவெஞ்சினத்துத்தீயிற்றிசைதிரிந்தவியத்தூணிற்
பெருநரசிங்கமாகிப்பிறையெயிற்றொளிகடாவ. (௯)

சுழல்விழிக்குழிகட்பேழ்வாய்ச்சுடருளைச்சுலவுநாவிற்
றழலுருத்தனையனாகித்தராதலநெளியவேகி
மழகதிரணையிற்றங்கிவலிந்தமருடற்றிவாட்போர்
நிழலெழவசுரனாற்றுநெடுங்கரமுருங்கப்பாய்ந்தே. (௰)

பற்றினன்படையிற்சாவாப்பண்பொடுபலவுமோர்ந்து
முற்றியகுலிசம்போலுமுகிரினான்முதிர்கவாணிற்
றெற்றெனவகலம்போழ்ந்துசெறிந்தசெங்குருதிமாந்திக்
குற்றுயிர்பருகிச்செற்றங்கொடுமொடுக்குடித்தவாற்றால். (௧௧)

வெறிக்களிமிக்குமுற்றும்விழுங்குவனென்றுவீறும்
பொறிக்குறும்பகந்தைமேவிப்பூமிசைப்புத்தேளாதி
நெறிப்புறுமமரர்க்கூவி †நெடுமொழிநிமலன்மாயஞ்
செறிப்புறப்பிணிப்பப்போதஞ்சிதைத்தனன்செப்புகின்றான். (௧௨)

அலைவறச்சராசரங்களனைத்தையுமளித்துக்காக்குந்
தலைவன்யானென்னையொப்பார்சகத்திலையதனானீவிர்
நிலைபெறும்புத்திமுத்தியெனதடிநீழலாற்றி
யுலைவறப்பொருந்துவீரீதுறுதியென்றுணர்மினென்ன. (௧௩)

மயக்குறுமாற்றங்கேளாமலரவனிறும்பூதெய்தி
நயக்குறையுடையமாற்றநவிற்றலையொழிதிநாடார்
வியக்குநர்விளிவர்தானேமேம்படத்தன்னைக்கூறுங்
கயக்குறுமொழியிற்சாதல்கதிதருங்கருதிக்கேண்மோ. (௧௪)

அளவறுபுவனமாவியனைத்தையுமடக்கியீற்றி
னுளபொருடானேயாகியொருவனாயுலப்பிலானாய்
வளமலிமறையினீறுமனத்தொடுவாக்குந்தோயா
விளநிலாவணியும்வேணியிறைவனேயேகனென்றும். (௧௫)

---

* இவ்விரணியனுக்குப் பிரகலாதனேயன்றி, அநுகலாதன், சங்கலாதன், கலாதன் என வேறும் மூன்றுபுத்திரருளர் எனவறிக. † நெடுமொழி செப்புகின்றானென முடிக்க. நெடுமொழி - தன்மேம்பாட்டுரை.

துணிவருஞ்சத்திமாயைச்சூழ்ச்சியினமைத்துவேறு
பணிதரமொழித்துப் * பக்கம்பயின்றுடலாதியாகப்
பிணிதரநோக்கியாக்கியழித்தவைபிறங்கவாற்றிக்
கணிதருவிகாரமாற்றிக்களைகணுய்க்கதியுமாகி. (௧௬)

புரந்துலகளிக்குந்தூயபுனிதனேயெனக்கும்போதங்
கரந்திடுமுனக்குமற்றைக்கடவுளர்கதிக்குநாத
னிரந்திடினளிக்குமின்றேறெலிரித்திடுமிருளையீர்ந்து
துரந்திடுமன்பர்க்கல்லார்க்கிருட்டொடர்த்துயக்கமாக்கும். (௧௭)

ஆதியாயமலமாயவரனுளனுகவீணி
லோதினுலாவதென்னென்றுணர்த்தவுமுணராதுகிக்
கோதிநூலுருப்பத்தேவர்குழைவதுட்கொண்டுகோதை
பாதியாய்முழுதமாயபரம்பரன்படிவங்கொள்வான். (௧௮)

எரியொடுகாற்றுங்கூற்றுமிடியுமூண்டெதிர்ந்ததேய்ப்பப்
புரி † நரமிருகப்புட்சார்புணர்ப்பொருங்கியைந்தபூத
மிரிதருசரபமாகியிளம்பிறையிலங்குசோதி
சொரிதருநகத்தெண்கான்மேல்கிழொடுதுலங்கத்தோன்றி. (௧௯)

உருப்பவிர்ந்தொளிரும்பாதத்துகிரினுலுருமுப்பாயும்
பொருப்புறவகலம்போழ்ந்துபுரட்டிவிண்போகப்போக்கி
நெருப்புறவுரிப்பக்காயநெடியவனயர்ந்துநீடும்
விருப்புடனச்சமாகியகந்தையோய்வீழ்ந்துபோற்றி. (௨௦)

விழுங்கியமலத்தாற்றூயவிரகறவகந்தைவீக்கத்
தழுங்கியவவலமாற்றியருளுருவாகித்தோற்றித்
தொழுங்கழல்சேர்த்தியாளுஞ்சோதியேசரணந்தோற்று
தொழுங்கழிகாலத்தோற்றியுய்யக்கொண்டருடியென்றும். (௨௧)

தேற்றறவமலமாயசிற்பரானந்தமாகி
மாற்றறவொளிருஞ்சோதிவள்ளலேபோற்றிபோற்றி
கூற்றுயிர்குடித்தசீதக்கொழுமடற்கமலப்பொற்று
ளூற்றிருந்தமுதமூறவுளத்தருளொருவபோற்றி. (௨௨)

எனத்தொழுதிரந்துபோற்றவிரங்கியேகருணையீச
னனத்தவன்முதலோராயவமரரையருளினோக்கி
மனத்துயரொழிமினம்பால்வழிபடுமன்பர்மேய
வினத்துமாலதிகனுகுமெனத்தெளிந்திகழ்ச்சிமாற்றி. (௨௩)

---

* பக்கம் பயின்று - பிரகிருதியிலிருந்து. † நரத்தன்மை, மிருகத்தன்மை, புட்டன்மைச்சார்பு மூன்றுமொருங்கியைந்து. புணர்ப்பு-உபாயம்.

வழிபடுமென்றுகூறிச்சரபமாம்வடிவைமாற்றக்
கழிமகிழ்சிறந்துவானோர்கரைந்தடிபரவிப்போற்ற
வழிவறுமமலன்மாயனயனயிராணிகேள்வன்
மொழிதருமமரரோடுமறைவனமுன்னிச்சார்ந்தே. (௨௪)

மெல்லியலோடுவேதவனச்சபைவிரும்பிமேவிப்
புல்லியவானோர்தம்மைப்புகன்றநும் * பிரிவுக்கேற்ற
வெல்லியமுனமேவியிலிங்கமாமெம்மைப்போற்றி
யல்லியினமருமென்னவடியிணைபரவிப்போற்றி. (௨௫)

அரியயனமரர்கோமானுருத்திரர்வசுக்களாசைத்
திரிதருமருக்கர்தேவர்கணத்தவர்சிறந்தயாரும்
பரிவுறவைகிப்போற்றிப்பதிந்தனர்பதிந்ததானந்
தெரிதரவிலிங்கமாற்றியருச்சனைசிறப்பிற்செய்தார். (௨௬)

கடவுளர்சூழ்ந்துநாளுங்கனிவொடுபணிந்துபோற்ற
மடவரலோடுங்கூத்தின்மகிழ்சபைமருவிநாளுங்
கடன்முறை † வானோர்போற்றுங்கவின்பெறுமன்றமாகுஞ்
சுடர்மறைவனத்தைக்கண்டார்தோற்றமுந்துயருங்காணார். (௨௭)

அன்றவர்சூழ்ந்துபோற்றியமர்தலாற்றேவபத்த
மென்றுயர்நாமம்வேதவனத்தினுக்கெய்ந்ததாகு
மொன்றிய‡காலந்தோற்றமுரைத்தனம்பயனுமோர்தி
குன்றுயர்குவவுத்திண்டோட்குருமணிவயிரப்பூணாய். (௨௮)

மின்னவிர்ந்திலங்குந்தேவர்பணிசபைவிளங்குநாதன்
பொன்னடியொருகாற்போற்றும்புண்ணியர்புனிதராவார்
பின்னையுதரமேவார்பெரும்பெயர்க்கடவுட்போற்ற
நன்னலமளிக்குமோரார்நனந்தலையுலகத்துள்ளார். (௨௯)

ஆயிடைப்பிரமவீசனடியிணைபணிந்தார்வேதன்
சாய்வறுமுத்திசேர்வார்சசிபதியிலிங்கம்போற்றிற்
பாயசீர்ச்செல்வங், கார்த்திப்பயன்றரும் §பரிதியீசன்
மேயசாலுலகநாதன்விண்டுமுத்தியினையீவன். (௩0)

---

* பிரிவு-வகுப்பு; என்றது, ஈண்டுத் தாரதம்மியத்தின் மேற்று. அகவிதழ்போலச் சமீபித்து நெருங்கியிருமென்று பணித்தருள. † இச்சபை தேவர் போற்றுமன்றம் எனப்பெயர் பெறும். ‡ காலம் நரசிங்கத்தைத் தோலுரித்தகாலம். § பரிதியீசன் உலகநாதனாகிய விண்டுவினது முத்தியை ஈவன் எனமுடிக்க.

அங்கியினிலிங்கம்போற்றினழலெனப்புனிதமாவர்
தங்கியமருத்துவீசன்றருக்கொடுவலிமைநல்கும்
பொங்கிய*வேதவீசன்மறையெலாம்புரிந்துநல்கு
மிங்கியற்றியநற்றேவர்குறியிருஞ்சீர்த்தியீயும். (௫௧)

புரந்தரன்றீர்த்தமாடிற்புக்கிமேம்படுவர்போற்றி
னரந்தையீர்மதியினுளிலட்டமிதன்னிற்†திங்க
ணிரந்தரஞ்சோமனுற்றுங்குறியினைநெறியிற்போற்ற
வரந்தருந்தீமைமுற்றுமாய்ந்திடுமகிழ்ச்சியுண்டாம். (௫௨)

வளர்பிறைமாகத்திங்கட்சத்தமிவயங்கு‡பானுக்
கிளர்தருமிலிங்கம்போற்றிற்கெழுமுநோயனைத்துநீங்கி
யுளமகிழ்சிறப்பர்தேவபத்தமென்றொருகாலோதத்
தளர்தருந்தீமையாரேசபைதனிப்பெருமைசொல்வார். (௫௩)

மன்னியமாகத்திங்கண்மகத்துப்பூரணையின்வாரி
மின்னியவேததீர்த்தம்படிந்தவட்பெயர்ந்துவானோர்
பன்னியதேவபத்தசபைப்பரன்பாதம்போற்றி
னந்நிலைபுத்திமுத்தியனைத்துமாமமலமாமே. (௫௪)

பரிவுறு§முவாவின்வேதநதியினிற்படிந்துபாவ
மிரிதரத்தேவபத்தத்திலங்கியவிறைவற்போற்றி
னரியனவில்லையெல்லாமளித்திடுமைந்தொடைந்தாய்த்
தெரிதலையரக்கனம்பாலறப்பயன்றெரிந்தானங்கண். (௫௫)

முனிசமதக்கினிப்பேர்முன்னவனெஞ்ஞுவற்க
னெனுமிவர்பரமஞானமிதனிடையெய்திவாழ்ந்தார்
கனிவொடுoவாசுதேவன்கருத்தினிற்பூசையாற்றி
யினிதுறயதியினுற்றுனிதற்குநேரிசைப்பதுண்டோ. (௫௬)

தருக்குயரரக்கர்தீயதானவர்தழைத்தவாற்றன்
முருக்கியத்தலத்தைக்காக்கு╪மோடியென்றோதுஞ்சத்தி
யுருக்கிளர்வேதநாதனருளினாலுலப்பின்மேன்மைத்
திருக்கிளர்தேவபத்தசபையின்சீர்தெரிக்கற்பாற்றே. (௫௭)

---

* வேதவீசன்-வேதங்களியற்றியவீசன்; வேதநாயகரன்று. தேவர்குறி-ஏனைச்சர்வதேவர்களுமிங்கியற்றியசிவலிங்கங்களெல்லாம். † திங்கணிரந்தரம்-மாசந்தோறும். ‡பானுக்கிளர்தருமிலிங்கம்-பாற்கரலிங்கம். § மாசிமாசத்து மகநக்ஷத்திரத்தமாவாசையாகிய உவாவிலென்க. o வாசுதேவன்-விஷ்ணு. யதியினுற்றோன்-முனியாகி ஈண்டிருந்தனர். ╪ மோடி-துர்க்கை. மோடியென்றோதுஞ்சத்திவேதநாதனருளினாற்காக்குமென முடிக்க.

பற்பலவிரித்துக்கூறிற்பயனிலைதேவபத்தத்
தற்புதனடியையெவ்வாறுயினுமடைந்துபோற்றக்
கற்பதேயுணர்ச்சியாகுங்கரத்துறும்புத்திமுத்தி
நற்பயன்றீமையெல்லாநடுங்கிவிட்டகலுநன்றே. (௩௮)

வேறு.

ஆதலின்வேதவனச்சபையாயுங்
காதலினூற்றொழுலேகேடனுகும்
மேதமிலாற்கிஃதிம்முறையென்றே
யோதினனூரதனூழ்முறையானே. (௩௯)

வேதவனச்சபைத்தோற்றச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧,௪௫௫.

---

# மணிகன்னிச்சருக்கம்.

---

கரைபொருதிரைக்குங்கங்கைக்கமழ்புனற்காசிமேய
விரைதருமிதழிவேணிவிச்சுவநாதனேடுந்
திரைமணிகன்னித்தோற்றஞ்செப்பினையதன்சீர்முற்றும்
வரைதரவுரைத்தியென்னமலரவன்மைந்தன்சொல்வான். (௧)

பசையுறுகொடியபாவப்பரப்பினைப்பரியமாற்றி
நசைதருமின்பமாயகதியினைநல்குந்தீர்த்தந்
திசைதொழுமறைசைமேவித்திகழ்மணிகன்னிபோல
விசையுமூவுலகத்துள்ளுமிலையிலையிலங்குவேலோய். (௨)

நெறிதருமொழுக்கங்கல்விதவங்கொடைநீதியாதி
செறியறமிலார்க்குநல்குந்திகழ்கதிசித்தியீயும்
பொறியறுமியோகற்றூர்க்கும்புணர்த்திடுமுத்திபோதக்
குறியுறமுணர்வற்றூர்க்குங்குளிர்மணிகன்னிகூடின். (௩)

சீர்மறைவனத்துமேவித்திகழ்மணிகன்னிமூழ்கி
யோர்தருசித்திமுத்தியெய்தினோரெண்ணிலாதா
ரார்தரவுரைப்பிற்பல்குமாதலாற்சிலரையையந்
தீர்தரச்சுருக்கியீண்டுச்செப்புதுந்தெளிந்துகோடி. (௪)

சானவியாதிபாவந்தவிர்த்திட*திரிபுராரி
யானமை, பேயின்முத்தி, தேவலனயனூர்சார்தல்,
வானமார்தீர்த்தவுண்மை, யிலிங்கத்தின்வகுப்புச், சோரன்
றேனமர்கயிலேசேர்த, லிந்திரத்துய்முன்செல்வம். (சு)

பிரவரன், வீரசேனன்கவுசிகன்பிறங்குமேன்மை,
சுரருலகதனின்மேவி†யதுவுறல், சுருண்மென்கூந்தல்
வரமுறுமகளிர்தம்மைக்காசிபன்மணத்தன், மைந்தர்
தரவுயரதிதிசேர்தல், காசிபன்சிருட்டிசார்தல். (சா)

சருக்கமிம்முறையினுகுந்தடமணிகன்னிமேன்மைத்
திருக்கிளர்‡பதிகமாகுந்தெரிதரவிரித்துக்கூறக்
கருத்துறத்தெளிதியிந்தமுறையினிற்காவலோம்புங்
குருக்கிளர்குவவுத்திண்டோட்கொற்றமார்கோதைவேலோய். (எ)

மணிகன்னிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,சஅஉ.

---

# கங்கையாதிபாவமோசனச்சருக்கம்.

அற்றவாவன்பகமுறமெய்யருண்
முற்றினுரிற்சுகோதயமூழ்குற
வுற்றுநெஞ்சமுவப்பவுரைத்தலாற்
பற்றினுர்கதைப்பாலுளம்பட்டதால். (க)

திரையினுன்மணிசிந்தித்தபனியங்
கரையினுன்மணிகன்னிக்கதையினி
யுரைசெய்வாயெனநாரதனூறுதேன்
புரையுமாவரசற்குப்புகலுவான். (உ)

காசிமேவியவீசன்கருதருட்
டேசினுர்மணிகன்னியத்தேவினே
டேசில்வேதவனத்தினியைந்ததான்
மூசிவண்டுமுளரிமுரலவே. (ங)

---

* திரிபுராரியானமை - திரிபுராரி என்னும் அந்தணன் காசிக்குப்போய் அநுகூலமாகாது திரும்பி வேதாரணியத்து மணிகன்னி அடைந்தமை. † யது-ஓரரசன். ‡ பதிகம்-தொகுத்துச்சொல்லுதல்.

வானதிக்குயிராமணிகன்னிமுன்
பானதித்தலத்தாதியிராமனுக்
கூனமாயவிறையருளுற்றநா
ளுனமேவினர்நற்கதியெய்தவே. (ச)

வினைத்திரட்குவைவேரரிந்தேயுட
னனைக்குமுன்னுயர்நற்கதிநல்குமா
னினைக்குநெஞ்சினராயினுநீடிய
கனைக்குமாவினைமாட்டிக்களிப்பரே. (ரு)

வேதநாதன்பணிந்தவர்மேற்செயுங்
காதலின்னருள்காட்டும்பெருக்கென
நாதன்முன்னலமார்மணிகன்னிநன்
கோதவென்னிலுலப்பிலகாலமே. (சு)

வேந்தனுயகவுசிகன்வேதிய
வேந்தலாகியெழுஞ்சிவவின்பமே
மாந்தியேய்ந்தவலிமணிகன்னிநீர்
தோய்ந்துநாளுந்தொழுதெழுந்தூய்மையால். (எ)

வீடுவாயப்பிறந்திடுமேன்மையார்
கூடுவார்மணிகன்னிகொடுவினைப்
பீடுசாலவழித்துப்பிறவிவேர்
சாடுமற்றிதுசாமியுருவமே. (அ)

வேள்விதானந்தபஞ்செபம்வேதநூற்
சேள்விபாவனைகேடில * சமந்தம
மாள்வினைத்தொகையாவையுமன்றியே
வாள்விளைத்துயர்வாழ்வினைநல்குமே. (கூ)

நற்றவத்தினைநற்றருமத்தினை
முற்றியப்பயன்முன்னுறுங்காலமே
மற்றுநேரின்மணிகன்னிவார்புனல்
பெற்றுமுத்திப்பயனைப்பெறுவரால். (க0)

கொடியதீவினைகுன்றெனவீட்டினுங்
கடிதின்மாய்த்துக்கதியினைநல்குமாற்
படிகொடீர்த்தம்படிபவரிப்பெயர்
நொடிவராயிறைறுங்கும்வினைகளே. (கக)

---

* சமம்-மனவடக்கம். தமம் பொறியடக்கம். இவை மேலுங் காட்டப்பட்டன.

உலக *பாவனியாயுயர்கங்கையே
விலகுநீர்மணிகன்னியின்மேன்மையை
யிலகவோருமற்றியாவரறிகுவார்
திலகமாமிந்நதீர்த்தவரசனே. (௧௨)

அன்னதோணயந்தாசையினுன்மதத்
தன்னமாந்தித்தருக்கினிற்கோவதை
பின்னையாற்றிப்பிறங்கு †மிராகவன்
முன்னையப்பதியுற்றிவைமுன்செயும். (௧௩)

பிரமசாரிவெந்தீமைபெருங்கதி
ரிரவின்மாற்றியிலங்கருணல்கியே
வரமதியுமணிகன்னிவண்புகழ்
பரவவல்லன்கொலாம்பரமேட்டியே. (௧௪)

நன்பகற்படிந்தாடிநயந்தவர்
வன்புறச்செயும்வல்வினையாவையு
மென்புமுற்றியதேனுமெரித்தரன்
றன்புரத்தினிற்சாரவளிக்குமே. (௧௫)

ஆதிவாரமமையொடுகூடினீ
ரீதினஞ்செழுத்தேய்பதினுயிர
மோதினார்நின்றலப்பறுதீவினை
காதிநாதனுலகிற்களிப்பரே. (௧௬)

அயனமாதப்பிறப்பருத்தோதய
நயமகோதயநல் ‡லுபராகமார்
பயனுவாவிதிபாதமற்றின்னமு
முயருநாளினிலாடினரும்பரே. (௧௭)

தெளியுநீர்மணிகன்னியிற்றென்புலத்
துளியினார்க்குச்சிராத்தமுதவினோர்
களியினுலவர்காய்கதிர்மாமதி
யொளிசெய்காறுமின்புற்றுறைவார்களே. (௧௮)

அஞ்சமார்மணிகன்னியதன்கரைத்
துஞ்சுவார்செவியிற்பரன்றூமறை
நெஞ்சமாமஞ்செழுத்துநிகழ்த்திமா
லெஞ்சமுத்தியுமீவனிரங்கியே. (௧௯)

---

* உலகபாவனி-உலகைச்சுத்தஞ் செய்பவள். பாவனம்-சுத்தம். † இராகவன்பதி-இராமசந்திரபுரம். ‡ உபராகம்-கிரகணம்.

பல்லுயிர்க்கிரங்கிப்பரஞ்சோதிதா
னெல்லைதீரருளாலிகதீவினை
யல்லறீர்தரவாதியளித்ததா
மல்லலார்மலர்சூழ்மணிகன்னியே. (உ0)

வெய்யதீவினைவீட்டுங்கருத்தினோ
ரையநீர்மணிகன்னியடைதலே
செய்யநல்லறமாமிதிற்சேர்கதை
யுய்யநல்குவனோர்தியுணர்வினோய். (உக)

கங்கையாதிநதிகடுந்தீவினைச்
சங்கையற்றவஞ்சார்ந்துகயிலையின்
மங்கைபாகனெதிரமலரடி
யங்கையாற்றொழுதன்பினிறையுமால். (உஉ)

மாற்றில்வெவ்வினைமாந்தர்களெம்மிடை
யாற்றமூழ்கியவைவிடுத்தேகுவா
ருற்றமார்வினைக்குள்ளுருகாவகை
யேற்றதோர்பரிகாரமியம்பென. (உ௩)

ஆக்கமன்னுயிர்க்கன்பினருளுவீர்
வாக்கினன்மையுறக்குறித்தேண்மினீர்
தேக்குதெண்டிரைத்தென்கடற்றீரமேற்
றாக்குவேதவனப்பதிதோன்றுமே. (உச)

தீங்குதீர்கமலாலயத்தென்றிசை
யோங்குநம்முருவாயுயரப்பதி
தாங்குமேன்மையுஞ்சாற்றரிதாகுமா
லாங்குநன்மணிகன்னியலங்குமே. (உ௫)

பாவகானகம்பற்றியெரித்திடுந்
தாவமாமணிகன்னியிற்சார்ந்துநீர்
மேவவல்வினைவேரறும்விண்ணவர்க்
காவலாஞ்சிவராத்திரியாடவே. (உ௬)

மாகமார்சிவராத்திரிமான்முதன்
மாகமார்தருவானவருச்சியிற்
றாகமாயதிற்சார்ந்துபடிவர்தந்
தாகமார்தமதாக்கர்தழைக்கவே. (உஎ)

நன்மையார்சிவராத்திரிநாளினீர்
புன்மைதீரப்புணர்ந்துபடிந்துதீங்
கின்மையாகவிலங்குமினென்றுபூம்
பொன்மையார்சடைப்புண்ணியன்போயினன். (உஅ)

தெய்வநாயகன்செப்பியவாய்மொழி
யுய்வதாமெனவோகையொடேகியே
சைவமாமணந்தங்குமறைவனஞ்
செய்வதோர்ந்துடன்சென்றநதிகளே. (உக)

மணித்தொகைச்சுடர்மாளிகைவானமு
மணித்தெனப்படர்ந்தங்கவர்க்கேணியாய்ப்
பிணித்தநட்பினராய்ப்பெருமானடிக்
கெணித்தருத்துணரீயவிலங்குமே. (ஙo)

வளத்தினூர்ந்தமறைவனங்கண்ணுறு
வுளத்தினர்களியுற்றுலகோம்பிடுங்
களத்தினர்விடக்கண்ணுதன்முன்மலர்த்
தளத்தினூர்மணிகன்னியைச்சார்ந்தவே. (ஙக)

சிவநிசிப்பகற்சேர்ந்துயர்தீவினை
பவமறப்படிந்தாடிப்பரமன
நவமலர்க்கழல்போற்றிநயந்துசூழ்ந்
தவமகற்றியலங்கியடைந்தவே. (ஙஉ)

அம்பிகாபதியாற்றுமந்நாண்முத
னம்பினூர்சிவராத்திரிநாடொறுந்
தும்பிசூழ்மணிகன்னிதுளைந்துபூங்
கொம்பினோடரற்போற்றிக்குலவுமே. (ஙங)

நாவிநாறுநனைமணிகன்னியா
மாவிமேன்மையறிந்துயர்கங்கையு
மேவிநாடொறுமூழ்கிவினையெலா
மோவியுச்சியுலகம்புரக்குமே. (ஙச)

அடுக்குமூவுலகாவியளித்தருள்
கொடுக்குமேன்மைக்*குலநதிதீவினை
விடுக்குமாறுவிழைந்தனவேலதன்
றொடுக்குமேன்மைசொலற்கெளிதாகுமோ. (ஙரு)

தானயோகந்தவமுதலாயின
வூனமித்தடம்போலவொழித்திடா
வானமேன்மையறிந்தவரம்புயத்
தேனளாமணிகன்னியைச்சேர்கவே. (ஙசா)

---

* குலநதி-கங்கை, பவானி முதலிய நதிகள்.

மறைவனத்துமகிழ்ந்தவரதனு
மிறைவன்முன்மணிகன்னியினேய்ந்திடார்
நறைசெய்கங்கைநயந்துபடியினுங்
கறையறுர்பயன்கண்டுகளியுறுர். (௩எ)

ஆகையான்மணிகன்னிமுன்னுடியே
தோகைபாகற்றெருழுதுபின்கங்கையி
னேகையானுறவுற்றிடுநற்பயன்
வாகைவேற்கைமதிக்குடைமன்னனே. (௩அ)

வாசமார்மணிகன்னியில்வாயிதி
காசமொன்றிவண்கேள்கவுண்டின்னியம்
பேசுகோத்திரம்பெற்றவன்*கேரள
தேசமன்னியருமறைதேர்ந்துளான். (௩௯)

திரிபுராரியெனப்பெயர்சேர்ந்தவ
னரியகங்கையடைவதற்கெண்ணியே
புரியுங்கானும்பொருப்புநதிகளுஞ்
சரியும்போய்ப்†புருடோத்தமஞ்சார்ந்தனன். (௪0)

ஆங்குமேவுமளக்கரின்மூழ்கியே
தாங்குமாழியினடிசார்ந்துபோ
யோங்குகாசியுறப்படர்வாறெரு
வாங்குநண்ணிடைவஞ்சியைக்கண்டனன். (௪க)

கண்ணினேர்ந்துகனங்குழையாரைநீ
யெண்ணியேகுவதெங்கெனவீர்ந்திருண்
மண்ணியார்மணிகன்னிமறைசையி
னண்ணியாடயமுனையென்னுமமே. (௪உ)

அன்னவாறறியந்தணயாரைநீ
யென்னகாரணமேகுவதென்னவென்
‡ முன்னமார்தருகங்கையின்மூழ்கிவான்
மன்னவென்னமறுத்துவழங்குவாள். (௪௩)

தெள்ளுநீர்ச்செழுங்கங்கையைத்தேடியே
யுள்ளுநீயுணரோங்குமறைவன
நள்ளுமாமணிகன்னிநயந்தருட்
கொள்ளுமாறுகுறித்§தவளேகினுள். (௪௪)

---

* கேரளதேசம்-சேரதேசம். † புருடோத்தமம்-ஓர் விஷ்ணுதலம். அது சகநாதம் எனவும் பெயர்பெறும். ‡ முன்னம்-குறிப்பு. § அவளென்றது கங்கையை.

நீயுமேகிநிறைமணிகன்னியிற்
றோயுமாறுசெயிற்றுயர்தீர்த்தருள்
வாயுமின்பமுமற்றுமிக்கங்கையி
னேயுமன்புளதேற்பின்னெமுதியால். (சரு)

அன்றியேயினையேலவட்கண்டிடா
யென்றுகூறவுமேகினன்காசியிற்
சென்றுகங்கையைத்தேடியுங்காண்கிலன்
கன்றுநெஞ்சினனுய்க்கழிகாலமே. (சசு)

தேடியல்லற்செறிந்துபன்னுட்செல
வாடியோர்தருநீழலின்வைகியே
யூடியூழ்வினையோசருகாவுள
நாடியின்னநவிற்றுகின்றுனரோ. (சஎ)

செறியுமூனுழித்தாவிதிகைத்தற
மறியுமாறுமலைகளுங்கானமு
மெறியுநீர்நதியெங்கணுநீந்தியும்
பொறியிலேன்றிருக்கங்கைபொருந்திலேன். (சஅ)

கூற்றமன்னகொடுவினைமுற்பிறப்
பாற்றலாலறிவற்றவளியனே
னேற்றசானவியெய்துகிலேனெனுத்
தேற்றமோவித்திரிந்துளந்தேம்பலும். (சகூ)

வெளியினின்றொருவாணிவிரகிலா
யெளிய*வெங்கையமுனையிசைத்தசொற்
றெளிவிலாதுமறுத்திவட்சேர்ந்தவெங்
களியிற்கங்கையைக்காண்கிலைகண்ணினே. (ருo)

பாரமீர்தருகங்கையும்பல்வினை
யீரவேமணிகன்னியினேகுவாள்
வாரமாகவவ்வாவியுற்றூர்க்கலா
தாரவேபயன்கங்கையளித்திடாள். (ருக)

ஈதுகொண்டுமறைவனமெய்தியே
போதுசூழ்மணிகன்னிப்புனல்படிந்
தோதுமாமறையும்பர்கடம்பிரான்
மாதுபாகனைவாழ்த்திவணங்கியே. (ருஉ)

---

* எங்கை-என்றங்கை. கங்கையே வாணியாய் வந்தமையின், யமுனை யை எங்கை என்றதென்க. ஈண்டுக் கங்கை தன்னைப் பிறள்போல வைத்துக் கூறுதலின், இது தன்மைக்கட்படர்க்கை வந்து மயங்கிய இடவழுவமைதி என்க.

மீண்டுவந்துவிரும்புதிகங்கையேற்
காண்டியென்றுகரந்ததுநன்றென
வாண்டுநின்றுமெழுந்துயரந்தணன்
றூண்டுசோதிமறைவனந்துன்னினான். (ருங)

உருவெலாமறையாயுயர்ந்தோங்கியே
பருவமரர்பொருளென்றும்பரப்பிய
திருவமார்பதிகண்டுதிளைத்தபின்
மருவினான்மலர்வாய்மணிகன்னியே. (ருச)

சாற்றுநான்முறையாடித்தணந்தவர்ப்
போற்றுமாறுசிராத்தம்புரிந்துபி
னேற்றுவார்கொடியெம்பெருமானிரு
சேற்றுருமலர்ச்சேவடிபோற்றினான். (ருரு)

தூயவப்பதிவைகியுட்டேய்மையாய்ப்.
பாயவேதநதிபடர்கோடிநன்
காயவேதவமிர்தமவைபடிந்
தேயவேகினனுத்தரத்தெண்ணியே. (ருசா)

ஞானமேதருகாசியினண்ணியின்
பானசானவிகண்டதிலாடினான்
வானமாமணிகன்னிமறைவனத்
தானநேர்வதுசாற்றுதற்கில்லையே. (ருஎ)

வேறு.

என்னப்புகழ்ந்தேகினளுத்தினெய்தவேண்டிற்
றன்னெப்பறுசானவிமுன்மணிகன்னிசாரின்
முன்னப்பயனெய்துவ * ரன்றினர்மோகவாற்று
லின்னற்படுமாவியிதன்பயனீறுறுதே. (ருஅ)

பேயுந்திருவாகியபேறுறப்பெய்துமுத்தி
வாயுமணிகன்னியினெண்புகழ்வாயினவா
லேயுந்திறமேநசைகொண்டிசைவண்டுகிண்டிப்
பாயும்பனிமாலைகிடந்துபடர்ந்ததோளாய். (ருக)

கங்கையாதிபாவமோசனச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,உசக.

* அன்றினர்-(இதற்கு) மறுதலைப்பட்டவர்.

# பிசாசமோசனச்சருக்கம்.

ஊறுதீங்கனியூற்றியதேறலினிலவாம்
பேறுசால்கதைகுழைதரப்பேசியபெரியோய்
வீறுபேய்கதிமேவியதுரையெனவிளம்ப
மாறுதீர்கதைகேளெனவழங்குவன்மறையோன். (க)

பெருமையாலுயர்ந்தோங்கியபேற்றினைப்பெறுவா
னொருமையாலுறங்குறுமுனியருனைவேறுரைக்கு
மருமையார்வளநயதென்னாட்டிடையமர்வோன்
கருணைமேவியகௌசிகன்மறையெலாங்கற்றோன். (உ)

புடவிதாங்கராமணிவளைமுத்தொடும்புரட்டுந்
தடவுநீர்த்திரைச்சானவிபடிவதற்கெழுந்தே
யடவிமாமலையருங்கடங்கடந்தவிழ்செழும்பூ
மடலினூறியதேன்பொழிகாசியின்மருவி. (ங)

கற்பொருந்திரைக்கங்கையிற்படிந்தரன்கமலப்
பொற்பதம்பணிந்தெழுந்துதென்புலத்தவர்பொலிய
வெற்பகக்கயைச்சிராத்தமுமளித்து * வீவதநீ
ரற்புறத்தழீஇயகன்றனன்விந்தியமடைந்தான். (ச)

நாவடித்திடவஞ்செழுத்தமலனன்னாமங்
காவடித்தடந்தோளுறக்காசியிற்பரமன்
சேவடித்துணைசிந்தையிற்றிகழ்தரச்செல்வான்
றூவடித்தலந்தளர்ந்திடவதிர்த்தனதடுத்தே. (ரு)

அழிபசிக்கயர்பேயிரண்டவனுயிருந்த
விழிசுழற்றுபுமேவினவிமலனன்னாமம்
பழியறப்பயில்பண்பினாற்பனவனதருகே
யுழிதரப்படராதுசேணிடையிடத்துற்றே. (சா)

ஆய்ந்தநூனெறியந்தணகேளிஃ † தமலன்
வாய்ந்தநாமநீயுரைப்பனநின்னையாம்வலிதல்
காய்ந்தகற்றினகடற்றிடையாமுணக்கரைந்து
மாய்ந்தவந்தணரெண்ணிலார்நீபெருவரத்தாய். (எ)

---

* வீவதம-காவடி. † நீயுரைப்பனவாகிய அமலன்னாமங்களே நின்னை யாம்வலிதலைக்காய்ந்தகற்றின. வலிதல்-வலாற்காரஞ் செய்தல்.

நின்னடித்தலஞ்சரணமாயடைந்தனநீயே
யின்னலுற்றிடும்பேய்ப்பிறப்பகற்றியேயின்ப
நன்னர்நற்கதிவழங்குதிகருணையார்நல்லோர்
தன்னையுற்றவர்க்கின்பலாற்றுன்புறத்தகுமோ. (௮)

திருகுவெஞ்சினப்பேயிவைகூறலுக்தெரிந்தே
யுருகுநெஞ்சினனாய்த்துயரொழிப்பதற்கூறிப்
பருகுதேனனமென்மொழியாலறம்பயிலாத்
திருவிலீரியான்செய்வதென்செப்புவீரெனலும். (௯)

வருந்துமெங்களுக்கிரங்கிநீயூர்செலன்மாற்றிப்
பொருந்துகாசியேமுதலியபதியினெம்பொருட்டாத்
திருந்துநானமுஞ்சிராத்தமுமுதலியசெய்தே
மருந்துபோற்றுயர்மாற்றுதியெனவருள்வழக்கால். (௧௦)

நீதியாமிதுவென்றுநீரலகையாய்நிகழ்தற்
காதிகாரணமேதுரையாடுமினென்ன
*வோதிமேவலுமொன்றியான்காமரூபத்துச்
சோதிவேதியர்குலத்திடைத்தோன்றிமுற்றொடக்கால். (௧௧)

† ஏர்த்தொழிற்குலத்தரசனையடைந்தவனீந்த
கூர்த்தவெவ்வினைப்பொருண்மறைவிலையினாற்குடும்ப
மார்த்திமாய்ந்தபினலகையாய்ப்பல்லுயிரழித்தே
மூர்த்தமுற்றவர்நடுக்குறவெங்கணுமுனிந்தே. (௧௨)

திரிந்தயர்ந்தனன்சரணநின்னடியெனத்தெளிவாற்
பரிந்துசாற்றலுமற்றதியானொருபார்ப்பான்
விரிந்தவேதமுமுணர்ந்தனன்கலிங்கத்துவிழைவாற்
புரிந்துவேசையர்போகமார்புணர்ச்சியேபொருளாய். (௧௩)

‡ அடிகளாக்கியபொருளெலாமழித்தபின்னகமுங்
குடிவழிப்படுநிலைமையும்விலைசெய்துகொடுத்தே
மிடியுறக்கிழக்குரவரைத்துயருறவிடுத்துப்
படியின்மிக்கநற்காசியிற்பயிக்கமேற்றயின்றேன். (௧௪)

---

* பஞ்சாக்ஷரசிரவணத்தினாலே பூர்வஞானமுண்டாதலும். காமரூபம் ஓர் தேயம். †ஓர்சூத்திரராசாவையடைந்து தான்பெற்றுக்கொண்ட துர்த்தானப்பொருளினாலும், வேதத்தை விலைக்குவிற்றமையினாலும், வேதத்தை வேதனத்தின்பொருட்டுச்சொன்னமையினாலும்,குடும்பசவரக்ஷணைபண்ணி ‡அடிகளாக்கியபொருள் என்றது பிதிரார்ச்சிதமாகிய இயங்கியற்பொருளை. அகமுங்குடிவழிப்படுநிலைமையும் என்றது பிதிரார்ச்சிதமாகிய நிலையியற்பொருளை. பயிக்கம்-பிக்ஷை.

துஞ்சகல்லிடமளித்தவன் றன்மனைத்துயின்று
வஞ்சமாயிரவனைவருந்துயிலுறமகிழ்ந்தே
நஞ்சமாமெனவிலவிடையந்தணனைசத்
தெஞ்சவோர்சிலைதலையினிட்டில்லிடைநுழைந்தேன். (கரு)

இல்லினள் ளுறுமணிபணியிரணியந்துகசு
புல்லிமெல்லெனப்புறப்படவந்நகர்புரப்பா
ரெல்லியிற்கவர்கள்வனென்றடிதுரந்தெதிர்ந்தே
வல்லியிற்பிணித்தரிந்தனர்சிரத்தினைவாளால். (கசு)

வேதியக்கொலைபொருட்களவாயவெவ்வினையாற்
கோதியற்றிடுமலகையாயுலகெலாங்குலைந்தே
னேதியற்றியுமருளுதிசரணனக்கென்னத்
தாதியற்றுபூங்காசியிற்சானவிசார்ந்தான். (கஎ)

தறுகணூர்கடிப்பிறப்பற*மனத்தொழில்சாற்றி
மறுகுதெண்டிரைப்படிந்துநீர்ச்சிராத்தமும்வழங்கிக்
குறுகிவிச்சுவநாதனைப்பணிந்துபோய்க்கொடுமை
தெறுகவென்னவப்படிபிரயாகையிற்செய்தே. (கஅ)

சேமமாகியகயையினிற்சென்றுமுத்தினத்திற்
காமரூபதேசத்துறுங்†கணங்கதியுறவே
நாமமார்தருசிராத்தமதளித்திடநவைதீர்ந்
தேமமார்தருதேவனுய்ப்பணிபலவேய்ந்தே. (ககூ)

நோற்றுமேம்படுங்கோசிகனருகுநீஇநொடிநீ
யாற்றுநல்வினையாற்கடிப்பிறப்பறவமரத்
தோற்றமாயிருந்துறக்கத்துப்புகுவனின்றூய்மை
சாற்றுமாறதே‡யென்செய்கேன்றழையெனச்சார்ந்தான். (உ0)

மற்றநாட்கலிங்கத்துறும்பேயுயர்வாழ்வு
பெற்றமர்ந்திடவாற்றினன்சிராத்தமும்பின்னு
மற்றதில்லையப்பிறப்பெனவயர்வுறவவன்பா
லுற்றுநீயிதுகேளெனப்பேய்கனிந்துரைக்கும். (உக)

மறையுணர்ந்தவன்கொலைபொருட்களவுவல்வதையாங்
கறைவலிந்தனகயையிடைக்கழிந்திடாகமலத்
திறைபண்ணிடுமறைவனந்தென்றிசையியைந்தே
யுறையுமன்னதன்பெருமையோவுலப்பிலவாமரல். (உ௨)

---

* மனத்தொழில்-சங்கற்பம். † கணம்-பிசாசம். ஏமம்-பொன். அஃ தீண்டாகுபெயராய்ப் பொன்னாலாகிய தேவவிமானத்தை யுணர்த்திற்று.
‡ என்ன பிரதியுபகாரஞ்செய்வேன், க்ஷேமமாயிருவென்று.

மாசிலாதயரப்பதியீசன்முன்வயங்கி
மூசிவண்டெழப்பொலிமணிகன்னியின்மூழ்கி
யாசியார்தருசிராத்தநீயளித்திடினன்றே
கூசிவெவ்வினைக்குழாமெலாமழிந்திடுங்குலைந்தே. (௨௩)

ஆய்ந்துகூறியநீதியெனுமலகைதன்மொழிகொண்
டேய்ந்துமாமறைவனத்தினையிறைஞ்சியேயளிகள்
பாய்ந்துசூழ்தரப்பருமுகையவிழ்மணிகன்னி
தோய்ந்துபேய்க்கெனச்சிராத்தமுமியற்றினன்றொல்லோன். (௨௪)

ஆற்றியேயெழுந்தமலனதடிமலரன்பிற்
போற்றிமாமறைப்புனிதனீபேயுறும்புன்மை
மாற்றிநற்கதிவழங்குதியென்றுமுன்வணங்கப்
பாற்றினான்கடிக்கதியினைப்பண்ணவர்பெருமான். (௨௫)

வெய்யபேய்க்கதியொழிதலும்விமானமேன்மகுடம்
பையராமணிப்பணிபலபரித்தபோல்வயங்கத்
தையலார்மணிக்கவரிசூழ்நீழலிற்றயங்கி
யையனாகியகௌசிகன்றன்னடியடைந்தே. (௨௬)

பிரிவருந்துயர்ப்பிறப்பினைநீக்கியேபெறுதற்
கரியநற்பதமளித்தனையதற்கியானாற்றும்
பரிசதொன்றுளதோவுலவாத்திருப்படைத்திங்
குரியநின்கிளைசூழ்தரப்பொலிதியானுயர்க்கோய். (௨௭)

ஈறிலின்பமார்கயிலையினெய்துதற்கீசன்
கூறிநற்கணத்தவர்விரைவுற்றனர்கொடித்தே
ரேறியேகுவனெனப்பணிந்திடர்ப்பிறப்பின்ன
லாறியேகியேகயிலையிலின்பமுற்றமர்ந்தான். (௨௮)

வணங்கியன்னவன்போயபின்கௌசிகன்மகிழ்ந்தே
யணங்குநாறியவேததீர்த்தத்திடையாடி
மணங்கொள்கோடியிற்படிந்தபின்மணிகன்னிமகிழ்ந்தே
யிணங்குமல்லல்வேதாவமிர்தத்தினுமெய்தி. (௨௯)

ஈரவன்பினான்மறைவனத்தீசனைப்போற்றி
வாரமார்தரவாழ்த்தியேகௌசிகன்மனத்துச்
சாரமெய்யருள்விடைகொண்டுதன்பதிசார்ந்தா
னாரமார்மணிகன்னிதன்பெருமைநெஞ்சடைத்தே. (௩௰)

வேறு.

மாயாவினைதன்சரைமேவுஞ்சிரரத்தமதனுன்மாற்றியிடு
தாயாமணிகன்னியின்பெருமைசாற்றவெளிதோதகையார்ந்த
வேயார்தோளிபங்கனருள்வினைவாமதனில்விரைந்தேகித்
தோயாதவரேபிறப்பாழித்தொடக்குற்றென்றுந்தோய்வாரே. (௯க)

வேறு.

சணங்கதியுற்றகாதை
யுணர்ந்தவ * ரொற்கமோவி
யணங்கமர்சொற்கமேவி
யிணங்குவரிச்சைதீர. (௯உ)

பிசாசமோசனச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,உஎ௩.

# தேவலச்சருக்கம்.

கருணைநீத்தத்தெழுங்காலிற்கசிந்துசிந்தைகளிகூர
விருளைநீக்கிப்பெருஞ்சுவையாலியலுமமுதத்துறையேபோ
லருளுமாற்றத்தவரவொழியாததனுலையனுர்மணிகன்னி
தெருளுந்தேற்றத்தேவலன்சேர்செய்கைதெரிப்பாயெனச்செப்பும். (க)

மறையினெறியேமனுமுதனூல்வழக்கே † கற்பவழியிவற்றி
னிறையும்வழுவாதியன்றிடுவானெல்லாமுணர்ந்தான்றேவலனென்
றறையும்பெயரானுச்சிரமத்தொருநாளவலத்துயர்மாயச்
சிறைதீர்சைகடவ்வியனுந்தெய்வயோகிசேர்ந்தனனே. (உ)

வந்தயோகிதனைப்போற்றிவணங்கிவாசச்செழும்புனலாற்
சந்தவடிகள்விளக்கியலர்சாத்தித்தரும்பூசனைசெய்தே
சிந்தைமகிழ்ந்தோதனமளித்துச்சேருந்துயில்சண்டவன்பாத
நந்தவருடிப்பேரன்பானலங்கூருச்சைநல்கினனே. (௩)

வழிபாடதனுலுள்ளமிகமகிழ்ந்தேஞானச்சிவயோகி
யொழியாதுறைந்தான்றேவலனுமொருநாள்போலவுயர்பூசை
மொழியாற்செயலாற்றிரிபின்றிமுயன்றுன்மாதமிருநான்கங்
கழியாவறத்தாற்கழிந்தனவாலங்கணவனன்பளந்திடுவான். (௪)

* ஒற்கம்-வறுமை. † கற்பம் வேதத்தைச் சுருக்கி இருடிகளாற் செய்யப்பட்ட விதிவிலக்குநூல்.

* கருமத்தேவ்லைகடன்தொனிருங்காட்சிச்சைகேட்வ்வியனுந்
தருமத்துறையாற்றவமியற்றுந்தன்மையோர் போற்றனேக்காட்டு
மொருமைச்செயலாலுடனகலாவுறைவாலுவர்ப்புச்சிறிதாக
வருமைத்திறமோர்ந்தறியாதவதனுலுளத்திளுய்கின்முன். (ரு)

படியானீரின்மறைச்சிரமும்பயிலான்பயனில்பன்மொழியே
வடியாதிற்பனுண்டுறங்கிமகிழ்வானெவனேமதித்ததென
வொடியாவுணர்வாலவனேடுமுரையாதொருநா † ளுவாவதனிற்
கடியார்புணரிக்கெழுந்தவனேக்கடலின்கரையிற்கண்ணுற்முன். (சு)

கண்ணுற்றெப்போழ்திவனுற்றதென்னக்கழிந்ததொருதிங்க
ளெண்ணுற்றிவனீண்டுறைந்தென்னவிருந்தோரியம்பக்கடன்மூழ்கி
நண்ணுற்றிலத்திற்சிவயோகிதன்னேக்கண்டுநயந்ததற்பின்
பண்ணுற்றனமென்மொழிபாகன்காசிப்பாகீரதியடைந்தான். (எ)

அங்கணமர்வாரடிபோற்றவமருஞ்சிவயோகியையறிந்தே
யுங்கணுற்றதென்றென்னவுரவோனுற்றேயிருமூன்று
திங்களாயதெனவுரைப்பச்சிந்தைவியப்புற்றின்மேவித்
தங்கக்கண்டுகந்தருவருலகர்தவத்தாற்சார்ந்தனனே. (அ)

பாடிப்பரவிக்கந்தருவர்பலரும்போற்றவமர்வானே
நாடிச்சித்தர்கின்னர ‡ ராசானதேவர்நலமலிந்தார்
கூடிக்கருமத்தேவரிவர்குறுகிப்பரவவவர்நாட்டிற்
றேடிக்கண்டிந்திரனமருஞ்செல்வப்பதியிற்சேர்ந்தனனே. (கூ)

அங்கத்தேவுமடிபரவவமர்ந்தசிவயோகியைக்கண்டே
தங்கித்தாழ்த்துச்சிவயோகியெங்ஙனென்னச்சதுர்முகத்தோன்
பொங்கிப்பொலியுமுலகதனிற்புக்கானிப்போழ்தெனப்போவான்
றுங்கத்தவத்தோன்றெடங்குதலுந்துணிந்துசொல்வான்சுரகுருவே. ()

எழுதாக்கிளவிநெறிவழுவாதிழைத்தாரெய்தற்கியல்பாய
வழுவாப்பயனிவ்வரையப்பான்மதித்தற்கரிதாமனமாசு
கழுவாயோகசித்தியினேக்கலந்தார்கலந்துகளிப்பதுவாந்
தொழுவார்க்கினியவயனுலகந்துணிவாமுன்னுற்றுன்னரிதே. (கக)

அன்றித்துணிவாலேகினேயேலழல்வாய்த்தறுக § ணேரண்ட
வென்றிப்புள்ளுக்கிரையாவாய்வெய்யகொடுங்கான்மேருவரை
குன்றிப்பொடியச்சுழலுமெரிகூருமதனுற்போக்கொழிந்தார்
நின்றிக்கணித்தயோகநெறிதுணிநீயென்னச்சுழன்றெங்கும். (கஉ)

---

* கருமம் நித்தியகருமம். † உவா-பூரணை. சமுத்திரஸ்நானஞ் செய்யும்படி சென்று. ‡ ஆசானதேவர்-தேவர்களுள் ஒருசாரார். கருமத்தேவர், இவரும் தேவர்களுள் ஒருசாரார். § ஏரண்டம்-ஓர்விதபக்ஷி.

கற்பாற்பெரியவருந்ததிதன்கணவனுறையுமாச்சிரமத்
தெற்பாவிருக்கைபுகுந்துமனத்தெண்ணமெல்லாமுரைத்தெளிதே
யற்பாலயனார்சிவயோகமின்றிப்புகுதவருணெறிநீ
பொற்பாலுரைத்தியெனவோர்ந்துபுகல்வானுலகம்பேர்ந்திடவே. (கந)

வேறு.

திரிபுமாற்றியேதெளிதருஞானமுந்தீர்ந்துவீட்டினைச்சேரப்
புரிவுசார்ந்தவர்மறைவனம்போற்றியேபொலியுநீர்மணிகன்னி
பரிவினுடவேபயந்திடுமியோகத்தின்பயிற்சியற்றவர்தாமும்
வரியருமணிகன்னியிற்படியவெண்வாய்ந்தசித்திகள்வாய்வார். (கச)

சோமயாகமேமுதலியதொடங்கிடார்சுவர்க்கமேபுகவேண்டி
னுமமார்மணிகன்னியிற்படிந்திடகல்கிடுகலஞ்சார்ந்த
தாமவார்குழற்கன்னிசைமுதலியதானமீந்திடார்தாமு
மேமமார்பயனெய்துவர்தடமுதலியற்றிடாதவரேனும். (கரு)

உடம்பினோடுயிர்சுவர்க்கத்தினுற்றிடவுன்னினர்மணிகன்னித்
தடம்படிந்திடச்சார்வர்மற்றிச்சையிற்றழைத்திடும்பயனெல்லா
மடம்புகுழ்மணிகன்னியேயளித்திடுமர்தலாலயன்மேவு
மிடம்படர்ந்திடவிச்சையேன்மறைவனத்தேகுதிகடிதென்ன. (கசு)

இனியவாய்மொழிநன்றெனவேகியேயியன்மறைவனமேவிப்
பனியபாயொளிபடர்வெயிற்பரப்பினுற்பரிதியம்புலிகோடி
முனிவுதீர்தரமுருகொடுசெழுஞ்சுடர்முகிழ்த்தமாளிகைவீதி
யனிகமோவியேயிறைமணிக்கோபுரத்தடிபணிந்தன்போடும். (கஎ)

அடிகணீரினுற்கழுவியாசமித்தொளியலங்குநீர்மணிகன்னி
படியுமாதரவாற்படிந்ததிற்செயும்பல்வினைத்திறமாற்றி
முடிவிலாமுதலடிதொழுதவ்விடைமொழிந்தயாத்திரையாறு
மடிவிலாதிழைத்தவ்விடையிவ்வணமாதமொன்றமர்ந்திட்டான். (கஅ)

மாதமாயபின்வடிவுறுமுடலொடுமலரவனுலகேறச்
சீதநீர்மணிகன்னியிற்படிந்துளந்தெளிவுறுந்திருமேவி
வேதநாயகன்றிருவுருக்கண்டுமெய்விதிர்விதிர்த்துறுமன்பாற்
பாததாமரைபணிந்துளங்குழைவுறப்பரவினன்றுதிசெய்வான். (கக)

காயமிந்தியங்கரணமென்றிவையிவைகலந்தவத்தொழில்காமத்
தேயுமின்பமுந்துன்பமுமவத்தையுமின்மையுமிறையோனும்
பாயவேதவும்பற்றறவிளக்கியேபடாதத்திற்பரஞ்சோதி
யாயவாரணவனத்துறையமலநின்னடியிணைபணிவாமே. (உ0)

அலகிறந்தபல்விகற்பமுமீசனுமாவியுமயன்மாலு
மிலகுமந்தரியாமியுமுலகுருவிறைவனும்பதமூன்றிற்
குலவுமப்பயன்கொண்டிடுமுபாதியிற்குறித்தமூர்த்திகண்மற்றும்
பலவுமாயுளம்பற்றறும்பிரமமாம்பரமகிற்பணிவாமே. (உக)

கனவினுற்றிடும்பொருளெலாமோர்ந்திடிற்காண்பவன்றனேயா
மனவிகற்பமாமிவையெலாநீயலான்மற்றிலைமறைதேடு
மனகமாயுளதாய்ச்சிதானந்தமாயகண்டமாயருண்மேவித்
தனதுதாளுறுமன்பருக்கின்பமாந்தலைவகிற்பணிவாமே. (உஉ)

காலதேசமும்பொருள்களும்வரையறைகாண் பதற்கரிதாகி
மூலமாகியவ்வியத்தமாய்ப்புருடனுய்முழுமுதறனேயா
யேலவித்திறமிதுவெனவுணர்வுறுதெல்லையற்றெனையாள்வான்
ஞாலமார்மறைவனத்தமர்ந்தருள்செயுநாதகிற்பணிவாமே. (உ௩)

உள்ளநெக்கருளுருவமாய்த்தோத்திரமுரைத்தனுமுலகேத்தும்
வள்ளலுற்றெதிர்மறையெனநின்றுதிமகிழ்ந்தனமனமேவிக்
கொள்ளவேண்டியவரமுரையென்றிடக்கோதிலாக்கொழுந்தேறல்
வெள்ளமுற்றடிபணிந்தயர்ந்தின்னனவிளம்பினன்வெருவுற்றே. (உச)

வேறு.

எளியவெனக்குமருளுதியேலேன்றவுடலோடயனுலகந்
தெளியவெய்திச்சிறப்புறவுந்திருவார்சைகீடவ்வியனே
டொளியார்சித்திபலவுறவுமுதவியருள்வாயெனவோங்குங்
களியான்மகிழவவையளித்துக்கருதிப்பின்னுங்கரைந்திடுவான். (உரு)

இன்றுமுதலாமணிகன்னியெய்திப்படிந்தாரெவரேனுந்
துன்றியோகசித்தியினைத்துறவாதமர்வாரெனவுரைத்தே
வென்றிவிடையோன்மறைந்திடலும்விதியிற்பணிந்தேவிடைகொண்டு
நன்றிசாலுந்தேவலனுநயந்தேயயனூர்நண்ணினனே. (உ௬)

பதியிற்சேர்ந்ததேவலனைப்பதுமத்தோனுமெதிர்ந்தேத்தி
விதியிற்பூசைபுரிந்தருளமேவியமர்ந்தான்விரகொடியான்
கதியிற்கண்டேமனமகிழ்ந்தான்களிவண்டிரியக்கருங்காவி
துதியிற்றவழ்நீர்மணிகன்னிமேன்மையெவரேதுவல்வாரே. (உஎ)

வேறு.

முத்திஞானத்தையின்றியேயளித்திடுமுதிர்ந்த
சித்தியோகத்தையொழித்தருள்செய்யுமத்திறத்தாற்
பத்தியாகியேபரவவெப்பயன்களும்பயிற்றுஞ்
சத்தியாலரனருளதாமணிகன்னித்தடமே. (உஅ)

வேறு.

கோதிறேவலன், போதன்மேவிய,
வாதியூர்தருங், காதையோதவே. (உக)

தேவலச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,௩0௨.

---

# தீர்த்தமுறைமைச்சருக்கம்.

நறும்போதலர்த்துமணிகன்னிநலமார்பெருமைத்திறங்கேளா
விறும்பூதெய்திமாந்தாதாவெந்தாயிறையாமயனுலக
முறுந்தேவலனேக்கண்ணுற்றயோகிசைசீடவ்வியனிப்
பெறும்பேறென்னென்றருள்காதைபேசகென்னப்பேசுவான். (க)

தருவினீழற்பெருந்தேவர்தவத்தோரியக்கர்கந்தருவர்
வெருவிலசுரர்திசைபுரப்போர்மேன்மைவேந்தர்வினைவேட்கை
யொருவுஞ்சனகாதிகள்சூழவுலகம்புரக்குமயன்றன்பான்
மருவிச்சைசீடவ்வியனுமானயோகிவகுத்துரைப்பான். (உ)

புண்டரீகப்பொகுட்டுறையும்பொருளேபுவனம்பலபூத்த
வண்டர்பெருமானினதுபுரியடைவாரிவரென்றருளென்னத்
தண்டரமரைமேலிறை, யோகிதனக்குத்தனதுபுரியிடையின்
புண்டாரிவரென்றவர்பான்மையுளத்திற்றெளியவுரைக்கின்றான். (௩)

எழுதாவேதசிரப்பொருளேயியல்பிணுய்ந்தும்பொறைவாய்ந்தும்
பழுதா * மையமுளத்தகலார்பரமமுணர்ந்துமனுபவத்தாற்
றழுவார்சீவன்முத்திநிலைசாரார்சமாதித்தகையோக
ரெழுவாயகிலத்தியானத்தாரெமதுபுரியினெய்வரென. (௪)

சொல்லுமறையோன்முகநோக்கிச்சொற்றவிவற்றினென்றிலனு
யல்லும்பகலுங்கருமநெறிக்கலேதேவலன்றனின்பதியி
னெல்லும்வகையுநீபூசையுஞற்றுஞ்சிறப்புமுரைத்தியெனப்
புல்லுமடற்பூங்கமலத்தோன்யோகிக்கினிதுபுகல்கின்றான். (௫)

---

* ஐயமுளத்தகன்றார் முதலாயினர் மேற்பதமடைவார்; அகலாதார் முதலாயினரே ஈண்டெய்துவர் என்பது கருத்து. அகிலத்தியானத்தார்- உலகஞாபகமுடையவர்.

ஞானயோகநெறியன்றிநமதுபுரிமானகரீசன்
ருனமிவற்றினுடலோடுஞ்சார்தற்களிக்குந்தலைமையதா
யூனமகற்றிமறையோகருரைத்தற்கரிதாயுறும்புகழால்
வானமளிக்குமறைவனத்தின்மல்குந்தீர்த்தமொன்றுளதால். (சு)

தாதுமாந்திப்பெடையளிகாறடவத்துணையோடனந்துயிலும்
போதுவேய்ந்தமணிகன்னியென்னும்பெயராற்பொலிந்துலக
மோதுந்தீர்த்தமுளததன்சீருணராதொருகாற்படிந்திடினுந்
தீதுநீங்கிநமதுலகஞ்சேர்ந்துதிகழ்வார்திருவிலரும். (எ)

தீயகுலத்தோன்சிறந்தகுலஞ்சேர்ந்தோனெவனேயாயிடினுங்
காயவழுக்குத்தீர்ப்பனெனக்கருதிப்படிந்தானேயெனினுந்
தூயநமதுபுரியடைவன்றுணிந்துவிதியாற்றோய்ந்திடுமேன்
மாயனுலகுமரனுலகுமன்னுமுடலோடெய்திடுமால். (அ)

இன்னுமழியாமறைவனத்தினேயுந்தீர்த்தமெண்ணிலவாம்
பன்னுமிலிங்கம்பலவாகும்பகர்ந்ததொன்றிற்படிந்துதொழின்
மன்னுநமதுபுரியதனின்மறைத்தேவலன்றுன்மணிகன்னி
யென்னுந்தீர்த்தம்படிந்தீங்குற்றெம்மாற்பூசையேய்ந்தனனே. (கூ)

மறித்துக்காற்றைப் * பதித்தாருமறையின்சிரத்தைமதித்தாருங்
குறித்திப்பதியினெமைப்பூசைகொடுத்துப்புகழ்வார்கொடுந்தீமை
பறித்துத்திகழுமணிகன்னிபடிந்தாரெம்மாற்பயில்பூசை
பொறித்துக்கொள்வாரிதுவெவர்க்கும்புகலற்கரிதாம்புரிவுடைத்தே. (க0)

என்றுமொழியவாச்சரியமெய்திச்சைகிடேவ்வியனு
மன்றல்கமழுங்கமலத்தோன்மலர்த்தாள்வணங்கிமறைவனத்திற்
றுன்றுந்தீர்த்தந்†குறியறியத்தொகுத்துத்துகடீர்த்தவையோங்கி
யொன்றுமேன்மையெளியேனுமுய்யவுரைத்தியெனவுரைப்பான். (கக)

நினையிற்கொடுந்தீவினையகற்றிநிமலமாக்குமணிகன்னி
புனையிற்றீர்த்தராசனெனப்பொலியுமேதிற்புரிந்தாடிக்
கனையுந்திரைநீர்க்கங்கைமுதற்கடவுட்டீர்த்தங்கலிவலியா
லினையும்பாவநிரையகற்றியின்பமேவியிலங்கினவால். (கஉ)

ஏதிற்படிந்துதேவலனீங்கிவர்ந்தானிமையோர்வியனுலக
மீதிற்பொலிந்தான்றிரிசங்குயதுவுஞ்சாபவினைவீழ்த்தான்
காதிப்படுக்கும்புலிக்கஞ்சுங்கள்வன்கலந்தானரனுலகங்
கோதிற்பிரிந்து § பருப்பதனுங்குணத்தாலுயர்ந்துகுலவினனால். (கங)

---

* பதித்தாரும், மதித்தாரும் ஈண்டு வந்து நம்மைப்பூசிக்கப்பெறுவர், மணிகன்னியிலே ஸ்நானஞ் செய்தார் ஈண்டுவந்து நாம்பூசிக்கப்பெறுவார் என்பது கருத்து. † குறி-சிவலிங்கம். § பருப்பதமுனிவர்.

வேதவனத்துக்கணியாகிவிளங்குமணிகன்னியின்பெருமை
நாதனுரைக்குமலதெவரேநவில்வாரதற்குமேல்பாலி
னேதமகற்றுங்கௌசிகன்றனிலஞ்சிசாபமீரெட்டி
ஞேதவுளதாமிந்திரனுருதவும்படிந்தவுரவோர்க்கே. (கச)

* தேவர்வணங்குஞ்சபைமேல்பாற் † பரமானந்தத்திகழ் கூப
மேவுமதனிற்படிந்தார்கள்விமலஞானமேவுவரா
லோவிலதற்குமேற்கிடையினுரைத்தவில்லெட்டளவையுறப்
பரவுமருத்தத்திரிகோடியென்னுங்கூபம்பண்புறவே. (கரு)

§ ஒடுங்கியுலகமனைத்துமமரனுருவிற்சேருங்காலையுல
கடங்குமருத்தத்திரிகோடிதீர்த்தமனைத்துமழைத்தமருங்
கிடங்குற்றமரக்கிணறியற்றிக்கேடற்றமரப்பரனளித்தா
○ னிடங்கொடீர்த்தமனைத்தினுந்தோய்ந்தெய்தும்பயனையிஃதியும். (கசு)

அருத்தத்திரிகோடியிற்படிந்தேயளிக்குந்தொழிலெற்காயதுவான்
வருத்தமறவேமேன்மையினைவழங்குந்தீர்த்தம்வாயுதிசைப்
பொருத்தும்பத்துவிற்கிடையிற் + புவனம்பூத்தபூவைமுனந்
திருத்தமாகுஞ்சுதாகூபமென்னுந்தீர்த்தஞ்சிறந்துளதால். (கஎ)

நாசிகேதுவாச்சிரமத் = தணியாழ்ப்பழித்தநன்மொழியாள்
பூசைமேவவரிவகுத்துப்போற்றுந்தீர்த்தமதிற்படியிற்
றேசுசாலிந்திரபதத்திற்சேர்க்கும்பரிதிதிக்கினிடை
மூசுமணியார்மணிகன்னிதனக்குச்சாபமுப்பதிடை. (கஅ)

---

* தேவர்வணங்குஞ்சபை-தேவபத்தசபை. † இத்தீர்த்தம் பிற்காலத்து முதலாவரணவிருத்தியின்பொருட்டுத் தூர்க்கப்பட்டது. அந்தர்க்கிரகயாத்திரைசெய்வோர் அவ்விடத்திருக்குஞ் சிறுகுழியிற்சிறிதுசலம்விட்டு, அத்தீர்த்தபாவனைசெய்து சிரசிற்புரோக்ஷித்துக்கொண்டு அப்பாற்செல்வர். § இந்நிலவுலகத்தியாண்டுமடங்கும் மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் தாமழியவருமூழிகாலத்தழிவின்மைப்பொருட்டுச் சிவாஞ்ஞையினாலே ஈண்டு வந்தொருங்கிருந்தமைபற்றி அருத்தத்திரிகோடி என்னும் காரணக்குறியுளதாயிற்று. அர்த்தம்-அரை. திரி-மூன்று. எனவே மூன்றரைக்கோடி தீர்த்தங்களையுடையதென்றதாயிற்று. முதனூலில் இதற்குச் சார்த்தத்திரிகோடி எனப்பெயர் கூறப்பட்டது; அர்த்தத்திரிகோடியோடுசேர்ந்தது சார்த்தத்திரிகோடிஎன்க .இதுவே சுவாமிதிருமஞ்சனகூபம். ○ இடமென்றதிண்டிந்நிலவுலகத்தை. + வீணாவாதவிதூஷணியம்மை சந்நிதியிற் சுதாகூபமென்னுந் தீர்த்தஞ் சிறந்திருக்கின்றது. இதனை அமுததீர்த்தமெனவும் கூறுப. இதுவே அம்மைதிருமஞ்சன கூபம். அது வருஞ்செய்யுளிற் பெறப்படும். = அணி-அணிமை. அரி-இந்திரன்.

வேறு.

வீறுபுகழ்க்கக்கிவான்றீர்த்தமதுவிழைந்தவெல்லாம்விளைக்குமப்பாற்
றேறுவடதிசைப்*பகழிவீழ்பாதிப்பாண்டவர்தந்தீர்த்தமேவு
மூறுமதனீர்மூழ்கிற்சயமளிக்குமதற்கீசனுற்றதிக்கிற்
கூறுமடலஞ்சுமான்றீர்த்தமதுகோல்வீழ்ச்சிகுறித்தபாதி. (கக)

† அங்கமகந்தனக்காகுமயமதனையத்தலையினஞ்சுமானுந்
தங்கவடைந்தான்சதபத்தயமேதப்பயன்றருமத்தடநீர்மூழ்கிற்
பொங்கியெழுவீரகத்திபொடித்தான்முன்கணைவீழ்ச்சிபொலிவியாதன்
பங்கயநற்றடமதன்மேல்பாலிலங்கும்வியாதமுனிபரித்தலிங்கம். (உ0)

பட்டமதிற்படிந்துமுனிபரித்தலிங்கம்பணிந்தவர்நம்பதியிற்சேர்வார்
மட்டவிழுமதன்வடபாற்‡சோகரணப்பெயரீசன்மறைவியாதன்
றெட்டகுழிபடிந்ததனைத்தொழுதாருநம்முலகந்துறுவார்கீழ்பா
லிட்டமுறுகுறியிதுவுமிரவிபத§மாடகப்பேரீசனல்கும். (உக)

வேறு.

தென்றிசையதனின்மேவுஞ்Oசித்திரகுத்தவீசன்
பொன்றிகழ்வியாததீர்த்தம்படிந்தவற்போற்றிவான
மொன்றிவீற்றிருப்பர் + வேதவனத்திறையுவக்குங்கீழ்பால்
வென்றிசேர்கணையின்வீழ்ச்சியகத்தியதீர்த்தமேவும். (உஉ)

அன்னதிற்படிந்தாரீசனமர்பதியடைவா = ரங்கி
மன்னியதிக்கினுகுநளத்தடமகிழ்ந்துமூழ்கிற்
பின்னியபாவநீங்கும்பெருமறைவனத்துநாதற்
குன்னுமுத்தரத்துச்சாபமுகுங்கணையொழிவின்றென்றும். (உங)

எறிதிரைமணிசேர்வேதவமிர்தமென்றிசைக்குமேன்மைக்
குறியுறுந்தீர்த்தமேவுமதன்கரைகுலவியென்றுஞ்
செறிதரும்விச்சையீசனவனடிசென்னிசேர்க்கின்
மறிவுறுமவிச்சைவேதம்வகுத்ததத்தீர்த்தமன்றே. (உச)

---

* அரைப்பகழிவீழ்ச்சியில். † அங்கத்தோடுகூடிய யாகத்திற்கு வேண்டப்படுங்குதிரையை அத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து அஞ்சுமான் என்பவன் பெற்றான். ‡ கோகரணேசன். § ஆடகேசன். O சித்திரகுத்தேசன். + வேதாரணியேசுரர் சந்நிதானத்துக்குக் கிழக்குத்திக்கில். = அகத்திய தீர்த்தத்திற்கு அக்கினிதிக்கில் அரைக்கணைவீழ்ச்சியில் நளதீர்த்தம் பொருந்தும்.

ஆங்கதிற்படிந்துவேதமனைத்தையும்வியாதனென்பான்
பாங்குறப்பகுத்தானீசன்பதமருள்பண்பிற்றுகு
மோங்கியவதற்குத்தென்பால்விற்கிடையொருபதென்னத்
தாங்கருஞ்சனியின்றீர்த்தமதிற்சனிதலைவனானான். (௨௫)

அத்தடத்தென்பான்முப்பதாயவிற்சுக்கிரீவன்
முத்தணிவாவி*யற்பமங்கிமூலையினூழ்கிற்
கொத்தலர்தருவினீழலிந்திரனோடுங்கூட
வைத்திடுநிருதிதிக்கின்வார்சிலைபத்தின்வைகும். (௨௬)

அங்கதன்றீர்த்தமூழ்கி†னரிபதம்ளிக்கும்வேதச்
சங்கரனிருதிதிக்கிற்‡சரத்தினச்சுனிகடீர்த்த
மங்கியல்கொடுநோய்தீர்க்குமங்கதன்வாவிமேல்பால்
வெங்கணைவீழ்ச்சிமேன்மைவிளைத்திடுங்கவயன்றீர்த்தம். (௨௭)

தீர்த்தமங்கதற்குவாயுதிக்கினொன்றரைக்கோற்சேர்வி
னார்த்திடுங்கவாக்கன்றீர்த்தம்பிங்கலனருகுசேர்க்குஞ்
சேர்த்ததன்வாயுதிக்கிற்§கந்தமாதனனற்றீர்த்த
மீர்த்தகோல்வீழ்ச்சித்தாகுமிந்துவின்பதத்தையீயும். (௨அ)

சொற்றவித்தீர்த்தவாயுவாசையிற்றோன்றும்வாயுப்
பற்றியதீர்த்தம்வாயுலிங்கமும்oபதியுமுற்றார்
மற்றவன்பதத்துச்சேர்வர்வளித்திசைமயிந்தன்றீர்த்த
முற்றிடுமம்புவீழ்ச்சி+யான்புரியுதவுமன்றே. (௨௯)

ஆயவத்தீர்த்தவாயுதிசைக்கணையளவினாவி
மேய=வத்துவிதன்றீர்த்தம்விண்ணுலகளிக்குமேன்மை
வாயு‡மாருதிநீர்வேதவமிர்தத்துவடக்குவாளி
யேயிடைப்பாவமீர்ந்தே§மறையவனிருக்கையீயும். (௩0)

---

* நேர்மூலையன்று; ஒருசிறிது கோணிய மூலையென்பது விளக்கிய அற்பமங்கிமூலையினு மென்றாரென்க. † அரி-இந்திரன். ‡ ஓர்பாணவீழ்ச்சியில். அச்சுவினிகடீர்த்தங்களைத்தற்காலத்து இரட்டைக்குளமென வழங்குப. இது ஓர்பெருந்தடாகமே இருகூறாகப் பிரிந்திருக்கின்றது. § கந்தமாதனன்-ஓர் குரக்குச்சேனாபதி. o பதியும்-தங்கும். + ஆன்புரி-பசுலோகம். இது மேலுங்காட்டப்பட்டது. ஈண்டுப் பசு என்றது காமதேனுவை. = அத்துவிதீர்த்தம் - அந்தத்துவிதீர்த்தம். ‡ மாருதிநீர் - அனுமதீர்த்தம். § பிரமலோகம்,சத்தியலோகம், வெவ்வேறென்பாருமுளர்.

வடதிசையதற்குவாளியிரண்டிடைத்தனதன்வாயுத்
தடமவனிலிங்கமேவிச்சங்கரன்கயிலைசார்வா
ரிடமுறுமதற்கோரேவிற்கௌதமனிலைஞ்சிமேவிக்
குடதிசைக்குலவுமாடிற்குறைவி*னம்புரியிற்சேர்வார். (௯க)

இயக்கர்கோனமைத்துப்போற்றுமிலிங்கத்திற்கெழுபான்விற்பாற்
புயற்குளிர்மேனி†மாயன்பொருந்துவன்சேதுகாவல்
வியக்குறுமிராமதீர்த்தம்விளங்கிடுமவன்முன்மேவி
மயக்கறப்படிந்துபோற்றின்மாலுலகடைவர்மாதோ. (௯உ)

எல்லியலிராமதீர்த்தநிருதியினிலக்குவன்பேர்
புல்லியவாவியாடிவரதனைப்போற்றின்மாய
னல்லியலுலகஞ்சார்வர்நவின்றமால்வாயுதிக்கி
னல்லியல்கூந்தற்சீதைவாவியம்பகற்சித்தாகும். (௯௩)

மாலுலகடைவர்சூழ்கின்வரதனீசானதிக்கிற்
கோலுறுமளவிற் ‡ சாவித்திரிசிவகுறியின்முன்னர்ப்
பாலுறுமதற்குநாம§மிரணமோசனம்பானீரி
னுறப்படிந்துசாவித்திரியரனுருவம்போற்றின். (௯௪)

மறையுருவாகுங்காயத்திரியினைமதித்துச்செப்பாக்
குறையகன்றிரணதோடங்குமைத்துநற்கொள்கைசேர்வா
ரறைதருகிழக்கின்o வேதவமிர்தத்திற்கைந்தொடைந்தா
யிறைதருசாபத்தெல்லை + வயிரவனிலைஞ்சிமேவும். (௯௫)

படிந்ததன்கரையிற்குஞ்சிமழித்திடிற்பாவமுற்று
மடிந்துறுஞ்சிவலோகத்தின்மருவுவரஞ்சுமானற்
றடந்தனக்கிரண்டுகோலிற்றகுவடதிசையிற்சாரு
மிடந்தொடும் = குமுததீர்த்தமுத்தியையெளிதினீயும். (௯௬)

‡ பாற்கரேசற்குமேல்பான்முச்சதம்பரித்தசாப
மேற்கனலளித்தநீலன்வியன்றடம்விழைவினெம்மைப்
போற்கவின்றுறைவரப்பாற்புங்கமைந்தகன்றபூவிற்
காற்கணிதிசையிற்சாம்பவன்றடங்கதியைக்காட்டும். (௯எ)

---

* ஈண்டு நம்புரி என்றது சத்தியலோகத்தை. மேற்செய்யுளின் மறைய வனிருக்கை என்றது பிரமலோகத்தை என்பதும் அவர் கூற்றென்க. † வரத ராசப்பெருமாள். ‡ சாவித்திரீசுரன். § இரணம்-கடன். o வேதவமிர்தத் திற்குக் கிழக்கின் எனக்கொண்டு கூட்டுக + வைரவதீர்த்தம். = குமுதன் ஓர் குரக்குச்சேனாபதி. ≡ சூரியபுட்கரணி தீரத்துள்ள பாற்கரேசனுக்கு மேலைத்திக்கிலே.

சாம்பவன்றீர்த்தக்கீழ்பாற்சரமொன்றிற்சுசேனன்றீர்த்த
மாம்படிந்தவர்க்குமுத்தியளித்திடுமலருமென்பூத்
தேம்படர்மறைசையீசனிருதியிற்றிரிகுரோசத்
தேம்பரி*யிரவிதீர்த்தமெமனுலகெய்தல்கும். (கூஅ)

ஆவணியாதிவாரங்கார்த்திகையருக்கன்வாரம்
பூவணிபரிதிநாமப்புட்கரணியிற்போய்மூழ்கிற்
காவணிகயிலையெய்வார்கதிரவனதனின்மூழ்கிப்
பாவணியிலிங்கமாற்றிப்பரிந்துலகேத்தப்பட்டான். (கூக)

† சோமபுட்கரணியென்னத்தோற்றுமுத்தரத்துத்தீர்த்த
நாமமேய்ந்ததனிற்சோமநாதனைநயந்துபோற்றிற்
காமமார்சோமலோகங்கலப்பரித்தீர்த்தக்கட்டந்
தாமமாரிலிங்கமாற்றிமதிதக்கன்சாபமாய்த்தான். (ச0)

அனையதன்கீழ்பாற்சஞ்ஞையாகியதேவிதீர்த்த
மினையதுமனச்சங்கற்பமீந்திடும்பாற்கரேச
னினைவுறுமீசானத்துநீடிருசதமாஞ்சாப
முனைதருமனுவின்றீர்த்தமூழ்கிற்பார்முதல்வராவார். (சக)

§ சுருதிமாவனத்திற்றீர்த்தந்தொட்டுமூவுலகுமேத்த
மருவுநூன்மானமீந்தான்மனுக்கதிரவனீர்முன்ன
ரொருகணைவீழ்ச்சிச்சத்தசாகரவுயர்பொற்றீர்த்தம்
பொருபுனல்படிவார்நந்தம்புரியிடைப்புகுந்துவாழ்வார். (சஉ)

அச்சுனீதீர்த்தத்தப்பாலம்புநான்ககற்சிமேவிக்
கச்சுறுநிருதிதீர்த்த ० நைருதங்கலக்குமூழ்கி
னெச்சமினம்பாலேய்வாரிரவியீசற்குமேல்பாற்
பச்சிமங்கெவ்வியூதிமூன்றிடைப்பகருந்தீர்த்தம். (சங)

┼ மருத்துவரெழுவர்பட்டம்வயங்கிடுமதனின்மூழ்கித்
திருத்தகுமருத்துவீசன்சேவடிதிளைத்தோர்தேனுர்
சருத்தலையரசராவர்சாம்பவன்றடத்தீசானத்
தருத்தரும்பிரமதீர்த்தமுறுங்கெவ்வியூதியொன்றில். (சச)

---

* சூரியபுட்கரணி. † ஓர்தடாகமே தென்பாகமாய்ச்சுடுவது சூரியபுடகரணியும், உத்தரபாகமாய்க் குளிர்வது சந்திரபுட்கரணியுமாம். §மனு என்பவர் வேதவனத்திலே இத்தீர்த்தத்தை அகழ்ந்து திரிலோகமுந் துதிக்கப் பொருந்தும் ஸ்மிருதிநூலைத் தந்தனர். நூன்மானம்நூலளவை. ० நைருதம்-நிருதிதிக்கு. கெவ்வியூதி-குரோசயுகம் குரோசம்-கூப்பிடுதூரம். யுகம்-இரண்டு. ┼ சத்தவாயுதீர்த்தம். ० பிரமதீர்த்தம்-பிரமசரசு

ஆயிடைவேள்வியாற்றியகிலமுமளிக்குமாற்றன்
மேயினனதனின்மூழ்கிவிளங்குமத்தலையினீற்றை
வாயுறப்பழிச்சிமெய்யின்வடிவுறவணிந்தோரன்பாற்
ருயினுமினியனுயசங்கரனுலகஞ்சார்வார். (சரு)

அன்னதன்வடக்குவாயுவிலிங்கத்தினடுத்தமேல்பாற்
பன்னுமோரம்பின்வீழ்ச்சிப்பாங்கரிற்பரிவினூலே
மின்னவிரிலிங்கமாற்றிவிரும்பியவரிசையாற்ற
முன்னொருன்*பட்டஞ்செய்தேமுதல்வனைப்பூசையாற்றி. (சசு)

உருப்பசியுருவான்மிக்கதிலோத்தமையுவர்தங்காம
விருப்புறுகலவிதந்தவெவ்வினைவீட்டியானூர்
திருப்புணர்ந்துயர்ந்தேனந்தச்சிவகுறிதீர்த்தம்போற்றி
னெருப்புறுபிறரிற்காமநிறைவினைநீங்குமன்றே. (சஎ)

† யான்செயுமிலிங்கத்தென்பானிருதியினியலோரம்பிற்
றேன்செயுமென்சொல்வாணிசெய்தடம்படியிற்செஞ்சொற்
ருன்செயும்வாக்குநல்குந்தருமெனதிலிங்கமேல்பாற்
கூன்செய்விற்சரமூன்றேயுங்காசிபன்குயிற்றிலிங்கம். (சஅ)

காணினம்பதத்தையீயுங்காசிபதீர்த்தமீசன்
பேணியதிசையிற்சாபம்‡பத்தினிற்பிறங்குமன்றே
ணுணினிற்சிறந்தபன்னிநலங்கிளர்தடங்கோற்பாதி
சேணுறத்திகழுமங்கிதிக்கினிற்றேசினூர்ந்தே. (சகூ)

நனைந்திருதடத்துங்காசிபேசனைநயந்துபோற்றிப்
புனைந்திடினெம்மைப்போலப்பொலிவரத்தடவீசானந்
தனைந்தெழூபகழிவீழ்விற்சுடர்விடுந்§தருமதீர்த்த
முனைந்துறுமதனின்மூழ்கின்முக்கணனுலகஞ்சேர்வார். (ருo)

செப்பியவதற்குவாயுதிக்கிடைத்oதீமைத்தீர்த்தம்
வைப்புறுமதனின்மூழ்கின்வல்வினைமாயும்வாயு
வொப்பறுதிசைக்குரோசத்தொளிர்தருங்காளிதீர்த்த
மப்பிடைப்படியிற்றுன்பமகன்றரனுலகத்தாவார். (ருக)

---

* இதன்பெயர் பிரமதீர்த்தம். இது பிரமசரசுவன்று, வேறு. † பிரம லிங்கம். ‡ பன்னி-சாத்தியேகவசனம்; அவர் பதின்மூவராகலின். அது காசிபபத்தினிகடீர்த்தம் எனப்பெயர்பெறும். § தருமதீர்த்தம் - தருமதேவதைதீர்த்தம். o தீமைத்தீர்த்தம்-அதர்மதீர்த்தம். இதுதர்மதீர்த்தத்துக்கு வாயுதிக்கில் நூறுவிற்கிடை தூரத்துள்ளது. அதர்மதீர்த்தம்-பாவம் தன்றீமைநீங்கஇயற்றிய தீர்த்தம்.

கரியகாளித்தடத்தென்மேற்குரோசத்தமருங்கதிராழிப்
பெரிய*மாயன்சிவலிங்கந்தென்பாற்பிறங்குமரிதீர்த்தந்
தெரியுமதற்குவடதிசையிற்றிருவின்றீர்த்தமிவற்ருடிப்
பரிவினரியீசனைப்பணிவார்பரமபதத்தைப்பற்றுவரால். (ருஉ)

வேறு.

காளிதீர்த்தத்திசானங்கலந்த†தமரிகயமேவும்
வாளிவீழ்ச்சிதனிற்படிந்தார்மங்கையுமைதன்பதஞ்சேர்வா
ராளியூர்வாடீர்த்தமதற்கப்பாற்குரோசத்‡தருத்திரர்தங்
கோளில்குண்டங்காற்றிசையிற்குடைந்தார்சிவமாய்க்குலவுவரால். (ருங)

o தேசாரிலிங்கந்தீர்த்தமிவைசேர்ந்தீசானத்தருத்திரப்பேர்
மூ*சாமிலிங்கம்படிந்துதொழின்முதல்வனுவார்முடியாதே
யாசார்வினையுமகன்றிடுவரதற்குக்குரோசத்தணிகிழக்கா
ரீசானத்தின்வசிட்டமுனியிலிங்கமிலஞ்சிவடக்கிலங்கும். (ருச)

படிந்துதொழுதார்தமைநமதுபதத்தினிருத்தும்பவனதிசை
முடிந்துகெவ்வியூதியெனுமூன்றிற்=பாராசரவிலிங்கங்
கடிந்துதீமையுறுமதனேர்கமழ்≡புட்கரணிமூன்றவற்றிற்
படிந்தவ்விலிங்கந்தொழப்பரமன்படிவமாவர்பவமறவே. (ருரு)

வெள்ளிதீர்த்தங்கொற்றவைபேர்விளங்கும்பட்டக்கிழக்கொருகோற்
||பள்ளியாகுமம்பதத்தைப்படிந்தார்க்களிக்குமதன்கீழ்பாற்
றெள்ளினொருகோலுசத்தியன்பொன்றீர்த்தமவற்றிற்றிளைத்தாடி
னுள்ளியுறைவர்நம்புரியிற்கெவ்வியூதியரையவைக்கே. (ருசு)

குணக்|||கங்கிராவின்குண்டமதாங்கொடுக்குமதுபுரிதென்பா
லிணக்குங்கோலிற்புலகனிலங்கிலஞ்சியெம்மான்பதமீயு
மணக்குங்கெவ்வியூதியிடைவன்னித்திசையிற்|புலத்தியன்பேர்
புணர்க்குந்தீர்த்தம்பிரமபதம்புனையவளிக்கும்புணர்ந்தார்க்கே. (ருஎ)

---

* மாயன்சிவலிங்கம்-விஷ்ணுபூசித்தசிவலிங்கம். அரிதீர்த்தம்-விஷ்ணு தீர்த்தம். பரமபதம்-விஷ்ணுபதம். † துர்க்கைதீர்த்தம். ‡ காலாக்கினி ருத்திரகுண்டம். o காலாக்கினிருத்திரலிங்கத்துக்கும், அவர்தீர்த்தத்துக்கும் அதிசமீபத்தீசானதிக்கில் உருத்திரர்சரசுவும் உருத்திரரிலிங்கமுமுள. அத்தீர்த்தத்திற் படிந்து அவ்விலிங்கத்தைத் தொழின். ┼ ஆம்-நீர். = பாராசரவிலிங்கம்-நீட்டும்வழிநீட்டல். நேர்-சந்நிதி. ≡ புட்கரணிமூன்று-புட்கரணித்திரயம். இப்புட்கரணித்திரயமே பராசரதீர்த்தமென உய்த்துணர்ந்து கொள்க. || பள்ளி - இடம். உசத்தியன் பொன்றீர்த்தம் - உசத்தியதீர்த்தம்,பிரகஸ்பதிதீர்த்தம். ||| அங்கிராதீர்த்தம். | வேதாமிர்ததீர்த்தத்துக்கு வாயுதிக்கில் ஓர் பாணவீழ்ச்சியிற் புலத்தியதீர்த்தம் இருக்கின்றமையின் இதற்கு வேறுமோர்எல்லையும் கூறப்படும்.

* பொன்னிகடலிற்புகுஞ்சூழற்புரியுமரிமுன்னீசான
மென்னுந்தீர்த்தமுருத்திரர்தம்பதத்தையீயும்பிரமேசன்
றன்னிற்கணேவீழ்வனிலதிசைஞானவாவிதருஞான
முன்னிப்படியிற்பிரமதடாந்தன்னிற்கெவ்விபூதியின்மேல். (ருஅ)

அட்டவசுக்கடரு†மேல்வையனிலன்றிசையினயன்புரியிற்
கிட்டவளிக்குமயன்மடுவிற்கிளர்தீத்திசையண்மையில்வருணன்
றெட்டமடுவின்மூழ்கியவன்சோதியிலிங்கமவணமைத்த
திட்டமுறவேதொழுவார்நம்மெல்லேசேர்வரிழிவறவே. (ருகூ)

வருணவிலிங்கமுனர்க்கோலின்வாவிபாரத்துவாசமதா
மருணமேனியுருத்திரர்தமாக்கமளிக்குமகத்தியன்றன்
கருணையிலஞ்சிக்கீழ்பாலிற்காட்டுங்கெவ்விபூதியினிற்
றருணவிலிங்கந்தாபித்துத்தடமுமளித்தான்சசிபதியே. (சு0)

‡ ஆற்றும்பட்டம்படிந்தளித்தவரனேப்பணிந்தார்பிரமபதந்
தேற்றுந்துணிவாற்புரந்திடுவரப்பான்முன்னஞ்சிவத்தெளிவாய்த்
தோற்றும்வேதநதிமறைநூற்றுணிவாய்ச்சுடருமொளிஞான
மூற்றுமமுதாய்ப்பரமேசனுருவாயுலகந்தொழமேவும். (சுக)

அலகற்றமர்ந்தபெருமேன்மையளத்தற்கயன்மாலானேமுகன்
கலபக்கதிர்மாமயிலூருங்கந்தன்கமலத்திருவாணி
யுலகத்துருவாமுமையிவராலொழியாதேனேர்க்கொழிகுவதோ
திலகத்தமர்ந்தநுதல்விழியோன்றெரிக்குமாயிற்றெளியேனல். (சுஉ)

வாயுந்தவத்தாலுயர்மாணிமாதன்றனக்குமகிழ்ந்தீசன்
வேயும்பரிவாரத்திறைேடும்விளங்குமதனல்வேதநதி
யேயுந் = தேவபூடணமென்றிலங்குநாமமிருளீர்ந்தே
வாயும்பரமநிருவாணவாழ்வையெளிதின்வழங்கிடுமே. (சுங)

சனகனதியளவிறந்ததவத்தோர்வேதநதிமூழ்கி
யனகமாயபெருகொளியாயமர்ந்தாராடினதிபாவச்
சுனகற்புசிப்போனுமிடினுங்கிளேயோர்கோடிதுணையாகப்
பனகமேயபரஞ்சோதிபதியின்மேவிப்பயனுறுவான். (சுச)

---

* பொன்னிகடலிற் புகுஞ்சூழல்-காவேரிசங்கமம். இதனைத் தற்கால த்து முகத்துவாரம் என வழங்குப. சூழலாகிய ஈசானமென்னுந் தீர்த்தமெ னக்கூட்டுக; காவேரிசங்கமமே ஈசான தீர்த்தமாகலின். † ஏல்வை-தடாகம் ‡ ஆற்றும்பட்டம்-இந்திரதீர்த்தம். அளித்தவரன்-இந்திரலிங்கம். = தேவ பூடணம்-சிவன் முதலியதேவர்களை ஆபரணமாக வுடையது. சிவன் முத லிய தேவர்களால் அலங்கரிக்கப்பட்டதென்பது கருத்து.

ஏதிலுமநூற்றெட்டுமிசைத்தாரிருளார்கொடும்பாவ
மாதிநீங்கிவிமலமதேயாவர்வேதாவரிதருவார்
போதினீழற்புரந்தரன்வாழ்வாதியளிக்கும்புரிந்தாடி
னீதிற்படிந்தான்றனையானுமிமையோர்தாமுமிறைஞ்சுவமால். (கரு)

ஆதிவேதநதியேயுன்னருஞ்சீருரைத்தற்கமைந்தபெருங்
கோதநீக்கியருள*மலக்குறியேயெனவேகுழைந்திறைஞ்சி
நீதிமுனியேயிதன்பெருஞ்சீர்நிகழ்த்தற்கரிதாமிதன்கரைமேற்
பூதிமேவுமிலிங்கத்தினளவுமென்றுற்புகலரிதால். (கசு)

ஆயவேதநதித்தென்பாற்குரோசத்தளவினழற்கடவு
யேதீர்த்தம் † குறுமுனிவன்சோதிமுன்னர்ச்சுடர்ப்புணரி
யேயுமதனிற்படிந்தார்களீசனுவரிலங்கெரியித்
தோயமாடிக்கரையினொருசோதியிலிங்கமதுவாற்றி. (கஎ)

‡ பிருகுசாபந்தனிற்றீர்ந்துபெரியதேவர்முகமாகிப்
பருகுமவியுண்பவனுன்பகர்ந்தவேதவனத்தென்பா
லருகுமேவுமகத்தியனுச்சிரமமங்கணருண்மேவிப்
பெருகுமன்பார்முனிபூசைபேணுமிலிங்கம்பிறங்கியதால். (கஅ)

பணிந்தார்கொடியவினைமாற்றிப்பரமன்கயிலைப்பதமளிக்கு
மணிந்தாங் § கதன்முன்னங்கிதடமலங்குமதனையழலாற்றித்
துணிந்தார்க்கிரங்குமுனிபோற்றுஞ்சோதியருளாற்சுரர்முகமாய்த்
தணிந்தான்கவலையவியமரர்தழையவீயுந்தகைவாய்ந்தே. (கசு)

செந்தீக்கடவுடீர்த்தமதுசிவசாரூபத்திருவீயு
மந்தீங்கனியார்தமிழ்முனியாச்சிரமத் ○ துலோபாமுத்திரைதன்
னந்தீங்ககற்றுமிலிங்கமொடுகண்ணுவேசனலமாரத்
தந்தீங்களிக்குமத்திரிதன்னிலிங்கமூன்றுந்தழைத்தனவே. (எ0)

---

* அமலக்குறி யென்றதும் வேதநதியைஎன்க. நீதிமுனி என்றது சை கேடவ்வியனை. இலிங்கமென்னும் பால்பகாவஃறிணைப்பெயர் ஈண்டுப்பன் மைப் பான்மேனின்றது; இலிங்கங்களினளவுமெனப் பொருள்பயத்தலின் என்க.† இது, அகத்தியான் பள்ளியில் எழுந்தருளியிருக்கும் அகத்தீசுவரரது சந்நிதானத்துக்கு நேரே சமுத்திரத்திற் பொருந்தும். ‡ பிருகுமுனிவரி ட்ட சாபத்தினின்று நீங்கி.§ அச்சிவலிங்கசந்நிதியிலே அக்கினி புட்கரணி தீர்த்தம் விளங்கும். அணித்தென்பது அணிந்தென மெலிந்து நின்றது. ○ உலோபாமுத்திரேசன், கண்ணுவேசன், அத்திரீசன்.

அரியவீடுதரும்பணியவகத்தியேசற்சங்கிதிசைப்
பெரியசாபமொருநூற்றிற்பிறங்குஞ்சுடராற்பிணிக்குமிருள்
சரியவீட்டும் * பன்னிருவர்தடமங்கதனிற்படிந்தார்க
ளரியமாவாங்கதிராவரகத்தியேசன்றனைப்பணிந்தே. (௭௧)

மிக்கதவத்துக்குறுமுனிதன்குறிக்குமேல்பாவின்னூற்றிற்
றொக்கதாகு†மத்திரிதான்றொட்டதடமத்தடந்தொட்டே
தக்கவிலிங்கமொன்றாற்றிப்பூசைதமிழ்மாமுனிசிவனோ
டொக்கவாற்றியொருமூவர்தந்தையெனவேயோங்கினனால். (௭௨)

அன்னம்படியுமத்திரிதன்றீர்த்தம்படிந்தேயத்திரிதான்
முன்னம்பணிந்தசிவகுறியுமுனிவன்குறியுமுறைபூசை
தன்னன்பாரப்புரிந்துதத்தாத்திரயன்றலையார்தவயோக
ரின்னம்பரவவரசானிலஞ்சியிதுவீடீந்திடுமால். (௭௩)

செங்கட்குயிலான் § மதுத்திங்கட்சேர்சத்தமியிற்சிறியமறை
யங்கட்பக்கத்தளக்கருறுமங்கிதீர்த்தத்தழல்சமைத்த
வெங்கட்பட்டத்தமர்ந்தாடிவிழைவாற்றமிழமுனிபோற்றும்
பைங்கட்பணியானடிபோற்றிற்பவநோய்மாற்றிப்பரமாவார். (௭௪)

அங்கிதீர்த்தத்துத்தரத்தீரைந்துசாபத்தடன்மறலி
பொங்குதீர்த்தமளித்திடுகம்புரத்தை ○ யதற்குத்தரம்பொருவிற்
றங்குநாலைந்திடையிலைஞ்சிதனிற்றும்புருநாரதர்சார்வா
மங்கிறீர்த்தங்கள்தருவர்வாழ்வீந்தளிக்குமிரண்டுளவே. (௭௫)

குறியமுனிவனிருக்கையினிற்குலவுந்தென்பாற்கெவிபூதி
செறியுமிரண்டின்மணிப்பசும்பொற்சிமயவிமயக்கிரிச்செல்வ
னறியதடமொன்றமைத்தகழ்ந்தகுவெண்‡மணலாற்குலகிரியி
னறியவியற்றிப்பரனுமையுமார்வமுறநோன்பயர்ந்தனனே. (௭௬)

நோற்குமிமயத்திடைத்தோன்றிநுணங்குமிடையோடருட்பரம
னேற்குமுனக்குவரமருள்வோமிசைப்பாயென்னவிமயகிரி
மாற்குமரியநீயேனக்குமருகனாகமடமாதென்
பாற்குமகளாய்மணத்தினைநீபரிப்பாயென்னப்பணித்தனரால். (௭௭)

---

* பன்னிருவர்தடம்-துவாதசாதித்தர் தீர்த்தம். † அத்திரிமுனிவர் தமது சிவலிங்கத்தையும், அகத்தியலிங்கத்தையு மொருங்கு பூசித்தார் என்பது கருத்து. மூவர் என்றது திரிமூர்த்திகளை. § மதுத்திங்கள்-சித்திரைமாசம். அக்கினி தேவனியற்றிய அக்கினி புட்கரணிதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து. ○ யமதீர்த்தத்துக்குத்தரத்தில் இருபது விற்கிடையில் நாரததும்புரு தீர்த்தங்களிரண்டுள. ‡ மண்மலையாக்கி.

அன்றுமுதலா * வுமைதடமாமதனிற்படிந்தார்சிவமாவார்
† குன்றுபோலும்புளினத்திற்கோமான ‡ மோடியொடுங்கூடி
யென்றுமிமயகிரியினெனவேயும்விளையாட்டிதன்றென்பா
லொன்றுங்கெவ்வியூதியிரண்டுற்றகுளகனுறுமிடமே. (எஅ)

இனியசுவையா § ரமுதமுறுமிலிங்கம் o குளகனியன்முன்னம்
பனியதடமங்கது + வமுதவாவிசசிகோன்பதமளிக்கு
முனியவதற்கீசானத்தினுவந்து = குளகனுளுற்றுதடங்
கனியத்திகழுமதிற்படியிற்கடவுளோடுங்களித்திடுவார். (எகூ)

வேறு.

ஒண்சுதையிற்றிகழ்குளகன்றிரு | முனுருத்திரகோடியுவரிதீர்த்தம்
பண்புறுமங்கதிற்பரிதிவாரத்தினுவாவின்விதிபாதந்தன்னி
னண்புறத்தோய்ந்திடிற்பிறவிநாசமுறுஞ்சேதுநலனயப்பாரங்கு
வெண்சுதையுற்றிடுகுளகன்கந்தேசன் ≡ விநாயகன்முன்விழைத்தவீசன்.

என்னுமிவர்தமைப்போற்றவெளிதாகுமுத்திநிலையிதற்குத்தென்பாற்
பன்னுமொருகெவியூதிதனிற் || பதினொருருத்திரர்தம்பட்டமேவி
மின்னுமிதிற்படிந்தார்க்குவீடளிக்குங்கெவியூதிவிளம்புமூன்றி
னுன்னுதென்மேற்றிசைச் ||| சித்தராச்சிரம ‡ மாலுமதினொங்குமென்றும்.

அத்தலையிற்கணமேனுமஞ்செழுத்தைச்செபிக்கமுத்தியளிக்கும் * கோட்டின்
முத்தலையுங்கோடியதன்கீழ்த்திசையின்முகிழ்த்தோங்குமுதல்வனுய
பைத்தலைநாகப்பணியோனன்றியெவரதன்மேன்மைபகர்வார்பாவப்
பித்தலையும்பிரமகத்தியயுதமதன்றெரிசனத்தாற்பிரிந்துமாயும். (அஉ)

---

* உமாசரசு. இது கோடிக்காட்டு மோடி மண்டபத்திற்குச் சமீபத்து ள்ளது. † அம்மண்மலையில். ‡ மோடி—காடுகிழாள். இம்மோடி - குளகர் கோயிற் சமீபத்துள்ள வனத்தில் ஆதியிற் கோயில் கொண்டிருந் தது. பின்னர்த் திருத்தலைப்பூண்டிக்குச் சமீபத்துள்ள சேகல் என்னுமிடத்திற் கோயில் கொண்டிருக்கின்றது. ஆயினும், வேதாரணியேசுரர் மோடியிடத்து எழுந்தருளுங்காற் சேகலுக்கெழுந்தருளுவதில்லை. குளகர்கோயிற் சமீபத் துள்ள ஆதிகோயிலுக்கே எழுந்தருளுவ தெனவறிக. § அமுதகடேசர். o குளகன் குளகேசன். அமுதகடேசரும், குளகேசரும் ஒருவரெனவறிக. + அமுததீர்த்தம். = குளகன்-குளகமுனிவர். | உருத்திரகோடியாகிய சமுத்திரதீர்த்தம் பொருந்தும். ≡ விக்கினராசேசன். || ஏகாதசருத்திரர் தீர்த்தம். ||| சித்தாதிகோயில். ‡ அங்கே வெள்ளாலவிருக்ஷமொன்று எஞ்ஞான்றும் விளங்கும். * கரையின் முத்தலையும் கோடிதீர்த்தம் அச்சித்தாச்சிரமத்தின் கிழக்குத்திக்கிற் றோன்றி விளங்கும்.

உயராதிசேதுவெனவோதினொருகாற்கொடிதாயுலவாப்பாவ
மயர்வாகும்பன்னிரண்டாயிரம்வருடங்கங்கையிடையாற்றுநான
* வியனுமத்துணையாகத்தருமிராமேச்சுரத்தின்விளைத்தநானப்
பயனுதிசேதுவினிலொருநாளிற்பயனுமொத்த * பண்பிற்றுமே. (அங)

சொலற்கரியமேன்மையொடுஞ்சுடராதிசேதுவினிற்றுளைந்துமூழ்கி
னலக்குநமதுலகரிதனுடுசிவலோசமுதனயந்தயாவுஞ்
செலற்கரியதிலைப்பரன்போற்சிறப்பர்மறைவனமேவிச்சிறந்ததீர்த்த
† மிலக்கமறவுள்சிலவேயிசைத்தனனுன்முழுதுமெனக்கியம்பற்பாற்றே.

எண்ணிறந்ததீர்த்தமுளமறைவனத்தினவற்றிடையொன்றேய்ந்தானேனு
நண்ணுவனம்புரியினிடைத்தேவலன்போற்சிவயோகிநயப்பாயென்னுப்
பண்ணமரவளிபாடப்பசியெழுந்தேனொழுக்கும்பதுமபீடத்
தண்ணல்சிவயோகிசைகேடவ்வியனுக்ககமகிழ § வளித்தானன்றே. (அரு)

ஈங்கிதனைநாரதனுமிருடியடையலர்மிடையுமெரிகாய்செம்பொற்
றூங்குபழவயிரநிரைத்தொகுமுடிகளுரிஞ்சுதலாற்சுடர்கவேண்டும்
பூங்கழற்செங்கதிரிலைவேன்மாந்தாதாவுளமகிழப்புகலவேந்தன்
றுங்குவகையொடுமுனிவன்சரண்போற்றிப்பின்விளைந்ததகையேதென்ன.

வேறு.

அணங்குகமழுந்தீர்த்தநிலையறிந்தவேந்தனருண்முனியை
வணங்கியிலிங்கம்வகுத்தவகைவடிப்பாயென்னுவினவுதனும்
பணங்கொளரவோன்றனைப்பரவிப்பயினாரதனும்பணிவேந்த
னிணங்கும்வகையாம்பின்விளைந்தவியல்பையறியவிசைக்கின்றான். (அஎ)

தீர்த்தமுறைமைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,ருஅக.

---

* வியனும், பயனும், ஒருநாளிற்பயனுமாகிய இம்மூன்றும் தம்மு ளொத்த பண்பினவாம் என்க; பன்மை யொருமை மயக்கம். † இலக்கம்- எண். § அளித்தான்-விடையளித்தான்.

இச்சருக்கத்துக்கூறிய தீர்த்தங்கள் தொண்ணூற்ருறு.
அவைவருமாறு:—

க-மணிகன்னிகாதீர்த்தம்.
உ-விசுவாமித்திரதீர்த்தம்.
ந-பரமானந்தகூபம்.
ச-அருத்தத்திரிகோடி.
ரு-சுதாகூபம்.
சு-கக்கிவதீர்த்தம்.
எ-பாண்டவதீர்த்தம்.
அ-அஞ்சுமான்றீர்த்தம்.
கூ-வியாசதீர்த்தம்.
ய0-அகத்தியதீர்த்தம்.
கக-நளதீர்த்தம்.
கஉ-வேதாமிர்தம்.
கந-சனிதீர்த்தம்.
கச-சுக்கிரீவதீர்த்தம்.
கரு-அங்கததீர்த்தம்.
கசு-அச்சுவினிகடீர்த்தம் (உ)
கஎ-கவயதீர்த்தம்.
கஅ-கவாக்கதீர்த்தம்.
ககூ-கந்தமாதனன்றீர்த்தம்.
உ0-வாயுதீர்த்தம்.
உக-மயிந்ததீர்த்தம்.
உஉ-துவிததீர்த்தம்.
உந-அனுமதீர்த்தம்.
உச-குபேரதீர்த்தம்.
உரு-கௌதமதீர்த்தம்.
உசு-இராமதீர்த்தம்.
உஎ-இலக்குவதீர்த்தம்.
உஅ-சீதைகுண்டம்.
உகூ-இரணமோசனதீர்த்தம்.
ந0-வைரவதீர்த்தம்.
நக-குமுததீர்த்தம்.
நஉ-நீலதீர்த்தம்.
நந-சாம்பவதீர்த்தம்.
நச-சுசேனதீர்த்தம்.
நரு-சூரியபுட்கரணி.
நசு-சந்திரபுட்கரணி.
நஎ-சஞ்ஞைதீர்த்தம்.
நஅ-மனுதீர்த்தம்.
நகூ-சத்தசாகரதீர்த்தம்.
ச0-நிருதிதீர்த்தம்.
சக-சத்தவாயுதீர்த்தம்.
சஉ-பிரமதீர்த்தம்.
சந-பிரமசரசு.
சச-சரசுவதிதீர்த்தம்.
சரு-காசிபதீர்த்தம்.
சசு-காசிபபத்தினிகடீர்த்தம்.
சஎ-தருமதீர்த்தம்.
சஅ-அதர்மதீர்த்தம்.
சகூ-காளிதீர்த்தம்.
ரு0-விட்டுணுதீர்த்தம்.
ருக-இலக்குமிதீர்த்தம்.
ருஉ-துர்க்காதீர்த்தம்.
ருந-காலாக்கினிருத்திரகுண்டம்.
ருச-உருத்திரர்சரசு.
ருரு-வசிட்டதீர்த்தம்.
ருசு-புட்கரணித்திரயம். (ந)
ருஎ-சுக்கிரதீர்த்தம்.
ருஅ-உசத்தியதீர்த்தம்.
ருகூ-பிரகஸ்பதிதீர்த்தம்.
சு0-அங்கிராதீர்த்தம்.
சுக-புலகதீர்த்தம்.
சுஉ-புலத்தியதீர்த்தம்.
சுந-ஈசானதீர்த்தம்.
சுச-ஞானதீர்த்தம்.
சுரு-அட்டவசுக்கடீர்த்தம்.
சுசு-வருணதீர்த்தம்.
சுஎ-பாரத்துவாசதீர்த்தம்.
சுஅ-இந்திரதீர்த்தம்.
சுகூ-வேததீர்த்தம்.
எ0-அக்கினிதீர்த்தம்.
எக-அக்கினிபுட்கரணி.
எஉ-துவாதசாதித்தர்சரசு (கஉ)
எந-அத்திரிதீர்த்தம்.
எச-யமதீர்த்தம்.
எரு-தும்புருதீர்த்தம்.
எசு-நாரததீர்த்தம்.
எஎ-உமாசரசு.
எஅ-அமுதவாவி.
எகூ-குளகதீர்த்தம்.
அ0-உருத்திரகோடிதீர்த்தம்.
அக-ஏகாதசருத்திரர்தீர்த்தம்.
அஉ-தனுக்கோடிதீர்த்தம். தனுக்கோடியெனினும், ஆதிசேதுவெனினு மொக்கும்.

எண்பத்திரண்டோடு பதினன்குகூட்டத் தொண்ணூற்ருறும்.

திருச்சிற்றம்பலம்.

# இலிங்கச்சருக்கம்.

நறையார்கமலப்பொகுட்டரசுநயந்தோனளினமலர்த்தாளை
முறையாற்போற்றித்தீர்த்தவியன்மொழிந்தாயினியான் * முடிவெய்த
விறையாயுலகம்புரந்தளிப்பாயிலிங்கமினைத்தென் றிலங்குமரு
ணிறையாலளிப்பாயெனப்பரவுஞ்சிவயோகிக்குநிகழ்த்திடுவான். (க)

ஒழியாதொளிருமறைவனத்தினொளிருமிலிங்கமொருகோடி
யழியாதமருமவையனைத்துமறிதற்கரிதாமரும்பவிழ்த்துக்
கழிவாய்க்கமலங்கவிழ்த்தநருக்கடலிற்பெருகுமறைக்காட்டி
னுழியாமிலிங்கஞ்சிலவுரைப்பனோர்வாயென்றுவுரைத்திடுவான். (உ)

காற்றுமனமுமடக்கியெழுங்கரணமவித்துக்கலைமதியாய்த்
தோற்றுமமுதச்சுவைமாந்தித்துனிதீர்சைவிடவ்வியனே
கூற்றுமடியக்குரைகழற்றுமரைச்சேவடிமென்கொழுந்தளித்துத்
தேற்றுமமலசிற்பரமாமறைசைமேயசிவகுறியே. (௩)

† பாழியுலகமுழுதினையும்பகுவா[illegible]ழியிற
மாழிவலவன்முதலாயவமரர்வேதமாதியநூ
லூழியொருவப்பெருகொளியாயுலவாதமலவுருவாகும்
வாழிவேதவனநாதன்வடிவேய்ந்தமர்ந்துவயங்கிடுமால். (௪)

பொழிலார்வேதவனத்தூழிபொருந்தாதமலப்பொருளாகி
யழியாமுதலாம்வேதவனத்தரசாமிலிங்கமதுதானு
மொழியார்மறையின்முடிப்பரமேமுகிழ்த்ததாகுமக்குறியின்
வழியாயுதிக்குஞ்சராசரமாமுலகுமறையும்வடிவுறவே. (௫)

உலகமனைத்துமயனூழியு[illegible]வியவை
யிலகவளிக்குமிம்முறையுமெண்ணற்றனவாலீன்றவயற்
கலகில்சிருட்டிச்சாதுரியமளித்தேயழியாமுதலாகிக்
குலவுஞ்சிவமாமக்குறியின்கொள்கையெவரேகுறித்துணர்வார். (௬)

அருவாயமலவானந்தவறிவாயகிலமனைத்தினுக்குங்
கருவாமதுவே‡யநேகரெனக்கரையுங்கமலத்திறையோர்முன்
பொருவாயாதியிராமனுளம்பொருந்துந்தவத்தாற்புகலாகி
யுருவாய்முன்னமெதிர்ந்ததுவாலுண்மையுணர்த்தற்கரியதுவே. (௭)

* முடிவு-மோக்ஷம். † பாழி-சமுத்திரம். ‡அநேகபிரமகற்பங்களுக்கு முன் இவ்வேதாரணிய லிங்கம் தோன்றிற்று. இது ஆதியிராமனுக்குமுன் வெளிப்பட்டதாதலால் இன்னகாலத்துள்ளதென உணர்த்தல்கூடாதென்பதாம். ஆதியிராமனுக்கு வெளிப்பட்ட ஆதிலிங்கம் வேதங்களாற் பூசிக்கப்பட்டமையின், வேதலிங்கமாயிற்று.

இன்னவிலிங்கத்தென்பாலினிக்காலத்தினிராமனெனும்
பொன்னங்கழலான்வீரகத்திபொடித்தற்பொருட்டுத்தாபித்து
மின்னுமிலிங்கந்தொழமேன்மைவிளைக்குமிதற்குத்தெற்கேய்ந்து
மன்னுஞ்*சிந்தாமணியெனப்பேர்வழங்குந்தூயவிநாயகனே. (௮)

பத்திப்பணியார்க்கெண்ணினவேபணித்தேயருளுங்கணபதிப்பின்
† முத்தித்துவாரேசுரனெனக்குமுன்னேமேயவிதிமோகப்
புத்தித்தடையற்றிடப்பூசைபுரிந்தானவற்குப்பொழியின்பம்
வித்தித்திகழும்வீடருளியிப்பேரவற்குவிளங்கியதால். (௯)

வேறு.

ஒருமலரவனுக்கூழியுறவுலகொடுக்கமாகும்
பருவமதுணர்ந்து‡சித்தராகியபகவரெல்லா
மருமறைவனத்துமேயவடிகளைப்பூசையாற்றி
மருவினர்துதித்துச்சூழ்ந்துவலமுறவணக்கஞ்செய்தே. (௧௦)

பார்ப்பதிகந்தனந்திகணபதிகபிலன்பன்§மான்
மார்க்கண்டன்காலசித்துப்பதஞ்சலிபுலிக்கால்வாய்ந்தோ
னீற்கலிதுரந்தோனன்னபூரணைநெடுமாகாளன்
காற்படுபிருங்கிவீரபத்திரன்கண்டாகன்னன். (௧௧)

சித்திரகுத்தன்றத்தாத்திரையனேசுக்கிரீவ
னத்தகு+பிருகுமைந்தன்சதானந்தனுoமிர்காங்கன்
வைத்தவாலாலமன்னுசுந்தரன்வலியவாளா
னித்தகையெண்ணிலார்களமர்ந்தவரீசற்போற்றி. (௧௨)

தோற்றமாருயிர்களெல்லாநடுக்குறத்தோன்றுமூழி
மாற்றுதற்கியாங்களீங்குமறையெனவைகல்வேண்டு
மேற்றுயர்கொடியாயென்னுவிரந்திடவெதிர்ந்துதோன்றிக்
கூற்றுறுமூழிவேதவனத்திடைக்குறுகாதென்றும். (௧௩)

---

* இவ்விநாயகரை வேதவனவிநாயகர் எனவும் கூறுப. † முத்தித்துவாரேசுரனெனினும், மோக்ஷத்துவாரேசுரனெனினுமொக்கும். ‡ சித்தியராகிய பகவரை வருஞ்செய்யுள்களான் வகுத்துக்கூறுவார். § மால்-விஷ்ணு. நீற்கலிதுரந்தோன்-கலிசூதனன்; நீற்கலி-கரியபாவம். சூதனம்-அழித்தல். கண்டாகன்னன்-விஷ்ணுசப்தம் கேளாமைப்பொருட்டுக் கண்டாமணியைக் காதிற் கட்டினவன். கண்டா - கண்டை. கன்னம் - காது. + பிருகுமைந்தன்-சமதக்கினிமுனிவர். o மிர்காங்கன்-ஓர்முனிவர். வலியவாளான்-திடாயுதன்.

மடிவறநம்மைப்போற்றிவைகுமினென்னவன்றோர்
படிமிசையாங்கள்போற்றிப்பணிந்திடுமிலிங்கமெல்லா
முடிவுறயாங்கள்வாழ்தன்முறையறுநெறியாமுற்று
மடிகளீங்கழைத்துவேதவனத்திடையமரச்செய்யின். (௧௪)

பூசனையாற்றிநின்சீர்ப்பொன்னடிக்கமலம்போற்றி
நாசமதகன்றுதீர்த்தமூழ்கியேநயப்போமென்ன
வீசனுநயந்துவல்லேயிலிங்கங்களனைத்துங்கூவ
மூசளிசூழும்வேதவனத்திடைமுகிழ்த்தவன்றே. (௧௫)

பண்ணவனன்றுகூவியமைத்தவப்பரமலிங்க
மெண்ணறவநேககோடியியம்பரிதென்றலிப்பார்க்
கண்ணமரவற்றியோகிகழறுவன்சிலகேள்*காசி
விண்ணவன்கரையின்மேவுமணிகன்னிவிரும்பியென்றும். (௧௬)

வரியினமலரின்மூசுமணிகன்னிபடிந்துகாசிப்
பெரியவனடிகள்போற்றிற்பிறங்கிடும்போகமுத்தி
யரியசித்தேசன்வன்னியடியமர்ந்திலங்கியாவி
பரியுறுசீவன்முத்தியளித்திடும்பணிந்துபோற்றின். (௧௭)

மன்றமோடேகியீங்குமலர்ப்பதந்தொழுதார்க்கீந்து
நின்றனன்†சபைக்குநாதனன்னபூரணையுநேச
மொன்றியேகாசியோவியுற்றனள்சபைக்குமேல்பா
லன்றவள்பக்கமேய்ந்தா‡னகுலவீச்சுரனுமம்மா. (௧௮)

கலிதெறுங்காஞ்சியீசன்காளத்தியமர்ந்தோன்பொன்னி
யொலிதருங்குடந்தைநாதன்கூடலம்பதியினுற்றோன்
வலியகேதாரமேயவானவன்வளர்வன்மீகம்
பொலிதருபுனிதன்வேதநதிக்கரைபொருந்திமேவி. (௧௯)

தொழுதவர்க்களவிலின்பந்துகளறுத்தளிப்பார்வேத
முழுதுணர்வியாதன்பட்டத்துத்தரமொய்த்தகூலத்
தெழுதரு§கண்டாகன்னனியற்றுகோகரணவீசன்
பழுதறவுறைந்துபுத்திமுத்திபாலிப்பனன்றே. (௨௦)

---

* காசிவிண்ணவன்-காசிவிசுவநாதசுவாமி. காசிவிண்ணவன் விரும்பி மணிகன்னிக்கரையின்மேவும் எனக் கொண்டு கூட்டுக. கரை-மேலைக்கரை. †சபைக்குநாதன்-சபாநாயகர். ‡நகுலவீச்சுரன்-பாண்டவருளொருவனாகிய நகுலனாலே பூசிக்கப்பட்ட சிவலிங்கப்பெருமான். §கண்டாகன்னன் இயற்றிய கோகரணேசன்.

அறைந்தவத்தீர்த்தக்கீழ்பாலாடகவீசன்மேல்பா
லுறைந்துசித்திரகுத்தேசனுளிர்தருமதற்குமேல்பா
னிறைந்திடும்வியாதவீசனீடியவிவரைப்போற்றிற்
பறைந்திடும்பாவமுற்றும்பரகதிபயக்குமன்றே. (உக)

அலங்கிய*காதிமைந்தனாச்சிரமத்திற்சாபம்
விலங்கியநூற்றி†னாகவீச்சுரன்விழைந்துமேவி
யிலங்கிடும்பணிந்தார்க்கின்பமெண்ணிலவளிக்குங்காசி
நலங்கிளரிலிங்கஞ்§சூழ்ந்துநயந்தனவநேகமுண்டால். (உஉ)

தெளிமணிகன்னிகூலந்திகழ்தரச்சூழ்ந்துமேவி
யொளிதருமிலிங்கந்தென்பாற்சந்திரவீசனாங்கு
மளியிராமேசன்oமுரகேச்சுரனாடகேசன்
றளிபெறுவித்தையீசன்றொழுப்பவஞ்சரிப்பரென்றும். (உங)

வடக்கினிற்சராசந்தேசன்|வராகேசன்சோமநாதன்
றொடக்கியலளிதவீசன்றுண்டிவிக்கினேசன்சோதி
யடக்கரிச்சந்திரேசனரியரனளித்தசாத்தாத்
‖ தடக்குணக்கிடைக்கங்கேசன்வயிரவன்றழைப்பரின்றும். (உச)

||| கெங்காகேசவாதீசன்oவாசுகீசன்கேடிலுமை
பங்காகிய=சுவிர்த்தேசன்பருப்பதேசன்மணிகன்னி
யங்காரீசன்முதலாயவனேகர்†மணிகன்னியிற்படிந்தே
+யிங்காயவரைத்தொழக்காசியேகும்பயனுமிறுதுணிவே. (உரு)

நிருத்தமேவியம்பலத்துநின்றேற்கங்கிதிசைக்*காரி
பொருத்தமாகுமவற்போற்றிப்போற்றுoநந்திபிருங்கிருடி
திருத்துமிலிங்கந்தமைப்போற்றிற்சேர்வர்சிவத்தைத்தென்றிசையிற்
பொருத்துமங்கிதீர்த்தத்தின்கரையிற்பொலிவார்புகல்வாரே. (உசா)

---

* காதிமைந்தனாச்சிரமம்-வன்னிவிருக்ஷத்தின் கீழுள்ளது. † நாகேச்சுரன். § சூழ்ந்து-மணிகன்னியைச்சூழ்ந்து. o நாரகேச்சுரன்-நக்ஷத்திரேசுரன்; நக்ஷத்திரங்கள்பூசித்த ஈசுரன் என்பதாம். | வராகேசன் -ஆதிவராகேசன். ‖ குணக்குத்தடத்திடை என மாறுக; கீழ்கரையின்கணென்பதாம்; தடாகத்தினது கிழக்கிலெனினுமமையும். ||| கெங்காகேசவாதீசன்-கெங்காதேவியும் கேசவாதீசனுமென்க. கேசவஆதி ஈசன் எனக்கண்ணழிக்க. o வாசுகி ஈசன் + வாசுகீசன்; வா[illegible] ஈசன். = சுவிர்த்தேசன்-சுவிர்த்தன் என்பவனாலேபூசிக்கப்பட்டவீசன் † மணிகன்னியங்காரீசன்-மணிகன்னிகேசன். + இங்காயவரை என்றது இன்னும் அநேகயோகிகளாய் இக்கரையிலிருக்கின்றார்களை. ஆயவரை மணிகன்னியிற் படிந்து தொழ எனக் கூட்டுக. *காரி-க்ஷேத்திரபாலன். o நந்தியும், பிருங்கிருடியும்.

* பற்றுபரவன்னேசன்பரத்திரவியேசனெனப்பகர்ந்தாரோடுஞ்
சொற்பிரதிக்கிரகேசனெனுமிவரைமுறைபணியத்தூயராகி
யற்றிடுவர்வினையனைத்துஞ்சங்கமத்திலரமகளிரமைத்தலிங்க
மற்றுயர்மார்க்கண்டேசம்பராபவாதப்பெயரின்மனுமீசன். (உஎ)

ஈங்கிவரைத்தொழப்புனிதமேய்ந்திடுவர்மறைவனஞ்சாரிறையோன்முன்
மோங்கிடு†மிந்திரவிலிங்கம்பிரமகத்தியொழிப்பதனுக்கும்பர்கோமான் [ன
ரூங்கியதிந்திரதீர்த்தந்தனிற்படிந்துபோற்றவினைத்தாபந்தீர்க்கும்
பாங்குதருங்குறுமுனிவனுச்சிரமத்தவன்பூசைபரித்தலிங்கம். (உஅ)

கற்பினுயர்தரு § லோபாமுத்திரைபோற்றியகடவுள்சண்ணுவேச
னற்புதவத்திரியிலிங்க o மாச்சிரமத்தகற்றிவினையளிக்குமுத்தி
யெற்பரவுங்குளகேசனமுதவுருவாகுமங்கணிலங்குமேல்பாற்
சொற்பயிலும் ┼ பிரமகத்திதொலையவிநாயகனமைத்தசோதியாகும். (உகூ)

ஆடன்மயிலூர் | முருகனரிச்சையுறுமிலிங்கமுமங்கமர்ந்துபோற்றி
நாடநலம்பலவளிக்குஞ்சூரியபுட்கரணிமணிநயந்தகூலம்
பாடன்மறைக் || கதிரிலிங்கஞ்சோமேசன்மதித்தடத்தின்பாங்கின்மேவுந்
தேடருமத்தடம்படிந்தங்கவர்ப்போற்றினவர்பத்தூச்சேர்வரன்றே. (௩0)

கிளருமொளிக்கதிர்க்குறியின்மேல்பாற்கெவ்விபூதியெனக்கிளக்குமூன்றி
வளரு ═ மருத்தீச ≡ னியான்பூசைபுரியிலிங்கமுமென்வாவிமேவித் [ன்
தளர்வகற்றிப்பரமளிக்குந்தந்துகடற்கிறைபரித்ததலைவன்றுபித்
துளர்வளித்தேவுவந்தகுறியங்கவர்தந்தடமேவியொளிருமன்றே. (௩க)

---

* பரவன்னேசன் - பரான்னேசுரன். பரான்னேசுரன்—பிறரன்னம் புசித்தபாவத்தைப் போக்குமீசுரன். பரத்திரவியேசன் - பிறர்திரவியம் அபகரித்த பாவத்தைப் போக்குமீசுரன். பிரதிக்கிரகேசன்-வாங்கின கடன் கொடாதபாவத்தைப் போக்குமீசுரன். பிரதிக்கிரகம்-வாங்குதல். சங்கமம்-காவேரிசங்கமம். அரமகளிரமைத்த லிங்கம் - அப்ஸரசலிங்கம். அப்ஸரசு-தேவதாசிகள். பராபவாதப்பெயரின் மன்னுமீசன்-பராபவாதேசன். பராப வாதேசன் - பிறர்பழிதூற்றும் பாவத்தைப்போக்கு மீசன். அபவாதம்-பழிமொழி. † இந்திரலிங்கம்-வேதநாயகர் சந்நிதிக்கு நேர்கிழக்கில் வேத தீர்த்தநெறியில் உள்ளது. § உலோபாமுத்திரேசன். o ஆச்சிரமவினையகற்றி முத்தியளிக்கு மெனமாறுக. o நான்காச்சிரமங்களையும் அநுட்டிக்கின்றுழி அநுட்டான வழுவான்வரும் பாவங்களை நீக்கி முத்தியைத்தரும். வினை-பாவம். ┼ விநாயகக்கடவுள் தமது பிரமகத்திதொலையப் பிரதிட்டை செய்தருளிய கணேசலிங்கமிருக்கும். விநாயகக்கடவுளைப் பிரமகத்திதொடர்ந்த சரித்திரத்தை முன்வரும் விநாயகச்சருக்கத்தானறிக. | முருகனருச்சையுறுமிலிங்கம்-கந்தேசன். || கதிரிலிங்கம்-பாற்கரேசன். ═ மருத்தீசன் - சத்த மருத்தேசன். ≡ ஈண்டு யான் என்றதும், என் என்றதும், பிரமாதம்மைஎன்க. கடற்கிறை பரித்ததலைவன் வருணேசன். வளித்தேவுவந்தகுறி-வாயுவேசன்.

நெடியவன்காசிபன்வசிட்டன்காலாங்கியுருத்திரனிந்நீர்மைமேலோர்
படிவுறுந்தாமியற்றுதடப்பாரமுறத்தாபித்தபரமச்சோதி
கடிதுவினையறமாற்றிக்கதியளிக்கும்பிங்கலன்பேர்கணித்தவீசன் [ண்
மிடியகற்றும்பராசரன்றன்குறிமேன்மைதருஞ் * சேதுவிரும்பிக்காப்போ

ஆயவரிதனைப்போற்றவவன்பதமாம்வீரகத்தியடர்த்தயானை
சேயபதஞ்செவ்வேடன்சேவடிகளிவைபோற்றிற்செறிந்தபாவ
மாயவருட்சோதியுறமகிழ்வ † ரியாழைப்பழித்தவாணிமாதின்
றூயமலர்த்தாள்போற்றமுழுதளிக்குமிறையாகித்தோற்றமேய்வார். ()

இனியசெழும்பசுந்தேனினிழைத்தனையமழலைமொழியிவடன்றூய
பணியமதர்மழைநெடுங்கட்பாவுமருட்பரவைபடிசுவேதகேது
வணியமறச்சிவதேகமாயபரஞானமுறவமர்ந்தானெஞ்சங்
கனியவிவடனைப்போற்றிற்கடவுளருமடிபோற்றக்களிப்பர்கண்டாய். (௯௪)

குழைதடவுங்கயற்றடங்கட்கொம்பினொடுங்கந்தனொடுங்குலவியோராற்
றழைபுவனிவிடங்கேசன்றனைப்பணியப்பவமகன்றுதழைவர்சாலு
மிழைவயங்குங்குவிமுலையேரிமயமகண்மணக்கோலமிறைஞ்சிற் ‡ றீராப்
பிழையகன்றுபரமாயபேறடைந்தேயின்பமுறப்பிறங்குவாரே. (௯௫)

இலங்குபசும்பொற்கதிரார் § தேவபத்தமெனுஞ்சபையினிலிங்கங்கண்டோர்
புலங்கவருமானந்தநிருத்தேசனடிக்கமலப்போதுகாணக்
கலங்குமலமாயாதிகதியாகுநறவொழுக்கிக்கமழும்போதா
லலங்குமறைவனத்திலிங்க o மாவிபலவுளசிலவீங்கறைந்தேமன்றே. ()

பல்லுரையாற்பயனுளதேபரமன்மறைவனத்திடைப் + பல்வலமுங்கங்கை
புல்லுமியற்றீர்த்தமெனப்புனிதமுறுஞ்சிறுமணலும்புரங்கள்செற்றோ
னொல்லுமருட்குறியாகியுலகளிக்குமதன்பெருமையுலகமூன்றிற்
சொல்லுமளவல்லவெனச்சிவயோகிக்கயனருளாற்சூழ்ந்துகூறி. (௯௭)

அணிபெருகுமறைவனஞ்சேர்ந்தியாத்திரையோராறுமமைத்தாவியாவு
மணியவிரப்படிந்துசிவகுறியனைத்துமுளமலரமகிழ்ந்துபோற்றிப்
பணியுமவர்தமைப்பலகாற்பணிகுவமாலியாமுமெனப்பரிந்துகூறித்
துணிதருதியெனுமறையோன்றனைப்பணிந்துசிவயோகிசொல்லலுற்றான்.

---

* சேதுவிரும்பிக்காப்போனாயவரிதனை என வருஞ்செய்யுண் முதலோடு கூட்டிப்பொருள்கொள்க. † யாழைப்பழித்தவாணிமாது - யாழைப் பழித்த மொழியம்மை. ‡ தீராப்பிழை-உய்தியில் குற்றம். உய்தி-பிராயச் சித்தம். § தேவபத்தமெனுஞ்சபையிற் சிவலிங்கப்பெருமானைத் தற்காலத்தார் சோழீசுரவுடையவர் எனவழங்குவர். o ஆவி-தீர்த்தம். + பல்வலம்-நீர்நிலை.

## வேறு.

காற்றினை நடுவுறக்கட்டிக்காதனோ
யாற்றியபொறியினையவித்துப்பாவனை
வேற்றியலின்றியேமேவித்துன்புறச்
சாற்றியயோகினிச்சாலுஞ்சாலுமே. (கூகூ)

எளிதினிற்களிதருமின்பமெய்துவா
ஞெளிதருமறைவனத்துண்மையோதினை
யளியனேனுய்ந்தனனுங்கியான்செலத்
தெளிவுறநல்லருள்செய்தியென்னவே. (சo)

நறைதருபங்கயநறியநாண்மல
ருறைபரன்பேரவையுற்றயாவரு
மிறையடிவணங்கியேயிசைத்தமேன்மைசான்
மறைவனந்தொழவெமைவகுத்தியென்றனர். (சக)

வானவர்முனிவர்கந்தருவர்வாள்வலித்
தானவரியக்கரெண்சித்திசார்ந்தரு
ளானவர்முதலியவவையுளோரெலாந்
தேனவிர்மறைவனஞ்சேர்தற்கெண்ணவே. (சஉ)

ஆங்கவருளத்துணிவறிந்துபங்கயந்
தாங்கியமறையவன்முனுமேன்மையா
லோங்கியமறைவனமுவந்துபோற்றுவ
மீங்கிவர்நீரெலாமெழுதிரென்றலும். (சங)

உருத்திரர் * கதிர்க்கணமுடுக்களும்பரேழ்
மருத்துவர்வசுக்கள்கந்தருவர்வார்மதுத்
தருத்தலையாவருமவுணர்தாஞ்சடைக்
கருத்துயர்முனிவரரெவருங்காதலார். (சச)

பூணிமிரிளமுலைப்பொன்னங்கொம்பன
வாணியேமுதலியமடந்தைமாரொடுங்
காணியமறைவனங்காதல்கூர்தர
வெணியவூர்தியுமின்றியேகினர். (சரு)

அண்டர்கடானவரறவர்சூழ்தர
முண்டகமேவியமுதல்வனேகியே
மண்டலவளமெலாமலிந்துமாளிகை
விண்டலமணிக்கதிர்வேயுமேன்மையாய். (சகா)

* கதிர்க்கணம்-துவாதசாதித்தர்கள்.

அழிந்தயரூழியற்றமலமாய்வளம்
பொழிந்துயர்மறைவனம்புகுந்துபூமனு
வழிந்தளிரூழ்மணிகன்னி * மானச
மொழிந்தனனமரர்களோடுமூழ்கியே. (சஎ)

விரிதிரைமணிதருவேதமாநதி
பரிவொடுபடிந்துயர்பதியிற்பட்டமாய்த்
தெரிதருமவையெலாமூழ்கிச்சேமமாய்ப்
புரிவுறுமிலிங்கங்களனைத்தும்போற்றியே. (சஅ)

சீதநீர்மதிக்கதிர்திளைக்குஞ்செஞ்சடை
வேதநாயகன்றனைவிழைந்துபோற்றியே
காதலால்விழிகணீர்காலக்கண்டிறும்
பூ[illegible]மெய்[illegible]லாங்கண்டுபோற்றுவான். (சகூ)

வேறு.

முன்னுமுறும்பரமாயமுதலேபோற்றிமுற்றுமளித்தீசனெனமுகிழ்த்தாய்போற்றி, மன்னுமுருத்திரனுயமணியேபோற்றிமாயனெனக்காத்தயனுய்வகுப்பாய்போற்றி, பன்னுவிராட் † டாதியுருப்பரித்தாய்போற்றிபார்த்தளிற்றிந்திரனுதிப்பகவராகியுன்னுசராசரமனைத்துமானுய்போற்றியோவாதுமறைவனமேயுவந்தாய்போற்றி. (ருo)

புத்தியினிற்பரபோகவுருவமாகிப்பூரணமாய்ப்பொலிந்திலங்கும்பொருளேபோற்றி, யிந்தியமேமுதற்கரணமின்றியாவுமேய்ந்தவர்போலுணர்ந்தருளுமிறையேபோற்றி, யந்திமதிக்குழவியணிந்தமலமாகியானந்தவுருவாயவரசேபோற்றி, யுந்தியினிற்பெருகொளியாமொருவபோற்றியுயருமறைவனமேவியுறைவாய்போற்றி. (ருக)

வேறு.

பண்ணவரோடுமிவ்வாறேத்திடும்பதுமத்தோற்கு
விண்ணவன்குறியினின்றும்வெளியுறவெதிர்ந்துதோன்றி
யெண்ணறுமறைசைமேயதீர்த்தங்களிலிங்கமுற்றும்
வண்மையிற்படிந்துபோற்றிவருதலான்மகிழ்ச்சிவாய்ந்தேம். (ருஉ)

---

* மானசம்-சங்கற்பம். † ஆதிசத்தத்தால் சுராட்டு, சமராட்டுக்களையுந்தழீஇக்கொள்க. விராட்டு-சர்வவியாபி. சுராட்டு - சுயம்பிரகாசி. சமராட்டு-நன்குகப்பிரகாசிப்பவன்.

விரும்பியவரங்சஞ்சீவம்விளம்புதிரென்னவிண்ணோ
ரரும்பியகளியிலேடுமெனவருமீங்குமேவச்
சுரும்பியலிடமுகின்பாற்றுகளறுமன்புமேவத்
தரும்பரிசருளென்றேத்தித்தாழ்தலுந்தலைவன்சொல்வான். (ருங)

மூசளிமுரன்றுசூழமுருகுகாதிருவார்வன்னிப்
பாசிலைத்தருவின்கீழற்பரிந்துநீருறைமின்பாச
மாசிலாவன்புமேன்மேல்வளர்தரவயங்குமென்றுப்
பேசியேமறைசைமேயபெருந்தகைபின்னுஞ்சொல்வான். (ருச)

இன்றுதொட்டிங்குமேவியியன்மணிகன்னிமூழ்கி
மன்றநஞ்சமியைப்போற்றிவணங்கினர்நம்மையெல்லா
மொன்றியபூசையாற்றுமுறுதியேய்ந்துறுவரின்பஞ்
சென்றுநீர்படியுந்தீர்த்தமொன்றினுஞ்சிவத்தைச்சேர்வார். (ருரு)

எனவரமளித்துவேதநாயகனிலிங்கமேவ
வினவுறுமவுணர்தேவர்யாவரும்வன்னிமூல
மனமகிழ்ந்துறைந்தார்தேவாலயமெனமன்னுநாமந்
தனையுமன்றுதியாகமறைவனஞ்சார்ந்ததன்றே. (ருசு)

வரியளியுழக்கும்போதார்மணிகன்னிமகிழ்ந்துமூழ்கி
யரியயற்கரியவேதநாயகனடியும்போற்றிப்
பொரியரைவன்னிகீழற்புங்கவர்புரிவான்மேவ
விரியிணர்ச்சமியுந்தேவாலயமெனவிளங்கிற்றன்றே. (ருஎ)

தேவலன்செறியச்சைகிடவ்வியன்றெளியாறுகி
யாவலின்வினவவேதாவளித்தவிக்காதையாவுங்
காவலவுரைத்தேனீதுகற்பவர்காமமேய்ந்து
கேவலமாயவீடுமடைகுவர்கேடிலாரே. (ருஅ)

வேறு.

சிவகுறிமறைவன, நவமுறநிறைகதை,
* யவலொடுபரிபவர், பவமறுவிலரே. (ருகு)

இலிங்கச்சருக்க முற்றிறு.

ஆ திருவிருத்தம் க,சசஅ.

* ஆவல்-அவல் எனக்குறுகிற்று.

# சோரச்சருக்கம்.

நற்குணகிரியிற்பாயுநறியதேனருவிபோலச்
சொற்கதைவேட்கையுள்ளந்தொடர்ந்ததுசோரனெஞ்சத்
திற்கவர்பயத்தின்மூழ்கிமணிகன்னியமரரேனோர்
முற்கதியடைந்தவண்ணமொழிகெனமுனிவன்சொல்வான். (க)

இருட்படுமடவிசூழ்ந்த * தண்டகத்தேய்ந்துதீமைப்
பொருட்படுகொடியபாவமுருக்கொடுபுறப்பட்டாங்குச்
சுருட்குறுங்குஞ்சிச்செங்கட்டொகுவலியெறுழ்த்தோட்டின்னு
மருட்படுவஞ்சநெஞ்சமைக்கரிவடிவுவாய்ந்தோன். (உ)

கொடுந்திறற்கடியவேடக்குலத்துளான்கொலைக்குக்கூசாக்
† கடும்பொடுமறுகமாய்க்குங்கறுவொடுமுயிரைக்காய்வா
னடும்படைப்பலகையொள்வாளம்புவிற்கரத்தனுற்றி
னிடும்பைசெய்துயிரைக்காதுமிரும்புலிப்போத்துநேர்வான். (ங)

குறைத்துயிரறுத்தமாவின்கொழுந்தடிநிணத்திற்குக்கி
நிறைத்துயர்பனவரில்லநெருப்புறவிருப்புற்றுக்கி
மறைத்தவர்பொருளைவெளவிவழிபறித்தடித்துத்தீர்த்தத்
துறைத்தலைகுறித்துச்செல்வோர்த்தொலைத்தழத்துயரஞ்செய்வான். (ச)

கரவினுற்கொலையாலீட்டுங்கருநிதிகளுக்கிந்தா
தரவினுற்குடித்துக்காய்ந்ததசைமடுத்திடியிற்றுவுங்
குரைகொணுய்க்கணங்கள்சூழக்கொடுந்தொழிற்படிவமாகி
யிரவெலாமெரிகவேவியெண்ணிலாரிறப்பச்செய்வான். (ரு)

கொடியவெம்பாவமுற்றுங்குடிபுகநெடியகூற்றின்
வடிவெனவெதிர்ந்தோரஞ்சிமறைபுகக்கறையார்மாசின்
வெடிதருங்குரலாற்றீயவெவ்வினைவிளைத்துவீறும்
படியுயிர்க்கிடுக்கணுகிப்பயனறப்பயிலுநாளில். (சா)

எரிவிழித்தறுகட்பேழ்வாய்ச்சுவாக்கணமிரைத்துச்சூழக்
கரியரிக்குலங்கண்மேவுங்கானகம்புக்குப்பன்மா
விரிதரக்கறுவியாவியீர்ந்திகல்வேட்டையாடிப்
பரிவுறத்திரியுமாற்றுற்பற்பலகானஞ்சேர்ந்தான். (எ)

---

* தண்டகம்-தண்டகாரணியம்; தண்டகனென்னும் அரசனது வனம்.
† கடும்பு-சுற்றம்.

கடுங்கதிரிரவிக்கஞ்சிக்காரிருண்முற்றுங்கூடி
யொடுங்கியவுறையுளென்னவிருண்டுயர்மரங்களோடும்
விடுங்கொடிமிடைந்துசூழ்ந்துவிடு * நெடிக்கடியவெங்கா
னடுங்கிடவிலங்கின்கூட்டமெதிர்ந்தனளுய்களோடும். (அ)

வரித்தவிற்குழைத்துநச்சுவாய்க்கடுங்கணைகடுவி
யரித்துயிரழித்துமாந்தியருநசைப்பெருக்கால்வேட்டை
பரித்தவைபடரத்தானும்படர்ந்துபின்பற்றிக்காயத்
† தெரித்தவையயர்ந்துகாணுதிரிதரத்தேடிச்சேர்ந்தே. (௯)

அடிச்சுவடுணர்ந்துபாயவடவியினூடுபோகி
வடிச்சுடுகணையான்மாய்த்துவல்விலங்கிரியப்பின்போய்
நெடிக்கடுங்களரியூடுநெடியநாட்பலவாங்காதஞ்
செடித்தலைக்கிராதனச்சந்திகைப்பறத்திரிந்துதென்பால். (௧0)

செறியிருட்கடறுவாய்ந்த ‡ வடவையிற்றிரிவான்செங்கட்
பொறியுடற்பகுவாய்வெங்கட்புலியெதிர்ந்துருமிற்சீறி
மறிவுறத்தொடரப்பாறமற்றதுவிடாதுகூற்றிற்
குறியுறப்படர்ந்துகாதந்துரந்துகோட்குறிப்பமாழ்கி. (௧௧)

அடிதளர்ந்தச்சமாகியளிப்பதற்குறுதிகாணுன்
கடிமலர்க்கமலம்பூத்துக்கடற்கரையருகுமேவிப்
படிதருந்தீர்த்தங்கண்டேபடிந்தனனமூழ்ந்தக்காணு
திடியுறுங்குரற்போர்வேங்கையிலக்கறவிரிந்ததன்றே. (௧௨)

கோட்புலியகன்றதோர்ந்துகுளிர்புனற்பட்டநீங்கி
வாட்படைச்சோரன்கானவழிக்கொண்டுதென்னூர்மேவி
நாட்செலவுறைந்துமாயுநாளுறநடுவனோர்ந்தே
யாட்படுந்தூதர்நீர்போயாங்கவற்கொணர்மினென்ன. (௧௩)

கறையெயிற்றுரகம்போலுந்தூதுவர்கடிதினேகிச்
சிறையுறப்பிணித்துப்பாசந்திரண்டதோள்குறுகவார்த்துப்
பறையுறக்கடியநெஞ்சம்பதைபதைபதைப்பவீர்த்து
முறையுறத்தருமனூர்முன்முழுமகன்றன்னையுய்ப்ப. (௧௪)

---

* நெடி-சிள்வண்டு; நெடிற்கடிய வெங்கான் எனவும்பாடம். † கண்ணுக்குப்புலப்பட்டவைகளும், அயர்ந்து பின் புலப்படாது இரிதர. ‡ அடவியிற்றிரிவான் எனவும் பாடம். இப்பாடத்திற்குக் கடறு என்பதற்கு அருநெறி எனப்பொருள் கொள்க.

அயலின் * மேஞ்சித்திரத்தோடாயகுத்தனையித்தீயோ
னியலுநன்குளதேனுடியியம்பெனயாவுமோர்ந்து
பயனறுங்கொலைவெம்பாவம்பரவையாப்பனவர்க்கொன்றே
மயலுறுமாலிமாந்திமனையெரிமடுத்ததீயோன். (கரு)

முனிவுறுதுயரமாற்றிமுடுகெழற்படிவமாகித்
துனிதருநிரயமுற்றுந்துய்ப்பதற்கருகனென்னுக்
கனிவொடுபணிந்துகூறுங்காலையிற்கடைநாட்பொங்குங்
குனிதிரைக்கடலினுர்ப்புக்குளிறுவான்குரைப்பினேங்கி. (கசு)

கடையுகத்திடியிற்பாயகடற்படைவடக்குவாயிற்
புடைவிளித்தார்க்குமோதைப்பொருமுழக்கியமன்கேளா
விடைதெரித்துரைமினென்னவிலங்கெயிற்றுலங்கொடிண்டோண்
மிடைவலி†மிருத்துக்காலரிருவரைவிடுப்பச்செல்வார். (கஎ)

தெறும்பரிகரிபதாதிதேரெனத்தெவ்வுமாய்க்கு
முறும்படையோடுமேகியுலப்பறவுலகமுற்று
மிறும்படிமுழங்குமூழியெழிலியிற்கணையுமாற்றுர்
குறும்பறப்பரவிக்கொம்மைகொட்டியேநகைத்துக்கூவி. (கஅ)

வெஞ்சரமழையிற்றூவிமின்னுமிடைந்தமேக
மஞ்செனப்படைகள்வீசிவடித்தவாள்பலகைகோட்டி
நஞ்செனச்சுழன்றுபற்றுர்நடுக்குறச்சங்கங்காள
மெஞ்சுறமுழக்கிப்பூழியிருந்திசையனைத்துமூட. (கக)

படிநடுக்குற்றுச்சேடன்பஃறலைப்பரப்புச்சாய
வடிபெயர்த்தனலமூட்டியமனியையடர்த்துக்கூற்றைப்
பொடிபடுத்துவமின்றென்றுவஞ்சினம்புகன்றுபூத
முடியுடைப்படைகண்மொய்த்துமுனிவொடுமுழங்கக்கண்டார். (உ0)

தெரிந்திரும்பூதமேவித்தெளிவுறநடுவன்றன்பாற்
பரிந்துதூதுவரையேவிப்பருமிதக்களிறுபாய்மா
விரிந்தவெஞ்சேனைவையமேதினிநெளியப்‡பாத்திப்
புரிந்தெதிர்ந்தேகச்சேனைபொருகடற்பொருவதேபோல். (உக)

---

* மேவுமென்னுஞ் செய்யுமெனெச்சம் மேமென நின்றது. சித்திர தோடு கூடிய குத்தன்- சித்திரகுத்தன். † மிருத்துவும் காலனுமாகிய இருவரை. ‡ பாத்தி-பகுத்து ; அணிவகுத்து.

சீற்றமிக்குயர்ந்தகூற்றுத்திறற்படையடர்த்துப்பூத
ராற்றன்மிக்கழிப்பப்பூதவடற்படையழலிற்பொங்கி
வீற்றுவீற்றுகனூறவெகுட்சிமிக்கடர்த்துப்பூத
ரேற்றவெம்படையைச்சாடவிருதிறப்படையுமீண்டி. (உஉ)

சூழிவெஞ்சீற்றச்செங்கட்டுணைக்கைவெங்கரியினுர்ப்பும்
பாழியந்தடந்தேர்ச்சில்லிமுழக்கொடுபடையினுர்ப்பு
மாழிவெண்டிரையிற்றுவுமயக்கனைப்பனைத்துமோங்கி
யூழியம்புராசியேங்குமொலியெனவொருங்குமேவ. (உ௩)

பொருதடர்த்தெதிர்ந்துவெம்போர்ப்பூட்கையிற்புகன்றுகூவி
யொருவரையொருவர்காய்ந்தேயுடற்றிடுங்காலையோங்கும்
பெருவரையனையபூதப்பெரும்படைபொருதுமாற்றார்
வெருவரவுருமிற்சீறிவிறற்படைபலவும்வீசி. (உ௪)

நெடியவெஞ்சிலைகால்கோலிநெருப்புகுகிரைகவேவுங்
கடியவெம்பகழிமாரிகலந்துறவலந்துகாயுந்
தடியயிற்குலிசஞ்சூலஞ்சக்கரங்குந்தநாந்த
மிடியொடுகாற்றுங்கூற்றுமெதிர்ந்தெனப்பொழிந்துமோதி. (உ௫)

மருத்துறுகலினப்பாய்மாமாதிகவீதியாதி
திருத்தகுதாரையைந்துந்திரிதரலாதி*வையத்
துருத்தெரிதொழிலோரெட்டுமுமிழ்மதக்களிநல்யானை
பருத்துயர்முசலவீச்சும்பறந்தலைபிறங்கப்பாய்ந்தே. (உ௬)

கருமுகினிரையினுர்த்துக்கறுவொடுகனுவியேற்றார்
பொருவிறலழிந்துவெம்போர்புரிதரப்புகலற்றுவி
யொருவியற்றுடலங்கைகாலுறுப்பறவொடுங்கி†யாகோ
செருவெனக்கலங்கிச்சிந்திச்சிதைந்தனர்திறலிற்சேர்ந்தார். (உ௭)

கண்டவருடலங்கம்பித்தொடுங்கிடக்கறுவினோடு
மண்டமர்புரியமாய்ந்தகரிபரிவய்மார்மள்ளர்
விண்டகைபிணத்திஞயவெற்பிடைப்பிறந்துமேவிப்
புண்டருகுருதிவெள்ளப்பொருநதிபுரட்டிற்றன்றே. (உ௮)

---

* தேர்க்கதி எட்டாவன: பிராந்தம், உற்பிராந்தம், ஆவித்தம், ஆப்புலுதம், விப்புலுதம், துரிதம், சம்பாதம், சமுதீரணம். என்பன. † ஆகோ என்பன அதிசயவிரக்கச்சொற்கள்; ஒருமொழியாகக் கோடலுமொன்று.

* நிணக்கொழுஞ்சேறு, வாண்மீ, னறுமயிர்பாசி, நெற்றி
வணக்குவெண்கலிங்கம்பேன, மலிந்தெழுகவந்தம்வன்மீன்,
கணக்கிறேரானை,கங்கங்காகம்புட்,கறையேநீராப்,
பிணக்கரை,பொருமாவேகப்பெருநதிபெருகிற்றன்றே. (௨௯)

வேறு.

மாய்ந்தவெம்படைமயக்கினைக்காண்டலுமருண்டே
காந்துவெஞ்சினங்கதுவியேகட்பொறிகளுல
வேய்ந்துகாலனுமிருத்துவுமிருஞ்சிலைகோலித்
தீய்ந்துறுங்கணைசிதறினர்திசையெலாமறைய. (௩0)

வெங்கனற்றிரட்சொரிவனமிடைந்தெதிரடையார்
பங்கமுற்றிடப்படர்வனபற்பலவாய
கங்கபத்திரக்கணைசொரிந்தடர்த்திடக்கணையிற்
பொங்கனற்பொறிபூத்தனபூதங்கள்புழுங்க. (௩௧)

இரவிவெங்கதிரறவிருளெங்கணுமிடையப்
பரவுறுங்கணைப்பரப்பையுஞ்சேனையின்பரிவு
மரவவொண்கழற்கணத்தரசாயமாகாளன்
மரபினுய்ந்தெழுங்குறுநகைமலர்தரமதித்தே. (௩௨)

பெருகனற்படுவையெனப்பிறங்குகோலனைத்து
மொருகணத்தினிற்கரித்தவையொழித்தயருலகத்
திருளகற்றிடவிலகியதிருவருமுணர்ந்தே
செருவிளைப்பதற்கெதிர்ந்துமாகாளன்மேற்செயிர்த்தே. (௩௩)

கடுவுயிர்த்திடுங்காற்கணைவாசவன்கணையும்
வடுவுறத்தொடவுங்கரித்தவனவைமாற்றத்
தொடுகடற்கிடந்தவன்கணையயன்கணைதுரப்ப
முடுகமற்றவையங்கையாற்பற்றினன்முறித்தான். (௩௪)

---

* நிணஞ்சேருகவும், படைக்கலங்கள் மற்சங்களாகவும், அற்றமயிர் பாசியாகவும, வீரர் நெற்றியிற்சுற்றிய வெண்மையாகிய தலைப்பாகை நுரை யாகவும், உடற்குறைகள் முதலைகளாகவும், தேர்கள் நீரானைகளாகவும், பருந்துகளும் காகங்களும் வண்டுகளாகவும், இரத்தம் நீராகவும், பிணமாகிய கரையோடு மோதும் மிக்கவேகத்தையுடைய பெரியநதியானது பிரவாகித்த தென்க. நிணங்கொழுஞ்சேறு எனற்பாலது நிணக்கொழுஞ்சேறென விகாரமாயிற்று. வாள்-படைக்கலப்பொது. அறுமயிர் வினைத்தொகை. நெற்றி-உச்சி. கலிங்கம்-வஸ்திரம். பேனம்-நுரை. நீரானை-நீரில்வாழும்யானை. இதனை ஓங்கில் என இக்காலத்தார்கூறுப. புள்-வண்டு. கறை-இரத்தம்.

நடுங்கியேயுலகடங்கிடவுருத்திரநாமத்
தொடுங்*கதிர்த்துணைப்பாசுபதாத்திரந்தொடவே
யொடுங்கிமெய்ப்பரிவோடுடன்வணங்கியேயுரவோ
னெடுங்கையாற்றரித்தமைந்தரனுருவெனநின்றான். (நடு)

திருத்தமார்†விளையாட்டலமென்றெதிர்சீறு
மிருத்துவோடுயர்காலனென்றிவர்தமைவெற்பிற்
பெருத்ததோள்களாற்பிடித்தணிபிறங்குதேர்மீது
வருத்தமார்தரப்பிணித்தடன்‡மறலியைமதித்தே. (நசு)

கடிதினேகிடக்கலந்தெதிர்நடுவனுங்கலங்கிப்
படியின்மேற்பணிந்தஞ்சலியோடுளம்பதைத்தே
யடியனேன்பிழையனைத்தையும்பொறுத்திவராற்றுங்
கொடியசெய்கையுஞ்சமியெனத்துதியொடுங்குழைந்தான். (நஎ)

தருமனன்பினோடியேசார்ந்தமாகாளன்
வெருவலோம்புதிபொறுத்தனனின்றொழின்மேயார்
கருமமாற்றுதல்கடனெனவீங்கிவர்கட்டுப்
பெருமநீக்கெனவிடுத்தவர்தமையருட்பெரியோன். (நஅ)

ஏதநீங்கினைசோரனையீங்கருளென்னப்
பாததாமரைபணிந்தவன்பரிவொடும்பகர்வா
னுதவாங்கவனவிற்றருங்கொடியவெம்பாவக்
கோதினுனணுவாயினுமறநிலைகுறியான். (நக)

எரிவிரிந்தெனத்தெறுநரகினுக்கிரையெய்தற்
குரியனிங்கிதுசித்திரகுத்தனுமுரைத்தா
னரியயன்றொழுமரனுருவாயநீயழைத்துப்
பரிவுறுந்தரமிலனெனப்பண்ணவனுரைப்பான். (சO)

கருணையேயுருவாகியகண்ணுதற்பெருமா
னருணயந்தநன்மொழியிஃதறிதிநீயன்றோ
னிருணெருங்கியதீவினைக்கொடியனேயெனினும்
பொருணிரம்பியவறம்புரிந்தானதுபுரிநீ. (சக)

வடவைவையெனத்தீவினைத்திரளெலாமாய்க்குங்
கடன்மலிந்தொளிர்மறைவனங்கமழ்மணிகன்னித்
தடமமூழ்ந்தியேபடிந்தனன்றடிந்தனன்றவறு
யுடன்மிலைந்தனசித்திரகுத்தனீதுணரான். (சஉ)

---

* துணைப்பாசுபதாத்திரம்-இரண்டுசிவப்படைக்கலம். † விளையாட்டலமென்று-விளையாட்டினியமையுமென்று. அலம்-போதும். ‡ மறலியை மதித்தே கடிதினேகிட, என வருஞ்செய்யுண்முதலோடுகூட்டி - யமனைத் தேடி யமபுரத்தினுள்ளே விரைந்துசெல்ல எனப் பொருள்கொள்க.

ஆயபேறமவற்குளதழைத்திநீயென லு
மாயமீதெனச்சித்திரகுத்தனேர்வகுப்பான்
மேயவெம்புலிவெருட்சியா லுயிர்பெறவேண்டித்
தோயமூழ்கினன்றீர்த்தமீதென்றுளந்துணியான். (சுரு)

புந்தியுற்றவாதரவினுற்புண்ணியதீர்த்த
மூந்துமற்பொடுபடிந்தவர்க்குயருலகுளதாஞ்
சிந்துமுற்படுதீவினையென்றுசீர்போற்றி
வந்துசொற்றிடநமனெதிர்வழங்குமாகாளன். (சுசு)

ஆற்றுநற்றவமகங்கொடைமுதலியவறங்க
டேற்றமற்றவேற்பயன்படாவென்பதுதெளிவே
தோற்றமாரறிவுண்மையாலின்மையாற்றுயர்தீ
ரேற்றவாதரவுற்றவரற்றவரேனும். (சுஎ)

தத்துநீர்மணிகன்னியிற்படிந்தவர்தழைத்தே
முத்தராவதுநிச்சயமிற்றைநாண்முதலாப்
பத்தியான்மயலால்வினையாட்டினுற்பயத்தா
லெத்திறத்தினுமணிகன்னியிலங்குநீர்படிந்தார். (சுஅ)

கொடியபாதகங்கூடினராயினுங்குழகன்
வடிவமாவதற்கையமின்றெனவுளமதித்தே
நொடியினுங்கவற்கொணர்கெனநோக்கியேநடுவன்
கடியசோரனைமுன்றரக்கண்டுமாகாளன். (சுஎ)

வேய்ந்தபொன்மணிவிளங்கொளிவிமானமீதேற்றி
வாய்ந்தசாமரைவயங்குறவைத்தனனேக
வேய்ந்தபின்பணிந்திரந்திடுநடுவனுக்கிரங்கி
மாய்ந்தவெம்படையுய்ந்திடநல்வரம்வழங்கி. (சுஅ)

வேறு.

பெருவிருப்பானெடுந்தூரம்பின்னேகுமறலியைநீபெயர்ந்துநீங்கி
வெருவுறவேயுறைதியெனவிடைகொடுபோய்யமனியிடைமேவிமேன்மை
மருவுமணிகன்னியினைவாழ்த்தியதன்புகழ்பரவிமகிழ்ந்தான்வாசத்
திருவுலவுகயிலையினைச்சேர்ந்துதிறன்மாகாளன்சேனையோடும். (சுகூ)

ஊற்றிருந்தபெருங்கருணையொழுக்கியநோக்கருளியுமையோடுகூட
வீற்றிருந்தபெருமானையடைந்தமலவிவண்சோரன்மேயானென்னுப்
போற்றியுரைசெயக்கருணைபுரிந்துபரஞானமுறப்பொழிந்தஞ்ஞான
மாற்றியருளுருவளித்துவரம்பறுமின்புறுவாழ்வுவழங்கினனே. (எ0)

கொடும்புலியான்மணிகன்னிகுளித்தொளித்தசோரனுமக்கோதுநீங்கி
யிடும்பையறச்சிவரூபமேய்ந்தனனேலதன்பெருமையிசைப்பார்யாரே
கடும்பரிமாவிரவிபயில்காசினியினிதுபோலக்கருதுமாக்கந்
தொடும்பயனையளிப்பதிலைசுடர்வீடுவேண்டினையேற்றேய்திநீயும். (ருக)

இலங்கிலைவேனகுடனெடுமிகலாகியிந்திரத்துய்முனனுமேய்ந்தே
நலங்கிளருமணிகன்னியிந்திரனய்நாகமதினயந்துவாழ்ந்தா
னலங்கொளிசூழ்மணிகன்னியதன்மேன்மையளந்தெவரேயறிவாராட
லுலங்குலவுமணிநெடுந்தோளுறுவலியாற்புவிதாங்குமொளிறுவேலோய்.

வேறு.

பழியொடுபடர்வினைபகர்வறவிகலொடுபயில்சோரன்
கழிபெருமகிழ்வொடுகெயிலையினுறுகதிகரைகாதை
யெழுதினர்நொடிபவரிமையவருயர்பதமெழிலோடு
மழிவறமருவுவரளவறுசுகமுறவனைவோரும். (ருஉ)

சோரச்சருக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் க,ருoக.

---

# இந்திரத்துய்முனச்சருக்கம்.

முரியுமலையமுதமெனமுதுக்குறைதந்திருணீங்கமொழியுங்காதை
தெரியுமிரும்பூதுளதானகுடனெடுமிகலாகித்தேவர்கோமான்
பரியுமுயர்பதமேவியிந்திரத்துய்முனன்பரித்தபான்மையாவும்
விரியவுரையெனமுனிவனரியமணிகன்னியின்சீர்விளம்பாநின்றான். (க)

வெற்றிமதக்களியானைவேந்தர்மணிவயிரமுடிமிடைந்துசோதி
துற்றுருவமழுங்குகழலிந்திரத்துய்முனனெனப்பேர்சுமந்தமேலோன்
பற்றலர்தாந்திறையளப்பப்பரவியசீர்திசையளப்பப்பலநூல்போல
முற்றுமறையுளமளப்பவுலகளக்குந்தனிச்செங்கோன்முறைநடாவி. (உ)

ஓங்குமெயிலயோத்தியிடையுறைந்துயர்நீர்க்கடலாடையுலகமுற்றுந்
தாங்குமொருகுடைநீழற்றண்ணளியாலளித்துயிர்க்கோர்தாயென்றாகித்
தீங்குபுறந்தரவளகைச்செல்வனெனத்திருமேவித்திறலாற்குன்றின்
வாங்குசிறையரிகுலிசவாட்படைவாசவன்போலமாட்சிமிக்கான். (ங)

மாரிநிகர்கொடையானுமகத்தானுமுயிர்க்கருளும்வண்மையானும்
பேரிசையார்மனுநீதிப்பெருமையினுநிகர்க்கரியபெரியோன்காக்கும்
பாரினடும்பிணிபசிவெம்பகைபாவம்பயங்காலம்பரிந்தசாவு
காரியலுங்களவுபழிகயமையழுக்காறுவஞூஉக்காமமாதி. (ச)

மழைவருத்தங்கலிவறுமைமடிமுதற்றீக்குணஞ்சிறிதுமன்றாகித், தழையறத்தின்மலிந்தொழுக்கஞ்சால்புதயைவிருந்துபுறந்தருதலாதி,விழைவுறுத்துங்குணம்பொலிந்துவெறுக்கையிரப்பவர்முகப்பமேவிப்பாவக், குழைவகற்றிக்கொலையொழித்துக்குலவுதிருப்பெருகுவளங்கொழித்துமேவும்.

மனைகடொறும்புனைவேள்விமதலைமகார்மணந்துறக்கமானவேய்ந்து
நினைதருமின்புறத்தருமநிறைந்தமைச்சர்முதலாயநெறியோர்சூழக்
கனைதருநீர்க்கடற்புடவிகளியோங்கிக்குளிர்தூங்கக்கதிர்கள்சூழ்ந்து
வனையுமரியணைமீதுவசிட்டன்முதற்றவர்சூழவைகுநாளில். (௭)

திருந்தியநூற்றுறைபடிந்துதெளியுமவர்புறஞ்சூழத்திருவார்வேந்தன் பொருந்தியபேரவையினிடைப்புகுந்தொருபூசுரனொருநாட்புகழான்மிக்கோய்,பெருந்தகையாகியநகுடன்பேசுமொழிநினக்குரைப்பப்பெரிதுதூரம்,வருந்தியுநின்பாலடைந்தேன்வகுத்தமுறைகேட்டியெனாவழங்கலுற்றான்

போதுநீக்கியுலகளித்தபுரூரவாவெனும்புகழோன்புதல்வன்பூந்தேன்
மதுவூற்றுந்தொடையாயுவரத்தளித்தோனகுடனெனவயங்குமேலோன்
விதுவாற்றுநிழற்கவிகைவிறல்வேந்தனறந்தழையுமிக்கசீரோ
னதுமாற்றமிதுவாக்கமாகுமெனவறிதியெனாவருள்வானன்றே. (௮)

அலர்தலைமாநிலமளிக்கமகனாயயாதிதனையமைத்துத்தேவர்
மலர்தருவானளிப்பனெனமனத்தமைத்துப்பரிமேதமகமோர்நூறு
நலமலையாதியற்றவுயர்நானிலத்துவேந்தர்*கரநாடிவேந்தர்
புலநிலையாரிடைத்தூதுபோக்கவியானினக்குரைப்பான்புகுந்தேனன்றே. ()

வயப்பரிமாமகமியற்றமணிமாழைமுதற்பொருளும்வழங்கிநீயு, நயப்பொடுமொங்கெழுதியெனநவின்றனனென்றுரையாடநகைமீக்கூரப், பயப்பறுமிவ்வுரைநகுடன்வெளிற்றைவெளிப்படுத்ததவன்பணித்தமாற்றம், வியப்புறுமாறிறும்பூதுவிளைக்குமெனப்பெருநகையால்விளம்புகின்றான். (௧௦)

மின்னுமெனதழற்கதிர்வேலுளதாகத்தன்மகனேவேலைசூழ்ந்த
விந்நிலமாளுவதொன்றோவிந்திரனுமுளனாகையாக்கையோடும்
பொன்னுலகந்தானாளும்புரிவொன்றோவதுகிடக்கப்புரியும்வேள்விக்
கென்னதுபாற்கரங்கேட்குமிதுசாலவிம்மிதத்தையிழைக்குமன்றே. (௧௧)

போதமறும்பூசுரனீயாதலினாலகந்தையுறப்புகன்றமாற்றத்
தேதமுணராதுரைத்தாய்யாகமுநானுளனாகவியலாதும்பர்
மீதுலகுமுறுதிறனும்வீழ்த்திடுவன்சதமகத்தால்விண்ணமாளிற்
பூதலமீதாயிரமும்புரிந்தாரேனுமாரறியாப்புன்மைபூண்டான். (௧௨)

---

* கரம்-திறைப்பொருள். வேந்தர்-நெடுநிலவரசர். புலநிலையார்-குறுநிலவரசர்.

எனவுரைத்திபோதியெனாநந்தகனீயிவணேறுமேகிடேயும்
பனவ*னுரைத்தெனநகுடன்பானுரைத்தியெனவேவிப்படையைநோக்கி
யனகமுறும்பரியடையினைப்படுத்திக்கொணர்மினெனவாணையீந்து
முனமருவுநந்தகனைமுகநோக்கிப்பின்னுமிதுமொழியலுற்றான். (௧௩)

மகமுடிப்பத்தாதுகரம்வழங்குதலுமிலையாகும்வரத்துவேள்வி
யகமகிழ்ச்சியுறமுடித்தேயமரருலகளித்திடினுமரியவேள்வி
த்கமுடித்தலன்றியுமத்தலமேவித்தனைவீழ்த்துத்தருவினீழன்
மிக†வளிப்பனிதுவழுவாவிரதமெனவுரைத்தியெனவிடுப்பப்போனான். ()

அரசனுரைதலைமேற்கொண்டடைந்திடுநந்தகனகுடனமர்ந்துமேவு
முரசதிரும்புரியடைந்துமுன்மருவியிந்திரத்துய்முனனென்றோதிப்
பரசுமகிபதியுனக்கு‡குசலமுணர்த்தினனெனமுன்பகர்ந்துமூசும்
பிரசநறுந்தாரரசனுரைத்தபடிவழுவாதுபேசிப்பின்னும். (௧௫)

பேசுமகந்தையினையொழித்துறுதனலமலதனதுபிறங்குஞ்சீர்த்தி
மாசறுமாருயிர்நாசமருவுமெனவழங்கினனெம்மன்னனென்னக்
கூசமறுவறுந்தூதன்கொடியவுரைசெவிப்புகலுங்கொதித்துக்கோலத்
தேசுலவுமுகங்கருகிச்சினம்பிறங்கநகுடனிதுசெப்புகின்றான். (௧௬)

மறைமுழுதுமளவிமகத்துறையாய்ந்துபுனிதமுறுமறையோர்மேவி
நிறையுமவையினைநோக்கியிந்திரத்துய்முனனாயநிருபன்கூறுங்
கறைமருவுமுரைப்பயனைக்கண்டிடுமின்கரமிலையேற்§கடிந்துகாயு
மிறையுளதேற்கவர்ந்திடுவனிலனாயிற்றவிர்கவிதுமிகையதன்றால். (௧௭)

பாய்பரிமாமகநூற்றினிந்திரனற்பதமேவிப்பரிப்பனென்னும்
வாய்மொழிதீங்கெனமறுத்தன்மறைவழக்கோசுருதிமிகவகுத்தமாற்ற
மாய்விலனாதலினுரைத்தான்சூத்திரன்போலரசர்குலத்தாயதோற்ற
மேயதிலைப்போலுமெனவியம்பிமறைதருமாற்றமெடுத்துக்கூறி. (௧௮)

வேண்டியமெய்ப்பயனைத்தும்விளக்கவெனவிதிமறையைவிரித்துக்கூறித்
தூண்டியநான்முதற்சுருதித்துறையாற்றித்துறக்கமுறுந்துகடீர்போக
மீண்டியவானவராதியெல்லையிலாரிதுபழிக்குமியல்பேயாயிற்
பூண்டியலுமரசுரிமைப்போலியவனாமெனவேபொருந்தக்கூறி. (௧௯)

---

* உரைத்தது எனற்பாலது உரைத்தென நின்றது. † அளிப்பன் என்பது தன்மையொருமை வினைமுற்று; நானேகாப்பேன் என்பதாம். ‡ குசலம்-க்ஷேமம். § கடிந்துகாயுமிறையுளதேற்கவர்ந்திடுவன், கடிந்துகாயுமிறையுளதேல் (அவன்) தவிர்க, கடிந்துகாயுமிறையிலனாயினிது மிகையதன்று, எனக்கூட்டிப்பொருள் கொள்க.

முன்னியவூர்த்தனைமுனைநோக்கித்தினைக்கொறநன்முறையன்றரும்
பன்னியதூதாகையினுற்பயிலரசப்போலியிடைப்பரிவினேகித்
தன்னியனுட்டினைத்திறைநீதந்திலையேற்கவர்வனெனச்சாற்றுவேத
மின்னிலையாம்பிரமாணமெனினிழைத்தேபரிமேதமியம்புமாற்ருல். (உ0)

தருநீழற்புரப்பதுவுஞ்சத்தியமேயானரசத்தன்மைமேவி
ளுெருநீர்மையிதுதானுமுயர்ந்தகுடிப்பிறந்தநலமுண்மையாயிற்
றிருநீர்மைமகமுழுதுஞ்செய்யாதங்கெனைநீக்கித்திகழ்ந்துதேவாய்க்
குருநீலமுடிக்குடிக்குலவுமலவிந்திரவிரதக்கொள்கையென்றே. (உக)

சாற்றிவிடுத்திடத்தூதன்ருனேகித்தன்னிறைபாற்சரணமீது
போற்றியுரைத்திடமகிழ்ந்துபுரிவோடும்புடவியிணைப்புரக்குநாளிற்
கூற்றியல்வெம்படைக்குழக்குளிருதிருப்படைமிருகவேட்டை
யாற்றிவிலங்கினமிரியவரணியத்துமுரணியற்றியமர்ந்துமேவி. (உஉ)

கலபமயிலினமாடக்களிதருவண்டினம்பாடக்கனகங்காசு
நிலவுமலரினந்தருவினிரைதூவமுழவருவிநிகரமேவக்
குலவுமரியினங்கரியின்மத்தகமுத்தினஞ்சிதறக்குனிந்துதாவப்
பலகரியுமிகவிரியக்கரியநிறப்பல்லமிகப்பகைத்துச்சீற. (உங)

கண்டுமகிழ்ந்திடுமரசனேரிடையிற்களகளவென்றெழுந்தவோசை
கொண்டுசெவிப்புலனுேக்கிக்குலவுதிசைப்பாலரொடுங்கூடித்தேவர்
மண்டுகணம்புடவியிடைவானகன்றுவருவதெனமதித்துமேவற்
குண்டொருகாரணமதனையுற்றறிவனெனத்தேறியுவப்பினேடும். (உச)

புங்கவர்தங்குழாத்தைமிகப்போற்றியருந்துதியாற்றிப்புடவிமீதே
யிங்கிவர்நீரணைவீருமெய்துதற்குக்காரணமேதிசைமினென்ன
வங்கவரிங்கிவற்குரைப்பாரருட்பிரசாபதித்துவட்டாவளித்தமைந்தன்
றுங்கமறையோன்விசுவரூபனெனுமவனுவிதொலைத்தவாற்ருல். (உரு)

பிரமகத்தியிந்திரனைப்பிணித்தலைப்பவவனெடுநாட்பிறங்கிமேவும்
வரமகற்றிமறைந்தனனுமதித்துலகமனைத்துமவன்வரவுகாணு
துரமிகுத்தவவுணர்தமக்குடைந்திடைந்தேமெங்குரவனுணர்ந்துவாடுந்
* தரமிரித்தற்கயமேதஞ்சதமாற்றுநகுடனையேதலைவனுக்கி. (உசு)

தானவரையழிப்பனெனச்சார்குரவனெடுதரணிசார்வாமோர்தி
யானமுறையீதெனவேயழகிதெனவிந்திரத்துய்முனனுமாய்ந்து
வானவர்நீர்வாசவனுயெனையளிக்கினசுரர்தமைவலிந்துசீறி
யூனமறவழித்துமக்கின்புறவளிப்பனுரன்வலியாலுயர்ந்தேனென்ன. (உஎ)

*தரம்-அச்சம்.

வீற்றெழிலாற்சிறந்தனைநீயாயிடினுமகநூறும்விளைத்தார்க்கன்றிப்
பற்றுமகவானுயரும்பதமரிதாமுறுதியெனப்பணித்துத்தேவ
ருற்றுமகச்சாலையிடையுறைநருடன்றனைநோக்கியுவர்நீர்வேலி
ஈற்றுமுலகிடையுனைநேர்தோற்றமெவர்க்குளதாகுந்துணியினென்றே. ( )

சீற்றமிகுந்திறன்மறப்போர்திகழ்மருவாருயிர்பருகுஞ்செருக்கார்செற்ற
மாற்றலடல்கொடையருள்சீர்வேள்வியறநெறியரசர்மாட்சியாதி
யேற்றகுணங்களினுயர்ந்தோயிந்திரனேயெமதுலகுக்கிறைவனாகி
மாற்றலர்தானவராவிமடித்தெமையுமளித்தியெனமகிழ்ந்துசொல்வான். ( )

மகவான்றன்பதமெனக்குவழங்குதிரேலுமதருவார்வலியிற்பாதி
யிகவாதின்றளித்திடினீரதுவாய்ந்துபெருவலியாலிகலியேற்று
ருகமாயப்பொருதழித்தேயுமையளிப்பனெனவுரைப்பவுறுதியோடு
தகவாகுமெனத்தேவர்தம்வலியிற்பாதிதனித்தனியேயீந்தார். (௩0)

முழுவலிமுன்புளதோடுந்தேவர்பெருமொய்ம்பமர்ந்துமுகுந்தன்போலத்
தழுவியதேசொடுவானத்தருமலருந்துந்துபியுந்தழைத்துச்சூழப்
பழுதறுமிந்திரதிருவிற்பணைத்துவிளங்கியநருடன்பரிவினோடும்
விழுமியதேவரைநோக்கிவிரைந்திதுநீர்புரியுமெனவிளம்புகின்றான். (௩க)

இந்திரத்துய்முனனெனப்பெரெய்துமவன்றனைத்தேவிரிகலிச்சூழ்ந்தென்
றந்திரத்தினொடுமடுத்துத்தரணியிடைப்படுத்தவன்சீர்த்தனங்களாய
* மந்திரப்பொன்மணியாதிவாரியிவண்வருதிரெனமகிழ்ந்துபாரி
னந்தரத்தார்பெருஞ்சேனையயோத்தியினைவளைத்தடல்செய்தலைத்ததன்றே.

மூரிநெடுங்களிற்றரசன்விளைந்ததுநன்றெனக்குறியமூரன்மேவிப்
பாரியலுங்கரிபரிதேர்பதாதியெனுஞ்சாதுரங்கப்படையினோடுந்
தேரினெழுந்தமரரொடுஞ்செருவிளைத்தற்கெழுந்திருபாற்சேனைகூடிக்
காரினதிர்ந்திடுமயத்தின்கணஞ்சூழப்பெருஞ்சமர்கைகலந்ததன்றே. (௩ச)

பருமவயப்பரிக்கனைப்புமருவியெனமதங்கலுழும்பனைக்கைவேழத்
துருமதிருமுழக்கொடுதேருருட்படுபேரொலிவயவருடற்றுமார்ப்புங்
கருவிமுகிற்கணமுழக்குங்கடலதிர்ப்புமவித்தெழமேற்கதுவிச்சீறிப்
பொருவிறற்போர்புரிந்தலைப்பப்பூழிதிசையொடுவானம்புதைத்ததன்றே.

போர்த்ததுகள்பொருமறவருடல்பொழியுங்குருதியினாற்போகப்போரிற்
கூர்த்தகடும்பகழியயிற்கொழுங்கனல்சூழ்ந்திடக்கணையாற்குறைத்துமள்ள
ரீர்த்ததலைபலதாலக்கனியெனவிண்ணியங்கிவிழவிழைத்தபோரி
னார்த்தமரர்நரரழியவடர்ந்துதொடர்ந்திடநிலையாதழிந்தாரன்றே. (௩ரு)

---

* மந்திரம்-அரசமாளிகை.

வேறு.

வானவர்க்குடைந்தோடியசேனையின்மடிவுகண்டிடியேற்றிற்
கானகத்தெழுஞ்சிங்கவேறெனச்சிலைக்கழைகுழைத்ததிர்த்தேய்ந்து
தேனளித்ததாரிந்திரத்துய்முனன்றேவர்தந்திரட்சேனை
யினமுற்றழிந்திரிதரவிரிகணையிலக்கறப்பொழிந்திட்டான். (கூரு)

எரியெனத்தெறுங்கொடுங்கணைபலபரந்திமையவரணியாக
மரிவுறத்துரந்தடிமுடிகரஞ்சிரமறுத்தொறுத்திடவாற்றுர்
பரிபவத்தொடும்படியுறப்படிதரப்பார்த்தெழுதிசைப்பால
ரரியெனத்திகழரசன்மேற்சரம்பலவழுத்தினரடன்மிக்கார். (கூஎ)

திக்கின்மேவியபாலர்தங்கணையினைச்சிதைத்திடவவன்சீற்ற
மிக்கடர்ந்தவர்தனித்தனியரசன்மேல்வெஞ்சரம்பலதூர்த்தார்
தொக்கவக்கணையனைத்தையுமறுத்தனன்றெருடுகணையவர்மேனி
புக்கொளித்திடவநந்தமுமழையெனப்பொழிந்தனன்பொருவில்லான். ()

வெய்யவெங்கணையனைத்துமங்கவருடல்வெறுத்தறக்கிழித்தேகிப்
பையராவெனப்பாதலம்படர்ந்திடப்பதைத்தவர்படராரு
மையன்மேவிடவார்ந்தெழுகுருதியான்மலர்ந்தகிஞ்சுகம்போன்றே
செய்யமார்பொடுகரஞ்சிரந்துணிபடச்சிதைந்தனர்திறன்மிக்கார். (கூகூ)

வீந்தொழிந்தவரல்லவரிரிதரவிறன்மிகவெரின்மேவிக்
காய்ந்தடர்த்திடச்சரணெனநகுடனைக்கடவுளருறக்கால
மாய்ந்தவன்சிலையாவமாசுகங்கசையணிந்தடற்கலிவெம்மா
வேய்ந்ததேர்மிசையிந்திரத்துய்முனன்மேலெழுந்தெதிர்த்திட்டான்.

எதிர்த்தவேந்தர்களிருவருஞ்செருச்சினத்தெரிவிழியிணைதாவ
வதிர்ந்தடர்ந்தெதிர்விருத்திரனிந்திரனுமெனவரியேற்றின்
முதிர்ந்துவெம்புலிமுரட்கரியிரண்டெனமுடுகியசினங்கூர
வுதிர்ந்துதாரகையுறக்கணையுலப்பிலவுருமெனப்பொழிந்தார்த்தார். (சக)

கறுவியங்கவரொருவரையொருவர்மேற்கதுவியேயுயிர்காய்வான்
குறுகிவெஞ்சமங்குவலயங்குலைந்திடக்கொடுங்கணைமழைதூவி
மறுகவான்றிசைமயங்கிடமறைத்தனர்வயத்திறல்வலியொப்பார்
நிறுவினுருடல்கிழித்ததுமுனைந்திலர்நெடுஞ்செருநிலைநேர்ந்தே. (சஉ)

வருணனிந்திரன்மாருதன்சமனிதிமன்னிசாசரன்வான்பே
ருருவவெங்கணைபிரமனுராயணனுயர்பெயர்க்கணையூழிற்
செருமலைந்துறவிடுத்தனர்திகைத்திலர்சிங்கவேறெனச்சீற்றத்
திருவருஞ்சமநிலைபெறவெலற்கரிதிவனையென்றிகல்கூர்ந்தே. (சங)

நாகவேந்தெனநயந்திடுநகுடன்மாநரபதியவன்மீதே
மோகவெங்கணைவிடுத்திடமயங்கியேமூர்ச்சையுற்றவன்மேவ
வேகமோடவன்மகுடமே * கரமெனவிழைந்துகொண்டுதன்வேள்வி
தாகமார்தரமுடித் † தவபிரதமுந்தண்புனற்றுறைதந்தான். (சச)

முன்னியாங்கதுமுடிந்தபின்றவன்களிமுதிர்தரப்பெருநார்வந்
துன்னியேய்ந்திடுஞ்சூரரொடுவிமானமேற்றுறக்கமுற்றவன்வாழ்வே
மன்னியோங்கியவானொடுதராதலமன்னனுய்மதுக்காலும்
பொன்னினார்தருநீழல்வீற்றிருந்தனன்பொலிவுறப்புகழ்பூண்டே. (சரு)

மயக்கநீங்கியவிந்திரத்துய்முனன்வளநகரிடைமேவி
நயக்குநாளிடைநகுடனதிறமெலாநயந்தவர்வியந்தேத்தத்
துயக்கமெய்தியென்வஞ்சினவிரதமுந்தொலைந்ததாலெனச்சோர்ந்தே
கயக்கண்மேவியமலர்முகங்கருகியேகவலையுற்றிடுங்காலை. (சசு)

கருகிவாண்முகங்கவலையோடழிந்துளங்கலங்கியதிறல்வேந்த
னருகுமேவியேவசிட்டனீண்டரசநீயாகுலமிகமேவி
யுருகிவாடுதற்கேதுவேதூழ்முறையுற்றதேலுணர்வுள்ளார்
பெருகுமாறுவெந்துயருறார்பேதையர்பீழையுற்றயர்வாரே. (சஎ)

துயரகற்றியேமனத்தினைத்திருத்திநீதுணிதியேற்றுயர்கூறு
மயரகற்றுவனுரையெனக்குரவனன்மலரடியிணைபோற்றி
யுயர்வுடைத்தவத்தோங்குநீயெங்குலத்துற்றவர்கதியேயா
யயர்வகற்றினைநீயருள்கூர்ந்திடினரியதொன்றிலையன்றே. (சஅ)

வேறு.

வீறுவெம்பரிமேதநூறியற்றுதல்விடுத்தே
கூறுமிந்திரபதத்தியான்குலவியேநகுட
னுறுநற்றருவிழந்திடநடுக்கிநாயகனும்
பேறுநல்கெனப்பணிந்திடவோர்ந்துளம்பெரியோன். (சகூ)

தாங்குமெய்யுடன்மகத்தினைத்தவிர்ந்துவிண்படரும்
பாங்குவேறிலையாயினுமிராசியம்பகர்வாம்
வீங்குதென்கடற்கரைமறைவனம்வியனுலகத்
தோங்குமாங்கதின்மணிகன்னியென்த்தடமொன்றுல். (ருo)

---

* கரம்-இறைப்பொருளென்பது மேலுங்காட்டப்பட்டது. † அவபிர தம்-அவபிரதஸ்நானம். அது, மகோற்சவமுடிவிற்றீர்த்தஸ்நானம்போல யாகமுடிவிற்செயப்படும் ஸ்நானமெனவறிக.

எல்லைநீங்கியபெருங்குணமேன்மையாலேயு
மல்லைநீக்கிடுமெதனிடைப்படிதியேலாக்கம்
வல்லையீந்திடுமணிகன்னிபடிந்துவான்றிரிசங்
கொல்லைமேவினன் * வருணவெம்பாவநோயொழித்தே. (ருக)

பேயுமாங்கதிற்சிராத்தமேய்ந்தருங்கதிபெறுமால்
வாயுமாதவத்தேவலனயன்புரிமகிழ்ந்தான்
காயுமாவினைகங்கையேமுதனதிகழித்த
வேயுமாமகப்பயத்தினைப்பிரவரனேய்ந்தான். (ருஉ)

காதன்மேவியமாதரைக்காசிபன்கலந்தா
னேதநீங்கினன்சோரனுங்கௌசிகனேய்ந்தே
வேதவிப்பிரனுயினன்மணிகன்னிமேவி
மாதவப்பயனெண்ணிலார்மேவியேமகிழ்ந்தார். (ருங)

விதியினாற்படிந்தெழுதியேல்வேண்டியவிளைக்கு
மதியினாகுலமாற்றிநீமறைவனமேவிப்
பொதியினாறியபூமணிகன்னியைப்போற்றிக்
கதியினாகுதியென்றவற்கருளொடுங்கழற. (ருச)

தெண்கடற்றருந்தெய்வவாரமுதெனத்திகழ்ந்தே
நண்புறத்தருநன்மொழிமனப்படநாடிப்
பண்புறத்தொழுதவனெடும்பனிக்கதிர்ப்பரப்பால்
விண்பிறக்கிடவிளங்கியமறைவனம்விரைந்தான். (ருரு)

போதவிழ்த்தளிபொம்மெனமுரன்றிடப்பொழிதேன்
மோதலைத்தருதடமணிகன்னியைமுறையா
லாதரத்தொடுபணிந்துசங்கற்பமுமறைந்தே
வேதமுற்றமந்திரத்தொடும்படிந்தனன்விதியால். (ருசு)

நீலமாமணிதுணித்தனநீர்க்கடன்போற்றிக்
காலமாமழைக்கணமெனக்கொடைக்கடனாற்றி
யேலவார்குழலிளங்கொடியிறைவியோடிருந்த
பாலலோசனற்பணிந்தனன்பரிவொடும்பலகால். (ருஎ)

அன்பினாற்பணிந்தானந்தநீர்விழியலைப்ப
மின்குலாவியசடையனைவேதநாயகனை
யின்பமாகியவிறைவனையீறிலாமுதலை
முன்பராய்ப்பணிந்தலர்ப்பதத்துதிபலமொழிவான். (ருஅ)

---

* வருணவெம்பாவநோயொழித்து-கொடிய பாவத்தைத் தரும் சண்டாளத்துவமாகிய சாதி நோயைத்தவிர்த்து. வருணம்-சாதி. இச்சரித்திரத்தைத் திரிசங்குச்சருக்கத்தானறிக.

வேறு.

பொழியுமமுதக்குழவிநிலாப்புனைந்தாய்போற்றிபுகலாய
மொழியுமனமுமளவாதமுதலேபோற்றிமுதல்வானோர்
கழியுமலைநீர்விடமேவுகளனேபோற்றிகவலையிரு
லழியுந்தமியேற்கருண்மறைசையரசேபோற்றியரபோற்றி. (ருக)

அரியுமயனுமுதலாயவமரர்வேதமறிவரிதாய்
விரியுமொளியேசிதானந்தவினைவேவிழைவார்மனமேவிப்
புரியுமருளேயகலாதபுகலேபுவனவுருவாயுந்
தெரியவரிதாம்வேதவனத்திருவேபோற்றிசிவபோற்றி. (சுo)

போற்றிவேதவனத்துறையும்பொருளேபுகனீயலதறியே
னாற்றியடியேன்மனக்கவலையழிப்பாயென்னவருளாளன்
றோற்றியெதிரேமணிகன்னிதோய்தலாலுந்துதியாலும்
பேற்றிற்பொலியும்வரமருள்வாம்பேசுகெனவும்பேசினனால். (சுக)

அருளாலுலகமனைத்தினையுமளிப்போயென்பாலருளுண்டேல்
வெருளாதுரைக்கேனிந்திரனுய்மேவிநகுடன்றனைவீழ்த்திப்
பொருளாய்த்தேவரெனைப்பரவப்புரிவாயென்னப்புரிந்தருளித்
தெருளார்மறைதேர்குறுமுனியையழைத்தேயினையசெப்பினனால். (சுஉ)

மலையத்தவநீநம்முரையாலிவன்றனோடும்வானவர்த
நிலையத்தேகிநகுடனைக்கீழ்நிறுவிப்பஞ்சதருநிழற்கீ
ழலைவற்றமரவிவனையளித்துறைவாயென்றுவொளித்திடலுங்
* கலையத்தறவோன்பொன்னுலகிற்கடிதுநகுடன்றனைக்கண்டான். (சுங)

பொன்னங்கொடியாம்புலோமசைதன்பொழியுங்கவினைப்புகழ்ந்திவன்றன்
முன்னம்பரவவவள்கலவிமுயக்கமூழ்கமாமதனன்
றன்னம்பருளச்சிவிகைமிசைத்தவத்தோர்தாங்கக்கந்தருவர்
தென்னந்தெனவென்றிசைபாடத்தேவமகளிர்செறிந்தாட. (சுச)

செல்லுமளவின்வைசயந்தியென்னுந்திருவார்மாடமிசைப்
புல்லுஞ்சசியுமிவன்வரவும்பொலிவுநோக்கப்புதியநிலா
வொல்லுங்கதிரைத்திரையமுதத்தொளியோடமைத்தாங்குவாமதியை
வெல்லுந்தெளிவார்முகங்காணுநகுடன்விருப்பமிகமேவி. (சுரு)

தாங்குமறவோர்தமைச்†சருப்பசருப்பவென்றேதானுதைப்ப
வோங்குமுரவோனுயதமிழுறுவன்சீறியுரவோர்பாற்
றீங்குபுரிந்தாய்பெரும்பாந்தட்செறியும்படிவஞ்சேர்தியென
வீங்குமெழுயோசனையளவுவீழ்ந்துமேவிமெலிவுற்றே. (சுசு)

---

* கலயம் கலையமெனப் போலியாயிற்று. கலயத்தறவோன்-கும்பமுனி. † சருப்ப என்பது விரைந்துநடக்க ஏவுதல்.

கும்பயோனிதனையிரப்பக்குழையாதொழிநீயுறுங்*தரும
னம்பொன்முகனேயதுகாணவகலுஞ்சாபமெனவாங்குத்
தம்பமாயவிந்திரத்துய்முனனென்வாக்குச்சத்தியமே
யும்பர்நீவிர்கேண்மினெனவுரைத்தேயுவகையுற்றனனால். (சுஎ)

புதியமதுவார்தருநீழற்புரப்பாயென்னுப்புரந்தரனுய்
முதிருமுவகையிந்திரத்துய்முனனைத்தேவர்முடிசூட்ட
வதியுறுதியாரிலவேலோன்வானமளித்தேவரம்பறுநாட்
கதியுமடைந்தான்மணிகன்னிகருதிப்படிந்தகருமத்தால். (சுஅ)

வேறு.

பூமருவுமணிகன்னிபடிந்தவர்க்குக்கிடையாதபொருளுமுண்டோ
நாமருவுமுரையதனாலதன்பெருமையெவர்நவில்வர்நாமவேலோய்
பாமருவுமறைகூறிப்பகர்ந்தமகமனைத்தினையும்பரிவினூற்றித்
தாமருவுபயனையதனிடைப்படிந்தேயொருபனவன்சார்ந்தானன்றே. (சுகூ)

வேறு.

இரவிதன்குலத்திந்திரத்துய்முனன்
பரவுகாதைபடிப்பவர்கேட்பவர்
விரவுசெல்வமிருந்தருண்மேவியே
கரவுநீக்கியளித்துக்களிப்பரே. (எ0)

இந்திரத்துய்முனச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க, ருஎக.

---

# பிரவரச்சருக்கம்.

அருட்கதிராற்பிறப்பிருளையரியு†மரியமனுயவறவோய்நீலச்,சுருட்குழ
லாரிமயமலைத்தோகையிடத்தரனேபோற்சுடருஞ்சோதிப், பொருட்கதை
யார்மணிகன்னிப்புகழினைமுநசையகிலம்புணர்ந்தவேள்வித், தெருட்பயனை
மறைப்பனவன்சேர்ந்தநெறிதெரித்தியெனத்தெரித்தல்செய்வான். (க)

‡ இதிகாசமிதுசாலவிரும்பூதாம்பவமகற்றுமிலங்குசூர்நூய
மதிவாயுங்கதியாய்மணிகன்னிவண்புகழாமதித்துக்கேணீ
விதிநூயமகனுருங்காசிபற்குத்தனுவினிடைமேவுமைந்த
§ னதிகாயனெதிர்சாயவடருமுழுவலியுடையானுற்றன்மிக்கான். (உ)

---

* தருமன்-தருமபுத்திரன். † அரியமன்-சூரியன். ‡ இதிகாசம்-புராண சரித்திரம். § இராவணன்மகனாகிய அதிகாயனுமெதிர்சாயும்படி.

வடவரைபோற்பொலிந்துயர்வான்கிராதனெனப்பொருள்பயப்பவழ ங்கும்பேரான், றடமலர்மேற்பொலியுமயன்றனைநோக்கித்தவம்புரிவான்ச ரியவாவி, யுடலியற்றுங்குணமகற்றியுடற்றியவெம்பசியடக்கியுணவுமாற் றிப், படருறுத்தும்புலனடக்கிப்பசையுறுமாசையுமகற்றிப்பரிவினோடும்.

சொரிமழையைக்குளிர்பனியைச்சுடுவெயிலைத்துயரமுறச்சுமந்துவேதம்
பரவுமனுவினைநவின்று*பாவனையிற்பயின்றுழல்கால்பசிக்குநல்கி
விரியுமெரிநடுவெமர்ந்துமெலிவுதருங்கடியதவமேவிப்பாவங்
கரிவருடமயுதமுறக்கருத்திருத்திவருத்துதவங்கவினச்செய்தான். (௪)

செய்ததவமுணர்ந்தனத்திற்சேயிழைபாரதியோடுஞ்செறிந்துவேதன்
வெய்யகொடுந்தானவனைவிருப்பினொடுமுகநோக்கிவெருவியாவி
நையவருத்திடுந்தவத்தானல்குவம்வேண்டியமொழிதிநாமின்றென்னப்
பையவெழுந்தவன்பாதபங்கயத்திற்பணிந்துதுதிபகர்தலுற்றான். (௫)

பாயவுலகனைத்தினையும்படைத்தளித்துக்கரந்தொழிக்கும்பகவனாகி
நேயமுறுமுயிர்க்கிரங்கிநினைந்ததளித்துயிரியற்று†நேதாவாகிச்
சாயலிளமயில்வாணிதன்னோடுமகிழ்ந்துமகத்தழைவுசாருஞ்
சேயவுருமறையீன்றசெழுஞ்சுடரேசரணமெனச்சென்றுதாழ்ந்தான். (௬)

தாழ்ந்தயனைநோக்கியருடந்தனையேற்சராசரத்தாற்சாவிலாத
சூழ்ந்தவரந்தருதியெனத்தொழுமறையோனனந்தமெனத்துணிந்தவேதத்
தாழ்ந்தளந்தமகமனைத்துமாற்றிமிகுஞ்சாத்திரமாரணத்தினந்தம்
வீழ்ந்துணர்ந்தவேதியனால்விழிவாகுமுனக்கிலையேல்விழிவின்றாமே. (௭)

என்னவரமளித்தயன்றன்னிடத்தேகக்கிராதனுந்தன்னில்லமேவி
நன்னர்மகிழ்வொடுங்குரவன்றனக்கோதப்பார்க்கவனுநயத்தினோடிச்
சொன்னமறையநந்தமுளவவற்றவற்றிற்றனித்தனியேதொகுத்தவேள்வி
பன்னவளவில‡படித்தானுபநிடதஞ்சத்திரமோபயிலானாகும். (௮)

இத்தகையவரம்படைத்தாய்க்கிறுதியிலையினியரிமாவேறுவேழ
மத்தகம்போழ்ந்தெனத்தேவர்வலியவுரம்பிளந்தரிதன்வாழ்வுமேவிக்
கொத்தவிழுந்தருநீழற்குலவுதியென்றுரைப்பவவன்குழாத்தினோடும்
பைத்தலையாடரவமெனும்படிசீறியெயில்வளைத்துப்பகைத்துச்சூழ. (௯)

சீற்றமிகுமவுணரமராவதியைச்சேர்தலைப்பச்சினத்துத்தெவ்வ
ராற்றலுயிர்கொளுங்குலிசவடும்படைகொண்டமரரொடுமமரர்கோமான்
மேற்றவிருபெரும்படையுஞ்சமர்புரிந்துதனித்தனியேதுணித்துவீழ்ப்பக்
கூற்றமெனவரிகுலிசங்கொடுநெடுந்தானவரவியக்குறைத்துமாய்ப்ப. (௧௦)

---

* மூக்குநுதியிற் கட்பார்வைபொருந்தப் பாவனை செய்தலிற் பயின்று.
† நேதா-நடத்துபவன். ‡ உபநிடதம் படித்தவன் சத்திரவித்தையினையோ பயிலமாட்டான்.

வடிவழிந்துகுறைந்தபடைவந்துகிராதனைச்சரணமருவச்சீறிக்
கடிதெதிர்நதிந்திரன்மீதுகணையிலக்கஞ்சமற்கயுதங்கனலிமீது
வடிநெடுங்கோலயுதமுயர்மாருதமீதொருகோடிவழங்கவன்பா [செய்தார்.
லொடிவறுங்கோலவைசரத்தாலொழித்தவனைச்சூழ்ந்தரும்போரொருங்கு

காற்றவன்கைச்சிலையாவநாழிநிதிக்கோன்வசுக்கள்கடியபாய்மா
நாற்றியகேதனம்வருணனடவியசாரதிநிருதிநயந்துபாலிற்
போற்றியசாரதிகடமைமருத்துவர்கடனித்தனியேபொடிப்பவேந்த
னேற்றிடியிற்குலிசமவனுரத்தழுத்தத்தடியின்முடியியமன்மோத. (கஉ)

வன்னியவனெற்றியுறச்சத்தியினைப்பதிப்பமற்றைவானோர்சீறி
மின்னியலும்படைகள்விடுத்தலைத்திடவுங்கிராதன்வடமேருப்போன்று
தன்னிலையிற்றளராதுதரித்தனனப்படைகளவன்சடத்திற்சார்ந்து
பொன்னிமிர்வெம்பொடியாகிப்பூழியுறவச்சிரமெய்பொருந்திநின்றான்.

எறிந்தபடையனைத்தினையுமிரித்தெழுந்துகரத்தினிடியேறதேய்ப்பச்
செறிந்தவிருப்புலக்கையினாற்றேவர்கோன்சிரத்தழுந்தச்சினத்தின்மோத
மறிந்தவன்வீழ்ந்தெழுங்குருதி*வாயுமிழக்கூற்றையவன்மார்பின்மோத
வறிந்தவ‡னிந்திரனவசத்தாயினன்மற்றையரிரிந்தாரலக்கணுற்றே. (கச)

தோற்றமரரடும்புலியாற்றுறுடைக்கியமானினத்தோடிச்சுடருமேருத்
தேற்றருங்கந்தரத்தமர்ந்தார்சினங்கொள்கிராதனும்பொலிந்துசிங்கவேற்றி
னேற்றமராவதியையடைந்திந்திரன்போற்பெரும்போகமெய்திச்சேர்ந்து
போற்றுமரமகளிரொடும்புணர்ந்தணிநந்தனமுதலபோகந்துய்ப்பான். (கரு)

மூன்றுலகுந்தன்வசமாய்முறைநடப்பச்சுரர்க்கிடுக்கண்முதிர்ந்துப்பூமே
லான்றமறையவர்க்கலக்கணுற்றிநிசாசரர்தமக்கின்பனைத்துமாக்கித்
தேன்றதும்புந்தருநீழற்செறிந்தமர்ந்தான்வருந்துதுயர்சேர்ந்ததேவ
ரீன்றவயன்றனக்கசுரனெரியனையதுயரமெடுத்திசைப்பமேலோன். (கசு)

எண்ணிறைந்தமறையனைத்துமியம்புமகமியற்றிமறையீறுபன்னூ
லுண்ணிறைந்தாறெறுத்திடுவனுன்னையெனவரமளித்தோமும்பர்பூவின்
கண்ணிறைந்ததன்மையினுன்கலந்தனனேலவற்குரைத்துக்கருமங்காண்மின்
விண்ணிறைந்தீரெனவிடுப்பமேதினியந்தணர்க்கூவிவிளம்புகின்றார். (கஎ)

கொடியதுயரெமக்காகநமக்குறுமின்பேதுளதாங்குறித்துக்காணிற்
படிமிசையத்தகைமறையோனுளனாயினவனெடியாம்பரிந்துபோகி
மடியவழித்தசுரனுயிர்மாய்த்திடுவமெனவுரைப்பவசிட்டன்வானோர்
கொடியதனுக்கெதிரநந்தமகமியற்றிமறைமுதனூனுவன்றூர்யாரே. (கஅ)

---

* வாய் என்றது ஈண்டு நவத்துவாரங்களையும். ‡ அறிந்தவன் இந்திரனவசத்தாயினன் - தன்வசமாய்நின்ற யமன் இந்திரன்போலப் பரவசமாயினன்.

சோமமகமுதலாகச்சொற்றவற்றுட்சிலர்சோமந்துணிந்*ததொன்றே
காமமுறவியற்றினராலாண்டுமுதற்சிலகூட்டிக்கருதிச்செய்தார்
தாமுமுளார்பரிமேதஞ்சரித்திடுமந்தணரிலையாற்*சகலஞ்செய்தார்
நாமமுமோர்ந்திலம்வேள்விமறைமுழுதுமெனையுரைப்பநயந்தானென்றே.

† ஆங்குரைத்தயான்றானுந்தயித்திரியமறைந்தனவேயமைத்தேன்வேறு
தாங்குநவின்றுளவனைத்துந்தானறியேன்சமைப்பதெவன்சசிகோன்வேத
மோங்குமலையெனப்பரத்துவாசனுக்குக்காட்டவவனுணர்ந்தான்வேதம்
வீங்குமளவிலவென்றேமறைச்சிரமுமளவிலவாம்வேதம்போன்றே. (௨௦)

ஆதலினான் ‡ மகமுழுதுமமைத்துமறைமுழுதுணர்ந்தோனரியனாகுங்
காதலைநீக்கிடுமினெனக்கலங்கியவரரியோடுங்கனகமேருப்
§ பாதலத்தினுறைந்தயர்ந்தார்பலகாலஞ்செலவாசைப்பாலரோடு
மீதலத்திந்திரன்சூழ்ச்சிமேவிமறைமுனிவர்தமைவிழைந்துகூவ. (௨௧)

எல்லையிலாவிருடிகணமெழுந்தேகியிந்திரன்பாலெய்தியாற்றுஞ்
சொல்லையுரையென ○ வேதமனைத்தினுறுமகமனைத்துந்துணிந்துகூறி
னல்லையறவொருபனவனாற்றியிடப்புரிந்திடுவனளிப்பீரென்ன
வில்லைமறைமுழுதுணர்ந்தோனிவ்வுலகிலெனமகவானிரங்குங்காலை. (௨௨)

குழுவினெழுந்தொருபனவன்பிரவரனென்றுயர்நாமங்குறித்துக்கொண்டோன், வழுவறுமாமறையனைத்துமுணர்ந்துமகமனைத்தினையும்வரம்பினாற்றித், தழுவுமறையந்தமொடுசாத்திரமுமுணர்ந்தறிவேன்றக்கயானே, செழுவுகிராதனைவதைத்துக்கேடில்பதமுமக்களிப்பன்கேண்மினென்பான். ()

---

* சகலம்-சகலமும். யாகங்களனைத்தையும் மறைகளனைத்தையும் என்னையே நயந்தானென்றுகூறுவர். நயத்தல்-ஈண்டியற்றல்,அறிதல்களின் மேற்று. † அங்ஙனம் கூறப்படும் யானும் தைத்திரிய வேதங்கூறிய யாகங்களை மாத்திரமே செய்தேன். ஏனையவேதங்கள் மேற்கொள்வனவற்றைச் செய்ததின்று. உள்ளன வனைத்தையு மறியேன்,செய்வதெங்ஙனம்.முன்னோரிந்திரன் வேதங்களை மலைகளைப்போலப் பரத்துவாசருக்குக் காட்ட அவர் வேதங்களளவில வென்றறிந்தார். உபநிடதங்களும் வேதம்போன் றளவிறந்தனவாம். தைத்திரியம் யசுர்வேதம். இது இரண்டாம்வேதம். ‡ மறைமுழுதுணர்ந்து மகமுழுதுமமைத்தோனரியனாகுமென விகுதிபிரித்துக்கூட்டிப் பொருள்கொள்க. § பாதலம்-குகை. ○ வேதங்களனைத்தினுமுள்ள யாகங்களனைத்தையுமயக்கமற நிச்சயித்துக்கூறின், ஒருபனவன் வேட்கும்படி செய்வேன், அங்ஙனங் கூறவல்லுநனைத்தம்மின்களென்று வினவ.

விரிதருமாநிலமீதுதீர்த்தயாத்திரைத்தொழிலேமேவித்தென்பாற்
றிரிதருவேன்கடலருகிற்சிறந்துபரவுருவாகித்தேசினோங்கிச்
சரிதருவாரிருட்களகத்தகடுமணியொடுமிழைத்துத்தாமநாற்றிப்
புரிதருமாளிகைசூழ்ந்துபுடவியினிற்சிவபுரிபோற்பொலிந்துதோன்றும். ()

மறைவனவீதியிற்புகுந்துவருமளவிற்புராணமெனவகுத்துக்கூறக்
கறையறுமாங்கதினிரண்டுசுலோகமுமென்செவிப்புலத்துக்கலந்தவாமென்
றறைதரவங்கவர்கூடியாச்சரியத்தொடுமேவி*யச்சுலோகங் [வான்.
குறைவறநீயுரைத்தியெனக்கூறியதன்பொருள்விரித்துக்குறித்துச்சொல்

உலவுமறைவனமேவிமணிகன்னியதிற்படிந்தோனொருகாலேனு
மலகறுமாமறையுணர்ந்தோனவனேயாமகமுழுதுமாற்றினோனு
மிலகுமறைச்சிரத்தினொடுமியம்பியசாத்திரமுணர்ந்தோனிறைவனொரு
நலமுடையனவன்சீவன்முத்தனுமாமென்றுரைத்துநயத்தினோடும். (௨௯)

---

* அவ்விருசுலோகங்களும் வருமாறு:—

𑌵𑍇𑌦𑌾𑌰𑌣𑍍𑌯𑍇 𑌸𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌯𑌾𑌤𑍍
𑌮𑌣𑌿𑌕𑌰𑍍𑌣𑍍𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌯𑍋 𑌨𑌰𑌃 ।
𑌸 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁
𑌦𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 ॥ ௧ ॥. (௧)

𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌤𑍍𑌸 𑌏𑌵 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍
𑌜𑍀𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸 𑌏𑌵 𑌹𑌿 ।
𑌸 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂
𑌶𑌾𑌸𑍍𑌤𑌾 𑌶𑌂𑌭𑍁𑌰𑍍𑌯𑌥𑌾 𑌤𑌥𑌾 ॥ ௨ ॥. (௨)

இவையிரண்டும் யதுவுக்குக் காசிபமுனிவர் கூறிய கூற்றாக முதனூலிற் கூறப்பட்டுள்ளன.

இவற்றின் பிண்டப்பொழிப்பு வருமாறு:—

வேதாரணியத்திலே மணிகன்னிகையில் எவன் ஒருதரம் ஸ்நானஞ் செய்தானோ அவனே எல்லாயாகங்களும் செய்தவன்; அவனே வேதாந்தங்களை அறிந்தவன்; அவனே சீவன் முத்தன்; அவனே சிவன் போல லோகரக்ஷகன் என்பதாம்.

இவ்விருசுலோகங்களையும் ஆசிரியர் மொழிபெயர்த்த செய்யுள், முன்வரும் யதுச்சருக்கத்து நாற்பத்துநான்காவது செய்யுள்; அதனை ஆங்குக்கண்டுணர்க.

பிரமாணமிதுவெனக்கென்றுரைத்தபிரவரன்மாற்றம்பெரிதும்பேணி
வரமாயவிசுவாசம்வாய்ந்தவர்க்கேபுராணமிகவுத்தமாற்றந்
திரமாகும்பயனளிக்குமையமுடையார்பயனுஞ்சேரார்யாமத்
தரமாயமணிகன்னிசாருதுமென்றெழமறையோன்றடுத்துச்சொல்வான்.

சோதிவரியினஞ்சூழுமணிகன்னிதோய்ந்ததனுற்சுருதிநாத
வாதிகளைப்பணிந்ததனுற்கிராதனொடுமவன்கிளையுமறுத்துவீழ்த்து
மோதியபின்றேற்றமொடுமூழ்குமெனவுரைத்தரிவாண்முகத்தைநோக்கி
மாதிகமாவுறுங்கொடிஞ்சிவருகவெனநன்றெனவான்மகவானேவ. (உஅ)

சாரதியாமாதலியத்தடந்தேரிற்பிரவரனைத்தகவினேற்றப்
பாரதிகோனெனப்பொலிந்துபல்லியங்கள்பணிலமொடுபணைத்துவிம்மக்
காரதிருமுழக்கமெனக்கடவுளரிந்திரன்முதலாங்கடலந்தானைக்
* கோரதிரமிதுகாணக்கூடியவந்தணர்முனிவர்குழாங்களோடும். (உகூ)

வேறு.

காலினேகியேகடிதமராவதிகடுகிச்
கோலியார்த்திடக்கிராதனுமோசையுட்கொண்டே
பாலினுகியகரிபரிபதாதிதேர்பகுத்த
நாலினோடெதிர்ந்தமர்க்களத்தடுத்தனனசையால். (௩0)

அடுத்தகாலையிலமரருமசுரருமனலிற்
கடுத்தெதிர்ந்துவெம்போர்செயத்தூளிபோய்க்ககன
மடுத்தெழுஞ்சுடர்மறைந்தது † படையொலிவழுக்காற்
றெடுத்திடுந்திசைதெரிந்திலதூரியந்துவைப்ப. (௩க)

இருதிறத்தருமின்னணஞ்செருச்செயுமேல்வைப்
பொருவறத்திகழ்கிராதனோர்கதைகொடுபுகுந்தே
வெருவுறச்செறியமரரைவீற்றுவீற்றுக்கத்
தெருமரப்பரிபவத்தொடும்பிரவரற்சேர்ந்தார். (௩உ)

இரிந்தவானவரிடுக்கணைப்பிரவரனெதிர்ந்தே
கரிந்தநெஞ்சினன்காற்சிலைகுழைத்தொருகணையுந்
தெரிந்துநாரியிற்சேர்த்தியேசெப்பினன்சிறப்பாற்
பரிந்தநன்மணிகன்னியின்பாயசீர்பயின்றே. (௩௩)

தெய்வமாமணிகன்னியின்சீர்பயில்புராண
மெய்யதாமெனிலிச்சரங்கிராதனைவீழ்த்தி
யெய்தவிந்திரற்கரசளித்திடுகவென்றியம்பி
வெய்துறும்படிவிடுத்தனன்வேதியர்கோமான். (௩ச)

---

* கோர, திரம் எனப்பதம்பிரிக்க. † படைக்கலங்களை ஒலியோடும் வழங்குதலினால்.

வடித்தவெங்கணைபிரவரன்சூழொடுவழங்க
வெடித்தெழுந்தவன்விடும்படையனைத்தையும்விழுங்கித்
துடித்தயர்ந்திடக்கிராதன்வெஞ்சிரந்துணித்தாவி
குடித்தகன்றதுதானவர்வழீஇக்குலைகுலைந்தார். (௩௫)

நஞ்செனத்தெறுந்தானவன்மடிதலுநயந்தே
யெஞ்சலற்றனமினியெனக்கடவுளரீண்டி
வஞ்சமற்றிடும்பிரவரன்றெளிவினைவாழ்த்தி
யஞ்சமுற்றவனுமெனவளித்தனையென்றே. (௩௬)

இனியநன்மொழியோடலிரண்டறத்தழுவிக்
கனியுமிந்திரனவனொடுந்தன்பதிகலந்தே
துனியகன்றனன்றன்னினன்கடவுளர்சூழ்ந்த
முனிவர்தம்மொடும்பிரவரன்றன்னொடுமுயன்றே. (௩௭)

மற்றைநாடனின்மறைவனமேவியேமயக்கப்
பற்றையீர்மணிகன்னியைப்பணிந்துபின்படிந்தே
கற்றைவார்சடைக்கடவுளைப்பணிந்துகாதலினு
லிற்றைநாளுடலெடுத்தநற்பயனெனவிசைத்தே. (௩௮)

தொழுதுமாடுறச்சூழ்ந்துமும்முறைபினுந்தொழுதே
முழுதுமாகியமுதல்வனைமுக்கணுயகனைப்
பழுதிலாவுமைபங்கனைப்பரரபரமாகிக்
கழுதுசூழ்தரநடித்திடுங்கடவுளைக்கண்டார். (௩௯)

தாழ்ந்துமண்மிசைத்தாமரைத்தளிரடிமுடிமேற்
சூழ்ந்துமூண்டிடுதுயரொடுமிருவினைத்துகளைப்
போழ்ந்துமெய்ம்மயிர்ப்புளகமோடளவிலின்புருவாய்
வாழ்ந்துபோயினமினியெனத்தோத்திரம்வகுப்பார். (௪0)

நெடியமான்முதற்றேவருநிகிலமுமொடுங்கிப்
படியுமாயையும்பகர்வருங்காலையிற்பரமா
யடிகணீரமர்ந்தமலமாயிச்சையினளவா
வடிவமாக்கினைமகத்தவியெமக்குறவகுத்தே. (௪௧)

நிறைசராசரமனைத்தினுநீங்கிடாநிலையாற்
குறைவிலாதவைகுலவிடுந்தொழிலொடுகுணமா
யிறையுநீயலதில்லையானின்னிலையேய்ந்து
மறையுமாற்றறுமெனிலெவர்நின்புகழ்வகுப்பார். (௪௨)

போற்றியானந்தவுருவமாம்புராதனபோற்றி
போற்றிமான்முதற்புங்கவர்க்கறிவரும்பொருளே
போற்றிநீபுகலென்றவர்க்கின்னருள்புரப்பாய்
போற்றிமாமறைவனத்துறைபுனிதனேபோற்றி. (௪௩)

இன்பமாகியேயின்னணம்புகழ்ந்தவர்க்கிரங்கிப்
பொன்குலாஞ்சடைப்புண்ணியனெதிர்ந்திதுபுகல்வான்
மின்குலாமணிகன்னியின்மேன்மையுமதன்சீ
ரன்பனாகியபிரவரனுற்றதுமறிந்தீர். (௪௪)

வாய்மைசொற்றிடும்புராணநூற்றெளிவிசுவாசந்
தூய்மையுற்றவர்க்கல்லதுதோய்ந்திடாதோயிற்
றீமையற்றவரெண்ணியபயனெலாஞ்சேர்வார்
பாய்மணிக்கதிர்பரப்பியமணிகன்னிபடிந்தோர். (௪௫)

மகமனைத்தையும்வகுத்தவப்பயனுறவாழ்வ
ரகமகிழ்ச்சியாம்பிரவரன்கரியதற்காகு
முகவினைத்தொகைதினமதின்மூழ்கவோர்ந்தெனவே
தகவுரைத்திதுசாற்றினனிந்திரன்றனக்கே. (௪௬)

பரவுசெங்கதிர்ப்படலைநின்னரியணைப்பாதி
பிரவரன்றனக்களித்தவன்றன்னொடும்பிரியா
துரவுறுங்களிநட்புறவோங்குதியென்னாக்
கரவறுங்கதிகரைந்தனன்கரந்தனன்கடவுள். (௪௭)

ஆயநன்மொழிகொண்டமராவதியடைந்தே
போயவிந்திரன்பிரவரன்றன்னிடைப்புரிவாற்
பாயவெங்கதிரரியணைப்பாதியுமளிக்க
மேயவின்பொடுவிளங்கினனின்னமும்விழைந்தே. (௪௮)

நோற்றுமேம்படுமுனிவரர்மகமெலாநுவன்றே
யாற்றுமேன்மையீந்தருண்மணிகன்னியினாடிப்
போற்றியின்னமும்புரிந்தமர்ந்திலகினர்புகழோய்
தேற்றிநீபடிந்திடின்மகப்பயனெலாஞ்சேரும். (௪௯)

ஐயமின்றெனவறிதிநீமணிகன்னியதன்சீர்
செய்யசெஞ்சடைச்சிவனலாதியாவரேதெளிவா
ருய்யநீயறியென்றுயர்வேந்தனுக்குவப்பால்
வையமீன்றவன்மகனகமகிழ்வொடுவகுத்தான். (௫௦)

இராசசூயமென்றியன்மகமியற்றுமாயிரத்திற்
பராகமாமணிகன்னியிற்படிதலேயதிகந்
தராசினுமெனுந்தன்மையிற்கௌசிகஞ்சான்றும்
புராசமேவியவீரசேனனுங்கரிபோலும். (௫௧)

வேறு.

பரிதியினிருள்கெடவிலங்கியகதையிதுபகர்வாரு
* மிருதியினியலுறவிரிதருமிசைசெவிவிழைவாருஞ்
சுருதிடபொருள்பலசதியொடுதமையுறுகவின்மேவ
வருதிருமறைவனமகிழரனடியிணைவழுவாரே. (௫௨)

பிரவரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧,௬௨௩.

---

## வீரசேனகௌசிகச்சருக்கம்.

[illegible]மிராச
சூயமாயிரந்தரும்பயன்மணிகன்னிதோயி
னேயவாய்ந்திடும்வீரசேனன்சரியீங்கு
மேயகௌசிகஞ்சான்றெனுங்கதையினைவிரித்தே. (௧)

கூறுவாயெனுங்கொற்றவற்கருண்முனிகுழைவாற்
பேறுசால்கதைபேசினன்பெருவளம்பிறங்கி
நூறுதீங்கனியுடைநறுமலருகுநறுந்தே
றூறுபாய்தலினரும்பொழில்வளர்ந்துசேணளக்கும். (௨)

பல்லுயிர்த்தொகைக்கிரங்கியவின்னருட்பான்மைச்
சொல்லுயர்த்ததென்னாட்டிடைத்தொடுகடற்புவியி
னல்லுடைத்தெழுங்கதிரெனக்கலியுறுதளிப்போ
னல்லொழுக்குடையந்தணர்க்கினிமைசெய்நலத்தோன். (௩)

நூற்கடற்றுறைபடிந்துசொல்வன்மையினுனித்தோன்
பாற்கதிர்க்குடைநீழலிற்பார்புரந்தருள்வோன்
† சாற்கிலச்கெனச்சத்தியம்பொறைமுதற்றருமத்
தேற்குநற்குணமெல்லையற்றனவுடையியவுள். ()

வீரசேனனென்றேறுதியவிறன்மிருவேந்த
னாயீர்தருகாவிரியவிர்மணிக்கரைமேல்
வாரமாகியேராசசூயப்பெயர்மகஞ்சீர்
சேரவாயிரமறைக்கருத்தொழுக்குறச்செய்தான். (௫)

வறுமைவெங்கனன்மடிதரத்தக்கிணைமழைதூஉய்ப்
பெறுதிரென்றளித்தமாருண்டகட்டிடம்பெருக
நறுநெயாகுதிகரிக்கையினொழுக்கிடநகையான்
முறுகுதாசனன்களியுறவெவியர்போன்முகப்ப. (௬)

---

* மிருதி-ஞாபகம். † சாற்கு-சால்புக்கு. இயவுள்-மிகுபுகழாளன்.

உண்டிவேண்டியாங்கயிலுதிரென்றிநிமோசை
மண்டிவான்செலமகத்தினைவமுவறமுடித்தே
யெண்டிசாமுகமிலங்கவபிரதமுமேய்ந்து
விண்டிருகியமேன்மையான்மகிழ்ச்சியின்மேவி. (எ)

அந்தணுளரையவரவராச்சிரமத்தின்
வந்தவாறுறவிடுத்தபின்மகிழ்ச்சியோடமர்வான்
பந்தமார்தருவேட்டமேற்படர்ந்துளநசையா
னந்தமார்தருசேனையோடரணியமடைந்தான். (அ)

செறியிருட்கிடனுகியகானகஞ்சேர்ந்து
பொறிபுறத்தெறும்புலியரிமான்பொருபுழைக்கைச்
சிறியகட்கரிசேற்றமாருளியநீள்சிறைப்புள்
மறிவுறக்கணைவழங்கியேமகிழ்ச்சியின்மலர்வான். (௯)

கடியவெங்கலையதிர்ந்தெழக்கண்டுதன்கனியான்
மடியவாற்றுவனெனக்கணைவில்லொடுமெடுக்க
நொடியினங்கதுகடுவிசைமனமெனநுணுகும்
படிகரந்திடத்தொடர்ந்தனன்பின்னுறப்படர்ந்தே. (௧௦)

வெள்ளிடைக்கரந்தெதிர்ந்துவிண்ணிலமெனமேவித்
துள்ளியக்கலைதனைவொடுமிரிதரத்தொடர்ந்தே
யுள்ளிமற்றதுவிடேனெனக்கறுவொடுமோடிப்
* பள்ளிவெற்பிடைப்பரிதிசேர்மாலையிற்படுத்தான். (௧௧)

மாலைவெங்கலைமடிவுறவியற்றியேமகிழுங்
காலைவிண்ணிடைக்†கௌசிகமெதிர்தரக்கண்டே
கோலையேவியேகுழைத்திடக்குரைத்ததுதஞ்சம்
வேலைநீர்மணிகன்னியினுயிர்விடுத்ததுவே. (௧௨)

வீழ்ந்துகௌசிகமுயிர்விடுங்காலையின்வேங்கை
போழ்ந்துமன்னனும்புலர்ந்தன‡னிருடல்போகச்
சூழ்ந்துவில்விடுஞ்சுடருருவாய்ச்செழுஞ்சோதி
தாழ்ந்துமுத்தணிவிமானமேலிருவருந்தழைத்தே. (௧௩)

தேசுமல்கியதேவராய்த்திருந்தரமகளிர்
வீசுசாமரைநீழலிற்றுறக்கமேமேவிப்
பேசுமின்புறவேந்தனும்பறவையும்பிறங்கி
மூசுவண்டியறருகிழற்போகமேமுகந்தார். (௧௪)

---

* ஈண்டுப் பள்ளிவெற்பென்றது அஸ்தமயனகிரியை. † கௌசிகம் – கூகை. ‡அவ்விரண்டுடல்களுநீங்க, அவ்வுடல்களினின்றுந்தேசோமயமாகித் தேவர்களாய் அவ்விருவரும் விமானமீதுதழைத்தென்க.

ஏழிரண்டெனுமிந்திரரிறந்தபின்னேந்த
லூழிநூற்றியமகப்பயனுலந்திடவொழிந்தே
யாழிசூழ்தரையடைந்தனன்பறவையின்றளவும்
வாழி*யிந்திரராயிரர்மடிவரைவதியும். (௧௫)

வேந்தனாரியணையினிற்பாதியின்மேவி
மாந்தியின்பினைமகிழ்ந்தது†கண்டியான்மதியா
லேந்தியாயிரமிராசசூயப்பயனென்றே
யாய்ந்துரைத்தனனதிற்பெரும்பயனெலாமளிக்கும். (௧௬)

சரமுரத்தினிற்றங்கிவீழ்பறவைநேர்சார
வரமளித்ததேலத்தடமேன்மையார்வகுப்பார்
கரவுமுற்றியகள்வருமதனிடைக்கலந்தே
விரவுநற்கதிமேவினரெனமகிழ்விறலோன். (௧௭)

கள்வர்யாரவர்கலந்ததுகரையெனக்கமலப்
புள்வலந்தருகொடியவன்மகனிதுபுகல்வான்
வெள்வலம்புரிமேய்மணிகன்னியின்வியன்சீ
ருள்வலென்றுவந்துரைத்தநீகேளெனவுரைப்பான். (௧௮)

‡ தேசமுற்றமர்சூழலிற்செறியிருளடவி
நேசமுற்றவர்படைத்தொழிற்செருக்குறுநிலையார்
நாசமுற்செயுங்கருவிகைவிடாதவர்நடுக்கும்
பாசமுற்றகைநமனுருப்பலபடைத்தனையார். (௧௯)

இரக்கமற்றுயிர்க்கொலைபலகாலமுமிழைப்பார்
கரக்குநெஞ்சினர்கள்ளொடுகொழுந்§தடிகமழூன்
புரக்குமூணினர்புலியழனோக்கினர்பொலியூர்
பரக்குமாறெரிமடுத்திருட்கூட்டுணல்பயில்வார். (௨௦)

வழிபறித்துயிர்மாய்த்தவர்பொருளெலாம்வழங்கிப்
பிழிமடுத்துணும்பிழையினார்தீவினைப்பெருக்கா
றிழிதரத்தொழிலியற்றுவாரிரவிடையெங்கு
முழிதரற்கெழுவாரொருநாளிருளுலர்ந்தே. (௨௧)

---

* இன்னும் ஆயிரமிந்திரர்காலம்வரை அங்கேவதியுமென்க. † அதனை யான்கண்டு புத்தியில் வைத்துச் சீர்தூக்கி ஆயிரமிராசசூயப்பயனைத்தருமென்று உனக்கு முன்னர்க்கூறினேன். அது அதினும் பெரும்பயனெவற்றையும் அளிக்கும். யான் என்றது நாரதமுனிவர் தம்மை என்க. ‡ ஓர் தேயத்திற்குச் சமீபத்திலிருக்குஞ்சூழலில். § தடி-தசை. ஊன்-நிணம்.

சுருங்குவைகறைமுன்செயுந்தவத்தினுற்சோதி
நெருங்குமரனிகைமறைவனநேர்ந்தவர்கண்டா
ரொருங்குகூடியேயெரிமணிகன்னிநீருலவு
மருங்குமாகநீர்படிந்தெழுமறையவர்குழாத்தை. (உஉ)

கருவியங்கையார்கண்டவக்காலகன்றெனவே
மருவியங்கவர்வனேதுகினேத்திரமாமை
வெருவிமங்கிடவீர்த்தனர்கவர்ந்திடும்வேலைப்
பொருவிலந்தணன்மூப்பொருபடிவமேபோல்வான். (உங)

பழியினுற்றுகில்பற்றியீர்த்தவன்முகம்பார்த்துக்
கழியுமூப்புறத்திரங்கிவெண்ணரைபொரச்*கான்று
பொழியுமீர்ம்பனிக்குடைந்துயிர்போதரப்புகுமால்
வழியுநீர்மணிகன்னிசூழ்மந்தமாருதமே. (உச)

நடுநடுக்குறநலிந்துயிர்கடந்திடவீர்க்குங்
கடுவிசைக்கொடுங்காலைநீகாதலிற்கனிந்தே
வடுவறத்திகழ்பிதாவெனக்கிவனெனமதித்துக்
கொடு † துகிற்றனியெனவிரந்திடாவவன்குழைந்தே. (உரு)

கூர்ந்தவெம்பனிகுலைத்திடக்கொடிறியங்கொட்டச்
சேர்ந்தமூப்பொடுதிரங்கினேனெனக்குளிர்தீர
வீர்ந்தவெண்டுகிலீந்துபோர்த்திடுதியென்றிசைத்துச்
சார்ந்தவப்பொருட்கள்வரோடேகினன்சகியே. (உகா)

பறிகொடுத்தவப்பனவரர் ‡ கோவெனப்படர்ந்து
நெறியுடைப்புரவரசனுக்குரைத்திடகேடிக்
§ குறியொடுற்றவச்சோரரைக்கொல்லுமென்றுரைப்பச்
செறிபடைப்புரிக்காவலர்சிதைத்திடச்சென்றூர். (உஎ)

சென்றடிச்சுவடாய்ந்தவர்கள்வருட்சிலரைக்
கன்றுவெஞ்சினத்தாற்பிணித்தரசன்முன்காட்டிக்
கொன்றுவீழ்த்தினரவ்வழிக்கொடுஞ்சமன்றூத
ரொன்றுமாறவர்ப்பிணித்துவெந்நரகிடையுய்ப்பான். (உஅ)

கடியதூதுவர்விரைவுழிக்கண்ணுதல்கணங்கள்
கொடிவிடுஞ்சுடர்விமானமுங்கொணர்ந்தவர்க்கூவி
யடிகளாணையீதென்றவர்கட்டவிழ்த்தம்பொன்
வடிவுறுங்கதிர்விமானமேலிருத்தியேவனப்பால். (உகூ)

---

* கான்று-கக்கி; இருமி. † துகிற்றனி தனித்துகில்-ஒருவஸ்திரம் என்பதாம். ‡ கோ-இரக்கக்குறிப்பு. §குறியொடுற்று, அவச்சோரரை எனக்கண்ணழித்துரைக்க.

அண்ணன்மேவியகயிலையைநோக்கியேயகல
வெண்ணமோடெழுந்துநவர்மறலிபாலேகி
வண்ணமோதிடவலிந்தவன்கணத்தொடுமேதியத்
தண்ணமார்திருக்கயிலையைச்சார்ந்தனன்றளர்வால். (௩0)

நீறுதாங்கியநிமலனதுருவமேபோலப்
பேறுசாதிருக்கயிலையினந்தியம்பெருமா
னூறுபூங்கழற்றுணையடிமுடிமிசைசூட்டிட்
டேறுமன்பினூற்றுதித்தருகணைந்தனனுரைப்பான். (௩௧)

துன்புறக்கொலைத்தொழிலுயிர்க்கியற்றியசோரர்
வன்புறத்தெறுநரகினுக்குரியராம்வழக்கா
லின்புறற்கிவரியற்றியதருமமொன்றிலையா
னின்புறத்திவர்நிகழ்வதெவ்வகையெனநிகழ்த்த. (௩௨)

நந்திவானவனுவெவீரயர்துளநாடிச்
சிந்தியாதுரைசெய்தனைதேர்மறைவனத்தி
னுந்தியார்மணிகன்னியினுங்கியமாகம்
புந்தியார்துகிற்றுனமீந்தந்தணற்புரந்தான். (௩௩)

ஆயபுண்ணியப்பெருக்கினாலரனனுமதியான்
மேயதீங்கெனவிளம்பிடமறலியும்வெருளார்
மாயமாமிதுமறையவன்றுகிலினைவெளவி
வேயவீந்தனனிரந்திடவேதியன்விழைந்தே. (௩௪)

காலமோடுயர்தேசமுங்கருதுபாத்திரமு
மேலநாடியேதன்பொருளின்சொலோடுதல்
சாலநற்பயன்றருமிதுபோல்வனதராவா
ஞாலமீதெனநந்தியெம்பெருந்தகைநவில்வான். (௩௫)

மாற்றமுண்மையேயாயினும்வழிபறிமறவர்க்
கேற்றதந்தொழிலத்தொழிலாலியற்றியதூஉந்
தேற்றமங்கவன்பொருளதுவழங்கலாற்சேர்ந்து
தோற்றமேயினன்கயிலையிற்புண்ணியத்தொடர்பால். (௩௬)

திருந்துசீர்மறைவனத்தொளிசேர்மணிகன்னி
மருந்துவல்வினைப்பிணிக்கதன்பெருமையார்வகுப்பார்
பொருந்துமங்கதன்கரையணுவாயினும்பொருப்பா
யருந்துமின்பினையளித்திடுமந்தணர்க்களிக்கின். (௩௭)

பனவனற்கலைபறித்தவற்கிந்தவப்பயனே
யனகவிப்பதமளித்ததேற்றம்பொருளளித்தார்க்
கினமதாம்பயனிதுவெனவெளக்கியம்பரிதான்
மனமமுத்தெனவழங்கிடமறலியும்வழங்கும். (௩௮)

சேதமீர்தரச்சிரையீர்தவனிவண்சேர்க
வாதர்மற்றவர்க்கென்னெனவவனெனும்பயில்வா
லேதநீங்கினர்மணிகன்னியீர்ம்புலவேந்தும்
வாதமேவினர் ✽ பூசுரர்களைதுகில்வாய்ந்தார். (௩௯)

புனிதராயினர்போவெனப்போய்மணிகன்னிப்
பனிதருந்தடம்பரவியேயமனியிற்பதிந்தான்
வனிதைபங்கனுஞ்சோரருக்குயர்கதிவழங்க
வினிதருந்தியேயின்பினைமகிழ்ச்சியினிருந்தார். (௪0)

ஓவியப்புதுமணிகன்னியோங்கியபெருஞ்சீ
ரோவியப்புறுமறைவனத்தோகைசான்மேன்மை
யாவியத்தடத்தனுவனவாயினுமனித்தோர்
மேவியப்பரனுலகிடையின்பமேவிழைவார். (௪௧)

வேறு.

நிருபனும்வீரசேனன்கௌசிகநிலவுமேன்மை
வெருவருஞ்சோரர்மேயவெறுக்கைகள்விரித்துக்கூறும்
பொருவருங்காதைகேட்பார்சொற்றவர்புனிதராகி
மருவருங்குழலிபங்கன்மலர்க்கழலடைவர்மன்னோ. (௪௨)

வார்மணிகன்னிமேன்மைவளரிளமதியினோடு
மார்புனையமலனல்லாதாரளந்தறியவல்லார்
தீர்வருதந்தைசாபந்தீர்தர,யதுவுஞ்சேர்ந்தே
யூர்பரிமேதமாமாயிரத்தினுமுயர்பேறுற்றான். (௪௩)

வேறு.

நாரதனிக்கதை, யோரவுரைத்தன
னீரமனத்தொடு, தேரரசற்கே. (௪௪)

வீரசேனகௌசிகச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧,௬௬௭.

# யதுச்சருக்கம்.

சூலுற்றனோர்தருடவனைகள்சொரியுந்தரளச்சுடர்ச்சோதி
பாலுற்றரிந்துபளிங்கடுத்தபடியிற்றிகழப்பார்ப்பெகினை
மாலுற்றுகளுமணிகன்னிவாயுமேன்மைமதுத்தாரை
போலுற்றினியசுவைசெயலாற்புலராவேட்கைபொருந்தியதே. (௧)

---

✽ பூசுரர்களது நனைந்த வஸ்திரநீர் பரிசிக்கப் பெற்றார்கள்.

தியசாபம்யயாதிமகற்கீந்தவாறுஞ்செயிர்ச்சாபம்
போயவாறும்பரிமேதம்புகலாயிரத்திற்பொருவில்பய
னுயவாறுமணிகன்னியாடி, யதுவானடைந்ததுவும்
வாயவுரைப்பாயெனவேந்தன்மகிழவறவோன்வழங்கிடுவான். (௨)

தோற்றுந்தனதுகுலமதியோற்றொல்லையுலகங்குளிர்தூங்க
வாற்றுநகுடன்விரசையெனுமணங்கோடனங்கனகமேவ
ஆற்றுமமுதத்திங்களவியுருகிப்பருகியுயர்தேவர்
போற்றுமகவானென * வறுவர்ப்பயந்தான்புகழ்சால்புதல்வரையே.

இயதி, யயாதி, சம்யாதி, யெழில்சேரயாதி, யியம்புமறை
நியதிவாயுங்கிருதியொ, டுத்தவனே, யென்னநிகழ்த்துமிவ
ரியதி † கருத்தன்மகள்காவினிணைத்தோணயந்தின்பிலையென்றே
நய ○ தியாகமுறநீத்துப்பிரமசொரூபநண்ணினனே. (௪)

பற்றற்றகன்றயதிக்கிளையனாகும்யயாதிபனிவேலை
முற்றக்கிடந்தநிலமுழுதுமுறையினடாத்திமுழுமதியக்
கொற்றக்கவிகைநிழற்குளிர்வித்தனிக்குநாளிற்குலிசமெனும்
வெற்றிப்படையோன்கடுங்காலின்விரையுங்கவினப்பரித் ‡ தேரும்.

---

* புதல்வரறுவராவார்:—இயதி, யயாதி, சம்யாதி, அயாதி, கிருதி, உத்தவன் என்பவர்களாம். † கருத்தன்மகள்கா - கருத்தன்மகளாகிய கா. கருத்தன்மகளுக்குக் கா என்பதுபெயர். ○ தியாகமுறநீத்து-சர்வசங்கபரித்தியாகமுறத்துறந்து. ‡ இவ்விரதம் மகாவிசேடமுடையது. இது, நெடுங்காலத்தின் பின் பாண்டவரை அடைந்து, முடிவிற் கிருஷ்ணனுடையதாயிற்று. எங்ஙனமெனின், யயாதியின் வழித்தோன்றலாகிய குரு என்பவனிடத்துப் பாரிடதன் என்பவன் அவதரித்துக் கர்க்கமுனிமகனாகிய அக்குரூரனைக் கொன்றான். அதனால் அவனைப் பிரமகத்திதொடர்ந்து பீடிக்கப், பாரம்பரியக் கிரமத்தாற்கிடைத்த இவ்விரதமும் அவனை விட்டுநீங்கிற்று. அதன்பின்னர் அவன்இந்திரன், சௌனகமுனி என்னும் இருவர் வாயிலாகஅசுவமேதயாகஞ்செயப்பெற்றுப் பிரமகத்திதோஷநிவிர்த்தி யடைந்தான். இதற்குமுன் தன்னையடைந்த இவ்விரதம் இந்திரனாற் சேதிராசனாகிய வசு என்பவனுக்குக் கொடுக்கப்பட்டது. அதனால் அவ்வசுவுக்குப் பிரகத்தரதன் என்னும் காரணக்குறி உண்டாயிற்று. (பிரகத்தரதன்-பெரியரதத்தையுடையவன்) அவ்வசு புதல்வன் சராசந்தன். அதனாற் சராசந்தனுக்குப் பாருகத்தரதன் என்னும் ஏதுப்பெயர் சித்தித்தது. (பிரகத்தரதன் மகன். பாருகத்தரதன்) அவனைக் கிருட்டிணசகாயத்தால் வீமன் கொன்று, அந்நன்றி மறவாதவனாய் இவ்விரதத்தைக் கிருட்டிணனுக்கு உபகரித்தான் என்க.

* ஆவநாழிதாஞென்றுமருளவடைந்தேயடன்மேவுங்
காவலாகியாதிரவிற்கடிதிஞைசப்புறத்தளவு
மேவலாரற்றிடச்செயித்துவெற்றிமேவிவியன்ஞாலத்
தேவனேயாம்யயாதியெனத்திறைதந்திறைஞ்சத்திகழ்காலே. (சு)

சுங்கற்கினியமகளாயதுகிர்ச்செங்கனிவாய்த்துணைவேறகட்
டிங்கட்குறுமென்முலைகூரற்றேவயானிதனையவுணர்
தங்கட்கரசாம்விடப்பன்மன்மகளாகுஞ்சன்மிட்டையெனும்
வெங்கட்குவிமென்முலைதனையும்விழைந்துவேட்டான்விதிதகவே. (எ)

வேயார்பசுந்தோட்கரும்பனைய † தேவயானிவிறன்மேய
சேயாய்யதுவைத்,துருவசுவைச்,சிறப்பினீன்ருள்சன்மிட்டை
காயாமலர்போற்றுருகு, வனு, கவினூர்பூரு, வெனக்காதற்
ருயாயுலகந்தனைக்காக்குந்தனையர்மூவர்த்தந்தனளால். (அ)

அரிவெங்குருளையெனத்திறலாரைவர்யயாதியளித்தவர்தாம்
புரியும்பிறையின்வளர்ந்துமறைப்பொருணூன்முதலபுகரறவே
தெரியும்பரிசாய்ந்தயங்கரிதேர்திருவினடாவித்திகழ்ந்தனரா
லெரியுஞ்சினவேற்களியானையயாதியிலங்கும்பொலந்தேரான். (கூ)

போரிற்கடியசினத்தவுணர்புலவோர்புடவிப்பொலிவேந்தர்
நேரற்றயரவிறன்மேவிநிறைந்தவளத்தானிலநேமி
யோரிற்றுறக்கமெனவோம்பியுலவாநிதியாலுரவோர்பாற்
காரிற்பொலியுங்கொடைக்கடனுங்கழித்துப்போகக்கடன்மேவி. (க0)

பரிமாமேதமாயிரமும்பரசுவாசபேயமேனப்
புரிமாமகநூறேனையவும்புரிந்துதானம்பூசுரர்க்குச்
சொரிமாமுகிலினளித்தலைநீர்சூழுமுலகந்தனியாளு
மரிமாவனையான்புவியினையைந்தாகமகாருக்கமைத்தனனே. (கக)

தென்கீழ்த்திசைக்குத்துருவசுவுந், திகழுமேற்குத்துருகு, வனுப்
பொன்சூழ்வடக்கு, வடகிழக்குப்பொருந்தயதுவும், பூருவெனு
மின்சேரயிலோனடுப்புவிக்கும், வேந்தராகமுடிசூட்டி
யன்பாலமைக்கவவர்புவியையறத்தின்வழுவாதளித்தனரால். (கஉ)

வேறு.

திருந்துமைந்தர்மேற்றிரைக்கடற்புவியருடேற்றம்
பொருந்துமாசெய்துபொறையொழித்தடையலர்ப்புலிபோ
லருந்துவெங்கணைதனுவொழித்தடங்கிடும்யயாதி
வருந்துமாநரைதிரையுடல்வளைத்ததுவலிந்தே. (கந)

* ஆவநாழி-அம்புக்கூடு. † தேவயானியது, துருவசு, என்னுமிருவரைப்பெற்ருள். சன்மிட்டை துருகு, அனு, பூரு என்னும் மூவரைப்பெற்ருள்.

வலியழிந்திடவருந்திரைநரையொடுமடங்கிப்
பொலிவகற்றியேபுரியிடைநாட்சிலபோக
வொலிகடற்புவிநோக்கி * வாயுணர்வுறும்போகக்
கலியுடைக்கடுங்காமமுட்குளித்திடக்கவன்ருன். (௧௪)

தோன்றறன்னிடைத்துன்பமார்மூப்பினைத்தொடக்கி
யேன்றுமற்றவனிளமையையழகுறவேய்ந்து
வான்றருஞ்சுவையமுதனமங்கையரோடு
மான்றபோகமேயார்வனென்றுளத்திடையமைத்தான். (௧௫)

முந்தைமைந்தனேயாகியயதுமுகநோக்கிக்
கந்துசீறுமாலியானையாய்கழியுமென்மூப்பு
வந்துகொண்டுனதிளமையைத்தருதியேன்மகிழ்ந்துண்
ணந்துமாறெழும்போகமாந்துவலெனநவில. (௧௬)

† மறைவழக்கிடையந்தணர்க்கல்லதுவழங்க
லிறையவர்க்கிலையன்றியுந்தோடமெண்ணிலவாய்ச்
சிறையுடற்குறுமூப்பினைக்கொள்கவென்சிந்தை
நிறைதரத்திகழ்மைந்தர்பாலீயெனநிகழ்த்த. (௧௭)

குரவனுகியதாதையென்சொற்குறிக்கொள்ளாக்
கரவினுய்க்கறக்கதியெதுவென்றறக்கனன்றே
‡ யரவினுளரசுரிமையுமாற்றிடுமகமும்
விரவுமின்பமார்துறக்கமுமேவலையென்றே. (௧௮)

கொடியசாபமீந்தேனையமைந்தரைக்கூவி
வடிவமாற்றுமினென்றிடவவர்களுமாற்றந்
தடியவங்கவர்தம்மையுஞ்சபித்துடன்றீங்கின்
மடியமாற்றியேபூருவாமைந்தனைமகிழ்வால். (௧௯)

அருகழைத்தெனையாப்புறுமூப்பைநீயடைந்து
முருகளிக்குநின்னிளமையைத்தருதியேன்மோகம்
பெருகவுய்த்திடும்போகமுற்றுவனெனப்பேசத்
திருவகற்றியேயிளமையீந்தவனரைசேர்ந்தான். (௨௦)

தேங்குவெங்களியிளமையைச்செறிந்துபூருவின்பால்
வாங்குதெண்டிரைவையமீதுலாவியேவேட்கை
நீங்குமாறுணர்ந்தியன்றவனிரையிதழ்க்கருங்கண்
வாங்குநுண்ணிடைமயில் § விசுவாசியைமணந்தான். (௨௧)

---

* வாயுணர்வு-இந்திரியவுணர்வு. † ஓர்பிராமணனுக்கு ஓர்நிமித்தத்தி
ஞல் ஓர்வாக்குத்தானஞ் செய்தேன். அது முற்றுப்பெறுந்துணையும் நான்
என்னிளமையைத் தரமாட்டேன் என்ருன் என முதனூலிற்கூறப்பட்டது.
‡ அரவினுள்-பூமிதேவி. § விசுவாசி- ஓர் தேவப்பெண்.

சூழ்ந்துவண்டினமதுத்துளிபருகியதுணர்ப்பூப்
போழ்ந்துதென்றலங்குழவிசூழ் * சயித்திரப்பொழிலின்
வீழ்ந்துவெம்முலைத்தடத்திடைவேட்கையால்வேளம்
பாழ்ந்தழுந்திடவவசமார்கலவியினமர்ந்தான். (உஉ)

அரவினுண்ணிடையங்கனையாம்பல்வாயமுதந்
தரவிருந்தெதிர்தகைநெடுங்குழல்சரிந்தலைய
விரவுநன்பகலெனவிடைவிடாதணைந்தியைந்து
மரபழிந்திடவளர்ந்ததுகாமநீர்வளமே. (உ௩)

ஊழியாயிரமொருங்குறப்புணர்ச்சியையுறினுஞ்
சூழிமாமுகக்கரியனவிந்தியத்தொடக்காற்
காழினார்தருகாமமேன்மேற்செலக்கன்றி
யாழியாகுவதல்லதுசுருங்கலோவரிதே. (உ௪)

என்றுதானுவர்த்திகழ்ந்தவன்பூருவினிடத்தேய்ந்
தொன்றுகாதலாவிளமையீந்தவனிடையுவப்பா
லன்றுமூப்பினைக்கொண்டனனுயிடையாக்கந்
துன்றுபேருணர்வுதித்திடவுளத்தொடுஞ்சொல்வான். (உ௫)

எச்சமுற்றிடுமினையனுயியங்குநாண்முதலாக்
கச்சபத்துறக்கடிந்தெழுமிந்தியக்காமத்
தச்சமுற்றுடனைந்தையுமடக்கிடுமறிவோன்
விச்சைபெற்றவனல்லவர் † பசுத்திறமேயார். (உ௬)

கலங்குகாமநோய்காமமார்ந்தொழித்திடக்கருத
லிலங்குபேரழலிழுதினலவித்திடற்கேயும்
புலங்கொள் ‡ வேட்கையிச்சராசரத்துறவறப்போக்கி
னலங்குசோதியாயமர்ந்திடுமனப்பசையறினே. (உ௭)

ஒன்றினுற்பயந்தனக்குறலொழிந்துதன்னுருவாற்
குன்றியார்பயங்குவலயத்துயிருறக்கொடானுய்
நன்றியார்விருப்புவர்ப்பறவேணவாநாமம்
பொன்றிமாயுமேலக்கணம்பிரமமாய்ப்பொலியும். (உ௮)

கற்றமார்ந்தரும்விடுப்பதற்கரியதாய்க்காய
முற்றநாளளவுந்தொடர்ந்துடற்றிடுநோயா
யற்றமாயுடலழியினுமழிவருந்தகைத்தாம்
பற்றுநீக்கினர்க்கேயுளதின்பமாம்பயனே. (உ௯)

---

* சயித்திரரதம்சயித்திரமென வந்தது. இது குபேரனது உய்யானம்.
† பசுத்திறம்-மிருகத்தன்மை. ‡ வேட்கை என்றது பாவவேட்கையை.

* கேசமோடுபற்கெழுதருமிளமையோர்கேள்வி
காசமார்விழிசெவிமுதற்பொறியுடல்கரண
நாசமார்தரு † சீரணமுற்றிடுநாடிற்
பாசமாயுறுமாசையோதருணமாய்ப்படரும். (௯௦)

படியெலாமொருகுடைநிழலாற்றியபயனுஞ்
சடியுலாமலர்க்கற்பகக்காவுறுபயனுங்
கொடியவேட்கைவேரரிந்தவர்கூடியவின்பா
னெடியமால்வரையளவினிலணுவெனநிலவும். (௯௧)

வேறு.

எனவிழிபியற்றுமாசையுவர்த்துலகியற்றுங்காமங்
கனவெனத்துறந்து ‡ வெற்பிற்கடிகமழ்கானத்துச்சி
மனமுதலடக்கியாக்கமலிதரநோற்றுவானந்
தனதெனவுடலைநீத்துத்தாரமோடேகினானே. (௯௨)

மைந்துடைமைந்தர்வேலைமாநிலம்வழாதுகாத்துக்
கந்துறுகளிறுபோலக்களித்தனர்கடியயாகி
முந்துறுசாபநெஞ்சமுற்றிடமுதிருந்தாப
வெந்துயர்யதுவுஞ்சூழ்ச்சியுளத்தொடுமேவியோர்வான். (௯௩)

§ வழிமுறையரிகடாங்கவருமரசுரிமைநீங்கிப்
பழியுறுமெனக்குவேள்விப்பயனெவனருகும்பான்மை
பொழிமகமிழந்தேற்கின்பம்புரிதருசுவர்க்கமெங்கா
மழிதரிற்சுவர்க்கமோவிங்கிதியினலாவதென்னும். (௯௪)

அவமுடற்கின்பமாதியாக்கமென்றனைத்துநீத்துக்
சவலையுற்றடவிமேவிக்காவிரிக்கரையிற்காயுந்
தவமிகச்சரித்துச்செய்யத்தபனனேபோலச்சாரும்
ㅇ பவனியற்படிவமாயகாசிபன்பாதஞ்சார்ந்தான். (௯௫)

வற்றுமென்புருகநோற்குமாதவன்றனைப்போற்றி
முற்றுறுஞ்சாபமோதிமுறையரசுரிமைநீங்கிப்
பற்றுறுமகமற்றுவிப்பயனுறுஞ்சுவர்க்கவாழ்வு
மற்றுழன்றிடுவேனின்னையடைந்தனனபயமையா. (௯௬)

---

* கேசம் முதலியன ஓரோர் காலாந்தரத்திற் குன்றிப்பதனழிவடையும்; ஆசையோ அப்பொழுதும் அங்ஙனமாகாது யௌவனவிருத்தியடையும் என்பதாம். † சீரணம்-பதனழிதல். ‡ பிருகுவாச்சிரமத்து உயர்ந்த ஸ்தானத்துத் தவஞ்செய்தான் எனமுதனூலிற் கூறப்பட்டது. தாரம்-மனைவி; என்றது, பட்டத்தரசியாகியவிரசையை. § வழிமுறையரிகடாங்கவருமரசுரிமை என்றது சிங்காசனத்தை. ㅇ பவன்-சிவன்.

ஏற்படவொழுகிராசவிருடியாமெந்தைகூறுஞ்
சொற்பழுதாகாதேனுஞ்சுருதிநூன்மகமுநீங்கி
நற்பதசுவர்க்கமேவுநன்மையுண்டாயிருடி
யற்பகங்குளிரவல்லேயருளுதியென்னவாய்ந்து.		(௩௭)

வருத்தநீயொழிதிவேதசவுனகர்க்குறவொருத்துவேன்வி[illegible]
பொருத்தமுந்தவமும்யோகப்புணர்ச்சியும்பிறவுமாற்றித்
திருத்துறுசுவர்க்கவின்பந்தீர்தராதமருமாறு
கருத்துறவுரைப்பனுருக்கவலையைக்கடிந்துகேட்டி.		(௩௮)

திருமகட்குயிரதாகிச்சிறந்ததென்னாட்டுத்தேவி
னுருவமுற்றிலங்கும்வேதவனப்பதியொன்றுண்டாங்க
ணிருமலன்முன்னநீடிநிகழ்மணிகன்னிநேடிற்
பொருவருந்தீர்த்தராசனெனப்பொலிந்திலங்குமன்றே.		(௩௯)

பிள்ளைவெள்ளெகினப்பார்ப்புப்பிணியவிழ்நறும்போதூற்றுங்
கள்ளையுண்டயலிற்சங்கம்பெடையெனக்காதல்கூர
வள்ளைமேற்றுவப்பாயுமதுமழைவாரிமாந்திக்
கொள்ளைவண்டார்க்குங்கூலமணிகன்னிகுறித்துச்சென்றே.		(௪௦)

கூறுமத்தீர்த்தஞ்சாற்றுங்கொள்கையோடாடிற்கூடாப்
பேறுலகத்தினில்லைப்பிறங்கியசுவர்க்கமாகு
நாறுபூம்பொழிலிற்போகநயத்தியேன்ஞாலமுற்று
மீறுறுங்காறுமாளாவின்பமுற்றிடுதியென்றும்.		(௪௧)

பசுந்துணர்த்துளவமாலைப்பண்ணவன்பதுமமேலோன்
கசிந்துறுபதங்கள்வேண்டிற்காயமோடளிக்குங்காண்பான்
வசிந்துதாழமரர்தூவிவழிபடுமலரிற்செந்தேன்
பொசிந்துசூழ்கயிலையேனுமளித்திடும்புரவுபூண்டோய்.		(௪௨)

ஆயவித்தடத்துமூழ்கித்தேவலனலரோனூரிற்
காயமோடடைந்திசைகீடவ்வியன்களிப்பச்செய்தான்
மேயவச்சுவர்க்கமேவித்திரிசங்குமேன்மைபெற்றான்
றூயமுற்றுலகஞ்சேர்ந்தார்பலரதிற்சார்ந்துளோரே.		(௪௩)

* பருமணிகரையிற்சேர்க்குமணிகன்னிபடிந்தோன்றனே
யருமகமுழுதுஞ்செய்தோனுய்ந்தவனகிலநூலுந்
திருவுறுசீவன்முத்தனன்னவன்றெரியிற்சம்பு
குருமணிவயிரப்பூணுய்கோடியீதையங்கொன்றே.		(௪௪)

---

* இந் நாற்பத்துநான்காஞ் செய்யுளே மேற்போந்த பிரவரசுலோகங்களிரண்டின் மொழிபெயர்ப்பென வறிக.

தெய்வமேயுருவமாகுமணிகன்னிகிளைத்துமூழ்கி
யையனைப்பணிந்துபோற்றியமருநற்சுவர்க்கமேவி
மையறீர்த்துறுதிவேள்விவருபயன் * மடியயாதி
வையமீதுறுதல்கண்டேமகிழ்ச்சியின்மலிவாயென்ன. (சரு)

நன்றெனமகிழ்ந்துபோகிநகைமணிவகையிற்சூழ்ந்து
குன்றெனமாடமோங்குமறைவனங்குறுகிப்போற்றி
யன்றவன்மனச்சங்கற்பமாற்றியேயளிகள்சூழு
மன்றனன்மலர்சூழ்வாவிமணிகன்னிமகிழ்ந்துமூழ்கி. (சசு)

புனற்கடனாற்றிச்செம்பொற்பொருட்கடன்புகழத்தூற்றி
யனற்செயுஞ்சடையோனாயவமலனையணைந்துபோற்றி
யினற்படர்கரியபாசத்திருளறச்செறியக் † கண்போய்
மனப்படுநெறியின்வாழ்வேன்மருந்தருள்வரதவென்றே. (சஎ)

தழைவளர்சடையாய்போற்றிசராசரமனைத்துமீன்ற
விழைவளர்முலையாள்பாகத்தேகநாயகனேபோற்றி
மழைவளர்கண்டமேயவரதனேபோற்றிவாழ்த்தி
விழைபவர்க்கமுதமாயவேதநாயகனேபோற்றி. (சஅ)

அறிவரும்பொருளேபோற்றியமலனேபோற்றிநின்சீர்
நெறிவரம்பறியேனீயேநினைந்தருளென்றுபோற்றக்
குறியினின்றெழுந்துதோன்றிக்குழைந்திடலென்றுகூறிச்
செறிதருமமுதம்போலுமிம்மொழிசெப்பினானே. (சகூ)

விரிசுடரிரவியல்லோன்விளங்குநாளளவும்வெண்மா
வரிபுரியமர்ந்துமேவியளவறுமின்பமார்ந்து
பரிமகத்தருமநீங்கிப்பங்கமாய்யயாதிவானிற்
சரிதரநோக்கிவைகென்றுரைத்தரன்குறியிற்சார்ந்தான். (ருo)

நீங்கியசுடரைப்போற்றிவிடைகொண்டுநெடுநீர்நேமி
பாங்கினிற்பரித்துக்காலம்பலசெலப்பாரிற்காயந்
தீங்கெனக்கிடத்தித்தெய்வவிமானமேற்றேவனாகித்
தூங்கியகவரிநீழற்றுறக்கமேற்றுன்னினானே. (ருக)

உடன்முழுதளவுங்கண்ணனோடுமோரணையின்மேவி
மடலவிழ்தருவினீழன்மகிழ்ந்திடயயாதிநோக்கித்
தொடர்மகமின்றிவானந்துன்னியயதுவினோடும்
படர்தருமின்பமாந்திப்பற்பலகாலமுற்றான். (ருஉ)

---

* மடிய என்னும் செயவென் வாய்பாட்டு வினையெச்சம் மடி எனக் கடைக்குறைந்து நின்றது. மடிய, யயாதி வையமீதுறுதலை வானுறும் நீகண்டு, மணிகன்னிமகிழ்ச்சியின் மலிவாயென்று கூற. † கண்-அறிவு.

பரியுமிந்திர ரசேகர்பதமிழந்துறவுமாறுத்
தெரியுமின்பருந்திவானஞ்சேர்ந்திடுநாள்யயாதி
புரிமகப்பேறுமாயப்*பூவிறுமளவிற்பூந்தே
னரியணையதுவுங்கண்ணுற்றத்தனையவலமாற்றி. (௫௩)

கேடிலாவரத்தின்மேயமணிகன்னிகெழுமியாடும்
பீடினுற்சுவர்க்கமேவப்பின்னருமளித்துப்பேண
வீடிலாச்சுவர்க்கமேவியிருவரும்வேட்கையோடு
நீடினார்நிமலமாயமணிகன்னிநீர்மையாலே. (௫௪)

நயமுறும்யயாதிவீழயதுநலமளித்தலாலே
யயமகம்பத்துநூற்றினதிகமாம்பயனையாக்கு
மியன்மணிகன்னியென்றேயிசைத்தனனிதனையொக்குங்
கயமிலையுலகமூன்றிற்கதிதரக்கருதிக்காணின். (௫௫)

காசிபனிதனின்மூழ்கிப்பன்னியைக்கலந்தான்காமர்ப்
பாசிழைப்பரவையல்குலதிதியும்பரிவினுடி
யேசிலாமைந்தரீன்றாளின்னமுமனேகர்மூழ்கி
மாசிலாதுயர்ந்தார்மேன்மைமணிகன்னிமகிழ்ந்துமன்றே. (௫௬)

வேறு.

மல்லலார்மணிகன்னிதன்வாய்மையார்
சொல்லுவார்பரன்சொற்றிடுஞ்சொல்லுமே
லொல்லுமாறிதுவென்னவுரைத்தனன்
புல்லுமாவரசற்குப்புகரிலான். (௫௭)

யதுச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,எஉச.

---

## காசிபச்சருக்கம்.

பன்னிவாஞ்சையாற்காசிபன்பகர்மணிகன்னி
தன்னினுடியேசார்ந்தமைவிளம்பினைதவத்தோன்
முன்னியாடியவண்ணமும்பயனுறுமுறையும்
பன்னிநீயருளென்றிடமுனிவரன்பகர்வான். (க)

---

* பூமியில் விழுமளவில் அரியணையிலிருக்கும் யதுவுங்கண்டு பிதாவா கிய யயாதியை அவலமாற்றி என்க. யயாதி பூமியில் விழும்போது சிபிமுத லிய எட்டுமுனிவர்முன் வீழ்ந்து, அவர்சகாயத்தால் அவரோடு மீளவும்சுவ ர்க்கத்தை அடைந்தான் என முதனூலிற்கூறப்பட்டது.

மருக்கிளர்ந்தசெம்முண்டகத்திலங்கிய*மறையோன்
வருக்கமார்தருமுயிரினைத்தனித்தனிவகுப்பா
னருக்கனேர்பிரசாபதியளித்தவிரைவர்
திருக்கிளர்ந்தவரவர்களுட்சேட்டனுமரீசி. (உ)

ஆயமாமறைமரீசியாமயன்மகனளிக்க
வாயுமைந்தனுங்காசிபன்கனகமால்வரைப்பாற்
றோயுமிந்தியத்தொடக்கினைமனத்தொடுஞ்சுருக்கிக்
காயுமாதவம்புரிந்தனன்கணிப்பறுகாலம். (௩)

வேறு.

கண்டுயிலகன்றநோற்குங்காசிபற்கருகுகாமர்
விண்டுவந்தெதிர்ந்துசெய்யமென்கரமுச்சிவைப்ப
மண்டுமன்பதனுனீலமணியணிவண்ணன்வாசத்
தண்டுளவணிந்ததிண்டோட்டலைவனைத்தாழ்ந்துபோற்றி. (௪)

நிறைதருகமஞ்சூன்மேசுநிழல்கவர்ந்தொளிருமெய்யும்
பொறையுறுபுவனம்பூத்தவுந்தியும்பொறியார்மார்பு
மறைதருசெய்யவாயுமரையிதழ்புரையுநோக்கு
நறைகமழ்முடியுநெஞ்சத்தழுத்தினனயந்துபோற்ற. (௫)

விழைவனவுரைநீயென்னவிண்டுமாயின்னுச்சேர்ந்து
மழைவளர்கரியமேனிவள்ளலேமருளைமாய்த்துத்
தழைதருமின்பவீடுதருதியென்றுரைத்துத்தாழ்ந்தே
குழைவுறுமன்பிற்போற்றக்குருமணிவண்ணன்கூறும். (௬)

உருகருட்பருவஞ்சேர்ந்தவுயிரினையுவந்துமேவிக்
கருகிருட்பிறவியீர்ந்துகாமுறுமுத்தியீதன்
முருகியற்கடுக்கைவேய்ந்தமுழுமுதன்முக்கண்மூர்த்தி
திருமலற்குரியதாகுமற்றையர்நிகழ்த்தற்பாற்றே. (௭)

மூசிவண்டறைமந்தாரமுருகுகுழ்சுவர்க்கமேயார்
பாசிலைப்பதுமமேலோன்பணித்தயானெவரும்பாசம்
வீசிநன்முத்திமேவவிரும்பியேயரும்புமீச
ஞசியுமமர்வேம்போற்றினருட்கடலளிக்குமன்றே. (அ)

அனையதுபின்னரீசனருளினுலமைவதாக
முனையுநம்மருளால்வேட்கைமுதிருமில்லறத்தின்மேவி
நினைசராசரங்கடேவர்நிசாசரர்மக்கணீடுந்
தனையரென்றுகத்தந்தையாகெனச்சாற்றிப்போனான். (௯)

---

* மறையோனாகிய பிரசாபதி எனக்கூட்டுக.

போயமாயவனைப்போற்றிப்புணர்ந்துடன்மகிழ்ந்துமேவற்
காயகாரிகையைத்தேடியகிலமுமலைந்துங்காணான்
காயமார்வருத்தமேவிக்கமலமீதயனைக்காணு
நேயமாதரவுகூரப்பணிந்திதுநிகழ்த்துகின்றான். (௧0)

ஐயயான்புவனமுற்றுமலைந்துமில்லறத்திற்காய
மையுலாநெடுங்கட்செவ்வாய்மங்கையைமதித்துக்காணே
னெய்யவேறுபாயமோர்ந்தேயிசையெனவினிதுநாடிச்
செய்யமாமலரோன்மைந்தன்மகற்கிதுசெப்புகின்றான். (௧௧)

தென்றிசைவேலைப்பாங்கர்த்திருவெலாமொருங்குமேவி
யொன்றியவளத்துவேதவனமெனவோங்குமாங்கட்
பொன்றிகழ்கமலப்பூந்தேன்பொழிமணிகன்னியீசன்
முன்றிகழ்ந்தொளிருந்தீர்த்தமூர்த்தியாய்*முதல்வனாகி. (௧௨)

துனியுறுந்தவங்கள்வேள்வித்தொடக்கிவையாதிதீர்ந்து
மினிதுறுசுவர்க்கமீயுமிலங்குமெய்யுணர்வற்றூர்க்கும்
புனிதநன்முத்தியீயும்புரிந்திடுமெவையும்போயப்
பனிதருதடத்தின்மூழ்கிப்பரமனைப்பணிந்துபோற்றின். (௧௩)

விரும்பியவனைத்துநல்கும்வேண்டிடின்விழைவுகூரு
மரும்பியல்கொங்கைமாதுமளித்திடுமடைதியானுங்
கரும்பியல்வேலிசூழ்ந்தமறைவனங்கருதிப்போற்றிச்
சுரும்பணிபோதுதூவிச்சிருட்டிசெய்தொழிலும்பெற்றேன். (௧௪)

போதிநீயென்னப்போற்றிப்புவியினுக்கணியதாகு
மாதிமாமறைசைமேவியருமறைச்சடங்குவாய்ந்த
வேதிசூழ்வேள்வியாற்றும்வேதியரொழுக்குமின்னார்
நீதியார்வருணைச்சால்புநீண்மணிமறுகும்போற்றி. (௧௫)

முடிவிலாவினைகளோடமுழங்கியேமுருகுநாறுங்
கடியுலாமலர்நீர்வேய்ந்தகரையிற்சங்கற்பமேவிப்
படியுளார்க்கமுதமாயமணிகன்னிபடிந்துநீறு
வடிவெலாமணிந்துவேதநியதியுமரபினாற்றி. (௧௬)

புரிசடையமலன்மேயசினகரம்புகழ்ந்துபோற்றிப்
பரிவொடுமுக்காற்சூழ்ந்துபணிந்துபோய்ப்பவங்கடீர்க்கு
மரியயற்கரியபெம்மானடிமிசைப்பணிந்துபோற்றித்
தெரிவருமகிழ்ச்சிகூரத்துதித்தனன்றேசுமிக்கான். (௧௭)

---

* சிவனாகி.

வாக்கொடுமனமுந்தூக்குமதிப்பரும்வாய்மையாகி
யாக்கமுமழிவுமாற்றியமலமாயறிவாயார்வந்
தேக்கியவுளத்தினூறுஞ்சிற்பரத்தெளிவேதேசார்
பூக்கமழ்மறைசைமேயபுராதனபோற்றிபோற்றி. (கஅ)

காயமுமுலகுமற்றுங்கரணமுங்கருத்துங்காண்பு
மாயமென்றுணர்ந்துசீவவழக்குமுமாற்றியெல்லாம்
பாயநின்னறிவானந்தப்பரப்பெனப்பரியு*மேலோர்
மேயமேமறைசைமேயவேதநாயகனேபோற்றி. (கக)

தெரிவரும்பரமானந்தசிற்பரமுதலேபோற்றி
வரிபரந்தொழுகுநீலமதர்விழிவாழ்வேபோற்றி
கரியுரிமகிழ்ந்தசோதிக்கருணையங்கடலேபோற்றி
விரிமறைமுழுதும்போற்றும்வேதநாயகனேபோற்றி. (உ0)

செங்கண்மான்முதலோர்க்காக்கஞ்செய்திடுந்திருவேயென்று
வங்கமார்புளகம்பூப்பவருவிநீர்விழிகள்சாய்ப்ப
வெங்கணாயகனைப்போற்றவெதிர்ந்துளத்தேய்ந்ததீதும்
பங்கமீர்ந்திடுதியென்னப்பணிந்தவன்பரவிக்கூறும். (உக)

வானவரவுணர்மாந்தர்மற்றையபிறவுநல்கற்
கானமாமடவார்தம்மையருளெனவபரபக்கத்
தானமர்பத்தின்மூன்றுசார்தருந்திதியிற்சார்ந்து
பானலார்தடத்தின்மூழ்கிநம்மையும்பணிந்தவாற்றால். (உஉ)

சில்லரித்தடங்கணல்லார்பத்தொடுதிகழ்மூன்றேயு
மெல்லியற்பணைத்தோண்மாதர்விரைமணமேவிச்சேர்வாய்
சொல்லியதினத்திற்றீர்த்தந்தோய்ந்தெமைத்தொழுதோர்யாரு
நல்லியற்பன்னிசேர்வாரெனமறைநாதன்போனான். (உங)

எண்ணியவரத்தையேய்ந்துகாசிபனில்லிற்போனான்
கண்ணியகாலந்தன்னிற்கடற்புவியளிக்கவேண்டும்
புண்ணியத்தக்க†னெம்மாற்புருடர்தஞ்சிருட்டிமாற்றிப்
பண்ணியல்பவளச்செவ்வாய்ப்பாவையர்‡பலரையீன்றான். (உச)

எனமுனியியம்பவேந்தனேதுநீசெய்ததேதான்
மனமகிழ்புருடத்தோற்றமாற்றினனென்னவாயு
மனமிசையமர்வோன்மைந்தனையதக்கனேநீயாக்கத்
தினமிகுசிருட்டியாற்றியிலக்குதியுலகையென்ன. (உரு)

---

* மேலோர் என்றது சிவோகம்பாவனை செய்வோரை. மேயம்-பிரமேயம்; அளவிடப்பட்டது. † எம் என்றது நாரதமுனிவர் தம்மை என்க. ‡ பலரென்றது அறுபதுமகளிரை.

நன்றெனத்தக்கன்மேவிஙயந்தநற்குணங்கண்முற்று
மொன்றவாயிரவர்தம்மையொருங்களித்தவரைநோக்கிச்
சென்றுமாதவத்தின்மேவிச்சிருட்டிசெய்தமர்வீரென்ன
வன்றவரீண்டிமேருத்*தடத்திடையமர்ந்துநோற்றார். (உசு)

புரிந்தவர்நோற்குஞ்சூழல்புகுந்தியாம்புகருற்றுவி
கரிந்துகநோற்றுவேண்டுங்கருமம்யாதென்னக்காமம்
விரிந்தவர்சிருட்டிக்கென்னவிழைந்திலீர்வேதவாய்மை
தெரிந்திலீரருளிற்றீர்ந்தீர்செறியிருட்சூழல்சேர்ந்தீர். (உஎ)

தோற்றமுமிறப்புமேவித்துயர்க்கடற்சுழியிற்றாழ்ந்தீ
ராற்றவெந்துயரமாவிக்காற்றினிராயினுவா
கூற்றநீரலதுவேறுருவலயத்துளதோகோதார்
மாற்றமுமுளத்தைத்தீக்குஞ்செய்கையென்வகுப்பதாமே. (உஅ)

கனப்பசையுறுஞ்†சஞ்சாரக்கவலையினகன்றுகாம
மனப்பகையரிந்துசாந்திமருவியதுறவின்மேவிச்
சினப்பகைசெற்றமாற்றிச்சிவமகமாகத்தேசார்ந்
தினப்பகல்போலவெல்லாந்தானெனுமின்பமார்ந்தே. (உகூ)

ஆருயிர்க்கச்சமாசையாக்கியபேதமாயை
வேருகவகழ்ந்துவேதசிரத்திடைவிமலமாகும்
பேருணர்வாக்கிக்காலிற்பிணிப்பறவெங்குமேவிப்
பாருயர்பரமாநந்தப்பரவையாய்ப்பயிலுமென்ன. (௩0)

பசையறத்துறந்தூய‡பகவராய்ப்படரப்பாய
விசையினைத்தக்கன்கேளா§விடருழந்திவரைப்போல
நசையுடன்பின்னுமாங்காயிரவரைநயந்துநல்கி
யசைவறுந்தவத்தினேவவவரையுமணுகினாமே. (௩க)

தெளிமறைச்சிரத்துச்சித்தாந்தேசினைநல்கத்தேறி
யொளியுறத்துறந்தாரிவ்வாறொழிவற0நூறுவார
மளியுடனுதவத்தீர்த்தேயரும்படைத்தொழிலினீக்கி
வெளிசெயவிமலயோகின்மேவிடவெருண்டுதக்கன். (௩உ)

---

* தடம்-மானததடாகம். † சமுசாரம் என்பது சனனமரணங்களை எனக் கூறும் வேதாந்தநூல். ‡ பகவர்-யோகிகள். § பிரவிர்த்திமார்க்கம் நிவிர்த்திமார்க்கம் என மார்க்கம் இருவகைப்படும். தக்கன் தான் பிரவிர்த்தி மார்க்கத்தவனாகலின், நிவிர்த்திமார்க்கமடைந்த தன் பிள்ளைகளைக்குறித்து இடருழந்தானென்க. 0 நூறுவாரம்-நூறுதடவை.

* தரித்தொருதலையிற்போதஞ்சாற்றுதறவிர்வானெண்ணி
யுரித்திவற்கோரையொன்றேயோரிடத்தென்றுசாபம்
விரித்தெமக்கீயயாமும்வேட்கைதீர்வினைவாமென்றே
பரித்தனஞ்சாபமிப்பாற்றக்கனும்படைத்தன்மேவி. (ருரு)

என்னிடைவெறுப்பாலாஉச்சிருட்டியையிரங்கிநீக்கிப்
பொன்னவிர்ந்திலங்கும்வெய்யபுணர்முலைப்பொருவேலுண்கண்
மின்னிடைமடவாராறுபத்தெனெண்மேயினுரை
யின்னமுதுயிர்க்குஞ்சாயலிந்திரையென்னவீன்றான். (ருச)

அளித்தவத்தையலாருக்காகிய†வரனையாய்வான்
றெளித்தநற்றீர்த்தமாயமணிகன்னிதோர்ந்துமூழ்கிக்
களித்தகாசிபற்குத்தீர்த்தமேன்மையைக்கருதித்தானே
விளித்தவனீரைந்தோடுமூவரைவிருப்பினீய்ந்தான். (ருரு)

அருந்தவனவனுந்தூயவத்தடமேன்மையாலே
கருந்தடங்கண்ணிமார்கள்பத்தொடுங்கலந்தமூவர்ப்
பொருந்தியேயவுணர்தேவர்புகன்றகந்தருவர்சித்த
ரிருந்திறனிருதர்நாகரியக்கர்மற்றெண்ணுந்தேவர். (ருசு)

மன்பதைவிலங்குபுண்மாமரங்கொடிகிடமாதி
யின்புறவீன்றுமேவியில்லறத்தியல்பின்மிக்கான்
பொன்புரைகன்னியார்வங்காசிபன்புணர்ந்தமேன்மை
யன்புறவிசைத்தேம்யாவராயினுமடைந்துமூழ்கின். (ருஎ)

காதலிற்கன்னியாதிகாமங்களனைத்துமீயு
மாதலிற்றீர்த்தராசனுமணிகன்னிமேன்மை
யோதலற்றுயருமென்னவுரைத்தனனும்பர்கோனிற்
பூதலத்தரசனுயபூபதிக்கறவோன்போத. (ருஅ)

வேறு.

கலையுணர்காசிபன்கலந்துகாரிகை
யுலகினையருள்கதையுணர்ந்தமேலவர்
நிலைபெறுமைந்தருந்திருவுநேயமு
மலைவறுசெல்வமுமடைவராமரோ. (ருகூ)

காசிபச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,எகூரு.

---

* ஓரிடத்து நெடும்போழ்து தங்கியிருந்து ஞானம்போதிக்க வேண்டுதலின், அதனை நாந் தவிரும்படி கருதி, ஓர் முகூர்த்தகாலமே ஓரிடத்துத் தங்குதல் இவற்குரித்தென்று தக்கன் சாபம் விரித்தெமக்கீய, நாமும் அச்சாபம் வேட்கைதீர்விஷயத்தில் அநுகூலமாகுமென்று கருதி மேற்கொண்டனமென்க. † வரன்-நாயகன். இது மேலுங்காட்டப்பட்டது.

# அதிதிச்சருக்கம்.

தேற்றுமாரமுதுருவமாய்த்தீஞ்சுவைத்தேன்போற்
சாற்றுமிக்கதைதாங்குடற்பயன்றருந்தகைத்தா
மூற்றுநீர்மணிகன்னியையதிதிசேர்ந்துபர்ந்த
பேற்றுவாய்மைநீயுரையெனப்பேசினன்பெரியோன். (க)

சுருதிநாயகனுருவமாமணிகன்னிதோய்ந்த
பெருமையாற் * பதின்மூவரைத்தக்கனாற்பெற்றுக்
கருதுகாசிபன்காதலாற்கனங்குழையவரைப்
பருகுநாளவர்தங்களுளதிதிபாற்பரிந்தான். (உ)

திருவின்மிக்குயரழகினாற்கற்பினாற்சிறப்பாற்
பருவமோர்த்திடுமேவலாலொழுக்கினுற்பரிவாற்
பொருவிலாதுயரதிதிபாற்புரிவொடுந்தவத்தோன்
மருவுநாளிடைக்காசிபன்மலர்முகநோக்கி. (௩)

அணங்குநாறவியாற்றலாலறநெறிவழக்காற்
குணங்களாலுயர்தேவரைப்பயந்தியான்குலவ
விணங்குவாயெனவன்பினாலுரைத்தடியெய்தி
வணங்குமாயிழையதிதியைமகிழ்ந்திதுவகுப்பான். (௪)

அரியசெய்கையேயாற்றியுமடைவதற்கரிய
பெரியதோர்பயனாயினுமறைவளம்பேணி
வரியுலாமணிகன்னியிற்படிந்திடவாயும்
பரிவினாலவண்மேவியபரமனைப்பணிந்தே. (௫)

மிக்கவானவர்க்கன்னையாய்விளங்குதல்வேண்டித்
தக்கசீர்மணிகன்னியிற்சார்ந்து † சங்கற்பம்
புக்கவாய்மையாற்படிந்துபோற்றுதியெனிற்புரக்குஞ்
செக்கர்வார்சடைச்சிவன்கடிதேகெனச்செப்ப. (௬)

காதன்மாதவன்கரைந்திடுஞ்சொற்கொடுகடிது
வேதகானனமேவியேவிரிமணிகன்னிப்
போதசூழ்தடமூழ்கியேபுரிசடைப்புனித
நாதனீரடிநாண்மலர்பணிந்திதுநவில்வாள். (௭)

---

* இப்பதின்மூவர்மகளிர் பெயர்களை முன்வரும் காசிபர்சிருட்டிச் சருக்கத்து ஆறுஞ்செய்யுளிற் காண்க. † சங்கற்பம் வேண்டிப்புக்க வாய்மையால் எனமுடிக்க. வேண்டில் எனவும் பாடம்.

பானிலாவிரிபனிமதிக்குழவிதேம்படர்நீர்
மேனிலாவியவிரிசடைவிமலனேபோற்றி
யூனிலாவியவுயிரெலாமொருங்குகாத்தளிக்கும்
வானிலாவிசூழ்மறைவனவரதனேபோற்றி. (அ)

ஆலமார்தருபசுங்களத்தமலனேபோற்றி
யேலவார்குழலிமயமாதெழில்பெறவிளங்குங்
கோலமார்தரக்குலவியகுழகனேபோற்றி
ஞாலமார்புகழ்மறைவனநாதனேபோற்றி. (கூ)

ஆழிமான்முதற்றேவரோடகிலமுமடங்கு
மூழிநாளினுமுலப்பறுமுண்மையாயோங்கும்
பாழிவாய்தரும் * பராற்பரம்பரித்தசின்மயமாம்
வாழிமாமறைவனத்துறைவரதனேபோற்றி. (சo)

சுருதிநாதனேதுகளறுஞ்சோதியேசுடரே
கருதுவாருளங்காதலித்தமுதமாங்கனியே
† மிருதிமாற்றியவிமலவானந்தமாம்விளைவே
தருதிவாழ்வுநின்சரணமேயரணெனத்தாழ்ந்தே. (கக)

குழைந்துபோற்றியவதிதியைக்கூத்தனெம்பெருமான்
றழைந்தகாதலாலெதிர்ந்துநீமணிகன்னித்தடத்தின்
விழைந்துமூழ்கினையாதலின்வேண்டியதருள
விழைந்துகூறெனவியம்பலுமதிதியுமிரந்தே. (கஉ)

தேவர்தங்களுக்கன்னையாய்ச்சீர்பெறவேண்டு
மாவலின்னதென்றவள்சொலநன்றெனவருளிக்
காவன்மாயனுநின்னிடைக்கான்முளையாநம்
மேவலாலெனவியம்பியேபின்னருமிறைவன். (கங)

இன்னநாண்முதலித்தடம்படிந்தவரியார்க்கும்
பொன்னனார்மகிழ்புத்திரர்பௌத்திரர்பொருந்தி
மன்னவீந்திடுமணிகன்னிநீரெனவழங்கி
நன்னர்வாய்மொழிமறைந்தனன்மறைவனநாதன். (கச)

ஆங்ககன்றுபோயதிதியுங்காசிபனமரும்
பாங்கறைந்திதுபரிவொடும்பணிசெயுநாளிற்
றேங்கமழ்ந்தபூங்கோதையுந்தீர்த்தநீர்ச்சிறப்பாற்
றாங்கதிர்ச்சுடர்மைந்தரைத்தோமறப்பயந்தாள். (கரு)

---

* பராற்பரம் பரத்துக்குப்பரம். முதற்கட் பரமென்றது கீழுள்ளபரத்தை. † மிருதி-மரணம்.

* அரியமாமுதல்விண்டுவீருயபன்னிருவர்
விரியுமாநிலம்விளக்குதற்களித்துளமேன்மை
பரியுமாமகிழ்வெய்தினள்பண்ணவர்க்கனையாய்க்
கரியவேற்கணிகலந்தமையிதுவெனக்கரைந்தே. (கசு)

சோதிமாமணிசன்னியின்சீரெலாஞ்சொற்றற்
காதியேயலாதெம்மனோர்க்கரிததிலடைந்தே
பூதியார்தருசிருட்டியுங்காசிபன்புணர்ந்தா
னீதியாயெனநாரதனிருபனுக்குரைத்தான். (கஎ)

வேறு.

ஈன்றனடேவரையதிதியென்றிடும்
வான்றருமிக்கதைமகிழ்ந்துவாழ்த்துவார்
தேன்றருமழலையஞ்சிறுவர்ச்செல்வமு
மேன்றவரெய்துவரிணையிலின்பமே. (சஅ)

அதிதிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க, எஅக.

# காசிபர்சிருட்டிச்சருக்கம்.

கருணையாரின்பக்கடலெனப்பொலிந்தநாரதன்கழலிணைபோற்றி
யருணவேனிருபனுயமாந்தாதாவருமறையங்கமாகியநூ
றெரு ‡ ணியாமகனுங்காசிபனிலங்குஞ்சீர்மணிகன்னியின்மேவி
வருணமார்சிருட்டிவகுத்தமைதெளிவான்வழங்கெனமுனிவரன்வழங்கும்.

அலர்தலையுலகமழிந்ததைமுழுதுமாக்குதற்காதரம்பெருகு
மலர்மிசையுரவோன்காசிபன்றனைநீவழங்குதிசிருட்டியென்றுரைப்பப்
புலர்முகமாகிச்சிருட்டியாற்றுதற்குப்பொருந்தியசத்தியுமறிவு
மிலகிடாதிலகுமுபாயநீயுளதேலிசையெனமறையவனிசைப்பான். (உ)

வலம்புரியினங்கள்வயிறுளைந்தலறச்சலஞ்சலமருங்கணைந்தளிக்கு
மலம்புரீர்மறைசையவிர்மணிகன்னியாவியின்மேவிநீபடியி
னலம்புரிசிருட்டிநயந்திடுமெனக்குறைமலர்மறைவனந்தோற்றம்
புலம்புரிந்தளித்ததெனவவன்போற்றிப்போயினன்மறைவனம்புகுந்தான்.

*அரியமாமுதல் ஆதித்தர் பன்னிருவரை முன்னர்வரும் காசிபர் சிருட்டிச்சருக்கத்து ஏழாஞ் செய்யுளிற் காண்க. ‡ நியாமகன்-நியமனஞ் செய்பவன்; ஒருசொல்.

நறுமலர்விளைந்தநறைகவிழ்த்தளிகணனிளமேற்பாய்ந்து * நாகரும்பி
னுறுமணிகன்னியுவப்புடனுடியொளிருமத்தடத்தினைப்போற்றிச்
சிறுமதிக்குழவிச்சிவனுருவாயதீர்த்தமேசிருட்டிசாதுரியம் [வே.
பெறுமுறையளித்தியெனப்பணிந்தேத்தப் ㅇ பிறங்கியதுளத்திடைப்பெறு

இறப்புறுநிகழ்வுமெதிர்வதுமாகவியற்றுதற்கரியபேரறிவு
சிறப்பொடுதோன்றத்தெளிந்துளமகிழ்ந்துசிற்பரன்பொற்பதம்போற்றி
மறப்பறவேகிமனையிடைச்சிருட்டிமருவினன்மணிகன்னிவரத்தா
லறப்பயனுதவுசுரர்நரரவுணராதியரடைவினியறைவாம். (௬)

அதிதி, சிங்கிகையே, சுரபி, காலகை, சீரநாயுவே, குரோதை, யஞ்சுரசை,
திதி, தனுப், பிரபை, கத்துரு, வினதை, சீர்முனி, யெனப்பதின்மூவர்
மதிநுதன்மடவார்தக்கன்முன்னளித்தமங்கையரவர்தமைமணத்தால்
விதியுறப்புணர்ந்தானவர்கள்பாலுதித்தமேன்மையார்பெயரினிவிரிப்பாம்.

அரியமன், வருணன், மித்திரன், பூடா, வஞ்சனே, புரந்தரன், றுவ
ட்டாப்; பரிபகன், சவிதாப், பருச்சனி, தாதா, விண்டு,வென்பன்னிரண்ட
ருக்கர்; புரிகுழலதிதிகாசிபற்களித்தாள்† பொற்கணனிரணியனென்ன; விரி
தருபுகழார்தமைத்திதியளித்தாள்வீறுசாலருந்தவன்விழைச்சால். (எ)

வேறு.

மேயபுகழிரணியன்பாலுல்வருதித்தார்விளக்கமேன்மையாண்மை
தூயவறம்பொறைசாந்திதுறவடக்கமிந்தியத்தின்றொடர்ச்சிமாற்றல்
பாயதவஞ்சத்தியமேயாதிபலநற்குணமேபடிவமானோர்
தாயனையசங்கரனைத்தற்பரனையற்புதனைச்சரணஞ்சார்ந்தார். (அ)

ஆதியிற்பிரகலாதனவன்பினநுகலாத
ஞேதியசங்கலாதன்கலாதனென்றுரைக்கும்பேரார்
நீதிலாப்பிரகலாதன்சேய்விரோசனனுமற்றந்
நீதியான்மைந்தனுகுமாவலிநிகரிலாதான். (௯)

மாவலிவாணனென்னுமைந்தனையளித்தான்வண்மைத்
தாவறுமனுகலாதன்றனையராநிசும்பன்சும்பன்
மேவிரோசனன்றனென்னவிளம்பினர் § விதுவையீரத்
தீவிழிராகுதன்னைச்சிங்கிகைசிறப்பினீன்றள். (௧௦)

---

* நாகரும்பினுறும்-இளமையாகிய அரும்புகளிற்றங்கும். ㅇஉளத்திடைப்பெறப்பிறங்கியது-அச்சிருட்டி சாதுரிய அறிவானது மனத்தின்கட் டானே பெறும்படி விளங்கியது. †பொற்கணன்-இரணியாக்கன். இரணியன்-இரணியகசிபு. § விதுவையீரத்தீவிழியிராகுதன்னை-சந்திரனை ஈர்கின்ற அத்தீவிழியை யுடைய ராகுவை. ஈர்தல்-அரிதல்; என்றது, ஈண்டு மறைத்தலாகிய உபத்திரவஞ்செய்தன் மேற்று.

அறற்கருங்கூந்தற்காலையளித்தனள் * காலகேயர்
விறற்பொருபடைநிவாதகவசரைவிரும்பியன்ற
ருறற்கருங்கூற்றமன்னதானவருருமிற்சீற
மறக்குறும்புடையராற்றன்மலிந்தனர்வரத்தின்மிக்கார். (கக)

சிற்றிடைத்தனுவின்றன்பால்விப்பிரசித்தியாதி
பற்றியவசுரர்சம்பன்சம்பரன்பலன்குப்பாண்டன்
கற்றிரள்வலன்புலோமன்†னமுசிவெங்காலநேமி
விற்றிறன்மிக்கார்கண்டார்வெருவுறவிளங்கினரே. (கஉ)

கோற்றொடிக்குரோதைபூதங்கூளிகூரியக்கர்‡குய்யருஞ்
சாற்றியபெயரினுரைத்தானவரிருவரோடுந்
தோற்றவீந்தனள்குரோதவசனெனத்துதிக்கும்பேரா
னாற்றல்சால்குரோதகன்மனும்பெயரவர்கட்காகும். (கங)

வேறு.

திருந்தெழிற்கத்துருவீன்றாள்பணிக்குலத்தையதிற்சேடன்றிருதராட்டன்
பொருந்தியவாசுகியனந்தன்றனஞ்சயன்றக்கன்குளிகன்பொழியுமாலம்
வருந்தவருள்கார்க்கோடன்பதுமன்மகாபதுமனியன்§மருத்துவாரி
யருந்துசங்கபாலனொடுகம்பலாச்சுவதரனேயாதியானோர். (கச)

ஆர்வமிகுந்தனிவினதைபுட்குலத்தையமர்ந்தளித்தாoளரிட்டநேமி
சீர்வளர்தார்க்கியனருணன்றிறற்கலுழ+னசனிமின்னுத்திகழும்பேரோ
னேரருணியெனுமிவராமனாயுவிடைவிருத்திரன்பேரிகற்கிராதன்
போர்புரியுமயக்கிரிவன்வியாதியுடனாதிமிகும்புகழ்சால்வாலன். (கரு)

என்னுமிவர்தாமுதித்தார்பிரபையெனுமேந்திழைதானியல்பீனீன்றாள்
கின்னரர்கந்தருவரநவத்தியை, சீரனுகாமை, கிளரனூகை,
மன்னுமருணப்பிரியை, யனூபை, யெழிற்சுபகை, யெனவடிவுவாய்ந்து
மின்னுமரமகளிர்தமைச்சுரசைகிரியினங்கடமைவிருப்பினீன்றே. (கசு)

---

* காலகேயர்-காலகையின் புத்திரர். காலகையெனினும் காலையெனினு மொக்கும். நிவாதகவசர்-வாதிக்கப்படாத கவசத்தை யுடையவர். கவசம்-சட்டை. † நமுசி. ‡ குய்யர்-தேவசாதிகளில் ஒரு பேதத்தவர். § மருத்து வை வாரி யருந்துகின்ற சங்கபாலன். கம்பலாச்சுவதரனும் ஓர் பாம்பு. o அரிட்டநேமி ஒருசொல். அரிட்டநேமி, தார்க்கியன், கலுழன், என் பன ஒருசாதிப்பறவைகளுக்குட்டம்முள் வேற்றுமைகண்டு தெரித்துக்கூறி யவாறு. + அசனிப்பேரோன்-அசனியென்னும் பெயரையுடையவன். மின்னு ப்பேரோன்- வித்துத்தென்னும் பெயரையுடையவன். வியாதி - சரீரபீடை. ஆதி-மனப்பீடை.

வனங்கடருவல்லிபலவகையினொடுகடனதிகண்மற்றுமீன்று
ளினங்கடரு*மா, மறையோ, ரமுத, முருத்திரரெனப்பேரெய்துநான்கு
சனங்கடமைச்சுரபியெனுந்தையலளித்தனண்முனியாஞ்சாயனல்லா
ஊனங்கடருமினியநடையரம்பையரைநிரம்பெழிலாலளித்தாளன்றே. (கஎ)

வேறு.

அலம்புசை, புண்டரீகை, திலோத்தமை, சுரூபை, யாக்க
மிலங்கிலக்கணை, நற்கேமை, யரம்பை, காமியை, சுகேசி,
நலம்பெறுசிதை, சுப்பூரு, மனோரமை, நயச்சுகந்தை,
பொலம்பொலிசுரதையோடு, சுமுகி, யேர்பொழியுநீரார். (கஅ)

வேறு.

எழிலார்சரத்துவதி, யின்பப்பிரியை, யியற்சுவிருத்தை,யென
வழியாதொளிருமின்கொடியேயனையார்முனிபரலமர்ந்துதித்தார்
மொழியார்தக்கனளித்தபதின்மூவர்தம்பான்முதிர்காத
லொழியாதமருங்காசிபனாமுரவோன்சிருட்டியுரைத்தனவே. (கக)

வரிசூழ்மலரார்மணிகன்னிமருவிப்படிந்தவண்மையினா
லரியார்நீலமலர்த்தடங்கணன்னமனையார்தமைமேவிப்
பரிவாலுலகமுழுதினையும்படைத்தேயறவோர்பலர்போற்றும்
பெரியோனாகிக்காசிபனுமடைந்தானமலப்பேற்றினையே. (உ0)

செங்கண்மாயன்முதலாயதேவர்பதமுந்திரையாழி
யங்கண்ஞாலமுழுதாளுமரசுமழியாப்பெருவாழ்வுந்
திங்கண்முடியோனருள்வாயுஞ்சிறப்புஞ்செழும்போதினமூற்றும்
வெங்கண்மேயமணிகன்னியளிக்கும்படிந்தார்விரும்பினவே. (உக)

வேறு.

மல்லலஞ்செல்வம்பலவளமடவார்மைந்தராரோக்கியமாயுள்
சொல்லருமின்பந்துறவறங்கல்விதூய்மைசீர்வாய்மைசொல்வன்மை
யெல்லையில்பலவுமிம்மையேயளிக்குமியன்மணிகன்னியின்மேன்மை
வல்லவர்யாரேமறையவர்தன்மையிதுகொடுகௌசிகன்வாய்ந்தான். (உஉ)

வேறு.

அளப்பரும்பெருமைத்தாகுமறிந்தனவுரைத்தேனான்ற
வளப்பலமலரிற்சூழுமணிகன்னிவழங்குகாதை
யுளப்படக்கேட்போர்சொல்வோருயர்கதியுலகைமேவி
விளக்கமோடமர்ந்துவேண்டும்பயனெலாம்விளைப்பரென்றும். (உங)

காசிபர்சிருட்டிச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் க,அ0ச.

---

* ஆமறையோர்-ஆவும், மறையோருமென உம்மைத்தொகை. ஆ-பசு.

# வேதநதிச்சருக்கம்.

தாயினுலகந்தண்ணளியாற்றழையவருளுமாந்தாதா
வாயின்மதுரமொழுகிசையாழ்வழங்கு*மிசையின்மலிவாய்மை
யாயினமுதாமெனமுனிவனலருங்கமலவடிபோற்றித்
தீயின்மெழுகிற்குழைந்துருகுஞ்சிந்தையோடுந்தெரிக்கின்முன். (க)

தோற்றுஞ்சுடரினகவிருளைத்துரந்துகளியிற்றூங்கமது
வூற்றுமொழியான்மறைவனச்சீருரைத்தாயுலகந்தொழுமேன்மை
யாற்றுந்தீர்த்தம்வேதநதியாமென்றுரைத்தாயதன்பெருமை
சாற்றுங்கருணைதருதியெனத்தவத்தோன்மகிழ்ந்துசாற்றிடுவான். (உ)

எறியுந்திரையினிரைமணிகளிருளீர்ந்திளையகதிரினொளி
செறியுமுவரிவேதநதிச்சிறந்தமேன்மைதேவர்தொழுங்
குறியுங்குணமுமிறந்தபரன்குறிக்குமாயிற்குறித்திடுமற்
றறியுந்திறத்தாரெவர்மாலுமயனுமனையார்க்கறிவரிதாம். (ங)

உள்ளத்துணர்ந்தார்தீவினையுமொழித்தேயுயருங்காவேரி
பிள்ளைப்பிறையோனுருவாகப்பிறங்கும்வேதநதிப்புனித
வெள்ளத்தணைந்துதினம்படிந்துவினைகள்வீட்டுமெனிலதன்சீர்
தெள்ளற்கெளிதேயரன்பெருஞ்சீர்தெருண்டார்தெளியுஞ்செய்கையதாம்.

† வேதநதியினிருநான்குமேலிட்டமருஞ்சதநாம
மோதநினையக்கொடியவினையுலப்பிலாதவொழிந்திடுமேற்
கேதமகற்றிப்படிந்தவர்சீர்கிளக்குந்தகைத்தோகிளர்வேத
நாதனவனுமதிற்படிந்தாருருவந்தனதாநயந்திடுமே. (ரு)

ஈதிற்படிந்தோ‡ரூயெரிக்கும்புலையனேனுமிமையோர்தம்
போதிற்பொலிந்ததருநீழற்புரப்பன்கோடிகுலத்தோடு
மோதிற்படியாதெவர்ஞானமுற்றுருவந்துபடிந்தெவரே
கோதிற்கிடந்தாரனுபூதிகூடிவீடுங்கூடிடுவார். (சு)

அண்ணலுருவாமத்தீர்த்தம்படிந்தமேலோரடிக்கமல
மண்ணுந்தீர்த்தமகிழ்ந்தாரும்வலியவினைகளவைவீட்டி
விண்ணுடணைவர்விதியாற்றிற்படிந்தார்மேன்மைவிரித்துரையா
லெண்ணற்கெளிதோவதன்பெருமையாவர்க்கேனுமியம்பரிதாம். (எ)

---

* இசையைப்போன்மலிந்த வாய்மையாகிய சரித்திரம் ஆராயுமிடத் தமுதமாமென்று. † வேதநதியின் நூற்றெட்டுத் திருநாமங்களை. ‡ நாயெரிக்கும் புலையன் சுபசன். சுபசன்-சுவானமாமிசத்தைப் பாகஞ்செய்பவன். பசனம்-பாகஞ்செய்தல்.

ஆய்ந்தமறையோர்கொலையாதியயுதமயுதமாற்றிடினுந்
தோய்ந்துபடியிற்றுகளாகுந்தொலையாவின்பநிலையாவார்
வீய்ந்துபிறந்துமெலிந்துழல்வாரறிதற்கரிதாம்விமலனருள்
வாய்ந்தமுனிதர்க்கெளிதாகுமற்றையவர்க்குமதிப்பரிதால். (அ)

பையாடரவம்பரிதிமதிபருகுநன்னாள், விதிபாத,
மையாரமை, பூரணை, கதிர்நாண், மருவுந்திங்கட்பிறப், பயனம்
பொய்யாவருத்தோதயமே, * மாவுதய, மற்றும்புகனன்னாண்
மெய்யார்வேதநதிப்படிந்தார்விமலராவர்வினையறவே. (கூ)

பலவுமுரைத்தென்பதுமத்தோன்பகுவாயனந்தன்முதலானோர்
நிலவுமூழியதன்பெருமைநிகழ்த்திநெடிதாய்முடியாதாற்
குலவுந்திருவும்பெருகொளியுங்குறையாவறிவுஞ்செறிஞான
நலமுமழியாதுயர்வீட்டினயமுமதனைநண்ணிடுமே. (கo)

வேறு.

† நாவணியும்புகழ்,நாமஞ்,சவுதாசன், கௌசிகன்,மேனகை, திலோத்த
மாவனிதை, திரிசங்கு, மறைப்பனவத்தன்மையறமகோபதேசம்,
பாவனையாக்கியவற்க, னுத்தாலன், பகர்நாசிகேது, பண்பார்
தாவருணன்புகழ், சூசுமாரன், மணிமாதன், மகாசமச்சன்றானே. (கக)

திருமா, லிந்திரன், பிரமகிருட்டி, யனைதருஞ்சாபஞ்சேடன்றீர்த்த,
லொருவாதவங்கியற, லிவைசருக்கத்துரைப்பனவாமொழிவிலாத
திருவாரும்வேதநதிச்சிறந்தடைந்தார்சிலரறியத்தெரிப்பேமீதிற்
பெருவாழ்வுற்றவர்முழுதும்பேசவெனின்முடியாதுபெருகுமன்றே. (கஉ)

* மாவுதயம்-மகோதயம்.† வேதநதியின் புகழ்,வேதநதியின் அட்டோ
த்தரசதநாமம், சவுதாசன்சரித்திரம், விசுவாமித்திரர் மேனகைசம்வாதசரி
த்திரம், திலோத்தமை சரித்திரம்,திரிசங்குசரித்திரம்,விசுவாமித்திரருக்குத்
தருமோபதேசஞ் செய்தசரித்திரம், யாக்கியவற்கியர் சரித்திரம், உத்தால
கநாசிகேது சரித்திரம், நாசிகேது நிரயவருணசரித்திரம், வருணன்சரித்தி
ரம், சூசுமாரன் சரித்திரம், மாணிமாதர் சரித்திரம், மாகாசமச்சியர் சரித்
திரம், திருமால்பெருமாறீர்த்த சரித்திரம், இந்திரன் பாவஞ்சிந்திய சரித்
திரம், பிரமாதிகிருட்டிச்சரித்திரம், சேடன்பாவவிமோசனசரித்திரம், அக்
கினிதீர்த்த விசேடமாகியஇத்துணையும் வேதநதியின்விசேடத்தையுணர்த்து
வனவாம். அவை அவ்வச்சருக்கப்பெயரால் உரைக்கப்படுமென்க. இவற்
றுள் வேதநதியின்புகழ், வேதநதியின் அட்டோத்தரசதநாமமாகிய இர
ண்டும் இவ்வேதநதிச்சருக்கத்துள் அடக்கிக் கூறப்படும், கௌசிகர்மேன
கைசம்வாதம் ஓர்சருக்கத்தாற்கூறப்படும், ஏனையதனித்தனி கூறப்படும். அ
ட்டோத்தரசதநாமம் எட்டைப்பின்னுடைய நூறுநாமம். எனவே, நூற்
றெட்டுநாமமென்றவாறாயிற்று. சம்வாதம் -எதிர்ப்பேச்சு.

வேறு.

வேதமனைத்துமதிற்றோன் றிவிளங்கலானுமதிற்படிந்தோர்
போதம்புரக்குநெறியானும்புனிதனகலாதுடன்மருவுங்
காதலானுமுத்திநெறிகாட்டலானுங்கலந்தாடி
னேதமகற்றும்வேதநதியெனப்பேருலகத்தெய்தியதே. (௧௩)

பின்னுமொருகாலத்துமறையனைத்துந்தன்பாற்பிழைதீர
முன்னியாடுமுறையானுமொழிவார்வேதநதியென்றே
மன்னியாடமீளநவவடிவமளிக்கும்வாய்மையினாற்
பன்னுநாமம்புனர்நவமாமென்னவுலகிற்பரம்பியதே. (௧௪)

ஒழியாப்பெரும்பாதகமகற்றுமுண்மையதனாற்*குருவெனுஞ்சொல்
வழியார்†பாவகரமெனும்பேர்வடிவாஞ்சுரூபம்வழங்குதலான்
மொழிவார்சுரூபதப்பெயருமுன்னிப்படியமுன்னுருப்போ
யழியாப்படிவம்பெறுதலினாலவ்வியாகிருதவபிதானம். (௧௫)

கண்ணிற்காணத்தொடவலகுகழிந்ததவத்தைக்காட்டுதலா
னெண்ணித்‡தவச்சொற்றலைமேவுசங்கிதப்பேரிதற்கென்ப
பண்ணிற்சிறந்தமொழியோரேம்பரனோர்பயனாற்பனிமுறுவ
னண்ணித்திகழ்ந்தவதனாலேயசிரமென்பபேர்நண்ணியதால். (௧௬)

மாயவினைகள்பாற்றுதலானீற்றினுமம்பரித்தோங்குந்
தீயவறுமைதீர்த்திடலாற்§சௌபாக்கியதத்திருநாம
+மேயுமிசைநூற்பரப்பிற்தேயெமக்குக்கீதமளிப்பதென
வாயுங்காலவஞ்சனையைவருத்துக்○காலசித்தாமே. (௧௭)

= மூலவிருடீர்த்தறிவருளுமுறையான்ஞானமளிப்பதென
ஞாலம்பரவும்வேதவனநாதனகலாதுறைதலினாற்
சாலுந்தேவபூடணமாஞ்சாற்றுநாமம்பலவிதற்கே
யேலவுளவாமதன்பெருமையீசற்கல்லதியம்பரிதே. (௧௮)

---

* குருவெனுஞ்சொல்-செகற்குருவெனுஞ்சொல். † பாவகரம்-பாவநாசனம். சுரூபதம்-நல்லரூபத்தைக்கொடுப்பது. அவ்வியாகிருதவபிதானப்பொருள் முன்னர்ப்பெறப்படும். அபிதானம்-பெயர். ‡ தவச்சொற்றலைமேவுசங்கிதம்-தவசங்கிதம். § சௌபாக்கியதம்-ஐசுவரியத்தைக்கொடுப்பது. + நாரதசங்கீதம். ○ காலசித்து-காலத்தைவென்றது; கடந்தது. = மூலவிருள்-ஆணவமலம்.

வேறு.

பண்ணவர்குழுவிற்கண்ணுதலெனவும்பருப்பதக்கணத்துயர்பசும்பொற்
றிண்வரையெனவுஞ்*சுடருடுக்கணத்திற்றினகரன்செழுமதியெனவும்
பெண்ணியலவரிற்பார்ப்பதியெனவும்பேசுமூவுலகுறுந்தீர்த்தத்
தெண்ணியவேதநதிமிகுமேன்மையேய்ந்திடுமிருமையுமீந்தே. (கசு)

வேறு.

முற்றுமுலகத்துறுதீர்த்தமுழுதுமுறையாயிரம்படியி
னுற்றபயனும்வேதநதியொருகாற்படிந்தபயத்தினனும்
பெற்றதாகாதருமறையிற்பேசுமகமாயிரமியற்றிப்
பற்றுபயனுமாயிரத்தினென்றுக்கொப்பாம்பண்பிலதே. (உ0)

சீவன்முத்தித்திறமீதிற்படிந்தாரெளிதேசேர்ந்தமல
மாவரிதற்குநேருலகத்துளதோவயிராவதப்பாகன்
றேவரிரங்கும்பிரமகத்தியாதிற்றீர்த்தான்சிவஞானத்
தோவில்பரமாமின்பவுருவுற்ருர்யாதினுரவோரே. (உக)

மறிமான்யாதிற்படிந்தமரர்மாதராகிவயங்கியதோர்
குறியார்சாபமேனகையுங்குமைத்தாள்யாதினிதிக்கோனும்
வெறியார்யாதிற்படிந்துதிசைவேந்தனுனெதிற்படிந்தே
நெறியார்வசிட்டன்சாபத்தினீங்கிவசுக்கணிலைபெற்ருர். (உஉ)

அன்னைசாபந்தனிற்சேடனகன்றுன்றுருவனரியபதந்
தன்னையடைந்தான்சவுதாசன்சாய்த்தான்வினையைத்தனிஞானம்
†பின்னைகேள்வனடைந்துய்ந்தான்பேசிற்பிறரும்பலருளராற்
புன்னைகமழும்வேதநதிப்படிந்தேபுனிதப்பொருளானர். (உங)

அயனும்யாதிற்படிந்துலகமளித்தானகிலத்திடையெவரே
பயனுரிதனிற்படியாதேபகவரானுரித்தகைய
நயனுர்வேதநதிப்பெருமைநம்பனல்லான்மற்றெவரே
வியனுவுரைப்பாரிதனுமம்விடியவோதின்வீடெளிதே. (உச)

சொல்லற்கரியமேன்மையுறுந்துகடீர்வேதநதியிலதே
லல்லற்பிறவித்துயரெதனுலகல்வாரதனிற்றினந்தோயிற்
புல்லற்கரியகிரிச்சிரமெட் ‡டொன்றிற்குறுவார்புகல்விதியான்
மெல்லப்படியிற்பரிமேதநூற்றின்பயனைமேவுவரால். (உரு)

---

* சுடர்க்கணத்திற்றினகரனெனவும், உடுக்கணத்திற் செழுமதி யெனவும் என நிரனிறைப்பொருள்கோள். † பின்னை-இலக்குமி. ‡ ஒன்றிற்குறுவார்- ஒரு ஸ்நானத்தாலடைவார்.

அருக்கன்வாரத்ததற்கிரட்டியாம்,பூரணையினைந்திரண்டாம்
பெருக்கும்பயனுந், * தினக்குறையினிருபான்பிறங்கு, மட்டமிநாட்
குருக்குமுப்பா,னுற்பஃதாங்குலவுமமையி,னைம்பானுந்
திருக்கிர்பயனும்வைதிருதிவிதிபாதங்கடெரித்திடினே. (உசு)

† செவ்வாயபரபக்கத்துச்சேரும்பதினன்கெனுநாளி
லவ்வாய்ப்படியினிருமுப்பா,னைம்பதிரட்டிமதிப்பிறப்பிற்,
றெவ்வாய்வினைக்குவருந் ‡ திங்கட்சேர்ந்தவுடுவினிருநூ,ளுன்
ளுவ்வாமுந்நூறெனுங்குணிதமுயர்ந்தயுகாதிக்கொளிர்வேலோய். (உஎ)

நூறுநான்காமனுவாதி, § செயந்திமுறையினைஞ்ஞூறும்,
பேறுவழங்குசிவநிசியினறுநூறுகும்,பிறங்கயனங்
கூறுமெழுநூ,றெண்ணூறும்விடுவங்,குறித்தமதிநாளிற்
றேறுமமையொன்பதுநூ,றுயிரமாமருக்கன்றினத்துறினே. (உஅ)

அரவுமதியம்பருகிடுநாளயுத,மிலக்கமருக்கனையேற்,
பரவுமருத்தோதயத்திலக்கம்பத்துக், கோடிமகோதயமேல்
விரவுமாகமகத்தனந்தமேவும்பயனு,மத்தினத்திற்
பரவும்வேதநதிப்படிந்தார்பரமனுவர்படிமிசையே. (உகூ)

மாகமகத்திற்றேவரொடுமாலுமயனுமற்றையரும்
வேகமிகுத்துவேதநதிவீழ்ந்துபடிவரந்நாளிற்
றுகமுறச்சென்றதிற்படியுந் o தக்கோர்முத்தித்தலமளித்தற்
கோகையுறத்துமபிடேகமுற்றுர்பரமனுருப்பெற்றுர்.

வானம்பரவும்வேதநதிமாகமகத்தின்மகிழ்ந்தாட
லூனம்பயிலுஞ் + சமுசாரவுழனோயாரோக்கியநான
மானமயராமிருட்குருப்பமருவுங்கதிராம்,வரும்பிறவிக்
கானங்கனற்றுந்தாவ, = முயர்கதியிற்கமழுங்கடிவிளக்கே. (ஙக)

---

* தினக்குறை-தினச்சித்திரமென்பது மேலுங்காட்டப்பட்டது. † செவ்வாயபரபக்கத்துச்சேரும்பதினன்கெனுநாள் - கிருட்டிணங்காரகசதுர்த்தசித்தினம். யுகாதி என்றது சதுர்யுகாதிகளையும். ‡ திங்கட்சேர்ந்தவுடு-மாதநக்ஷத்திரங்கள். அவைமேலே அந்தர்க்கிரகயாத்திரைச்சருக்கத்து இரண்டாஞ்செய்யுட்குறிப்புரையிற் காட்டப்பட்டன. § செயந்தி-கிருஷ்ண செயந்தி; கிருட்டிணனது பிறப்பு. செயந்தி-பிறப்பு. o தக்கோரே மோக்ஷராச்சியத்தைப்பாதுகாத்தற்கு அபிஷேகிக்கப்பட்டவர் என்பதாம். + சமுசாரமாகிய உழலுநோய்நீக்கத்துச்செய்யப்படும் ஆரோக்கிய ஸ்நானமாம். = உயர்கதியிற் கமழுங்கடிவிளக்கு - மோக்ஷமாகிய வீட்டு வாய்தலிற் பிரகாசிக்குஞ் சீரிய கற்பூரதீபமாம்.

வேதநதியிற்படிந்தார்க்கேமேலாமுலகம்வீட்டின்ப
மோதவுளவாமதிற்படியாருலவாப்பிறப்பினொழியாத
* வாதரவர்க்குக்கதியெவனுமமலமாகுமத்தீர்த்தம்
போதமளிக்குமுயர்சீவன்முத்தராகப்புணர்த்திடுமே. (௩௨)

ஏற்றந்திகழும்வேதநதியம்புநாமநூற்றெட்டுந்
தேற்றந்தரவுச்சரித்ததனாற்சூசுமாரன்சிவம்பெற்றா
னாற்றுமணிமாதனுமின்னுமனேகர்பெற்றாரியானுமருண்
மாற்றமதனாற்சிவஞானவாழ்வுற்றனன்மாவடிவேலோய். (௩௩)

என்னவுரைப்பமாந்தாதாவெழுந்துபோற்றியிலங்குமறை
முன்னமுணர்ந்தோய்வேதநதிமொழியுநாமநூற்றெட்டுஞ்
சொன்னமுறையும்பெறுஞானத்தொடர்வுமுரைத்தியெனப்போற்றம்
மன்னனுரைப்பநாரதனும்வாய்மையினிதுவகுத்துரைப்பான். (௩௪)

ஐந்துமடக்கிச்சிந்தைவெளியாக்கியமலத்தரியதவ
நந்தவியற்றுமெனக்கருளாளினப்பொருட்டினயந்துறையு
மெந்தையெதிர்வந்தனக்கருள்வதேதென்றிசைப்பவிரங்கினையேற்
பந்தமறுக்குமெய்ஞ்ஞானம்பணியென்றுரைப்பப்பரனருள்வான். (௩௫)

அரியமறையின்சிரப்பொருளையாய்ந்துஞ்சாந்திமுதலேய்ந்துந்
திரிவுகவற்சியகன்றமலஞ்சேர்வதரிதாந்திகழுமறை
புரியுமமலவேதநதிபுரிந்துநாமநூற்றெட்டுந்
தெரியுநவிற்றினுறுஞானஞ்சீவன்முத்தித்தெளிவெளிதே. (௩௬)

இனியநாமநூற்றெட்டுமிசைத்தேயானுமிருணீங்கிப்
புனிதனானேனெனவகலப்புணரியணவும்வேதநதி
யுனியானடைந்துபடிந்தமலமுற்றநாமநியமமதன்
பனியார்கூலமமர்ந்துரைக்கும்பணியானாளும்பகர்ந்தனனே. (௩௭)

திங்களிரண்டுநியமத்திற்செல்லத்திகழுமொருவாணி
யங்கணெழுந்துநீயியற்றுமறத்திற்றுதியாலகமகிழ்ந்தேம்
பங்கமகற்றும்பரஞானம்பணித்தேஞ்சீவன்முக்தியிதற்
கெங்கணுதன்றனைப்பரவியேத்திச்சமியினிட ய்ந்தே. (௩௮)

கணமங்குறையிற்சனற்குமரன்கலந்துன்கருத்திற்கதிர்ஞானக்
குணமொன்றிடுமாறருளுமெனக்கூறிமறையக்கோதிலருண்
மணமென்றிலகும்வாய்மையினைமகிழ்ந்துவேதநதியாடி
யிணர்கொண்டிறைஞ்சித்திருநாமமேத்தியிறைவன்றனைப்போற்றி. (௩௯)

---

* ஆதர்-அறிவிலார்.

வண்டார்சமியினிழன்மேவிமதியக்குழவிவளர்சடைமேற்
கொண்டான்போலவருட்குறியாற்குலவியமுதக்குளிர்தூவித்
* தண்டாமரையிற்சனற்குமரன்றனைக்கண்டவன்றுடலைமீது
கண்டான்குளிரவணிந்துடலங்கம்பித்துளமுங்களிகூர்ந்தே. (௪௰)

போற்றிப்பணிந்தேபலவங்கம்புணருமறையும்பலகலையு
மாற்றிற்றெளிந்துந்தவம்புரிந்துமவலப்பிறப்பையளிக்குமிருட்
சேற்றிற்புரள்வதன்றியவஞ்சிதைக்குஞானந்தெருண்டுமறை
யீற்றிற்பிரமம்புணருமுறையிழந்தேனருளென்றிறைஞ்சுதலும். (௪௧)

சோதிஞானவருணேக்காற்றுகளார்மாயவிருட்படல
மோதியமலவானந்தமுதலாயுடலமுழுதுலகு
மாதியவத்தைக்கதிட்டானமாகிவிளக்கியதன்சரியாய்
நீதியறிவோனறிவிலகுஞேயங்கடந்துநிறைவாயே. (௪௨)

காண்போன்காணப்படுபொருளுங்கருத்துமிலக்கிக்கலந்திவற்றிற்
பூண்போனன்றியிருண்மாயப்பொக்கமகற்றிப்பூரணமாய்
மாண்போயமலவான்ந்தவடிவாயிரண்டற்றுறைதியெனப்
பாண்போன்மொழியும்பகர்ந்தின்பப்பரவையழுத்திப்பரிந்தனனே. (௪௩)

முழங்கும்புனிதவேதநதிமொழியும்பெயரான்மூழ்குதலால்
வழங்குஞானந்திரிபின்றிவாய்ந்துமுத்திவழிகண்டே
பழங்கணகன்றேனெனவுரைப்பப்பணிந்தேயரசன்படர்மாயக்
கிழங்கிர்நாமமேதுவொடுங்கிளப்பாயென்னக்கெழீஇமொழிவான். (௪௪)

† இழிந்தார்பகருந்தோடமறவிழைத்தேதூய்மையியற்றிடலான்
மொழிந்தார்வேததீர்த்தமென, முத்திதருஞ்சத்தியநதியாம்
வழிந்தேய்ந்திந்தவரைமீதே, மடிந்தகோலாகலன்பாவங்
கழிந்தேபாவநாசனமாம், பிரமமியாண்டுங்கழறுதலால். (௪௫)

நனையுமதிதிபுத்திரத, மயித்திரேயிநவில்கார்க்கி
நினைவவளித்துக்காமதமா, நெடுவேலைவர்க்குலகளித்து
வனையுமிராச்சியதநாமம், வழங்கிருபமுதாரமது
தனமேனைக்குங்கௌசிகற்குமுருபௌதாரியதமமே. (௪௬)

மறைக்குப்பரமன்வரமீந்துவழங்கும்வேதநதி, யன்பா
லுறைக்குஞ்சுவேதகேதுவினுக்குயர்வீடளித்துமுத்திதமா,
நிறைக்கும்விபுவாம்பூரணத்தைநிகழ்த்தி, யாரோக்கியங்கிர்த்தி
சிறக்கவுதவியப்பெயர்த்தாந், தாபகாரிதிலோத்தமைக்கே. (௪௭)

---

* தண்டாமரையிற்சனற்குமரன்றனை - பதுமாசனத்தில் வீற்றிருக்கும் சனற்குமாரமுனிவரை. † இழிந்தார் பாசண்டர்; அவர் வேதத்திற் கருகரல்லாதவர். இந்தவரை - இச்சத்தியகிரி. பாவம் மாதிருகமனபாவம். கழித்தெனற்பாலது கழிந்தென மெலிந்து நின்றது.

மார்க்கண்டேயனந்தியிவர்வரம்பிலாயுட்பெறுகையினு
லேற்குமாயுட்காம், பிரபுவெனும்பேர்பிரபுத்துவமளித்தே
நோற்குமவர்க்குச், சேட்டமெனநுவல்வருலகத்துறுந்தீர்த்தப்
பாற்குக்கழியாவினையகற்றிச், சிரேட்டமுயரும் * பதமளித்தே. (சஅ)

வேறு.

துருவனற்பரத்திரீஇப்பரம்பாரமாந், தோய்ந்தார்
பெருவிகற்பறவுலகுo சன்மாத்திரம்பெறலான்
மருவுஞ்சத்துவம், படிந்தவர்சுத்தராய்வயங்குந்
† திருவளித்தலாற்சுத்தமென்றிப்பெயர்திகழும். (சகூ)

அதிமகத்துவஞ்சனற்குமாரற்களித்ததனுற்
றுதிமகத்தெனச்சொற்பெறுந், துணையில்சேர்ப்பூர்த்தி
மதியளித்தலாற்குகை, மனவாக்ககன்மகிமைக்
கதிதரித்ததவ்வியத்தமாங்காரணங்கலந்தே. (ருo)

தோயினுற்பவமுதலியதுறுமலாற் ‡ பகுதி,
மேயசுக்கிலஞ்சுத்தசத்துவத்தினைவிளக்கிப்,
பாயதிக்கெலாம்படிந்தவருருவவெற்பகலா
யேய்நல்கலால்விராட்டெனுந்திருப்பெயரெய்தும். (ருக)

தாரமாம்பவங்கடத்தலாற், சமாதிதமிராக
மீரலாற்,சௌக்கியதம்யாக்கியற்குரனீந்தே,
யோரினித்தியமின்பறிவானந்தவுருவஞ்
சாரநல்கலாற்சச்சிதானந்தமாந் § தனியே. (ருஉ)

பேதமற்றுமுக்காலமுஞ்சாசுவதம், பெருவான்
மீதமர்த்தலாற்சுவர்க்கதம், வேதநாயகன்பாற்
காதலுய்த்தலாற்பத்தித, o மகாசமச்சியனுக்
கீதளித்தலான்மந்திரசித்திதமினிதே. (ருங)

ஓல்கறீருணர்வுதவிவைகுண்டத, மயனூர்
நல்கலாலிதுசத்தியலோகதநாமம்
புல்லு, மாடினருளத்தருட்சோதியைப்புணர்த்தே
‡ யெல்லையீர்சுயஞ்சோதியென்றிதன்பெயரிலங்கும். (ருச)

---

* பதம்-பக்குவம். † சத்மாத்திரம் சன்மாத்திரம். சத்து என்றது, ஈசுரனை. திரு - ஞானம். ‡ பிரகிருதி தமிழிற் பகுதி யென்ருயிற்று. § ஈண்டுத் தனி என்றது சமானுதிகரகிதமாகிய வேதநதியை. o மாகாசமச்சியன் எனற்பாலது முதலிற் குறுகிற்று. ‡ எல்-இருள்.

ஏகமாமுணர்வளித்தலான்மேதைத, மிலங்கும்
போகமாப்பெறவளித்தலாற்றிருவென்பர், பொலிமான்
பாகனூர் தரலாற்சிவலோகதம், பதும
ஞகமீந்திடிஃதிரணியகருப்பதமாமே. (௫௫)

வறுமைநீக்கலாற்றரித்திரகரமெனவாயுஞ்,
செறுமகந்தையையொழித்தொருதெளிவுறச்சேர்த்திப்
பெறுவதவ்வியாகிருதமென்பெயரினைப், பழிச்ச
வுறுதல்காண்டலாற்*துரிதமீர்ந்தரியெனவோங்கும். (௫௬)

துன்பநோயொடுதுடைத்துருத்திரனென்பர், தொகுத்தே
யின்பமார்தருவியாபகம்விட்டுணுவென்பர்,
வன்பதாம்பிறப்பிறப்பவமாற்றலினரனு
மென்ப, ரஞ்சமென்றிலங்குமாலுலகிலக்கிடலால். (௫௭)

பாயகங்கையேமுதலியநதியுறும்பாவந்
தீயநல்கியங்கவற்றினுக்குயிரெனச்சிறந்தே
யாயசூத்திரான்மாவென்ப, சிவத்துவ † மநிசந்
தோயநல்கலாற்சதாசிவமெனப்பெயர்துன்னும். (௫௮)

புவனிமேற்பொலியுயிர்த்தொகைமுத்தியிற்பொருந்தப்
பவமகற்றிவைசுவாநரப்பெயர், படிந்துயிரு
ளவமியற்றுமஞ்ஞானமீர்ந்தந்தரியாமி,
தவமிகுந்திருநல்கியீச்சுரப்பெயர்சாரும். (௫௯)

மாணிமாதனுக்கிதனிடைப்பரசிவன்வயங்கிப்
பேணிவாய்ந்ததுதேவபூடணமெனும்பெயரே,
பாணியாதுறுஞ்சனகனுக்கின்பமேபயிற்றிக்
‡ காணிமேயதுசங்கரமெனும்பெயர்கலந்தே. (௬௦)

தோற்றமார்தொழிற்சுயம்புவேதுணியவாற்றுதலா
லேற்றசுப்பிரகாசமாம், பரசிவற்கிமையோர்க்
காற்றலார்நிலையளித்தலாற்றேவராவாச
மாற்றமேயது, சிவாலயஞ்சிவனுமைவாழ்ந்தே. (௬௧)

உழைநடுக்கினீருற்றரமகளுருவாகித்
தழையநல்கலாற்றிரியக்குமுத்திதந்தானும்,
விழையுமேனகைகௌசிகன்சாபவெந்துயரக்
குழைவுதீர்த்திதுவாந்துக்கரமெனுங்குறியே. (௬௨)

---

* துரிதம்-பாவம். † அநிசம்-சதாகாலம். ‡ காணி-உரிமை.

குட்டநோயறவிட்டனுக்குதவலாற்குநியுந்
தொட்டமர்ந்தரோகாபகஞ், சொற்றதாய்சாபம்
விட்டனந்தனுதியர்சுபமேவலாற்சுபதந்,
* தட்டவாறெரீஇத்திலோத்தமைசாபமோசனமாம். (௬௩)

அளவிறிவினைகளற்றலினங்கியாம், பிறவிக்
களையகற்றலிற்சன்மகந், கடனெனுமூன்று
முளமலிந்தகான்முளைமகமாதியையொழித்தே
தளைவிடுத்தலாலிரணமோசனப்பெயர்சாரும். (௬௪)

ஞானமின்றியேபிராசீனயோக்கியனவையா
யீனமாம்பிறப்பிரித்துமேல்வீட்டினையியைத்தற்
கானதாற்கருப்பாசயகரமென்ப, ரழியா
வூனமீர்தலிற்றீர்த்தாதிராசனுமுதுவே. (௬௫)

பாசவல்லிவேர்பறித்தலாற்பாசக, மிருளீர்ந்
தாசில்சத்துவமளித்தலால்விரசற்கமாகு,
மூசலாமுயிர்ச்சோகத்தையொழித்தலால்விசோகந்,
தேசினுர்மறையளித்தலாற்றிருமறையுருவாம். (௬௬)

ஆரணப்பொருளாக்கலாற்பரான்மக, மமரோங்
காரமாம்பிரணவப்பயன்காட்டலா, னமிர்தம்
பூரணத்தொடுசீவன்முத்திப்பயன்புணர்த்தி,
வாரமுற்றறம்வளர்த்தலாற்றருமவர்த்தனமே. (௬௭)

பரவையோடுறலால்வருணலயம், பயில்பாற்
கரமதாந்தனிச்†சிற்புரணத்தினைக்காட்டி,
யிரணியஞ்சாலிகோத்திரற்கிதலாற்றனதம்,
விரவுபல்வினைவீட்டலாற்கருமநாசகமே. (௬௮)

சீவன்முத்திதம்வருணனுக்கஃதருள்சிறப்பா,
லாவலானிதியளகையாற்களித்தலானிதிதந்,
தேவிவைகலாற்சருவமங்களப்பெயர்சேரு,
மேவுபந்தத்தைவீழ்த்தலால்விக்கினகாரி. (௬௯)

வேறு.

பொன்னிவினைமாற்றுதலாற்கலிதோடகரமாகும், புகர்தீர்வித்தை
தன்னையளித்தேசாரசுவதமாம், வியாதன்முதற்றலைவர்க்கெல்லா
மங்கிலையிற்றிரியாதஞானமளித்தச்சுதமா,மதனுக்கொப்பொன்
றின்மையினலத்துவிதம், வசுச்சாபவெரியீர்ந்துசமனமீதாம். (௭௦)

---

* தட்டல் (தேவத்தன்மையைத்) தடுத்தல்; ஈண்டுச் செயப்பாட்டு வினைப்பெயர். மறையுரு - வேதமூர்த்தம். † சித் - ஞானம். புரணம் - பிரகாசம்; ஞானப்பிரகாசத்தை உதிப்பித்து.

பாவதாவாக்கினியாமிந்திரற்குப்பிரமகத்திபாற்றலாலே,
* யோவநீள்பிறவிவினையுதவுதலான்மருந்தாகு,மொழித்தஞ்ஞானஞ்
சாவலாய்மலாபசமா, மறைத்தெளிவுகேகயற்குக்காட்டலாலே
தேவபூடணமதுதான்வேதாந்தவேத்தியமாய்ச்சிறந்ததன்றே.　(எக)

சொற்றகௌசிகன்சரையைத்துடைத்தலினுற்சாபகமாஞ், சூசுமாரன்
பற்றுகளியளித்தலிற்சாயுச்சியமேபதவியொடுபட்டதாகும்,
வெற்றியுறுதாரகனேமுதலசுரர்கிளைகுமரன்வீழ்ப்பநல்கிப்
பெற்றபிரபஞ்சனமாஞ்,சகற்குருவாமரிஞானம்பெறுதலாலே.　(எஉ)

பார்த்தனிதிற்படிந்தமரர்ப்பயமுறுத்துநிவாதகவசாதிபாவங்
கூர்த்தகிளையரிதலினுன் மகாபீதிகர,மூழிதனினுங்குன்ற
நீர்த்தலினுலவ்வியய,மவித்தியாசத்துருவாந்தெளிவேநல்கி,
யார்த்தலினுற், றேவாதிபூசிதமாமமரரதினரிச்சைசெய்தே.　(எஙூ)

தரும்பிரமசாபகரஞ்சவுதாசனிருதவுருத்தணத்தலாலே,
வரும்பணிமாவலிக்கிமையோர்வானளகை†புலத்தியன்றன்மகனுக்கீந்தே
விரும்பியவிந்திரனுதிவிபூதிதமா, நந்திவிநாயகனுக்கெட்டெட்
டரும்புகலையளிக்கையினுற்கலாநிதியாம்,வசிட்டன்முதலாயமேலோர்.　()

வேறு.

புகழ்தலினுலதற்குமுனிதுத்தியஞ், சாரூப்பியத்தைப்பொருந்தியின்பஈற்
றிகழ்தலினுன்முசுகுந்தன்றீர்த்தஞ்சாரூப்பியதாயக, மஞ்ஞான
மகழ்தலினுலஞ்ஞானமோசனமாஞ்,சுகர்வாமதேவராதி
யிகமுமலமிரித்தான்மஞானமகோதயமாகுமின்பமீந்தே.　(எ௫)

எச்சமறுயாக்கியவற்கன்சனகனுதிசுகனேனையோரும்
விச்சையொடுசீவன்முத்திநிலைமேவியானந்தவேலையாகி
யச்சமகன்றமர்தலினுலவ்வப்பேர்மிடிபாவமாதியீர்ந்தே
கச்சமில்காரணநாமங்கவினீந்துந்தேவர்கணங்கலந்துமாதோ.　(எசு)

பெரியபயன்றருநாமமூற்றெட்டும்பயனுணர்ந்துபேசுமேலோர்க்
கரியனவொன்றிலையாக்கம்புகழாயுக்கவின்றேற்றமருள்சீர்ஞானந்
தெரியவருசீவன்முத்தித்தெளிவுகதிதிருப்பலவுஞ்சேர்ந்துவேதம்
பரியுமறைவனநாதன்பங்கயத்தாளிணையின்பப்பரவைசேர்வார்.　(எஎ)

---

* நீள்பிறவிவினையோவவுதவுதலான் எனக்கொண்டு கூட்டுக. பிறவி வினை- பிறவியும்,வினையுமென உம்மைத் தொகை. † ஈண்டுப்புலத்தியனென்றது பௌலத்தியனுகிய விச்சிரவாகுவை; புலத்தியசம்பந்தமுள்ளவன் பௌலத்தியன். இச்சம்பந்தப்பொருள்பற்றி இராவணனையும் பௌலத்தியனெனக்கூறுப.

வேறு.

குசுமாரன்றுதித்துக்கதிமாணிமாத்னெனத்துன்னிவாழ்ந்தா
னுசுதீர்த்தியாக்கியவற்கன்முதலோரினவிற்றியமலமானூர்
பேசின்மூவுலகினிடைப்பெறற்கரியபேருகும்பிறங்கும்வேத
மாசிலாமணியருளின்வடிவாகுமிந்நாமம்வயங்கும்வேலோய். (எஅ)

வேறு.

அறவோனுரையாரமுதாமெனவே
பிறவாநெறிபீடொடுபேணியதா
னறவார்தருநாரதனுண்மலரோ
டுறவாகியபாதமொராய்மனனே. (எகூ)

வேதநதிச்சருக்க முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் க,அஅரு.

---

வேதநதியின் அட்டோத்தரசத நாமமும்,

அர்த்தமும் வருமாறு:—

க. வேததீர்த்தம்:—வேதங்களுக்குச் சுத்தத்தைக் கொடுத்தது. தீர்த்தம்-சுத்தம்.

உ. சத்தியநதி:—சத்தியகிரியிலிருந்து உற்பத்தியானது. சத்தியகிரி-வேதாரணியம்.

ங. பாவநாசம்:—கோலாகனது மாதிருகமன பாவத்தை நாசஞ்செய்தது. நாசமெனினும், நாசனமெனினுமொக்கும்.

ச. பிரமம்:—சர்வலோகங்களினும் சதாகாலமும் சொல்லப்படுவது. பிரமம்-சொல்லப்படுதல்.

ரு. புத்திரதம்:—அதிதிக்குப் புத்திரர்களைக் கொடுத்தது. தம்-கொடுத்தல்.

சு. காமதம்:—மயித்திரேயி, கார்க்கி, என்னும் இருபெண்களுக்கும் அவர் விரும்பியவைகளைக் கொடுத்தது. காமம்-விருப்பம்.

எ. இராச்சியதம்:—பாண்டவர்களுக்கு இராச்சியத்தைக் கொடுத்தது.

அ. உரூபௌதாரியதம்:—மேனகைக்கு உரூபத்தையும்; விசுவாமித்திரருக்கு ஔதாரியத்தையும் கொடுத்தது. ஔதாரியம்-கொடை.

கூ. வேதநதி:—வேதங்கள் தம்பெயரால் இத்தீர்த்தம்வழங்கப்படுக எனச் சிவபெருமானை வேண்டிக்கொண்டபிரகாரம், அப்பெருமானால் வேதநதியெனப் பெயர்கொடுக்கப்பட்டது.

௧0. முத்திதம்:—சுவேதகேதுவுக்கு முத்தியைக் கொடுத்தது.

௧௧. விபு:—பிரமம் எங்கும் வியாபகம் என்னு முணர்வை,ஸ்நானஞ்செய்த சர்வமனிதரும் விளங்கிக்கொள்ளும்படி செய்தது.

௧௨. கீர்த்தியாரோக்கியப்பிரதம்:—கீர்த்தியையும், ஆரோக்கியத்தையும், மிகவும் கொடுத்தது.

௧௩. தாபகாரி:—திலோத்தமைக்குச் சாபமுதலிய தாபங்களை அரித்தது. தாபம்-துக்கம்.

௧௪. ஆயுட்கரம்:—மார்க்கண்டேயர், நந்திதேவராகிய இருவருக்கும் பூரணாயுளைச் செய்தது.

௧௫. பிரபு:—சனற்குமாரமுனிவருக்கும், யோகிகளுக்கும், பிரபுத்துவத்தைக் கொடுத்தது. பிரபுத்துவம்-நாயகத்தன்மை.

௧௬. சேட்டம்:—திரிலோகதீர்த்தங்களும் நிவிர்த்தி செய்யக்கூடாதபாவங்களை நிவிர்த்திசெய்த முதன்மையையுடையது. சேட்டம்-முதன்மை.

௧௭. சிரேட்டம்:—சண்டாளத்துவமடைந்த திரிசங்கு ஓர் ஸ்நானத்தாலே திரிலோக சிரேட்டத்துவத்தை அடையுமாறு செய்தது.

௧௮. பரம்பாரம்:—துருவனுக்கு அதியுன்னத பதத்தைக் கொடுத்தது.

௧௯. சத்துவம்:—உலகம் பிரமத்தையன்றி வேறில்லையெனச் சுவேதகேதுவுக்கு உண்மை யுணர்த்தினது. சத்துவம்-உண்மைத்தன்மை.

௨0. சுத்தம்:—சனகாதியோகிகளுக்குச் சுத்தசைதன்னிய ரூபமாகிய சிவஞானத்தைக் கொடுத்தது.

௨௧. மகத்து:—சனகமுனிவருக்கு மகாயோகிராசத்தன்மையை உற்பத்தி செய்தது. யோகிராசத்தன்மை-யோகிகளுக்கு இராசாவாந் தன்மை.

௨௨. குகை:—இருதயத்திலே ஞானம்பிரகாசிக்கச் செய்வது. குகை-இருதயம்.

௨௩. அவ்வியத்தம்:—தன்மகிமையின் அற்பந்தானும் மனவாக்குக்களுக்கு வெளிப்படாதது.

௨௪. பிரகிருதி:—ஸ்நானம் செய்தவர், சிருட்டிமுதலிய முத்தொழிலும் செய்தற்குப் பிரகிருதிபோலக் காரணமாயுள்ளது. பிரகிருதி-பிரபஞ்சமூலமாயை.

௨௫. சுக்கிலம்:—ஸ்நானம் செய்தவர்க்குச் சுத்த சத்துவகுணசுபாவத்தை விளக்குவது. சுக்கிலம்-வெண்மை. சுபாவம்-தன்மை.

௨௬. விராட்டு:—ஸ்நானம் செய்தவர், சகத்தை ஆன்மரூபமென மதிக்கும் புத்தியோடு மிகவும் பிரகாசிக்கச் செய்தது. இனித்தன்னிடத்து ஸ்நானஞ் செய்தவரது சரீரகாந்தி பரந்த திக்குக்களினெல்லாம் சூரியனை

ப்போலப் பிரகாசிக்கும்படி செய்வது விராட்டு எனச் செய்யுட் பதப் பிரயோகத்துக்கேற்ப விரித்துரைத்துக்கொள்க.

உஎ. தாரம்:—சனனசாகரக் கரையேற்றுவது. தாரம்-கரையேற்றுதல்.

உஅ. சமாதிதம்:—சமம் முதலியவைகளைக் கொடுத்தது. சமம் முதலிய வாவன-சமம், தமம் என்பன. சமம்-மன வடக்கம்- தமம். பொறிய டக்கம்.

உகூ. சௌக்கியதம்:—யாக்கியவற்கியமுனிவருக்குப் பிரமஞானத்தைக் கொடுத்தது.

௩0. சச்சிதானந்தம்:—சத்துச் சித் தானந்த ரூபமாயிருப்பது. சத்து-நித்தி யத்தன்மை யுள்ளது. சித்து-ஞானரூபத்தன்மையாயிருப்பது. ஆனந்த ம்-சகல இன்பங்களுக்கும் ஆதாரமாந் தன்மையுடையது.

௩க. சாசுவதம்:—திரிகாலத்தினும் திரிபில்லது. சாசுவதம்-நித்தியம். நித்தி யப்பிரமசொரூபத்தைக்கொடுப்பதுசாசுவதமெனக்கோடலுமொன்று.

௩உ. சுவர்க்கதம்:—சுவர்க்கத்தைக் கொடுப்பது.

௩௩. பத்திதம்:—அகத்தியமுனிவருக்குச் சிவபத்தியைக் கொடுத்தது.

௩ச. மந்திரசித்திதம்:—மாகாசமச்சியமுனிவருக்கு,மந்திரசித்தியைக் கொ டுத்தது.

௩ரு. வைகுண்டதம்:—கூர்த்தஞானத்தைக் கொடுத்தது. குண்டம்-மழுக் கம். விகுண்டம்-மழுக்கமின்மை. விகுண்டசம்பந்தம்-வைகுண்டம்.

௩சு. சத்தியலோகதம்:—சத்தியலோகத்தைக் கொடுத்தது.

௩எ. சுயஞ்சோதி:—தானேபிரகாசிப்பது. ஸ்நானஞ்செய்தவர் மனத்தில் அருளாகியசோதியைப் புணரச்செய்து, அஞ்ஞானாந்தகாரத்தைப் போக்குதலினாலே சுயஞ்சோதி எனச் செய்யுட் பிரயோகத்துக்கேற்ப விரித்துரைத்துக்கொள்க.

௩அ. மேதைதம்:—சனந்தனமுனிவருக்கு அத்துவிதவுணர்வைக் கொடுத்

௩கூ. தது. திரு:—சகல ஐசுவரியங்களுக்கும் அதிதெய்வமாந்தன்மையைத் திருமகளுக்குக் கொடுத்தது.

ச0. சிவலோகதம்:— சிவலோகத்தைக் கொடுத்தது.

சக. இரணியகர்ப்பதம்:—பிரமாவின்வடிவைச் சோரன் என்பவனுக்குக் கொடுத்தது.

சஉ. தரித்திரகரம்:—வறுமையைப் போக்குவது. கரம்-போக்குதல்.

சங. அவ்வியாகிருதம்:—சரீரம்,வாக்குச்,சித்தம், அகந்தையாகிய விகாரங்களை நீக்கித் தெளிவைக் கொடுப்பது. வியாகிருதம்-விகாரம். அவ்வியாகிருதம்-நிர்விகாரம்.

சச. அரி:—தன்னைத்துதித்தல், பரிசித்தல், தரிசித்தல்களாலே பாவத்தை அரிவது.

சரு. உருத்திரன்:—உருத்திரன்போல உரோக,துக்கங்களைத் தீர்த்தது.

சசு. விட்டுணு:—பிரமம் எங்கும் வியாபகமென்பதை யுணரும் ஆன்மஞானத்தைக் கொடுத்தது.

சஎ. அரன்:—அரன்போலச் சனனமரணங்களை அரித்தது.

சஅ. அஞ்சம்:—சகத்தைவிளக்குவது; அன்னம்போல நிர்மலமாயிருப்பது; அம்மிசமந்திரப்பொருளைக் கொடுத்தது.

சகூ. சூத்திரான்மா:—கங்கைமுதலிய நதிகளாகியமணிகளுக்கு நூலாகிச், சீவான்மாக்களுக்குப்பரமான்மாவாய்ப் பாவங்களைநாசஞ்செய்தது. சூத்திரம்-நூல். நூலென்றது, ஈண்டுச் சீவான்மாவை.

ருO. சதாசிவம்:—எப்போதுஞ் சிவத்தைக் கொடுப்பது. சதா-எப்போதும்

ருக. வைசுவாநரம்:—விசுவத்திலுள்ளநரருக்குத் தடையின்றி முத்தியைக் கொடுப்பது.

ருஉ. அந்தரியாமி:—உயிருக்குள் வியாபித்துஅஞ்ஞானத்தைப்போக்குவது.

ருங. ஈச்சுரம்:—தக்கனுக்குச் சிருட்டித்தொழிலையும், சகதீசுவரத்தன்மையையும், கொடுத்தது.

ருச. தேவபூடணம்:—இதன்பொருள் மேலே தீர்த்தமுறைமைச்சருக்கத்து அறுபத்துமூன்றுஞ்செய்யுட் குறிப்புரையிற் கூறப்பட்டது.

ருரு. சங்கரம்:—சனகமகாராசாவுக்குச் சீவன்முத்திச்சுகத்தையும், விஷயானந்தசுகத்தையுங் கொடுத்தது.

ருசு. சுவப்பிரகாசம்:—ஸ்நானஞ்செய்தவுடன் சுவாயம்புமனுவுக்குச் சகசிருட்டித்தொழிற்சத்தி தானேபிரகாசிக்கும்படி செய்தது. ஒருவர் போதியாதிருக்கவே,ஸ்நானத்தால் உளதாயிற்றென்பதுகருத்து.

ருஎ. தேவராவாசம்:—பரசிவனுக்கும்,தேவருக்கும், வாசஸ்தானமாயிருப்பது. ஆவாசம்-உறைவிடம்.

ருஅ. சிவாலயம்:—சிவனும்,உமையும், வாழும் ஆலயமாயுள்ளது.

ருகூ. திரியக்குமுத்திதம்:—பூர்வத்தில் ஓர்மான் வேடனது பாணத்தால் ஊறுபடுத்தப்பட்டுத் தன்மாட்டுவந்துவிழ, அதற்கு அவ்விலங்குவடிவத்தை நீக்கித் தேவரம்பையாகிய மேனகைவடிவத்தைக் கொடுத்தது. திரியக்கு-விலங்கு. முத்தி-நீக்கம்.

கூ0. துக்கஹரம்:—விசுவாமித்திரரும், மேனகையும், ஒருவருக்கொருவர் இட்ட சாபதுக்கத்தை அரித்தது.

கூக. உரோகாபகம்:—வசிட்டமுனிவருக்குக் குட்டரோகயைப் போக்கினது.

கூஉ. சுபதம்:—அனந்தன்முதலியசர்ப்பங்களுக்கு மாதிருசாபத்தை நீக்கிச் சுபத்தைக் கொடுத்தது.

கூங. சாபமோசனம்:—திலோத்தமைக்குச் சாபநீக்கஞ் செய்தது.

கூச. அக்கினி:—எல்லாப்பாவங்களையுந் தகிப்பது.

கூரு. சன்மகம்: சன்மத்தைப்போக்குவது. கம்-போக்குதல்.மறுசன்மமில்லாமற் போக்குவதென்பதாம்.

கூகூ. இரணமோசனம்:—கடனை நிவிர்த்தி செய்வது. இரணம்-கடன். அது-தேவர்கடன், பிதிர்கடன், முனிவர்கடன், எனமூவகைப்படும்.

கூஎ. கருப்பாவாசஹரம்:—கருப்பத்தில் வசித்தலை அரிப்பது.கருப்பாவாசஹர மெனினும், கருப்பாசயஹரமெனினுமொக்கும். ஆவாசம்,ஆசயம் என்பனவசித்தற்பொருள்.

கூஅ. தீர்த்தாதிராசன்:—ஏனைத்தீர்த்தங்களான் நிவிர்த்திசெய்யக்கூடாத பாவங்களை நிவிர்த்தி செய்தலாலே தீர்த்தங்களுக்கெல்லாம் மிகநாயகமாயிருப்பது.

கூகூ. பாசஹரம்:—கன்மபாசங்களை அரிப்பது. பாசஹரமெனினும், பாசகமெனினுமொக்கும்.

எ0. விரசற்கம்:—விசேஷபாவத்தைப் போக்கிச் சாத்துவிதஞானத்தைக் கொடுப்பது.

எக. விசோகம்:—தற்சொரூபமறியாத சோகத்தை நீக்குவது. தற்சொரூபம்-ஆன்மரூபம்.

எஉ. வேதமூர்த்தம்:—வேதத்திற் கூறப்பட்ட பலத்தைக்கொடுத்து, வேத வடிவாயிருப்பது.

எங. பரான்மகம்:—வேதத்திற்கூறப்பட்ட பலத்தைக்கொடுத்துப், பரமான்மாவை அறிவிப்பது.

எச. ஓங்காரம்:—பிரணவப்பொருளை உணர்த்துவது.

எரு. அமிர்தம்:—ஆன்மாவைச் சீவன்முத்தியாகியபயனிற் புணர்த்துவது. அமிர்தம்-மோக்ஷம்.

எகூ. புண்ணியவர்த்தனம்:—திரிசங்குவுக்கு அழிவின்றிச் சுவர்க்கத்தில்வசிக்கும் புண்ணியத்தை விருத்தி செய்தது.

எஎ. வருணாலயம்:—சமுத்திரத்துடன்சேர்ந்து சமுத்திரமாயிருப்பது.

எஅ. பாஸ்கரம்:—பிருகுமுனிவருக்கு ஞானம் பிரகாசிக்கச் செய்தது.

எகூ. தனதம்:—சாலிகோத்திரமுனிவருக்குத் திரவியத்தைக் கொடுத்தது.

அ0. கருமநாசம்:—ஞானத்தைக்கொடுத்துக் கன்மத்தை நாசஞ்செய்வது. இந்நாமம் கர்மஹந்திரு என முதனூலிற்கூறப்பட்டது. ஹந்திரு-நாசம்பண்ணுவது.

அக. சீவன்முத்திதம்:—வருணனுக்குச் சீவன்முத்தியைக் கொடுத்தது.

அஉ. நிதிதம்:—குபேரனுக்குச் சங்கநிதிபதுமநிதிகளைக் கொடுத்தது. இந்நாமம் முதனூலிற் சௌபாக்கியதாயி எனக் கூறப்பட்டது; நிதியைக் கொடுத்தது என்பது பொருள்.

அரு. சர்வமங்களம்:—சர்வமங்கலையாகிய உமை வீற்றிருக்கப்பட்டது.

அச. விக்கினஹாரி:—முத்திக்குப் பிரதிபந்தமாகிய விக்கினங்களை அரிப்பது. பிரதிபந்தம்-தடை.

அரு. கலிதோஷஹரம்:—கலியுகத்திலே தினந்தோறும் காவேரிநதிக்கு உண்டாகும் பாவத்தை அரிப்பது. கவேரனுடையமகள் காவேரி. இக்காவேரியே தனது அம்சத்தினுற் பெண்வடிவாகி, அகத்தியமுனிவர்பத்தினியாகிய லோபாமுத்திரையுமாயிற்று. காவேரி-நீர்வடிவு. விட்டுணுவின்மாயையே காவேரியாகவும், லோபாமுத்திரையாகவும், கவேரமகாராஜாவினுடையதவத்தால் உற்பத்தியாயிற்றெனத் துலாகாவேரிபுராணத்துக்கூறப்பட்டது.

அசா. சாரசுவதம்:—வியாசமுனிவர்முதலிய இருடிகளுக்குச் சர்வவித்தைகளையும் கொடுத்தது. சரஸ்வதிசம்பந்தமுள்ளது-சாரசுவதமென்க.

அஎ. அச்சுதம்:—வியாசமுனிவர்முதலிய இருடிகளுக்கு அழிவற்றஞானத்தைக் கொடுத்துத், தான் அழியாதிருப்பது. தான் என்றது வேதநதியை.

அஅ. அத்துவிதம்:—தனக்கொப்பில்லாதது.

அகூ. சமனம்:—அட்டவசுக்கள் வசிட்டமுனிவராகியஇவர்கள் சாபாக்கினியைத் தணித்தது. சமனம்-தணித்தல்.

கூ0. பாவதாவாக்கினி:—இந்திரனது பிரமகத்திதோஷமாகிய காட்டுக்கு அக்கினியாயிருப்பது. தாவம்-காடு.

கூக. மருந்து:—சன்மகன்மரோகங்களுக்கு ஔஷதமாயுள்ளது.

கூஉ. மலாபகம்:—துர்வாசமுனிவருக்கு மலகன்மங்களைப் போக்கினது.

கூரு. வேதாந்தவேத்தியம்:—கேகயராசனுக்கு வேதாந்தநிச்சயார்த்தத்தை அறியும்படி செய்தது. வேத்தியம்-அறியத்தக்கது.

கூச. சராபகம்:—கௌசிகனுக்குச் சரையைப் போக்கினது. சரை-நரை கிழத்தன்மை.

கூ௫. சாயுச்சியபதவி:—சூசுமாரமகாராஜாவுக்குச் சாயுச்சிய பரிபக்குவத்தைக் கொடுத்தது. பதம்-பரிபக்குவம்.

கூசு. பிரபஞ்சனம:—சுப்பிரமணியக்கடவுள் தாரகன்முதலிய அசுரர்களை களைக் கொல்லும்படி செய்தது. பிரபஞ்சனம்-மிகஅழித்தல். பிர என்பது-உபசர்க்கம்; மிக என்னும்பொருளது. பஞ்சனம்-அழித்தல்.

கூஎ. சகற்குரு:—சகற்குருவாகியவிட்டுணு ஞானம்பெறுதற்குக் கருவியாயுள்ளது.

கூஅ. மகாபீதிஹாரம்:—இந்திரன்முதலியதேவர்களுக்கு நிவாதகவசர்காலகேயர்களால் நிகழ்ந்த பேரச்சத்தை அருச்சுனன்வாயிலாக அரித்தது.

கூகூ. அவ்வியயம்:—பிரளயகாலத்திலும் நாசமடையாதது. வியயம்-நாசம். அவ்வியயம்-நாசமில்லாதது.

௧௦௦. அவித்தியாசத்துரு:—யமனது அஞ்ஞானத்துக்குச் சத்துருவாய் ஞானத்தைக் கொடுத்தது.

௧௦௧. தேவாதிபூசிதம்:—தேவாதிகளாலே பூசிக்கப்பட்டது.

௧௦௨. பிரமசாபஹாரம்:—சவுதாசனுக்கு வசிட்டராகியபிரமவிருடியால் நேர்ந்த சாபத்தை அரித்தது.

௧௦௩. இந்திராதிவிபூதிதம்:—மாவலிக்கு இந்திராதிபத்தியத்தையும், குபேரனுக்கு அளகாதிபத்தியம் திகாதிபத்தியங்களையும் கொடுத்தது. விபூதி-விசேஷசெல்வம்.

௧௦௪. கலாநிதி:—விநாயகர், சுப்பிரமணியர், நந்திதேவராகிய இவர்களை, அறுபத்துநான்குகலைஞானங்களுக்கும் இருப்பிடமாகச்செய்தது. நிதி-ஸ்தானம்.

௧௦௫. முனிதுத்தியம்:—வசிட்டமுனிவர்முதலிய மகாரிஷிகளாலே துதிக்கப்பட்டது.

௧௦௬. சாரூப்பியதாயகம்:—மூசுகுந்தச்சக்கிரவர்த்திக்குச் சிவசாரூப்பியங்கொடுத்தது. தாயகம்-கொடுத்தல்.

௧௦எ. அஞ்ஞானமோசனம்:—வசுராசனுக்குஅஞ்ஞானமோசனஞ்செய்தது

௧௦அ. ஆன்மஞானமகோதயம்:—சுகர், வாமதேவர், முதலிய இருடிகளது ஆன்மஞானத்துக்குப் பெரிதும் உற்பத்திஸ்தானமாயுள்ளது. ஆன்மஞானம்-ஆன்மரூபத்தையறிதல்.

திருச்சிற்றம்பலம்.

உசுரு-ம் பக்கத்துத் தாபகாரி என்பதைத் தாபஹாரி எனவும், உசுசம் பக்கத்துத்தரித்திரகரம் என்பதைத் தரித்திரஹரம் எனவும், திருத்திப்படித்துக்கொள்க.

# சவுதாசச்சருக்கம்.



இலகுமணிப்பூண்மார்தாதாவென்னுமரசனிமையவரு
முலகும்புகழுநாரதனையுருகுமுள்ளத்தொடும்போற்றி
யலகுதவிர்த்தேவேதநதியடையுமேன்மையளவிலநீர்
விலகுமணிசூழ்வேதநதிபடிந்தார்வியனீவிளம்பெனவே. (க)

வடிவேலரசர்பெருந்தவத்தோர்மறையோர்வணிகர்வழிவந்தோர்
கடியார்தீர்த்தமிதிற்படிந்தேகதியிற்கலந்தோர்கணிப்பிலராற்
படியார்பிறந்தைக்கித்தீர்த்தம்படிதலொன்றேபயனாகு
மொழியாவுணர்வோயதிற்பெருஞ்சீருற்றார்சிலரையுரைக்கின்றேன். (உ)

வேந்தனாகுஞ்சவுதாசன்வேதநதியின்விழைந்தாடிக்
காந்துகறைக்கணிராக்கதனாங்கயமைநீக்கிக்கவின்பெற்றான்
சாந்தங்கமழுந்தடந்தோளாயென்னமுனிவன்சரண்போற்றி
யேந்தலரக்கனாயதுவுந்தீர்ந்தவாறுமியம்பெனலும். (௩)

வேறு.

பத்தியிற்குயிற்றும்பருமணிமாடப்பந்திகள்பரிதியும்பனிக்கு
முத்தொளிகளபமுகிழ்த்தவெண்ணிலவான்மூடியமுருகுலாஞ்சுவர்க்கங்
கைத்தலத்துவசத்தழைத்தெதிர்காட்டுங்கனிவளங்கண்டுடல்விளர்த்தாங்
கத்தகுசெல்வத்தணியறைசிறந்தாங்கலங்கியதயோத்திமாநகரம். (௪)

ஏற்றவர்க்ககல்வானெதிர்ந்திடார்க்கடவியீந்தினிதிழைத்தறக்கடவுள்
போற்றடந்தோளாற்புவிபுரந்தளிக்கும்பொழிகதிரழலுமிழ்வேலான்
மாற்றலர்வயிரமணிமுடியுழுதவடுப்புனைந்திலங்கியகழற்காற்
சீற்றமாலியானையடற்சவுதாசனங்கர்க்கரசனாந்திறலோன். (௫)

வான்புகழளிக்கத்தான்புவியளிக்கும்வலிகெழுவிறற்சவுதாசன்
கான்புரிவேட்டைகாமுறீயொருநாட்களிற்றினமொளிற்றிளஞ்சிங்க
மூன்கவர்கரடியுருமெனவதிருமுழுவைமானுடன்றெதிர்மகிடந்
தான்பலவரிந்துசரத்தினாற்றிரிவான்சரிவரைக்கந்தரக்குகையின். (௬)

வேள்பணியியற்றிவிழைந்துடன்புணர்ச்சிமேவியமிருகமுன்னெதிர்ந்தே
மாள்வரப்பிணைமேல்வடிக்கணைதுரப்பவாளெயிற்றரக்கியாய்மடிய
வாள்வினைநோக்கிக்கலைவடிவொருவியரக்கனாயரசனைநோக்கித் [ன்.
தோள்வலியிகழ்ந்துதன்னியல்போடுதுணிவினைச்சினத்தொடுஞ்சொல்வா

* சங்கருத்தகனுமரக்கர்தங்குலத்துத்தலைவன்யான்றலைவியீங்கிறந்தாள்
வெங்களிக்காமமிக்கிருவேமும்வேண்டுருக்கொண்டுடன்மேவி
யிங்கமர்காலைக்குறையுனக்கியற்றுவிவடனைவதைத்தனையிதனு
லங்கியிற்கரிசொன்றமைக்குவனுனக்கென்றகன்றனனரசனுமகன்றான். ()

குலக்குருவாயவசிட்டனுக்கயோத்திருறுகினன்கூறலுங்குழைந்தே
நலக்குறையுறுதுமறவியற்றமர்தனன்றெனநவின்றனனேகக்
கலக்கமோடமர்ந்தான்சழிந்தனசிலநாட்கழிதலுங்கடிமகமாற்றற்
கிலக்கியமறைதேர்வசிட்டனுக்கியம்பவினிதெனமுனிவரோடியன்றே. ()

அங்கமார்பொருள்களனைத்தையுமவிடாயலங்குதற்கதிசயத்தமைத்து
வங்கமார்சரயுவானதியுச்சிமறைநெறிவகுப்பதற்கேகப்
பங்கமாமரக்கன்வசிட்டனதுருவாய்ப்பசுந்தடிமென்கறிபரிவா
லிங்கயின்றிடுவானருளெனவரசற்கியம்பியேமீண்டனனேகி. (௪0)

அடுமடைப்பள்ளியவனுருவாகியணைதலுமவன்றனையரசன்
படுநிணத்தசையாற்பசுங்கறியமைத்துப்பரிவுடன்றருதியென்றுரைப்பக்
கடுவிசையமைத்துத்தந்தனன்கரப்பக்கடும்பசற்காரியமாற்றித்
தொடுகழலரசன்மனைவயின்வசிட்டன்றோன்றிடத்தோன்றலுந்தொழுதே.

அடிமலர்விளக்கியாதனத்திருத்தியலங்கலுமாரமுமாவிக்
கடிகமழ்தூபதீபமுமளித்துக்காஞ்சனப்பாத்திரமிருத்தித்
தடிநறுங்கறியுமன்னமுமளிப்பத்தளர்ந்துவெம்பசிச்குணவயில்வான்
படிதரக்கடிதூன்பரப்பினைநோக்கிப்பதைத்துடன்கனன்றனன்பகர்வான்.

கொலையுருவாகிக்கொடுநரகளிக்குங்கொழுந்தசைக்கறியினைக்குரவற்
கலைவறவளித்தாயாதலாலரக்கனுகியேயருந்துதியூனென்
றலைவறவுரைப்பவரசனுநடுங்கியுவந்துநீதருதியென்றுரைக்கத்
தலைவயானளித்தேனெனமுனிசமாதிசார்ந்தருந்தவத்திறைற்றெளிந்தான்.

வஞ்சனையரக்கன்மாயையால்வருத்தமயக்கினைமாட்சியினுணர்ந்தே
நெஞ்சகமழிந்துநிலைபெறுமுணர்ச்சிநெறியிலேனீ † டிருணீர்மை
யெஞ்சியகயமையியற்றியதீமையென்னிடையிறைவனோர்குறையா
‡ னஞ்சிலனஞ்சநடுங்கிடுசாபமளித்தனனட்டமற்றென்றே. (௪௪)

முனிவனிவ்வண்ணமொழிதலுமரசன்முறுகியசினத்தொடுமுதிர்ந்து
பனிதரும்பிழைதீரென்னிடைப்பழங்கட்படர்தருசாபமீந்ததனுற்
றுனியுறநினையுஞ்சபிப்பனென்றகங்கைத்தூயநீரேந்தலுந்தொண்டைக்
கனிதருஞ்செவ்வாய்க்கருங்கயனெடுங்கட்காரிகைமதயந்திகரைந்தே. (௪௫)

---

* சங்கருத்தகனுந்தலைவனெனக் கூட்டுக. †இருள்-அறியாமை. ‡நஞ்சு-குற்றம்.

கணவனையெதிர்ந்துகடுஞ்சினந்தவத்தைக்காய்ந்திடுங்கருத்தலைவிடுநீ
யுணர்வுடைக்குரவர்வெகுளினுநயத்தாலுரையினற்பணிவினொழித்தல்
குணமெனவுரைப்பர்குரவரைக்கடிந்துகொடுமொழிகூறவுறவாற்றிற்
றணவறநிரயஞ்சார்ந்துசண்டாளப்பிறப்பிடைச்சருகினிற்றளர்வார். (க௬)

ஒழிதிநீயென்னவுயர்மொழிமனைவியுரைத்திடவுறுசினமொழிந்தே
யழிவிலாவுறுதியறைந்தனைசினத்தாலறிந்திலனறநெறியோவிப்
பழியுறுகாலையிடித்துரைபகர்ந்துபாற்றினர்பரியுநட்பினரா
மிழிதருபெண்பாலுரையெனவிகழேனிதமுறுமுறுதியீதென்றே. (க௭)

குரவனைப்பணிந்தேயறிவிலாச்சிறியேன்கொடும்பிழைபொறுத்தியெ
ன்றிறைஞ்சப், பரவியநஞ்சொற்பழுதுருதத்துறுபன்னிருவருடநீபழுது,
விரவியநிருதருருவொடுசுழன்றுமேற்பதின்மூன்றினின்வேதம், பரவிய
வேதவனத்திடையடைந்துபரன்றிருக்கோயின்முன்பணிந்தே. (க௮)

முத்தொடுபவளமுகந்தெறிவேதநதியிடைமொழிதருசங்கற்
பத்தொடுபடிந்துபரமனைப்போற்றப்பாற்றிடுஞ்சாபமென்றுரைத்தே
கொத்தலர்கமலத்தயன்மகனேகக்சோமசனுஞ்சவுதாசன்
மைத்தழைகூந்தன்மாமதயந்திமலர்முகநோக்கினன்வகுப்பான். (க௯)

வளந்தருமயோத்தியளித்தியென்றுரைத்துவனந்தனினிசாசரவடிவாய்
யுளந்தளர்ந்துலைந்தேவருடமீராறுமுற்றபினுலகினையளப்பான்
கிளர்ந்தெனவோங்குமரமியவெயிலாற்கெழுமியமறைவனங்கேழ . [ன்.
லுளர்ந்துழமணிகளொருங்கொளிவிரிக்குமுயர்பதியுறுதியென்றடைந்தா

கொடியவெவ்வினைகளொடியிடைப்பொடியக்குருமணித்திவலைகடுவுங்
கடிதருவேதநதியிடைவிதியாற்கலந்துடன்படிந்தணிகாமர்
வடிமதர்நெடுங்கண்மடவரலோடுமறைவனநாதனைப்போற்றிப்
படிமிசைப்பணிந்துபரன்றிருக்கோயில்பன்முறைவலஞ்செய்துபரிவால். ()

ஒளிதருவாயிலுட்புகுந்தமலவுருவமாயுலப்பிலானந்த
வெளியுருவாயவிமலவேதாந்தவேதநாயகமிகுமன்பாற்
றெளிதருபரமசிற்பரபிரமதேசிகதேசுசான்ஞானக்
களியுறுமடியர்களைகளுய்நிறைந்தோய்கதியருள்கடிதெனப்பணிந்தான். ()

வேறு.

உருகிப்பணியுஞ்சவுதாசனுள்ளங்களிக்கவுமைகோமான்
முருகிற்றிகழுங்குழலியொடுமுன்னேதோன்றிமுகநோக்கிப்
பருகிக்களிவண்டிசைபாடிப்பசுந்தாதொழுக்குநறும்புன்னை
யருகிற்கமழும்வேதநதியமலதீர்த்தமதிற்படிந்தே. (உ௩)

சுருதிபரவுநம்முருவந்தொழுதாயதனுற்றுயர்கூரு
நிருதவுருவநீங்கியதுநெறியினயோத்திநிலையெய்திப்
பரிதியனையமுடிமுனிவன்பரிப்பப்பணியாற்பாரளித்துக்
கருதியரசரடிபணியக்களித்தேநம்பாற்கடிதெய்தி. (உச)

போற்றும்பழையநங்கோயில்புதுக்கிப்புகர்தீர்த்தலங்கியிருள்
பாற்றுமதில்கோபுரமாதிப்பணிகயேவிழாச்சுருதி
யாற்றினமைத்துப்புவியினமர்க்தளவில்போகநுகர்ந்தவல
மாற்றியீற்றினம்பதமேவருதியென்னவருள்வாய்ந்தே. (உரு)

கன்னற்கானம்புடைசூழுமயோத்திமேவிக்கதிர்மௌலி
மின்னப்புனைந்துபுவியளித்துவேந்தன்வேதவனமேவி
யுன்னற்கரியபரன்கோயிலொளிகான்மணியினெடுமுருக்கார்
பொன்னிற்புனைந்துகோபுரமும்பொன்னம்பொருப்பிற்புனைந்திழைத்தே. ()

மணியார்மதிலுமண்டபமும்வயங்கவியற்றிமாளிகைசூழ்ந்
தணியார்வீதிபலவாற்றியவிரும்பொலந்தேரமைத்துவளந்
தணியாமடமுஞ்சாலைகளுந்தடம்பூவனமுந்தரணிகரந்
துணியாவிருள்சூழிரும்பொழிலுஞ்சுரும்பார்சுடர்ப்பூம்பொய்கைகளும்.

மறையுமகமும்பெருகொலியால்வழங்கமறையோர்மனைசூழ்ந்து
நிறையவமைத்துப்பல்வளமுநிறைந்துநெடுவானகடுகிழித்
துறைகவேம்பொலங்கொடிவார்ந்தொளிர்மாளிகைகளுயர்மாகங்
கறைசெய்திலங்கியலங்குசுடர்க்கற்றைகாலக்களிகூர்ந்தான். (உஅ)

வேறு.

மொய்த்தெழுமிளங்கதிர்முகிழ்த்தநூசொணி
வித்தியதிருப்பணிவெறுக்கையாற்றியே
யெத்திசையவர்களுமேத்தும்பூசனை
நித்தியம்பெருவளநிறையநல்கினன். (உகூ)

இன்னிசைமகரயாழியங்களேந்தொலி
மன்னியபாடலோடாடன்மல்கவே
தன்னிகர்பூசனைதழைத்தபின்னர்நூல்
பன்னியதிருவிழாப்பணித்தற்கெண்ணினன். (௩0)

நலந்தருமோரையுநாளுநான்மறைப்
புலந்தருசிவமுகத்துதித்தபூசுரர்
குலந்தரவவரொடுங்குறித்துத்தீர்த்தநா
ணிலந்தரநிகழ்த்துகவென்னநேரினார். (௩க)

வாத்துபூசனைமுதலாற்றிமங்கலம்
பாத்தியபல்கதிர்ப்பாண்டிலங்கொடி
யேத்தினரணிவிழாவிலங்குபொன்னகர்
பூத்தெனப்பொலிந்ததுபுனிதற்கென்பவே. (௩௨)

பசுங்குலைக்கந்தியும்பரியபைங்குலை
யசும்புறுநறியதேனரம்பையாய்ந்தபொற்
றசும்புடனிரைத்தொளிதயங்கத்தோரணம்
விசும்புறநிரைத்தனர்வெயில்கடவேவே. (௩௩)

முரிந்துசெந்தாதொடுமுருகுகொப்பளித்
தருந்தியசுரும்பினமரற்றவார்மதுச்
சொரிந்தபூந்தொடைமணித்தொடையுந்தூக்கியே
திருந்தொளிபரந்தனதெய்வவீதியே. (௩௪)

* மறிக்குழம்பொழுக்கியமெழுக்கின்வார்ந்தபொற்
செறிப்புறுசெழுந்துகடீட்டித்திண்ணைக
ணெறிப்புறக்கலவைநீர்நிறைத்துநீடெரு
வெறித்துகள்வித்தினர்சுண்ணம்வீசியே. (௩௫)

பங்கயக்காடெனப்பரிந்துபல்விளக்
கெங்கணுநிரந்தனவியங்களார்த்தன
புங்கவர்மிடைந்தனர்விமானம்பூத்தன
திங்களுளாயிறுந்திகைத்தசீரவே. (௩௬)

பாடியசொற்பொருள்பயிற்றுங்கைவ்வழி
யோடியவிருகணுமுலவப்பாணியிற்
கூடியவிருபதங்குலவக்கொம்பனார்
நீடியமின்னெனநிருத்தமிக்கவே. (௩௭)

நெய்யொடுமறுசுவைநிறைந்தவோதன
மொய்தனமறையவர்முகந்துகொள்கெனப்
பெய்தனனரனடிபேணினார்களி
மெய்தரவளித்தனன்வேண்டிற்றென்பவே. (௩௮)

மந்தரத்திலங்கியதென்னவார்ந்தபொற்
சுந்தரத்தேர்மிசைத்தோற்றநல்விழா
வந்தரத்தமரருமயிர்ப்பவாலமார்
கந்தரற்காற்றியேகளிப்பின்மேயினான். (௩௯)

* மறிக்குழம்பு-கத்தூரி.

முற்றியநல்விழாமுறையினுற்றியே
பற்றியபூசனைபரிந்தநல்விழா
மற்றிணையின்றியேமல்கநாடொறும்
பொற்றிரடோளினன்புரிந்துநல்கினன். (சo)

எறிதிரைமணிகொழித்திரங்குநீர்வளஞ்
செறிதருமூர்பலசெம்பொனேத்திரம்
வெறிகமழ்பைந்துகின்மின்னிற்செய்தென
வெறிகதிர்ப்பசியபூணெண்ணிலாதவே. (சக)

* பாற்கடலளித்திடும்பரவையானின
மேற்பனபூசனைக்கியன்றயாவையு
மேற்படவளித்தவண்விழைந்துவைகியே
மாற்கருங்கணைகழல்வணங்கிப்போயினன். (சஉ)

வேறு.

மணிதிகழயோத்திவைகிவருடங்கடோறும்வந்து
பணியணிமறைசையீசனல்விழாப்பரிவினுற்றித்
தணிவறும்போகமார்ந்துதழைத்துப்பின்றவத்தினுர்க்குந்
துணிவருமின்பவீடுந்துன்னினன்றுகளிலாதான். (சங)

ஆதலான்மறைசையீசற்கணிவிழாவாற்றற்காகுங்
காதாலாற்கொடிபதாகைசத்திரங்கவரிசன்னல்
சீதநீர்க்கும்பந்தூசுதிருமுட்டுத்தேசார்பைம்பூண்
டாதருசூழ்மாலைதீபந்தபனியந்தடங்கணல்லார். (சச)

ஆனினங்கதலிசூதமாசினிக்கனிகளாரம்
பானியநறும்பானெய்தேன்பசுங்குலையிளநீர்கன்னல்
போனகவரிசியாதிபுரிதரும்பொருள்களீவோர்
தேனினமுரலாராமந்திருத்தினர்சிறப்புச்செய்தோர். (சரு)

விழாவினுக்குதவிசெய்தோர்விமலனுக்கபிடேகங்கள்
வழாநிலைமலியவாற்றிமகிழ்ந்தவர்மணியிற்செய்த
முழாமுதலியங்களீந்தோர்முன்னவனருளான்மோனக்
குழாமுறையுலகத்தின்பங்கூடுவார்கோதுதீர்த்தே. (சசு)

திருமிகுசெல்வர்சாலவீயினுந்திருவிற்றீர்ந்தே
யருகுறுவறியரற்பமீயினுமளவின்றென்றுந்
தருபயனதனுற்பற்றுத்தவிர்ந்துதந்தகுதிக்கேற்ப
வருமறையமலற்கீதல்வழக்கென்பவரம்புகண்டோர். (சஎ)

---

* பாலாகிய கடலைக்கொடுக்கும் பரந்த பசுக்கூட்டம்; பாற்கடல் தந்த காமதேனுவின் வழித்தாயுள்ள பரந்த பசுக்கூட்டம்.

வேறு.

நெறியாயசவுநாசனிருதவடிவொடுபேழையநிலையோவியே
யறியாதுசுழலாமலமலவடிவொடுபரமனருண்மேவவே
பொறியாகவருள்வேதநதியினதுபொருவரியபுகழ்பேசவே
வெறியாருமலர்மேயவிரகனறிகிலனறியும்விமலேசனே. (சஅ)

சவுதாசச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க, கருக.

## விசுவாமித்திரர்மேனகைசம்வாதச்சருக்கம்.

அறமிழைத்தமுதமூறியகவிருளகற்றியாக்க
முறவளித்திடுதலாயேயுயர்மறைவனத்துமேய
விறையுருவாயவேதநதிக்கதையின்னுங்கேட்பான்
சிறையெறிபுனலினுள்ளஞ்சென்றதுதெளிவிற் * நீர்ந்தோய். (க)

துத்தியம்பகுவாய்ப்பாந்தட்சுடர்மணிப்பணத்துஞாலம்
பத்தியிற்பரவுஞ்சீர்த்திக்கௌசிகன்பசியசெம்பொன்
றத்தியசீதவேதநதியினிற்சார்ந்தவாறு
மித்திசையடைந்தவாறுமியம்பெனவியம்பலுற்றான். (உ)

பற்றலருயிரிற்பச்சூன்பருகியபரிதிவெள்வேற்
கொற்றவன் † குசிகன்மைந்தன்குருமணிக்குடுமிக்குன்றூர்
மற்றடந்திணிதோண்மானக்கௌசிகன்வாகைசூடி
யெற்றியதிரைசூழ்ஞாலமளித்தனனெண்ணில்காலம். (ங)

அனையவன்மகிழ்விஞேர்காலடற்படைபலவுஞ்சூழக்
கனைகடற்புடவிமுற்றுங்காண்பதற்கெழுந்துகாசிற்
புனைதருநகரங்கானம்பொருப்பினம்புரியூர்போதால்
வனையுமாச்சிரமமற்றுங்கண்டுளமகிழ்ந்துபோந்தான். (ச)

மறையொழுக்குருவமாயவசிட்டனாச்சிரமமன்னி
முறையுறப்பணியமேவிமுகமனேடிருக்கையீந்து
நறைமதுக்கனிகாய்கந்தநல்கிப்பினயத்தின்வாய்ந்த
விறையுறு‡குசலநீதிவினவினற்கினிமைகூர்ந்தே. (ரு)

மகவெனவுயிர்கட்காக்கமகிழுநிற்புரைவோராசி
யசமுறவணைவேற்காக்கமலதுண்டோவறவோயென்றுத்
தகவுரைசெய்துபோற்றிவிடைகொளத்தவத்தின்மிக்கோன்
முகவுரைவிருந்துகூறிமுயன்றிடமுதல்வன்சொல்வான். (சு)

* தீர்தல்-மிகுதல். † குசிகன் மகன்-கௌசிகனென்க. ‡குசலம்-க்ஷேம மென்பது மேலுங்காட்டப்பட்டது.

வனத்துறைவாழ்க்கைக்கேற்பவழங்கியவிருந்துசாலு
மினத்தொடும்போகல்கென்றிசைத்திடவினிநீயேயின்
மனக்குறையுளதென்மாற்றமறுதிநீயென்னவாய்மை
யனத்தவன்மைந்தன்கூறவரசனுமதனைநேர்ந்தான். (எ)

சுடர்முடியரசனுள்ளந்துணிந்தபின்வசிட்டனேகிக்
கடவுளருருவமேவுஞ்சுரபியைக்கடிதுகூவி
யிடர்கெடவிருந்துசெய்தற்கியன்றனனினிமைதூய்மை
திடமுறவளித்தியென்னமகிழ்ந்ததுசிறப்பிற்றேர்ந்தே. (அ)

அருமணங்கமழுமாவியன்னமேமுதலயாவுந்
திருமகிழ்சிறப்பினீயத்தீஞ்சுவையமுதமேபோ
அருகுளங்களிப்பமாந்தியொழிந்தபின்னுதவுந்தேனுத்
தருகெனமறுப்பச்சீறித்தருக்கினுற்கவர்வேனென்று. (கூ)

சுற்றுபுபிணிப்பச்சீறிச்சுரபியுந்தருக்கர்சூழ்ச்சி
முற்றியயவனராதிமிலேச்சரைமுனிவொடீன
வெற்றியினடர்த்துப்பொங்கிவேறுவேறாகநூறப்
பற்றறக்காதிமைந்தன்பாறியேபரிவின்மிக்கான். (கய)

அருந்தவமாற்றித்தெய்வப்படைக்கலமனைத்தும்வாங்கித்
திருந்தியவசிட்டன்றன்பாற்சேர்ந்தவைசினத்திற்றூண்ட
விருந்தவன்றனது * தண்டமெதிர்கிறீஇயெறிந்தயாவும்
விருந்தெனக்கோடியென்னவெய்தினின்விழுங்கிற்றன்றே. (கக)

விழுங்கியதண்டநோக்கிவெம்படையாவும்போக்கி
யழுங்கியமனத்தினோடுமரசிழுக்குற்றதாகு
மொழுங்கியல்பிரமஞ்சாலவுயர்ந்ததென்றுவர்த்துத் † தன்சீர்
தொழுங்குலவுரிமைபூண்பன்றவத்தெனத்துணிந்துபோனான். (கஉ)

எரியெனத்தெறுவதாயவிருந்தவந்திசைக்கண்மேவிப்
புரிதரவிடையூறெய்திப்போக்கறப்புவனமுற்றுந்
தெரிதருதென்பால்வேலைத்தீரத்துத்தீமையாவு
மரிதருமறைசைமேவிவிக்கினமனைத்துமாய்த்தே. (கங)

சாலையொன்றமைத்துப் ‡ பன்னந்தழையினிற்றழங்குங்கோடி
வேலையிற்படிந்துவேதநதியினும்விழைக்துமூழ்கி
மாலையிற்பகலிற்றூயமணிகன்னிபடிந்துபாங்காற்
காலையுமிரவுமீசன்கழலிணைகசிந்துபோற்றி. (கச)

---

* தண்டம்-பிரமதண்டம். † தன்சீருவர்த்தென மாறுக. தொழுங்குலம்-ஆதிவருணம். ‡ பன்னம்-பலாசு.

கடும்பகனுருப்புங்காலங்கனனடுக், கம்பித்தாக
மடும்பனிக்காலநீரி, னகல்வெளிபெயலினர்கா,
ளிடும்பைகட்கிரையாய்நோற்றேயிறைவனஞ்செழுத்துநெஞ்சத்
தொடுங்கிடவுரைத்துப்பூதிகண்டிகையுவப்பிற்றுங்கி. (௧௫)

பதனழிசருகுகானீர்பசிக்களித்தகவுங்காமக்
சதனுறுபொறிகண்முற்றுங்கருத்தொடுமடக்கிக்காமன்
மதனழித்துயரும்பெம்மான்வரிகழல்வனசப்பொற்றாண்
* முதமுறப்பரவிப்பாவித்தமர்ந்தனன்முனிவர்கோமான். (௧௬)

வேதகானனத்துமேவுந்தீர்த்தங்கள்விழைந்துமூழ்கி
நாதனைப்பரவிநோற்குநலம்பெறுநாளிலோர்நா
ளோதவெண்டிரைசூழ்வேதநதியிடையுவந்துமூழ்கிக்
காதலிற்போற்றித்தென்பால்வருபவன்களியிற்கண்டான். (௧௭)

எங்கணுஞ்சிவமதாகியிருள்கிழித்திலங்கிஞானப்
பொங்கொளிபரந்துமூடும்புனிதவானந்தமாகத்
தங்கியசெய்கைநோக்கித்தன்னிலையிழந்துவேதப்
புங்கவனருளாலாயபொற்பிதுபோலுமென்றான். (௧௮)

விரிந்தவெள்ளிடையினோக்கிவிம்மிதமெய்திவீழ்ந்து
சொரிந்தகண்ணீரினோடுஞ்சுருதிநாயகனைப்போற்றிப்
பரிந்தவிச்செய்கையாரேபகுத்தினிதுரைப்பார்பாங்காற்
றெரிந்திலதொன்றுமென்னாத்திகைத்தனன்செப்புகின்றான். (௧௯)

ஈசனதருளோதீர்த்தத்தியற்கையோவிரவிபோல
மாசறுதலத்தின்மேன்மைவாய்ந்ததோகயிலைபோலத்
தேசுறுகணத்தினோடுஞ்சிற்பரன்றிருமீக்கூர
வாசறவிளங்குமுள்ளத்தளக்கினுமளக்கொணுதால். (௨0)

ஆங்கவன்புலம்பவாணியந்தரத்தெழுந்துவேதத்
தோங்கியவேததீர்த்தத்துண்மையாருணர்ந்துகாண்பா
ரீங்கிதன்சிறப்பாலீசனின்பொடுமமரத்தேசு
தாங்கியதலத்தாலீதுவிளைந்ததுதவத்தின்மிக்கோய். (௨௧)

எண்ணியமுற்றுநல்குந்தீர்த்தமுமிலங்குவேதங்
கண்ணியபதியும்†வேதநாதனுங்கதியும்போல
விண்ணினுமில்லையாகுமெய்மையீதென்றுதேறிப்
புண்ணியம்புரிதியென்னுமறைந்ததுபுனிதவாக்கே. (௨௨)

---

* முதம்-சந்தோஷம். † முதனூலில் இச்சந்தர்ப்பத்திற் சுவாமிக்கும் தேவபூடணமென்னும் பெயர் பிரயோகிக்கப்படிருக்கின்றது.

வெளியிடையெழுந்தவாணிமறைதலும்விழைந்தவின்பக்
களியிடைமூழ்கிமேவுங்கதிகரம்பற்றியாங்குத்
தெளிவுறத்தலத்தின் மேன்மைதெரிந்துசெய்தவத்தின்மேவி
யொளியுருவாயவீசனுளத்துறவுவப்பினோடும். (உரு)

நிறைவளமருவுநெஞ்சநினைந்தனயாவுநல்கு
மறைவனப்பெருமைதேர்ந்துமணிகன்னிமூழ்கிமேல்பா
லுறைதருவன்னிநீழலுத்தரதிசையைநோக்கி
யறையுமஞ்செழுத்துநெஞ்சமழுத்தியங்கமர்ந்தானன்றே. (உச)

இன்னணமொருநாளிலிமையவருலகமேவி
மன்னுமேனகைமுன்சார்ந்தவரத்தினைமதித்துமேவி
முன்னவன்மறைசைவேதநதியிடைமூழ்கியீசன்
பொன்னடிபோற்றிமீண்டும்பொன்னகர்புகுதப்போவாள். (உரு)

சுடரிளம்பரிதிபூமேற்றோற்றியதோற்றம்போலப்
படரிருள்பருகிமேனிப்பசுங்கதிர்ப்படலைசூழ
வுடலுறுமனங்களேற்பாருருத்தரித்தென்னவோங்குங்
கடலகம்புகழுமேரார்கௌசிகன்றன்னைக்கண்டாள். (உசு)

கண்ணுறக்கண்டுகாமக்கடற்குளித்தவசமாகி
யுண்ணிறையாதிசோரவுளங்குழைந்துருகிக்காமன்
புண்ணுறுபகழிபாயப்புலர்ந்தனள்பொழியும்பொற்பா
ரண்ணலங்குமரனையவறவனதருகுசெல்வாள். (உஎ)

செய்யசீறடியிற்சூழ்ந்தசில்லரிச்சிலம்புசெம்பொ
னையகிண்கிணியினார்ப்பவணிமணிக்காஞ்சிசூழ்ந்த
பையரவல்குற்பாரம்படர்முலைப்பணைப்பும்பற்றாக்
கையறுநுசுப்பிற்றாதுகருங்கயன்மழைக்கண்காட்ட. (உஅ)

பொற்சிறையெகினநாணப்பொழிமதுப்புதியபூவார்
கற்பகவல்லிபோலக்கருங்குழற்கற்றைசோரச்
சுற்றியவளிகளார்ப்பத்தொண்டையங்கனிவாய்மென்சொற்
சிற்றிடையெதிரநேர்ந்துசென்றெதிர்சிறப்பிற்கண்டான். (உகூ)

விண்ணிடைவழுக்கிவீழ்ந்தமின்னெனவிளங்குமேரார்
பண்ணியன்மொழியைநோக்கிப்பனிமதிவதனப்பாவாய்
கண்ணியதென்னைகற்பேகாரிகைமாதராக்க
நண்ணிய*வறங்கண்முற்றுநயந்தனைநயத்தினுய்ந்தே. (௩0)

---

* அநேகமுனிவர்முன் பதிவிரததருமங்களையெல்லாம் நியாயத்தோடாராய்ந்து கேட்டிருக்கின்றாய் என்பது கருத்து.

குரவர்தம்பாதம்போற்றிக்கொழுநனதேவலாற்றிப்
பரவருமுரவோர்தம்பாற்பணியொடுபலவுமீந்தே
யிரவுறுதுயில்பின்காலையெழுதன்முன்,னிபற்றிக்கொண்கன்
வரமுறவயின்றபின்னர்மாந்தியேமயக்கமாற்றி. (௯௧)

காதலற்கெதிர்வெங்கூற்றங்கடிந்தவன்காய்ந்தக்காலு
மாதரவுற்றமாற்றத்தவனுளங்குளிரவாற்றி
னோதசப்பிரியிற்சாம்பிநொதுமலரில்லஞ்சேருந்
தீதகற்றினைநற்சீலத்திறத்தினைதிருவார்ந்தென்றும். (௯௨)

அரிசனமாலைசாந்தமணிந்துநின்னன்பற்காக்கம்
பெரிதுறவங்கம்பேணிப்பிழைபடுமடவார்ச்சேர்தல்
கரிசெனவகற்றியீசன்கழலடிக்காயவேவல்
பரிவுடனாற்றிச்சாலும்பண்பொடுபயிறியன்றே. (௯௩)

என்றவனில்லின்மேயமடவரற்கினியவாகி
நன்றிசெய்தருமங்கூறநகைநிலாமுகிழ்த்துக்காமங்
கன்றியமனத்தனோடுங்கௌசிகன்றனைநோக்கி
யொன்றியதில்லின்மேயார்க்குரைத்ததெம்முண்மைகேணீ. (௯௪)

பொழிமதத்தருவினீழற்பொதுமகளாவேன்பூமே
லெழில்படைத்தனையமேனியிலங்குநின்னுருவங்காணாக்
கழிமயக்குற்றுக்காமங்கனிந்துளங்கலவிக்காழ்ப்பி
னுழிதரவிரகத்தீயினுருகிடுமுருவமிக்கோய். (௯௫)

பருவரையனையதோண்மேற்படர்தரும்பரிதிமார்பின்
மருவியகலவியுண்டேல்வாழுமென்னுயிரின்றாயி
னுருகெழுகாமத்தீயினொழிந்துகுமுக்காலை
யருகுபெண்கொலையுமாகுமறவநீயறிதியென்ன. (௯௬)

* விம்மிதமெய்திச்சாலமெல்லியன்முகத்தைநோக்கிக்
கொம்மைவெம்முலையாயீங்குக்குறித்ததுகொள்கைத்தன்றா
லெம்மனோர்க்கடாதசெய்கையிந்தியமடக்கிநோற்பார்க்
கம்மவெங்காமங்காயுமறமொன்றேயாவியாமால். (௯௭)

கண்படையொழித்தீரைந்துநூறெனக்கணித்தகாலத்
தெண்படுதவமுங்†காமக்குறிப்புறவிரிந்துமாயும்
பண்படுதுறவைமேற்கொண்டிந்தியம்‡பரித்தலின்றேல்
விண்படுநெறியிற்சேரார்§வீழ்குவர்விசையற்றாங்கே. (௯௮)

---

* விம்மிதம் ஈண்டு வெட்கத்தின்மேற்று. † காமக்குறிப்புற-ஒருதாங் காமக்குறிப்புண்டாக. ‡ பரித்தல்-அடக்கல். § அவனது பத்துச் சுற்றப் பிதிரர் அவனோடும் நிரயத்து வீழ்வர்.

வேறு.

சொற்றதீதபொதுவறந்தூய்மையார்
கற்ற*பாசுபதத்திறங்கண்ணினு
ருற்றமாதர்தம்மோடுரையாடினுங்
குற்றமாகுங்கொழுங்கயற்கண்ணினாய். (ஙக)

பிள்ளைவெண்மதிபெய்தபெருஞ்சடை
வள்ளலோதியவாகமவாய்மையாற்
றெள்ளுபாசுபதத்தினைச்சேர்ந்தயா
னுள்ளுமாறரிதொண்ணுதல்போகமே. (ச0)

ஏய்ந்தபாசுபதத்தினையீர்ஞ்சடை
வாய்ந்துபூதிமருவிமடநல்லா
ரீய்ந்தகாமத்தியைந்தவரேங்கியே
காய்ந்தவெங்கிரயத்துக்கலங்குவார். (சக)

பன்னியென்பலபாசுபதத்தினு
ருன்னிமங்கையரோடுரையாடினு
மன்னியோரிடைவைகினுந்தீண்டினு
முன்னினார்நரகத்திடைமூழ்கவே. (சஉ)

மொழிந்தவென்னுரையுட்கொடுமோகமீ
தொழிந்துபோதியுறுதியுறுதியா
லிழிந்தவேட்கையிகழ்தியின்றென்னவே
யழிந்துமேனகையாவலினோதுவாள். (சங)

முனிவநல்லறமுற்றுமுணர்ந்திடா
தினையவோதினையெவ்வணமாயினுந்
துனியடைந்தவர்துன்பினைநீக்குத
லினியதென்பரிரங்கியசெய்கையார். (சச)

ஓயுமென்னுயிர்காத்துயக்கோடியேல்
வாயுநல்லறமாதவவென்னவே
தீயினுங்கொடிதாயசினத்தினீ
மாயினுந்தனிவாழினுமென்னெனு. (சரு)

கொண்டநல்விரதங்குறைபாடுற
விண்டதேற்கதிமேவுதலில்லையாங்
கண்டனங்கழுவாய்மடவார்வதைக்
கண்டனோதியவாரணத்தங்கனே. (சசு)

---

* பாசுபதம்-பசுபதியுடையது.

வெய்யவெம்பிறவிக்கடல்வீழ்த்திடுங்
கையறுந்துயரோடுகெழித்திடு
மையலீந்துமருட்கைவழங்கிடுந்
தையலாரிற்கொடிதிலைச்சாற்றினே. (௪௭)

* பிறவிவெஞ்சுழிசுற்றிப்பெருந்துயர்
மறவிநல்கும்வழக்கினைவன்னிசூழ்ந்
தறவிலாருறக்காட்டுவரோதிதாற்
றுறவிவேவத்துணிக்கும்வடவையே. (௪௮)

கச்சுவார்ந்தகதிர்முலையார்களே
† விச்சும்வெம்பிறவிக்கெனவேட்கைவே
ரச்சரிந்தவரேயழியாப்பத
நச்சினர்பிறர்நாடினரகரே. (௪௯)

ஒழுக்கமேன்மையுயர்ச்சியுரங்குடி
யிழுக்கில்கல்வியென்றெண்ணியநற்குணம்
வழுக்கிவீழ்த்துவறுமையிற்றாழ்த்துளத்
தழுக்களிக்குமரிவையராரவமே. (௫௦)

வேறு.

தீவினைக்குவைக்குருத்தெரியிற்செந்தொடை
யேவினைச்சிறந்தகண்ணேழையாரெனப்
பாவினைப்பயின்றவர்பகர்வராதலாற்
றாவினைத்தருவதுசரதமென்பவே. (௫௧)

அவமினியுனதுரையகறியிங்கெனுச்
சிவசிவசிவசிவ§சிவதசங்கர
பவபயங்கரவெனப்பரிவிற்கூறியே
தவமுனிபாவனைசாரத்தையலாள். (௫௨)

---

* உள்ளபடி நாயகர் மாட்டுறவில்லாதவராகிய மகளிர் தம்மைப் புதிதாகச்சேரும் நாயகர்க்குச் சனனமரணமாகிய கடலின்கண் இங்ஙனஞ்சுழன்று, அதனால்வரும் பெருந்துன்பத்துக்குத் தாம் மறத்தலைக்கொடுக்கும் வழக்கத்தை, அவரோடு தாம் ஆரம்பத்திற் சம்பந்தப்படும் விவாகத்தில் அக்கினியைச்சுற்றி, அதனாற்காட்டிவிடுவர்; ஆதலால் அவர் துறவறமாகியவிருக்ஷத்தை வேவ எரித்தழிக்கும் வடவாமுகாக்கினியென்க. † வெம்பிறவிக்கு வித்துமென்று வேட்கையாகிய் விருக்ஷத்துக்குவேராயுள்ள உயிரையரிந்தவரே. அச்சு-உயிர். § சிவத-சிவத்தைக்கொடுப்பவரே.

* கடவுளர்பிறப்பெனுங்களியிற்காதலான்
மடவரன்மடமையான்மானமேன்மையாற்
சுடரெழில்வனப்பினு,னுணுத்தோன்றலாற்
படவரவல்குலாள்பணியிற்சீறியே. (ருங)

மோகமுற்றறிவினைமுருக்குங்காமநோய்
வேகமுற்றணைதரமேவுமெல்லியர்
போக†முற்றொழிதரப்புகன்றுநீக்குத
லூகமுற்றியமறையுவர்க்குநீரதே. (ருச)

பொற்றொடிக்குறுநடைப்புதல்வரில்லவர்
பற்றுறுகதியிலையென்னும்பான்மையாற்
பெற்றிடுமுறையினைப்பிறழ்ந்தும்பேரெழி
லுற்றவர்ப்புணர்குவருறுதியுன்னியே. (ருரு)

‡ விலங்கினமுறையிறனைவிதித்துமென்மக
விலங்கினவெனுமறையிகழ்ந்துநின்னெழி
லலங்கியதோள்புணரார்வங்கூரெனைக்
கலங்கியவெவ்வுரைகழறுஞ்செய்கையால். (ருசு)

நரையொடுதிரைபொரநலங்குலைந்துவெங்
குரைதருமூப்பொடுகுழைகவென்னவே
யுரைதரச்சபித்தனண்முனிவனுட்கியே
கரைதரமூப்பதுகலந்துகாய்ந்ததே. (ருஎ)

நகைதருமூப்புடனடுக்கநாடியே
புகையுறுமழலெனப்பொங்கிச்சீறியே
மிகையுனக்கியற்றிடாவிரதிமேற்செயுந்
○ தகையினுன்மூப்பினைநீயுஞ்சார்கென. (ருஅ)

முனிவரன்சபித்தலுமுதிர்ந்தமூப்புறக்
குனிதருநடுக்கொடுகூடிக்கூடிய
தினிதெனநகைத்துமுன்னேய்ந்தமேன்மையாற்
பனிதருதீர்த்தமுண்டிதனைப்பாற்றவே. (ருக)

---

* தான் தேவப்பெண்ணென்னும் மயக்காபிமானத்தானும், மகளிர்க்குரிய மடமையாகிய சுபாவத்தானும், எம்மகளிரும் அபிமானிக்கத்தக்கவள் தானே என்னுமேன்மையானும். † முழுதும். ‡ புணரக்கூடாதென விலக்கிய விலக்கை விதியாகக்கொண்டு, மெல்லிய மகவுகள் பிரகாசித்தன எனக்கூறும் வேதத்தை நீ அவமதித்து, இகழ்ந்து கழறுஞ் செய்கையாலென முடிக்க. ○ தகை-தடை; முதனிலைத்தொழிற் பெயர்.

## வேறு.

என்னுந்தெளிவால்வேதநதியெய்திப்படியவெழில்வாய்ந்து
மின்னுந்திருவின்மேனகையேர்மேவிமீளமேவுதலும்
பன்னுமறைதேர்கௌசிகனும்பரிவினோக்கிப்பருமணியும்
பொன்னுந்தூவும்வேதநதிபடிந்தேர்பொருந்திப்பொலிந்தனனே. (௯௦)

அன்றுமுதலா * வெழில்வடிவுமௌதாரியமுமளிக்குநதி
யென்றுபெயர்பெற்றத்தீர்த்தமிலங்கிற்றிப்பாலிளமுலையாற்
குன்றுமருங்குன்மேனகையுங்குசிகன்மகனுங்குழைந்துமனங்
கன்றுங்கனியான்மகிழ்ந்துறலுங்கணிப்பில்காலங்கழிந்ததுவே. (௯௧)

ஆயநாளின்மேனகைதன்னலருமதியமுகநோக்கித்
தூயமுனிவன்வேதவனச்சோதிபோலச்சுடர்மேன்மை
பாயபுகழார்வேதநதிப்பான்மையுணர்ந்தபரிசெனக்கு
வாயவளித்திநீயெனலுமயிலஞ்சாயல்வழங்கிடுவாள். (௯௨)

எற்றியலைக்கும்வேதநதியேயும்பெருமையெவர்க்கேனு
முற்றுமளத்தற்கரிதாகுமுன்னமெனதுமுதிர்தவத்தாற்
பற்றியுணர்ந்தபடிசிறிதுபகர்வனுலகம்பதினான்கி
னெற்றிவிழியானெனநிகரற்றமருந்தீர்த்தநிறைமதியோய். (௯௩)

விதியாலதனிற்படிந்தாருமொழிந்தார்தாமும்விண்ணவர்தம்
பதியாய்ப்பரமன்பதிவதிவார்பாவமனைத்தும்பறிந்தோடுங்
கொதியார்கூற்றுவேதநதிபடிந்தார்மேனிக்குறுந்திவலை
நிதியாமென்றுமுடிபுனைந்துநெறியிற்றொழுதுநின்றிடுமே. (௯௪)

திருவார்திங்கட்சித்திரையின்மூன்றும்பக்கஞ்செழுங்கதிர்நாண்
மருவாவிலங்கும்பரணிமதிவளரும்பக்கமதிற்படிந்தா
ருருவார்ந்தமலவடிவாகியுருவம்படைத்தகாமனெனப்
பெருவாழ்வனைத்துந்தமவாகப்பிறங்கிப்பொலிவர்பெருந்தவத்தோய். (௯௫)

† நாரிவிலங்கேயாயிடினுநயந்தக்காலத்ததின்மூழ்கி
னேரின்மலிந்தவெழில்வாயவின்புற்றமர்வரெஞ்ஞான்றும்
பாரினெனதுமுற்பிறப்புப்பகரக்கேட்டிபரிதியென
வாரியெறியுமணிநிரைசூழ்மறைசைமானின்வடிவுற்றேன். (௯௬)

---

* உருபௌதாரியப் பிரதமென்னுங் காரணப் பெயரை அன்று முதலாக அவ்வேதநதி பெற்றுக்கொண்டது; உருபத்தையும் ஔதாரியத்தையும் மிக வுங் கொடுப்பதென்பது பொருள். இது வேதநதியின் நூற்றெட்டு நாமங் களுளொன்று. † பெண்ணாயினும், விலங்காயினும்.

வனத்திற்பசும்புற்கறித்துகளுமறிகளோடுமேறைசைவனப்
புனத்திற்பயிலுமந்நாளிற்புலியிற்சிலையிற்பொலிவேடன்
சினத்திற்பகழிவிடக்கலங்கித்திகைத்துத்தெளிவற்றயர்ந்தோடி
யினத்திற்பிரிந்துவேதநதியிடையிற்படிவுற்றிறந்தனனே. (கூஎ)

* நடுவனுட்சித்திரைத்திங்கணைகையம்புலியின்வளர்பக்கந்
தொடுமுந்நாளிற்கதிரவனுட்சுடரோனுச்சித்தோற்றியறன்
[illegible]பயமூழ்கிமுன்செய்பெருந்தவத்தாற்
கடுகுந்திரையினிறந்துபெருங்கதியிற்பிறந்துகவின்பெற்றேன். (கூஅ)

தெளியுந்தீர்த்தப்பெருமையினூற்சிவனிங்கமருஞ்செய்கையினு
லொளியுமுருவுநிறைந்தவெழிலுயருஞ்சாயலொடுமேவிக்
களியினமர்ந்துபெருந்தேவர்கண்ணுக்கணியாங்கவின்பெற்றே
னளியிந்நதியினியல்பறிந்துபடிந்தார்பெருமையளப்பாரார். (கூகூ)

இன்னகாலத்தித்தீர்த்தமிறைஞ்சிப்படிந்தாரெழில்வாய்ந்து
பன்னுங்கொடியபாதகங்களுபபாதகங்கள்பலவீட்டிப்
பின்னுஞ்சடையோனமருலகம்பிரியாதுறைவர்பிறப்பினொடு
மன்னுந்திரையுநரையுமறவயங்கிவாழ்வர்மனமகிழ்ந்தே. (எ0)

தேனிற்றிகழுஞ்செவ்வழியாழ்த்திறமேதெரியுநாரதனுங்
கானிற்பொலியும்வேதநதிகலந்துபடிந்தேகாதலொடும்
பானற்றடங்கணுமையோடும்பரமற்போற்றிப்பதிபடர்வான்
வானிற்றிகழுநாரதனைக்கண்டான்வலியவிராவணனே. (எக)

முடியாற்றொழுதெவ்விடையேகிப்போதிமொழிதிமுனிவவுள
மடியாதெனலுமடற்றிணிதோள்வலியாலுலகமகிழ்ந்தேத்தும்
படியாயமலற்கினிதாயபண்பாய்வேதநதிபரமன்
குடியாயுறைவதிற்படிந்துகுறையற்றெழுகேன்குளிர்ந்தெனலும். (எஉ)

முரியுந்திரைசூழ்வேதநதிதன்னின்மூவாமுதலானே
னரியுமயனுமளப்பரியோனமலையோடுமகலாது
பரியுந்†கணங்களொடுமுறைந்துபடிந்தோர்க்கருளும்பான்மையினைத்
தெரியும்படிநீயுரைத்தியெனத்தெய்வமுனிவன்றெளிந்துரைப்பான். (எங)

மதியின்வயிறுகுடைந்தமுதம்வார்ந்துசுவேதவடிவாகிப்
பதிபொன்சிகரப்‡பருப்பதத்துப்பயில்வோன்கூற்றென்பகைசெற்றோன்
கதியின்மாணிமாதனெனக்கரையும்பெயரான்கடல்வேத
நதியின்மூழ்கிவேதவனநயந்தபெருமானடிபோற்றி. (எச)

---

* நடுவனுள்-பரணி. † ஈண்டுக் கணங்கள் என்றது விநாயகர், சுப்பிரமணியர் முதலாயினுரை. ‡ பருப்பதம்-ஸ்ரீசைலம்.

இனியமதுரத்தேனொழுகுமிசையானடத்தாலென்புருகிக்
கனியுந்துதியாற்சுவைபொழியுங்கவிஞர்*காட்சிவினயத்தாற்
குனியக்கனகவரைவளைத்தகோமானுவப்பக்குயிற்றுதலும்
புனிதப்பெருமானருள்கூர்ந்துபுகனீவேண்டிற்றெனப்புகல்வான். (எரு)

† கருவெம்பகுவாயராக்கடுவிற்கருகுமுயிர்கள்கதிவாய்ந்தே
யுருவுந்திருவுந்தெளிவுமுறவுமையுநீயுமுயர்கணமு
மருவும்படியேர்வேதநதிவைகல்வேண்டுமெனமகிழ்ந்தே
பெருகுங்கருணைப்பெருந்தகையும்பிரியாதிதனிற்பிறங்குவனே. (எசு)

நாதனுமையோடகலாதுநயக்குமதனுலித்தீர்த்த
மோதுந்தேவபூடணமென்றுலகமதனினுவந்தேகி
மோதுந்திரையிற்படிதியெனமுனிவனுரைப்பமுகமலர்ந்து
பாதம்பரவிவிடுத்தடைந்துபரவைவேதநதிப்பாங்கே. (எஎ)

தொழுதுமூழ்கியெழுந்திடலுஞ்சுருதிவனத்திற்சுடர்ச்சோதி
யெழுதுகொடிமாதொடுமமர்ந்தவியற்கைநோக்கியெழுந்தாடி
முழுதுமாயதனிமுதலைமுகந்துபருகிமுறைமுறையே
யழுதுபணிந்துகூத்தாடியவசமாகியருள்பெற்றே. (எஅ)

பணியாற்பரவியரக்கரிறைபடர்ந்தான்பரசுமிதன்கரையிற்
றுணியார்பாவக்குவைவீட்டுங்கோலாகலனுந்துறந்துயிர்வா
னணியாயமர்ந்தானகலிடத்தினளவிலாதாரடைந்தாடி
மணியார்வேதநதியமலவடிவமாகிவரம்பெற்றார். (எகூ)

என்றுவேதநதிப்பெருமையிசையவியம்பிமேனகையுந்
துன்றுமகிழ்வாலருள்பெற்றுத்துறக்கத்தடைந்தாள்கௌசிகனும்
வென்றுபொறியைந்துளமடக்கிவேட்கையரிந்துவிமலனடி
யொன்றுஞ்சமாதியொடுந்தவத்தையுலப்பில்காலமுஞற்றினனே. (அ0)

வேறு.

மறைநெறிகௌசிகன்மனமொடுபொறியொருவழியாகப்
பிறையணிபுரிசடையிறையவனடியிணைபிரியாதே
குறையறுதவநிலைகுலவிடவமரர்கள்குலைவாகி
யறைதரவவனுழையரமகளணுகினளடல்வேலோய். (அக)

விசுவாமித்திரர்மேனகை*சம்வாதச்சருக்க முற்றிற்று.

* சம்வாதம்-நன்குகவாதித்தல்.

ஆ திருவிருத்தம் உ,0சஉ.

---

* காட்சி-தரிசனம். வினயம்-வணக்கம். † பிறவியாகிய வெவ்விய பிளந்தவாயையுடைய பாம்பினது நஞ்சினாற் கருகுமுயிர்கள்.

# திலோத்தமைச்சருக்கம்.

ஊறியதீங்கனியுடைந்ததேறல்போற்
கூறியநன்மொழிக்கோதில்கொள்கையாய்
வீறியகௌசிகன்மேவிநோற்புழி
நாறியகருங்குழனயந்ததென்னென. (க)

திருந்தெழிற்றிலோத்தமைசெறிந்தநற்கதை
விருந்தெனக்கதிதரும்விழைந்துகேளென
வருந்தவநாரதனருளினனடற்
பருந்துழல்வேற்கையானுணரும்பான்மையே. (உ)

நயந்தெரிகௌசிகனடுக்குநற்றவஞ்
சயந்தரகோற்றலுந்தருவினீழலா
ரயர்ந்திவனம்பதியாக்கம்வேண்டியே
வியந்துறுந்தவத்தெனவெருவிமேவியே. (ங)

சதமகற்குரைத்திடவவனுஞ்சார்ந்திடும்
புதரொடுந்திலோத்தமைபோதக்கூவியே
யுதவிசேவானவர்க்குஞற்றுங்காலமீ
திதமுறக்கேளெனவிசைத்தன்மேயினன். (ச)

எழில்வளர்கொடிநினதேரினற்றவ
மழிதரவிழிதவரளவிலார்மதுப்
பொழிதருநற்பதிப்போகம்வேண்டியே
மொழிதருமறைவனத்தின்றுமுற்றியே. (ரு)

ஆற்றிடுங்கௌசிகனரியநற்றவம்
வேற்றடங்கண்ணிநின்வேளம்பாற்றிடுந்
தோற்றமார்செய்கையிற்றொடக்கிச்செய்தவ
மாற்றுதற்குனையலான்மாதரில்லையே. (சா)

வேறு.

கடிதினேகிமுடித்தியெனக்கதிர்ப்பாரிளவெம்முலைப்பாரத்
தொடியுமருங்குலெனச்சதங்கையொடுநற்சிலம்புமொருங்கரற்ற
நெடியகருங்கட்கயல்புரளநெடுமென்குழற்பூஞ்சுரும்பார்ப்ப
நொடியின்வேதவனத்துமுனியிருப்பினுடங்குமிடையடைந்தாள்.

புரியினிரங்குஞ்செவ்வழியாழ்ப்புதியமதுரத்தீஞ்சுவைத்தேன்
வரியினுருவுற்றெனக்களமார்மணிமென்களத்திறொலிகூட்ட
வரியுமரமுங்குழைந்துபுலனவியப்பாடியலங்குமொளி
விரியுங்கவினுற்கிறிபலவும்விரகம்பரவவிளக்கினளால். (அ)

அன்னப்பெடையிற் * பரியகங்களரற்றவஞ்சனமருங்கா
னன்னர்க்கருமக்கௌசிகனுநடுவெம்பகலின்மணிகன்னி
யுன்னிப்படர்ந்தங்குறுமவளையுருத்துநோக்கவுறுவழியா
லின்னற்படுபூவல்லியெனவியையுநடுக்கத்திடைந்தனளே. (கூ)

கம்பித்தயருந்திலோத்தமைநீகலங்கலொழியிக்கருமத்தால்
வெம்பித்துயருந்துறக்கமதுவிழைவேனல்லேன்விண்ணவர்தாந்
தம்பித்தனுற்சமைத்ததிதுதாயினுதரந்தரியாது
நம்பிப்பிரமப்பிறப்புறவானயந்தேன்றவத்தினறுநுதலாய். (ௗ0)

புரையார்பிழையொன்றினையறவோர்பொறுத்தலறமென்றிதுபொறுத்தேன்
றரைவாயீங்குன்றனைக்காணிற்சபித்தல்சரதமினித்தகவின்
விரையார்குழலாய்விண்மருவிவிழையுஞ்செய்கையெனத்துரையென்
றுரையாமணிகன்னியிற்கருமமுஞற்றியுடசத்துற்றனனே. (கக)

வேறு.

ஈங்குநீயகன்றுபோகியிமையவருலகமேவிப்
பாங்குறப்பொலிதியென்னுங்கௌசிகன்பகர்ச்சிகொள்ளா
ளாங்குறின்மகவான்சாபமளிக்குமென்றஞ்சிஞாலத்
தோங்குமாமறைசைக்கானத்துழையினதுருவமுற்றே. (கஉ)

திரிதரமற்றைமானின்றிரள்கண்டுதிகைத்துத்தூரத்
திரிதரக்காதிமைந்தனிருக்கைசூழ்ந்தியங்குநாளிற்
றெரிதருமறைசைநாதன்றிருவடிபரவச்செல்வா
னரிதருமானின்கோலத்தணங்கினையறிந்துசொல்வான். (கங)

தருநிழலுலகமேவிச்சார்கெனச்சாற்றுமாற்ற
மொருவினைகரவின்மானினுருவுகொண்டுழல்வாயென்று
வெருவுறச்சபித்தலோடும்விளங்கெழிலுருவமாறித்
திருவனுளுழையாயாங்கட்டிரிந்தனணெடிதுகாலம். (கச)

உழையினதுருவமாகியுறுதுயருற்றுப்பன்னாட்
டழைதருகானிற்சேர்வாள்சார்தருதவத்தினோர்நாள்
விழையுநீர்நசையால்வேதநதியிடைமேவிமாந்துப்
பிழையுறுசாபந்தீர்ந்துபெருகெழிலுருவம்பெற்றாள். (கரு)

---

* பரியகம்-கைச்சரி, காற்சரிகள்.

செங்கதிர்க்கிரணந்தூவுஞ்செழுமணியணிகள்சேர்ந்து
வங்கலும்மேனியோடுமெணங்கினுக்கணங்காய்ச்சாப
மங்கியதிந்தவேதாதிப்புனன்மாந்தியென்னுப்
பொங்கியகளியினேடும்பூமழைபுலவர்தூவ. (கசு)

தேவபூடணத்தின்மூழ்கித்திகழ்மணிகன்னியாடி
யாவலின்வேதநாதனடிக்கமலங்கள்போற்றிப்
பூவருங்குழலியேந்தும்புணர்முலைபோகமேய்ந்த
காவலன்றன்னையேத்துங்கருத்தினற்கசிந்துசொல்வாள். (கஎ)

போற்றிவேதவனத்துறையும்பொருளேபுகலேயுறுஞ்சாப
நீற்றியாண்டவின்மலனேநினையாக்கொடியதீவினைக
ளாற்றுங்கோலாகலற்கழித்தவமுதேயிராமன்வீரகத்தி
மாற்றியருளுமுசுகுந்தவரதாதனிமாவலிவாழ்வே. (கஅ)

பரியுஞ்சவுதாசனுக்கருளும்பரமேபோற்றிதிரிசங்கு
கரியுஞ்சிறுமையொழித்தளித்தகண்ணேபிரமசரிகதியே
தெரியுமறைதேர்குறமுனிதன்சிந்தைத்தெளிவேசனகாதிக்
குரியஞானச்சுடரளிக்குமுணர்வேமகவானுறுதுணையே. (கக)

அருளேவசிட்டன்றுவாத்தோடமகற்றுமருந்தேவீணைமுனி
தெருளேசிவமேசிற்பரமேசிந்தைத்தெளிவேசெழுந்தேனே
பொருளேயாகவெனையாண்டபுனிதாபோற்றிபுகலாகி
மருளேயொழியவேதவனமகிழ்ந்தாய்போற்றியெனப்பணிந்தாள்.

இரந்துகுழைந்ததிலோத்தமைநேரிமையோர்பெருமானெதிர்தோன்றிச்
சுரந்தவருளால்வேதாதித்தோயமாந்தத்துயர்ச்சாபங்
கரந்துபோயதுனதன்பாற்காட்சியளித்தோங்கருதுவரம்
புரந்துதருவோமுரைத்தியெனப்புகன்றானுலகப்புகலானன். (உக)

கூறுமொழியினெதிர்போற்றிக்குழகநின்சேவடிக்கமலத்
தூறுமன்பேவேண்டுமெனதுரையார்துதியையுரைப்பார்க்குப்
பேறும்பயனுமளித்தியெனுப்பின்னும்பணிந்துவிடைபெற்றே
நாறுங்குழலுஞ்சுவர்க்கத்தினடந்தாளமரர்நயந்தெதிர. (உஉ)

வேறு.

சேயரிக்கட்டிலோத்தமைசீர்க்கதை
யாயவோதினர்கேட்பவராற்றிய
காயமார்வினைநீங்கிக்கதிமரீஇ
வாய்வர்நீதிமனுத்தருமைந்தனே. (உங)

திலோத்தமைச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் உ,0௩ரு.

---

# திரிசங்குச்சருக்கம்.

இரும்பூதுதருங்கதையொன்றின்னமுங்கேளிசையாடைதிசைமாதேய
நறும்பூகமலர்ச்சோலைநகைவானங்கரிதுசெயநல்கயோத்தி
யுறுந்தாரைநெடுவேலானுடைதிரைநீருலகனைத்துமொருவனாகிப்
பெறுந்தாயைநிகர்த்தளிக்கும்பெரியவிறைதிரிசங்குப்பெயரினானே. (க)

நெய்மலியுமாகுதியானிறைவேள்விபலவாற்றிநெடியவானும்
வையமெனவளித்தமர்வான்வாய்ந்தவுடலொடுஞ்சுவர்க்கமருவவேள்வி
செய்யநினைந்தனனாகித்திகழ்வசிட்டனடிபோற்றிச்செப்பத்தேர்ந்து
மையலிஃதரியதெனமறுத்திடலுமறைமுனிதன்மைந்தர்தம்பால். (உ)

போயுரைப்பவவருமரிதெனப்புகலத்திரிசங்குபுலர்ந்துபூமே
லேயுமொருமுனிவரனாலியற்றிடுவெனெனவவர்தாமெரியிற்சீறி
மேயவழிமுறைபரவுங்குரவனைத்தீர்ந்தொரு *வரனால்விழைவேனென்னுந்
தீயவுரைபகர்ந்ததனாற்சண்டாளனாய்த்திகைத்துத்திரிநீயென்றே. (ங)

கொடியகடுந்தழற்சாபங்கொடுத்திடலுஞ்சண்டாளக்குறியினாகி
வடிவுடையுங்கரிதாகிமணியணியுமயமாகிமயங்கமுன்னா
ளடியடைந்தமந்திரிகளகலாதாரருவருத்தேயகற்றம்மாழ்கி
நெடியடவியடைந்துழன்றுநெடுங்காலமுளத்தினியநினைவுநேர்ந்தே. (ச)

வேறு.

காதிமைந்தன்றனக்குரைத்துக்கவலைகளைவனெனக்கருதிச்
சோதிவேதவனமடைந்துதுறவோற்றேழுதுதுதித்தினிய
வோதித்தொழுதேன்றிரிசங்குவென்னவுரைப்பவுவந்தெழுந்து
நீதிப்புகழோயிவ்வண்ணநிகழ்ந்ததென்னைநிகழ்த்தெனலும். (ரு)

வண்ணமனைத்தும்வரலாற்றுமுறையின்வகுப்பவடிவேலோ
யெண்ணமொழிதியிவ்வுடலோடினியசுவர்க்கமெளிதெய்தப்
பண்ணுமகமொன்றியற்றிடுவன்பணிமாமறைசைப்பழம்பதிசே
ரண்ணலருளான்முடியாததுளதோவிதுநீயாற்றிடுவாய். (சு)

நினைந்ததளிக்கும்வேதநதிநெடுநீர்க்கோடிமணிகன்னி
நனைந்துவேதநாயகனையிராமற்கருளுநம்பரனைப்
புனைந்தவிடங்கன்றனைப்பணிந்துயோதியசனாற்புலையுருவ
மினைந்துகழியும்பின்மகத்துக்கிறைவனாகவியற்றிடுவாம். (எ)

* வரன்-முனிவன்.

என்னுங்குசிகன்மகன்மாற்றமினிதென்றேகியிரங்குளத்தாற்
பன்னுந்தீர்த்தமொருமூன்றும்படிந்துகோயில்பன்முறைசூழ்ந்
தன்னுமுளத்துத்தெளிவாயவொளியேயுமையோடுறைவரனே
பின்னுஞ்சடையாய்பிறந்திறவாப்பெரியோய்மறைசைப்பெருவாழ்வே. (அ)

ஈனப்படுமிதூர்த்திபிலக்குமுடலோடிமையவர்தந்
தானத்தமரவளித்தியெனத்தாழ்ந்துபணியத்தருணவிளங்
கூனற்பிறையோனஃதனக்குக்கூடுமளித்தோமெனப்போற்றி
ஞானப்பொருளைவிடங்கேசன்றனையுமிராமநாதனையும். (௯)

பற்றிப்பரவிக்கௌசிகன்றன்பாதம்பணியப்பலவேள்வி
முற்றித்துணிந்தமுனிவரொடுமுறையார்மறையினிறைவேள்வி
கற்றைச்சடையானடியுளத்துக்கருதியாற்றிக்கடிமுடிய
வெற்றிக்குரிசிலுடலோடும்விண்ணோர்சுவர்க்கமேவினனே. (௧0)

அறிதற்கரியபெரும்பெருமானமலவேதவனநாத
னெறியிற்பரவவளியாதநிலைமையுளதோநீசவுருச்
செறிவுற்றயருந்திரிசங்குத்தீமையொழித்துத்தேவர்குழாங்
குறியிற்பரவவளித்தருளுங்கொள்கையதனாற்குணக்கோவே. (௧௧)

வாகைக்கதிர்வேன்மனுமைந்தன்மறைதேர்முனிவன்முகநோக்கிப்
பாகைத்தருஞ்சொற்றிலோத்தமையும்பண்பார்திரிசங்குவும்பயனு
ரீகைத்தருவானெய்தியபின்னிருந்தகுசிகனியன்மைந்த
னோகைத்தவத்தாலுற்றசெயலுரைத்தியென்னவோதுகிற்பான். (௧௨)

உயருந்தவத்தாலென்புகனிந்துருகுந்தரமுமுறநோன்பாற்
றுயருந்துயருங்களியாக்கித்தோயஞ்சருகுதுய்த்தலுமற்
றயருமுடம்பிற்காற்றடக்கியகற்றிச்சுவாசமறப்புரிந்தான்
மயரும்பிரமபிலத்தின்வழிவன்னிநடப்பமாதவமே. (௧௩)

பிரமபிலத்தினெழுந்தகனற்பிறக்கம்பெருவானகமேவிப்
பரவவிமையோர்பிரளயத்திற்பயங்கூர்ந்தயர்ந்துபங்கயத்தோன்
சரணமருவிக்காதிமகன்சாருந்தவந்தீர்தனியாய
வரமின்றளித்தியில்லையெனின்வானமடங்கமடியுமென. (௧௪)

பணியுமிமையோர்தம்மோடும்படர்ந்தேவேதவனமேவி
யணியுமணியுஞ்*சிதர்ந்தொளிகான்றமலமாகியறைவேதந்
துணியுமொலியுமகவொலியுஞ்சூழ்ந்துவனத்தாற்சுரருலகுந்
தணியுந்தகையதிதுவேதத்தலைவனருளாற்றழைத்ததென. (௧௫)

---

* சிதர்தல்-சிதறல்.

உம்பரோடுங்கௌசிகனதிருக்கையுறலுமுவந்தெழுந்தே
வம்புமலர்பாத்தியமுதலவழங்கிப்பூசைவழங்கியபி
னம்பொற்கமலத்தயனுமுனதரியதவத்தால்வரமருள்வா
னிம்பர்ப்புகுந்தோமுரைத்தியெனவிசைப்பமுனிவனியம்பிடுவான். (௧௬)

அன்பானினைந்ததளித்தியெனினந்தணளரரியபிறப்
பென்பால்வழங்கென்றுரைசெய்யவீந்தோமென்னவெனைவசிட்டன்
முன்பாற்பிரமவிருடியெனமொழியின்முறையாமெனவவனைத்
தன்பாற்கூவியினையவுரைசாற்றுகெனலுந்தவனுரைப்பான். (௧௭)

பிரமவிருடிநீயெனயான்பேசேனென்னப்பேசாயேற்
*சரமமுலகந்தவத்தழலாற்சாருஞ்சாரத்தருமறைசைப்
பரமன்வெகுளுமுனைவெகுளிற்பற்றொன்றிலையாற்பணியாதார்
புரமன்றெரித்தோனடிக்கன்பனுருங்குசிகன்புத்திரனே. (௧௮)

நீயுஞ்சுருதிவனநாதற்கன்பனதனுனிறைசேண்மை
வாயும்படிநீயுரைத்தியெனமறைசைப்பெருமானருட்கஞ்சி
யாயும்பிரமவிருடியெனவடைந்துமொழிந்துகௌசிகனுக்
கேயும்பிரமவிதியனைத்துமியம்பிவசிட்டனிந்தனனே. (௧௯)

அந்தணளர்க்கியன்றவிதியனைத்தும்வசிட்டனுய்ந்துரைப்பச்
சிந்தைமகிழ்ந்தான்கௌசிகனுந்தேவரோடுந்திசைமுகத்தோ
னெந்தைவேதவனநாதனிணைத்தாளிறைஞ்சிவிடைபெற்றே
முந்தையுலகஞ்சென்றடைந்தான்மொழிந்தவசிட்டன்முதமுற்றே. (௨0)

பன்னசாலைகௌசிகனோடுமைத்துப்பழையமறையனைத்து
முன்னமளித்தவேதவனமுதல்வன்முளரிச்சரணங்க
ளின்னநீரமுப்போதுமிறைஞ்சிவேறற்றிருவோரு
மன்னம்படியும்வேதநதியாடியமர்ந்தேயருள்பெற்றார். (௨௧)

வேறு.

அரசனாகியகௌசிகன்றொழுகுலத்தந்தணர்குலமாகி
விரைசெய்வேதமாநதிப்புனன்மேன்மையால்விளங்கியவிக்காதை
பரசுவார்வினைபற்பலவீட்டியேபரவையிறுனைபாற
முரசமார்த்திடுமறைவனத்தரனடிமுளரியினகலாரால். (௨௨)

திரிசங்குச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் உ,0௫௭.

* சரமம்-முடிவு; அது சரமகவி என்பதனு முணர்க.

## விசுவாமித்திரருக்குத் தருமோபதேசஞ்செய்தசருக்கம்.

* நீதிமனுவின்குலமைந்தனிறையுந்தவத்துநாரதனும்
போதினுறைவோன்மகன்வதனம்புரிந்துநோக்கிப்புகழ்மிக்கோ
யாதிவருணத்துரியநிலையனைத்தும்வசிட்டன்கௌசிகனுக்
கோதியிழைத்தவகையினைநீயுரைப்பாயென்னவோதினனால். (க)

அடியிற்பணிந்தகௌசிகனையணைத்தே†யேந்தியருணோக்கான்
முடியிற்கரம்வைத்தருமறையின்முதற்குரகமு‡முப்பதமும்
வடிவுற்றமரும்வியாகிருதிமற்றுமளித்தேமறையீறுங்
குடியுற்றமரப்பணித்தருளக்குறையற்றவனுங்குலவினனே. (உ)

அரசவுரிமையொழித்தமலவந்தணளர்பெருந்தன்மை
விரவவளித்தமணிகன்னிவேதநதியில்விதிநாளும்
பரவிப்படிந்தேயுபதேசம்பணித்தவசிட்டன்பாதமல
ரிரவிற்பகலிற்பணிந்தவனேடியல்வாளொருநாளின்புறவே. (ங)

போற்றிவசிட்டன்பாதமலர்ப்போதுசூடிப்புனிதமறை
யாற்றினமரும்வருணமுடனுமாச்சிரமத்தறமனைத்துந்
தேற்றியருள்வாயெனவுரைப்பத்தெய்வமுனிவன்றிசைமுகத்தோன்
சாற்றும்வருணதருமத்தின்றகைமைவகுத்துச்சாற்றினனே. (ச)

### வருணப் பொது விலக்கு.

வஞ்சங்களவுகொலைமறங்கோள்வயிரம்பிறர்தமனைக்காம
மெஞ்சாவெகுளிபழிதூற்றலிடுக்கணுயிர்கட்கிழைத்திடுந
னஞ்சமனையகடுஞ்சொனகைநடுவிற்றீர்தனசைவசையெற்
றுஞ்சலுலோபமசத்தியம்வீண்சொல்லல்சூதுதுணிவறலே. (ரு)

குரவர்தந்தையனைமூத்தோர்குலத்தினுயர்ந்தோர்கோவறவர்
புரவுபூண்டோர்கடவுளறம்புரிநூன்முதலவிகழ்ந்திடுதன்
மரபுபிழைத்தலிவைமுதலாவகுத்ததீமையொழித்திடுதல்
பரவுவருணமனைத்தினுக்குமுரியதருமம்பயன்பெறவே. (சு)

### வருணப் பொது விதி.

சாந்திமனமிந்தியமடக்கறவஞ்சால்பொழுக்கந்தவறின்மை
காந்திகருணையிரக்கமருள்சிராத்தஞ்சிரத்தைகண்ணோட்ட
மேந்துதானம்விருந்தோம்பலின்சொலெவர்க்குங்கலைக்கடலை
நீந்தியடங்கலிவைமுதனற்குணங்களெவர்க்குநிகழ்த்தினவே. (எ)

---

* நீதியையுடைய மனுவினது குலத்திற் பிறந்த புதல்வனாகிய மாந்தாதா.
†ஏந்தி-தூக்கி. ‡முப்பதம் - திரிபதாகாயத்திரி. வியாகிருதி- ஓர்வேதமந்திரம்.

## ஆதிவருணச் சிறப்புத் தருமம்.

கற்றுமறையுங்கரிசறவேசருதஞ்சுருதிமிருதிமுதன்
முற்றுங்கருமஞ்சௌசாதிமுழுதுமுடித்துமகமாற்றிப்
பற்றுஞ்சந்திவந்தனமும்பரமன்பூசையுபாசனமு
முற்ற * மகாவஞ்செச்சமுதல்வருணிதுறந்தார்க்குணவுதவல். (அ)

மகமும்பிறவுமாந்தொழிலும்வரம்புந்தெரியவகுத்திடுநூ
லுகவேவினைகள்பரப்பிரமத்துண்மைநயத்தாலுரைத்திடுநூ
லிகவாத்தருமநூறருக்கமெண்ணேயோகஞ்சாங்கியமுந்
தகவேயுணர்தன்முதற்றருமந்தக்கதாகுமறையவர்க்கே. (கூ)

## க்ஷத்திரியவருணச் சிறப்புத் தருமம்.

† ஆறுதொழிலின்முத்தொழிலுநீதிநூலுமடையலரைக்
கூறுசெய்யும்விற ‡ லபயக்கொடையஞ்சாமைகுடியோம்ப
லூறுபுரிவார்த்தகுதியுறவொறுத்தல் § வில்லொத்துலையாமை
வீறுபுகழ்பூசனைபுரத்தன்முதலாம்வேந்தர்விழுப்பயனே. (௧0)

## வைசியவருணச் சிறப்புத்தருமம்.

0 உரைத்ததொழின்மூன்றுடன்பாலாவோம்பலுயர்ந்தோர்ப்பணிந்தீதல்
வரைத்துக்தொளலுங்கொடையு + நடுவண்ணமாயவாணிகமும்
நிரைத்தநிதியமாக்கலரணிகழ்த்தும்பூசைநிலவளங்கோள்
புரைத்தாள்வழாமைமுதற்கருமம்வணிகர்க்காகப்புகன்றனவே. (கக)

## வேளாளவருணச் சிறப்புத் தருமம்

உயர்ந்தோர்க்கேவலுஞற்றிடுதல்குரவர்ப்பேணலொழியாது
பயந்தோர்க்கினிமைபலவியற்றல் = பாகவெச்சம்பணனுனம்
நயந்தேசிராத்தம்புரிந்திடுதனவிற்றுபூசைநசையொழுக்கம்
வியந்தேருழவுவாணிகமும்வேதன்பாதம்விரவினர்க்கே. (கஉ)

---

* பஞ்சமகாவெச்சம்-ஐம்பெருவேள்விகள். அவையாவன:—பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம் என்பன. வருணி-பிரமசாரி. † ஆறுதொழிலின் முத்தொழில்களாவன:—வேட்டல், ஓதல், ஈதல்கள். எனவே, வேட்பித்தல், ஓதுவித்தல், ஏற்றல்கண் மூன்றும் அரசர்க்குரிய வல்ல என்பதூஉம், ஆறும் அந்தணருக்கே உரிய என்பதூஉம் பெறப்பட்டன. ‡ அபயக்கொடை-அபயப்பிரதானம். பிரதானம்-கொடை. § வில்லொத்துலையாமை-தனுர்வித்தையிலே சதாஞாபகம். 0 முன்னே க்ஷத்திரியர்களுக்குச் சொல்லப்பட்ட முத்தொழிலும். + நடுவண்ணமாயவாணிகம்-நடுவுநிலைத்தன்மையோடு கூடிய வியாபாரம். = பாகவெச்சம்பணனுனம்-பாகத்தையுடைய யாகஞ் செய்தல், ஸ்நானஞ்செய்தல்.

## மகளிர் தருமம்.

பதியினேவல்பரிந்தியற்றல்பாதபூசைபதம்வருடல்
கொதியிற்கழறிக்கூறிடினுங்குணத்தோடொழுகல்குறிபிழையாச்
* சதிகளோடுதலைப்பெய்தறலைவன்றணப்பிற்றளர்ந்தழுக்கின்
வதிதன்மனையிற்பொருள்பெருக்கிவனப்பைவளர்த்தன்மாதருக்கே. (சகூ)

## பிரமசாரி தருமம்.

† வருணிதருமங் ‡ குருகுலத்துவாசமோவாமறையோதல்
பொருநீர்ப்படிதன்முக்கால § முஞ்சிப்புரிநூல்புல்வாய்த்தோ
றிருநீர்க்கரகங்கோவணமுஞ்செறிந்து o சமிதாதானமுடன்
றருநீர்ப்பயிக்கங்குரவனருள்சார்ந்தேயருந்தறக்கனவே. (கச)

## இல்லற தருமம்.

எழுமுன்கதிரோனைங்கடிகையென்னவெழுந்தேயுடன்மாசு
கழுவியறலிற்படிந்தியற்றுங்கருமமுடித்தேயழலோம்பி
வழுவாததிதிசிவபூசைவகுத்துத்துறவிவருணியிவ
ரெழுவாயவர்கட்கனமளித்தேயீதலாதியில்லறமே. (கரு)

## வானப்பிரத்த தருமம்.

இல்லிற்சிறந்தோனென + வனத்தினியல்வோர்க்கறமாமிதிற்பேதஞ்
சொல்லிற்கந்தங்கனிகாயுந்துய்த்தலைமற்றுந்தெருந்தான
மல்லிற்புரியுங்கூந்தறனையனைபோனினைத்தலுடல்சுருங்கப்
புல்லித்தவமுமியற்றிமறைப்பொருளைத்தியானம்புரிந்திடலே. (கசா)

## சந்நியாசி ஆரம்ப நிலை.

அழியுமனைத்துமெனப்போதமடையிற்கிருகத்தமர்ந்திடினும்
பழியில்வருணியாயுறைந்தும்பற்றற்றொழுகிப்பராவுவோர்
மொழியுஞ் = சீவசிராத்தமுதன்முடித்தும்விரசையோமமுடன்
சுழியுநீரிற்சிகைநூலுநீக்கிப்பிரேடஞ்சொல்லுகவே. (களஎ)

---

* சதிகள்-கற்புடை மகளிர். சதி-கற்பு. † பிரமசாரியினுடைய தருமங்களாவன. ‡ குருகுலத்து வாசம்-குருவின் மனையில் வசித்தல். § முஞ்சிப்புரிநூல்-முஞ்சிப்புல்லினாலே முப்புரிநூல் செய்து தரித்தல். o சமிதாதானம்-பிரமசாரிசெய்யும் அக்கினிகாரியம். சமி - சமித்தை. ஆதானம் - கிரகித்தல். + வனயத்தினில்வோர்-வானப்பிரத்தர்; வனத்திலே தங்குபவர் என்னும் பொருட்டு. = சீவசிராத்தம்-சந்நியாசி தான் சீவனோடிருக்கும்போதே தனக்குத் தானேசெய்துகொள்ளுஞ்சிராத்தம். விரசாயோமம்-ஒருவன் சந்நியாசத்தொடக்கத்தின்முன் முதன்மூன்றாச்சிரமபலங்களின் சித்திப்பொருட்டுத் தானேசெய்யுமோமம். பிரேடம்-பிரேடணம். பிரேடணம்-போதல்.

## சந்நியாசி தருமம்.

தாரமகாவாக்கியமாதித்தக்குரவன்றரப்பெற்றே
வாரமாயகேள்விமுதன்மனையின்சிரத்தைமதித்தமலஞ்
சேரவுயிரும்பரமமுறுந்தெளிவுசீவன்முத்தியினின்
பாரவுணர்ந்துசரீரமுதலனைத்துமிலையென்றனுபவித்தே. (௧௮)

மோனமாகியோகநிலைமுதிர்ந்தேகாந்தமுதல்வாய்ந்து
கானமூரின்புறமேவிப்பயிக்கங்காலஞ்செலவயின்றே
ஞானமாயநிலையினுடனண்ணுங்குணங்களனைத்தினையு
மீனமாக்கிப்பொறையாதியேய்ந்துதாதுவிசைவறவே. (௧௯)

## பிரமசாரி, சந்நியாசி, இருவர்க்கும் பொதுவிதி.

ஒருவனாகித்தனிப்பிரமத்தொன்றிமற்றொன்றுணராதே
மருவன்முதலாந்துறந்தவர்தாம்வாயுந்தருமமடைவரலா
ருருவமுவத்தலுரையாடலொக்கவிருத்தலிவையாதி
வெருவியகற்றல்பிரமசரிதுறந்தோனிவர்க்குவிதித்தனவே. (௨௦)

## பின் மூவர்க்கும் சௌச, போசனப் பிரமாணாதிகள்.

மனையிற்பயில்வோன்*சௌசத்தின்மூன்றுமடங்காம்வனத்தனுக்கு,
நினையினிரட்டி†யதிக்,கூனுநிகழ்த்திற்கிருகிக்கெண்ணான்காம்
வனையுங்கவள,மதிற்பாதிவனத்தோற்,கதனின்வரும்பாதி
வினையிற்றுறந்தோற்,கெண்ணெயடைக்காய்வீசந்தும்விடுத்திடுக. (௨௦)

## புறனடையும், மேல்வினாவும்.

சாதிதருமமாச்சிரமத்தருமமனைத்துந்தனித்தனியே
யோதிற்பலவாம்விதிநூலினுணர்வாய்சுருக்கத்துரைத்தனமாற்
காதியளித்தோயெனவசிட்டன்கரையமகிழ்ந்துகௌசிகனும்
போதித்தவனைப்பணிந்திதுவும்புகல்வாயென்னப்புகல்கின்றான். (௨௨)

## பத்திவிகற்பம்.

வழுவாதொழுகும்வைதிகதாந்திரிகமாகும்வழக்கதனை
முழுவாழ்வருள்வோயுரைத்தியெனமொழிவான்மொழியுமறைமிருதி
யெழுவாயொழுக்கம்வைதிகமா,மீசனுரைத்தவாகமத்தின்
குழுவாயொழுக்கந்தாந்திரிக,மவையுந்தெரியக்கூறுதுமால். (௨௩)

* சௌசம் மலமோசனத்தின்பின் சுத்திசெய்தல. † யதி - சந்நியாசி. ‡ பத்தி வைதிகபத்தியெனவும், தாந்திரிகபத்தியெனவும் இருவகைப்படு மென்பது கருத்து.

## அவற்றுள், வைதிக பத்தி.

நீறுமகத்திற்றிகழ்ந்தனவுநிகழ்த்தும்*விரசைநிறைந்தனவுங்
கூறுமனற்பேர்முதலாகக்கொண்டேயுத்தூளனங்குலவப்
பேருர்திரிபுண்டரமணிதல்பெருமானெழுத்தஞ்சினைநவிற்ற
லாறுபுனைந்தானருச்சனையையாற்றல்கண்டியணிவனவே. (உ௪)

திருவார்கோயில்வலம்வருதல்சிவனைத்துதித்தல்சிவமகத்தி
ஞெருவாதுவந்துபணிந்திடுதலொருவன்காதையுருகுமன
மருவாவுரைத்தல்கேட்டல்சிவமருவுந்தீர்த்தமகிழ்ந்தாடல்
பெருவாழ்வளிக்குமரன்பதியிற்பிறங்கல்பணியைப்பேணுதலே. (உ௫)

† சீருத்திரத்தைத்தினஞ்செபித்தல்சிவன்றனடியார்திருப்பூசை
நாரிற்சூழுந்திருமாலைநந்தவனமுநரையானு
[illegible]றமற்றும்
வாரிற்றிகழுமுலையுமையாள்பங்கன்பரமாய்மதிப்பதுவும். (உ௬)

அன்பும்பொறையுமுயிர்க்கிரங்குமருளுந்தீமையகல்வனவு
மின்பமுயிர்கட்கியற்றிமறையென்றுமோதியிசைப்பனவும்
வன்பான்மாயன்முதற்றேவர்வண்ணம்பழியாவழக்கதுவும்
பொன்பாய்சடையோன்பத்தியெனப்புகழ்வைதிகமாய்ப்புகன்றனவே. (உ௭)

## தாந்திரிக பத்தி.

சமயதீக்கைமுதலாகத்தகவிற்சார்ந்துதகுர்தீக்கைக்
[illegible]ற்றியன்பாய்ப்பரமனடிக்கமலத்
திமயமாதினிருதாளுமின்பார்பூசையியற்றியருட்
கமையாற்பரவித்தியானித்துச்செபித்துக்காலங்கருத்துறவே. (உ௮)

‡ வழியாறினையும்யோனியினைவகுத்துச்சோதித்தவையாறு
முழியாமுப்பத்தாறுகியுயர்தத்துவமுமவற்றிஞெடுங்
கழியாவுயிருமலமாயைகருமமிவற்றைக்கழிப்பனவு
மழியாச்சாதாக்கியமையைஞ்சாகுமகேசமறிவனவும். (உ௯)

சுத்தியிவற்றிற்கியற்றுவதுந்துரியமிறந்தசுடரிவற்றை
வித்திற்பயிர்போல்விளைப்பதுவும்விமலமாயவனுபூதிப்
பத்திக்கடலிற்படிவதுவும்பாகம்படரச்சத்திபதித்
சத்திக்கருளுமதுவுமரற்கறையுமுபாதித்திறமூன்றும். (௩௦)

ஆய்ந்துபதார்த்தத்திறமூன்றுமருளாலளிக்குஞ்சிவன்சத்தி
வாய்ந்தசிருட்டியிவைமுற்றுமதித்தேபரமசிவத்தோடுந்
தோய்ந்துமருவலாகமத்திற்றுணிதாந்திரிகமெனவசிட்ட
னேய்ந்தமொழிக்குச்சிவசிருட்டியெது § மற்றேதென்றிடவிசைப்பான். ( )

---

* விரசை-ஓர்நதி. † சீருத்திரம்- ஓர்வேதமந்திரம். ‡ சடத்துவசுத்தி விஞ் ஞானம். விஞ்ஞானம்-அறிதல். § ஈண்டு மற்றென்றது சத்திபேதசிருட்டியை.

அணிதற்கரியபரமசிவஞ்சொலின்முத்திறமாஞ்சுடரினுல
கணி * நிட்களநிட்களசகளமருளார்சகளமவற்றின்முதற்
பணிநிட்களஞ்சொற்றொடர்பகன்றுபரிபூரணமாய்நிரஞ்சனமா
யெணுதற்கரிதாய்க்குணங்குறியொப்பெல்லைவிகாரமில்லதுவே. (௯௨)

* நிட்களம்-உருவமில்லது, நிட்களசகளம்-அருபாரூபம், சகளம்-உருவமுள்ளது. நிரஞ்சனம்-அஞ்சனமில்லாதது. அஞ்சனம்-இருள்.

சிவதத்துவமாமதுஞானந்திகழுங்கிரியையிச்சையிவைக்
கவவிற்சகளநிட்களமாங்கருதிற்சாதாக்கியமிதுவே
யுவமைக்கரியசதாசிவமாயொளியார்பீடலிங்கமதாய்த்
தவமிக்கிலங்குமைம்முகமுந்தடந்தோள்பத்துஞ்சார்ந்திலங்கும். (௯௩)

(இதன் பிண்டப்பொழிப்பு.) அந்நிட்களசிவமானது ஞானசத்தி,கிரியாசத்தி இச்சாசத்திகளோடு கூடிற், சகளநிட்கள சிவமுற்பத்தியாம். இதுவே சாதாக்கியமாகிய சிவலிங்க வடிவம். இச்சிவலிங்கமே சதாசிவமெனப் பட்டுப், பீடலிங்காகாரமாய், ஈசான முதலிய வைந்து திருமுகங்களும், பத்துத்திருக்கரங்களுமாய் விளங்கும். என்பதாம்.

அன்னவுருவின்மகேச்சுரமாமதுவேசகளமதிற்றோன்றும்
பன்னுமிருபத்தைந்தாயபடிவஞ்சத்திபரித்தவையு
மன்னுஞ்சோமதரனுதிவயங்குஞ்சத்தியுடன்மலிந்தார்
முன்னுமகேசனம்பிசத்திற்சத,மாயிரமே,மொழியயுதம். (௯௪)

(இ-பு.) அச்சதாசிவத்தினின்றும் சகளமாகிய மகேச்சுரம் உற்பத்தியாகும். அது சத்திசமேதமாய்ச் சந்திரசேகரர் முதலிய இருபத்தைந்து விக்கிரகபேதமாம். அம்மகேச்சுரனது நூற்றிலொருகூறு உருத்திரனும், ஆயிரத்திலொருகூறு விஷ்ணுவும், பதினாயிரத்திலொருகூறு பிரமாவுமாகத் தோன்றும். (எ-ம்.)

நீலக்களனுமுருத்திரனுநெடியமாலுமறையோனுங்
கோலத்துதித்தாரவர்தம்பாற்குலவுந்தேவர்நரராதி
சாலத்திகழ்ந்தாரிவர்பரமன்றனையும்பூசைத்திறஞ்சார்ந்தே
யேலச்சாலோக்கியமாதியெய்துங்கதியுமீரிரண்டே. (௯௫)

வேறு.

உருவாகுமிலிங்கமதிற்சிவனையருச்சிப்பதுபோலொளியினுகித்
திருவாயுஞ்சக்கரத்திற்செயும்பூசைத்திறமுனக்குச்செப்பி † னுப்பண்
குருவாகும்விந்துவுறனுன்கிருநான்கதன்மீதுகுலவீரெட்டு
மிருபானேடுறுநான்குமிதழ்முறையேகோணமுமேலெண்ணுன்காமே. ()

† மத்தியில் விந்து, அதைச்சூழ்ந்து சதுர்த்தளம், அதைச்சூழ்ந்து அட்டதளம், அதைச்சூழ்ந்து சோடசதளம், அதைச்சூழ்ந்து சதுர்விம்சதிதளம், அதைச்சூழ்ந்து துவாத்திரிம்சதிகோணம்.

இலங்கியவிந்துவினிருபான்முத்திறமாந்தத்துவருக்கீசர்தம்மை
லங்கொளமேற்கொண்டுவருமூன்றெழுத்தாலருச்சனையைநாடிச்செய்தே
விலங்கியமேல்கீழ்பரமநாதமொடுவிந்துவினைமேவவன்ன
மலங்கியதத்துவத்தீசர்முச்சுடராஞ்சக்கரத்தினரிச்சையேய்வார். (கூஎ)

(இ-பு.) விந்துவினும் அதற்கு வலப்பக்கத்தும் இடப்பக்கத்தும் ஆன்ம தத்துவவீசராகிய பிரமாவையும், வித்தியாதத்துவவீசராகிய விஷ்ணுவையும், சிவதத்துவ வீசராகிய உருத்திரனையும் மேற்கொண்டுவரும் மூன்றக்கரங்களான் அருச்சனைசெய்து, விலகியிருக்கின்ற மேலுங் கீழும் பரநாத பரவிந்துவினைப்பொருந்த, வன்னதத்துவவீசர்கள் அக்கினி சந்திரன் சூரியனாகிய சக்கரத்தில் அருச்சனைபெறுவர். விந்துவினிருபால்-உம்மைத்தொகை.

ஒன்றிரண்டுமூன்றுகவொன்றிரண்டின்மூன்றுமுறையுணர்ந்துசெய்க,
பொன்றிக*மீசானுதிதிதியந்தம்புங்கவரைப்பொருந்தமுப்பா
னொன்றியிரண்டுறுங்கோணத்தருச்சிக்க,வுவந்துதரனுதியாக
நன்றிதருஞ்சிகண்டியந்தநாதரிருபானுன்கினயப்பார்பூசை. (கூஅ)

* ஈசானுதி திதிதெய்வபரியந்தம் துவாத்திரிம்சதிதளத்தினும், தரனுதி சிகண்டிதெய்வபரியந்தம் சதுர்விம்சதிதளத்தினும் அருச்சிக்கப்படுவார்.

†நந்திமுதலோர்,வாமைமுதலானோ,ருமையாதிநயந்தோ,ராக்க
முந்துமனோன்மனி,நிரலேபதினா,றெட்,டொருநான்கோ,டியரும்விந்து,
வந்தமுறவரிச்சிக்கமுத்தியொடுபெரும்போகமளிக்குமன்பா
லெந்தைதனை ‡ யருச்சிக்கைபத்திமுதலறிந்தவகையிசைத்தோமென்ன. ()

† நந்தி முதலோரைச் சோடசதளத்தினும், வாமை முதலானோரை அட்ட தளத்தினும்,உமையாதியரைச் சதுர்த்தளத்தினும், மனோன்மனியை விந்துவினும் அருச்சிக்க. ‡ அருச்சிக்கையையும், வைதிகபத்தி தாந்திரிகபத்திகளையும், அறிந்தபிரகாரம் இதுகாறுங்கூறினோமென்ன.

ஆவியிடத்திருளழிந்தேயமலமுறமொழிகூறுமறவோயன்பாற்
றேவியருட்செழுங்கமலச்சேயவிதழ்ச்சீறடிகள்சிறியேனுள்ளம்
பாவியுறப்பத்தியினிற்பணித்தியெனுங்கௌசிகனைப்பரிவினோக்கிக்
காவிவிழிக்கடையருளாலுலகளிக்கும்பெருவாழ்வைக்கருதிச்சொல்வான். ()

சராசரங்களனைத்துமெவடன்றலேசுழற்சியுறுந்தழைத்தவின்பப்
பராவமுதக்கடற்படிந்துபவமாயப்பசைமூலம்பறிப்பாள்யாவ
ளோராவருளான்மறையாயவுண்மையினலொருவருக்குமுவப்பினல்கித்
தராநெறியாமிஃதுனக்குத்தவப்பயனாலுரைத்துமெனச்சாற்றுகின்றான். ()

பரையபரையெனவவளுக்கிருவடிவமுளபரையின்பான்மைகூறி
னுரையுணர்வுமிறந்தமலவொளியாகிச்சிதானந்தவுருவமாகிக்
கரையறுபூரணமாகிக்குணங்குறியுங்கற்பனையுங்கடந்தியார்க்கும்
புரைபெறுபேருயிராகிப்புரணமதா § யவத்தையறிபொருளுமாமே. (சஉ)

§ அவத்தை-மூன்றவத்தை.

௯

## சிவசக்கரம்



ஸ்ரீ இச்சிவசக்கரம், தேவிசக்கரங்களிலே அக்ஷரமடைக்கும் விதத்தைக் குருமுகமாகப் பெற்றுக்கொள்க. அது, "விழுத்தவர்கள் குருமுகமாவேயறிந்து கவிற்றுவர்" என ஆசிரியர்முன்னர்க்கூறுமாற்றானும் அறிக.

அனையபரையுலகீசனுவியெனவிவர்த்தநெறியாகிநாமம்
புனையுமுருவுறினபரை, பொருந்துலகப்பிராந்தியுறப்புணராதாகு,
நினையுமவர்க்கல்லார்க்குங்கரணநிகழ்பந்தமுத்திநிலைக்குமாவிக்
கினைவகலவவ்வியத்தவியல்பதனைவியத்தமுறவியற்றினளே. (சங)

(இ-பு.) அப்பரை சைகசீவபரமெனப் பரிணாமநெறியைப் பொருந்தி உருவத்தையடையின், அபரை யெனப்பெயர்பெறும். உலகப்பிராந்தி பொருந்த அவள் புணராமை பொருந்தும். தன்னைத்தியானிப்பவர்கட்கும், தியானியாதவர்கட்கும், முறையே நிகழும் முத்திக்கும், பந்தத்திற்கும், அவளே காரணம். ஆன்மாக்கட் கநாதியாகப்பொருந்தும் சனன மரணத்துன்பம் நீங்கும் பொருட்டுத் தன் வெளிப்படாத வியல்பை வெளிப்படச்செய்தனள். என்க. கரணம்-காரணம். அவ்வியத்தவடிவம்-பரை. வியத்தவடிவம்-அபரை.

எழுமிளையகதிரயுதமிழைத்தனையவருணவெயிலிலகுமேனின்
குழுமுழுதுந்திரண்டனையகுளிர்கோலங்கரநான்குகுழைந்தவன்பாற்
றொழுமடியார்க்கருளளிக்குஞ்சோதிவிழியொருமூன்று*சுடர்கவேித்
தழுவுமதிமுடிபாசமங்குசம்பூங்கணைகருப்புச்சாபமேவும். (சச)

* கிரணங்களைப் பரப்பிப் பொருந்தும் சந்திரனுகிய முடி.

இனியசுவையமுதமெனவெழிலிலகுதிருமேனியிரவிசெங்கேழ்
முனியவொளிர்செழுந்துகிலுமணிப்பணியுமுருந்தனையமூரல்வாயும்
பனியநிறைமதிமுகமும்பனித்தரளவடமுலையின்பணைப்புமீசன்
கனியநிறைகவின்காமக்கலவிசெயுந்திரிபுரையைக்கருத்தில்வைத்தே. (சரு)

உலகமதற் † குபாதானமுற்றதிருச்சக்கரத்தினுவந்தபூசை
யிலகவளித்துபசாரத்தியற்றியிடக்கலாபமிருமூன்றுமேய்ந்து
திலகமுறுமரிச்சையினுற்சிவகதியாங்கலாபநிலைத்தெளிவுந்தேசா
லலககலுஞ்சக்கரத்தினடைவுமுரைதருதுமுளத்தமைத்துக்கோடி. (சசா)

† உபாதானம்-ஆதிகாரணம்.

குரவனருடருந்தீக்கைநான்கினெடுகூறிமனுக்கொடுத்தலொன்றும்,
பரவியிடுமனுட்டானமிரண்டாகு,நியாசமுறைபரித்தன்மூன்றும்,
வரமுறுபாத்திரங்கலசம்வரிச்சங்கம்பீடத்துவகுத்தபூசை
விரவியநான்,கொருமூன்றுசந்தியினுங்கவசாதிவிளம்பலைந்தே. (சஎ)

(இ-பு.) ஆசாரியர் நான்குதீக்ஷைவாயிலாக மந்திரோபதேசஞ்செய்தல் முதற்கலாபமாம். தேவிசந்தியனுட்டானம்(உ)ம்கலாபமாம். அங்ககரநியாசஞ் செய்தல்(ங)ம் கலாபமாம். பாத்திரபூசை கலசபூசை சங்கபூசை பீடபூசைகளைச்செய்தல்(ச)ம் கலாபமாம். திரிகாலசந்திகளினும் கவசாதிகளைக்கொண்டு தோத்திரங்களைச்செய்தல் (ரு)ம் கலாபமாம். என்பதாம்.

செல்வமருள்சக்கரமேதிட்டமெனுவாதியதிற்செறியுந்தேவி
பல்வகையகணஞானவிலக்கணமுமிருமூன்றும்,பகர்ச்சிக்காரு
நல்வகையசக்கரமுநடுவிந்து,திரிகோண,நான்குநான்கு
மல்லறருகோணமுடன்,பத்திருகான்,மனுக்கோணவகையினேடும். (௯௮)

(இ-பு.) தேவிசக்கரலக்கணம், அதிலெழுதப்படும் மந்திராதிலக்கணம், அதில் ஆராதிக்கப்படுந் தேவிலக்கணம், தேவிகணங்களினிலக்கணமாகிய இவைகளையறிதல்(௬)ம் கலாபமாம். ஞானம்-அறிவு. விந்து, திரிகோணம், அட்டகோணம், தசகோணத்துவயம், சதுர்த்தசகோணமாகிய வகைகளோடும்.

நாகதளஞ்சோடசமாய்நாடுதளநாற்கோணநயந்தமூன்று
மாகவிதுசக்கரமாமாதாரமூலமுதலாறுமுச்சி
பாகமுறமுக்கோணமுதலாறும்விந்துவெனப்பணித்ததொன்று
மூகமுறச்சக்கரத்தோடொன்றுக்கிப்பாவனையாலுறைத்துச்சூழ்ந்தே. (௯௯)

(இ-பு.) நாகதளம், சோடசதளம், பூத்திரயமாக, இதுவே தேவிசக்கரமாம். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, பிரமரந்திரமாகிய இவ்வேழுதானங்களிலே திரிகோணமுதலிய ஆறையும்விந்துவையும் சக்கரத்தோடு ஐக்கியஞ்செய்து,தேவியைப்பாவனையுறைப்பாற்றியானித்து. நாகதளம் - எட்டுத்தளமுடையது. நாற்கோணம் பூத்திரயத்துக்கடை; நாற்கோணவடிவாயுள்ள பூத்திரயமென்பதாம்.

ஒளியமுதவானந்தவுருவாகிப்பதியினெடுமுவந்துசோதி
தெளியுமதிமண்டிலத்திற்றிகழ்வாளைத்தியானித்துத்தேவிபாதக்
களியமுததாரையினுடனனையுங்கருத்தினனுய்க்கதிவாய்ந்தின்பத்
தளிமதுவிற்கலந்துறலாமகப்பூசைபுறப்பூசையதுவுஞ்சொல்வாம். (௱)

(இ-பு.) உருவாகி என்றது தேவியினது உருவத்தை. பதி-சிவன். சந்திரமண்டலத்தில் விளையாடுகிறவளை. தேவியினது பாதத்தினின்று மொழுகுங் களிப்பையுடைய அமுததாரையினாலே தன்னுடனனையும் பாவனையுடையவனுய்க் கதியைப்பெற்று அருளாகிய தேனிற்கலந்திருத்தல் அகப்பூசையாம். இனிப் புறப்பூசையையுஞ்சொல்வாம். என்க.

* மூன்றுபிரத்தாரமுடன்முறைபூசைபுரிந்துதினமுறையினுற்றத்
தோன்றுபரஞ்சோதியருட்சுடராகிப்புகழாயுள்சுருதியீற்றிற்
சான்றுறுமப்பிரமநிலைதமையளித்தேசுயஞ்சோதித்தன்மையாகி
யூன்றுபரமானந்தவுருவமுறவனுபூதியுதவுமன்றே. (௱௧)

* மூன்றுபிரத்தாரம்-பிரத்தாரத்திரயம். திரயத்தினாலே தேவியைப் பூசித்தல்வேண்டும். என்பதாம்.

பலவமரர்தமைப்பூசைபண்ணியுமிங்கிவள்பூசைபரித்திடாரே
னலமலியும்போகமுமூர்முத்தியெய்தனுமிவளைநயந்துபோற்றி
யுலகுறுபுங்கவர்க்கரிச்சையுதவாதுவிடினிமையோருவந்துபூசை
செலமருவிச்சிறப்பரிவடிருவுருவேமுழுதுமெனச்சிறத்தலாலே. (ருஉ)

வேற்றுமையற்றின்பவொளிவெளியாகுஞ்சத்திசிவமேன்மைநின்பாற்
றேற்றும்வகையுரைத்தனமாற்றுணிந்தார்கடுகண்மாற்றித்துறக்கஞ்சேர்வார்
மாற்றுவர்வெம்பிறவிபிணிவருத்தமறவெழின்மேவிவாழ்ந்தேயன்பாற்
போற்றுதிநீயெனவசிட்டன்கௌசிகனுக்கருள்காட்டிப்புகன்றுபின்னும். ()

## இனி விசுவரூப பத்தி கூறுகின்றார்.

மண்முதலாமுலகனைத்துமலர்ந்தவுலகுறும்பொருளுமற்றுமீந்தே
யெண்ணுமுருவாமவற்றினியங்குதிணைநிலைத்திணையுமியைந்துமேவி
நண்ணுமவயவமாகுஞ்சுடர்விழிகளுயிர்ப்பனிலநான்குநான்கா
வெண்ணுதிசைதோள்கரணமிச்சையுயிரானந்தமென்னவாய்ந்தே. (ருச)

(இ-பு.) உண்டாகிய செகத்து, உண்டாகின்றசெகத்து, உண்டாகுஞ்செகத்துவாகிய இவையெல்லாம்இந்தஉருத்திரனேயாம்;(அந்த உருத்திரன்பொருட்டுவந்தனம்)சராசரங்களெல்லாம் அவ்விசுவரூபத்திற்குஅவயவங்களாம். முச்சுடர்களும் கண்களாம். வாயு-மூச்சு. அட்டதிக்குக்கள்-புயங்கள். அந்தக்கரணம்-இச்சை. உயிர்-ஆநந்தமாம்.

## முப்பத்தாறு தத்துவங்கள்.

பொறிஞானங்கருமமெனவொருபானும்புரிவுறுங்காற்பிராணனுதிக்
குறியாகியைந்தாகுமுட்கரணந்தேசினொடுங்கூடியைந்தாஞ்
செறிவாகுந்தோனரம்புமுதற்கோசமிருமூன்றுதெளியினைந்தே
பிறிவாயபூதமினியுயிரவிச்சைமாயையதிற்பிறங்குமீசன். (ருரு)

(இ-பு) முப்பத்தாறுதத்துவங்களாவன:—ஞானேந்திரியம் (ரு) கன்மேந்திரியம் (ரு) பிராணனுதி (ரு) மனம், புத்தி, சித்தம், அகங்காரம், தேசசுவாகிய அந்தக்கரணம் (ரு) கோசம் (சு) பூதம் (ரு) புருடன் (க) அவிச்சை, மாயை, ஈசன். தேசசுஎன்றது சூக்கும்வுடமபை. என்க.

*ஆறுயவதிட்டானமுற்றசித்தென்றுறுமாறுகோசக்
கூறுகுமுளதெனலுந்தோற்றமுதல்விகுதிகளுங்குணவாக்காதி
வேறுயசத்திமுதல்விடயமுமிந்தியத்தொழிலாய்விளையுமுள்ளப்
பேறுஞ்சங்கற்பமுதற்பிறங்குதொழிலுட்கரணம்பிணித்ததாகும். (ருசு)

* ஆறுகிய நிலையிலுள்ள சித்தென்று தத்துவம் முப்பத்தாறும்.

* ஆற்றுவசனுதிகடாம்பிராணவனிலச்செயலாமதன்சகாயம்
போற்றுமுயிர்பிரேரகனும்புகலீசன திட்டானம்பொருவிலாதோன்
றேற்றமுறுமிவையனைத்தும்பரனுருவேயானுமதிற்செறிவேயன்றி
வேற்றுருவமிலேனரிமாவெல்லத்தினயிக்கமெனவீணேமோகம். (ருஎ)

* வசனிக்கின்ற வசனுதிகடாம் பிராணவாயுவின் செய்கையாம். யான் என்றது ஆன்மா தன்னை. அரிமா-அரிசிமா. அரிசிமா வெல்லத்தோடயிக்கமாதல்போல நான் ஈசுரனிடத்தயிக்கமாகின்றேன். கன்மபந்தவிமோசனகாலத்திற் சிவனுவேன். நான் கர்த்தா, நான் போக்தா, என்னும் அகம்பாவனை வீணனமோகம் என்பதாம்.

விழியுறுமப்பொருளனைத்துமரனுருவென்றிதமகிதம்விடுத்துப்போற்றி
வழிபடவேவிபரீதமாய்ந்துவிடும்விழாக்குழூவின்மதலேதேடி
யுழிதருவானெனத்தோற்றமுற்றவற்றினீசனுருவுவந்துகாணக்
கழியுமலமாயாதிகருதியசாதனமதனுற்கதியுமாமே. (ருஅ)

(இ-பு.) விழாக்குழூவின்மதலையைத் தேடுகின்றவனுக்குக் காணப்படுபவரெல்லாம் மதலைரூபகமாகக் காணப்படுவார். அதுபோலச் சிவரூபகமாகப்பிரபஞ்சரூபங்களை மகிழ்ந்துதரிசிக்க, மலமாயாதிகழியும். கழியவே, ஞானசாதனமுண்டாம். ஞானசாதனத்தினுலே மோக்ஷமுண்டாம். என்பதாம்.

சாதனமேதெனினுவிதற்பரத்தினேகமுறத்தழையுஞான
மேதமில்சாதனம்பரமாமதுவருதற்குபாயமினியிசைப்போமிங்கும்
போதவன்றனுலகளவுமுறும்போகத்தாசையறல், பொறைமுன்னுக
வோதுகுண, நிலையாமைநிலைமையுறும்பொருளுணர்ச்சி, யொழிவிளுசை.

(இ-பு.) ஞானத்திற்குபாயம்-சாதன சதுட்டயமாம். அவையாவன (க) நித்தியாநித்திய விவேகம், (உ) இகாமுத்திரவிராகம், (அஃதாவது இங்கே முதற்பிரமலோகம்வரையினுமுள்ள இன்பங்களை வெறுத்தல். இகம்-இவ்வுலோகம். அமுத்திரம்-பரலோகம்.) (௩) சமாதிசட்கம், (அவையாவன இந்திரியம் ஐந்து, மனம் ஒன்று, ஆகிய ஆறையுமடக்கல். சமாதிசட்கம்-சமம்முதலியஆறு.) (ச) முமூட்சத்துவம், (அஃது மோட்சவிருப்பு.) என்பனவாம். ஒழிவு என்றது முத்தியை. ஒழிவிளுசை-முத்தியில்விருப்பு. செய்யுளாகலிற் பிறழ்ந்தது.

## வேததாற்பரிய நிச்சயமே ஞானம் என்பது.

ஈண்டிசைத்தகுணமுடையசாதகனுக்குருப்பிரமத்திசைந்தமூன்று
காண்டமுறுமறையினதுதாற்பரியமெனத்தெளிவுகருத்திற்றோன்ற
மாண்டவிச்சைபரப்பிரமவடிவுயிர்க்குத்தருஞானம்வாயும்வாயப்
பூண்டமலச்சீவன்முத்திபுராந்தபரமுத்தியினும்பொலிவன்மாதோ. (சு0)

சுo.(இ-பு.) அரியவேதத்தின்கண்ணே சொல்லப்பட்ட மூன்று காண்டமாகிய அவ்வேததாற்பரிய நிச்சயமே பிரமமெனக்கருத்தில் வெளிப்பட, அதுவேமாட்சிமை பொருந்திய ஞானமாம். முதற்கட் பிரமம்-வேதம்.எ-ம்.

## காண்டவிகற்பம்.

முன்னுரைத்தகாண்டமதுமூன்றுவதென்னையெனின்முயலுங்கன்மந் [ர்க்
தன்னையுரைசெயுங்காண்டமுபாசனையைத்தருங்காண்டந்தவத்தின்மிக்கோ
கன்னையெனவயிக்கமுறவாருயிர்தற்பரத்துமறையருளுங்காண்ட
மன்னுமிதுமுடிஞானகாண்டமெனமறைச்சிரமாய்வயங்குமன்றே. (சுக)

(இ-பு-) கருமகாண்டம்-விதி, விலக்கு,பிராயச்சித்தமென மூவகைப்படும். விதி-நித்தியம், நைமித்திகம், காமியமெனமூவகைப்படும். விலக்கு-நிஷித்தம். நிஷித்தம்-மகாபாதகம், அதிபாதகம்,உபபாதகம்,சமபாதகம், சாங்கரியபாதகம், மலினீகரணபாதகம், அபாத்திரீகரணபாதகம், சாதிப்பிரம்மிசபாதகம், பிரகிரணபாதக மெனஒன்பது வகைப்படும். (எ-ம்.)

## கருமகாண்டம்.

விரிகருமகாண்டமதுதிரிவிதமாம்விகிதமொடுவிலக்கரீதுக்
குரியபரிகாரமென,வுயர்சுவர்க்கப்பயன்விதித்ததொழுகுமேலோர்க்,
கெரியனையகொடுநிரயம்விலங்குநெறியெய்தினர்க்கே,யிழைத்தபாவ
மிரியவகற்றுதருஞ்பரிகாரப்பயனுகவிசைப்பர்மேலோர். (சுஉ)

## உபாசனுகாண்டம்.

மந்தர்தமைக்குறித்துமுதற்முற்பரியங்கருமத்தில்வகுத்தேபின்ன
ரந்தமுறுஞ்சடங்கணிகமதுவெனவே*யுபாசனையையறைந்துதூய்மை
புந்திசெய்துபரமதனிற்றுற்பரியமெனப்புகல்வர்பொருவிலாத
விந்தமுறையநவயமாமறையனைத்தும்பிரமத்தினெய்துவார்க்கே. (சுங)

* உபாசனுகாண்டமும் விதி, விலக்குப், பரிகாரமென மூவகைப்படும்.

†இருளொளிபோல்விரோதமுறுமிதற்கயிக்கமெங்ஙனெனினிலங்குமிப்பி
மருளொழியத்‡தாரமிலவருங்கனவிற்பலவிதமாய்மருவிஞரு
மொருநனவிற்றுனலதங்குற்றவைகள்பொய்யாகுமுண்மைபோலத்
தெருண்மருவிற்பரமுளதாமற்றவைகண்மாயையுறத்தெரித்தவாகும். (சுச)

† இருளையு மொளியையும்போலவிருக்கும் மாயைக்கும் பிரமத்திற்கும் ஐக்கம் எமப்படியென்று வினுவின், அது இப்பியிலே வெள்ளியின் ஐக்கம்போலப் பொய்யாம். ‡ தாரம்-வெள்ளி.

கேள்விமுதற்பாவனையாற்கிளருமனுபூதியுறக்கிடைத்தவின்பத்
தாள்வினையான்மரங்கரியாளாயுறுமாமதுபோலவகிலமுற்றுங்
கோள்விலங்கும்பிரமமதாங்குறிமருவிச்சிதாநந்தக்குணத்தினுகி
நாள்விழியாதின்பமுறநலமலியுஞ்சீவன்முத்திநயத்தினுளும். (சுரு)

## இனி ஞானகாண்டங் கூறுகின்றார்.

திரிவுவிகற்பறப்பிரமமதுநானேயகிலமும்பேய்த்தேராமென்னப்
பரிவதுவேசீவன்முத்திப்பான்மையதாமுடலினகப்பற்றுப்போலப்
புரிவதுவாமுடலவத்தைபுவனமதிற்போகமதுபுரப்போன்கொள்வோன்
விரியுமிவையானலதுவேறிலேவாதனேப்பிறக்கமேயதென்றே. (௬௬)

தாரமாரவயவமுமைந்தாகுமகாராதிதழைத்தமூன்றின்
வாரமுறுகலைதெசகந்தெசகமதாய்முப்பஃதாம்வயங்கும்விந்துக்
கோரவருஉங்கலையைந்தாமொன்றுகுநாதகலேயுவைமேற்கொண்டே
யாரவரும்யகாரமுதலகாராந்தம்பிரிந்துகலேயாறுருக. (௬௭)

(இ-பு) பிரணவத்திற்குப் பொருந்திய அவயவமைந்து. அவை அகார,உகார, மகார, விந்து, நாதங்களாம். பிரணவத்திற்குக்கலே முப்பத்தாறு. அவை அகாரத்துக்குப் பத்துக்கலே, உகாரத்துக்குப் பத்துக்கலே, மகாரத்துக்குப் பத்துக்கலேயாய் முப்பதாகும். விந்துவுக்கு ஐந்துகலே, நாதத்துக்கு ஒருகலேயாம். ஆ௲ கலே, முப்பத்தாறும். யகாரமுதல் க்ஷகாராந்தம் பத்தக்கரங்களும் அகாரகலேயாம்.தகாரமுதல்மகாராந்தம் பத்தக்கரங்களும் உகாரகலேயாம்,சகாரமுதல் ணகாராந்தம் பத்தக்கரகளும் மகாரகலேயாம், ககாரமுதல் ஙகாராந்தம் ஐந்தக்கரங்களும் விந்துகலேயாம், அகாரமொன்றும் நாதகலேயாமென்க.

எழுத்துருவுந்தெய்வதமுமியற்பயனுந்தனித்தனியேயெடுத்துவேறு
வழுத்திடினேமிகவாகும்வைதிகமாமதுவுலகவடிவமாகும்
விழுத்தவர்கள்குருமுகமாய்வேறறிந்துகவிற்றுவரிம்மேன்மையோர்ந்து
பழுத்தமனத்தொடுதாரம்பயிற்றுதியேன்மோகமதுபாற்றுமன்றே. (௬௮)

கலேயுருவாம்பிரணவத்தின்காட்சியினல்வாதனேயைக்கழன்றுஞான
நிலேயுறவேமருவியுருநிருமலமாய்ப்பரமசிவஞேயத்தோடு
மலேவறவேயமர்ந்தமலவானந்தப்புணரியிடையழுந்துவாயென்
றுலேவிலருளால்வகுத்துக்கௌசிகனுக்கிதுவசிட்டனுணர்த்தினனே. (௬௯)

திருமாலேமறைநெறியாற்செயும்பூசைவைதிகமாந்திகழுமாயன்
றருவாய்மைவழிபாடுதாந்திரிகமொழுக்சமுமேற்றகைமைத்தாகு
மருவாயும்பசுந்துளவமானேமிச்சக்கரத்தின்வடிவுவாய்ந்தே
யொருவாதபூசைசெயவும்பருலகுறுவர்வினேயொழிப்பரன்றே. (௭0)

சிறையளிபாணவிற்றுமணிகன்னிதினந்திழைத்தமையாற்சிறந்தஞான
நிறைவுறவோங்கினேயமலமாயினேயாய்ந்தனேதருமநீதியாவுங்
குறையகலச்சீவன்முத்திகூடினேயான்மணிகன்னிகுளித்தியானும்
பிறையிலகுமுடிப்பரமனருள்பெற்றேனுனேப்போலப்பேறுவாய்ந்தே. (௭௧)

வேறு.

ஆடிமணிகன்னியமலச்சிவனருட்கே
கூடினர்களித்தனர்குணத்தினுயர்வுற்றார்
நீடியமறைப்பொருணிறைத்திடுசுவைத்தே
ஞூடிருவருற்றதுநவிற்றவரிதாமே. (எஉ)

வேறு.

வேததீர்த்தமணிகன்னிமேதகு
பாதமேவிப்படிந்துபழமறை
நாதனைப்பணிநாளிற்கௌசிகற்
கோதவுற்றதுபதேசவுண்மையே. (எ௩)

விசுவாமித்திரருக்குத்தருமோபதேசஞ்செய்தசருக்கமுற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் உ, க௩0.

---

# யாக்கியவற்கியச்சருக்கம்.

வலம்புரித்திரள்சொரிதரளத்தொளிவனப்பாற்
புலம்புதெண்டிரைபொழிமணிபுணரியெற்புணர்ப்பா
லலங்குதீங்கிலவிருளெனவவிரொளிவிரித்தே
யிலங்குவேதமாநதியுலகேத்தியதெனவே. (க)

கண்கவர்ந்தொளிர்வனப்பினைக்காமர்சித்தியினைப்
பண்புசான்றநற்றிருவினைப்பயந்தொளிர்பான்மை
நண்புமேற்படநவின்றனைநாடருமுத்தி
யெண்பெறுந்தரமளிப்பதிங்கிசையெனவிசைப்பான். (உ)

* மூன்றிரண்டெனமொழிதருமத்துவாமுறையா
லூன்றிரண்டெனவுறுவினைத்திரளொழித்தொளிர்வான்
றேூன்றுதீக்கையையுற்றவர்க்கல்லதுசோதி
யான்றஞானமுமுத்தியுங்கூடுவதரிதாம். (௩)

அத்துவாவுறுஞ்சுத்தியையாற்றுதலற்று
முத்திகூடுறமுயன்றவர்மரக்கலமுனிந்து
தத்துநீர்க்கடல்கடப்பவர்தாமவரென்றே
துத்தியார்முலைபங்குறைசோதிசொற்றுணிவே. (௪)

---

* மூன்றிரண்டென மொழிதரு மத்துவா-சடத்துவா.

நெறிவிளங்கினர்க்கல்லதுநீணிலையெய்துங்
குறிகிடைத்திடாதெனநெறிச்சுத்திகூர்குணத்தாற்
செறியுஞானமேமூத்தியையளித்திடுந்தேர்ந்த
வறிவினுரிஃதாற்றுவரல்லவரறியார். (௫)

யோகஞானமேயுதவுநன்முத்தியைக்கருமம்
பாகமார்தரப்பவம்பலபயிற்றிமெய்ஞ்ஞானத்
தாகமேவுறப்புந்தியிற்றூய்மையுந்தருமா
லேகநாயகனருச்சனைஞானமேயியற்றும். (௬)

மூலமாயவாதாரமேமுதலியமுளரிக்
கோலமார்சுடர்க்கொழுந்தினையுளத்தினுற்குறித்தே
பாலமார்மதிபற்றியேபரவொளிப்பாலாய்
மேலவாவியவெளியுறல்யோகத்தின்வினைவே. (௭)

இதயமென்கமலப்பொகுட்டெழுஞ்சுடர்ச்சிகையி
னுதயமாகியபிரணவமுறும்பவப்புணரி
சிதையநீக்கலிற்றாரகமெனப்பெயர்சிவணிப்
பதியுமங்கதுபரமமாங்கரிமனப்பணிக்கே. (௮)

உலகமாரணமுறுஞ்சுடர்மூர்த்திகளோவா
திலகுமூன்றுளயாவையுமெழுத்துமூன்றதனுற்
குலவவாகியேகோதறுசத்தியுஞ்சிவமு
மலகிரண்டுறவஞ்செழுத்துருவமாயலங்கும். (௯)

அனையதாரகமுணர்ச்சியான்முத்தியையளிக்கும்
வினையின்வீடரிதாயினுங்காசிவாய்விமல
னினையுமாறுசெய்தளித்திடுந்தாரகநிலையை
யினையுமீற்றினினன்றியேயரிதெனவிசைப்பார். (௧0)

இன்பதுன்பமுமிதமகிதங்களியிகழ்வும்
வன்புறும்பகைநட்பிகன்மானமுமமறையு
முன்புவர்ப்பவாவெப்பமுஞ்சீதமுமுதலா
வன்படுங்குணமற்றவர்ஞானிகளாவார். (௧௧)

பெருவழக்கிதுவெனவரிக்கானமும்பேசிக்
குருமறைத்திறத்தன்புறக்குணங்குறிகொள்கைத்
திருவமுற்றநம்மடியருக்கெளிதினிற்றேயாக்
கருவகற்றிடவைத்ததொன்றுண்டதுகாணின். (௧௨)

ஏதமுற்றவர்க்கியம்பரிததன்பெயரிசைக்கின்
வேததீர்த்தமாமேன்மையின்மேன்மையாய்விளங்கிப்
பாதகத்தொடர்பறித்திடும்படிந்தனராயிற்
போதமுற்றியபுகரறுஞானமேபுணர்க்கும். (௧௩)

காசியீற்றினிலளித்திடுந்தாரகங்கரைந்து
பேசினல்கிடும்படிந்திடிற்பிரமமாமின்பத்
தேசினூர்தருமுத்தியுங்கணத்திடைச்சேர்க்கு
மாசிலார்க்கருளாமெனவறைந்தனனரனே. (௧௪)

வேறு.

ஆயவேதநதிப்புனலாடிய
தூயர்மேன்மைசொலற்கரிதாகுமான்
மாயமாயவழக்குறுமாந்தர்பாற்
பாயமேன்மைபகர்ந்திடிற்பாவமே. (௧௫)

மக்களாகிக்கதியெனுமாட்சியார்
மிக்கவேதநதிப்புனல்வேண்டலே
தக்கதாகுந்தருக்கியதீவினை
தொக்கமாந்தர்துணியப்பெறுவதே. (௧௬)

தேவபூடணமேயசிறப்பினை
நாவினூரதனன்குநவிற்றலுங்
காவலான்மகிழ்வெய்திக்கதிபெறு
மாவலானுரையாடவருளுவான். (௧௭)

வேறு.

இருங்கடலுலகில்யாக்கியவற்கியனென்னுமேலோன்
கரும்பவங்கழித்துமாற்றுங்காதலாற்கதிர்த்துக்காமத்
தரும்பியமுலையாள்பங்கனமர்பதியரியதீர்த்தம்
விரும்பினன்மேவிப்போற்றிவியலிடம்பலவுமுற்றான். (௧௮)

வெவ்வினையனைத்துமாயின்விழைவறும்விழைவுநீங்கிற்
செவ்வியஞானமுண்டாந்தெளிவெனத்தேர்ந்துசிந்தை
யவ்வியமகற்றியெங்குமருந்தவமாற்றிப்போற்றி
நவ்வினர்களிக்கும்வேதவனத்திடைநண்ணினானே. (௧௯)

நண்ணியேநயந்துவேதநதியினைவிதியினாடிப்
புண்ணியதீர்த்தமூழ்கிப்புனற்கடன்முற்றுமாற்றிப்
பண்ணியன்மொழியாள்பங்கன்பதமலர்பணிந்துசூழ்வந்
தெண்ணியஞ்செழுத்துமாடுசூழ்ந்தனனிறைஞ்சியேத்தி. (௨0)

செய்தியாத்திரையோராறுந்திகழ்ந்திடுஞ்சீவன்முத்தி
பெய்தளித்தருளவேண்டிப்பிரமயாத்திரையைமுக்காற்
பொய்தெறவாற்றிவேதநதியிடைப் * புனிதவாரத்
தெய்தினன்படிந்துவேதநாதனையிறைஞ்சியேத்தி. (௨௧)

---

* புனிதவாரம்-பானுவாரம்.

வன்னியினீழன்மேவிமறைவனத்திறைவன்பாத
முன்னியங்கிருத்தலோடுமொருமுதலுளத்துத்தோன்றி
யன்னியமின்றிப்போதவுருவமானந்தமாய
தன்னியலெங்குமேவிச்சார்பறுஞ்சத்துமாகி. (௨௨)

வேறுபல்லுருவமாயவிகற்பெலாங்கனவுபோலு
மூறுமின்புருவமாயவொருமுதலின்றியொன்றுந்
தேறுதற்கில்லைபோக்குவரவொடுசெறிவிகார
மாறுமற்றகண்டமாகியனந்தவானந்தமாயே. (௨௩)

ஒளியுருவாகிச்சீவவுபாதியற்றுலப்பிலின்பக்
களியுறமுற்றுந்தானுங்காட்சிதந்தருளக்காதற்
றெளிவொடுமிருந்தியன்பிற்றேங்கிமெய்சிலிர்த்துத்தேசா
ருளியகமாகத்தோற்றமுடிவுறவுவகைபூத்தான். (௨௪)

ஆக்கமுமழிவுமின்பதுன்பமுமவத்தைமாயா
வீக்கமுமற்றுப்போதவெறுவெளிவிமலமாகித்
தூக்கியவுலகமுற்றுஞ்சொரூபமாய்த்தொடர்ந்தபேதந்
தாக்குதலின்றித்தானேயாயினன்றவத்தின்மிக்கான். (௨௫)

அலைவறுஞ்சமாதிமேவியடைவதெந்நலமென்றாய்ந்து
நிலைபெறுஞ்சீவன்முத்திநிலையினைப்பெறுதற்கெண்ணிக்
கலைமதிக்குழவிவேய்ந்தகருணையங்கடலின்பாதந்
தலையுறவணங்கிப்போற்றித்தழைத்தவன்புருவமாகி. (௨௬)

வீழ்ந்தடிவணங்கிப்போற்றிமெய்ம்மயிர்ப்புளகமேவித்
தாழ்ந்தவெம்பிறவிவேரைத்தடிந்தனைதலைவவென்றே
வாழ்ந்தவின்புருவமாகிமறைவனத்தமர்ந்தவாஞேர்
சூழ்ந்தவன்றன்னையேத்தத்தொடங்கினன்றுறவர்கோமான். (௨௭)

வேறு.

அலகிலாவுலகமுழுவதும்படைத்தேயளித்தழித்தாடலேய்ந்தருள்வா
னிலவுமாருயிருட்படிந்தவையியற்றிநெறிதருங்கரணமும்பொறியுங்
குலவுவார்தொழின்முக்குணங்குறியகன்றுகோதிலாவின்பமாய்க்குறியா
திலகுமானந்தவுருவமேமறைசையிறைவனுமேகனேபோற்றி. (௨அ)

பொய்யெனவுலகமுழுவதுமுளத்திற்புணர்த்தியேபுகாறுந்தானே
மெய்யெனவிளக்கிப்பந்தவீடகற்றிவேறறத்தானெனமேவி
மையலுங்கனவின்மாற்றியானந்தவடிவமாய்மறைசையின்மேவிப்
பையரவல்குற்பாவையோடமர்ந்தபகவநின்பதமலர்போற்றி. (௨௯)

இந்தியக்காட்சிமுதலியமானத்திசைவறுத்திவற்றினைவிளக்கிப்
புந்தியிற்புரணத்துருவமாயவத்தைப்போக்கொடுவரவதன்பாவ
முந்தியுற்றறிந்து*மூன்றுடலிலக்கிமுழுதுமாமோகவேரரிந்தே
யந்தியிளுடுமெருமறைவனத்திளுதியேயமலனேபோற்றி. (௩0)

வேறு.

அருளாரமலவிழிக்கடைநோக்கதனலைவலப்பிறப்பாய
விருளானதுமற்றழியாதவின்பச்சுடராயிணையோவும்
பொருளாய்முழுதுந்தானுகப்புணர்க்கும்பொருளேபுரிகூந்தற்
சுருளாரியாழைப்பழித்தமொழித்தோகைமருவுஞ்சுடர்போற்றி. (௩௧)

வேறு.

இன்னணம்பணிந்துபோற்றவிருள்கிழித்திலங்குஞ்சோதி
முன்னவனெதிர்ந்துவேதநதியிடைமூழ்கியாற்றிச்
சொன்னயாத்திரையும்போற்றித்தொழுதலால்வரங்களீதும்
பன்னுதியென்னயாக்கியவற்கியன்பரிந்துசொல்வான். (௩௨)

முழுதுமாய்நிறைந்தநீயேயானெனமுளைத்தபோதம்
பழுதறவிலகியின்பப்பரப்புறுசீவன்முத்தி
வழுவறநிகழவேண்டுமென்றிடமகிழ்ந்துநல்கத்
தழுவியேபின்னுமீதுவேண்டினன்றவத்தின்மிக்கான். (௩௩)

மனைவியாங்காற்கியோடுமென்னியமமித்திரேயி
யினையவரதிவானந்தவியற்கையினமரவெண்ணந்
தனையருளென்னமுன்னியாத்திரையாறுஞ்சார்ந்த
வினையவர்ஞானநல்கும்பிரமயாத்திரையும்பேணி. (௩௪)

சுடருநங்குறியும்போற்றித்தொழுதெழுஞ்சமியின்மூலப்
படர்நிழல்வைகநோக்கிப்பரிந்துபதேசநல்க
விடரறும்வேததீர்த்தத்திலங்கிடுஞானமென்று
மடலவிழ்கொன்றைவேய்ந்தவரதனுமறைந்துபோனன். (௩௫)

புங்கவன்மறையப்போற்றிப்புரிவொடும்வேததீர்த்தத்
தங்கவன்படிந்துபோதத்தலைவறுசீவன்முத்தித்
துங்கமேய்ந்தமலன்பாதத்துணைதினந்தொழுதுபோற்றித்
தங்கினன்மறைசைமேவித்தன்னிகர்சமாதிவாய்ந்தே. (௩௬)

நிலமிசைத்தீர்த்தமூர்த்தியனைத்தினுநெடிதுகாலம்
பலமுறைதிரிந்துங்காணுப்பாக்கியம்பரவற்கெட்டா
நலமிகுவேததீர்த்தமளித்ததேனுவினுறும்
புலமிகுமறைசைமேன்மையாவரேபுகலற்பாலார். (௩௭)

* மூன்றுடலிலக்கி-தூல சூக்கும பரமென்னுஞ் சரீரங்களை விளக்கி.

அறவனிவ்வாறுகூறவரசரேறமலமாய
துறவளுங்கெதிரியாக்கியவற்கியன்றுன்னுங்காலத்
துறவுறுமயித்திரேயிகாற்கியென்றுரைக்குநல்லார்
நறவளியென்னச்சேர்தனவிற்றெனநவில்வதானுன். (௩௮)

அம்மையுமிம்மையாகுமுணர்வுறவமருங்காலைக்
கொம்மைவெம்முலையார்காதற்கொழுநனைக்குறித்துமேவிச்
செம்மையிற்பணிந்துதங்கோனருளினுற்செறியும்பாவ
வெம்மைதீர்புனிதவேதநதியிடைமேவினுரே. (௩௯)

மேவினர்படிந்துவேதவிமலனைப்பணிந்துபோற்றிக்
காவியங்கண்ணினுரங்கமர்தலுங்கருத்துக்காம
மோவியங்கமலமாயவுணர்வுறவோகையோடுந்
தேவியங்குருவமாயசெம்மல்சேவடியிற்சேர்ந்தார். (௪௦)

தனியுறுஞ்சமாதிநீங்குந்தலைவனைப்பணிந்துபோற்றிக்
கனிவொடுமுலகவாழ்விற்காமத்திற்கருத்தொன்றில்லோ
மினிதுறயோகஞானத்தியல்புநீயியம்புகென்ன
முனிவரன்மகிழ்ந்துவேதமுதல்வனைப்பணிந்துசொல்வான். (௪௧)

விழுமியவேதமுற்றுமதனிடைமேவித்தோற்றந்
தொழுமுறைபடிந்துபோற்றிச்சோதியைப்பரவியாக்கஞ்
செழுமியவேததீர்த்தங்கிடைத்துநீர்படிதலாலே
மழுவலானருளாலிவ்வாறுயதுவரத்தின்மிக்கிர். (௪௨)

ஞானயோகங்களீந்துநலத்தினைநாளுநல்கும்
வானகமளிக்கும்வாழ்வும்வழங்கிடும்வேததீர்த்தந்
தானமீதமலன்வேறுசகத்திலைதழைநூல்வேதத்
தானமில்பொருள்கண்முற்றுமாடினர்க்குதவுமன்றே. (௪௩)

பொன்னெடுவாணிவேதநதியிடைப்புரிந்துமூழ்கிப்
பன்னருஞ்சிறப்புப்பெற்றூர்பரிதிவேற்குமரன்மூழ்கிக்
கன்னிமிர்குடுமித்திண்டோட்டாரகற்காய்ந்துசீர்த்தி
மன்னினனதனைப்பெற்றூர்க்கரியதுவையத்தின்றே. (௪௪)

விதிதருமுலகமூன்றின்விழைந்தனநல்கும்வேத
நதியெனமுத்திநல்குநன்கினைநயந்துதேடுங்
கதியிதுவாகுநீவிர்கருதியயோகமுன்னர்
மதிதரவருள்வன்கேண்மின்மற்றதுமதியின்மிக்கிர். (௪௫)

சாற்றியநியமமாதிசார்ந்தயோகத்திற்சங்கம்
போற்றியதெட்டதாகுமுதலுயிர்புனிதமேவற்
காற்றியதிரண்டுமெற்றதிருப்பயர்வறுதற்காங்கான்
மாற்றியதொன்றுமற்றநிர்ந்தியமடக்கலாமே. (௪௬)

பாவனைமூலமாதித்தலத்திஞேருருவம்பற்ற
ருவியவுருவிற்சித்தமழுந்தருரணைசமாதி
யோவியம்போலப்போதவுருவமாயுறைதலீது
மேவியதென்னின்மாயவேரறவிமலமாவார். (௪௭)

உயிர்நிலைமனுவிஞேடுற்றுருதுழப்பொழிந்துமூன்ருஞ்
செயிரில்கேவலத்திஞேடுசேர்ந்தரும்பகநிர்ப்பீச
மியலுறுசபீசமென்னவியைந்ததாரணையும்பூதப்
பயில்பெறுமொன்ருென்ருகப்பலதிறப்பயனுமற்ருல். (௪௮)

காயமும்பொறியுமந்தக்கரணமுங்கருத்தும்போக
மாயவைங்கோசநீங்கியறிவுருவாகியின்ப
மேயவப்பிரமந்தன்னின்வேறறவிளங்கிமாயை
சாயவெப்பொருட்குங்காட்சிதானெனமதித்தன்ஞானம். (௪௯)

சொற்பொருளகற்றியோர்ச்சிதோயிலக்கணையாற்ருேன்று
நற்பொருட்சத்துச்சித்துநயந்தவானந்தமாகு
மற்புதந்தன்னிற்றன்ஞலனுபவித்தமலமாஞர்
புற்புதம்போலுந்தோற்றமாய்வுறப்பொலிவரன்றே. (௫௦)

இவ்வணமோதியாக்கியவற்கியனியலுமாயத்
தெவ்வறவுணர்த்தத்தேர்ந்துதெளிவருஞ்சிவமேயாகிப்
பவ்வநீர்வேததீர்த்தப்பான்மையாற்பரஞற்பற்ருன்
மவ்வலங்குழலாரின்பவாரியாய்வயங்கிஞரே. (௫௧)

யாக்கியவற்கியச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௧௮௧.

---

# உத்தாலகநாசிகேதுச்சருக்கம்.

உள்ளகங்குழைதரவுலப்பிலாவருள்
வெள்ளமாநாரதன்விளம்புநற்கதை
வள்ளமார்மதுவிணைமாந்திவாகைவே
லெள்ளருமதுகையாணிறைஞ்சிக்கூறுவான். (௧)

அருமறைதெரியுமுத்தாலஞகிய
வொருமுனி * வருணியாயுறையுங்காலையே
திருமகப்பயந்ததுந்தேவபூடணத்
திருமையுமடைந்ததுமியம்புவாயென. (௨)

---

* வருணி-பிரமசாரி.

உரைத்தலுமாதவனுலங்குலாவிய
வரைத்தடந்தோளினுய்வழங்குமிக்கதை
தரைத்தலைஞானமுந்தவமுங்கல்வியு
நிரைத்திடுங்கேளெனநிகழ்த்தன்மேயினுன். (௫)

மணங்கமழிலந்தையங்கானமல்கிய
வணங்கியலாச்சிரமத்திருசநுங்
குணங்கிளர்முனிவரரோடுங்கொள்கையா
லுணங்குழுத்தாலஞேற்றுறைதன்மேயினுன். (௬)

ஆய்ந்தருமறைமுழுதார்வவேரரிந்
தேய்ந்தநற்குணங்களோடிகலுஞ்செற்றமுங்
காய்ந்துவெம்பொறிமனக்காசுதீர்த்திருள்
மாய்ந்தறநோற்றனன்வரம்பில்காலமே. (௭)

ஆதியாச்சிரமமேயமையுமென்றதற்
கோதியநெறியெலாமுஞற்றியோங்கிய
நீதியனருந்தவநெடிதுநாட்செய
வேதியரனைவரும்விழைந்துமேவியே. (௮)

மழலையஞ்சின்மொழிமைந்தரில்லையேற்
கிழவுறுநற்கதிகிடைத்தலின்றெனப்
பழமறையிசைத்தலாற்பாவையோடுநீ
விழவுறல்வேண்டுமென்றிசைப்பமேலையோன். (௯)

செல்லுமக்கதியினைமறைத்துத்தீநர
கல்லலிற்படுத்திடுமரிவையார்வமுட்
புல்லுமேன்ஞானமும்பொறியும்போயற
வெல்லையில்பிறப்பினையீயுமென்பவே. (௧௦)

நற்றவமழித்திடுநங்கைநன்னலப்
பற்றுறல்பாவமென்றகற்றிப்பாசவே
ரற்றவனோற்றிடவரசவாங்கவற்
குற்றதொன்றுரைக்குதுமுவந்துகேட்டியால். (௧௧)

மடியறநோன்பிடைமன்னிவார்சடை
யடிகளையுளத்துறவாக்குமன்னவற்
கொடியொருநாட்கனவுற்றுவீரியங்
கடியுறப்புறத்தினிற்கலித்ததென்பவே. (௧௦)

கண்டவனகமுறக்கலங்கிக்கானதிப்
புண்டரீகத்தினுட்புகட்டிப்போக்கிடத்
தெண்டிரையாற்றினிற்றிகழ்ந்துதேசொடு
மூண்டகமிதந்ததுமுருகுநாறியே. (௧௧)

மருமலரந்நதிவயங்குகாலையிற்
பிருதுதரப்பெயர்பெற்றகோமகன்
திருமகள்சுகேசினிதிருவின்சாயலாள்
பொருவருஞ்சேடியர்புகழ்ந்துபோற்றவே. (௧௨)

பூம்புனல்படிந்திடப்போந்துபூங்குழற்
றேம்பொதிகிளவிநீர்திளைக்குங்காலையி
னோம்பலினூழ்வினையூக்கவூறுதேன்
கூம்பலின்முண்டகங்குறித்துநோக்கினாள். (௧௩)

பொதியவிழ்ந்திலங்கியபோதுநன்றென
மதிநுதன்மோந்துழிமன்னுவீரியம்
விதிவழிநாசியின்மேவியேமடிப்
பதியுறவமர்ந்ததுபழுதின்றுயதே. (௧௪)

மடவரலன்னதுமதித்தலின்றியே
படவரவல்குலார்பலருஞ்சூழ்தர
வடர்மணிப்பொற்சிலம்பரிகளாய்ந்துவாய்
விடவரமனையிடைவிழைவின்மேவினாள். (௧௫)

மணிமனைவயங்கியமங்கைதன்வயிற்
றணிபெறுகருப்பமுமமுதத்தீங்கதிர்ப்
பணிதருபிறையெனவளர்ந்துபாரவர்
துணிதரவிளைத்ததுசோதிவண்ணமே. (௧௬)

முலைமுகங்கரிந்துபாற்கதிரின்*மூமுக்க
கலைமுகத்திங்களும்பசந்துகாமர்தோ
ணிலையுறமெலிந்திடைமலிந்துநீடிய
கொலைமலிவேற்கண்வாய்வெண்மைகூர்ந்தவே. (௧௭)

நன்னுதல்குறியினைநாடியன்னையீ
தென்னெனவினவயா†னெய்த்ததின்றென
மன்னனுக்குரைசெயமாழ்கிமற்றிஃ
துன்னரும்பிழையெனவுணர்ந்திதோதுவான். (௧௮)

---

* மூ-மூப்பு. † "எய்யா மையே யறியா மையே" ஆகலின், எய்த்தல்-அறிதலாயிற்று.† அற்றேல், சேனாவரையர் "அறிதற்பொருட்டாய் எய்தலென்றானும், எய்த்தலென்றானும் சான்றோர்செய்யுட்கண்வாராமையின், எய்யாமை. எதிர்மறையன்மையறிக" என்றதென்னையெனின், வரின், எதிர்மறையாதற்கிழுக்கின்மையின், அது தமக்குடன்பாடென்பது அவ்வுரையான் இனிது விளங்குதலின், அதுகடாவன்றென்க.

கடியறுங்கன்னியர்கருப்பமேய்ந்திடிற்
குடிவழிபழியுறுங்குலமுங்குன்றுமாற்
றடியிடையிவடனைத்துறத்தனன்றெனு
வடியிலைவேலினான்மகண்மைமாற்றினான். (௧௯)

வேற்றடங்கண்ணியைவிரைவினுற்கட
னேற்றுயராச்சிரமத்தினேதகத்
தூற்றறநீக்கினனமரத்தோகையு
மாற்றறவைகினள்வருத்தங்கூரவே. (௨௦)

உருப்பவிர்வெயிற்றளிரொப்பவாடியே
கருப்பமோடமர்தருங்கன்னியைத்தவ
னிருப்பிடைக்காண்டலுமிரங்கியின்சொலான்
விருப்புறவத்தலைமேவநல்கினான். (௨௧)

மைந்துடையிந்தியமடக்குமாதவன்
முந்துசெய்யருளினான்முனிவுதீர்ந்தவ
ணந்தியநங்கைதன்கருப்பநாட்செய
வைந்திருதிங்களுநிறையவாயதே. (௨௨)

ஓங்குநல்லோரையினூழினுசியாற்
றுங்குநன்மகவினைப்பயந்துதையலா
டங்குறவகற்றியேதிகழச்செய்கடன்
பாங்குடனடந்ததுபழங்கணின்றியே. (௨௩)

பான்மையோர்முனிவரன்பாலற்காகிய
நான்மறைவிதிசெய*நாசிகேதுவாய்
மேன்மையால்வளர்ந்தனன்மேதைமேதக
வான்மலிபிறையெனவளரமாதவன். (௨௪)

முனிவனுத்தாலகன்முன்னருய்த்தவன்
புனிதமாரேவலைப்புரிதியென்னவே
கனிவொடுமுனிவரர்கமலச்சேவடி
யினிதுறத்தந்தைதாளிறைஞ்சியேயினான். (௨௫)

பாலர்தம்பயிற்சியிற்பரிவுமாற்றியே
மேலவரேவலேவிழைதல்கண்டுளஞ்
சாலமாதவர்மகிழ்ந்தழைத்துச்சாற்றின
ரேலவுத்தாலகற்கினியனென்னவே. (௨௬)

---

* நாசிகேது- தன் சன்மத்துக்கு நாசியைக் குறியாக வுடையவன். கேது-குறி. குறியெனினும், அடையாளமெனினுமொக்கும். நாசிகேதுவுக்குச் சுவேதகேது எனவும் பெயர்.

ஏவல்களின்னணமியற்றுமைந்தனை
யாவனீமொழியெனவிறைஞ்சியேழைபா
லோவறு * முழுவலானுற்றவாறெலாந்
தாவறவிசைத்தனன்றந்தைக்கென்பவே. (உஎ)

சொல்லியமுதுக்குறைதுணிந்துதூயவ
னல்லியன்மைந்தனைநம்பியேகிநீ
யல்லியங்கோதையையழைத்தியீங்கென
மெல்லியலிணையடிபணிந்துமேவியே. (உஅ)

முழுவதுமுணர்த்திடமுருகுநாறிய
செழுமலர்க்குழலினுடேர்ந்துசேவடி
தொழுமகற்றழீஇயிதுதுணிவன்றென்னவே
பழுதறுநன்மொழிபகர்தன்மேயினுள். (உகூ)

பெண்பிறப்புறுதலிற்பிழைமற்றில்லையாற்
கண்படுங்காலையுங்காவல்வேண்டுமாற்
பண்புறலின்மையிற்பரிந்துதந்தைதாய்
நண்புறக்கன்னியைநயந்துகாப்பரால். (௩0)

கடியுறிற்கணவனுற்கழியின்மைந்தரா
லொடிவறுங்காப்புறுமொருவராகியே
படியுறநோற்பினும்பலவிற்சேரினு
நொடிதருவெம்பழிநோதற்காகுமே. (௩க)

அன்னவாறுதலான்முதன்மையாற்றுதல்
பொன்னவிர்முலையினுர்க்கில்லை † போமுயிர்
மன்னவாமதலைநீவழங்கியுற்கடன்
சொன்னவாறுற்றுதியென்னத்தோன்றலும். (௩உ)

உணர்வுடையுற்கடற்கோயுமின்னுயிர்
புணர்தரவளித்தநீபுனிதமாகிய
யிணர்விரிபூங்குழலிலங்குமின்பமார்
மணமலிசெய்கையைமதித்தியென்னவே. (௩௩)

நன்மதியெனமுனி ‡ நம்பிஞடிமே
வன்மலிகூந்தலாளாக்கமெண்ணிவான்
சொன்மலைபிருதுதரன்றன்சூழலிற்
பன்மறையுற்கடன்பரிவினண்ணினுன். (௩௪)

---

* உழுவல் - இடையறுது தொடர்ந்த அன்பு. † போமுயிர்மன்னவாமதலை - அஞ்ஞான்றே உடம்பினின்று மிறந்துபோகற் பாலதாகிய என்னுயிர் அவ்வுடம்பினிருக்குமாறு உற்பத்தியாகிய என் மகனே. அஞ்ஞான்றிறக்கிற் சிசுவு மிறக்கு மென்னும் எண்ணமே தடுத்ததென்பது கருத்து. ‡ நம்பு-நசை.

சார்ந்தவத்தாபதன்றனைப்போற்றியே
யார்ந்தநற்பாத்தியமாதியீந்தருள்
கூர்ந்தனனிருந்துழிக்குறித்ததென்னென
வூர்ந்தபொற்பூணினாற்குரைத்தன்மேயினான். (௩௫)

மன்னநின்மடமகண்மறுவில்செய்கையா
ளொன்னருநிலையிடையியல்பின்வைகினா
ளன்னவள்கடிவினையாற்றற்கெண்ணியா
னின்னிடைப்போந்தனிகழ்த்துவாயென. (௩௬)

போற்றிநீயுரைத்ததுபுரிவனென்னவே
* தேற்றியுத்தாலகற்றெளியக்கூவலு
மாற்றினன்கடிவினையமர்ந்துசீர்பெறு
நாற்றிசைபுகழ்தரநாமவேலினான். (௩௭)

சிறந்தநன்மணவினைதிகழத்தீர்ந்தபின்
னறந்தருகற்பினாளறவனேவலிற்
புறந்தரவிருவரும்பொலிந்துமைந்தனோ
டுறைந்தனரளப்பருமுவகையோடுமே. (௩௮)

இல்லறம்புகழ்தருமினியமைந்தனு
னல்லறமிருமையுநல்கிற்றென்னவே
மல்லலங்களியினான்மகிழ்ந்துமாதவ
னல்லலங்ககன்றினிதமருமாயிடை. (௩௯)

வேறு.

நயந்தெரிநாசிகேதுமைந்தனுந்தானுநண்ணி
வியந்தொளிர்தீர்த்தமூழ்கும்வேட்கையினெழுந்துபோகிக்
கயந்தருவாவியாறுகமழ் † நதமனைத்துமூழ்கிச்
சயந்தரும்மறைக்காடெய்ந்துதாபதர்சரணம்போற்றி. (௪௰)

கருமணித்திரளுமுத்துங்கடிதிரையெறிதல்காத
லொருமையிற்படிந்தார்க்கின்பமுறுமுத்தியுதவல்வேண்டி
யிருள்பறித்துயரவீசுமியல்புடைவேததீர்த்தத்
தருமறைவிதியினாடியமலனைத்தொழுதாரன்றே. (௪௧)

---

* உற்கடமுனிவர் சுற்றத்தாரைத் தெளியத்தேற்றி, உத்தாலகரை அழைத்தலும். † நதம் மேற்கோடுமாறு. எனவே, ஆறென்றது கிழக்கோடு மாற்றை என்பது பெற்றும்.

மறையினையீன்றவேதநதிப்புனன்மகிழ்ந்தவாற்றாற்
கறையறுமுள்ளஞ்சோதிகாண்பதற்கிச்சைகூர
விறையருளேவவெங்குமேகமாயின்பமாகி
யுறைதருபிரமமெந்தாயுளம்பெறவுரைத்தியென்ன. (௪௨)

வினவியநாசிகேதுவிளக்கமுத்தாலனோர்ந்தே
தனதியல்பிரமமாகுந்தன்மையுஞ்சார்ந்தவெல்லாங்
கனவியலாகுமுண்மைக்காட்சியுங்கரியுங்கூறி
யனகமாய்ச்சீவன்முத்தனாகியங்கமர்ந்தானன்றே. (௪௩)

ஆரணவனத்துநாதனருளினாலறிவாயின்பப்
பூரணமாயதந்தைதன்னொடும்பொலிந்துபன்னாட்
காரணனருள்பெற்றேகிக்கருகிருள்கழியமுத்தம்
வாரணம்பொழியுங்கோதாவிரிமருங்கணைந்தார்மன்னோ. (௪௪)

வேறு.

மாசில்வேதநதிப்படிவாய்மையாற்
பாசவல்லிபறித்துப்பவங்கெடு
நாசிகேதுவுந்தந்தையுநாமக
ளாசிகூறந்திக்கரையல்கினார். (௪௫)

உத்தாலக நாசிகேதுச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨,௨௨௯.

---

# நிரயவருணச்சருக்கம்.

முனிவனிவ்வாறுகூறமுகமலர்ந்தரசன்முன்னோன்
பனிவளர்கமலம்போலும்பாதமேற்பணிந்துபோற்றிக்
கனிவொடுநாசிகேதுக்காண்பருநிரயங்காண்டற்
குனியகாரணமேதென்னவுவகையோடுரைக்கலுற்றான். (௧)

விரைமணங்கமழுங்கோதாவிரிக்கரைநாசிகேது
உரைதருந்தந்தையேவலுவந்தினிதுறையுங்காலைப்
புரைதரும்பசியினோர்நாட்பூம்புனற்படிந்துதந்தை
வரைதருஞ்சமிதைவைத்துமறந்துதன்மனைக்கணுற்றான். (௨)

மைந்தனைநோக்கியையவருத்திடும்பசியால்வாடித்
தந்தவச்சமிதையுந்தித்தடங்கரைமறந்துபோந்தே
னெந்தைநீகடிதினேகியிலங்கழற்கருமமாற்றற்
கந்தநற்சமிதைமுற்றுங்கொணர்கெனவங்கணுற்றான். (௩

தடங்கரைச்சமிதைகாணான்றந்தைபாலெய்திக்கூலத்
திடந்தனிற்சமிதைகாணேனென்றிடவெரியிற்சீறி
மடம்படவுரைத்தியானேவைத்தனன்மதித்துநோக்கா
துடங்கியவுரையிற்காலனுறுபதியுறுதியென்ன. (௪)

வெஞ்சினச்சாபமீயவெற்றுடலாகிவீழ்ந்து
துஞ்சினன்மதலைவீயச்சோர்ந்துடல்கிடத்தநோக்கி
யெஞ்சினனெழுந்துமைந்தற்கிரங்கிவெங்கண்ணீர்வாரக்
குஞ்சியஞ்சிரங்கவானிற்கொண்டழுதவலங்கூர்ந்தான். (௫)

கலங்கியகண்ணீர்மைந்தன்கதிர்முகநனைப்பக்காயத்
திலங்கியதாவியாகவிருவிழிதிறந்துசோர்ந்து
புலம்பியதாதைதன்னைப்புரிவொடுநோக்கியீது
நலம்பெறுசெய்கையன்றாலென்றிதுநவிற்றுகின்றான். (௬)

குரவநீபுலம்பற்கேதுக்குறிக்கிலேன்கூறுமாற்றம்
பரவியாதரித்துச்செய்தேன்பயந்தவரழுதகண்ணீர்
நரகினைப்புதல்வர்க்கீயுமாதாலானம்புமிக்கா
தரவினாலழுதல்செய்யார்தனயரைத்தழைதல்செய்வார். (௭)

இளவறன்மாற்றங்கேளாவிருந்தவனெரியிற்காய்ந்தே
யளவுவெம்பசியாற்சீற்றத்தறைந்ததையன்றியாயு
முளமுறவுரைத்ததன்றாலவ்வுரையோராதாற்றல்
வளமுறுதென்னநாசிகேதுவுமறுத்துச்சொல்வான். (௮)

சீற்றமேயுவகையாதிச்செய்கையிற்குரவர்கூறு
மாற்றமேயெனினுமாற்றன்மைந்தருக்கறமேயாகு
மாற்றநீசமிதைவைத்ததாற்றலையீர்த்துமாய்த்த
றேற்றமாமழுகையோர்ந்துசெப்புதற்கிங்குச்சேர்ந்தேன். (௯)

அன்றியீங்கணையினத்தவடைந்திடுங்குருத்துரோக
மென்றவனுரைப்பமாழ்கியிரங்கியவுளத்தனாகிப்
பொன்றிநீகூற்றமேவும்புரம்புகாதொழிந்துபூமே
லொன்றியவின்பமேவியுறையெனவுரைத்தானன்றே. (௧௦)

குற்றமொன்றரிந்ததந்தைகூறியவாசிமேவி
நற்றவனாசிகேதுமகிழ்தலுநடுவன்றன்பா
லுற்றநீசுவர்க்கமேயாருண்மையுநிரயமேயா
ரற்றமுமுரைத்தியென்னுமந்தணர்க்கறையலுற்றான். (௧௧)

குற்றியாதிண்டநல்கிக்குளந்தொட்டுக்குளிர்நீர்ப்பந்தர்
பற்றியவிருப்பினோடும்பாலித்துப்பசியால்வாடி
வற்றினர்க்கன்னமாதிவழங்கியேவறிஞர்க்காடை
சுற்றியநல்கிச்சேர்ந்தோர்துயரொழித்தபயமீந்தோர். (௧௨)

வெயிலுருப்பொழியநீழல்வேய்ந்தகாவளித்தோர்வேதம்
பயின்மறையவர்க்குவேண்டும்பழனவூர்பலவுமீந்தோர்
துயிலுறப்பள்ளிபாலன்றூசுதாம்பூலஞ்சோதிக்
* கயிலணிகலவைதெண்ணீர்கத்திகை†காணமீந்தோர். (௧௩)

பல்லுயிர்க்கின்பமேன்மேற்படர்தரப்பலவுமீந்தே
யல்லலுற்றழியாவண்ணமளித்தவரறநூலாய்ந்து
சொல்லுமற்றெவையுமாற்றுந்தூயவர்சுவர்க்கமேவி
யெல்லையிலின்பவெள்ளத்தினிமையுற்றிருப்பரன்றே. (௧௪)

‡ அன்னமேயாதியின்பமளிப்பனவளித்தாரார்வந்
துன்னவேயவைகள்பக்கந்தொலைவறமலையிற்சூழ்வாம்
நன்ன§ரானளித்தார்தம்மைநலமுறவேந்திநாவா
யென்னவைதரணிக்கப்பாலெல்லையினின்பமாக்கும். (௧௫)

புற்புதம்போலுமெய்யைப்பொருளெனப்oபொக்கஞ்செய்யார்
நிற்பனவாயதூயவறத்தினைநிலையாச்செய்தா
ரற்புதசுவர்க்கமேவியழிவிலின்பார்ந்துகாலம்
பற்பலகழியவாழ்வர்பரிந்தனபலவும்பெற்றே. (௧௬)

தாகத்தாற்றண்ணீர்க்கெய்தும்பசுக்களைத்தடுத்ததீயோர்
மோகத்தாற்குரவர்நல்லோர்முனிவரைமுனிந்தமூடர்
வேகத்தூர்நாசஞ்செய்வோர்நடுவறவிளம்பியோம்பு
மாகத்தா+ரெல்லைக்கள்வருயிர்நிலையகற்றுந்தீயோர். (௧௭)

பொன்முதற்பொருளைக்கள்வார்மதுவினைப்புரிவா=ரேதி
னன்மனைப்போகந்துய்ப்பார்கன்னிபானவைகள்செய்வார்
தன்னிலையிழிந்தார்கூடசாட்சியார்தவறுசெய்யா
மின்னிடைதன்னைநீத்தார்வெய்யபொய்குறளைசொல்வார். (௧௮)

---

* கயில்-ஆபரணங்களின் கடைப்பூட்டு. † காணம்-பொற்காசு. ‡ அன்னதானம் முதலிய தானஞ்செய்தவர்களை; அத்தானபலங்கள்வந்து நான்கு பக்கங்களினும் யோசனைதூரம் மலைபோலச்சூழ்ந்துகாக்கும். § ஆன் என்பதை எழுவாயாகவைத்துரைக்க. o பொக்கம்-பொலிவு. + நிலங்களின் எல்லைகளைப் பிறரறியாமல் அழிப்பவர். = ஏதில்-அயல். கூடசாட்சி பொய்ச்சாட்சி. கூடம்-பொய்.

மற்றினமுரையாத்தீயவல்வினைமருளிற்செய்தார்
துற்றவெந்துயரக்கும்பிபாகத்துத்துரந்துதூத
ரெற்றிவெந்தடிகளீர்ந்தேயெரியிடைக்கருக்கிச்சோரி
யற்றிடக்குறைத்துநாவையரிந்திடவரற்றிமாய்வார். (௧௯)

விழியிணைக்குடைந்துகாய்ந்துவிரியெரிக்கம்பஞ்சேர்த்தி
வழியுவர்க்கோழைச்சேற்றின்மடுத்துடல்வழன்றுசெந்நீ
ரிழிதர[illegible]ர்ந்திடவிரங்கியேங்கி
யழிதுயர்நரகிற்சேர்வாரறிகிலாரறமுமந்தோ. (௨0)

## பலபுண்ணியங்களைப் போக்கும் சிலபாவம்.

நன்மையார்சுவர்க்கமேயாரின்பமுநரகின்மேயார்
வன்மையுமுரைத்தேன்வானமதியிளங்குழவிக்கீற்றுப்
பொன்மையார்சடையான்கோயிற்பொருளினைக்கவர்ந்தார்போத
மின்மையாலிகழ்ந்தாரன்பர்க்கிடுக்கணேயிழைக்குந்தீயார். (௨௧)

குடிப்பழியியற்றுநீரார்குருவிகழ்ந்துரைத்தார்கோல
வடிக்கணார்காமபோகம்வரம்பற*மறலிச்செய்வா
† ரடிப்படுநிலைமைநில்லாதழித்தவரறங்கண்முற்றுங்
கடிப்படவிளைத்தாரேனுநிரயமேகாயச்சேர்வார். (௨௨)

## பலபாவங்களைப் போக்கும் சிலபுண்ணியம்.

சந்தகிலாவிதீபந்தபனியப்பொலந்தார்தாம
மந்தமில்பூசையன்னமரன்றிருப்பணியூராதி
நந்துறவரனுக்கீந்தோர்நாடருங்கொடியபாவச்
சிந்தனையுற்றாரேனுஞ்சேர்ந்திடார்நிரயத்தீயே. (௨௩)

அருச்சனைவிடாதுசெய்தாரந்தணர்க்காக்கங்கூர்வார்
திருப்பயிறவத்தின்மேயார்தீங்குயிர்க்கென்றுஞ்செய்யார்
விருப்பொடுபூதிகண்டிவிரும்பினர்விதியிற்சார்வா
ருருப்புறுதீயரேனுநரகிடையுறார்களன்றே. (௨௪)

நெறியிடைத்தூதரோடுநிகழ்வுழிநிறைந்தசெல்வக்
குறியொடுபோகந்துய்த்துக்குவிமுலைக்கொம்பனாரோ
டறிதருமின்பமேவியவிர்தருவிமானத்தின்பஞ்
செறிநெறியறத்தினின்றார்செல்லுவர்தேசுசூழ்ந்தே. (௨௫)

---

* மறல்-மயக்கம். † தொன்றுதொட்டுவந்த நிலைமையை இடையே கெடுத்தவர்.

தீவினையாளர்பாம்புந்தேள்களுநிறைந்துசெந்தீப்
பாவினவெரிப்பமுள்ளும்பரல்களும்பாதமீர
வாவெனவிரங்கியேங்கியழுதவரடிப்பமாழ்கித்
தூவறக்கலங்கித்தீயாற்றுறுங்கடம்பதைத்துச்செல்வார். (௨௬)

எரிநிரயத்துத்துன்பமளப்பிலவின்னுமுண்டாற்
புரிதருசுவர்க்கத்தின்பமெண்ணிலபுகலின்மேவும்
விரிவறத்தொகுத்துக்காட்சிவிளம்பினன்மேதைமிக்குத்
தெரிதருதவத்தீரென்னச்செப்பினனுசிகேதை. (௨௭)

வேறு.

காலவன்சிவனன்காசிபன்குச்சன்கண்ணுவன்பிருகுவேயாதி
யாலமர்கடவுட்கன்பராமுனிவரனைவருமறவனுத்தாலன்
பாலனன்மொழியைப்பரிவொடுங்கேட்டுப்பண்புறவிம்மிதமேவி
யேலவுத்தாலற்கியம்பினரகன்றேயிருக்கையினேய்ந்தனரிப்பால். (௨௮)

பண்ணவரகன்றுபோயபின்றந்தைபதமலர்பரிவொடும்போற்றி
யண்ணனீயுரைத்தவருமறைச்சிரத்தினரும்பொருளனைத்தையுமாய்ந்து
மெண்ணறநிறைந்தபரம்பொருளிரண்டற்றின்புறுஞ்சீவன்முத்தியினை
நண்ணுறவிச்சைத்திரிவுறமோகநாட்டியத்தாழ்ந்தனனென்ன *. (௨௯)

நிறைதருமறையின்றுணிவெலாமுனக்குநிகழ்த்தியுநீடியபந்தக்
கறைகவர்ந்ததனுற்கண்டிலையவிச்சைகழிதரவாறியாத்திரையுங்
குறைவறப்பிரமயாத்திரையிரட்டிகுயிற்றியே†யமுதகூபத்து
மறைதரும்வேதநதியினுமூழ்கியாரணவரதனைத்தொழுதே. (௩0)

இச்சையாலுலகமுழுவதும்படைத்தேயிருளையீர்ந்தின்பமேயளிக்கும்
விச்சையாமியாழைப்பழித்தமென்மொழியேவிமலமாம்வீட்டினைவிளக்கும்
பச்சைமான்முதலோரனைவருமிவடன்பரிபுரச்சிலம்படிபரவிக்
கொச்சையாமாயக்குறிகடந்தமலங்கூடியேமேற்பதங்கொண்டார். (௩௧)

வேறு.

ஒழியாவுலகமனைத்துமவளுருவமாகுமுயிராகி
யழியாவமலவானந்தமவளேதனியாழைப்பழித்த
மொழியாமவளேபெருங்கருணைமுகிழ்த்தமூரற்குறுநிலவு
பொழியாவெதிர்வந்தருளுமெனிற்புவனத்தரியபொருளின்றே. ()

---

* உத்தாலகராகியபிதா நாசிகேதுவாகிய மகனுக்கு உபநிடதப்பொருளை ஒன்பதுதரம் உபதேசித்தும் அநுகூலமாயிற்றில்லை என முதனூலிற் கூறப்பட்டது. நாட்டியம்-குறிப்பு. † அமுதகூபம்-சுதாகூபம். இது அம்மைசந்நிதித்திருமஞ்சனகூபமென்பது மேலுங் காட்டப்பட்டது.

ஐயநீங்கியறிதியெனவமுதச்சுவையின்வயவமாஞ்
செய்யமேனிப்பெருந்திருவின் * றியானமனுவுந்தெளிவாருந்
தையலருச்சைத்திறம்பலவுஞ்சாற்றிவிடுப்பத்தொழுதேகி
மையலறயாத்திரையாவும்வகுத்தேவரதனடிபோற்றி. (௫௩)

நீலமணியினிரைமூழ்கிநினைந்தாரவிச்சையெனக்கரைமேற்
சாலவீசும்வேதநதிதன்னிற்படிந்துதவத் † தால
வாலமாகுஞ்சுதாகூபமடைந்தமூழ்கிவரியளியி
னோலமாகும்புன்னைநிழலுவந்தேதவத்தினொன்றினனே. (௫௪)

இதயகமலச்செழும்பொருட்டினிடையிங்கலையினடுவேய்ந்தே
யுதயகதிரோராயிரத்தினுருவாமனையினுங்குமிருள்
சிதையமலர்ந்தவிந்துவினிற்றேசார்செய்யவொளியுலகம்
புதையவிலங்கி ‡ மரீசியுருப்புனைந்தார்பலரும்புடையுறவே. (௫௫)

அரியுமயனுமுதற்றேவரனைந்துபரவநிரந்தவருள்
புரியும்பரையைப்பரிவினொடும்புணர்த்திப்§ புரணம்பொலியவமர்ந்
திரியுங்கரணப்பொறியவியவிகலுங்காமமுதன்மாற்றிப்
பரியுந்தியானத்தொடுமனுவும்பயின்முன்னாள்கள்பலசெலவே. (௫௬)

இனையவகையோர்மண்டலமுமிலங்குந்தியானத்திடைமேவி
யனையாயுலகமுழுதளித்தயாழைப்பழித்தமொழியை
நனையாரினியபுதுமலருநறவங்கமழுங்கருப்பூரச்
சினையார்நறியமறிக் ○ குழம்புந்தீபதூபந்திகழ்தரவே. (௫௭)

பொழியுந்திருமணங்கமழுமலைதீற்பொலிந்தவளமதுரம்
பொழியுந்தீம்பாறயிர்மதுவிற்பூசைபுரிந்துபுடைசூழ்ந்து
விழியுமனமுங்குளிர்தூங்கமேவிப்பணிந்துமெய்ப்புளகஞ்
சுழியிற்றிகழப்பதகமலந்தொழுதேமுறைதிர்த்திடுவான். (௫௮)

கண்ணுமனமுமினியசுவைகாட்டுங்கரும்பேகருதாதார்
பெண்ணென்றுரைக்கும்பெரியதவப்பேறேயமுதப்பெருஞ்சுவையே
யுண்ணின்றுருக்குமானந்தவுருவேஞானவுருவாகும்
பண்ணின்குதலைமதுரமொழிப்பரமேயாழைப்பழித்தாளே. (௫௯)

அறிவாயமலவானந்தவருளாயகண்டபூரணமாங்
குறியாயலைவில்கேவலமாய்க்குணமூன்றிகந்துபிரகாசச்
செறிவாய்மூலப்பகுதியுறுந்தெளிவாம் ╪ விகுதித்திறமேவி
மறியாயாழைப்பழித்தமொழிமானேயமலவடிவினளே. (௬௦)

---

* தியானமனுவும் - தியானத்தையு மனுவையு மென்க. † ஆலவாலம்-பாத்தி. ‡ மரீசி-கிரணம். § புரணம்-பூரணம். ○ குழம்பும் தீபதூபமுந்திகழ் தரவென்க. ╪ விகுதி-ஒன்றிற்றோன்றி விகாரப்படுத்துவது.

மூலமாயமுழுமுதலாய்மொழியுமனமுமணுகாத
கோலமாகிவடவித்திற்குலவிக்காமங்கூடுதலுங்
காலமாதியுகொகிக்கனியுங்கவிஞனிறைந்துருவம்
பாலநயனர்க்குயிராகும்பணியாலியாழைப்பழித்தவளே. (௪௧)

முற்றுமூலகாயதிற்பிரிந்துமொழியும்விராட்டுமுதலாகிப்
பற்றுமுயிருட்படிந்துமணிக்கோவையுபாதிபலமேவி
யுற்றுமவிச்சையிருண்மாயையொளியென்றொருவருயிர்க்காக்கி
மற்றுமியாழைப்பழித்தமொழிமாதேயமலவடிவினளே. (௪௨)

அன்னேயுனதுபெருகொளியாலகிலமுழுதுமாயடங்குந்
தன்னேரகலுநின்னருளாற்றலைவராயதவத்தோர்கள்
பொன்னேசெய்தற்கரியசெயல்புரிந்தாரேதும்புகலறியா
வென்னேரிலியானழியாதவின்பமெய்தற்கிரங்காயே. (௪௩)

பெருகுமுனதுதிருவருளாற்பெறுதற்கரியபேறெய்ந்து
பருகுமமலவானந்தம்படிந்தாரவர்முன்பயனற்றே
யுருகுந்தமியேனலமருதலொழித்தேயுலவாவொளியின்ப
முருகுகமழுமருணவடிமுளரிமுடிமேன்முகிழ்த்திடவே. (௪௪)

தந்துசீவன்முத்திநிலேதனையுந்தணவாப்பேரின்ப
நந்துமாறுந்தருதியெனநவின்றுபணியவெதிர்தோன்றி
வந்துநினைந்தவரமளித்தோமகிழ்ந்தேந்துதியாலிதற்கினிநீ
யுந்துவேதநதிமூழ்கியுவப்பாயெனதுதிருமுன்னம். (௪௫)

இருந்துநினையவிருணீங்கியிலகுமமலவொளியாகி
வருந்துதீர்தியுனதுதிமகிழ்ந்தாருனைப்போல்வளரின்பம்
பொருந்துவாரென்றுரைசெய்துபுவனமுழுதும்பூத்தளித்த
வருந்துமினியிடமுழுதுமாயையைப்பழித்தானமர்ந்தனளால். (௪௬)

உரையாலவனுமகிழ்ந்தமலையுரைத்தபடிசெய்துமையாகும்
பரையார்திருமுனிருந்துபரம்பார்ப்பப்பரமானந்தமிருட்
டிரையீர்ந்தமலத்தெளிவாகிச்சிதைத்துப்பேதத்திறமின்பங்
கரையீர்ந்துகளவனுபூதிகலந்தான்கதியுங்கண்டனனே. (௪௭)

வேறு.

பற்றறநிறைந்தபரஞ்சுடராயபரம்பரம்பரப்பறப்பார்த்து
நற்றவநாசிகேதுவும்வேதநதியிடைப்படிந்தவந்நயத்தா
லுற்றனன்பிரமத்தொன்றினனுறைந்தானுலகின்மீதுயர்கதியளிப்ப
மற்றிலைவேதநதியெனஞானம்வழங்குவதுன்னைடாமதிப்பாய்.

வேறு.

புரிமுகச்சங்கம்பொழிகதிர்ப்பரப்போபுனிதநீர்க்கங்கையோவென்னத்
தெரிவுறுங்காசிதனிலுயிர்விடுதல்செழுஞ் * சுடர்ப்பருப்பதங்காண்ட
லரியகேதாரத்தீம்புனல்குடித்தலளித்திடுமுத்தியையதுபோல்
விரிதருவேதநதிபடிந்தாடல்வீட்டினைவிளைத்திடும்விரைந்தே. (௪௯)

களியறுதவத்திற்கரிந்துடல்சருகாய்க்காண்பருங்கதியினைப்படிய
வெளிதினிலளிக்குமிரங்கியேவேதநதியெனவெண்ணமுற்றடையார்
தெளிவறமயங்கிச்சிறையுடற்பிணிப்பிற்றிரிபவர்தீவினையெவனோ
வளியரோவளியரிருண்மலமதனாலறிவறுமாந்தராயினரே. (௫௰)

நயந்தருவேதநதியினதருமைநம்பனம்பிகைக்குமுன்னவின்முன்
கயந்தலைமகற்குங்குமரற்கும்விமலைகரைந்தனண் † மந்தணக்கருத்தா
வியந்தவைங்கரனுமிந்திரற்களித்தான்வேளகத்தியற்கயற்குரைத்தா
னுயர்ந்தநன்மறைசையுண்மையும்வேநதியினதுயர்ச்சியுமுணர்ந்தே. ()

செய்யபூங்கொன்றைச்செழுஞ்சடையமயலன்சேவடிக்கன்பினையதனு
லுய்யவீதுண்மையுரைத்தனன்கதியையுறுவதற்கிதுவெனவுபாயம்
வையகத்திலைமடக்கியிந்தியத்தைவற்றியென்புருக்கியதவத்தி
னையினும்வேதநதியெனக்கதியையளிப்பதுநரபதியரிதே. (௫௨)

வேறு.

நாசிகேதுவுத்தாலகனென்றிவர்நயந்தே
வீசுதெண்டிரைவேததீர்த்தத்திடைமேவி
மாசுதீர்தரமறைச்சிரத்துட்பொருள்வாய்ந்த
தேசுசால்கதைமதிப்பவர்ஞானமேசேர்வார். (௫௩)

வேறு.

மதிபொதிவேணியனன்றிமாமறை
நதியினதுண்மையார்நவின்றுநல்குவார்
[illegible]
கொதிநுதிவேலினுய்குறித்துக்கோடியால். (௫௪)

நிரய*வருணச்சருக்க முற்றிற்று.

* வருணம்-வகுப்பு.

ஆ_ திருவிருத்தம் ௨,௨௮௰.

---

* சுடர்ப்பருப்பதம்-அருணசலம். † மந்தணம்-இரகசியம்.

# வருணச்சருக்கம்.

வேதநதிநற்புனல்விழைந்ததுபடிந்தே
போதவுருவுற்றவருணன்புகரகன்றா
னாதரவினாலெனவடைந்தவகைமுற்று
மோதெனவுரைத்திடமறைத்தவனுரைப்பான். (௧)

வேதவுருவாமகம்விளைப்பதனையெண்ணி
மாதவரையிங்குவருகென்றிடமதித்தே
யாதரவின்வந்துமகமாற்றியவையின்கட்
காதலொடுகாதைபலகட்டுரைசெய்கிற்பார். (௨)

ஆயகருமத்தொகையளிப்பனவனைத்து
மாயமுறுமுற்பவம்வளர்ப்பனமறித்தே
காயமுதன்மித்தையுலகத்தொடுகணத்தே
போயகலுமப்பினுறுபுற்புதநிகர்த்தே. (௩)

மற்றுநிகரற்றபிரமத்தினைமதித்தா
ரற்றனர்பிறப்பினையகத்தளவிலின்பம்
பெற்றனர்கள்சித்துருவமுற்றபிரமத்தோ
டுற்றனர்களித்தனருடற்பகைவிடுத்தார். (௪)

என்னவவர்பன்னுமுரையேயவருணற்கே
மன்னுகருமத்திடைமனப்பசையதற்றே
யுன்னுபிரமத்துறவுறக்கடிமுடித்தே
யன்னவனிதற்கெதுவமைப்பதெனவப்பால். (௫)

ஆகமுதன்முற்றுமழிவாமெனமதித்தே
மோகமதகற்றமுயல்வுற்றவருணற்கோர்
பாகமுமையுற்றவனருட்புணர்பயத்தா
னூகமுறவுற்றமறைசைப்பதியினுற்றான். (௬)

முத்தியவவுற்றவர்கண்முன்னுமெனமோதிக்
கத்துதிரைவேதநதிநற்கரைகலந்தே
பத்தியொடுமெய்ப்புனல்படிந்துபணிவுற்றே
யத்தனதடித்தலமுமற்பொடுபணிந்தான். (௭)

நம்பனதடித்தலநயந்துநறவஞ்சூ
ழம்பொன்மறைசைப்பதியருந்தவமுனாற்றக்
கொம்பினொடமர்ந்தவனிவற்கருள்கொடுப்பான்
வெம்புதிகிரிப்படைவிறற்பரனைவிட்டான். (௮)

முன்னவனருட்கொடுமுகுந்தனுமகிழ்ந்தே
யன்னவனிருக்கையுறவங்கவனறிந்தே
பன்னுமறையிற்றுதிபயின்றுபரவப்பார்த்
தென்னவுனதிச்சையுரையென்றிடவிசைப்பான். (௯)

பவப்பிணியரித்தருள்பரித்தபரஞானந்
தவப்பயனளிப்பதுதனைப்பெரியதக்கோ
யுவப்பொடுமுரைத்தியெனவுத்தமனநற்று
ணிவப்புறுமனத்துறநிகழ்த்தினனினைந்தே. (௧௦)

வேறு.

* கருமசாமியமின்றியேயுயிர்க்கிருள்காயும்
பருவமுற்றிடாதப்பருவத்திடைப்பரமன்
றருமமாருட[illegible]ழுந்திடஞானம்
பெருமவாவியிற்பிறங்கிடும்பிரமமாய்ப்பிரியார். (௧௧)

அறிவலாற்பிறிதொன்றினுன்முத்தியுமடையா
பொறிமனத்தொழில்விகற்பமேபந்தமாம்போக்கிற்
குறியுறுநிருவிகற்பமாமுத்தியுங்கூடுஞ்
செறியுமானந்த † சிற்கனமாமுயிர்தேரின். (௧௨)

மேய ‡ நற்றலந்தவஞ்செபம்புண்ணியம்வேதம்
வாயவோதுதன்மகமருச்சனைமலியோக
மாயஞானமேயளித்திடுமடைந்தவப்பொழுதே
தூயவேதமாநதிமுத்திதிரப்பிடுந்துணிவே. (௧௩)

பிறப்பநாதியாமிறப்பொடுதுன்பமும்பிணியு
மறப்புமீசனும்வையமுமநாதியாமற்று
மிறப்பமாழ்கியேயிந்தியப்பந்தனைக்கிரங்கித்
துறப்பிலார்பவத்துன்பசாகரத்திடைத்தோய்வார். (௧௪)

சுருதியுண்மையைக்கேள்வியேமுதலியதுணிவாற்
கருதிவேறறக்காண்பதுஞானமஞ்ஞானம்
பரிதிமுன்னிருட்பாற்படும்பகைநயநட்பு
§ மிருதிவாழ்வுதுன்பின்பொடுமமதைபோய்விடுமே. (௧௫)

---

* கருமசாமியம்-இருவினையொப்பு. சாமியம்-சமத்துவம்; ஒப்புமை. † சிற்கனம் - ஞானசம்பூரணம். ‡ நற்றலமுதலிய எட்டும் தனித்தனி ஞானத்தைக்கொடுக்கும்; வேதநதி ஒருவன் தன்னையடைந்தவுடன் முத்தியைக்கொடுக்கும்; இது நிச்சயமென்பதாம். § மிருதி மரணமென்பதுமேலுங்காட்டப்பட்டது.

* கோடிமாத்திரமுரைத்துமாலகன்றிடக்குறிப்பா
லாடியிற்றிகழ்பொருளெனவருணனதகத்து
நீடியுற்றதுமறைத்திறமுழுவதுநிறைந்து
தேடிமாமறைத்தீர்த்தத்திருடியசிறப்பால். (௧௬)

நிகமகானனத்திடையுயிர்முத்தருய்நிறைந்தே
யகமகிழ்ந்தனன்வருணனுமவன்மகன்பிருகு
தகவினுற்பணிந்தருமறைச்சிரத்துறுந்தனியா
னகமகிழ்ந்திடவருளெனவருணனுமறைவான். (௧௭)

இன்பவெள்ளமாம்பிரமத்திற்றோற்றியேயாவு
மின்பமார்ந்ததிற்றங்கியேபின்னுமங்கேயு
மன்பதைக்குறும்பிரியமேபிரமமாய்வாயு
மன்பினைந்துகோசத்தினைப்பிரித்துநீயறிவாய். (௧௮)

எனவுரைப்பவும் † கோசநான்கன்றிவேறிலையாற்
பனவமற்றதுபணியெனப்பகுத்துரைபகர்ந்து
முனுமதன்றிறமுணர்ந்திலன்பிரதிபந்தத்தின்
கனமெனத்தவன்கண்டுகாதலற்கிதுகரைவான். (௧௯)

பந்தமிக்குறப்பதியுளமதித்திலைபரிவிற்
சிந்துதற்கருமறைவனந்தேசுறச்சிறந்த
முந்தியாத்திரைபிரமயாத்திரையொடுமுடித்து
நந்தியுற்றெளிர்வேதமாநதியினைநயந்தே. (௨௦)

ஆடியிங்குறினறிவுறவமலமாமதனைத்
தேடியாடினர்க்கல்லதுமறைச்சிரத்தெளிவு
கூடுமாறிலையானுமங்கதனிடைக்குளித்தே
நாடியுற்றனனம்பனையருமறைநயத்தால். (௨௧)

கடிதினேகெனவேகியேகரைந்தனவனைத்து
முடியவாற்றியேவேதமாநதியினுமூழ்கி
வடிவமாகியமறைவனவரதனைப்போற்றி
§ யடிகள்பாலுறவறைந்தனனருமறைமுடிவே. (௨௨)

கோசமைந்தையுமுறைகழித்தின்பமாங்குறியாய்க்
காசமுற்றிடுஞ்சுமுத்தியானந்தமாய்க்கரியாய்ப்
பாசமற்றபூரணமதாயேகமாய்ப்பயிலு
நாசமற்றவின்பத்தையேபிரமெனநாடு. (௨௩)

* கோடிமாத்திரமுரைத்து- கோடியளவு அதிகமாகக்கூறி. † ஆனந்தமயகோசத்தை ஐந்துதரம்போதித்தும் அறிந்திலன் என முதனூலிற்கூறப்பட்டது. § ஈண்டடிகளென்றது பிதாவாகிய வருணனை.

மற்றுமின்பமேபற்பலவிடயத்தின்மருவி
யுற்றதாமதுநீபரப்பிரமநீயுறுதி
பற்றியோர்தியென்றுரைத்திடப்பரத்திடைப்பதிந்தே
யற்றவாவினையின்பமாயிரண்டறவமர்ந்தே. (உச)

சீவன்முத்தனாய்த்திகழ்ந்தனன்வேதமாநதியி
னுவலாற்படிந்தெவர்பரஞானத்தையடையார்
தேவதேவனதுருவமாய்த்திகழ்தலாலதனின்
மேவியோவியவிகற்பனாய்ப்பிருகுவும்விழைந்தே. (உரு)

பிரமமென்பதுபேசுதற்கரியதாய்ப்பிறங்கும்
பரமனின்னருள்வேதமாநதியுறப்படிந்தால்
வரமளித்திடுமெய்யெனப்பின்னருமகிழ்ந்தா
தரமுளப்படப்படிந்தரன்சேவடிதாழ்ந்தே. (உசு)

அடிகள்பாலுறவகண்டபூரணமுதலாய
முடிவிலாமுதன்மூன்னுறமுழுதுமானந்த
வடிவமாயுறவாய்மைவாய்ந்தவனொடுமன்னி
நெடியநாள்செலவடைந்தனன்றனதுயர்நிலையே. (உஎ)

வேறு.

நேடிவேதநதியினைநீதியா
லாடினாரிழிந்தாரவராயினுங்
கூடிஞானக்குறியினைக்கூத்தனை
நாடிவேறறநண்ணுவர்திண்ணமே. (உஅ)

வருணச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ, ௩0அ.

---

## சூசுமாரச்சருக்கம்.

தேன்பழுத்தனையவாய்மைசெவிப்புலஞ்செறியத்தேர்ந்தே
யூன்பழுத்தொழுகுமொள்வேளரபதியுவந்துபோற்றி
வான்பழுத்தனையவேதநதியிடைவரதன்றேற்றந்
தான்பழிச்சுதியென்றோதமுனிவரன்சாற்றுகின்றான். (க)

நீதியங்கடலிற்றோன்றுநிறைசுவையமுதமாந்தி
யாதியங்கடவுளன்னவருளினனயோத்திமேவித்
தீதியங்கிடாதுகாக்குஞ்செயலினன்கலைகண்முற்று
மோதியங்குணர்ந்தான்சூசுமாரனென்றுரைக்கும்பேரான். (உ)

அறத்துறைபடிவான்வேதவளவையேயன்றிமற்றைப்
புறத்துறைகடிவான்பூமேற்புனிதநற்றீர்த்தமூழ்குந்
திறத்துறவுள்ளமேவச்சேர்ந்தனன்றெளிநீர்க்கங்கை
நறுந்துறைகமழுங்காசிநகரம்பினைப்பரவிட்போனான். (௩)

பூம்பிரயாகைமேவிப் * புட்கரம்புரிந்துநோற்பா
ரோம்புநைமிசங்குருக்கேத்திரம் † பிரபாசமுமூங்
கூம்புகேதாரங்கோயிலுருத்திரகோடிகோமா
னும்புகழ்ந்திறைஞ்சவாழ்கோகரணமேசகநாதந்தான். (௪)

வேறு.

பரிந்தயோகேச்சுரம் ‡ பாவநாசனந்
திருந்துநேபாளமேதோர் § பலாச்சிரம்
பொருந்தியநருமதைவிந்தம்போற்றினர்
வருந்தலின்மகேந்திரம்வளர்மைந்நாகமே. (௫)

o ஐந்தெனக்குலவியவடத்தினுமிடங்
கந்தமாதனமுயர் + காளவஞ்சர
மந்தமில்சித்திரகூடமாரிய
முந்துசித்திரச்சுவேதமொய்வரை. (௬)

வேறு.

பாரிசாதவனந்தேவதாருவனமேமகாகூடங்
= க்காரினூர்ந்தகூடமிவைகண்டுவணங்கித்தென்புலத்தோர்
நேரினுலுந்தருப்பணமுநிகழ்த்தியமற்காரியநிறைத்தே
வேரிநாறும்பருப்பதத்துவிமலன்பாதந்தாழ்ந்திறைஞ்சி. (௭)

தொழுதுவணங்கித்துதித்தேத்தித்தொடங்கிப்பூசையிடஞ்சூழ
மழுவலாளனெதிர்தோன்றிவரமார்சித்தியருள்செய்யப்
பழுதிலாதசித்தியினைப்பரித்துப்பரனைவிடைகொண்டே
கழுநீர்கமழுங் ≡ காவேரங்கலந்துசிந்தைகளிகூர்ந்தே. (௮)

---

* புட்கரம்-ஓர்தலம். †பிரபாசம்-ஓர்தீர்த்தம். ஊமூங்கூம்பு கேதாரம்-ஊமூஞ் சத்திகுன்றுந் தானமாகிய திருக்கேதாரம். கோயில்-சிதம்பரம். ‡ பாவநாசனமானது திருந்தும் நேபாளமெனப் பொருள்கொள்க. நாசனம் நாசம். இஃதோர்மலை. பலாச்சிரமம் பலாச்சிரமென்றாயிற்று. o ஐந்தெனக்குலவியவடத்தினுமிடம்-பஞ்சவடி. பஞ்சம்-ஐந்து. வடம்-ஆலவிருக்ஷம். வடி - வடத்தையுடையது. எனவே, ஐந்து ஆலவிருக்ஷங்களையுடைய இடம் பஞ்சவடி என்க. + காளஞ்சரம் காளவஞ்சர மென்றாயிற்று. = காரினூர்ந்தகூடம்- நீலகூடம். பருப்பதம்-ஸ்ரீசைலம். ≡ காவேரம் ஓர்தேயம்; கவேரசம்பந்தம் காவேரமென ஆதிவிருத்திசந்தி. கவேரன் ஓரரசன்.

* அவ்வத்தீர்த்தம்படிந்தாடியரனைப்போற்றியளிபாட்
மவ்வனூறுமறைசையினில்வந்தேமணிமுத்தொடுபவளம்
பவ்வந்தூவுமணிமாடப்பசும்பொற்கிரணப்படலைபோய்ச்
செவ்வனியங்காதரமகளிர்நயனமழுக்குந்திருவினதே. (௯)

மறையுமா[illegible]நூற்கலைகளனைத்தினுக்கு
முறையுளாகிச்சுவர்க்கமதற்குதவியாகியுலவாது
நிறையுந்திருவும்பொழிந்தமலநிலவுஞானத்தெளிவாகி
யிறையும்பொலியவிருந்ததனையிறைஞ்சிவேதநதியடைந்தான். ()

எல்லாமறையுமுதித்ததனலிதற்கேவேதநதியெனும்பேர்
நல்லாருரைப்பர்பதிதனக்குநான்முன்புரிந்தநல்வினைகள்
பல்லாறுகிப்பயனளிக்கும்பான்மையிதுவாம்படியன்றே
லொல்லாதிந்தத்தீர்த்தமெனவுரைத்தேபடிந்தானுரவோயே. (௧௧)

ஆடியெழுங்காற்பரவைநடுவருணுதித்தர்பலகோடி
கூடியெழுந்ததெனக்கிரணக்குவையாலுலகங்கொளவிழுங்கிப்
பாடிமறைகள்பணிந்தேத்தப்பணியாபரணச்சுடிகைமணி
யோடிநிமிர்ந்தகதிர்சூழ்ந்தபுலித்தோலுடையோடொளியாக. ()

ஒளியார்முகமுமைந்தாகவுயர்தோளீரைந்துறவொளியாற்
றெளியார்படைகடிசைக்கரத்துச்சேரச்செந்தாணூபுரமுந்
தளியார்முடிமேன்மணிமகுடந்தழைப்பச்சூலகபாலமுட
னளியார்கூந்தலுமையோடுமறவோரிமையோரார்த்தெழவே. ()

† பஞ்சாவரணமுறைசூழப்பதுமத்தோனும்பணிக்கமஞ்சூன்
மஞ்சார்மேனிமணிவண்ணன்மருவுமயிராவதப்பாக
னெஞ்சாதிறைஞ்சுங்கணத்தினொடுமியைந்துசூழவெழுஞ்சோதி
நஞ்சார்மிடற்றோனேந்தாயநாதமுழங்கநவைநீங்க. (௧௪)

தோற்றம்பொலியப்பரனெழுந்தசுடருட்படிந்துதுளங்கிமன
மாற்றமறந்தோரற்புதமீதென்னமயங்கிமறைசைநக
ரேற்றமதுவோவித்தீர்த்தத்தியல்போவறியேனிதனுண்மை
சாற்றும்பெரியோரெவரெனவேதளருமளவிற்றவமிக்கோன். (௧௫)

---

* அத்தேயத்துள்ள அவ்வத்தீர்த்த மெனக.† பஞ்சாவரண முறைசூழ் தலாவது:—விக்கினேசுரர், சுப்பிரமணியர், சண்டேசுரர், ஏகாதசருத்திரர், ஆடகேசுவரருத்திரர், கூர்மாண்டருத்திரர், வீரபத்திரருத்திரர், முதலாயினார் முதலாவரணத்தினும்; சிவசாரூபகணநாதர், விஷ்ணு இரண்டாமாவரணத்தினும்; பிரமா, பிரமசாரூபம் பெற்றவர்கள் மூன்றுமாவரணத்தினும்; இந்திரன் முதலிய அட்டதிக்குப்பாலகர் நான்காமாவரணத்தினும்; துவாதசாதித்தர்கள், அட்டவசுக்கள், சத்தமருத்துக்கண் முதல் அளவிறந்தோர் ஐந்தாமாவரணத்தினும் பொருந்திச்சூழ்தலாம். ஆவரணம்-வீதி.

பொருவில்பெருமைப்புலத்தியனென்றுரைக்கும்பெயரோன்போதரவே
மருவிவணங்கியவன்கமலமலர்ச்சேவடிமேல்வாரிநடு
வெருவமனமுமொருசோதிவெள்ளம்பரமனுருவாகித்
திருவினூர்ந்துதோன்றியதென்றெளியேன்கணத்திற்றீர்ந்ததுவால். (௧௬)

சோதியிதுவென்னுளமகிழ்ந்தேதுணியவுரைப்பாயெனப்போற்ற
வோதியுணர்ந்தபுலத்தியனுமுரைப்பானுலவாமறையெல்லா
மாதிகாலமதிற்றோற்றமாயவதனாலருட்டுருவா
னீதினுறையும்பரனமரரெல்லாம்வேண்டியிரந்திடவே. (௧௭)

* மலிகார்த்திகையிலைப்பசியின்வைகாசியினுமாதவுடுப்
பொலிபூரணையினித்தீர்த்தம்பொலியப்பரமன்பொருந்திடுவ
னொலியார்வேதநதிமூன்றுயுரைத்தநாளிற்படிந்தார்தங்
கலிபோயமலன்றிருவ[illegible]. (௧௮)

† மாணிமாதனெனுமறையோன்மனமும்பொறியும்வளிபிறவும்
வாணியடக்கித்தவம்புரியமறைசையீசனெதிர்ந்துவரங்
கேணின்னுளத்துமகிழ்ந்ததெனக்கிளரும்வேதநதியதனைப்
பேணியகலாதுறைந்தருளிப்பெரியோய்காட்சிப்பிறங்கொளியால். (௧௯)

தோற்றமெனக்குப்பலவமரர்சூழச்சுடராயிரம்போல
வாற்றவளித்தவருணிலையேயருளாலெவர்க்குமளித்தகிலம்
போற்றவேதநதியினிடைப்பொலிந்துதேவபூடணமா
மாற்றமளித்தியெனப்பணியவரத்தாலமரும்வானவனே. (௨0)

இந்நாளிதனிற்படிந்தார்களெய்தும்பயனையிலங்குசடை
‡ முன்னாட்பிறையோனன்றியெவர்மொழிவார்முடியாப்பயனுதவு
நன்னாளதனைமெதிர்ந்துநயந்தாய்நலமாரிளமுருக
னன்றாய்முன்னாணிகழ்ந்தகதையறையக்கேணீயடல்வேலோய். (௨௧)

மறையோனொருவன்பலதீர்த்தமகிழ்ந்துபடிந்தேயுடன்மேவுங்
§ கறைபோலுலகிற்றிரிதருவான்றன்னைக்கடறுதனிற்கண்டே
குறையாப் ◯ பிரமவிராக்கதமுங்குறுகிக்கோலமறையவனைக்
குறைவாய்தருமமுரையெனத்தன்னுண்மையவனுக்குரைத்ததுவே. (௨௨)

---

* கார்த்திகையிற் கார்த்திகையும், ஐப்பசியில் அச்சுவினியும், வைகாசியில்விசாகமுமாகிய மாதநக்ஷத்திரங்களோடு பொலிகின்ற பூரணைகளிலே. † மாணிமாதருக்கு வைகாசி விசாகபூரணைத்தினத்தில் வேதநதியிலேதரிசனங் கொடுக்கப்பட்டது. ‡ முன்னாட்பிறை முதனாட்பிறை; ஒருகலையென்றதாம்; "வெண்மதியினொற்றைக்கலைத்தலையாய்" என்னுந் திருவாக்கானுமுணர்க. § கறை-கறுப்பு. அது பண்பாகுபெயராய் வாயுவை உணர்த்திற்று. ◯ பிரமவிராக்கதம்-பிராமணனாயிருந்து பிறந்த இராக்கதம்.

கொடியவினைகள்பலவொன் றுங்குறியாதிழைத்தேகொடுங்கூற்றுன்
மடியவருநாட்களவுசெயவருஞ்சண்டாள*னெனைமாய்ப்ப
நெடியபிரமவிராக்கதமாய்நின்றேபனவர்தமைநெருங்கி
யொடிவிறருமம்பகர்மினெனவுரைப்பேனுன்பாலுரைத்தாங்கே. (உ௩)

தருமாதருமத்திறமுணர்ந்துதாங்கிவ்வுடலந்தவிர்த்திடுதற்
கொருமாலுற்றதுளத்தினஃதுரைத்தியென்னவுயர்மறையோன்
வெருவாதுரைத்தான்கேட்டறிநீ,மெய்யதுரைத்தலேமௌன,
மருளாவதுவேதரும, † முணவளித்தசேடநத்தமதாம். (உ௪)

தனதுதாரத்திடையுறலேபிரமசரியந்தகுங்கால,
மினியதவமுமுயிர்க்கிரங்கலதுவாஞ், சமாதியுளத்தூய்மை,
துனிசெய்யாமையோருயிர்க்குங்கொல்லாவிரதத்துணிவாமா,
லுனியவாய்மையுளங்குளிரவுரைத்தலாகுமுபசாரம். (உ௫)

இன்பதுன்பஞ்சமமாகவெண்ணலாமிந்தியமடக்க,
லன்பிற்‡பொறையுஞ்சாந்தியுமேசௌசநான, மசற்கதைகண்
முன்பற்றகற்றலதுவியம, § நியமமொழிந்தபரிசியற்ற,
o றன்பற்றகற்றல்விரதமதாந், + தடியும்பகையுஞ்சினமாமே. (உ௬)

= உலவாமோகமஞ்ஞான, முரையில்வேட்கைகாமியமா,
மலவாமேலோர்க்களித்திடலேதானமாகு, மாசையுள
நிலவாதறலேவீடாகு, ≡ நேயந்தன்பானிறைந்ததனிற்
கலவாநிற்றலின்பமதாமான்மாவிராமக்காட்சியினால். (உ௭)

---

* என்னைக்கொல்ல. † பிறருண்ணக்கொடுத்தெஞ்சிய சேடமே நத்த போசனமாம். நத்தம்-இராத்திரி. இராக்காலத்துவந்த விருந்தினர், யாசகர் களுக்கு ஒருதலையாகக் கொடுத்தல் வேண்டுமென்பதுகருத்து. உணவளித்த சேடமத்தமதாமெனப்பாடங்கொள்வாருமுளர்; அது முதனூலொடு முரணு தலிற் பாடமன்றெனவிடுக்க. இராக்காலத்தியாசகருக்குக் கொடுத்தெஞ்சிய சேடமுண்ணுதலே யுணவு. ‡ பொறை-சௌசம், சாந்தி- ஸ்நானமென நிர னிறை. § நியமமாவது தான்சொல்லியபடி முடித்தல். o ஈண்டுத்தன்னெ ன்றது உடம்பை. + தடியும்பகை பெயரெச்சத்தொடர். = அறியாமையா வது தன்னை விட்டுநீங்காதமோகமாம்.பிறரோடு பேச்சின்றிவிரும்புவதே கா மியமாம்;சுவேச்சையாக விரும்புவதே காமியமென்றதாயிற்று.காமியம்-இச் சித்தது. ≡ ஆன்மாவினிடத்துக் கலந்த காட்சியினால் அன்புதன்பானிறைந்து அப்பிரமசொரூபத்திற் கலவாநிற்றலே இன்பமாகும். ஈண்டான்மாவென் றது பரமான்மாவை. இராமம்-இரமணம். இரமணமாவது இருபொருள் பூரணசந்தோஷமாகச் செறிதல்.

பொல்லாவாசைசமுசார, மனையாண்மதலைபொருளாதி
யல்லார்மாயை, பரலோகமாக்க*றனதுகாரியமா,
மொல்லாநிந்தையுரையாமைதுதியா, † மெவர்க்குமுபகார
மெல்லாவகையுமியற்றிடலேபூசையதுவாமிறைவனுக்கே. (௨௮)

பெரியோர்தம்மையகலாமைபெரிதுபொருளையீட்டுதலாம்,
பரிவார்கலைகளவையாய்தல்விவேகம், ‡ பரனோடுயிர்பகுதி
விரியார்விகுதிபிராணனிலைவேறுற்றறிந்துபொருந்துதலே
புரிவாமியோக, மிவைதருமஞ், செயலும்வடிவும்பொருளன்றால். § (௨௯)

எழுவாயுரைத்தவிவைமுதலா 0 விகமும்பரமுமின்புறவே
வழுவாவண்ணந்தருவதற, மற்றையவையேமறமாகுங்,
கழுவாயறியார், பலவுயிர்க்குங்கவலைபுரிவா, ரருளற்றார்,
விழுவார்நரகிற், + கதிவேட்கைவிடுத்தார்க்குளதாம்வேறின்றே. (௩௦)

என்றுமொழியுமந்தணனையிறைஞ்சியிசைத்தவறநன்று
நன்றுநான்முன்புரிந்தவினைநன்றுந்தீதும்பலவவற்றி
னொன்றும்பயனையுறு = திவ்வாறுற்றேனவைவந்துறுமாறுந்
துன்றுந்தருமாதருமத்தின்றொகையுஞ்சொல்வாயெனச்சொல்வான். (௩௧)

தூயசெயலேயறமாகும்பாவந்தீயதொழிலாகு
மேயநரகம்பாவத்தான்முன்னனுகர்ந்துமேவறத்தாற்
பாயசுவர்க்கம்பின் ≡ னுகர்வனிரயமிருபத்துடனெட்டா
மாய || சுவர்க்கமிந்திரனூராதியிருபத்தேழாமே. (௩௨)

---

* தன்காரியஞ் செய்தலாவது பரலோகத்தைத் தேடுதலாம். † பரோபகாரமே சிவபூசையாம். ‡ பரனும், உயிரும், பகுதியும், பிராணனுமாகிய இவற்றின் நிலைகளைப்பிரித்துப் பொருந்த அறிதலே யோகமாகும். இவைகளே நீ கேட்டதருமம். இவைகளையன்றிச் செய்கையும் வடிவும் தருமமாகிய பொருள்களாகா. § இதுகாறுங்கூறிய தருமங்கள் பிரமலோகத்திலே தேவர்களாற் சொல்லப்பட்டன என முதனூதலிற் கூறப்பட்டது. 0 இகத்தினும்,பரத்தினும் சுகத்துக்குக் காரணமாயின இது காறுங் கூறப்பட்டனவென்பதூஉம் முதனூலிற் கூறப்பட்டது. + மேற்கதியானது வேட்கையைவிட்டவர்க்குளதாம், வேறாக ஒன்றில்லை. = இவ்வாறுசாபத்தையடைந்தேன். ≡ ஒருவன் நுகர்வனென வருவித்து முடிக்க. || சுவர்க்கம் இந்திரனூர்முதலிருபத்தேழாம்.

என்னுமவனைமுத்தியே, தின்பமேது, சுகியாவன்,
மன்னுமனையாளெவண், மதலையாவன், * றனங், கேத்திரம்,யாது
பன்னுகென்ன முத்தி†பவம்பாற்ற லதுசாயுச்சியமாதி
துன்னுநான்காந், தனஞானஞ், ‡ சுகமுஞ்சுவதந்திரமாமே. (௩௩)

அஞ்சிக்கற்போடறத்தியல்வாளாகுமனையா, ளிகபரங்க
டஞ்சினளித்தேபுன்னரகந்தழுவாதருள்வான்மகனுரு,
§ நெஞ்சிற்பொலியவறத்தினிலைநின்றதியானங்கேத்திரமா,
நஞ்சிற்றெறு0நோய்கடனடைமூன்றில்லான்சுகியாநாடிடினே. (௩௪)

அன்பாலிவ்வாறறத்தினெறியறைந்தாயன்றியித்துணையு
மென்பாலருளாலிருந்தனையானின்னுமுய்யுமாறிரங்கி
வன்பாலிந்தவுருமாற்றும்வண்ணமளித்தியறமுயல்வார்
தன்பாற்சகாயஞ்செய்வார்க்கேதருமந்தழைத்தல்சாற்றினையே. (௩௫)

என்னவுரைப்பவதற்கிரங்கியிசைந்தேமறைசைவேதநதி
யுன்னமாயுந்தீமையெனவுவந்தேகோலாகலன்சரிதை
யன்னவிசுவாமித்திரன்மேனகையோடமருந்திரிசங்கு
முன்னமாயகதைமுதலமொழிந்தான்வினைபோய்முரிந்தறவே. (௩௬)

பரியுந்தீமையதனுலேபனவற்பணிந்தங்கவனோடும்
புரியும்வேதநதிக்கரையிற்புகுந்துபோற்றக்கொடுஞ்சாபக்
கரியும்பிரமவிராக்கதமெய்கழியக்கதிராருருமேவி
யரியுமயனுமறியானைத்தொழுதத்தீர்த்தமாடினனே. (௩௭)

ஆடிமகிழ்ந்தேவேதவனத்தமுதையருச்சித்தருட்பாதஞ்
சூடிக்கடவுளுருவாகித்துறக்கம்புகுந்தானன்றமுத
னுடிப்பாவமுத்தமெனுநாமந்தேவத்துவநயக்கும்
வீடுனும்வேதநதிமேவிவிதியால்விளங்கியதே. (௩௮)

அனையதன்மையித்தீர்த்தத்தமலனகலாதுறைந்திடுமாற்
கனையுமிதன்சீர்கணிப்பரிதாங்கலந்துநீயுங்கண்ணுற்ருய்
புனையுமருளாலென்றுரைப்பப்போற்றுமவனைப்புலத்தியனு
மினைவினோடும்விடைகொண்டங்கெழுதற்கமையவிறையோனும். (௩௯)

கண்ணுற்றமலக்குறியாயகருணைக்கடலையின்புற்றே
யெண்ணுற்றிகழ்ந்தேனினமொருக்காலெய்தற்குபாயமேதென்னப்
பண்ணுற்றினியமொழியதனுற்பரமன்மறைசைப்பதிபோற்றி
யண்ணற்கினியயாத்திரையோராறுமாற்றியருள்பெற்றே. (௪0)

---

* தானம்யாது? க்ஷேத்திரம்யாது? தனம்-திரவியம். கேத்திரம்-தலம். † பவம்பாற்றல்-சனனத்தைநீக்கல். ‡ இன்பம் சுவதந்திரமெனவே, துன்பமாவது பரதந்திரமென்பதூஉம் பெறும். § சற்பாவனையேக்ஷேத்திரம். 0 நோயும்,கடனும்,சுமைநடையுமாகியஇம்மூன்றுமில்லாதவனேசுகியாவான்.

தருமவுருவாம்வேதநதிதழைத்தநாமநூற்றெட்டும்
பெருமவுலகிற்பெறற்கரிதாம்பெரியோர்புகனூரதன்முதலா
ரருமையுறவீதறைந்துயர்ந்தாரதுநீவேதநதிக்கரையிற்
கருமந்தழையச்செபித்தரனைக்காண்டிகடிதென்றகன்றனனே. (௪௧)

முனிவனேகவம்முறையேமுனியாதாற்றிப்போற்றிசெயக்
கனிவாயுமைகோன்முன்னருளுங்காட்சிகொடுப்பக்கண்ணுற்றே
பனிவார்விழிநீர்பரந்தலைப்பப்பாரிற்படிந்துபரவசனு
யினியாயெளிதேயெதிர்ந்தனையென்றிறைஞ்சிப்பலகாலேத்தினனே

* தூலமாதிகாரணத்தினளவாய்த்தொடர்ந்துதொகையீர்ந்த
ஞாலமாதிதனதுருவிற்றோற்றியழியநவையற்றே
காலமாதிகற்பனையுங்கடந்துகருதற்கரிதாய
மூலமாகிவெளியொளியாமுதலேவேதமுழுமுதலே. (௪௩)

அன்னமாதிகோசநிலையகன்றே † யவத்தையதுகாணு
முன்னமாகிச்சிதானந்தமூர்த்தமேயாய்முடிவிலதாய்ப்
பன்னவரியபரம்பரனேபரவவுளத்திற்படிந்தூறுங்
கன்னற்சுவையேவேதவனகதியேகருணைப்பெருங்கடலே. (௪௪)

என்றுபோற்றவரமேதென்றிறையோனிசைப்பவேதநதி
துன்றியிவ்வாறுயிர்க்கருளவேண்டுமெனக்குஞ்சுடர்ச்சோதி
யொன்றுசீவன்முத்திநிலையுதவென்றுரைப்பவுளமகிழ்ந்து
நன்றுமளித்தேவேதநதிநாப்பண்மறைந்தாறுயகனே. (௪௫)

‡ தேர்வைகாசிவிசாகமுதற்றெளியுந்தவத்தாற்றினநவிற்றி
யார்வத்தவனைப்பசித்திங்களாமச்சுவினிதனிற்கண்டே
தீர்வற்றன்பாற்றிகழ்ந்தொளியாஞ்சீவன்முத்தித்திறமேவி
நாரற்றிடாதுவேதநதிநாமநவின்றுநலம்பெறவே. (௪௬)

போற்றிப்படிந்துவேதவனப்புனிதப்பெருமான்றனைப்புனலா
லாற்றிற்பரிவாலருச்சனைசெய்தருள்வானனைந்தொடுபணிநீ
ரூற்றிற்பொலியுமினியநீரிளநீருருபாறயிர்கன்னல்
சேற்றிற்றிகழுமகிற்குழம்புசெறிகற்பூரநறுஞ்சாந்தம். (௪௭)

---

* தூலம், சூக்குமம், காரணமென்னு முருவங்களினளவாய்த் தொடர்ந்து தொகை கடந்த பிருதுவி முதலாயின. ஆதி என்றது சூக்குமத்தை. † அவத்தையதுகாணுமுன்னமாகி என்றது, இவைகட்குச் சாட்சியாகி யிருந்தென்றதாம். ‡ வைகாசிப்பூரணை முதல் ஐப்பசிப்பூரணை வரையு மென்பது கருத்து.

ஆட்டித்தூபதீபமளித்தரும்பட்டாடைபலசாத்தி
யூட்டிச்சந்துகருப்புரத்தோடுவப்பவளித்தேயூறுமது
தோட்டிற்புனைந்ததொடைமாலைசூழச்சாத்தித் * துருக்கமணங்
காட்டிக்கமழ்நைவேத்தியநெய்கலந்துகறியோடுறவளித்தே. (௪௮)

நாறுமடைக்காய்கருப்பூரநயந்துநல்கிப்பணிமாறி
யூறுங்காதலொடுஞ்செபித்தேயோமமாற்றியுயர்வேதங்
கூறுந்திகழ்தோத்திரமுமுளங்குழைவானமைத்துச்சமாதிநிலை
யாறுந்தெரிந்துபாடலுடனாடற்றொழிலுமவையளித்தே. (௪௯)

படியிற்பணிந்துபல்காலும்பரவிச்சூழ்வந்தடிக்கமல
முடியிற்புனைந்தேயுலகத்துமுதல்வாமுக்கட்பெருமானே
கொடியிற்றிகழுஞ்சிறுமருங்குற்குவிமென்முலையாள்கூறுடை
வடிவிற்பொலிவாயருண்மேவிவாழவருளாயெனத்தொழுதே. ()

மற்றுங்கோயிற்புறஞ்சூழ்ந்துமகிழ்ந்துபணிந்தேவரதனருண்
முற்றுமேவியின்புருவமூர்த்தியானுனன்றுமுதற்
சுற்றுந்திரைசூழ்வேதநதிசுகுமாரனருச்சிதமென்
பற்றும்பெயரும்பரித்ததுசூழ்பாவத்தொடக்கும்பறித்திடவே. ()

ஊழியதனிற்சிவன்றன்பாலுறைந்தவேதமுருவாகி
யாழியதனிற்படிந்தரனையருச்சித்தங்கணமர்ந்ததனால்
வாழிவேதநதியெனப்பேர்மருவிற்றதன்சீர்வாழ்த்திடினும்
பாழியாயவினைமுற்றும்பறித்தேயமலம்பற்றுவரால். (௫௨)

பலவுமுரைத்தென்வேதநதிபரனைப்போலப்பெருஞ்சீரா
ணிலவும்பெருமையளப்பரிதாங்கழ்த்தத்துணிந்தவென்கறையுங்
குலவுமதுவேயொழித்திடுமாற்கொடும்பாவத்தாலித்தீர்த்தஞ்
சொலவுமறியார்படிந்துபவத்துன்பந்துடையார்துணிவற்றே. ()

அழிவார்க்கிரங்கிச்சிவபெருமானளித்தானிதனையறியாதே
சுழிவாய்த்திரியும்புழுப்போலச்சுழல்வாரென்றுந்துயர்தீரார்
கழிவார்நரகிற்பரகதியுங்காணாரந்தோகடும்பாவ [லோய்.
மிழிவார்க்கென்செய்தென்னுரைக்கோமிருந்தோமறிதியிகல்வே

மேலாஞானந்தருமாறுஞ்சித்திமேன்மைவிளைப்பதுவுந்
தோலாவினைகளவையனைத்துந்துரந்தேயெரித்துச்சுடுமாறும்
பாலாமுத்திபயப்பதுவும்படிவத்தழகும்பெருந்திருவு
† மாலாமற்றுங்கொடுப்பதுவும்வேதநதியேமற்றிலையால். (௫௫)

---

* துருக்கம்-குந்துருக்கம். † மால்-ஆசை.

வேதநதியின்மிகும்பெருமைவேதம்போலவீணைமுனி
யோதவுணர்ந்தேமாந்தாதாவுவந்துபுகழ்ந்தேயவன்கமல
பாதம்பணிந்தென்வினைதீரப்பரிவாலவித்துப்பாதுகாத்
தேதமகலவகற்றினையானிழைப்பதென்னென்றிறைஞ்சினனே. (௫௬)

வேறு.

இக்கதைகற்றோரிடரோவித், தொக்கவினைத்தூர்துகளாகச்,
செக்கர்முடிச்சேர்சிவனோடு,மொக்கவிருப்பாருண்மையிதே. (௫௭)

சூசுமாரச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨,௩௬௫.

---

## மாணிமாதச்சருக்கம்.

---

வரிவளைபுலம்பும்வேதநதியிடைமாணிமாதற்
கெரியவிர்சடிலமேயோனெதிர்ந்தனனென்னுமாற்றம்
புரிதரப்புகன்றிதோற்றம்புரிந்தமைமுற்றும்போற்றிப்
பரிவுறவுரைத்தியென்னப்பகர்ந்தனன்பகவனம்மா. (௧)

சுடர்மணியருவிகைம்மாத்தூம்புடைநெடுங்கைவீசப்
படர்வனபரிதிவானம்பற்பலகாட்டும்பாச
விடர்கெடவிமைக்குஞ்சோதிப்பருப்பதத்தியைந்துதீமை
யடர்மறைமாணிமாதனெனும்பெயரறவர்கோமான். (௨)

கலைபலதெரிந்துவேதங்கருத்தினைவருத்தியாய்ந்து
நிலையலவுடலமாதிநிமலனதருளேயின்ப
மலைவறவருளுமென்றோய்ந்தவணியிற்சிவனதான
முலைவொடுபலவும்போற்றியுறுதியுமுதவலாலே. (௩)

இறையவனுருவமாகியெரிமணிப்படலைவான
மறைதரச்சுடர்கள்வீசுமறைவனமகிழ்ந்துமேவிக்
கறையறவாறுமாற்றியாத்திரைகமழும்பூந்தே
னுறைமணிகன்னியாடியொருவனையுவந்துபோற்றி. (௪)

வினைத்தொகைகனற்றும்வேதநதியிடைவிழைந்துமூழ்கி
* யனைத்துமாமரணித்தீர்த்தமாமெனவதன்றனுழர்
தனைப்பலகாலுஞ்சாற்றித்தாழ்ந்துறவீழ்ந்துபோற்றி
நினைத்ததன்கூலமேவிநெடுந்தவமியற்றினனே. (௫)

---

* சகலபிரபஞ்சமுமாயிருக்குஞ் சிவனே இத்தீர்த்தமாமென்று.

அயில்வனமுழுதுந்தீதென்றகற்றியேயார்வத்தோடுந்
துயிலினைமாற்றியின்பச்சுடரினையுளத்துளாக்கி
வெயில்பனிமழைகடாங்கிவெறிமனம்பொறியுநீங்கிப்
* பயின்மருத்துளமுமீசன்பதமுறப்பரிவினோற்றான். (௬)

கரிந்துடல்சுருங்கநோற்றுக்கனிவொடுமினையுமாறு
தெரிந்தருளுதவவேண்டித்திரிதருதிரைகள்வீசி
விரிந்தறல்புரளநீலவெயிலுமிழ்ந்தலைகள்வேலை
முரிந்தெழுவேததீர்த்தமுழங்கிடவங்கணோர்பால். (௭)

பரிதிகளனந்தமேய்ந்துபரிமிதம்பரிந்து†சீர்தக்
கொருசிறையிருந்ததென்னவுவமையற்றலப்பிலாத
திருவொடும்பொலிந்துசெம்பொற்செழுமணித்திரளிற்செய்த
வரியணையோகபீடத்தம்புயப்பொகுட்டினுப்பண். (௮)

பெருந்தழற்பிழம்பிற்றோன்றிப்பிரிவுறுபொறியிற்சூழ்வந்
திருந்தவர்,தனதுசத்தியேய்ந்தவ,ரின்பமன்பா
லருந்தியகணங்க,ளிப்பாலரியயனாதிவானோர்,
திருந்துகந்தருவராதிதேவர்தஞ்சாதிபேதம், (௯)

என்னுமாவரணமைந்துமிளங்கதிர்க்கோடிநாண
மன்னுமவ்வுருவம்போற்றிவரன்முறைமருவிச்சூழக்
கன்னல்வேளயுதகோடிகவினிறைந்தமலமாகிப்
பன்னுதற்கரியசெவ்விபழுத்தெனப்படிவமாகி. (௧0)

குலவியவமுதவெள்ளங்குடிபுகுமதியம்போல
விலகியமுகமோரைந்துமிரவிமேற்பொலியவீர
நிலவுநாண்மலரிற்சேயநெடுங்கரமீரைந்தோடு
முலவியபடையுமின்போன்றுலாவியமார்பினாலும். (௧௧)

பழவயிரத்திற்காய்ந்தபசியபொற்கிரீடந்தீம்பாற்
குழவியந்திங்களுங்குரூஉச்சுடர்நிலவிற்கூர
வழகெலாஞ்சுவையிற்றூயவமுதத்தினியற்றியாங்கு
மழவிளமழலைத்தீஞ்சொன்‡மனோன்மணிவாமமேவ. (௧௨)

திக்கிருள்கிழித்துச்சோதித்திரளுருவாகவின்ப
முக்கியமுனிவர்பூதகணத்தொடுமுழங்கியாடத்
தொக்கெழுதருவின்மென்பூத்துளிமதுத்துவலைதூவக்
கக்கியகதிரின்வேலைக்கருநிறங்கமலம்பூப்ப. (௧௩)

---

* சுழல் காற்றைப்போலு மனமும். † தீர்த்தக்கெனவும்பாடம். ‡மன உன்மனி மனோன்மணி; மனத்தாற்றியானிக்கப்படத்தக்கவள். உன்மனனம்-தியானம்.

பரவையின்மீதுதோன்றிப்பணிமொழிபங்கன்மேவக்
கரவறுமாணிமாதன்கண்டனன்காண்டலோடும்
விரவியபுளகங்கண்ணீர்வீழ்ந்தெனமெய்யுங்கம்பித்
தரகரசிவவென்றோதியாற்றலற்றவசமானான். (௧௪)

பற்பல*வாரம்பூமேற்பணிந்தெழுந்தன்புகூர
வெற்புடனுருகிப்போற்றியின்பவெள்ளத்தினாழ்ந்தே
யற்புதமீதேதென்னவறிகிலேனென்றுமாயக்
கற்பனைகடந்துநெஞ்சங்கரைந்தறவிரைந்துசொல்வான். (௧௫)

சுருதியினறிவானந்தச்சுயம்பிரகாசமாகிக்
கருதியமனமும்வாக்குங்காலமுங்கடந்துகாயும்
பரிதியினைவையுங்காட்டிப்பரம்பரமாகியாக்கந்
தருதிருவேதநாதன்றனிரடிபோற்றிபோற்றி. (௧௬)

ஆதியிற்றானேயாகியகிலமாயமலமாகப்
பூதியிற்பொலிந்துதோன்றிப்புரணமாய்ப்புனிதஞான
வேதியிற்பாசமீர்ந்தேயிரண்டறவின்பமாகி
மாதியல்வேதநாதன்மலர்ப்பதம்போற்றிபோற்றி. (௧௭)

ஒருமுதலாகிப்பேதவுபாதியினுலப்பிலாத
திருவுருவாகிப்போகந்தெளிதருமொளியேயாகிக்
கருவியுந் † கரணக்கட்டுங்கடந்துகற்பனையுமாற்று
மருளுருவேதநாதனலர்ப்பதம்போற்றிபோற்றி. (௧௮)

வேறு.

பல்வகைச்சமயத்துணிவெலாந்தனையேபற்றவும்பற்றறநிறைந்தே
யெல்லையற்றன்பினின்பமேயாகியானவனெனதவையெவையுஞ்
சொல்வகைதானேயலதிலையாகித்துரியமுமிறந்துசெஞ்சுடராய்
நல்வகையருளமறைவனமேயநம்பநின்சேவடிபோற்றி. (௧௯)

சொற்றுணிவிறந்தமாயையின்விகற்பத்துணையறுமுலகெலாந்தோற்றி
மற்றவைநிறுவிப்பயனுறவளித்துவடிவறமாற்றியேயவற்றுட்
பற்றியவுயிரின்பரப்பெலாமியற்றிப்பற்பலதிறத்துறப்பகுத்தங்
கற்பனையிறந்தேயற்புதவுருவாங்காரணநின்னடிபோற்றி. (௨௦)

அரியயன்முதலோரனைவருமறிதற்கரியநீயெளியனேற்கருள்வான்
பரிவுறவெதிர்ந்துபணித்தருள்பிணித்தபான்மையையெங்ஙனம்பகர்வேன்
திரிபுரதகனசிற்பரவமலதேசிகசிறியவெண்ணிலவிற்
புரிதருசடிலபுராதனபுனிதபுங்கவசங்கரபோற்றி. (௨௧)

---

* வாரம்-தடவை; வடமொழி. † கரணங்காட்டும் எனவும் பாடம்.

வேறு.

என்றடிபணிந்துபோற்றியென்புநைந்துருகுமாற்றி
னின்றவன்றன்னைநோக்கிநினக்கருள்செய்யவேண்டி
யொன்றினமிங்குவேண்டிற்றுரையெனவுனதுதோற்ற
மன்றியும்பெறுவதுண்டேலறைகுவனுணையாற்றால். (உஉ)

எளியனேற்களித்ததோற்றத்திப்பெருந்தேவர்சூழக்
களிதருங்கருணையோடுங்கவின்பெறவேததீர்த்தத்
தொளிர்தரவுறைதல்வேண்டுமுலப்பறவுலகித்தீர்த்தந்
தெளிதருநாமந்தேவபூடணமெனவுஞ்சேர்ந்தே. (உ௩)

உனதடிக்கமலத்தூறியுருகுமன்புவந்ததாகு
மினவரந்தருதியென்னவீந்தவற்கெவருஞ்சூழத்
தினமிதினிறைந்துவைகித்தேவர்கண்முற்றும்போற்ற
மனமகிழ்ந்துறைந்துசீவன்முத்தியும்வழங்குவேமால். (உ௪)

விண்ணவர்காண்பர்மக்கள்வெளிப்படக்காணாரென்றே
யண்ணலங்கருளிமாணிமாதனுக்கமலமாகிப்
பண்ணவர்போற்றுங் * காணுபத்தியம்பரிந்துநல்கிக்
கண்ணுதல்வேததீர்த்தங்கலந்தமர்ந்தருளினனே. (உ௫)

அலைபொருவேததீர்த்தத்தமர்ந்தவச்சுடரைப்பின்னு
மலைவறமாணிமாதன்வணங்கி † வைகாசித்திங்க
ணிலைநிறைமதிவிசாகநேர்ந்தநாட்பாதியாமக்
கலைதருகாலமாந்தர்காண்பதற்கருளிச்செய்தே. (உ௬)

ஆயவக்காலமேவியாடினரளவிலாது
பாயவெவ்வினைகண்முற்றும்பறித்தவர்சீவன்முத்தி
யேயவர்க்களித்தாங்கிந்தேயிரங்குதியென்னவீந்தே
தோயமுற்றமலன்றீர்த்தவுருவுறுஞ்சோதியானன். (உ௭)

சொற்றநாளன்றிமற்றைநாள்களிற்றுளைந்தாரேனு
முற்றவெம்பாவமுற்றுமொழித்துலவாதவின்பம்
பற்றுவரதுவுந்தேவபூடணபரியாயப்பேர்
பெற்றதுதவநற்றீர்த்தமென்னவும்பிறங்கிற்றன்றே. (உ௮)

---

* கணங்களுக்கு அதிபதியாந்தன்மை காணுபத்திய மென்க. † வைகாசி மாசத்துப் பூரணையோடு கூடிய விசாக நக்ஷத்திரதினத்தில் மூன்றே முக்கா ழிகைவரை மனிதருக்கும் தரிசனங்கொடுப்பதற் கருளிச்செய்தென்க. இது கிருதயுகவரமாதலான் இக்கலியுகத்திற் கேலாமையறிக.

அரியதீர்த்தமகலாதேயன்றுமுதலாயமர்ந்தீசன்
புரிவனருளங்கெவர்க்கேனும்பொருந்துமகல,மதனீளம்
விரியோசனையுமரை,காலாமேன்மையெவர்க்கும்விளம்பரிதாம்
பரிவாற்படிந்தார்பாவவினைபாற்றிப்பரமனடிசேர்வார். (உ௧)

மாணிமாதச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ, ௩௧௪.

---

# மாகாசமச்சியப்பிராசீனயோக்கியச்சருக்கம்.

---

வாய்ந்தமாகா சமச்சியனுமறையோன்வேதநதிபடிந்தே
யாய்ந்துதுய § வியாகிருதியனைத்துமமலமதுவாகி
யேய்ந்தவண்ணநாரதநீயியம்பியருளென்றிசைதிசையே
பாய்ந்தவேந்துமாந்தாதாபகரமுனிவன்பகர்ந்தனனே. (௧)

பன்னுமாகா சமச்சியனும்பனவன்பாயவியாகிருதி
தன்னைப்பலநாண்முறைசெபித்துஞ்சாற்றும்பொருணற்சித்தியொடு
மின்னுமறியேனெனப்புடவியேயுந்தீர்த்தந்தலமேவி
மன்னுஞ்சித்தியடைந்திடுவான்வையத்துழன்றும்வாய்ந்திலனே. (உ)

மூந்தியாற்றுந்தவப்பயனின்முதிர்வால்வேதவனமேவி
யந்தீங்கிளவியொடும்பரமனமரும்வேதநதிமூழ்கி
நந்தியாகுமறைபோற்றுநாதற்பணிந்துநருவளிகள்
சிந்தியார்க்குஞ்சமிமூலஞ்சேர்ந்துதியானஞ்செய்தலுமே. (௩)

வேதநதியின்மேன்மையினுன்மேவிமூன்றும்வியாகிருதி
யோதநான்குமகசெனும்பேருற்றதுளத்திற்றெரியவுறப்
போதமேவிப்பூமுதலாப்புகன்றமூன்றுமங்கமதற்
கேதமகன்றவங்கியதுவித்துவேபிரமமெலர்முயிர்க்கே. (௪)

(இ-பு.) வேதநதியின் மகிமையினுன் மூன்றுவிதமாகிய வியாகிருதிமந்திரங்களை யுணர்ந்து செபிக்கவே, மகசு என்னும்பெயரையுடைய நான்காம் வியாகிருதி தோன்றியது. அதை மனத்தாற் சிந்திக்கவே, ஞானமுற்பத்தியாகிப் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகமாகிய மூன்றுவியாகிருதிகளும் அம்மகசுவுக்கங்கங்களாக(ச்சூரியனென்னுமர்த்தத்தைவிளக்கும்) அம்மகசுஅங்கியாயது. இம்மகசுவே எவ்வுயிர்க்கும் பிரமமாம். (எ-ம்.) மகசு-ஒளி.

---

§ வியாகிருதி-வேதமந்திரம்.

அங்கமூன் றுமங்கிபரமாவியாகுமெனப்பேதந்
தங்குந்தியானமுறவங்கந்தானேயுலகமூன் ருகுந்
துங்கவிரவிமகசாகுஞ்சொற்றவனல்கால்சூரியனு
மங்கமாயினன்காவதாகுமதியமங்கியதாம். (௫)

*

(இ-பு.) இங்ஙனம் அங்காங்கிபேததியானந் தோன்றவே, அம்மூன்றவ
கங்களும் அங்கங்களாக, அங்கியாகியசூரியன் மகசுவாகும். முற்கூறிய
மூன்றுவியாகிருதிகளுட் பூலோகம் அக்கினியும்,புவர்லோகம்வாயுவும்,சுவர்
லோகம் சூரியனுமாய் அங்கங்களாக, மகசுவாகியசந்திரன் அங்கியாகும்.
(எ-ம்.) பரமாவி-பரமான்மா.

இருக்குமுதன்மூன்றங்கமதாமெல்லேமகப்பூரணம்பரமாய்க்
குருக்கும்பிராணன்முதலாகக்குலவினவற்றினேதாவாம்
பெருக்குநனவுமுதலாயபிறழ்ச்சியாயிற்பிறழ்மாயத்
திருக்குமகற்றுங்கரியாகும்பிரமமகமாந்தேர்ந்திடினே. (௬)

(இ-பு.) இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதமாகியமூன்றும்அங்கங்
களாகும்போது நான்முகப்பிரமமாகிய மகசுவே அங்கியாகும். பிராணன்,
அபானன்,வியானனுகிய வாயுக்கண்மூன்றும்அங்கங்களாகும்போது அன்ன
மாகியமகசு அங்கியாகும்.சாக்கிரம், சொப்பனம், சுழுத்திகளாகிய மூன்
றும் அங்கங்களாகும்போது நான்காவதாகிய துரியமே அங்கியாகும். அம்மூ
ன்றற்கும் சாட்சியாகுந் துரியமாகிய மகசுவே நான் ஆனேன் (எ-ம்.) நே
தா-நடத்துபவன்.

கூறுமங்கியலதங்கமில்லேயாகுங்குறியதனுற்
றேறும்பரமாமெனேயின்றித்தேடும்பொருளும்வேறில்லே
வேறுவேறுவிவர்த்தமுறமேவுமதனுல்விளைந்தமுதா
யூறும்பரநானுலகீசனுயிருமெனப்பேருருவாமே. (எ)

(இ-பு.) அங்கியின்றி அங்கமில்லேயாம்.அங்கமாகிய என்னேத்தவிர மக
சுவாகிய அங்கியுமில்லே.வேறுவேறு பரிணுமத்தைப்பொருந்த இருக்கும் இ
க்கருத்தாற்ருேன்றி,அமுதமாகித்ததும்பும் செகமும், சீவனும்,சிவனுமெனப்
பெயரையுடைய பிரமம்யானே. (எ-ம்.)விவர்த்தம்-பரிணுமம்;ஒன்றுமற்ரெ
ன்ருகத்திரிதல்.

இன்றுமேனுமுன்னுமெனேயின்றியொன்றுமிலேக்கருத்தன்
கன்றுபயன்றுய்த்திடுவானுமலன்யான்கருமங்கதிமாயை
யொன்றுமிலேபற்பந்தமூலகுணமாத்திரையாம்பிறப்பிறப்பு
நன்றுதீதுமிலேயாகுநலமார்பிரமநானெனவே. (அ)

அ. (இ-பு.) ஞானமுற்பத்தியாகிய இந்நிகழ்காலத்தும் எதிர்காலத்தும் இறந்தகாலத்தும் என்னையல்லது வேறொன்றுமில்லை. நான் அற்பமேனும் ஒன்றைச்செய்பவனும், பிரயோசனங்களை அனுபவிப்பவனுமல்லன். நானும், கருமமும், அடையுமிடமும், மாயையுமாகிய இவற்றுள் ஒன்றுமில்லையாம். பந்தமாவது உலகென்று சொல்லுதலளவேயாம். சனனமரணங்களும், நல்வினை தீவினைகளுமில்லையாம். (பொய்யென்றபடி) நலமார்பிரமம் நானென்றறியவே. * (எ-ம்.)

ஒருவாப்போதம்வேதநதியுதவவுவப்புற்றொழியாத
பெருவாழ்வுறவேமனமகிழ்ந்துபிறங்குங்காலையவன் † சீடன்
குருவாமாகா சமச்சியனைக்குறித்தேயடைந்துகோகனதத்
திருவார்பாதம்பணிந்துளத்துத்திருக்கையொழிப்பான்செப்பினனே. ()

வேறு.

ஐயநின்னருளாலருமாமறை
யுய்யமுற்றுமுணர்ந்தனனாயினும்
வெய்யமாயைவிடுத்துவிகற்பெலாம்
பொய்யதாகநற்போதம்புணர்ந்திலேன். (௧௦)

ஏகமாயபரத்தினையீந்தெனை
சோகமோகந்துடைத்தருள்வாயெண
யோகமேயபிராசீனயோக்கியன்
ருகமாகமுனிவரன்சாற்றுவான். (௧௧)

உற்றமாமறைமுற்றவுமோதினுங்
கற்றதேசிகன்காட்டிக்கழறினு
மற்றதேலரனாருளாரணம்
பெற்றஞானம்பிறங்குதலில்லையே. (௧௨)

மாதுபாகன்திருவருள்வாயுமே
லோதுநூலுமுதிப்புறுயோகமு
மேதுமின்றியிலங்கனுபூதியாற்
கோதுவாட்டுவனீதுளங்கொண்டுநீ. (௧௩)

---

* இஃது இதனை, அத்துவிதமார்க்கமெனத் தாமேதம்மை வேதாந்திகரென மதிக்கும் ஏகான்மவாதிகள் கூறுவர். இதற்கு நெறிகாட்டியாகிய பாஷியம் சங்கரபாஷியம். இச்சங்கரபாஷியம், சுத்தாத்துவிதமார்க்கமாகிய சித்தாந்தசைவ சிவஞானபோத திராவிடமகாபாஷியத்தால் நியாயரீதியாகக் கண்டிக்கப்பட்டொழிந்தமையும், பிறவும், அம்மகாபாஷியம் வல்லார்வாய்ச் சித்தசமாதானத்தோடு கேட்டு உய்த்துணர்ந்துய்க. சித்தாந்தசைவம்-வேதாந்தம் முடிந்தமுடிபாகிய சைவம். † சீடனென்றது பிராசீனயோக்கியரை.

உள்ளமீருமுபாசனைநீயொரீஇ
வெள்ளமேயவிரிசடைவெண்ணிலா
வள்ளலாயமறைவனநாயகன்
றெள்ளுமாறருள்செய்வதற்கெண்ணியே. (கச)

நிலஞ்செய்மாதவம்போனிகமாடவி
வலஞ்செய்யாத்திரையாறுமதித்தபின்
குலஞ்செய்தீவினைக்கோதிரித்தின்பமார்
நலஞ்செய்வேதநதியிடையாடியே. (கரு)

புனிதவேதநதியின்புகழ்மைசா
லினியநாமமிசைத்துத்தொழுதபின்
குனியமேருக்குனித்தகுழகனற்
பனிகொடாமரைப்பாதம்பரவியே. (கசு)

வாயுநல்லருளெய்திவருதியேற்
றேயுமாயத்துகளற்றரும்பர
மேயுமாறுமறைச்சிரமீயுமென்
றாயுமாகாசமச்சியனன்பினால். (கஎ)

கூறநன்றெனவேகிக்கொடுந்துய
ராறயாத்திரையாறையுமாற்றியே
தேறிவேதநதியிடைச்சேர்ந்தருட்
பேறதாமெனவாடியபின்னரும். (கஅ)

நாமநூற்றுடனெட்டுநவிற்றியே
காமநல்கெனவாழ்த்திக்கமழ்தருந்
தாமவார்சடைச்சங்கரன்றாளிணை
வாமமேகலையோடும்வழுத்தியே. (ககூ)

வேறு.

உள்ளக்கமலநடுவலையத்தொருவாதுறையுங் * குடிற்கிடமாம்
பள்ளத்தமர்ந்துபசும்பொனிறம்பரிக்கும்புருடன்மனோமயனாய்
வள்ளத்தமுதின்வாய்ந்தநனவடிவமுழுதும்வயங்கியுளந்
தெள்ளத்திகழுங்கனவின்கணிதயச்சுழியிற்செறிந்திடுமே. (உ0)

அறிவுவறிதாஞ்சுழுத்தியிடையடங்கும்வாயுவனிபதங்கள்
குறியார்பிரமம்பூதிமுதற்குலவுமுலகவுருவாகிச்
செறிவாயவர்க்குநோக்கிலகுசெவிவிஞ்ஞானத்தேசாய
நெறியானனவினிலங்கியிடுநிகிலமாகிமனோமயனே. (உக)

* குடில்-ஆகாயம்.

தெரியுமிவன்றனுற்பவமுந்திதியுமழிவுமுணர்ந்ததுவே
பரியும்பிரமஞ்சுயஞ்சோதிபரிபூரணநித்தியமாமா
லுரியவதுவேநீயுளத்தினவத்தைமூன் றுமுணர்தலினுற்
கரிநீயன்றித்திரிவிடயப்பொருள்வேறில்லைக்கருதறினே. (௨௨)

அன்னபிரமமதுநானேயலதொன்றில்லையகிலமுநா
னென்னவுளத்தினுபாசனையையியற்றியகலாதிருந்தனையேற்
சொன்னசீவன்முத்திநிலைத்துணிவுமிதுவேதுணிதியெனப்
பன்னவுணர்ந்திப்பரிசாற்றிப்பரமாயின்பம்பரித்தனனே. (௨௩)

வேறு.

போதவாநந்தப்புணரியாயுறைந்தபுங்கவன்ஞானமேபொதியும்
வேததீர்த்தத்தின்மேன்மையையுணர்ந்துமீளவும்படிந்தமலேசன்
பாததாமரையைப்பரிவொடுபரவிப்பணிந்துளப்பயத்தொடுபணிக்குங்
காதலான்விழிநீர்கடலெனக்கலுழக்கரஞ்சிரமுறத்துதிகரைவான். (௨௪)

மண்புனலனல்கால்வான்மதியிரவிமகத்திறைவடிவமாய்வயங்கிக்
கண்பெறவுறைந்துங்கரணமும்பொறியுங்கலைகளுங்காண்பதற்கரியாய்
தண்பனிமதியஞ்சடைமிசைத்தரித்துத்தழைத்தபேருலகெலாந்தானு
யெண்பெறநிறைந்தாய்மறைவனமேயவிறைவனேயேதுனதியல்பே. ()

அருவமாயுருவமாயினையொருவனுயநீபலவுமாயமர்ந்தாய்
கருவிலாதுலகங்கண்டனையளவுங்கடந்தபேருலகெலாங்கரந்தாய்
மருவுமாலெவனேவாக்கிலையுரையும்வகுத்துரையொரீஇமறைப்பொருணீ
பொருவிலாமறைசைப்புனிதனேயியல்புபொருந்துமாறிதுவெனப்புகலே.

வேறு.

புனிற்றிளமதியம்புத்தமுதொழுக்கும்புரிசடைப்புனிதனேபோற்றி
கனித்துவர்க்குமுதங்கனிந்ததீங்கிளவிகவின்பெறுபங்கனேபோற்றி
தனித்துணையாகித்தளர்வுதீர்த்தருளேதருமொருகுரவனேபோற்றி
முனித்தவர்க்கருளுமறைவனத்தமர்ந்தமுதல்வனேயமலனேபோற்றி. (௨௭)

மழவுமி[illegible]ருமொருமற[illegible]திருவடியிறைப்போற்றி
யழலுறுபிறவியழிதரவுதவியளியனேற்களித்தனைபோற்றி
பழமறைதொழுதுவழிபடவழுவுபழியறவருளினைபோற்றி
நிழன்மணிநிரைகள்பொழிதருமறைசைநிறைதருமிறைவனேபோற்றி. (௨௮)

வேறு.

எனத்தொழுதடிவீழ்ந்திரந்திடவெதிர்ந்தேயிறையவன்மறைவனத்திருந்
மனத்துறவறுத்தோய்வழங்குவமுரைத்திவரமெனவரதநின்னடியா[தோன்
மினச்செழுங்கமலத்திடையுருவன்புமென்பெருங்குரவன்மேற்பரிவுங்
கனத்துறவருளித்துதியிதுபகர்ந்தார்க்கிசறுகதியினைக்கண்டே. (௨௯)

பொலிதரவருளேபுரிதியென் றுரைப்பப்புனிதனும்புரிந்துயர்மனுவா
மொலிதருகுறிப்பிற்கரந்தனனிரந்தவுயர்மறைமுனிவனுமோகை
மலிதருகுரவன்மலரடிபணிந்துவழிபடுதொழிலொடுமறைசைக்
கலிதெ[illegible]திமுத[illegible]க்கருத்தி[illegible]ர்நமர்ந்தான். (௩௦)

வேறு.

ஓதுவியாகிருதிப்பயனுற்றே, மீதுயர்நற்கதைவீடுறவுற்ருர்,
கோதுகுமிக்கதைகூறினர்பெற்ருர், தாதுமலர்த்தருநீழறழைப்பார். (௩௧)

மாகாசமச்சியபிராசீனயோக்கியச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,௪உ௫.

---

# திருமால்பெருமாறீர்த்தசருக்கம்.

கருணையுருவாயடியேன்களிகூரவேதநதிகலந்தமேன்மை
யிருணனிபோயிலங்கவுளமிசைத்தனையாலின்னமுமாலெய்திவேதப்
பொருணனையுமந்நதியிற்புனல்படிந்தபரிசெனக்குப்புகல்வாயென்றுத்
தெருண்முனிவன்றனைக்கேட்பமாந்தாதாவருண்முனிவன்செப்புகின்ருன்.

சீதமதிதெளித்தனையதீங்கதிரார்கயிலையினிற்சென்றுதேவன்
பாதமலர்முடிசூட்டிமுன்னொருநாட்பசுந்துளவப்படலைவேய்ந்தோ
ளுதரவாற்கருணையுருவானுனையுலகளிக்குமமலன்றன்னை
வேதமெலாம்படைத்தானைமிகப்பணிந்துபரிவோடும்விளம்பினுனே. (௨)

மூலவிருண்மலமடியமுகிழ்த்தொளிருஞ்சிவஞானமுடிவைமோனஞ்
சாலவருளினையுளத்துத்தங்காதங்கதுசலனந்[illegible]மேன்மேற்
கோலுமதிகாரநிலைகூடுதலான்மறந்ததுகூடுமாறு
பாலவிழியழன்மதனப்பதங்கமுறக்கதங்கடிந்தோய்பணித்தியென்ன. (௩)

இறும்பூதுபெரிதாகுமிதியானேதனிமேவியிசைத்தஞானம்
வறும்பாழாய்முடியுமெனின்மறைவழக்கான்மற்றையர்தமாற்றந்தன்ளுற்
பெரு[illegible]பெறென்மருண்[illegible]டுவார்பெருகுமாயக்
கு[illegible]ற்கூடும்போதம். (௪)

கொடுங்கலியினிடும்பிறவிக்கொடுந்துயரத்தடுந்தாவக்கோடையேதா
லொடுங்கல்செயும்பெரும்பெயலாயுறுவேதநதியிலதேவுயிர்களோய்ந்து
நடுங்கஞர்கண்டதுதீரநாமளித்தோங்கேள்விமுதனயவாரேனும்
விடுங்கலியார்கலிக்கலம்போற்பவங்கடத்துமருண்ஞானமேவற்கென்றும். ()

எனப்பரமன்திருமுகத்தினேயுமொழிதனைக்கேளாவிலங்குமாழிச்
சினப்படையோன்மகிழ்ச்சியொடுந்தெளிவாகிநாட்கமலச்செழுநீர்ச்செவ்வி
வனப்பகற்றுமருணவொளிவயங்கியதாண்மலர்போற்றி*மணிச்செஞ்சோதி
கனப்பெடைசூழ்ந்தலரலவென்றகல்வேதநதிவிளக்கமாயதெங்ஙன். [க்

எத்தலையி[illegible]ப்பாயென்னப்
பைத்தலைநாகப்பணியோன்பகர்ந்திடுவான்பசியநறுப்பயில்பூம்புன்னைக்
கொத்தலையிற்கமழ்வேதவனத்தினிடைக்கூன்வளைசூற்கொண்டுகான்ற
முத்தலைப்[illegible]மன்றே. (எ)

சனகனதிற்படிந்தமலத்தெளிவாகிச்சீவன்முத்திசார்ந்தான்றேவா
யனகமுறுமதிற்றுருவனுறியாத்திரையாற்றியயலெற்போற்றிக்
† கனகவரைமேலாகுமரியபதங்கைக்கொண்டான்கரிசதீர்க்குந்
தினகரனுமதிற்றோய்ந்துசனகாதிமுனிவரருள்சேர்ந்தானன்றே. (அ)

பார்த்தனதிற்றோய்ந்ததனுனிவாதகவசாதியுயிர்பருகிப்பாயுங்
கூர்த்தகணையாலுயர்ந்தான்குமரனுந்தாரகனுயிரைக்குறைத்தல்‡வேண்டிக்
கார்த்திகைப்பூரணையிலென்போற்கண்டெவருங்கதிமேவக்கலந்தோர்மூர்த்த
மார்த்தவலைவேதநதியமர்தியெனவன்றுமுதலமர்வேமம்மா. (கூ)

தீயுமிழுங்கதிராழித்திறற்படையோய்வேதவனஞ்சேர்ந்துதேறி
நீயுமதிற்படிந்தனையேனிலையாகுஞ்சிவஞானநிலைநின்றோங்கின்
வாயுமனக்களிசீவன்முத்திமருண்மாயமறவாழ்வாயென்னப்
பாயுமழவிடைப்பாகன்பதம்பரவிவேதவனம்பரிவிற்புக்கான். (க0)

தீங்குழலங்கதிர்மூரற்செழும்பவளச்[illegible]மென்சொற்
பாங்குழலுமளிக்கணங்கள்செவிக்குணவற்றதுபருகாப்பருவக்கொண்மூத்
தேங்குழலிற்படிந்துநறுத்தேக்கியமர்செழுங்கயற்கட்டிருவேயாய
பூங்குழலார்பலரீங்குப்புணர்ந்தியாரொருத்தியெனப்புலம்பிஞேடும். (கக)

மரைமலரிற்றிருவுறையும்வளமனையினப்பதியின்வறிஞர்க்காக்குந்
திரையின்மணிச்சித்தியமுத்தீங்குடையீரீங்குவந்துசேர்மினென்னுக்
கரையினலைக்கரமோதிக்கரையுமுயர்வேதநதிகண்டுகாதல்
விரையுமுளத்தொடும்போற்றிப்படிந்தமலவுருவாகிவேட்கையற்றே. (க௨)

போற்றியெழு[illegible]யோரிருமூன்றும்புரிந்துபின்னும்புகுந்துவேத
வாற்றினிடைப்படிந்தகன்றேயானந்தவுருவாகியடர்த்துமேவுங்
கூற்றினுயிர்பொடிபடுத்தகொழுங்கமலச்செழுந்தோடுகுழைக்குஞ்சேய
நாற்றிசையுந்தொழுமறைசைநாதனைச்சேவடிபணிந்துநயந்துபோற்றி. (க௩)

---

* மணிச்செஞ்சோதியை மலரென்றுகருதி அன்னப்பெடைசென்றுசூழ்ந்து மீளமலரன்றென்று நீங்கும் வேதநதி. † மேருகிரிக்குநேரே ஆகாயத்துள்ள அரிய துருவபதம். துருவபதத்துக்குத் [illegible]வும்பெயர். வைகுண்டம்-அழிவில்லாதது. துருவன் உத்தானபாதன் என்னும் அரசனுடையமகன். ‡ வேண்டல்-வாங்கல்.

என்புகனிந்தின்புருவாயிருவிழியுமருவியினீரிறைப்பவீறி
லன்புருவாய்ப்பரவசனாயானந்தவேலைபடிந்தமுழ்கினானுந்
தன்பெருமையறியாததன்மையனைச்சராசரங்கடானேயாய
பொன்புரியுஞ்சடையானைவிடையானையுடையானைப்போற்றல்செய்வான்.

உணருமனுபூதியினாற்றிருவுருவமுணர்ந்தார்களுடலமூன்றிற்
புணருமுயிர்ப்பாவகமற்றழியாதசிதானந்தபோகமாகி
யிணரளிபோற்களியுறவரித்தகையநினையடைந்தேனெல்லைபோகிக்
குணமகலுங்குறியாயமறையிறையேயினியேதுங்குறையிலேனே. (கரு)

அறிவரியநினதருளாலவத்தையுயிரபிமானியைந்துகோசம்
பொறியகலுமுலகனைத்தும்பொய்யாகுங்கனவெனவேபோதமாகிச்
செறிவரியபரப்பிரமத்தெளிவாகிச்*சுடும்படத்திற்றிகழநோக்கிக்
குறியகலுமறையிறையேயுனையடைந்தேனினியேதுங்குறையிலேனே. (கசு)

சத்தையிலங்கிடவின்பத்தன்மையுனதேவேறுசகத்தினின்றும்
பித்தியிற்சித்திரம்போலப்பிறங்குமுன்கண்விச்சையினிற்பிரியாநோக்கம்
வைத்தகிலம்பலவாக்கிமாயமெனமதிப்பவர்க்குமாற்றும்வான்பூங்
கொத்திலகுமறைவனத்தாயுனையடைந்தேனினியேதுங்குறையிலேனே. (கஎ)

வேறு.

கண்டேனுனசேவடிகாணலுமே
விண்டேன்மனமாயவிகற்பமெலா
முண்டேனுலகுள்ளனவோருருவாய்ப்
பண்டேமறைதேடியபண்ணவனே. (கஅ)

அளியேனுனதாளளவேயுணரத்
தெளிவாயுலகஞ்சிவமாயதுவே
யொளியேவெளியேயுணர்வேபுணருங்
களியேகதியாகியகண்ணுதலே. (ககூ)

வேறு.

என்றினையதுதியோதியிறைஞ்சுதலுமறைநாதனெதிரேதோன்றி
நன்றுனதுசெய்கையினிஞானநிலையகலாதுநண்ணுநின்பாற்
பொன்றிரளும்வேதநதிப்புதுமையுணர்ந்தனைவரநீபுகறியென்று
வென்றிவிடையானருளவெறிகமழும்பசுந்துளவோன்வேண்டுகின்றான். ()

இன்றுமுதல்வேதநதியெவரேனும்படிந்துனதாளிறைஞ்சிப்போற்றி
யொன்றுமுளத்தோடளியேனுரைத்ததுதியோதினர்களுலவாஞானந்
துன்றியவர்நினைந்தனவுந்துணிந்தனவுமந்நிலையேதுயரநீங்கி
யொன்றிடுகவெனவுரைப்பவரமளித்துத்தெளிகுறியினொளித்தானன்றே. ()

* சுடும்படத்தில்-தகிக்கப்பட்ட வஸ்திரம்போல.

பணிந்தெழுந்துநெடியவன்றன்பதியடைந்தானிக்காதைபடிப்பார்கேட்பார்
திணிந்தவிருளகன்றமலந்தெளிவார்கடவினையுந்தீர்வரென்றே
துணிந்தமறைநாரதனுஞ்சுடரிலைவேற்றெவ்வருரந்துணித்துச்சேர்த்தி
யணிந்தபெருவில்லையாரமாசைமகட்கருளரசற்கறிவுறுத்தான். (௨௭)

வேறு.

மாலதுசரிதமதித்தவர், பாலுளவினைகள்பறித்தவர்,
காலெனமறுகுகருத்தினுள், வாலியசிவனடிவைப்பரே. (௨௩)

திருமால் பெருமாறீர்த்தசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௪௪௮.

---

# இந்திரன்பாவஞ்சிந்தியசருக்கம்.

வெள்ளவருட்பெருங்காலினொழுகுமுனதுரையகலாவேட்கைமென்பூங்
கள்ளவிழுந்தருநீழற்காவலனுமிந்திரனுங்கலங்கிமாசு
கொள்ளவருபிரமகத்திகூடியதும்விடுத்ததுவுங்குலவுமாக்க
முள்ளமுறத்தருதியெனப்பரசுமரசனுக்கறவோனுணர்த்தலுற்றான். (௧)

விண்ணமருந்துவட்டாவின்மைந்தனெனப்பிறங்கியசீர்விசுவரூபன்
கண்ணளவுமுடலானையடிப்படுத்தமகமுளத்துக்கருதித்தீக்கை
வண்ணமுறவிந்திரனோர்ந்தவன்மீதுவச்சிரத்தைவழங்கவேட்போ
னெண்ணமறச்சிரமரியவவனுடனின்றொருகிருத்தியெழுந்ததன்றே. (௨)

* ஓங்குமுயர்வாயிரமாயெயிறுசதயோசனையாயுருமுக்கான்று
வீங்கிருதோளுயர்த்தமரர்வேந்தனுழைச்செலவவனும்வெள்வியாற்றிற்
† றுங்குபுரோடாசவினைத்தருக்கினுறத்தடுத்திடவுந்தரியாதாகிப்
பாங்குறவங்கவன்படரப்பின்றொடர்ந்துபிரமகத்திபழியிற்சென்றே. (௩)

சருவியெரியுறவடர்த்துக்காய்ந்திடலுந்தடத்தலராக்கமலப்போதின்
வெருவியவனுறைந்தமரவிண்ணவர்தங்கிளைபுரக்கும்வேந்தனற்றே
யருவிமதக்களிற்றினையவசுரரடர்த்திடக்கலங்கி ‡ யரசன்றன்பான்
மருவியுரைத்திடவேந்தன்வருமளவுமினிதுமக்குவகுப்பனென்றே. (௪)

---

* ஆயிரம்யோசனை யுயரமாய், எயிறு நூறியோசனையாய். † புரோடாசம்-அவிசு. ‡ அரசன்-பிரகற்பதி.

தனியாழிதரைசூழத்தருநகுடன்றனைச்சார்ந்துதருவினீழற்
பனியாருமரசளிப்பப்பரித்தவனுந்தேவரொடும்பரவிச்சீற்ற
முனிவாருந்தானவரையடக்கியமராவதியின்முருகுநாறுங்
கனிவாய்மங்கையராடற்கவினளிக்குந்திருமேவிக்களிக்குநாளில். (௫)

அந்தரத்தாரரிவரவுபார்த்தமரவேதவனத்தாதிநாத
னிந்திரத்துய்முனற்கருளவகத்தியனையேவவவனியற்கைதன்னாற்
சுந்தரச்செங்கயற்கருங்கட்டூமுறுவற்சசியெழிலார்தொடரிற்சூழ்ந்த
சிந்துரத்திற்பரிநகுடன்சேயிழையாமவள்கலவிசிந்தைசெய்தான். (௬)

ஆங்கதுணர்ந்தவள்சிவனடியணைந்துபணிந்தடிகேளமரர்த்தாங்கும்
வீங்குதிரடோள்வேந்தனென்றணையுநகுடனென்பால்விருப்பமுற்றான்
றாங்குணருநீயலதுபிறர்காணேனுனதருளேசார்ந்தவென்பாற்
றீங்குசெறியாதருணீசெய்தியெனவிரப்பவவன்சிந்தைசெய்தே. (௭)

வன்னிதனைக்கூவியுறைவாசவனதிடமாய்ந்துவந்தேயென்பான்
முன்னியுரையெனவேவமூவுலகுமவனாய்ந்துமுருளமேவ
னுன்னியகலிடத்தொருபூவுழையுற்றானெனவமரரோடுமேவி
யந்நிலையினுறவயிராவதப்பாகன்றனையமரரடைந்துசொல்வார். (௮)

இரவியறுமுலகமெனவிறையவனீயின்றிவிண்ணாடிலங்கலின்று
மரவினுயிர்தானவருமடர்ந்தழிப்பார்பூமுகையினடங்கிமேவல்
புரவலர்கணெறியன்றாற்புறமேவியெமையளித்திபோதியென்னக்
குரவனடியெழுந்திறைஞ்சக்கோலமவன்குன்றியதுகுறித்துச்சொல்வான்.

அஞ்சியுளம்பிரமகத்திக்கயர்ந்தழியேலமரருலகளித்திநீயே
நஞ்சினுறும்பிரமகத்திநடுங்கவிதுநவில்கின்றேனயர்ந்துகேணீ
வஞ்சியொடுமறைவனத்தேமகிழ்ந்தபிரானருள்போலவயங்கிமுன்னர்
விஞ்சியுறும்வேதநதியதிற்படியிற்பிரமகத்திவீயுமன்றே. (௧௦)

அலகில்கொடும்பாதகங்களடைந்தாருமதிற்படியினகல்வரன்றே
விலகியகோலாகலனும்வினைவிடுத்தான்றிலோத்தமையுமிருகநீர்மை
செலவிடுத்தாள்கௌசிகனுமேனகையுங்கிழம்விடுத்தார்திரிசங்கென்பா
னுலகினுயர்பதமுற்றான்காவிரியுங்கலித்தோடமொழித்ததீங்கே. (௧௧)

வெறிகமழுமலர்மேயவிரிஞ்சன்மனுத்தக்கனெனுமேலையோருஞ்
செறியுமிதிற்படிந்துலகசிருட்டியினைச்செய்தனராற்சேடனானு
மறிவினைதருஞ்சாபமகற்றினனாலிதிற்படிந்தேயளவிலாதார்
குறியகலுஞ்சிவவீடுகூடினராற்சனகாதிகுணத்தின்மிக்கார். (௧௨)

திருவொழுக்கங்குணந்தேசுசிவஞானந்தெளிவமலஞ்சிறையிற்றீராக்
கருவகற்றல்கலையாயுக்கவின்பாயவினைகாய்தல்கவிகைகாட்சி
பொருவகற்றுமின்பமகம்புதல்வர்தவம்பொறைகவிதைபுடவிபோகந்
தருநிழற்றுஞ்சுவர்க்காதிதபனியப்பூங்கொடியனையதடங்கணல்லார். (௧௩)

விரும்புமவையெவையேனும்வேண்டியவாங்களித்தருளும்வேததீர்த்தம்
பெரும்புவனத்ததற்குநிகர்பிறிதில்லைவருதியெனப் * பிறக்கிற்கொண்டே
சுரும்புலவுந்தருநீழற்சுரரோடும்வேதநதிதுன்னியாக்கந்
தரும்பரிவிற்சங்கற்பஞ்சாற்றுவித்துப்புனலமுழ்ந்தாழ்த்தலோடும். (கச)

அடுங்கிருத்தியரியுடலமதுநீங்கிக்கரைமேவியமுதுகூவி
நடுங்குறப்பொன்கண்டதனைநான்காக்கிப்புடவி,தரு,நார,மின்னுங்  [மூ
கொடுங்குழையா,ரிடத்தளிப்பவிந்திரனும்பிரமகத்திக்குறைபோய்க்கொண்
விடுங்குளிர்வெண்மதிபோலவிளங்கியகல்வேதநதிவிரும்பிப்போற்றி. (கரு)

குருவினனுமதியதனல்வேதநதிமேல்பாலிற்குலவுந் † தாணுத்
திருவுருவமொன்றமைத்துத்தீர்த்தமுமொன்றதிற்பூசைசெய்யவாற்றி
மருவுலவுமலர்ப்பூசைவகுத்திருமூன்றியாத்திரையுமறைசைமேவிப்
பொருவரியபெருமானைப்போற்றியடிப்போதுசிரம்பொலியச்சொல்வான்.

வேறு.

அருமறைச்சிரத்தின்மேயவமலனேபோற்றியன்பாற்
குருமணிகொழிக்கும்வேதநதியுறைகுழகாபோற்றி
திருவளித்தென்னையாண்டசெல்வமேபோற்றிநஞ்சால்
வெருவுறவச்சந்தீர்த்தவேதநாயகனேபோற்றி. (கஎ)

நீங்கருங்கொடியபாவநீக்கியநிமலாபோற்றி
தாங்கருமின்பமாயதலைவனேபோற்றிபோற்றி
பூங்கரும்புடையான்மேனிபொடிசெய்தபுனிதாபோற்றி
வீங்கிளமுலையாள்பங்கின்வேதநாயகனேபோற்றி. (கஅ)

எனப்பணிந்தேத்திச்சூழ்வந்திறைஞ்சியேயேகிநாகந்
தனைப்புரந்தமரர்க்காத்துத்தானவர்தருக்குமாய்த்து
வனப்பணிசசியினோடுமகிழ்ந்துவீற்றிருந்துவாழ்ந்தான்
சினப்படைக்குலிசமேந்துஞ்சீற்றவெண்களிற்றினனே. (ககூ)

வாசவன்றீர்த்தமூழ்கிவரத்தவனமைத்துப்போற்று
மீசனைப்போற்றிற்பார்ப்பாரிருங்கொலையாதிபாவ
நாசமதாகுமின்பநண்ணுவர்நாளுமென்றே
பாசமிலறவோன்வேந்தற்குரைத்தனன்பரிவுகூர. (உ0)

கிருத்தியதாயெழுகேதமதாயே, வருத்தியதீமையின்வாசவனேவ,
வருத்தியின்மேவியளித்தருள்காதை, திருத்தியகேள்வியர்தீமையிலாரே.

இந்திரன்பாவஞ்சிந்தியசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ, சகூக.

---

* பிறக்கு-பின். † தாணு-இந்திரலிங்கம். தீர்த்தம்-இந்திரதீர்த்தம்.

# பிரமாதிசிருட்டிச்சருக்கம்.

அருளார்குணக்குன்றெனவோங்குமறவர்கோவேயம்புயமேற்
பொருளாமயனுந்தக்கனுநூல்புகலு * மனுவும்புரிவனெக
ளருளார்ந்துகளும்வேதநதியுவந்துபடிந்தேயுலகளிக்குந்
தெருளார்ந்தனரென்றுரைத்தனையத்திறநன்குரைநீயெனத்தெரிப்பான். (௧)

விரியுங்கமலப்பொகுட்டுறையும்விரிஞ்சனுலகம்விதித்தளித்துப்
புரியுஞ்சத்திபெறமறைசைப்புரியின்மேவிப்புலம்பியுடல்
சரியுந்தவஞ்செய்துறவுமரன்சாராமையினூற்றருமகத்தி
னரியச்சிரத்தையுளத்தமைத்தேயமலதியானத்தமர்ந்தனனே. (௨)

† நெற்றிநடுவிற்பலபரிதிநிழலிற்றிகழ்ந்துநிறையுமதி
வெற்றியுதவியருட்கதிரால்விளங்குமுகனும்விழிமூன்று
மெற்றியிருளைத்தெறுமூரலிலங்குந்துவர்வாயெழிலுமிருள்
பற்றுங்களமுங்கரநான்கும்பணியார்தரளப்பலவடமும். (௩)

கருங்கட்செவ்வாய்ப்புளகமூலக்காதற்கரும்போடுடனாகி
நெருங்கப்புணர்ந்ததிருக்கோலநிழலார்பசும்பொற்பீடமிசைத்
தருங்கற்பகம்போல்வீற்றிருக்குந்தன்மைநாடிச்சரிக்குமன
மொருங்கத்தியானத்துறமகிழ்ச்சியுற்றேயமலனுவப்புறவே. (௪)

ஓங்குமேன்மையீரைந்தோடொன்றுமெண்ணினுருத்திரரை
யாங்குப்பணிப்பவவர்புருவத்திடையேதோன்றியிடவயனு
மீங்குற்றனிர்நீர்யாவரெனவீசனேவலாலுனது
பாங்குற்றனமாற்சிருட்டிதெளிபான்மையளித்தற்கெனப்பகவன். (௫)

மருவுஞ்சிருட்டிதனைநீரேவகுப்பீரென்னவழங்கவவ
ரொருவரொருவர்கோடியுறப்பதினோர்கோடியுருத்திரரைப்
பொருவவளிப்பவுருத்திரராய்ப்புவனம்பொலியவவனிதனை
யொருவுஞ்சனனமரணமுறவுழலுமவரையுதவுமென. (௬)

பழியார்சிருட்டியதுநாங்கள்படையேநீயேபடைப்பதற்கு
வழியாமறையம்மறைவேதவனத்துநாதன்வழங்குமதற்
குழியாருத்தத்திரிகோடியுரைசார்தீர்த்தமுவந்துபடிந்
தழியாமுதலைப்பணியருளுமென்னவகன்றாரவர்தாமே. (௭)

அன்னோருரையுட்கொண்டயனுமருத்தத்திரிகோடியின்மூழ்கி
முன்னோன்றன்னைப்பணிந்தளிக்குமுறையேவேண்டித்தியானித்தே
மின்னேடியனும்விரிசடையான்முன்னமிருப்பவிதிமுகத்தின்
மன்னோருருவாய்ப்புருடனெனமருவித்தோற்றம்வழங்கினனே. (௮)

---

* மனு-சுவாயம்புமனு. † புருவமத்தியிலே சிவனைத்தியானஞ்செய்ய, அத்தியானம் வாயிலாக அப்புருவமத்தியினின்றும்.

தோற்றும்புருடன்றனைவிரிஞ்சன்றெருழிலேதெனக்கென்றிசைப்பவவ
னூற்றுமமிழ்திருன்மாவையுணர்விற்பகுப்பாயெனவுரைத்தே
போற்றுமுருவஞ்*சுடர்விளக்கிற்போயநெறியும்புகலரிதா
யாற்றுமறையவிதிமறையினுற்றைநினைந்தேயமர்ந்திடுவான். (௯)

பிரியான்மாவையெனவுரைத்தான்பிரிப்பதெவ்வாறெனப்பெரிதும்
பரிவோடமரத்தார்கமாய்ப்பகரும்பரமமனுத்தோற்றி
விரிவாயுலகமூன்றினொலிமேவவதனை†விதியோதித்
தெரிவாய்மர‡வடற்காரந்தேசாய்த்தோற்றித்திகழ்ந்ததுவே. (௧௦)

ஓங்காரத்தின்வியாகிருதியொலியிற்றோன்றியுலகாகப்
பாங்காமதனின்§முப்பதமும்படிவமாகப்பயின்றயனும்
நீங்காச்சாவித்திரிப[illegible]ளித்துநினைவினமரநிறைமதுவார்
பூங்காமறைசைப்புண்ணியனேர்பொலிந்துதோன்றிப்புரிவோடும். (௧௧)

இருக்குமுதனான்மறையுமுளத்திலங்கவளித்தேயினிமையினு
லுருக்குமொழியால்௦வித்தையெனவுரைசார்சிருட்டியிஃதினிற்
பெருக்குமுலகசிருட்டிநிலைபிறங்குமுணர்ந்துபேதமுற
வருக்கமாகுமதிகாரவழக்கிஞேடும்வகுத்தியென. (௧௨)

அரிதாமறையிற்பெறும்பயனுமங்கங்+காதிபத்தியமுந்
தெரியாதென்னவேதவுருத்தெளியும்வேதநதிபடியிற்
புரிவாமறையின்பொருளனைத்தும்புந்திபுணருமத்தீர்த்தம்
பரிவாயென்னுப்பகர்ந்தமலன்கரந்தானதன்பின்பதுமத்தோன். (௧௩)

வேறு.

திரையினெழுமொலிவேதத்தெளிவுதவுவேதநதிநீனைத்துமூழ்கிக்
கரையினமர்ந்துலகளிக்குங்கருத்தினுறச்சனகசனந்தனன்சாபாலி
புரையில்சனற்குமரனொடுசனந்தனனாரதனறுவர்=புந்திமேயா
ருரைசெய்பிரமன்கபிலன்கபோதனெனயோகிகளாமுரவோர்பின்னர். (௧௪)

---

* சுடரையுடைய விளக்கைப்போல மறைந்துபோயநெறியும் புகலரிதாய் அந்நெறியின்மறைய. † விதி-பிரமா. ‡ வடற்காரம்-ஓர் வேதமூலமந்திரம். இதுவே காயத்திரிக்கு ஆதாரமந்திரம். § முப்பதம்-காயத்திரி. இது, உதயகாலதியானத்திற் காயத்திரி எனவும், மத்தியானகாலதியானத்திற் சாவித்திரி எனவும், அஸ்தமயனகாலதியானத்திற் சரசுவதி எனவும் தியானிக்கப்படும். காயத்திரிக்குத் திரிபதாகாயத்திரி என்னும் பெயரும் இக்காரணத்தான்வந்ததென்க. ௦ இது வித்தியாசிருட்டி எனப்பெயர்பெறும். இதிலிருந்து பூதசிருட்டிதோன்றும். பூதசிருட்டியெனினும் உலகசிருட்டியெனினு மமையும். + ஆதிபத்தியம்-அதிபதியாந்தன்மை. = புந்திமேயார்-பிரமாவினது இருதயத்திற் பிறந்தவர். பிரமன் யோகிகளிலொருவர்.

* ஆறயுதநான்குதலையவர்வாலகில்லியராமறிவரின்னோர்
பேறுதருமுத்தியருள்பெருந்தகையராய்ச்சிருட்டிபேணராக
வீறுதருமரீசிபுலத்தியன்புலகனத்திரிமேவங்கிராவே
கூறுகிருதுப்பிருகுகுச்சரனிரிபுக்குறையீர்வசிட்டனென்றே. (௧௫)

சொற்றவிவர்†பிதாவாகிச்சுரர்நிருதர்தானவர்க்குந்துயரமீர்வார்
மற்றிவர்பாலுதித்தவர்தாமாயிரமாம்யுகாந்தத்தேமருடீர்ந்தின்பந்
துற்றதிருவானமுற‡நிச்சேடங்கற்பமெனத்தோன்றவேதாப்
§பற்றுயுகச்சகத்திரத்தினந்தத்தேயிவர்தமைநீர்படைமினென்ன. (௧௬)

முடியாதித்தொழிலெமக்கென்றவருரைப்பவிரிஞ்சனதுமுன்னிமுன்னு
ரடியாரும்பெருவிரலிற்றக்கனையீன்றடிவாமத்தமரங்குட்டத்
தொடிவாயுங்கொடிமருங்கு+லொருத்தியையீன்றவளோடுமுவந்ததக்கன்
வடிவாகுமனுவிவர்தம்மலர்முகம்பார்த்துலகினைநீர்வகுப்பீரென்றே. (௧௭)

வாயுமுலகளிப்பதற்குவருஞ்சத்திவேதநதிமன்னியாடி
னேயுமதற்கையமிலையெனக்குமதன்கருணையினாலேய்ந்ததாகுந்
தோயுமெனவவர்மனத்துத்தொழிலோடுமெனுநவிற்றித்தோய்ந்தார்தோயக்
காயுமிருளகன்=றுலகங்காணவருளுளதாயகாலைத்தக்கன். (௧௮)

ஆதரவாலாயிரவர்தமையீன்றனவர்கடமக்கலங்குஞானப்
போதமதி≡யானளிப்பத்துறந்தமலப்பொருளாகிப்புரிதலற்றார்
கேதமுறப்பன்முறையிவ்வாறளிப்பயானுரைக்குங்கேள்விதன்னு
லோதவுலகடங்கலும்பொய்யெனத்தெளிந்துபரமாகியுலகநீத்தார். (௧௯)

வருத்தமுறவனமேவிவகுத்தவர்களனைவரையும்வாய்மையோதிக்
கருத்தமருந்துறவாக்கிக்கழிப்பித்தானெனவெனையேகனன்றுதக்கன்
திருத்தமுறவோரிடத்துச்செறிந்துறுமத்தொழின்மாற்றித்திரிகவென்னப்
பொருத்தமுறச்சபித்தனனற்|புனிதமதுவெனக்கசங்கம்புணர்த்தலாலே. ()

ஆட்வரைப்படைத்தலொழித்தணிமுறுவற்செங்கனிவாயமுதமன்ன
பாடகச்சீறடிமடவார்பற்பலரைப்படைத்துமணப்பருவஞ்சேர
வாடமைத்தோணல்லாரை||யவரவர்க்குத்தனித்தனியேயமையநல்கிக்
கேடகலச்சிருட்டிநிலைகிடைத்ததெனத்தக்கனுளக்கேதமற்றான். (௨௧)

---

* நான்குதலையையுடைய அறுபதினாயிரவராகிய வாலகில்லியர். இரிபு-ஓர்முனிவர். † பிதா-பிதிரர். ‡ நிச்சேடம்-சேடமில்லாதது; சேடமில்லாததாகியகற்பமெனத்தோன்ற; பிரபஞ்சம் விஞ்சாதழிந்ததாகிய கற்பமெனத்தோன்ற என்பது தாற்பரியம். §பின்வரும் சகச்சிர யுகாந்தத்திலே. + ஒருத்தி-வேதவல்லி. = உலகங்காண-உலகைச்சிருட்டிக்க. ≡ ஈரிடத்தும் யான் என்றது நாரதமுனிவர் தம்மை என்க. புரிதல்-படைத்தல். | அச்சாபம் சங்கமின்மையைத் தருதலினாலே அது எனக்குப்புனிதமாயிற்று. சங்கம்-கூட்டம். ||அவரவரென்றது காசிபர், மனு, தருமன், சந்திரன் என்னும் இந்நால்வரை.

அதிதி, முனி, சிங்கிகையே,யநாயு, வணிகாலகையே, பிரபை,யார்வம்
வதிசுரசை, வினதை, தனு, வடிவுறுகத்துருச், சுரபி, மலிகுரோதை
திதி,யனகமுறுமிவரைத்தேசுபெறக்காசிபற்குச்சிறப்பினல்கி
விதியினருந்ததி, வாசுச், சாமி, லம்பை, பானு, வெழில்விசுவையென்பாள்.

இராவதி, சங்கற்பை, யெழிற்சாத்தியையே,முகூர்த்தை,யெனவீரைந்தாகு
மராவணையவல்குலணியாயிழையார்தமைமனுவுக்களித்தான்மேன்மை
பராவரியகீர்த்தி, யிலக்குமி, திருதி, புட்டி, மதி, பாயமேதை,
யொராவிலச்சை, புத்தி, வசு, வொண்கிரியை, யிவர்தருமற்குதவினனே. ()

பானிலவுபொழிமுதாயத்திரிபானுதித்தமதிப்பகவற்கும்பர்
மேனிலவுமுரோகிணியேமுதலாயமெல்லியரைவிரகினீந்தா
ஞனிலமாள்மனுத்தருமன்காசிபனுண்மதியமெனுநால்வர்தம்பால்
வானிலகுமைந்தர்பலர்வாய்ந்தனரங்கவரையினிவகுப்பக்கேணீ. (௨௪)

அருந்தவத்துக்*காசிபனுக்கதிதிமுதற்பதின்மூவரடைவினீன்ற
திருந்துமரியமனுதித்தேவர்முதற்பல்வகையுந்தெரியத்தேசு
பொருந்துமணிகன்னியின்சீர்புகல்கதையினெழுங்குறவேபுகன்றதாகும்
வருந்தலறமனுத்தருமன்மதியிவர்தமைந்தர்தமைவகுப்பனோர்வாய். (௨௫)

வேறு.

மேயசுதருமா, வபுண்மான், சங்கபாத்து, வீரணனே,
யாயுமிருடிபுத்திரனே, விசுவாவசுவே, யனுத்தமன், சீர்
வாய்விட்கம்பன், மகாபெலன், சுபருவாத், தருமன், வாய்ந்த†குரு,
வேயும்விசுவையிடத்துமனுவீன்றமைந்தரிவரென்ப. (௨௬)

பெரியோர்விசுவதேவரெனப்பிறங்கும்பெயரார்பிரபவனே,
துருவன், விசுவாவசு, மகிடன், றனுச, னரதி,தோற்றுபெலன்,
றெரிமாருதனே, யரணியனே, சிவனன், விதான, னீசானன்
விருட, னனகன், வற்சரனே, விபூதி, நாபன், பருப்பதனே. (௨௭)

உரைசாலிவர்சாத்தியரென்போருதித்தாரவற்குச்சாத்தியைபால்
வரனே, விசுவாவசுச், சோமன், வாயு, நிருதி, பருப்பதனே,
துருவன், யோகேந்திரன், வசுப்பால்வசுக்களெனவேதோன்றினர்பூ
விரையார்கூந்த‡லிராவதிபான்மருத்துவான்கள்விளங்கினரே. (௨அ)

---

* காசிபனுக்கதிதிமுதற்பதின்மூவரது சந்தானவிருத்தி மேலே காசிபர் சிருட்டிச்சருக்கத்து விரித்துக் கூறப்பட்டது. † குரு என்பது ஒருவன்பெயர். ‡ இராவதிக்கு மருத்துவதி எனவும் பெயர்.

மொழியுமுகூர்த்தையிடத்துதித்தார்முகூர்த்தமென்பார்மொழிபானு
வழியாய்ப்பானுவெனப்பலரும்வந்தார்நாகவீதியெனப்
பழிதீர்சாமியிடத்துதித்தார்*பாரின்விடமமருந்ததிபா
லொழியாதுறுஞ்சங்கற்பஞ்சங்கற்பையிடத்தினுதித்ததுவே. (உ௯)

முற்றுமிவையேமனுவழியாமொழியுந்தருமனிலக்குமிபாற்
பற்றுகாமன்றனையீன்றா†னவனுமிரதிபாலரிட,
னுற்றயயசென்றிருவர்தமையுவப்பினீன்றா=னுரோகிணிபாற்
பெற்றவரீச்சன்றனைச்சோமன்பெற்றானொளியிற்பிறங்கிடவே, (௩0)

ஈங்குரைத்தவிவர்தம்பாலிவர்வழியினிலக்கமறவெண்ணிலாதார்
பாங்குபடத்தழைத்தனராற்பதுமத்தோனஃதுணர்ந்துபல்லவாகி
யோங்குமுலகுயிர்வகையுமுவரிதருக்கொடிவரைநீருற்றமற்றுந்
தாங்குமதிகாரமுறத்தனித்தனியேவகுப்பதற்குச்சமைந்துசெய்வான். (௩௧)

அடுக்கியமூவுலகினுக்குமருக்கருக்குமிந்திரனையரசனாக்கி
நடுக்கமறத்தொடுங்கவசம்வச்சிரத்தோடதிதியிடைநயந்துதோன்றிப்
படுக்கையுறுங்குசைசூழ்ந்துகௌசிகனென்றோர்பெயரும்படைத்த‡மாலை
யிடுக்கணுறும்படைத்துணையாமிளையோனென்றுறமுடிவைத்தியற்றினானே.

§ வேழ்விதவநாள்கிரகம்விப்பிர०ரோ[illegible]
சூழ்கதிர்ச்சோமனைப்பிரசையனைத்தினுக்குந்தக்கனையேதோன்றலாக்கி
யாழ்புனற்குவருணனையப்பிதிர்களுக்குக்காலனையே+யாக்கைவாய்ந்தோர்
யாழ்தருகந்தருவருயர்ந்தெழும்பறவைக்கியல்வாயுவிறையோனாக்கி. (௩௩)

---

* பூமியின் மேடு பள்ளங்கள் அருந்ததியினிடத்துப்பிறந்தன. விடமம்-மேடுபள்ளங்கள். † காமன் இரதியிடத்து அரிடன், யயசு, என்றிருபிள்ளைகளைப்பெற்றான். = சந்திரன் உரோகிணியிடத்து வர்ச்சன் என்பவனைத் தன்னொளிபிரகாசிக்கும்படி பெற்றான். வர்ச்சம்-காந்தி. இவ்வர்ச்சம் உதயகாலத்திற் சந்திரனோடு கூடுதலினாலே சந்திரன் பிரகாசிக்கின்றான் என்பது. ‡ மால் - உபேந்திரன். இவ்வுபேந்திரன் பிறக்கும்போது குசத்தாற் சூழப்பட்டுப் பிற[illegible] கௌசிகன் என்னும் பெயர் உளதாயிற்று. குசசம்பந்தம்பெற்றவன் கௌசிகன். இவ்வுபேந்திரன் [illegible]னுக்காகச் செய்யப்படும் யாகாதிகளிலே அத்துவரியுவோடுகூடவிருந்து அவற்றை நடத்தும் யாகாதிபத்தியத்துவம் உடையவன் எனவறிக. அத்துவரியு, ஓதா, உற்காதா, என்னும் இம்மூவரும் யாகப்பிரதானிகள். § வேள்வி ஈண்டுவேழ்வியென மரீஇயிற்று. ० ஓடதி-மரமுதன் மருந்து. + பூதசரீரிகளுக்கும், கந்தருவர்களுக்கும், பறவைகளுக்கும், வாயுவை அரசனாக்கி.

பூதகணங்கடி*கோக்கள்போற்றுவிரதிகடீங்குபுரியுமற்று
மேதமறப்புரந்தளிக்கவடகிழக்கீசானனையேயிறைவனுக்கி
யோதியக்கரொடுநிருதருரைத்தகுய்யச்சாதிநிதியொளியார்சாசு
தரதளிக்கக்குபேரனையேதலைவனெனப்பணித்துயர்தாமரையின்மேலோன.

†கறையெயிற்றுக்கடியினுயிர்காய்வனவுங்காயாதுகடியசீற்றத்
துறைவனவுமெனுமிவைக்குத்தக்ககன்வாசுகிசேடனுயர்விணுக்கி
யறையுமுகினதியளக்கர்க்கரசுபருச்சனியனெனவளித்தேயாக்க
நிறைதருசித்திராங்கதனைக்கந்தருவர்க்கரசனெனநிறீஇயினனே.　　(௩௫)

அரமகளிரனைவருக்குங்காமனையேயிறைவனெனவாக்கினாற்கால்
விரவுவனவாகனங்களனைத்தினுக்கும்பரன்விடையேவேந்தனுக்கி
‡யுரவசுரர்க்கிரணியக்கண்ணுடையோனையிளவரசாயுறுதற்காக
விரணியனைத்தானவர்க்குவிப்பிரசித்தியையிறையாயியற்றிப்பின்னர்.　　(௩௬)

மகாகாளன்றனைக்காலகேயரெனுங்கணத்தவர்க்குமன்னனுக்கி
யுகாவகையேயநாயுவிடையுதித்தாருக்கிந்திரனையுரவோனுக்கித்
தகாவசுபமுற்பாதந்தமக்கியலுமிராகுவினைத்தலைவனுக்கி
§மகாவாருகிரதுகமார்புள்ளைவைக்குங்கலுழனையேமன்னனுக்கி.　　(௩௭)

கணங்கடிகையிரவுபகல்கலந்ததினமிருதுமதிகணிதமேவி
மணங்கமழுந்திதியோகமற்றவைக்குவருடமிறைவடிவமாக்கி
யணங்கமருமிரவிபரியளித்திடுஞ்சாரதியருணனுகநல்கிக்
குணங்கிளரிந்திரன்கிழக்குத்தெற்கியமன்கோவருணன்குடபாற்கோவே.

பிங்கலனையுத்தரத்துக்கிறையாக்கிப்பிறங்குலகைப்பிரித்திவ்வாறு
தங்கவளித்திமையவர்கடங்குதற்குத்தனியுலகஞ்சாலநல்கிப்
பொங்o கிரவியொளிபோலவங்கிகதிர்மின்சுடரும்போலவேறு
திங்களொளியெனவேறுசிற்சிலவும்படைத்தமரர்சேரச்செய்தே.　　(௩௯)

---

* கோ-பசு. விரதிகள் என்றது பிரமசாரிகளேயும், சந்நியாசிகளேயும், குய்யர்-பதினெண்கணத்தவருள் ஒருசாதியார். † கறையெயிற்றுக்கடியினுயிர்காய்வனவாகிய பாம்புகட்குச் சேடனையும்,காயாதுறைவனவாகிய பாம்புகட்கு வாசுகியையும், கடிய சீற்றத்துக்காய்ந்துறைவனவாகிய மலைப்பாம்புகட்குத் தக்கனையும் அரசனுக்கி என்பது கருத்து. முகில்களுக்கும் நதிகளுக்கும் சமுத்திரங்களுக்கும் பருச்சனியனை அரசனுக்கி. பர்ச்சனியன் ஓர் தெய்வதம். இதுவே மழைக்கதிபதி. ‡ அசுரருக்கு இரணியாக்கனை அரசனுகவும், இரணியகசிபுவை இளவரசனுகவுமியற்றி. § மகாவாருவாகியகலுழனெனக் கூட்டிப்பொருள் கொள்க. கிரதுகம்-அலகுடைப்பறவை. o இரவியொளிபோலவும், அங்கியொளிபோலவும், மின்னொளிபோலவும், திங்களொளிபோலவும், சிற்சில உலகங்களை அவர்கட்குப் படைத்து,அவர்களையிருக்கச்செய்தென்க.

தருமமகந்தவந்தானஞ்சார்ந்தவர்கட்குரியனவாய்த்தளருந்தீமை
மருவினருக்கரியனவாய்மலிதருமேலுலகினையெல்வயங்கச்செய்தா
னுருவமருமுடிப்போலவொளிர்வனவாய்நீதிநெறியொழுக்கமிக்கோர்
பருகியினிதமர்போகம்பகர்வரியவளநிறைந்துபலவாய்மன்னும். (௬0)

இன்னணம்புத்திரரையளித்தியல்சிருட்டிபுரியவகுத்தியற்றியாக்க
மன்னுதல்கண்டகமகிழ்ந்துமறைசையரன்றிருவடிகள்வணங்கிப்போற்றி
மின்னவிருந் * தன்னுலகின்மேவியமர்ந்தான்மலர்மேல்விரிஞ்சனுக
வன்னவனுலதிகாரமளித்தாருமம்முறையேயளித்தாரன்றே. (௬௧)

இந்திரனேமுதலாகவிமையவர்களனைவோருமிறைவனீந்த
தந்திரத்தின்வழுவாதுதாங்கருமின்பொடுதழைத்தார்தழங்குவேத
மந்திரமார்மகத்தினவிவாய்ந்துதிசைதிசைமேவிவாழ்ந்தார்வானச்
சந்திரனிற்சலஞ்சலங்கடவழ்வேதநதிபடியுந்தருக்கான்மிக்கே. (௬௨)

வேறு.

உலகமூன்றினையுமுதவுமாசிருட்டியுதவலாலுலகநாயகப்பே
ரிலகியவேதநதியினதியற்சீரியாவரேயெடுத்தினிதிசைப்பார்
† மலகரியரிகள்புரிதரமலரின்மதுமழைசொரிதருமறைசை
யலகறுமிறையேயறியுநீயறிதியரசவென்றருளினனறவோன். (௬௩)

வேறு.

மலரவன்றக்கன்றூயமனுவிவர்சிருட்டியேய
நலமருள்வேததீர்த்தக்கதையினைநவில்வார்கேட்பார்
நிலமிசைமாதர்மைந்தர்நிறைதிருமேவியின்பப்
புலமிசையினிதுவாழ்ந்துபுண்ணியராவர்திண்ணம். (௬௪)

பிரமாதிசிருட்டிச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் உ௫௬௩.

---

# சேடன்சாபநீங்கியசருக்கம்.

தேனிழைத்தனையதீஞ்சொற்றிருக்கதைசெவியினூடு
தானிழைத்தின்பமாக்குந்தவத்திரேயுவக்குமன்னே
வேனுழைத்தனையசாபம்விதித்ததுஞ்சேடன்வேத
கானுழைத்தீர்த்தமேவிக்கடிந்ததுங்கழறுகென்ன. (௧)

---

* ஈண்டுத் தன்னுலகென்றது புட்கரமென்னும் பெயருடைய பிரம லோகத்தை. † மலகரி-ஓரிராகம்.

மதிக்கதிர்பழித்தமேனிமறைக்கிறைமைந்தன்வாகைப்
பதிக்குரைசெய்வானேரிற்பணைத்தகத்துருவும்பானற்
கதிர்த்தகண்வினதைதானுங்காசிபனென்னுங்காந்தற்
றுதித்தடிபணிந்தெம்பானீதோன்றலைத்தோற்றுகென்ன. (௨)

நன்றெனநயந்துகாதனலந்தருகருப்பமேவ
வன்றவர்க்களிப்பவன்றோ * ரண்டங்களடைவினீன்று
ரொன்றவாயிரத்தின்மேலுங்கத்துருவுவப்பினீன்றுண்
மன்றலார்வினதையீன்றுளிரண்டெனமதிக்குமண்டம். (௩)

அருந்தவன்வினதைநீயேயாயிரவருடத்தப்பால்
வருந்தலின்றுயிர்த்திமற்றைக்கத்துருவருடமொன்றிற்
பொருந்திடுமகவையென்னப்புரிந்தவன்றவத்திற்போனான்
கருந்தடங்கண்ணிருருங்காதலிற்கருதிக்காத்தார். (௪)

ஆன்றொருவருடமாகக்கத்துருவநேகர்தம்மை
யீன்றனளவருஞ்சேடன்வாசுகியெரியிற்சீறித்
தோன்றுதக்ககன்கார்க்கோடன்சுடிகையஞ்சங்கபால
னேன்றெழுகுளிகனாதியெண்ணிலாரிலங்கினாரே. (௫)

ஆயவர்தம்மைக்காணாவினதையு † மழுக்கற்றந்தோ
வாயுமாயிரத்திற்பாதிவருடத்தின்வலியவண்டந்
தாயவள்கிறப்பாதிவடிவொடுதனயன்றோன்றிக்
காய்சினத்தவளைச்சாபஞ்சாற்றினன்கவலையுற்றே. (௬)

அன்னைநீயுடலமுற்றுமாமுனமெனக்கவ்வண்டந்
தன்னைநீதகர்த்தலாலேகத்துருதாசியாகிக்
‡ கொன்னையுற்றிடுதியென்னக்குழைந்தவள்குழவியாயா
மென்னைநீசபித்தலையதருமமன்றியம்பக்கேணீ. (௭)

மாற்றவண்மைந்தர்தம்மைக்காண்டலுமைந்தனாமுன்
றோற்றமேற்காதல்கூரத்துணிந்திதுசெய்தேன்சாபஞ்
சாற்றனீதவிர்தியென்னச்சயமுறுதம்பிசாப
மாற்றுவன்போற்றியண்டம்வளர்த்தியென்றுரைத்துமன்னோ. (௮)

பரிதிசாரதியாய்வையம்பரித்திடும்பாய்மாத்தூண்டி
யருணனங்கமர்ந்தான்காலமகன்றுசெல்காலையோர்நாட்
பெருகியவோசைவிண்ணிற்கத்துருபிறங்கக்கேளா
வருகமர்வினதைதன்னையஃதியாதென்னச்சொல்வாள். (௯)

---

* அண்டம்-முட்டை. † அழுக்கற்று-அழுக்காற்றைச்செய்து, அழுக்காறு-பொறாமை. ‡ கொன்னை-இகழ்ச்சி.

வாதுவர்குலிசவேந்தன்வயப்பரிசெலுத்துமோசை
யீதெனவவளைநோக்கியிந்திரன்பரிமாவண்ண
மோதெனவெண்மையாகுமுடன்முற்றுமென்னவோது
மாதினைநோக்கிநீலம்வாலெனுமறித்துஞ்சொல்வாள். (௧௦)

வெண்மையே * வாலமாயின்வினதைநின்னடிமையாத
லுண்மையாமென்றுகூறநீலமேலுனக்கியானுந்
தண்மையாமடிமையென்னத்தனித்தனிசூளுஞ்சாற்றி
வண்மையாரில்லமேவிவைகினர்வடிவின்மிக்கார். (௧௧)

இரவிடைமைந்தரேய்ந்தேயில்லிடையன்னைபாதம்
பரவினரமரப்பாலர்தம்முகம்பரிந்துநோக்கி
விரவரிபரியின்வண்ணம்விளம்புமினென்னவெண்பா
றரவிரிசுவேதமுற்றுமுடம்பெனச் † சமழ்த்துச்சொல்வாள். (௧௨)

சூளொடுங்கறுப்புவாலென்றுரைத்தனன்றுணிந்துநும்முட்
காளமாருடலினீர்போய்க்கலினமாவாலைச்சுற்றி
வாளமார்ந்துறைமினூளைவந்தியான்வினதைவாயுங்
கோளளந்திடுவலென்னக்குறித்தவர்மறித்துச்சொல்வார். (௧௩)

வஞ்சமார்நெறியின்வெல்வான்மறைநெறிவழக்கமாற்றி
நெஞ்சகமதித்தாயீதுநிரயமேதருவதாகு
மெஞ்சமாற்றலரைவஞ்சித்திடுதலினியனூலாற்றிற்
றுஞ்சலுஞ்சுவர்க்கமீயுந்துகளறும்புகழுமுண்டாம். (௧௪)

களவினிற்காய்ந்தார்தம்மைக்கடவுளேகாய்ந்துமாய்க்கும்
வளமுறுகீர்த்திவானமன்னுதலின்றிவஞ்ச
வுளமுடையவர்தாந்தீமையுறும்பழிவறுமைமேவி
யளவறுதுயரத்தோடுமெழிகுவரவலமாயே. (௧௫)

ஆதலால்வஞ்சஞ்செய்யாதறத்துறைமேவியன்னாள்
காதலாரடிமையாதிகளைகளுய்த்தருமங்காக்கு
மோதலாமீதென்றெல்லாப்பணிகளுமொருங்குகூறத்
தீதலாற்றுணியாளாகிச்சீற்றமேசெறிந்துசெப்பும். (௧௬)

தாயுரைவேதந்தாயேதான்முழுகடவுளென்றே
வாயுரைமறையினீதிமதித்திடாதறிந்தார்போலப்
பேயுரைபிதற்றியென்சொற்பிழைத்தநீபெருகுஞ்சாபத்
தீயுரைகொண்மினென்னுக்கத்துருச்சீற்றமிக்கே. (௧௭)

---

* வாலம்-வால். † சமழ்ப்பு-வருத்தம், வெட்கம்.

கலியினைப்பிணித்துப்பாரைக்கடவுளிற்காக்கும்வெள்வேல்
வலிகெழுதிரடோள்வெற்றிவாய்சனமேசயப்பே
ரொலிதிரையளக்குமன்னனுஞற்றியவேள்வித்தீக்கே
பலியுறவீரென்றுரைவாப்படர்தருசாபமீர்தாள். (௧௮)

நெருப்பினிற்சாபமீயுமன்னையைநெறியிற்போற்றி
யுருப்பமர்சாபநீக்குமுறுதிநீயுரைத்தியென்ன
விருப்பினுத்திகனென்றுதுவேதநூற்பனவன்றன்னுற்
றிருப்புணர்வீரென்மாற்றஞ்செய்தவர்தீங்குசேரார். (௧௯)

என்றவனுரைப்பத்தீமையெய்ந்தவர்பரிவால்சுற்ற
வன்றுகத்துருவின்றுதியாயினளறத்தின்மேவி
நின்றவரிசழ்ந்துபோகிநெருப்புறுஞ்சாபமாய்ப்பான்
குன்றுயர்மாடமோங்குமறைவனங்குறுகினாரே. (௨௦)

நறுமலர்ப்பொழில்சூழ்வேதவனந்தனைநயந்துபோற்றிக்
குறுமுனிபாதமேவிக்குலவியசேடனாதி
மறுவறுகுணத்தோர்சாபமாய்ப்பதற்கெண்ணிப்போற்றிச்
செறிவுறவோர்ந்துநீங்தேஞ்செந்தமிழ்முனிவன்சொல்வான். (௨௧)

கொடியதீவினைகள்கோடிகுவையெனக்குழுவினாரும்
படிதரிறுடியிற்றீர்த்துப்பரமனற்பதத்தைநல்குங்
கடிமலர்கமழும்வேதநதியெனுங்கடவுளுண்டால்
வெடிபடுசாபத்தீயின்வெருவரலொழிமினென்றே. (௨௨)

பொன்னவிர்சடிலமீதுபுனிற்றிளமதியஞ்சூடு
முன்னவனுலகமீன்றமுகிண்முலையோடுமேவி
யன்னதினுறைவனேமியரியயனாதிவானோர்
சொன்னயமுற்றவேதமுதலியதொழுதுபோற்ற. (௨௩)

மறியுருவாயசாபந்திலோத்தமைமாற்றியுய்ந்தாள்
செறியுமேனகையுங்காதிதனயனுந்திருவஞ்சேர்ந்தார்
நெறியுறுவசிட்டன்மைந்தர்திரிசங்குநீசபாவக்
குறியினைநிருதநீர்மைசவுதாசன்குமைத்ததுண்டால். (௨௪)

அரியிதிற்பிரமகத்தியழித்தனன்சனகன்முன்னோர்
பரிவுறச்சீவன்முத்திபடைத்தனர்பலருமின்னம்
விரிதருவேததீர்த்தம்படிந்துடன்விமலராநா
ரரியனவேததீர்த்தமடைந்தவர்க்ககிலத்தின்றால். (௨௫)

தமிழ்முனியுரைத்தமாற்றந்தலைமிசைக்கொண்டுதாழ்ந்தே
யமிழ்தெனநினைந்துவேதநதியணைந்தமலமாகி
யிமிழ்திரைமனுவினாடியெழுந்தறலெடுத்துப்போற்றிக்
கமழ்மறைவனத்தினுறியாத்திரைகவினவாற்றி. (௨௬)

மணிகன்னியாதியாயதீர்த்தமுமகிழ்வான்மூழ்கி
யணிமணிக்கோயில்சூழ்ந்தேயருமணியனைத்தும்போற்றும்
பணியணிபெருமான்றன்னைப்பணிவொடும்பரவிப்போற்றிப்
பிணியுறுபாசவேரற்றமலமாய்ப்பிறங்கிச்சொல்வார். (உஎ)

வேறு.

மூருந்தனையகுறுமுறுவன்மூரற்செவ்வாய்முற்றிழையாள்பங்குறையு முதலேபோற்றி, கருந்தடங்கட்டிலோத்தமைதன்சாபந்தீர்த்துக்கவின்பெரு கவருள்கருணைக்கடலேபோற்றி, பருந்திலேவேற்றிரிசங்குவமரத்தேவர்பரவு பதமளித்தருளும்பரனேபோற்றி, யருந்தவர்போலெலிக்குலகமூன்றுங்காக் குமரசளித்தவேதவனத்தரசேபோற்றி. (உஅ)

புதுமதுவார்தருநீழலுலகங்காக்கும்புரந்தரற்குப்பிரமகத்திபொடித் தாய்போற்றி, யதிமதுரச்செழுஞ்சுவையாரமுதம்போலவருண்முனிக்கு மணக்கோலமளித்தாய்போற்றி, யிதுவதுவென்றறியாதவேழையேங்களிரு ணீக்கியருள்காட்டுமிறையேபோற்றி, முதுமறைகடொழுதேத்திமூலமாகி முடிவறியாவேதவனமுதலேபோற்றி. (உகூ)

பொழிநிலவாரமுதமதிக்குழவியீர்க்கும்புனற்சடைமேற்பொறியரவம் புனைந்தாய்போற்றி, பழியறுகோலாகலனுக்கறவோர்க்கெட்டாப்பதமீந்து வெருணீக்கும்பரனேபோற்றி, விழியழலாற்கழைக்காமனுருவநீறாய்வெந்த விய்ச்செயும்புவனிவிடங்காபோற்றி, யுழிதரும்பேருலகனைத்துமொடுக்கமா தற்குழையாகும்வேதவனமுடையாய்போற்றி. (௩0)

என்றுபலமுறைபோற்றிக்கமலத்தோட்டினெழில்கவர்ந்தசேவடிக்கீ ழிறைஞ்சிநிற்ப, மன்றலணிவேதவனத்திறைவன்முன்றிமகிழ்ச்சியொடும் வேதநதிமனுவான்மூழ்கப், பொன்றியதுசாபமினிநீவிர்போகிப் * போகவ தியெனும்புரியிற்போகமாந்தி,யொன்றியமர்பாதலத்திலுறைவீரென்னுவொ மூருகுசுவையமுதமெனவுரைத்துப்பின்னும். (௩க)

நாகமுறுமிந்திரனிற்சேடனீயேநாகமிவைக்கரசாகிநாமின்றீந்த, போ கவதிதனின்மருவியரவமுற்றும்போற்றிவழிபடவினிதுபொலிவாயாக்க,மா குசனமேசயன்செய்யாகத்தீயினழிவுநுமக்கில்லைநமதருளாலென்றுத்,"நாக முறவளித்தானம்மறைசைமேயசங்கரனங்கவர்தாமுஞ்சரணந்தாழ்ந்தே. ()

பையரவமனைத்தினையுஞ்சேடன்றனேபாலிப்பப்போகவதிபுரிவான் மேவி, வெய்யகொடுஞ்சாபமதுவீட்டிமேன்மைமேவினரால்வேதநதிவிழை வான்மூழ்கி, வையமொடுவானகத்தும்வேததீர்த்தமானுமொருதீர்த்தமிலைம தியம்வேய்ந்த, செய்யசடையானலதுதேவராலுந்தெரிவரியததன்பெருமை சீற்றவேலோய். (௩௩)

* போகவதி-பாதலத்து இராசதானி.

பல்லுயிருங்கதிமேவவருளாலீசன்படைத்ததுவாம்பாதயோசனையாகீளஞ், சொல்லிலரையோசனையேயகலமாகுஞ்சொற்றரு*முத்தரமுடிவிற்பொன்னிமேவிப்,புல்லுமனற்றீர்த்தமதுதென்பா, னள்ளிற்புகன்மேன்மைவேதநதிபொருந்தலாலே, மல்லலணிதிரிதீர்த்தமென்னும்பேரான்வயங்கியுயர்முத்தியினைவாழ்வைநல்கும். (௬௪)

வேறு.

தருமவுருவாம்வேதநதிதாங்கும்பெருமைசார்ந்ததனு
ணிருபநீயுங்கதிமேவிநிலையிற்பொலிந்தேநிகரற்று
யொருவாதுரைத்தேயான்கதியுமுற்றேனுணர்தற்கரிதாய
பெருமாளுகுமதுவேததீர்த்தமெனவும்பிறங்கிடுமே. (௬௫)

வேறு.

வேதநதியின்மேன்மை, யோதவுணருமுரவோ,
ரேதமகலவிமையோர், நாதனுலகநணுவார். (௬௬)

சேடன்சாபநீங்கியசருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௨, ௫௪௬.

---

# அக்கினிதீர்த்தச்சருக்கம்.

பெருந்தொழிலாம்புவிபுரக்கும்பெருமாலுற்றயர்வேனும்பெருமைசான்ற
வருந்தவர்போற்கதிமேவவருட்கதையீந்தளித்தருளுமறவோய்வாய்மை
திருந்தியவக்கினிதீர்த்தமெனவேதநதிநாமஞ்சேர்ந்தகாதை
பொருந்தவருளெனுமரசனுளங்குளிரவீணைமுனிபுகல்வதானன். (௧)

வேற்றரசருயிர்பருகிவிழுதுபடுநிணச்சேற்றின்விழைந்துமூழ்கு
நாற்றமவர்செழுங்குருதிநதிக்கழுவுமங்கலநாணுமவெள்வேற்
சீற்றமதமால்யானைத்தேர்வேந்தேயிக்காதைசிறந்ததாகு
மாற்றன்மிகுபுகழ்சாலுமறிதியெனப்பெருந்தவத்தோனருளிச்செய்வான்.

அருமறையினுருவாகும்பிருகுவெனுமிருடியிடையரவிற்சீறுந்
திருகுசினப்†புலோமனெனுந்திறலவுணன்வயிரமிகச்செறிந்தானோர்நாண்
மருமலர்சூழ்தரும்பிருகுவாச்சிரமத்தணைந்தொருவர்வழங்கக்காணு
தருவமுறுமழற்சாலையிடைப்புகுந்தேமுனிமனைவியுறையக்கண்டான். (௩)

---

* உத்தரமுடிவிற் காவேரியோடு சங்கமித்து ஈசானதீர்த்தம் எனப்பெயர் பெறும்.

புரிமுரிபூங்குழற்றிருவிற்பொலிவாய்நீயார்மனைவிபுகல்வாயென்ன
வரிமதர்வாள்விழிமிகவுமஞ்சியுரையொழிந்திருப்பவருகின்மேவு
மெரியதனைக்கரியாகியிலங்குமணந்தொறுமுறுநீயியம்புகென்னத்
திரியுமனக்கவலையுறச்செய்வதியாதெனவுளத்துச்சிந்தைசெய்தான். (ச)

உரையவியிற்புரையவுணனுடனுறுக்குமுரைக்கின்முனியுருமுச்சாபங்
கரையுமெனக்கலங்கியுண்மைகரைவதுநன்றெனக்கயற்கட்கழையார்மென்
விரைகமழ்பூங்குழல்பிருகுமனைவியெனநிறைகருப்பமேவினளைத் [ருள்
திரைதருசெந்திருவனையபவுலோமிதனையசுரன்செறிந்துசேர்ந்தே. (ரு)

கூந்தன்மயிர்பிடித்துமனைப்புறத்திழுப்பவவள்வெருவிக்குழைந்துகூவிச்
சாந்துயரமுறத்தளர்ந்துதரைப்புரண்டுகிடந்தலறத்தனையனுகி
யேந்துவயிற்றுறுஞ்*குழவிநழுவிவிழுந்தவனியுறவிலங்குந்தேசே
பூந்துணரிற்றனவனைப்பொடிபடுத்தியுயிரகற்றிப்பொலிந்ததம்மா. (சு)

தாங்கரியபிரமமகன்றவத்தேசாற்றானவனுஞ்சாம்பராகு
னோங்கியுயர்பிரமநலமுறுந்தேசைவெறுத்தெவரேயுய்ந்தார்நூலின்
வாங்குமிடைமகிழ்ச்சியொடுமகவையணைத்தெடுத்தகத்தின்மருவித்தீயோன்
றீங்குநினைந்தேகணவன்றெரிசனவாசையின்மலிந்துதிகழுங்காலை. (எ)

ஆற்றுவித்துவேள்வியினை†யவபிருதமறற்பதியுற்றயர்ந்தபின்னர்ப்
போற்றுமுபசாரமவன்புரிவனவுங்கொண்டுமனைப்புகுந்துதீமை
தூற்றுமனையவண்முகங்கண்டவயோகமுணர்ந்தழிந்துதுளக்கநீங்கித்
தேற்றுசமாதியின்வினைந்தசெயலுணர்ந்தேதிரிகாலந்தெரிந்தமேலோன். ()

வெஞ்சினமுற்றங்கிதனைவிகற்பமறவெவற்றினையும்விழுங்குவாயென்
றஞ்சுகொடுஞ்சாபமுனியளித்தமரவழற்கடவுளாய்ந்துசீறி
யெஞ்சலறுமுலகனைத்துமிலங்கியதன்விபூதியெனவிசையுந்தேசை
விஞ்சுதனதிடையடக்கிவிரும்பு‡மகத்திடையடங்கிவிரவுங்காலை. (கூ)

பல்லுலகுநெருப்பறலாற்பாகமகமோடுமறப்படர்கூர்மாந்த
ரல்லலெனவிமையவருமவியுணவற்றயர்ந்தழிந்தேயயன்பான்மேவிச்
சொல்லுதலும்பாவகனையவனழைத்தேயினியபலசொல்லித்தூயோ [கோய்.
யொல்லுமுனதொளியிலதேலுயிர்களுக்கின்பெவ்வகையாமுணர்வின்மிக்

---

* அக்குழந்தையின் பிரமதேசசுவே அவ்வசுரனைப் பொடிபடுத்திப்பொலிந்ததென்க. † அவபிருதம் யாகாந்தத்திற்செய்யுங்கிரியை. அறற்பதி சமுத்திரராசனாகிய வருணன். அவயோகம்-துக்கம்; தாற்பரியார்த்தம். ‡ விபூதி மகிமை. அகம்-வீடு. சுத்தாசுத்தமாகிய பகுப்பின்றிச் சர்வத்தையும் புசிஎன்றுசபிக்க, அக்கினிசீறித் தன்தேசஸ்ஸைவயடக்கி வீட்டில்வைகும்போது,

எங்குமகந்தொறும்பாகமெரிகடவுட்கியற்றுகவென்றீந்தேமுன்போற்
பொங்குமொளிவிபூதியிணைப்புவனமிசைப்பரப்புதியாற்புகலுஞ்சாப
மங்குமுனம்போல்வேதவனமருவிவேதநதிமகிழ்ந்துமூழ்கிக்
கொங்குதருமலர்ச்சடையான்கோகநதப்பதம்போற்றிக்குறுகினென்றான். ()

புண்டரிகத்தவனுரையுட்கொண்டுமறைவனமேவிப்பரிந்துசூழு
மண்டரொடுங்*குறுமுனிவனுதரித்தசோதிமுகவாடிபோலுந்
தெண்டிரைசூழ்வேதநதித்தீர்த்தத்திற்படிந்ததன்சீர்திகழுங்கூலத்
தெண்டிசையோர்புகழிலிங்கந்தன்பெயரானிழைத்தருச்சித்தேத்தினனே. ()

வேறு.

அகத்தியான்பள்ளிமேய†வடிகளதடிகேளின்பம்
புகத்தியானித்துப்போற்றிப்புனிதநிற்போற்றுமும்பர்
முகத்தியான்சாபநீங்கிமுழுதினுந்தூயனாக
வுகத்தியானிமலவென்றேயுருகுளத்தோடுஞ்சொல்வான். (௧௩)

அரியயன்முதலோர்க்கென்றுமளப்பரும்பொருளேபோற்றி
பரிபவருளத்திலின்பப்பரஞ்சுடரானாய்போற்றி
விரிதருமுலகமுற்றும்விச்சையின்விளைத்தாய்போற்றி
வரியரவணிந்தவந்திவண்ணனேபோற்றிபோற்றி. (௧௪)

அந்தியினொளிருமேனியமலநின்னருளான்முன்னே
நந்தியவேததீர்த்தநாமமென்னுமமாகத்
தந்தியலங்கிதீர்த்தமெனப்பெயர்சார்ந்துமல்க
முந்தியவரநீநல்கென்றுரைத்தனன்மொழியலுற்றான். (௧௫)

அலைகடலங்கிதீர்த்தந்தனிற்படிந்தடியேனுற்று
முலைவறமிலிங்கம்போற்றியுன்னையுமுவந்தார்தம்பா
னிலையுறுபிரமகத்தியாதியநிகழூந்தீமைக்
கொலைமுதலகற்றிவீடுகொடுத்திடவேண்டுமென்ன. (௧௬)

வேண்டியவரங்களீந்துவிமலனும்விடுப்பமேவி
யீண்டியவமரரோடுமெழுந்துதன்னெல்லைசேர்ந்தான்
மீண்டுமிங்கொருகான்மேவிவிரைமலர்த்தடமொனருக்கிப்
பூண்டனனவிகடன்பாற்புங்கவர்பொருந்திப்பூப்ப. (௧௭)

நறைகமழ்வேததீர்த்தமங்கிதன்னுமந்தென்பா
லறைவதையுரைத்தேம்வேதநதியினதலங்குமேன்மை
யிறையவனன்றியாரேயேத்துரையெடுப்பாரீதி
‡னுறைதனக்குலகமூன்றினொப்பனவில்லையன்றே. (௧௮)

---

* அகத்தீசுவரரது முகக்கண்ணாடிபோலும். † அடிகளதடிகேள் - மகா தேவரே. ‡ ஓர் நீர்த்துள்ளிக்கு; உறை-துள்ளி.

அன்னதன்பெருமையென்னுலளப்பரிதலரின்மேலான்
பொன்னவிராழிமாயன்புங்கவர்யாவரேனுந்
தன்னைநேர்வேததீர்த்தத்தன்மையோர்ந்தளக்கலாற்று
* ரின்னதுதுணிந்ததீங்குமன்னதேயிரிக்குமன்றே. (௧௯)

வெறிகமழ்வேததீர்த்தமேன்மைநீவிரும்பியாய்ந்து
செறிகதிமேவியுய்ந்தாய்செப்பியேயானுமுய்ந்தே
னறிவுறினமலன்றானேயாகுமத்தீர்த்தமாயார்
பொறிவழியுழல்வரென்னும்புரிவதப்பொறியிலார்க்கே. (௨0)

எண்ணிலார்தவத்தோர்சித்தர்யோகர்களிறைவரேனோர்
புண்ணியவேந்தர்வேதநதியிடைப்புரிந்துமூழ்கிக்
கண்ணியபோகமுத்திகரைந்திடிற்பெருகுமென்றே
நண்ணியசிலரைக்கூறிமுடித்தனனுமவேலோய். (௨௧)

இலகுமிக்கதைசொல்வாரெழுதுவாரியைந்துகேட்பா
ருலகிடையோங்கும்வேதநதியுவந்தாடினார்போ
னலமிகமேவியாவிநவையெலாமகற்றிநாடுங்
குலமொடுமின்பமேவிக்குழகனதுலகஞ்சேர்வார். (௨௨)

வேறு.

வேதநதிக்கதைமேவுமிடத்தே, நாதனிடத்துறைநாயகியோடுங்
காதலினுற்றவர்காமமளித்தே, மேதகுநற்பதமேவவிடுக்கும். (௨௩)

அக்கினிதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,௫௭௨.

## சேதுசருக்கம்.

அடையலர்முடிகடீண்டவலங்கியகழற்காலார்க்கு
முடைதிரையுலகங்காக்குமொளிறுவாட்படைமாந்தாதா
கடைதருகாமங்கோபங்காய்ந்தநாரதற்குக்காதன்
மிடைதருபணிவினோடுமீண்டிதுவிளம்புகின்றான். (௧)

வேறு.

போதுதூவியபுதுமதுப்பொழிநறுந்தாது
மோதுதெண்டிரையருகுறமுருகுலாமறைசை
யாதிசேதுவென்றுயதெனலங்குதோளிராமன்
மீதுதேவிபட்டணத்திடைவிளைத்ததென்விதியால். (௨)

---

* இவ்வேதநதியினது மகிமையைச்சொல்லுவேனென்று துணிந்த பா
வத்தையும் இவ்வேதநதியே நீக்குமென்க.

ஐயநீங்கிடவருளெனமுனிவரனருளாற்
பையராமுடிப்பகவனைநினைத்தகம்பாரோ
ருய்யமாநதியொழுக்கெனவழுக்கியகால
மையனீக்கியவழியினையொழிவறவகுப்பான். (௩)

வேறு.

கிருதந்திரேதந்துவாபரமால்கெழுமுங்கலியென்றுகநான்காய்
மருவுமிவைநான்காயிரமாய்வளையின்மலரோற்கொருபகலாங்
கருகுமிரவுமப்பரிசேகதித்தவிதுநாண்முப்பதுறப்
பெருகுந்திங்கள்பன்னிரண்டாய்ப்பெருகின்வருடப்பெயர்த்தாமே. (௪)

ஆயவருடமைம்பானேலாகும்பரார்த்தமவையிரண்டேன்
மேயவிதியின்சதவருடமேவுமலரோன்விளிநாளாய்க்
காயமழியுமயனழிவேகண்ணன்பகலத்துணையிரவும்
பாயவிதுமுப்பதுமாதம்வருடம்பகரும்பன்னிரண்டால். (௫)

முறையார்வருடநூறுயின்முகுந்தனழியுமவனழியிற்
பிறையார்சடையோற்கொருபகலாம்பிரமன்பகலினிந்திரனு
மிறையாமனுவும்பதினுல்வரிறப்பரிவ்வாறியல்காலத்
தறைவாஞ்சேதுவரலாற்றையணியார்மணிப்பூணடல்வேலோய். (௬)

இகலுந்திகிரிப்படைமாயோனிலகுமுலகம்பலகாப்பான்
புகலுமீரைந்தவதாரம்பொருந்துமவற்றுளிக்காலத்
தகலும்புடவியளிக்குமாலாயவிராமனணையாகும்
பகலந்தேவிபட்டணத்திற்படுத்தசேதுபரிவான்முன். (௭)

இம்மான்முன்னமிருந்தமாலியற்றுஞ்சேதுவேதவனத்
தம்மாநகரத்தணையாகுமாதிநெடுமாலாக்கலினு
லிம்மாநிலத்தினியலாதிசேதுவெனப்பேரெய்தியதாற்
செம்மாந்தின்பக்கடன்மூழ்கித்தினைப்பாரொருகாற்றெரிசித்தார். (௮)

* முன்னமாயனவதாரமுகிழ்த்தவிராமனணைசெயுநாட்
பொன்னின்முடிச்சத்தியகிரியாம்புனிதவரைதந்தினமூத்த
வன்னவரையினிலிங்கவடிவாகித்தோன்றியமலேச
னின்னலாயபிரமகத்தியிராமற்கொழித்தானிரந்திடவே. (௯)

இந்தமாயனவதாரத்திராமன்வீரகத்தியையோர்
தந்தனீங்குப்பரிகரித்தான்றக்கவிராமேச்சுரமீது
நந்துசேதுப்படிந்தபயனணுகுங்கோடியதிகமுறு
முந்துசேதுப்படியின்வினைமுழுதுந்தீயமுடித்திடுமே. (௧௦)

---

* முன்னிராமன் கற்பம் இலக்குமிகற்பமெனவும், பின்னிராமன் கற்பம் சீதாகற்பமெனவும் கன்னபாரம்பரியமாக வழங்குப.

மேலார்வேதவனத்தாதிசேதுமூழ்கிமெல்லியலோர்
பாலார்பரமன்றனைப்பணியிற்பதினாயிரமாம்பிரமகத்தி
யேலாதழியுமெனிலொழிந்தவினையீர்ந்திடுதற்கியம்புவதென்
மாலார்மனத்தாரறியாதுமருள்வார்பிறந்தைவலைமாட்டு. (௧௧)

ஆதிசேதுயாத்திரையொன்றுற்றின்மகநூறருமறைதேர்
நீதியாற்றும்பயனுண்டாகிருபரேறேயிக்காலத்
தேதின்மாலுமிராமனெனவேய்ந்துதசயோசனையீங்கு
மோதியலைக்குஞ்சேதுவினைமுடித்துமுடியாவகைமொழிவாம். (௧௨)

வேறு.

அன்னம்பெடையோடலர்மேயுமயோத்திதோன்றியகலல்குற்
பொன்னங்குவிமென்முலைச்சீதையோடுமிராமன்புகுங்காட்டின்
முன்னங்குழையாலிராவணன்முன்முதிராமுலையைக்கவர்ந்தேகத்
தன்னன்புயருஞ்சுக்கிரீவனோடுந்தேடிச்சரிபுகுந்தே. (௧௩)

குன்றம்பொலியக்கவிக்குலங்களோடுந்தேடிக்கொடியிடையைச்
சென்றங்குயருமகேந்திரத்திற்சேனைநிறுவியமர்ந்திடலும்
பொன்றங்கிளமென்முலையாளைக்கவர்தல்புகழன்றெனப்புகல
வன்றங்குவர்த்ததசமுகனைநீங்கியணைந்தானவற்கிளையோன். (௧௪)

நீங்குபுரியுமவர்த்துறத்தநெளிவென்றெழுந்துசெழுங்குவட்டின்
வீங்குதிணிதோளிராகவனைச்சரணம்புகன்றவிபீடணனைத்
தாங்குமன்பிற்றழுவியபின்சலதிகடப்பான்றவச்சேனை
யோங்குவருணன்றனையிரப்பவுடம்பட்டிடச்சார்ந்துஞற்றுதலும். (௧௫)

குருவார்மணிப்பூண்விபீடணனென்றடைந்தகோமான்குறிக்கொண்டு
திருவார்கோலத்திராகவனையெதிர்ந்துசெழுஞ்சேவடிபோற்றித்
தருவாரிந்தவரைக்கிழ்பாற்சிறிதுதூரந்தனிற்சாரப்
பெருவாழ்வருளும்வேதவனப்பெயர்த்தோர்நகரம்பிறங்கியதே. (௧௬)

அங்கணேகிவேதவனத்தமர்ந்தேயருளாலுலகளிக்குஞ்
செங்கண்விடையானடிபோற்றிற்றேவர்பரவுந்திருவாள
னங்கண்மகிழ்ந்தேயருள்புரியுநலமாமென்னநன்றென்றே
வெங்கண்விறலோன்கவிச்சேனைபரவவேதவனம்புகுந்தான். (௧௭)

வேததீர்த்தம்படிந்தேகிவிளங்குமணிகன்னியிற்படிந்தே
காதற்சிராத்தக்கடனாற்றிக்கதிரோன்மதலையனையருடன்
போதப்பரமன்பெருங்கோயில்புகுந்துவேதம்புகழீசன்
பாதப்பதுமம்பல்காலும்பணிந்துபோற்றிப்பரவுவான். (௧௮)

வேறு.

புரிந்தபொற்சடைமேற்புனிற்றிளந்திங்கட்புதுநிலாப்பொழிவனவழிநீர்
பரிந்தமெய்ப்பொருளேபரம்பரனுயபகவனேபல்லுயிர்க்குயிரே
தெரிந்தவருளத்துத்திகழொளியாயசெல்வமேதிருவருட்புரிவா
லரிந்துமைக்குழுவையன்பருக்கின்பாமாரணவனத்தனேபோற்றி. (௧௯)

பார்முதலாகிப்பரிதியாயுயிராய்ப்பனிமதியாகியேபரந்தும்
வேர்நிலைதெரியாவிமலமேயமலவெறுவெளியாகியவிளைவே
கார்தருகயற்கட்குவிமுலைப்பணைத்தோட்கன்னியோடன்னியமொருவிச்
சேர்தருபொருளேமறைவனத்தமர்ந்தசெல்வமேசேவடிபோற்றி. (௨௦)

வேறு.

அருவிகண்பொழிதர * வரிந்தமன்குரற்
கருவிகணிலையறக்கசிந்துகாதலா
லுருகினனிவ்வகையுவந்துபோற்றலு
மருவினனெதிர்மறைவனத்துநாதனே. (௨௧)

பெருகொளியுலகெலாம்புதைப்பப்பேணிய
பொருவருந்தேவர்கள்புடையிற்போற்றிடத்
திருவமர்ந்தெதிர்தருந்தெய்வநாயகன்
மருவருஞ்சரணமேல்வணங்கிவாழ்த்தினன். (௨௨)

வணங்கியவிராகவன்மகிழ்ச்சிகூர்தர
வணங்கியல்பங்கினனவனைநோக்கியே
குணங்குறியுயர்ந்திடுங்கொள்கையோயுனக்
கிணங்கியநல்வரமீய்துங்கேளென. (௨௩)

தையலையிராவணன்கவரச்சார்தரு
மையலைநீக்கிடவவனைவாட்டுதற்
குய்திறநல்கெனவுவந்துநல்கியே
கையமர்மழுவினன்கரந்துபோயினன். (௨௪)

மறையவன்மறைதரவணங்கிவானரத்
திறைவனைமுதலியோரிலங்குவாண்முக
நிறைதரநோக்கியேநிகழ்த்துமாவனை
முறைப்புறவெற்றிலைமுடல்லவென்னவே. (௨௫)

ஈங்கியற்றிடுதனன்றென்னமாக்கட
னீங்கியற்றிடவனைநிகழ்த்துவீரென
வோங்கியகவிக்குலத்தலைவரொல்லெனத்
தாங்கியபருவரைதருக்கண்மொய்த்தவே. (௨௬)

---

* அரிந்தமன் என்றது, ஈண்டிராமனை.

புடவியினடுக்கடற்போழ்ந்துபோயவான்
படரியமலைக்குலம்பணைத்துநீடருக்
கடவினர்கடும்பகலொன்றிற்கார்க்கட
லிடருறப்பத்தியோசனையுமீட்டினர். (௨௭)

பெருவரைக்குலங்கள்கொண்டணையிற்பெய்தலும்
பொருகடல்கலங்கிமேற்பொங்கிவெண்டிரை
யுருமுறவதிர்ந்தெதிருழியாமெனக்
குருமணிமறைவனநகரங்கொண்டதே. (௨௮)

மணிமதிற்கோபுரவாயின்முற்றியே
துணிதிரைப்பெருங்கடனீத்தஞ்சூழ்தலு
மணிமறைவனத்தவரந்தகோவெனாத்
தணிவறுமரனருட்சரணஞ்சார்ந்தரோ. (௨௯)

அலையிடைமூழ்கியேயமர்ந்துமாழ்கினே
நிலைபெறுமறைவனநிறைந்தசோதியே
யுலைவறவன்பரையுய்யக்கொள்கெனக்
குலைதருசெய்கையுட்கொண்டுகோதிலான். (௩0)

உங்கரித்திடக்கடலூக்கமற்றனை
பங்கமுற்றிரிதரப்பயத்திற்பாய்தலு
மங்கியதணையெனமதித்திராகவ
னங்கியிற்றனிரெனவயர்ந்துவாடினான். (௩௧)

இற்றதுவியற்றியசேதுவென்னினிப்
பற்றலராருயிர்பருகிச்சீதையைப்
பெற்றனன்பெயர்குவதென்றுபீழையோ
டற்றதென் [illegible] னரோ. (௩௨)

அலக்கணுற்றிராகவனயரவாடின
னிலக்குவன்காணியவிரவிமைந்தனுங்
கலக்கமுற்றிவர்க்கெதிர்சருதுநன்றிசெய்
நலக்குறையுற்றதென்றயர்நருடியே. (௩௩)

சரணமென்றிராகவன்சரணஞ்சார்ந்துயிர்க்
கரணமென்றடைந்தயாருற்றுந்தீவினை
முரணமர்ந்திவ்வணமுடித்ததென்றுசாந்
திரணடவிபீடணனிரங்கித்தேம்பினன். (௩௪)

வேறு.

இனையவரிரங்குங்காலையெரிதவம்பசும்பொனேய்ப்ப
நனைமலரிதழிவேய்ந்தநளிர்சடைவேதநாதன்
றனைநிகருருவச்சோதிதழைத்தொளிபழுத்தத்தாம
வனையெனவிருளைச்சீத்துவளர்திசையனைத்தும்போர்ப்ப. (௩௫)

கொடியிடைமுரியவீங்குங்குவிமுலைக்குவளைவாட்கட்
கடிமலர்கமழுங்கூந்தற்காரிகைகதிர்கவ்வு
நெடியவேற்குழவிகைம்மாநிழன்முகமதலைநேயத்
தடிமலர்பரவுநந்தியாதியகணங்களோடும். (௩௬)

நிறைகதிர்முத்தத்திங்கணிழநிரண்டனையவேற்றின்
மறைமலிசிரத்திற்றோற்றிமான்முதல்வணங்கும்வானோர்
நறைமலருறையிற்றாவிநலமுறும்அடியரோடு
மறைகழல்பரவியேத்தவருந்தவர்பொருந்திவாழ்த்த. (௩௭)

அலங்குவெஞ்சிலையிராமனலர்முகமடைந்துநோக்கிக்
கலங்கிநீயழியலின்னேசடிதுறுங்கருமங்காம
ரிலங்கியமறைசைச்சேதுவியற்றலினிடைந்தேயன்பர்
மலங்கினரீண்டுவேண்டாமற்றையவயிறுமென்ன. (௩௮)

கூறியமறைசையீசன்குரைகழல்வணங்கிப்போற்றி
யாறியவுளத்தனாகியடிகளின்னருளினல்லால்
வேறியல்செய்கையுண்டோவிரிதிரைவேலைச்சேது
தேறியேயியற்றற்காக்கஞ்சேரிடந்தெரித்தியென்று. (௩௯)

நெக்குளமுருகிக்கூறநிகழ்த்தினனிருதிவாழுந்
திக்குழிச்சிறிதுதூரந்தேவிபட்டணமென்றோதத்
தக்குயர்பதியொன்றுண்டாலதனிடைச்சார்ந்துசால்பின்
மிக்குயர்சேதுவாற்றனன்றெனவிளம்பலுற்றான். (௪0)

வேறு.

கொடியவெங்கூற்றுயிர்குழைந்துநேர்ந்திடின்
மடிதருதிறலினன்வடவைதீர்ந்தற
விடிதருசின[illegible]
பொடிதரப்பிசைந்தறப்பூழிசெய்குவான். (௪௧)

வரைத்திரள்பஞ்சியிற்சிதறபாருத
நிரைத்தெழுமுச்சினனெருப்புக்கான்றகட்
குரைத்தெழுசவரிமாமுகத்துக்கோறல்சா
றரைத்தலைமகிடனென்றுரைக்குந்தானவன். (௪௨)

விரிதழற்றிகிரிமான்முதலவிண்ணவர்
நெரிதராஞாட்பிடைநெருக்கிநேர்தரா
திரிதரக்கற்பகத்திலங்குபொன்னகர்
கரிதரக்கடவுளர்க்கண*மூழ்கியே. (௪௩)

ஆற்றலர்மறைதரவகிலமுற்றவு
மாற்றறநெடியநாள்வலியினூற்றலுந்
தோற்றயர்கடவுளர்மெலிந்துதுப்பற
நோற்றனர்பார்ப்பதிநோன்மையெண்ணியே. (௪௪)

பல்லுயிருலகெலாமாகிப்பாயசீ
ரெல்லையற்றமலமாமிமயப்பூங்கொடி
சொல்லறச்சராசரந்துன்னுந்தன்வலி
வல்லையிற்கவர்ந்தொருவடிவமாகியே. (௪௫)

கொற்றவையெனப்பெயர்கொண்டுகோதெலாந்
துற்றனமகிடனைத்தொடர்ந்துபோர்செய
மற்றவன்சமத்திடைவலிந்துவானவர்
பற்றறவெய்யபோர்பனிப்பவாற்றினன். (௪௬)

பொருப்பினம்பொடிதரப்புவனமூழ்கியே
நெருப்பெழவிருவருநெருங்கிவெய்யபோர்
விருப்பொடுமிழைத்திடக்குமரிவெஞ்சின
முருப்புறமகிடனையொறுத்துக்காயவே. (௪௭)

நெடுவரையுருமெனநிருதன்மெய்யெலாம்
கெடுவுறக்குருதிநீர்வழியமோதியே
யடுதலுமாற்றலனாகியோடலுங்
கடுவிசையினிற்கடற்கரைக்கடிந்துபோய். (௪௮)

வாய்வழிகுருதிநீர்மகிடன்கான்றிடக்
காய்கனற்படையினாற்கவரிமாமுகஞ்
சாய்வுறவரிந்துதாட்டருக்கினூன்றியே
வீய்தரவவ்விடைவிளைத்துமெல்லியல். (௪௯)

வானவருவப்புறவாழ்வுநல்கியே
தானவர்மாய்ந்தவத்தலத்திற்றன்பெய
ரானமாதேவிபட்டணமென்றாக்கினா
ளூனமிலிப்பதியுண்மையீதரோ. (௫௦)

* மூழ்கல்-கெடுதல்.

அருளியவத்தலையணையுமாற்றிநீ
சுருதியவரக்கரைக்களைந்துகாமர்சீர்
பெருகியதிருவினைப்பெற்றுப்பிழையா
லுருகியமனத்திறமொழிதியோகையால். (௫௧)

மறைவனத்தியற்றிநீமகிழ்ந்தசேதுவாங்
கறையகல்கோடியிற்கரியதீவினைக்
குறையுறுகொடியவர்கூடியாடினு
நிறைவினையகற்றியேநிமலராவரே. (௫௨)

அருக்கனைமதியினையரவுதீண்டுநாட்
பெருக்கருத்தோதயமகோதயப்பெயர்த்
திருக்கிளர்நாளுவாத்திங்கண்மேன்மையாற்
றருக்கியநாள்களிற்சார்ந்துமூழ்கினர். (௫௩)

மறையவர்கொலைமதுமாந்தலாதியா
வறைதருபாதகமனைத்துமாற்றியே
யிறையெனமுத்தியினெய்தியின்பமே
பொறையுறக்களியொடுபொருந்திவாழ்வரே. (௫௪)

விருந்தினையெதிர்கொளார்விரதமேன்மையாற்
றிருந்தியநித்தியமாதிசெய்திடார்
பொருந்தியதந்தைதாய்குரவர்பூசனை
வருந்தியுமாற்றிடார்வருத்தஞ்செய்குவார். (௫௫)

அடைந்தவர்நட்டவர்க்கவலமாற்றுவா
ரிடைந்தவர்க்கிரங்கிடாரியாவராயினு
மிடைந்தவெந்தீவினைவெறுப்பவீட்டியு
முடைந்தநீர்க்கோடியையுவந்துபோற்றியே. (௫௬)

ஆடினராயிடினறைந்ததீங்கெலாஞ்
சாடியேநம்பதஞ்சார்ந்துமல்குவார்
கோடியைப்பணிந்தவர்க்குறுகிவாழ்த்தியே
பாடினராயினும்பவத்தினீங்குவார். (௫௭)

தென்புலத்தவர்மகிழ்சிராத்தங்கோடியி
ஞென்றிழைத்தாற்றினுமுலைப்பில்பல்லநா
ளின்புறக்குலத்தவரினிதுவாழ்வரா
னன்புலத்தவர்க்கிதுநயனம்போலுமே. (௫௮)

வார்திரைக்கங்கையின்வருடம்பத்தெனப்
பேர்தருமாயிரம்பிறங்கவாடினூர்
சார்பயன்கோடியைச்சார்ந்துமூழ்கினூர்
சேர்வதற்கையமின்றகத்திற்றேர்தியால். (௫௯)

வரும்பரிமேதமேயாதிமாமகந்
தரும்பயன்கோடியிற்றழைத்துமல்குநீ
ரரும்பியகோடியினுடினுடினுர்
விரும்பியபயனெலாமளிக்குமெய்ம்மையே. (சு0)

என்றுரைத்தகன்றனனீசன்கோடியிற்
சென்றறல்படிந்தவர்சேருநற்பயன்
மன்றநம்பரனலான்மற்றியாவரே
யொன்றவுற்றறிகுவருலங்கொடோளினுய். (சுக)

மொழிதருமறைவனமுதல்வன்கூறிய
பொழிதிரையமுதனபுனிதவாய்மையா
லழிவறுதேவிபட்டணத்தினுரணே
பழியறவாற்றினன்பரிதி*தோன்றலே. (சுஉ)

முழுவலியிராவணனுதிமுற்றிய
குழுவினர்கிளையறக்கொன்றுகோளறச்
செழுமலர்க்குழலியைச்சேர்ந்தயோத்தியிற்
ருெழுதடியடையலர்மிடைந்துதுன்னவே. (சுஙு)

வேறு.

தாயாயுலகந்தண்ணளியாற்றழையப்புரந்துதனைச்சாருந்
தீயார்வீரகத்தியினைச்சேர்ந்துமறைசைச்சிவன்றென்பான்
மாயாவிலிங்கமொன்றுமுற்றிமாற்றிமறையோர்மனமகிழ
† வீயாவிளையுளூரளித்துமீண்டும்புரந்தான்விறல்வெய்யோன். (சுச)

வேறு.

ஆதிசேதுமுன்னுயதுமாழியா
னீதியாற்பின்னிகழ்ந்தியதைந்திரண்
டோதியோசனையுற்றதுமோதினந்
தீதிலாரிக்கதையினைச்செப்புவார். (சுரு)

சேதுசருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,சுஙஎ.

---

* தோன்றல் என்றது, சூரியனது வழித்தோன்றலாகிய இராமனை.
† வீயாவிளையுளூர் - இராமசந்திரபுரம். இதனைத் தற்காலத்து ஆயக்காரன் புலம் எனவும் வழங்குப.

# வசுதேவ சுதேவச்சருக்கம்.



மூரிதிரைவிரியுங்கோடியிடத்துமுன்னிகழ்ந்ததாகப்
பரிவுறுங்கதையொன்றுண்டாற்பகர்ந்தவர்பாவங்காயு
மரியயன்முதலோர்க்கெல்லாமரனெனவகிலமேவித்
தெரிதருதீர்த்தந்தம்முளதிகமாய்ச்சிறந்ததீதாம். (௧)

நினைந்தவர்பாவந்தீர்க்குநெடுந்திரைக்கோடிநேயம்
புனைந்திடுங்காதையீதுபுகழினாற்புடவிமுற்றும்
வனைந்துயர்வனப்புமிக்குவளங்கெழுதமிழ்நாட்டின்கண்
முனைந்தசீர்வணிகனேமாங்கதனெனமொழியும்பேரான். (௨)

முழுநிதிக்குவையுநெற்போர்முதலவுமலையினீட்டி
விழுமியகற்பின்மேயமெல்லியலோடும்போகங்
கெழுமினனிளமைநீங்கிக்கிழமுறுகாலைக்கேதந்
தழுவினன்பரனையுன்னித்தளர்ந்தனன்சிந்தைசெய்தான். (௩)

கொடியவெவ்வினையைச்சுட்டிக்கொழுநிதிக்குப்பையீட்டிப்
படிமிசையிரந்தோர்க்கன்னம்பசியபொன்னறுவைபானெய்
மிடிகெடவளித்தல்செய்யேன்வினைகெடவிடையினேறு
மடிகடம்பூசைக்காயதளித்திலேனன்புசெய்யேன். (௪)

தீயவரென்னைநேர்வார்தெரிதரினுலகத்தில்லை
மேயதுகாலமென்னோவினைவதென்றிரங்கியேங்கி
யாயவப்பொருள்கண்முற்றுமமைத்தனனன்குகூறு
வேயவப்புதல்வர்க்கீந்தானிருவருக்கிரண்டுகூறும். (௫)

மற்றையவிரண்டுகூறுங்கொண்டுதன்மனைவியோடும்
புற்றிடங்கொண்டநாதன்புரிதருமாரூர்மேவி
யற்றவரலந்தோரேற்றோரந்தணரறவோர்க்கெல்லாம்
பற்றுடனன்னமாதியளித்தனன்பரிவினோடும். (௬)

சீதநீர்ப்பந்தராதிதிருந்தியவறங்களெல்லாங்
காதலினாற்றியாரூர்க்கடவுடன்பூசைக்காய
வாதரவோடுநல்கியணிமலர்க்காவினோடு
பாதவநெறியினீழல்பரித்திடப்பலவும்வைத்தான். (௭)

திருவுறுபணிகளீசன்சிறப்புறவாற்றிக்கால
மருவலின்மாயத்தீயின்மனைவியுமுடனேமாய்ந்தாள்
பொருவருமாரூர்மேவிப்பொன்றியவதனான்மாய்ந்த
விருவருமுத்திசேர்ந்தேயின்பமிக்கிலங்கினாரே. (௮)

அனையவன்புதல்வராயவசுதேவன்சுதேவனென்பார்
மனையிடைமருவித்தீமைவரம்பிலவாற்றிமாயம்
புனைதருபரத்தைகளோடுண்போகமாய்த்தூர்த்தரோடு
மினைதருசூதின்மேவியிற்பழிபலவுமாற்றி. (கூ)

நாடகக்கணிகைகூத்தர்நயமுறப்புகழுமாந்தர்
பாடகத்தொழிலோர்கோட்டிபயிற்றுவோர்பரத்தைக்கீந்தே
நீடகப்பொருளைவீட்டிநிலையறக்களவிற் * கன்றிக்
காடகம்புக்குவேந்தன்கடிந்திடக்கலக்கமுற்றார். (க0)

விடம்படுபடையிற்றாயவிலங்குபுட்குலங்கண்மாய்த்துத்
தடம்பெறுவயிறுதூர்த்துத்தழல்வனத்துறையுநாளி
னிடம்படுவனத்திற்பின்னோனேகினனொருசாரேகப்
படம்படுமரவுதீண்டப்பதைத்துயிர்பாறினானே. (கக)

அற்றைநாண்முன்னோனோர்சாரடற்கரும்பன்றிபாய
வெற்றுடலாகிமாய்ந்தான்வெய்யதூதுவர்களீண்டிப்
பற்றியேபிணித்துப்பாசக்கயிற்றினாற்பதைப்பமோதிக்
கற்றையார் † கதிரோன்மைந்தன்முன்புறங்காட்டினானால். (கஉ)

கருவரையனையகாலன்கணக்கனைக்கலங்கிநின்ற
விருவர்தநன்மைதீமையியம்பெனவினையோனுக்க
மருவருஞ்சுவர்க்கமேவமற்றவனிரயமேவத்
திருவருள்புரிதியென்னச்செய்கெனச்செப்பினானே. (கங)

இளையனீசுவர்க்கமேவியிருவெனநமனைப்போற்றித்
தளைதருபிறப்புத்தீமைதழைத்தவெஞ்செய்கைகாம
மளைதலாலொப்போமாகவன்னவனிரயம்யானே
விளைதருசுவர்க்கமேவலென்னெனவிரித்துச்சொல்வான். (கச)

போனவிப்பிறப்பினீயேபொருகடற்கோடிசூழ்ந்த
கானகத்துழலுங்காலைக்கதிதருமமையினோடு
மானதைத்திங்கட்கோடியாடினாறுவைவீச
வானகத்துளிகணின்மேல்வார்ந்ததுவரத்தின்மேவ. (கரு)

வீழ்ந்தவத்துளியாற்றீமைவீட்டியேமேன்மைமேவி
வாழ்ந்தனைகோடிசூழ்ந்துவயங்குகாலுடலுற்றுருஞ்
சூழ்ந்தவல்வினைகண்முற்றுந்தொலைக்குவர்நிரயமேவி
யாழ்ந்[illegible]வேண்டினென்றறைதுங்கேட்டி. (கசு)

---

* கன்றல்-மிகுதல். அது "களவின்கட் கன்றிய காதலவர்" என்பதனானு மறிக. † கதிரோன் மைந்தன்-சூரிய குமாரனாகிய யமன்.

துளிப்பயன்பதினுறென்றையளித்திடிற்சுவர்க்கமேவிக்
களித்திடுநின்றெடென்னக்கசிந்தவன்கலைவிறென்றை
யளித்திடவிமானமேவியிருவருமமரர்வைப்பிற்
றெளித்தநல்லின்பமேவித்திளைத்தனர்திருவின்மிக்கோர். (௧எ)

திரைதருங்கோடிதீர்த்தத்தோருறைதிமைவீட்டிப்
* புரைதருசுவர்க்கமீந்ததென்றிடிற் [illegible]
யுரைதருமதன்சீர்கூறிமுடிவதேயுமைகோனல்லாற்
கரைபொருங்கோடிமேன்மையாவரேகணிக்கற்பாலார். (௧அ)

வேறு.

அருவினைதுகளுறவமர்கோடி,மருவியபுகழினைவடிவேலோ,
யிருளறவருளினமிஃதாய்வார்,கருவழிசுழலுதல்கழிவாரே. (௧௯)

வசுதேவ சுதேவச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் உ,௬௫௬.

---

# சேதுசிறப்புச்சருக்கம்.

சிறைசெயுங்கொடியபாவத்தீமையோரிவருஞ்சேது
வுறைதுளிமேவிமேன்மையுற்றனரென்னவுண்மை
யறைதரச்சேதுமேன்மையாய்வதற்களவில்காத
ணிறைதருங்கோடிமேன்மைநிகழ்த்தெனநிருபன்கூற. (௧)

எறிதிரைச்சேதுமேன்மையியற்றுமுற்றவத்தாலுன்பா
[illegible]
நெறியுறச்செழுந்தாகுநீதியாலுயர்ந்தோயென்னுச்
செறியுமுக்குறும்புமாய்த்ததிருத்தவன்செப்பலுற்முன். (௨)

† விரிதிரைவேலைமூழ்குங்காலமேவிலக்குங்காலந்
தெரிதருபசவிராவின்மாலையிற்சேதுமேவிப்
பரிவுறுகாலமூழ்கிற்பார்ப்பனக்கொலைகளாதி
யெரிதருங்கொடியபாவமெனைத்தையுமிரித்துமாய்க்கும். (௩)

---

* புரை-உயர்ச்சி. † சேதுவிலே ஸ்நானஞ் செய்யுங்காலம் யாதெனின், அது, நூல்களிலே ஸ்நானத்துக்கு விலக்கிய காலமுமெனக. எனவே, இன்னகாலமென நியதியில்லை என்பது பெறப்பட்டது.

வார்புனற்கங்கையாற்றின்வருடமோரயுதமன்னிச்
சீர்பெறநானமாற்றும்பயன்றனைச்சேர்வார்பச்சை
யூர்பரியிரவிவாரத்,திரட்டியாமு * வாவி,னுக்கஞ்
சார்விதிபாதமூன்றிற்சதகுணப்பயனைச்சார்வார். (௪)

செழுங்கதிர்மதியம்பார்ந்தட்சேர்ந்தநாட்சேதுமூழ்கி
யழுந்தினர்க்கயுதமாகுமப்பயனநந்தமாகுங்
கொ[illegible]ரோதயத்[illegible]வா
லெழுந்துபோய்ப்படியுஞ்சேதுயாத்திரைதனினுமென்றும். (௫)

விதியொடுநியமங்காலமாதியுமேவலின்றித்
அதிதருமாதிசேதுபடிந்திடிற்றூயராகிக்
கதிகரமுற்றுவாழ்வார்காரிகைகருப்பமேவும்
பதியவன்[illegible]பயத்[illegible]. (௬)

ஓங்கிராமேச்சுரத்தினுயர்தனுக்கோடிமேவிப்
பாங்குறவருடனூறுபடிந்தவப்பயனைமேன்மை
தாங்குமாமறைசைமேயதனுக்கோடியொருநாணல்கு
மாங்குளத்துவகையாரப்படிந்தவர்க்கையமின்றே. (௭)

அருந்தவந்தானம்வேள்வியின்றியப்பயனைச்சேர
விரும்பினர்துறவுஞானவினைவிலார்வீட்டுவேட்கை
பொருந்தினர்காற்றைமாற்றிப்புரிதருயோகமின்றித்
இருந்தியசித்[illegible]சேதுமேவி. (அ)

கோடியிற்படியினெஞ்சிற்குறித்தமெய்ப்பயன்களெல்லாங்
கூடிநற்பொலிவுசேர்வர்கொள்கையார்தவமேதான
நாடியவேள்வியோகஞானமற்றெவையுமோர்கா
னீடியமறைசைக்கோடிபடிதரினிலையிறுமே. (௯)

பார்ப்பனக்கொலைகண்மாந்தல்பசியபொற்களவேயாசான்
வார்ப்பனை[illegible]வெயர்
ருர்ப்படுமெஞ்சதாயபாதகம[illegible]
கார்ப் † பிரகிரணதியுபபாதகங்கலத்தல். (௧௦)

[illegible]த்துஞ்சேது
மோதியகோடிமூழ்கினக்கணமுரிந்துமாயு
மோதியபஞ்சவேள்வியுபாசனையோங்கியாக
[illegible]. (௧௧)

---

* ஈண்டு உவா என்றது அமாவாசித்[illegible]. மூன்று-இரவிவாரம், உவா, விதிபாதமாகிய மூன்று. † பிரகிரணம்-நவபாதகத்துளொன்று.

தென்புலத்தவர்சிராத்தச்செய்கையைவிடுத்தல் * செய்யோன்
முன்பயின்மனுவைத்தீர்தல்விரதத்தைமுனிந்துகாய்த
லன்புறுதந்தையன்னைகுரவரை † யலைத்துவிடல்
மன்பதைக்கிடுக்கணுற்றன்மால்பழிமகிழ்ந்துகூறல். (௧௨)

வழக்கழிவுரைத்தனன்றிமறந்திடல்குறளைவஞ்சச்
சழக்குரைபழிச்சொலாயசாற்றுதல்சிவத்துரோகம்
பழக்குறுநட்பிற்கின்னாபயிற்றுதலாதிபன்னூன்
முழக்கியகழுவாயற்றேமுதிர்பெருவினைகள்யாவும். (௧௩)

விற்பெயர்க்கோடியோர்காலாடிடின்வீயுமாகச்
சொற்பெயர்த்திங்களோர்நாட்சோர்வறத்தோற்றும்வெய்யோ
னெற்படவிதியின்மூழ்கினிகல்வினையனைத்துமீர்ந்தே
யற்புதனுருவாய்மேவியளவிலின்பருந்திவாழ்வார். (௧௪)

வால்வளைதவழுங்கோடிமாகநாண்முற்றுமாடிற்
சூல்வரிக்களவனூரஞ்சொரிபிரயாகைமாகம்
பால்வளரயுதமூழ்கும்பயன்றருந்தருமமாதி
நால்வகையாதிசேதாங்கோடியேநல்குமன்றே. (௧௫)

கடுங்கனனிரயத்தாவிகலங்குதல்கருப்பமேவி
நடுங்கஞருறுதலேனைநவையுறனுகம்போற்றுந்
தொடுங்கடற்கோடிதன்னித்தோயுமவ்வளவேதோயிற்
கொடுங்கலியனைத்துநீங்கிக்கோதிலாமுத்திகூடும். (௧௬)

மிடிமனத்துயரின்மேயார்கொடியநோய்விழுங்குந்தீயார்
படிதொழுங்கோடிதோயப்படரொழிந்தினிமைசேர்வார்
நெடியமான்முதலோர்மேவுநிலைமைவேண்டிடினுங்கானற்
கடிகமழ்சேதுமூழ்கினளித்திடுங்கணமதோன்றின். (௧௭)

திருவமர்செல்வங்கல்விசிறப்பருஞ்சீர்த்திசெவ்வி
மருமலர்க்குழலார்மைந்தர்மணியணிமாழைவாரி
யிருநிலக்கிழமையாக்கமின்னனயாவுநல்கும்
பொருவருமறைசைமேயபுண்ணியகோடிநானம். (௧௮)

தோற்றியும்பிறந்தும்பாசத்தொடக்கிடைச்சுழன்றுதீமை
யாற்றியவலியவாழ்க்கையளக்கரையகன்றுநீங்கப்
போற்றியநாவாயாதியிராமனூற்புனைந்தசேது
நாற்றிசையுலகங்காக்குநாமவேலரசரேறே. (௧௯)

---

* செய்யோன்முன்பயின்மனு-ஔபாசன மந்திரம். அது அக்கினி காரியம். † அலைத்துவிடல் அலைத்துவிடலென விகாரமாயிற்று.

பேசியவாதிசேதுகண்ணுறிற்பிரமகத்தி
யாசறுமென்னின்மற்றைவினையறற்கையமுண்டோ
பாசிழைபாகன்மேவும்பதிதருமென்னின்மற்றை
நேசமார்பயனையீதற்கரிதெனநிகழ்த்தலாமோ. (உ௦)

பலமுறையுரைத்தென்வேண்டும்பயனெலாமளிக்கும்பாரி
னிலவினர்க்கமுதமாகுநிகர்க்கருநீர்மைத்தாகு
மூலவலப்படையோனுகியரிக்குமுன்னுறித்தமேலோ
னலமரும்பிரமகத்தியிதனிடையகற்றினனே. (உக)

வேறு.

ஆதிசேதுவின்மேன்மையா, ரோதுமேதகுநீர்மையா
ரீதினீடலைமூழ்கினர், மாதுவாழ்தருபாகரே. (உஉ)

சேதுசிறப்புச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,கூஎஅ.

---

# பலபத்திரச்சருக்கம்.

மாடநீள்கொடிமதியுடன்மாசறத்துடைக்கு
மாடலார்மறைவனத்துயராதிசேதுவினிற்
பாடல்சால்பலபத்திரன்பார்ப்பனக்கொலைபோய்
வீடன்மேயினனென்றனைமுன்புகழ்விரித்தே. (க)

பரந்தமாநிலங்கலிகெடப்படிவமாயின்பஞ்
சுரந்தநீர்ப்பலபத்திரன்சுருதிநூன்மறையோ
னரந்தையார்கொலையடைந்ததுந்தீர்ந்ததுமருளாற்
புரந்துகூறெனும்பூபதிக்கருந்தவன்புகலும். (உ)

சாற்றுமிக்கதைபுனிதமாய்த்தருமமேதருமாற்
போற்றுநீமுனம்புரந்தரன்றிருவெலாம்பொருந்தித்
தோற்றுமத்தினபுரத்திடைச்சுயோதனன்முதலா
வாற்றுநூற்றுவர்பாண்டவரைவருமமர்ந்தே. (௩)

திருக்கிளர்ந்தொளிர்செல்வராய்த்தேங்கியவின்பப்
பெருக்கினூழ்பவர்பிரிக்குமூழ்பிணிப்புறச்சூதிற்
றருக்கினேய்ந்தனர்தருமனுஞ்சுயோதனன்றானும்
வருக்கமார்பொருளனைத்தையும்*பணத்திடைமாய்த்தே. (௪)

---

* பணம்-பந்தயம்.

வஞ்சமுற்றியசூதின்மேல்வலிந்தெழுமயலா
னெஞ்சமுற்றினிப்பன்னிருவருடமுநெருங்கி
நஞ்செனத்தெறுமடவியிற்றிரிந்துளநடுங்க
வெஞ்சமத்திறம்பணமெனவொட்டியேவிழைத்தார். (ரு)

தருமனவ்வழித்தளர்வுறுதோல்வியாற்சாய்ந்து
பருமவல்குலாந்துருபதன்மகளொடும்பயின்மா
வுருமினின்றதிரடவியிற்றம்பியரோடுந்
தெருமருந்துயர்சேர்ந்தனன்செப்புநாளளவும். (சா)

* வட்டுவீழ்ந்தணிவயங்கியவரங்கினைமதித்தே
யொட்டுமப்பணத்துரைத்தநாளொளிப்புடனொழித்து
மட்டுவீழ்பொழில்விராடன்மாநகரிடைவதிந்தார்
கட்டுவார்கழற்றுருபதன்முதலியோர்கலந்தே. (எ)

கரவுமாற்றியேவிராடமாபுரத்தினிற்கலந்து
விரவுபாண்டவர்தம்மையுநூற்றுவர்மேலா
மரவுவார்கொடியவனையும்பொருத்துதற்கமைந்து
பரவுதூதுறுங்கண்ணனன்மொழியவம்பயப்ப. (அ)

குருதிவெந்தடிகூளிகள்கூட்டுணுங்கொடும்போர்
கருதியித்திறத்திருவரும்போர்த்துணைகாண்பான்
பெருகுநட்புடையரசரைப்பேணியபின்ன
ரிருபெருந்திறத்தரசருங்கண்ணனையிரப்ப. (கூ)

படைநெடுங்கரம்பற்றிடாயாரொருபாலும்
முடைகடற்படையெனதொருபாலுமுய்த்தவர்நீ
ரடைவினிற்கொளுமென்றிடச்சுயோதனனடைந்தான்
மிடைபெரும்படையரிதனைவிசயனும்விழைந்தான். (க0)

வேறு.

அடுந்திறல்விசயன்வேண்டவாழியம்படையோனுதி
தொடுந்திரைக்கலினப்பாய்மாத்தூண்டுசாரதியாய்ச்சோதி
விடுந்தடந்தேரின்மேவவேண்டினர்வேந்தர்வேலைப்
படுந்தரையலத்திற்றுங்குநீலவாடையனைப்பல்கால். (கக)

வேண்டவங்கவன்முன்மாயன்விரகினைக்கருதிவேகத்
தாண்டகையரசராயநூற்றுவர்தமக்குமாகேன்
பாண்டவர்தமக்குமாகேன்றுணையெனப்பகர்ந்துபான்மை
பூண்டநற்றீர்த்தமேயயாத்திரைபுரிவதானான். (கஉ)

---

* வட்டு-சூதாடுகருவி.

எழுந்தனனேகித்தூய்நீரியல்சரசுவதிமேவித்
தொழுந்தகுதீர்த்தமுற்றுந்தூய்மையினுடிச்சோதிக்
கொழுந்தவிர்ந்தியெட்டேழுங்கொடிக்குருக்கேத்திரஞ்சேர்ந்
தழுந்தகவழுக்கையீருமலங்கொளிக்கங்கைக்கூலம். (௧௩)

விருப்புடனடைந்துகூனல்வெள்வளைவிரித்தமுத்தம்
பொருப்புறுபுளினமார்ந்துபுனிதவானதியப்பூநீர்
திருப்புணரிராமனற்றுய்திரட்டியதேயுஞ்சீதக்
கருப்புரங்கமழுந்தீர்த்தங்கங்கையிற்பலவுமூழ்கி. (௧௪)

துணர்விரிதுளவத்தண்பூத்தொடையணிமாயன்றூய
வுணர்வொடுநரனுநாராயணனுமென்றுவந்துதோற்றிப்
புணர்தவமாற்றும்பூவாரிலந்தையங்கானம்போற்றி
வணர்செழுங்கனிசூழ்தீர்த்தமனைத்தினுமகிழ்ந்துமூழ்கி. (௧௫)

உருகுசெம்பசும்பொனீட்டுமுருப்பவிர்ந்தொளிகால்வேணி
நிருமலனமருங்கோயினிறைபெருங்காதல்கூரப்
பருகுமன்பதனாற்போற்றிப்பணிந்தரிபதியுமேவி
யருகுறைமிசத்துமேவிக்கண்டனனூர்வங்கூர்ந்தே. (௧௬)

மனத்துமாசகற்றித்தூய்மைவழங்கியேவலியவேட்கை
யினத்துறவிரித்தஞானத்தெளிவினையிலகவீர்ந்து
சினத்தொடுசெற்றமாய்த்துச்சிந்தையிற்சாந்திசேர்த்தி
முனத்தகுமுதத்தைநல்கிமோகமான்முனிவதாகும். (௧௭)

அரிக்குறுங்குருளைகூந்தன்மடப்பிடியளிக்குந்தீம்பாற்
செருக்குறவளரும்பேழ்வாய்ச்சினப்புலிப்பிணவுமானின்
குருக்குழமறியையாக்குங்கொடுஞ்சிறைக்கழுழன்குன்றி
யுருக்கிளர்செங்கட்பாம்பினோடுவர்துகளுமன்றே. (௧௮)

பகையொடுவைரமாற்றிப்பயில்வனயாவுமல்க
முகையவிழ்முளரிநீரின்மூழ்கிமாமுனிவர்பூசை
தகைதரக்களபநல்கத்தழற்கடனாற்றத்தந்து
நகையெரிசிறையான்மூட்டுநாகிளவெகினநாளும். (௧௯)

சீதநீர்முகந்துகங்கைச்சீகரத்தோடுந்தென்றற்
போதவிழ்நீழன்மேவிமுனிவரர்பொலிவதாகும்
வேதநூல்புராணமாதிவிளங்கொலிமிடைந்தபுள்ளி
னூதமுமலிந்துவானநதியொலிநலிவதாகும். (௨௦)

பொறிமனங்கலாதிபூதைபுதைத்திருட்போதமாற்றி
யறிவுறும்பரமானந்தத்தழுந்துவாரமலயோகக்
குறியுறுஞ்செபத்தார்மேவுங்*குடீரகங்குலவிச்சோல
வெறிகமழ்ந்தனகமாயனைமிசம்விரும்பிச்சேர்ந்தான். (௨௧)

ஒளிமணியலைகள்வீசம்பகீரதியுவந்தமூழ்கிக்
களிதருசிராத்தநல்கிக்கமழுநீர்க்கடனுமாற்றித்
தெளிவளரறவோர்சூழ்ந்த†தீர்க்கசத்திரத்தின்மேவி
யளிவளருளத்திஞேடுமலப்படையண்ணனண்ணி. (௨௨)

நிவப்புயர்பசும்பொற்பீடமளித்ததினிறுவிநீங்கா
வுவப்பொடுசூதன்கூறுமுறுபொருட்புராணமாற்றந்
தவப்பயனென்னக்கேட்டுத்தழைத்தமர்தவத்தோர்யாரு
நவப்புனற்புனிதகங்கைநயந்தநல்வடிவீதென்றே. (௨௩)

பொருக்கெனவெதிர்ந்துபோகிப்பொழியுமாதரவிஞேடு
மிருக்கையுமருளித்தூயபாத்தியமியாவுமீந்து
தருக்கனிகிழங்குநல்கிச்சாற்றிநல்வரவுஞ்சார்ந்த
திருக்கிளரருளாற்பீடத்தமர்ந்தவத்திருவின்மிக்கார். (௨௪)

பரிவுறப்புகழ்ந்துபாரிற்பரிந்தவதரித்துப்பன்னூ
றெரிமறையவர்கடேவர்திருவுடனுக்கமேவிப்
புரிவுறவளித்தாய்தூயபுகர்தருங்கலியைப்பூமே
லிரிதரவடர்த்துவேதநெறியினையிலக்கியின்பால். (௨௫)

ஆவிகட்கிடுக்கணுற்றுஞ்சாலுவனஞ்சன்கஞ்சன்
றூவியல்சேதிவேந்தன்சம்பரன்யவனன்கேசி
‡ பூவிழைமைந்தன்றந்தவக்கிரனிடிபுபோரார்
மாவிறல்வச்சிரநாபன் § பவுண்டரவாசுதேவன். (௨௬)

இனையபேரவுணராவியீர்ந்துலகின்பமேவ
வனையுநின்வடிவுகண்டேவாழ்ந்தனம்வனத்துழாய்மால்
புனைதுவாரகையி † ஞேக்கம்பொலியுமேயெனப் + பூமேயா
னனையநீராசிகூறிஞுக்கமேயலதுமுண்டோ. (௨௭)

---

* குடீரகம்-பன்னசாலை. † தீர்க்கசத்திரம் - நெடுநாட்கழிந்துமுடியும் யாகம். ‡ பூவிழைமைந்தன்-பூமிதேவி புதல்வனுகிய நரகாசுரன். § பவுண்டரவாசுதேவ னென்பவன். o நோக்கம் பொலியுமே என்பது க்ஷேமமாயிருக்கின்றுரா என்னுங்குறிப்பிற்று. + பூமேயான் என்றது ஈண்டுப் பலபத்திரரை; (யாத்திரையின்பொருட்டுப்) பூமியிற் சஞ்சரிப்பவன் என்பது பொருள். பூமேயான்-பிரமா என்றலு மொன்று.

இன்பமேயென்றுமென்னவிசைத்துநீரியற்றுநோன்பிற்
றன்பிடைபுறக்கொடாயிற்சொல்லுதியென்னத்தூயோ
ரன்பொடுபரவமேவுமலப்படையடலோன்சூதன்
முன்புயரிருக்கைமேவக்கண்டறமுனிந்துசொல்வான். (௨௮)

நோற்றமாதவத்தோர்யாருமென்பெருநோன்மைநோக்கி
யாற்றுவேளாண்மையோடுமரிச்சையுமளித்தாரீனத்
தோற்றமாரிவன்மேல்வைகியின்சொலுங்குறங்கெழாது
போற்றிடாதமர்ந்தானந்தோவகந்தையின்புணர்ப்பிதென்றான். ()

வெஞ்சினங்கூரவோர்ச்சிவிடுத் * தனல்வெறியிற்சூதன்
றுஞ்சிடப்படையினெற்றச்சூதனுமாவிசோர்ந்தா
னஞ்செனப்பிரமகத்திநகையொளிமழுங்கிநாணி
யெஞ்சிடச்சூழநாஞ்சிலிறையலைந்திடுக்கணுற்றான். (௩௦)

மாற்குமுன்னுதித்தோன்செய்கைமாதவத்தலைவர்காணு
வேற்குமீதெவர்க்குச்சாலவிழிந்தவர்செய்கைசெய்தாய்
நோற்குமெங்குரவனுவிநொடியிடைமாய்ந்துத்தீமை
யாற்குறையுற்றாய்போதமற்றனையகந்தையுற்றாய். (௩௧)

போதவேரரியுந்தீயவகந்தையிற்புகழைமாற்று
மேதமூவுலகத்தில்லையீதுற்றனிடுக்கணுய
மோதலைப்பட்டுச்செய்புமுறைபிறழ்ந்தவசமாகிப்
பாதகமனைத்துந்தானேபயிற்றிவெம்பவத்தின்மாயும். (௩௨)

அழிதருமகந்தைதீயதாதலால்விடுத்தேயாக்கம்
பொழிதருஞ்சாந்திமேவிப்பொறிமனப்பொக்கமாற்றி
னிழிதரும்பிறந்தையுற்றேனுயினுமின்பஞான
விழிதரமேவிக்கீர்த்திமேதகுவிழுப்பஞ்சேர்வான். (௩௩)

பொறையறுங்கொடியோனின்பம்புகழறம்பூதிமேன்மை
நிறைதரான்பொறையேயெல்லாவறம்புகழ்நீடுசீர்த்தி
கறையறுமொழுக்கமாக்குங்கற்றவன்கடவுளேனு
மறைதரும்பொறையிலாதான்றுச்சனுங்கதியுமற்றான். (௩௪)

முழுமகனவனேநீயுமுதிர்பொறையறலான்மோகந்
தழுவியபிரமகத்திமேவினையென்னத்தக்கோன்
செழுமறைமுனிவீர்கேளுஞ்சூத்திரன்றன்னைக்கொன்றால்
வழுவுறுபிரமகத்திவருவதென்வழங்குமென்ன. (௩௫)

---

* அனல்வெறி-அக்கினிபோலுங் கோபவெறி.

வேறு.

ஆயுந்துறவோர்பலபத்திரற்காயவையம்
வீயுந்திறமோதினர்வேதவியாதனென்பான்
ஞேயும்பொருளாரணவேலைதொகுத்துநால்வர்க்
கேயும்பயனீந்துபுராணமிவற்குநல்க. (௩௬)

இதிகாசபுராணமனைத்துமிலக்கியெம்பான்
மதிவாயவளித்திடமேன்மைவழங்கியாங்கள்
விதியார்தருபார்ப்பனயாக்கையின்மேயபண்பு
மதிகாரமுமாதனமேலுறுமாக்கமற்றும். (௩௭)

ஆசானிவனுமெனநல்கவமர்ந்துமேவுந்
தேசார்முனிவன்றனைநீவதைசெய்தலாலே
மாசார்பிரமக்கொலைவாய்ந்துமயக்கமுற்றே
* யேசாயினைதீர்பரிகாரமியற்றினுய்வாய். (௩௮)

அன்றிப்பழியாலிழிபானிலையாதியென்னக்
குன்றிப்பலபத்திரன்மேயகுழாத்தைநோக்கி
வென்றிப்பரிகாரமிதற்குவிளம்பிநீவிர்
நன்றித்துணையாகுமினென்னநவிற்றுகின்றார். (௩௯)

பனுவற்றுறைமுற்றுமுணர்ந்துபரத்தின்மேன்மை
யுனுமற்புதனாகியசூதனொழிந்தியாரே
மனுமுற்றியநற்பரிகாரவழக்குவல்லார்
தனுவுற்றவனுவியுயிர்ப்பொடுசாரநல்கி. (௪0)

கழுவாய்வினவிற்றருமென்றவர்காதல்கூர
வழுவாவெனதாணையினீவிர்மகிழ்ந்துசூத
னெழுமாறுபயிற்றுமினென்னவெழுந்துசோதிக்
குழுவார்மனுமல்கு†குசோதகங்கூறியாற்றி. (௪௧)

திருவார்தருமந்திரவாரிதெளித்துநீவி
யுருவாவியுயிர்ப்புறநல்கவுணர்ந்துசூத
னருவாயுருவாமரனுமமறைந்துமேவப்
பெருவாழ்வுபடைத்தவராமெனப்பெட்புமிக்கார். (௪௨)

போகந்தருமெய்ப்புளகக்களிபூப்பவன்றே
னுகந்தழுவிப்பலகாலுலகாவியாவு
மோகந்தெறமுற்றுறவின்பமுகிழ்த்தமேலோய்
சோகந்தவிர்வாயெனநன்மொழிசொற்றபின்னர். (௪௩)

---

* ஏசு-குற்றம். †குசோதகம்-தருப்பைநீர்.

போற்றும்பலபத்திரனின்றுபுரிந்ததீமை
யாற்றும்பரிகாரமளித்தருளத்தவென்னுச்
சாற்றுந்தவர்தம்முகநோக்கியத்தக்கசூத
னூற்றுமமுதாமெனவாய்மையுணர்த்துகிற்பான். (சச)

வேறு.

பலவளநிறைத்[illegible]பழுதறப்பரிதித்தோற்ற
நிலவியமறைசைத்தென்பானிரைமணிகரையிற்சேர்க்குங்
கலமலியாதிசேதுகண்ணுறிற்கடிந்துகாய்ந்து
வலனுயர்பிரமகத்தியயுதமுமாயுமன்றே. (சரு)

அடுந்திறற்கொற்றவாதியிராமனூலாற்றுஞ்சேது
விடுந்திமிலாதிசேதுவிமலமாம்வினைகளீட்டுங்
கொடுந்துயரகற்றுமங்கட்டனுக்கோடிகுறித்துமூழ்கிற்
படுந்துகள்பிரமகத்திபகர்வதென்பரிதிவேலோய். (சசா)

தரைமிசையாவனேனுந்தனிமறைவனத்துமேவிக்
குரைகட * லாதிசேதாங்கோடியைக்குறித்துமூழ்கிற்
கரையறுகொடியபாவமனைத்தையுங்கழித்துக்காட்சி
யுரையகல்பரமஞானத்துருவமாயுறைவனன்றே. (சஎ)

சேகரத்திவலைசேதுசிந்தியதறினுஞ்சென்ம
சாகரத்தகன்றதீமைதகர்த்தருடழைத்துச்சாரின்
பாகரத்துறைவனீயும்படிந்தகமகற்றிவேந்தர்
சேகரத்திலதமாகென்றுரைத்திடத்திருமால்சேட்டன். (சஅ)

புனிதமாமுனிவரோடுஞ்சூதனைப்புரிந்துபோற்றி
யனுமதிமேவித்தேசமடவிகளனைத்துநீங்கிப்
பனிவருங்கமலப்போதிற்பார்ப்பிளவெகினம்பைந்தே
னனிதரமழவண்டாருமறைவனநண்ணித்தென்பால். (சகூ)

முரிதிரைமுழங்குசேதாங்கோடியைமுன்னம்போற்றி
யரிபசுந்தருப்பைசூழ்ந்தபவித்திரமங்கைசேர்த்திப்
பிரிகுகபிரமகத்தியெனமனம்பெறுசங்கற்பம்
பரிவொடும்பண்ணிமூழ்கிச்சிராத்தமும்பனவற்காற்றி. (ருo)

தருப்பணம்பிண்டமீந்துதகவினத்தலைதாழ்ந்தேகி
விருப்பொடுவேதநாதன்வின்மணிப்பசும்பொன்வேய்ந்த
பொருப்புயர்கோயில்சூழ்ந்துபுரிவொடுமுக்காற்பூந்தேன்
கருப்புரங்கமழும்வாயிலுட்சென்றுகாதல்கூர்ந்தே. (ருக)

* ஆதிசேதாங்கோடி-ஆதிசேதுவிலுள்ள தனுக்கோடி.

கண்டனனுலகமாயசராசரங்கரந்துதோற்றுந்
தெண்டிரையமுதமொக்குட்படிவமாய்த்திகழுஞ்சோதி
யண்டனைக்கொண்டலோடுமகமகிழ்ந்துருகியார்வங்
கொண்டவற்பணிந்துபல்காற்போற்றினன்குறுகிக்கூறும். (௫௨)

அலகறுமணுவாய்மூலப்பகுதியினமைந்தயாவு
மிலகுநுண்ணுருவாய்த்தோற்றவிருவினைப்பதத்தினோக்கி
யுலகவைதூலமாகவரியயனுருவமாக்கி
விலகிடவமைத்தாய்போற்றிவேதநாயகனேபோற்றி. (௫௩)

எல்லையற்றநந்தமாயவிவையெலாமாகியீற்றி
னில்லைமற்றிவைகளென்றேயேகமாய்மீளவின்பான்
முல்லையொத்தினியமூரன்முற்றிழையோடுகூடும்
வில்லைவெற்புருவமாக்கும்வேதநாயகனேபோற்றி. (௫௪)

பானிலவணிந்தாய்போற்றிபடர்சடைப்பகவாபோற்றி
யூனிலவுயிரைக்காக்குமுலப்பிலாவொளியேபோற்றி
யானிலைந்தாடிமேவுமன்பருக்கமுதேபோற்றி
வேனில்வேளுருவமாற்றும்வேதநாயகனேபோற்றி. (௫௫)

என்றவன்பணிந்துபோற்றவிலங்கருளுருவமாகு
மன்றலங்குழலிபாகமகிழ்ந்தகோனெதிர்ந்துவாசத்
தென்றல்சூழ்சேதுமூழ்கத்தீர்ந்ததுபிரமகத்தி
யென்றுபின்வரங்களீதும்வேண்டுதியென்னச்சொல்வான். (௫௬)

வேறு.

மூவாதபெருங்கருணைமுழுமுதலேநின்னருளான்முனிந்துசீறி
யோவாதபிரமகத்தியொழித்தனையாற்சிவஞானமுதவல்வேண்டுந்
தாவாதபிரமகத்திதனையடைந்தாரெனைப்போலத்தணந்துநீங்கத்
தேவாதிதேவநின்சீர்ச்சேதுவிடைவரநாளுஞ்செய்தியென்றே. (௫௭)

பணிந்தெழுந்துபோற்றமறைப்பண்ணவனும்வேதவனப்பாங்குசூழ
வணிந்தவிருமூன்றாயயாத்திரையுமாற்றியெமையன்பிற்போற்றிற்
றிணிந்தவிருளகன்றிலங்குஞ்சிவஞானஞ்சேதுவிடைத்தெளிந்துமூழ்கிற்
றணிந்திடுகபிரமகத்திதலையாயவினைகளெல்லாஞ்சரிந்துதீர்ந்தே. (௫௮)

அஞ்சாயமகாபாவமுபபாவமாயவெல்லாமழலிற்சேர்ந்த
பஞ்சாகிமடிந்திடுகவெனவளித்துமறைந்திடவப்பரனைப்போற்றி
யெஞ்சாதயாத்திரையோரிருமூன்றுஞ்சரித்தமலமேய்ந்துஞானந்
தஞ்சாகியுறமேவிச்சமாதிநிலையடைந்தமலன்றாளும்போற்றி. (௫௯)

விடைமேவிக்கதைவெம்போர்வீமனெடுஞ்சுயோதனன்முன்விளைத்தல்காண்
னிடையோவிப்பலபதியுமிலங்குகுருக்கேத்திரத்தினேய்ந்தநாஞ்சிற் [பா
படையோனும்பிரமகத்திபாற்றியதும்பரஞானம்பரித்தவாறுந்
தடைதீரப்பணித்தனனற்றனுக்கோடியுயர்சேதுதன்னிற்சார்ந்தே. (சு0)

வீறுபுகழ்விநாயகனுஞ்சேதுவினிற்பிரமகத்திவிடுத்தானீது
கூறுபவர்கேட்பவர்தாங்கொடுவினைகள்பலவீட்டிக்குறைவிலாது
பேறுதருஞ்செல்வமொடுபிறங்குவராலெனமலர்சேர்பெரியோன்மைந்த
னூறுமதக்களியானையுலகளிக்குந்திறல்வேந்தற்குரைத்தானன்றே. (சுக)

வேறு.

பத்திரன்மேவிய, சித்திரமார்கதை,
வத்திரமார்பவர், முத்தியர்தாமே. (சுஉ)

பலபத்திரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,எச0.

---

## விநாயகச்சருக்கம்.

முற்றுமுலகத்திடையூறுமுழுதுமகற்றுங்களிற்றுமுகன்
பற்றும்பிரமகத்தியெனப்பகர்ந்தாய்பரித்ததிறமுமவ
னெற்றுந்திரைச்சேதுவிற்றீர்த்தவியல்புமருள்வாயெனவேத
மற்றுமுணர்ந்தோன்வடிவேற்கைமாந்தாதாவுக்கருள்புரிவான். (க)

ஒலிநீர்ப்பவளக்கொழுந்தேறியுலவுமாதியுயர்சேது
கலியீர்ந்தருளேபெருகுகதிகாட்டுங்காதையிதுகேணீ
வலியேந்தரியபெருந்தவத்தான்மதியக்குழவிவளர்முடிமேற்
பொலிவோனழியாவரமருளப்போந்தானுலகம்*பொதிர்படவே. (உ)

ஊறுங்கரடமதக்கலுழியுருமுச்சினத்தானுவரியனல்
சீறுஞ்சிறுகட்பொறிசிதறுந்திருகுசினத்தான்றிசைக்கரியின்
வீறுந்தவிர்த்தான்கடியமிடல்வேய்ந்தான்கயமுகாசுரனென்
றேறும்பெயரானுளனனிமையோர்க்கொருகூற்றிவனென்ன. (ஙு)

ஆற்றற்கரியபெருவலியாலாகண்டலனையமரரொடுங்
காற்றிற்கதழுங்களிற்றினெடுங்கரைத்தேகமழும்பொழில்வான
நீற்றிற்பொடித்துமூவுலகுநிலையற்றழியத்துயரமுறீஇக்
கூற்றிற்கொடியோனிரவுபகற்குலைத்தானிருடிகுலத்தினொடும். (ச)

---

* பொதிர்-அச்சம், நடுக்கம்.

ஆற்றராகியமரரிரிந்தயர்ந்தேபலநாளரியினொடு
மாற்றரேவல்புரிந்துகரிவதனக்கொடியோன்வழிபாடு
மேற்றாராகியினிமுடியாதெனவேயிடர்கூர்ந்திந்திரனே
றேற்றாருவிக்கரியமணியொளியாலொருபாலுமைகோமான். (௫)

போலப்பொலியுந்திருக்கயிலைபுகுந்தார்வாயிற்புறமேவி
யாலக்களத்தோனீருருவாயமர்ந்தாங்கலங்கியமுதுாற்றுங்
கோலக்குளிர்வெண்பிறைமுடியுங்குழவிமறியுமழுவாளு
மேலப்புனைந்துபலகோடியண்டத்திறையோரெழுந்தேத்த. (௬)

பொன்னம்பிரம்புகரமேந்தும்புனிதனுகுமருணந்தி
முன்னம்பணிந்துபுகழ்ந்தேத்திமுதல்வனுகியுலகானு
மிந்நந்தியுமிங்குளனுகவிடர்கூர்ந்தெளியேமிரங்கியதாய்
தன்னன்பிழந்தமகவேபோற்றளரத்தகுமோதாங்கெனலும். (௭)

அருளாலுயரும்பெருந்தேவனமலன்வேலையஃதாய்ந்து
தெருள்வானேகித்துயர்முழுதுந்தீர்ப்பேன்சென்றுமீள்வளவும்
வெருளாதுறைவீரெனவேகிவிளம்புஞ்சமயமோர்ந்தமலப்
பொருளாமிறையேபுரந்தரனேமுதலோர்வாயிற்புறம்புக்கார். (௮)

பன்னாளமைம்பார்த்துறைந்தேபரிவுகூர்ந்தார்பணித்தருளா
யென்றுமுன்னமழைத்தியெனவேகியழைப்பவிமையவர்தாம்
பொன்றுர்சடையான்செழுந்தாதுபுதைத்தகமலப்புதுத்தோடு
மின்றுதென்னவெழில்காட்டுமிணைத்தாளிறைஞ்சியேத்தினரே. (௯)

வேறு.

பார்முதலாகிப்பரந்துபல்லுயிராய்ப்பகுதியாய்ப்பரம்பரமாகி
வேர்முதலறியாவிழுப்பொருளாயவிமலனேவேதநாயகனே
நீர்மிசையண்டமளித்ததிற்புகுந்துநிலைபதினுன்களித்தவற்றைச்
சீர்பெறநிறுவியரியயற்களித்தசெல்வமேதேவநாயகனே. (௧௦)

அருமறைச்சிரத்தினளப்பருமொளியாமநகனேயாருயிர்க்கமுதே
பருவமாருயிருட்பரிந்தருளாகிப்பாசவேர்பறித்திடும்பதியே
பொருவரும்பொருளேபுவனநாயகனேபொங்கிழைவனமுலைப்பொழியே
ரரிவையோடமர்ந்தவாதியேயரனேயமலனேயருளெனப்பணிந்தார். (௧௧)

வீங்குநீர்வேலைமீதெழுவிடத்தால்வீந்திடாதளித்துமுன்காத்தா
யீங்கெமைக்கொடியவிருட்கயமுகனுமெரிவிடந்தெறுவதற்கிரங்காய்
தாங்குபேரருளாலுலகெலாமளிக்குந்தலைவனேசரண்பிறிதறியேந்
தீங்குதீர்த்தருளாய்†செயசெயபரமதேசிகசெயவெனத்துதித்தார். (௧௨)

† செய என்பதற்குச்சர்வத்துக்கும் மேன்மையாயிரு என்பதுபொருள்.

கடியவெந்தறுகட்கரிமுகன்படையாங்கடுஞ்சினத்தவுணர்காய்ந்தருந்த
நெடியசெஞ்சடையாய்முனிவரர்தேவர்நிலையழிந்தாருயிர்நீத்தார்
* மடிவிலேலங்குந்திக்குந்திமேலெழுந்துமாறிருகைசெவிமாட்டி
யொடிவிலாக்கூத்துங்குட்டுமுன்னுவப்பவுஞற்றலாலொழிந்தவுஞ்செயலால்

அன்னவணியற்றுமருந்துயரளத்தற்கரியதாமாற்றலேமெனலு
முன்னவனிரங்கிமுகமலர்ந்தருகின்மூத்தமாமுகவனைநோக்கி
யின்னவரோடுமெழுந்துநீயேகியிமையவர்க்கிடுக்கணேயியற்றுங்
கன்னவிறிணிதோட்கயமுகனுயிரைக்காய்ந்திவண்மீள்கெனக்கழற. (கச)

செய்யசேவடிகள்பணிந்தெழுந்தமரர்சேனையோடேகிவெஞ்சினத்து
வெய்யதானவனதிருக்கையைச்சூழ்ந்துவிண்ணவரலைத்திடவிடங்கால்
பையராவென்னக்கயமுகத்தவுணன்படர்தரும்படையொடுமணுக
மையலார்கொடும்போர்வானவரவுணர்மலைத்தனர்வருடங்கள்பலவே. (கரு)

மலைந்தனர்நெடும்போர்மறங்கிளர்ந்தடர்த்துவழங்குழிவானவர்மாற்றார்க்
குலைந்தறவோடிவிநாயகன்சரணமுறவவனூற்றமாரவுண
ரலைந்துயிர்நீங்கியாற்றலராகவடர்த்ததிர்ந்தகைத்திடவழிந்தே
கலைந்தனரோடக்கயமுகவசுரன்கண்டுவெங்கூற்றெனவெதிர்த்தான். (கசு)

எதிர்ந்தவன்காலவெரியெனக்கதுவவிருவருமிகலுறுங்கடும்போர்
பிதிர்ந்துடல்கிழியும்§பிறக்கமுமறியார்பெருகுவெஞ்சினச்சமம்பேணி
யதிர்ந்திடவுலகமநந்தனுநெளியவாற்றினரருவரைபலவு
முதிர்ந்தனவூழியுருமெனவெம்போருடற்றினர்வருடநூறுகவே. (கஎ)

வலியழிந்தவுணன்மடங்கிவெங்குருதிவாயுமிழ்ந்தவிந்திடமதமாப்
பொலிமுகப்புனிதன்பொருதடர்ந்தலைப்பப்புரிவுறும்போர்த்திறமறந்த
மெலிவுகண்டிரங்கிவாகனமாகமேவெனவிரகளித்தருளக்
கலியொழிந்தவனேமூடிகமாகிக்கணபதிக்கினியனுய்க்கலந்தான். (கஅ)

செழுந்தருநீழற்றேவர்கள்கூடித்தீர்ந்தனம்பகையெனத்தெளிந்து
கொழுந்தவிர்சடிலக்குழகனன்மகவாங்குஞ்சரமுகவனைப்போற்றித்
தொழுந்தகுபூசைசுவைதருமதுரந்துறுங்கனிமோதகங்கன்ன
லெழுந்துயர்தெங்கினிருங்கனிபொரியோடெள்ளவலேனையபலவும். (ககூ)

தாதவிழ்நறும்பூச்சந்தனமாலைதழன்மணிப்பூண்பலதழையுங்
காதலினளித்துப்போற்றியபின்னர்க்களைகணுய்க்காத்தெமையளித்த
போதகவுருவப்புண்ணியப்பொருளேபுவனமாமூன்றையும்புரந்தா
யாதலினறைவாமருளுதியென்னுவமரர்களனைவருமுரைப்பார். (உ0)

---

* உஞற்றலாலொழிந்தவுஞ்செயலால் மடிவிலேம் என முடிக்க. § பிற
க்கம்-வமூ.

கரிமுகத்தவுணற்கயர்ந்தியாமவன்முன்காட்டியகூத்தொடுகுட்டும்
பரிவுடன்றிருமுன்றினந்தொறும்புரியப்பணித்தருள்பாரிடைப்பயில்வோர்
தெரிதரமுக்காலிருந்தெழுந்தடங்கிச்செய்திடுகூத்தொடுசெங்கைப்
புரிவுறுகுட்டுமளித்தவர்க்கிரங்கிப்புரிந்தருள்வேண்டியபொருளே. (உ௧)

சினக்கரிமுகத்தோன்சேனைகாவலர்தாந்திரைக்*கடற்பரப்பினிற்சிகரி
வனத்திடைமறைந்தார்வதைத்தவர்தமையும்வழங்குதிவரமெனவணங்க
வினத்தொடுஞ்சுவர்க்கமேகுவீரென்னவியல்வரமளித்தனனேவித்
தனக்கிணையில்லோன்முனவராவிதடிவதற்கமைந்தனன்றருக்கால். (உஉ)

புழைநெடுங்கரத்தாற்புணரிநீர்வாங்கிப்புக்கவணுறைந்ததானவரைக் [த்
குழைதரக்குறைத்துக்குரைகடனிறைத்துக்குவட்டிடைக்கொடியரைக்குலவி
தழைதருவனத்திற்முனவர்தமையுந்தடிந்தினித்தானவரிலையென்
றிழைவளர்மணிப்பூண்முலையுமைமைந்தனிருத்தலுமிரவிடை † யெழுந்தே.

படரொலியாரோபதைத்தனமழிப்பார்பகைவரென்றெழுதரக்கேட்டுக்
கடகரிமுகத்தோன்முனிவர்பாலேகிக்காட்டுமினவுணரையென்னத்
தடமலர்ச்சரணந்தொழுதருந்தவத்தோர்சாற்றினர்பகலெலாந்தங்க
ளுடன்மறைத்தறவோருருவமாய்ப்பூதியொளியுறச்சடைமுடியோடும். ()

மறையினைப்பயின்றுசெபந்தவந்தியானவழக்குறமாதவரேபோ
லுறைகுவர்மாயவுருக்கொடுமவரேயுறுவலித்தானவராகிக்
கறையினையருந்திக்காய்வர்நள்ளிரவிற்காண்கிலேமியாமெனக்கரைய
விறையவன்ஞானத்திலங்கியநோக்காலிருடியாமசுரரையெதிர்ந்தான். (உரு)

கொன்றவர்தமையுங்குறைவறவழித்துக்குலவியமகிழ்வொடுங்கயிலைச்
சென்றதன்முடியிற்சேர்ந்திடவேறத்திசைத்தவன்சேர்வதற்கரிதாய்க்
குன்றினைவலஞ்செய்தந்தர்போலுழலக்குறித்தருணந்தியுங்குறுகி
வென்றிமாமுகத்தோய்மேதகுகயிலைவெவ்வினைமேவினர்க்கரிதே. (உ௬)

அந்தணர்கொலையேயாதியவினைகளடைந்தவர்கயிலைமீதடைந்தே
யெந்தைபாலெய்தலரிதறமேய்ந்தவிருந்தவத்தினர்க்கெளிதாகு
முந்துநீமாயமுனிவராயுறையுமுழுவலித்தானவர்க்கொன்று
சிந்துரஈளவற்றுளந்தணனொருவன்சிதைந்தனன்சிந்தைசெய்திலையால். (உ௭)

தீயதாம்பிரமக்கொலையதுநின்பின்சேறலாற்செழுஞ்சுடர்க்கயிலை
யேயவாறரிதாமையநீயேகியிரும்பரிகாரமங்கிழைத்தே
தாயமாங்கயிலைசார்ந்திடினுளதாமென்றலுஞ்சார்கொலைக்கொடுமை
யாயவாறிதுவென்றறிவுறுத்திடுவானருந்தவக்கிழவர்பாலடைந்தான். (உ௮)

---

* கடலினும், மலையினும், காட்டினும், ஒளித்தவர்களையும் கொன்று. † எழுந்து படரொலி என வருஞ்செய்யுளின் முடிக்க. ஒலி முனிவரதொலி.

இக்கொலையதனுக்கிரும்பரிகாரமியம்புமின்னீரெனவிசைப்பத்
தொக்கவர்*தானந்துயர்த்தவம்பலநாட்சோர்வுறவாம்பரிமேத
மிக்கொருங்கியற்றவீயுமென்றிசைப்பவேழமாமுகவனேவியாத
னக்கணநீங்குமுறுதியொன்றுரைப்பனையகேட்டருளெனவறைவான். (உகூ)

நிறைந்தமாமுனிவர்கேட்டினையெல்லாநெடுந்துயர்நெடும்பொழுதகற்ற
வறைந்தனவாகுமயர்வறவெளிதாயக்கணமருவினையாவுங்
குறைந்திடுமுபாயங்கூறுவனடிகேள்குறிக்கொடுகோடிநீகுழக
னுறைந்திடுவேதவனமெனத்தென்பாலோங்கிடுமுலகெலாமேத்த. (ருo)

அப்பதித்தென்பாற்சேதுவிற்கோடியலங்கிடுமங்கதுகாணின்
வெப்புறுவினைகள்விப்பிரக்கொலைகள்விளிந்திடும்விழைந்ததிறுடிற்
செப்புவதுளதேசெயும்பரிகாரந்தீர்வருசெறிவினைத்திரளு
மொப்பருஞ்சேதுவொழித்திடுங்கழுவாயுள்ளதற்குரைப்பதுமுளதே. (ருக)

கோடியிற்பிரமகத்தியோர்கோடிகுருமனைகவர்தலோர்கோடி
மாடியற்பொருளைக்கவர்தலோர்கோடிமதுவினைமாந்தலோர்கோடி
சாடியற்புதமாந்தருமமோர்கோடிதழைத்திடுஞ்சார்ந்ததின்மூழ்கி
†யாடியிற்றிகழுமிலிங்கமொன்றுற்றியரீச்சையுமாற்றினையாயின். (ருஉ)

வேதியக்கொலைபோய்விளிந்திடும்பின்னர்வெள்ளியங்கிரியினைமேவி
யாதியைப்பணிந்துசாமிநீயமர்கென்றறைசெயவவனொடுமறவோ
ரூதியப்பயனோர்ந்துணர்ந்தனர்சூழவொளிர்தருமறைவனமேவி
நீதியிற்சேதாங்கோடியிற்படிந்துநீக்கிவெவ்வினைத்திறநினைந்தே. (ருரு)

வேறு.

குளகனதருகுமேல்பான்மாருதக்கோணமேவ
வளமுறுமோரைதன்னின்வளரொளியிலிங்கந்தாபித்
தளவறுமுபசாரத்தினருச்சனையாற்றிப்போற்றி
யுளமகிழ்வெய்தியங்கணுறைந்தருந்தவத்தரோடும். (ருச)

அருந்துயர்ப்பிரமகத்தியகற்றியேயறவரோடும்
வருந்தலற்றேகிமூத்தோன்வளரொளிக்கயிலைமேவிக்
கருந்தடங்கண்ணியோடுங்கண்ணுதல்பாதம்போற்றி
யிருந்தனனுவகையோடுமிமையவர்யாரும்போற்ற. (ருரு)

* தானம்,தவம், பரிமேதங்கள், செய்யின் நெடுங்காலத்தின் பின்னீங்கு மென்பதுகருத்து. † ஆடியிற்றிகழுமிலிங்கம் என்பதற்குப் படிகலிங்கமென் றுரைப்பாருமுளர். அங்ஙனம் முதனூலிற்கூறப்படாமையானும், படிகலிங் கம் பரார்த்தத்தில் யாண்டுமின்மையானும் அது போலியுரையென்றொழிக.

எண்ணறுங்கொடியபாவமியற்றினரேனுமீசன்
புண்ணியமறைசைமேவிப்பொருகடற்சேதாங்கோடி
நண்ணியேபடியிற்றீமைநாசமாய்நலத்தினேய்ந்து
கண்ணியகயிலைசூழுங்கணத்தொடுங்களிப்பர்கண்டாய். (௩௬)

ஞாற்பரிகாரமில்லாதுவலரும்வினைகளேனுஞ்
சூற்பணிலங்கள்சூழுஞ்சேதுவிற்றேயிற்றீரும்
பாற்படுமுலகிற்றீர்த்தமியாவினும்பரியாப்பாவ
நீற்கருமுகில்சூழ்கோடிநினையினுநீருமன்றே. (௩௭)

பொருங்கடற்சேதுமேவிப்புகழ்தனுக்கோடிப்பூநீ
ரொருங்குறப்படிந்துகைம்மாவொளிமுகத்தொருவன்பூசை
தருங்கதியிலிங்கங்கண்டேதாழ்ந்தவர்தணந்துபார்ப்பா
ரருங்கொலையாதிப்பாவமரன்றிருக்கைலையாள்வார். (௩௮)

கொற்றவில்லிராமன்சேதார்கோடியிற்படிந்துதூய்மை
யுற்றவர்குலத்தினுள்ளோரியாவருமுவப்பினோங்கி
யற்றமிலின்பமேவியரன்பதியடைவரென்றான்
மற்றதன்பெருமையாரேவகுத்துரைசெய்யவல்லார். (௩௯)

மகங்கொடையோகநோன்பின்வருந்துதலின்றிவாய்மை
தரும்பதம்வேண்டிற்றெல்லாந்தந்திடுந்தருமநல்கு
மகங்குளிர்ந்தமலமாகவளித்திடுமிருளையீரு
மிகம்பரமிரண்டும்வேண்டினெய்துகவிதன்பால்யாரும். (௪0)

பற்பலநெறியினானும்பணிவுறுமைந்தற்காண
வெற்புறுதிணிதோண்மேவுங்கிருதவீரியனும்வேந்தன்
பொற்புறுபுதல்வனாகப்பொருந்திறலாழியானை
யற்பொடுசேதுமூழ்கியடைந்தனனரசரேறே. (௪௧)

வேறு.

உலகுயிரின்புறவுதவிராகவ
னலர்தனுக்கோடியின்மேன்மையாவையுஞ்
சொலவரிதித்திருச்சேதுதோய்ந்தவர்
மலரடிகாணினுமாயும்பாவமே. (௪௨)

எனமுனியரசனுக்கேற்பவோதினன்
மனமகிழிக்கதைவழுத்துவார்கடாங்
கனவெனக்கடுவினைகழிப்பர்காமுறும்
புனமயிலுமையொடும்புணர்ந்த * பூதனே. (௪௩)

விநாயகச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨,௭௮௩.

* பூதன்-பரிசுத்தன்.

# கிருதவீரியச்சருக்கம்.

காயமேவியநற்பயன்காணுமா
வாயவோதினைவார்கடற்சேதுவின்
பாயமேன்மையரியவன்பாலனே
யாயவண்ணமருளெனக்கூறுவான். (௧)

கொம்மைவெம்முலைக்கோதையர்சிந்திய
செம்மையார்தருகுங்குமச்சேற்றிடை
வெம்மைநீங்கவிடுத்தபணிசெறிந்
தம்மைவானினவணியலங்குமே. (௨)

கூனலம்பொரச்சாய்ந்துகொழுமடற்
பானலம்பணைப்பன்மலர்சிந்திய
தேனலம்பறற்செம்பொன்வரன்றியே
கானலம்பெறக்காசொடுகாலுமே. (௩)

மூகந்துகொண்டமுழுநிதியார்வல்
ரிகந்துதாங்கரிதென்னவியல்வள
முகந்துசெல்வமுறுங்குடிமல்கியே
திகழ்ந்துகேகயதேசஞ்சிறக்குமே. (௪)

நிகழ்ந்தசெல்வநிறைத்தபயனெனப்
புகழ்ந்த * மாகிஷ்மதிநகர்ப்பொன்னெயி
லகழ்ந்துவானகடப்புறத்தந்நல
மிகழ்ந்துசென்றதுகீழ்ப்படவெண்ணியே. (௫)

வேற்றுமன்னர்விறற்படைவீய்ந்துக
வாற்றுபல்கருவித்திரளான்றது
போற்றுமப்புரிகாவலன்போரிடைக்
கூற்றுமுட்குங்கொடுந்திறற்கோமகன்.

ஏயவெண்கலையொண்கலையாயியல்
வாயவான்சுரர்பூசுரர்வாழ்வரு
டாயமொப்பினுந்தாங்குங்களங்கமா
மாயவெண்ணிமதிக்குலமன்னினன். (௭)

* மாகிஷ்மதி-கேகயதேயத்திராசதானி.

கருதலார்முடிக்காசுழக்காய்கழற்
கிருதவீரியனென்றுயர்கீர்த்தியான்
பொரு * திரேவதிப்பூம்புனல்சூழ்புர
மருதுபோழ்ந்தவனென்னவயங்கியே.  (அ)

ஆக்கந்தன்னினுமன்னுயிர்க்காக்கியே
நீக்கமின்றிநிலமகடன்னொடும்
† பூக்கொண்மாதரையும்புணர்ந்தேபுவி
காக்குநாளிற்கவலையிற்கன்றினான்.  (௯)

மழலையின்மொழிவார்மதுரச்சுவைக்
குழலினோசைசெவிப்புலங்கொள்கிலா
ரழகுமாண்மையுமாயுளுஞ்செல்வமு
முழனுமாறுமுறுதியின்றென்பவே.  (௧௦)

‡ வழியிழந்தவராக்கமருவிடார்
குழியில்வீழ்வரெனத்துயர்கூர்ந்தரன்
மொழியுமாரணமுற்றி § முதுக்குறை
விழியின்மேயவிரதரைக்கூவியே.  (௧௧)

இருமையார்தருமின்பமுமீந்திடு
முரிமைமைந்தனுறுதற்குபாயநீ
ரருமையாயினுங்கூறுமினூற்றுவன்
பெருமையீரெனமாதவர்பேசினர்.  (௧௨)

இழுதினாகுதியீந்திடுவேள்வியாற்
பழுதுதீர்மகவென்றனர்பற்பல
ரெழுதுபாவையெனப்பொலியோகமே
விழுதுபோன்மகமேவவென்றார்சிலர்.  (௧௩)

பற்றகற்றியதானநற்பாலனை
முற்றநல்குமென்றார்சிலர்மோனிகள்
கற்றவாறுகரைந்தனயாவையு
மற்றமீர்ந்தவனூற்றினனன்பொடும்.  (௧௪)

---

* இரேவதி ஓர்நதி. அது சூழ்புரமென்றது மேற்கூறிய மாகிஷ்மதி புரத்தை. † பூக்கொண் மாதரென்றது வெண்டாமரை செந்தாமரை யாசனிகளாகிய சரசுவதியையும், இலக்குமியையும்; புணர்ந்தெனவே கல்வி செல்வங்களையுடையனாயினான் என்பது கருத்து. கன்றல் மிகுதலென்பது மேலுங்கூறினாம். ‡ வழி-மகன். குழி நிரயக்குழி. § முதுக்குறை-பேரறிவு.

இழைத்துமைந்தனின் றுகியிரங்கியே
யுழைத்துமில்லதுபாயமுணர்ச்சியாற்
றழைத்துமல்குதலின்றெனத்தாதளி
குழைத்தபைந்தொடைக்கோவுளங்கொண்டரோ. (௧௫)

பரந்தமாநிலமுற்றும்பகையொரீஇ
யரந்தைதீரவளித்திடுமாயிடை
நிரந்தகானகவேட்டையினேயமாய்ப்
புரந்தகாதலிற்போக்குளங்கொண்டவன். (௧௬)

வேறு.

வெஞ்சரந்தூணிசாபம்விசித்தவாள்பலகைமேனிப்
பஞ்சரந்தாங்கிச்செம்பொற்பணிக்குழைபலவும்வேய்ந்து
கஞ்சரங்காய்ந்தவெள்வேனரபதிநகையாரம்பொன்
மஞ்சரணுபதேரின்மாகதர்வாழ்த்தச்சென்றான். (௧௭)

பெய்மதக்கலுழியூற்றும்பிளிறுவெங்குரற்போர்க்கைம்மாக்
கொய்யுளைக்கலினப்பாய்மாக்கூவிரக்கொடிஞ்சிகூற்றின்
வெய்துறும்பதாதிசூழ்ந்துமிடைந்துறவினைஞர்காப்ப
வெய்தினன்றிரவிக்கஞ்சியிருள்படிந்தெழாதகானம். (௧௮)

பருமரந்துவன்றிவீசும்பசுந்தழைபொதுளிப்பாய
கருமுகிற்கணத்திற்கார்செய்திடியெனக்கடியபன்மா
வெருவொலிமிடைந்துசீற்றவிறற்கரியரிமாவேங்கை
கருமயிர்க்கரடிசெங்கட்கோலமாக்கடியவாமா. (௧௯)

செறிந்திருளடவிமேவித்திருகுவெஞ்சினத்துப்பன்மா
மறிந்துசோர்ந்தயர்ந்துவீழவடிக்கணைவழங்கிவாளா
லெறிந்துவெங்களியினுடலேயினனிணர்ப்பூவாவி
நறுந்தடங்குளிர்ந்தகான்யாற்றடைகரைநயந்துநண்ணி. (௨௦)

நெஞ்சகங்களித்துத்தண்பூவனமெலாநினைந்துநீடி
மஞ்சணிபுனிதமாயசையமால்வரையின்சாரற்
குஞ்சரப்படைவிநோ[illegible]
வஞ்சனநெடியவாட்கணணங்கவராடன்மற்றும். (௨௧)

தெரிந்தகமகிழ்ச்சிமேவித்திரிபவன்செம்பொற்சோதி
விரிந்தகந்தரத்திற்சூழ்ந்[illegible]
வரிந்தொளிர்புலித்தோலாடைவற்கலைவாய்ந்துமாலை
புரிந்தகண்டிகைவெண்ணீற்றின்பூச்சுடன்முழுதும்போர்ப்ப. (௨௨

கலையுரிமீது*வீரவிருப்புடல்கவினவாற்றி
நிலைபெறுஞ்சமாதிமேவிநேத்திரங்குவித்துநீடுந்
தலையுலகனைத்துமின்பாஞ்சங்கரனுருவந்தானா
யுலைவறவுவந்துதத்தாத்திரையனங்குறையக்கண்டான். (௨௩)

கண்டவன்கண்ணீர்வீழ்த்துக்காதலாற்புளகம்போர்ப்ப
மண்டியகளியான்மண்மேற்பன்முறைவணங்கிவாழ்த்தப்
புண்டரீகக்கண்ணோக்கம்புரிந்தவன்புனிதனாகத்
தெண்டிரையமுதம்போலுமாசியுஞ்செப்பிப்பின்னும். (௨௪)

சூழ்ந்தநின்சுற்றத்தோடுந்துயரறத்துகளிற்றீர்ந்து
வாழ்ந்தனைகுடிகளோங்கிவளர்தருநாடுமென்னத்
தாழ்ந்தநின்பகையுநீங்கத்தருமத்தின்வழாதுகாவன்
மூழ்ந்ததேயெனவினாவிமொழிதருங்குசலங்கூறி. (௨௫)

ஆய்ந்தபின்னீங்குநம்பாலடைந்ததென்னகத்துக்காம
மேய்ந்ததையளிப்பன்கூறென்றிசைத்திடவிறைவன்மேன்மை
வாய்ந்தநின்னுசிதனால்வழங்கியயாவுநன்மை
தோய்ந்தனன்குசலமேவித்தோன்றலற்றயர்வன்றொல்லோய். (௨௬)

தானமுந்தவமும்வேள்வித்தகுதியுந்தழையச்செய்து
மானநன்மைந்தனற்றேன்வழங்குதிவரநீயென்னாக்
கோனவன்கூறநோற்குங்குணத்தவன்குழகன்மேவும்
வானகமேவியோங்குமலைமுடிமகிழ்ந்துகாணின். (௨௭)

வந்தியுமகவையீனுமற்றவர்க்குரையென்வாட்டஞ்
சிந்திநீசுரசன்போலத்திகழ்தருகயிலைச்செம்பொற்
பந்தியஞ்சிகரநோக்கிப்பாலனைப்பெறுதியென்ன
மைந்தியலரசன்போற்றிமாதவன்றனக்குச்சொல்வான். (௨௮)

மகவறத்துயரமேய்ந்தசுரசனவண்ணமெல்லாந்
தகவருள்புரிவாயென்னத்தவமுனிசாற்றுஞ்சால
வகமகிழ்†சுரசனென்பானரசமாவிருடியாக்கம்
புகவுலகளிக்குநாளிற்புலர்ந்தனன்புதல்வரற்றே. (௨௯)

சுருதிநூலாய்ந்துநோற்குந்துருவாசன்சரணமேவித்
தருதிநீபுதல்வனென்னத்தாழ்ந்தடிபல்காற்போற்றக்
கருதிநின்றனக்குவாயுங்காண்முளையில்லைகன்றைப்
பரிதிவேணிருபமுன்னம்பாற்றினையசுவினீங்க. (௩0)

* வீரவிருப்பு-வீராசனம். † சுரசன் இராசவிருடியாயிருந்து உலகத்தைப்புரந்தான் என்பது கருத்து.

முற்பிறப்பதனாலிம்மைமுளையிலாதயர்வாய்வெள்ளி
வெற்பினிற்சிகரங்காணின்விழைந்திடுந்தோன்றலுண்டா
மற்புதன்கயிலைகாணின்மலடியுமடைந்தேயெச்சம்
பொற்பமர்ந்திலங்குமென்னப்புகன்றிடுஞ்சுருதிபோற்றி. (௩௧)

செல்கெனவிடுப்பவன்றான்செய்யசேவடிகள்பல்காற்
புல்லினன்புகழ்ந்துபோற்றிப்புனிதநீயருளினல்லா
லெல்லியல்கயிலையெங்ஙனெளியனேனெங்ஙனென்று
நல்லியனீயேநீயேநலம்பெறவளிப்பாயென்ன. (௩௨)

உள்ளகங்குழைந்துசோதியொருவனையுளத்துளாக்கி
யெள்ளருந்தவத்தான்வேண்டவிறைவனதருளானந்தி
வெள்ளியங்கிரியின்மேயமுடியொன்றுவிளங்குமேன்மை
தெள்ளருந்தவத்தோன்மேயவாச்சிரமத்திற்சேர்த்தான். (௩௩)

சுரசனையழைத்துமேன்மைதொகுந்துருவாசனீது
பிரசமார்சிகரம்போற்றிப்பேணிநீபணிதியென்னப்
பரசினன்பணிந்துதூயபாலரைப்பண்பிற்றந்தா
னரசனீசிகரங்காணினுமெனவயர்ந்துசொல்வான். (௩௪)

மக்கடம்பிறப்பின்மேவிவழியறுமெளியேற்கீது
தக்கதன்றென்றுபோற்றத்தளர்வொழிசலிலநான
மிக்கதோருபாயமாகும்விளம்புவன்விரும்பிமேவிப்
புக்கவந்நிலையேதோன்றலளித்திடும்புனிதநல்கும். (௩௫)

பாவமாங்கொடியகானம்பசையறப்பற்றித்தீய்க்குந்
தாவமாம்பிறவிவற்றுத்தடங்கடறணந்துநீங்கு
நாவமாநிலத்தோர்க்கென்றுநயந்தனையாவுநல்குந்
தேவராருலகிற்சிந்தாமணியெனச்செப்பற்பாற்றே. (௩௬)

வேறு.

இம்மால்வரைக்கீழ்த்திசைநீசிலதூரமேகி
னெம்மானெனவேயிமையோர்தொழுதேத்துமூதூர்
செம்மாமலர்த்தேன்பொழிகாவிடைத்தேவரோடு
மம்மானனையார்பயிலாரணகானமாமே. (௩௭)

கணமாயினுமப்பதிமேவினர்காதல்கூரத்
தணவாதுநினைந்தவர்தாமரைத்தாதுசூழ்ந்து
மணமார்தருவாவியின்மூழ்கினர்மாதுபாகங்
குணமாமறைநாதனைக்கண்டவர்கூறினாரும். (௩௮)

கூடற்கரிதாகியமுத்தியுங்கூடிவண்டு
பாடற்களியாலிளமஞ்ஞைகள்பார்ப்பிேனாடு
மாடற்கினிதாந்தருநீழலுமார்வரன்பா
ஞெடற்கணியாரரமங்கையர்நாப்பணுற்றே. (௩௯)

அங்கப்பதித்தென்றிசைமேவிடுமாதிசேது
துங்கத்தனுக்கோடியிலங்கிடுஞ்சோதியாகி
நங்கற்பகமீதெனக்கண்டுநயந்துபோற்றிச்
சங்கற்பமகத்துறமந்திரஞ்சாற்றிழூழ்கி. (௪0)

புலமேவினர்பூவொடுபோற்றியவேதநாதன்
மலர்போலடிவாழ்த்திவணங்கிமகிழ்ந்துமேவிக்
குலமாமணிபோன்றுகுணங்குறிகொள்கைமேன்மை
நலமார்தருமைந்தனைமேவுதிநாமவேலோய். (௪௧)

திருமாலயனிந்திரனேழ்திசைத்தேவர்மேவும்
பெருவாழ்வருளும்பதம்பீடுபிறங்குமேன்மை
யொருவாத்திருநற்புகழ்கல்வியுணர்ச்சிமற்றுங்
குருமாமணிசிந்தியகோடிகொடுக்குங்கோவே. (௪௨)

ஐயந்தவிர்ந்திம்மொழிமெய்யெனவார்வமேவி
வையந்தொழுங்கோடியின்மேவெனவாய்மையோதுந்
தெய்வந்திக*ழத்திரிபுத்திரன்செய்யபாதந்
தைவந்துளமேவுமகிழ்ச்சியிற்றாழ்ந்துபோற்றி. (௪௩)

வேறு.

எண்கிருதவீரியனெழுந்துவிடைகொண்டான்
பண்பினொடுதண்ணடைகள்பற்பலகடந்தா
னண்புறவிலங்கொளியினுகமதியாகம்
புண்படநிவந்தகொடிபோழ்மறைசைபுக்கான். (௪௪)

செம்பொன்மணிமாளிகைகளும்பர்நிலைசேரக்
கொம்பனையமங்கையர்கணம்பளிகள்கூடிப்
பம்புதருவம்பலர்களன்பொடுபறிப்பார்
தம்பணியிலம்பகநலம்பெறுதகைத்தாம். (௪௫)

வானமதுபூநிலையின்வந்துவளமேவிக்
கூனல்வளைமாகடல்கொழித்தமணிகோவை
பானிலவுமீனநிகர்பான்மையுறுவேத
கானமுதிர்காதலொடுகண்டுதொழுதுய்ந்தான். (௪௬)

---

* தத்தாத்திரையர் அத்திரிமுனி புதல்வரெனவறிக.

வேறு.

ஆதிசேதவிருடுதற்கெண்ணியேசுடல
மோதியீர்திரைக்கோடியின்முன்னினன்முதுநூல்
* வேதியாயசங்கற்பமும்விளம்பினன்மனுவு
மோதிமூழ்கினனுலப்பறுமுவகைகொண்டுரவோன். (௬௭)

† தாரமேமுதறபனியந்தரணியான்றகவா
வீரமாருளத்தீந்தறனியதியுமிழைத்து
வாரமாயயன்மான்முதல்வானவர்வணங்குஞ்
சீரருதொளிர்மறைவனச்சினகரஞ்சேர்ந்து. (௬௮)

மாடுமும்முறைவலஞ்செய்துவணங்கியுண்மருவித்
தேடுமாமறைச்சிற்பரன்செழுமடற்கமலத்
தோடுபோலொளிர்துணையடிமுடியுறத்தொழுது
கூடுமன்பினூற்குழைந்துளந்துதிசெயக்குறித்தான். (௬௯)

வேறு.

தெள்ளுமாமறையின்சிரத்தொளியாகிச்சிற்பரானந்தமாய்த்தெளிவாய்
விள்ளுமாறறியாவிமலமாய்வெளியாய்விகற்பமாருலசெலாமாகி
யுள்ளுமாய்ப்புறம்பாயுண்மையாயறிவாயுலப்பறுமொருமுதலாகிப்
புள்ளுவார்கொடியோர்தமக்கரிதாயபூதனேவேதநாயகனே. (௭0)

விளங்குபூரணமாயெவற்றினுமேவிவேறறவிணைமனக்குறிப்பு
மளந்துணர்வாகியகிலமுந்தோன்றியழிந்திடவதற்கிடமாகி
யுளங்குளிரின்பவுருவமாத்திரையாயுகளமற்றசலமாயோங்கித்
துளங்கறும்பரமேசுயம்பிரகாசச்சோதியேவேதநாயகனே. (௭௧)

நாகிளந்திங்கட்குழவியின்றெருழுக்குநகைநிலாவணியினுய்போற்றி
வேகமாய்மாகம்விழுங்குதற்கெழுந்தவெள்ளமார்வேணியாய்போற்றி
பாகனமென்சொற்படாமுலைப்பணைத்தோட்பவானிசேர்பகவனேபோற்றி
சோகவேரறுக்குந்துணையெனக்காயசுருதிமாவனத்தனேபோற்றி. (௭௨)

ஆதியாய்‡மணியிற்சூத்திரம்போலவனைத்தினுமமர்ந்தனைபோற்றி
பூதியாலளித்துத்துடைத்தவைகாக்கும்பொருவிலாப்புனிதனேபோற்றி [றி
சோதியாய்மறையின்றுணிவுமாய்ச்சுடராய்ச்சொலற்கருந்துரியமேபோற்
வேதியாய்ப்பாகத்துயிர்க்கருள்வழங்கும்வேதமாவனத்தனேபோற்றி. (௭௩)

---

* வேதோத்தமாகிய சங்கற்பம். வேதோத்தம்-வேதத்திலே சொல்லப்பட்டது. † தாரம்-வெள்ளி. ‡ இரத்தினத்திற் கோத்தநூல்போல.

குணங்குறிகொள்கைநீங்குங்கோதிலாவமுதேபோற்றி
பணங்கிளரரவஞ்சூடும்பரஞ்சுடர்ப்பதியேபோற்றி
யிணங்கியுமுயிர்கண்முற்றுமிணங்கிடாவிறைவாபோற்றி
மணங்கமழ்மறைசைமேயவளரொளிமணியேபோற்றி. (௫௪)

நெக்குளமுருகிப்போற்றிநினைபவர்க்கினியாய்போற்றி
முக்கணெம்பெருமான்போற்றிமுடிவிலாமுதலேபோற்றி
மிக்குயர்சனகனாதிக்களித்திடும்விமலாபோற்றி
செக்கரஞ்சடையாய்போற்றிசிவசிவபோற்றிபோற்றி. (௫௫)

போற்றியிதயப்பொகுட்டினடுப்புணர்ந்தேமுழுதும்புலப்படுப்பாய்
போற்றியமலவானந்தப்புணரியாகிப்புகுந்தளிப்பாய்
போற்றியகிலமனைத்தினுக்கும்புகலாமறைசைபுரிந்துறைவாய்
போற்றிவேதநாதனெனப்பொலிவாயருணீபுரியெனவே. (௫௬)

வேறு.

அருவிபோல்விழிநீரலைப்பமெய்ப்புளகமணிந்தவனகங்குழைந்தன்பா
லுருகியேபணியமறைவனமேயவொருமுதலுவந்தெதிர்தோன்றிக்
கிருதவீரியநீகிளர்தனுக்கோடிகிடைத்ததிற்படிந்தனையதனாற்
பொருவருந்துதியான்மகிழ்ந்தனம்வரநீபுகலெனப்போற்றினன்புகல்வான்.

இலக்கணமுழுதுமமைந்தரிபோலவிலங்கொளித்தேசினோடியைந்த
வலக்கணில்புதல்வனளித்திடவேண்டுமளியனேனமைத்தவித்துதியை
நிலக்கணோதினர்க்குமுத்திநீயளித்துநினைந்தனவருள்செயவேண்டு
நலக்கணமறைதோய்நம்பனேயிரண்டேநயந்தநல்வரமெனப்பணிந்தான். ()

ஆங்கவனுரைப்பமறைவனமேயவண்ணலு * மரிதனதஞ்சம்
பாங்குறுமகவாயாயிரங்கரமும்பரித்ததாய்ப்பலரிதயத்திற்
றுங்கு † மாசயமோர்ந்தருள்வதாய்வருமாற்றந்தனமற்றதுதளர்வி
னீங்குநீயேகென்றுரைத்தரன்மறையநிருபனும்பணிந்தருணினைந்தே. (௫௯)

பொன்னகரேகிப்புரவலனமர்ந்தானயநாட்புனிதன்வைகுண்டந்
‡ தன்னகமன்னித்தானலதரியாற்றானவர்ச்சாய்த்தலின்றென்னு
மின்னவிராழிப்படையினைநோக்கிவெகுண்டுமான்மேவியென்முனநீ
பன்னருமகந்தைகொண்டனையவுணர்பகையறப்பரிவினிற்படர்ந்தே. (௬௦)

அரிந்ததேயன்றியரியினாலாவதரிதெனவகந்தையின்மதித்தாய்
பிரிந்திவணேகிப்புடவியிற்பிறவிபெறுகெனச்சபித்திடப்பெரியோய் [ற்
தெரிந்திலாச்சிறியேன்பிழைபொறுத்தருணீசெய்யெனுஞ்சேவடிப்போற்றி
பரிந்தவனிரங்கிப்பாரிடைக்கிருதவீரியன்பாற்பகர்மகவாய். (௬௧)

---

* விஷ்ணுவினதம்மிசம். † ஆசயம்-எண்ணம். ‡ தன்னகமன்னி என்பது ஈண்டுத் தன்னெதிரிருந்தென்னும் பொருட்டு-தன் என்றது விஷ்ணுவை.

வேறு.

குன்றினைமுருக்குங்கொற்றத்தாயிரங்குவவுத்திண்டோ
ளொன்றிநின் * சுடரிற்றேற்றியுறுவலியரிமானேற்றிற்
பொன்றிகழ்கழற்கான்மன்னர்போற்றிடப்புரந்துபூம்பார்
வென்றியிற்சீர்த்திவித்திவேள்விகள்பலவும்வேட்பாய். (௬௨)

வேறு.

மீளவீங்குரம்பாலுறுவாயெனவிளம்புங்
காளமாமுகிலடியிணைகசிவொடும்போற்றிக்
கேளவாவியகிருதவீரியன்மகவாகி
வேளுமாசுறவேந்தனாயமர்ந்தனன்விறலோன். (௬௩)

† கார்த்தவீரியனாகியமதலையைக்கண்ணாற்
றார்த்தசேதுவீதளித்திடும்பேறெனவமர்ந்து
தீர்த்தராசனுங்கோடியைப்புகழ்ந்தனுதினமுங்
கூர்த்தவெள்ளிலைக்குருதிவேற்கோவுளங்குளிர்ந்தான். (௬௪)

நீலமாமணிவண்ணனைநெடுநிலம்புரக்குஞ்
சீலமேவியகிருதவீரியனெனுந்திறலோன்
சாலுமைந்தனையடைந்தமைசாற்றினந்தருமத்
தாலவாலமாம்பயனெலாந்தழைப்பதற்கதுவே. (௬௫)

ஆதிசேதுவிற்படிந்தவர்கிளையொடுமமர்ந்தே
யாதிமேவியபுரியிடையலங்குவரறத்தை
யோதியாயினுமுறுதவர்மூழ்கினுமுவந்தீ
ரோதியாயிழையுற்றபாலவன்புரியுறைவார். (௬௬)

கடியதீவினையுற்றவர்கலியினிற்கரைந்தார்
நொடியலாநிரப்புற்றவர்நோயுறவழன்றார்
வடிவமாயிழைமைந்தரைவிரும்பினர்மற்று
மிடியினார்க்கிருங்கோடியேகதியதாம்விளம்பின். (௬௭)

ஞானயோகங்கடவஞ்செபநலந்தருவேள்வி
தானமாதியதகையெலாந்தனுப்பெயர்க்கோடி
யானதாடலேயழிவிலாத்திருவொடுமளிக்கு
மூனமாற்றிடுமீதலாலுறுதியுமுளதோ. (௬௮)

---

* விஷ்ணுவின் சுதரிசனமென்னுஞ் சக்கரத்திற் காயிரமுனையுண்மையின், ஆயிரங்கையோடு பிறக்கும்படி அவ்விஷ்ணு கூறினாரென்க. சுடர் என்றது முனையை; காந்தியை யன்று. † கிருதவீரியன்மகன் கார்த்தவீரியன்.

பலவுமோதியென்புத்தியுமுத்தியும்பரிந்தோ
ரிலகுசேதுவிருடலேயினியதாமிதுபோ
லுலகின்மிக்கதொன்றில்லையாலுறுதியோர்ந்திங்ங
னலகின்மேன்மையாலனிந்தமேவிச்சடையர்கள். (௬௯)

வேறு.

மணிதருமாதிசேதுவளர்தனுக்கோடிக்காதை
பணிவொடுசொல்வோர்கேட்போர்பரமனதருகுபார்ப்பா
ரணிதருமவையிற்சொல்வாரருவினையனைத்துமாற்றிப்
பிணியொடுபிறவிதீர்த்துப்பெருந்திருப்பெற்றுவாழ்வார். (௭0)

வேறு.

இதுவாதியிராகவனுலியற்றியவாதிச்சேதுவிணர்ப்பூவூற்றும்
புதுவாசமருததனுக்கோடியெனநாரதனும்புனிதமேலோன்
மதுவாருமினியமொழிமாந்தாதாமகிழ்தூங்கவகுத்தவாய்மை
யதுவாயவுரைப்பவருங்கேட்பவருந்திருமேவியமலமாவார். (௭௧)

கிருதவீரியச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௨,௮௫௪.

---

# வேதாமிர்தச்சருக்கம்.

தாதாவருண்மைந்தனதாமரைத்தாள்கள்போற்றி
வேதாவமிர்தந்தருமேன்மைவிளம்புகென்ன
* வாதாயனமூடுமதிக்கதிர்வார்வதேபோற்
காதார்தரவோதினனாரதன்காதலோடும். (௧)

முன்னங்கழிகாலையின்மாமறைமுற்றுமீசன்
பொன்னங்கழற்பூசைபுரிந்தருள்போற்றிமேவற்
கன்னந்துயில்வாவியதாகவசழ்ந்துதம்பேர்
மன்னும்படிசெய்ததுபல்லுயிர்வாழ்வதாக. (௨)

சிறைவண்டுகுடைந்தநறுந்துசட்செய்யமென்பூ
நறைவிண்டசெழுந்தடமீதுநயந்தமூழ்கிற்
கறைகொண்டுகெடிந்தயர்தீமைகரிந்துகாவற்
கிறைமுண்டகனம்புயச்செம்பதத்தெல்லைசேர்வார். (௩)

---

* வாதாயனம்-சாளரவாய்தல்.

திருமாலுருவாயவியாதனித்தீர்த்தமூழ்கிப்
பெருமாமறையாயதொகுத்தருள்பேணியுய்ந்தான்
குருமாமணிசிந்தியவித்தடங்கூடிமூழ்கித்
தருவார்நிழலுற்றவரெண்ணிலர்தாரைவேலோய். (௪)

என்றேமுனிநாரதனோதவிலங்குசெம்பொற்
குன்றேய்திரடோளணிகுங்குமக்கோதைவேலான்
வென்றேசறுமைம்பொறிவேதவியாதனென்பான்
நன்றேதருசெய்கைநவிற்றெனநல்குகின்றான். (௫)

வேறு.

பிள்ளைவெள்ளராவளையெனப்பிறைக்கதிர்பாயுங்
கள்ளறுமலர்ச்செஞ்சடைக் * கண்ணுதற்பெருமான்
றெள்ளுசீர்வலிக்காற்றிடைக்கறங்கெனத்திரிவு
கொள்ளநான்கெனுமுகங்கிருதாதியாக்குணித்தான். (௬)

அறிவுமாண்மையுமாசமுமாயுளுமற்றுங்
குறியுமாகியயுகமுதற்பெருகியேகுறைவுஞ்
செறியுமாதலிற் † றுவாபரமுற்றிடத்தெளிவும்
பொறியுமல்கியமக்கடாமருட்கையைப்புணர. (௭)

ஆயுமத்துணைப்பொருடருமாரணமனைத்துந்
[illegible]திரத்துணிவும்
வாயுமற்றைய நூல்களுமதிப்பதற்கரிதாய்க்
காயுமம்மரிற்கலங்கினர் ‡ காரணங்கரைவார். (௮)

கோதில்காரணமேதெனக்குறிப்பவரன்ன
மாதி § கோசமைந்தடைவினிற்றனித்தனியாகப்
பூதியாலுயர்காரணமாமெனப்புகன்று
ரேதிலாரதுவிதுவெனச்சூழ்ச்சியினிசைத்தே. (௯)

இரவிரித்தறிவுதவலாலிரவியே,யருந்தும்
புரவளித்தலாற்பாவக,னுயிர்க்கணம்புவனந்
தரவிரித்தலாலய,னவன்றன்னையுந்தரலா
லரவணைத்துயில்வானெனப்பிரித்தனரறைந்தார். (௧௦)

---

* சிவபெருமான் தம்முடைய [illegible]ற்றிற் கறங்குபோலச் சுழல நான்குயுகங்களைக் கிருதாதியாகக் குணித்தாரென்க. † இது ஆதிகற்பத்திற் றுவாபரயுகமென வறிக. ‡ காரணம்-நிமித்தகாரணம். § பஞ்சகோசங்கள் அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசமென்பன.

பரியிராசதஞ்சத்துவமுடைமையாற் * பகுதி,
யுரியகாரணம்புருடனேயென்னவுமுரைத்தா,
ரரியமெய்ப்பயனளந்தளந்தளித்தலாற்கருமந்,
தெரியினுமெனச்செப்பினரின்னணந்திகைத்தே. (௧௧)

புத்தர்சாக்கியர்முதலியோர்தந்திரம்புணர்ப்பார்
தத்தமக்குணர்வகையினாற் † சாதனஞ்சமைத்தார்
பித்தரிற்பலபேசியென்மறையெலாம்பேசு
மத்தனாகியபரசிவனுண்மையையயர்த்தார். (௧௨)

வழிமயக்குறவகுத்திடுஞ்சமயநூல்வழக்கா
லழிகுழப்பமோடறத்துறையடங்குதனோக்கிப்
பொழிமதத்துழாய்ப்புங்கவனயன்முதற்புலவோர்
பழியறத்திரண்டடைந்தனர்கயிலையின்பாங்கர். (௧௩)

பந்தநீங்கியபகவனைச்சராசரப்பயிர்க்கோர்
‡ கந்தமாகியகடவுளைக்சற்பனைகடந்தே
யந்தமாதியற்றமலவானந்தமாமமுதைச்
சிந்தைமாமறையாதியாற்றெளிவருந்தெளிவை. (௧௪)

பிறவிவெம்பிணிப் § பிடகனைப்பெரியவாட்டடங்க
ணறவமார்குழனங்கையோடமர்ந்தநாயகனை
மறவிதீர்ந்தவரமையமோர்ந்தடைந்தடிவாழ்த்தி
யறவவீங்கிதுகேளெனப்போற்றியேயறைவார். (௧௫)

காலவேற்றுமைவழக்கினான்மதிக்குறைசலந்து
ஞாலமீதுறையந்தணராதியோர்நயத்தின்
பாலதாமறையெண்ணிலவாதலிற்பயிலார்
சீலமோவினர்சாத்திரத்திறங்களுந்தெரியார். (௧௬)

மையன்மேவியவாய்மையாலுலகெலாம்வகுப்பான்
செய்யதாமரைச்செங்கணனயன்குணத்திசைக்கோன்
வெய்யபாவகன்முதலியதேவரைவிழைந்தா
ரையநின்புகழயர்த்தனரமலமென்றறியார். (௧௭)

நிலையழிந்ததிகாரநன்முறைமையுநீங்கி
மலையு o மோகமுமுலோபமு + மயக்கொடுவாய்ந்து
சலையிழந்தவிமகமுதற்கருமமுங்கழித்தார்
தலையுறும்பொருட்சிராத்தமுந்தவிர்ந்தனர்சழக்கால். (௧௮)

---

* பகுதி-மூலப்பிரகிருதி. † சாதனம்-சமயசாதனம். ‡ கந்தம்-மூலம்; என்றது வித்தை. § பிடகன்-வைத்தியன். o மோகம்-ஆசை. + மயக்கம்-மும்மயக்கம்.

மறையினூற்றியவவ்வியகவ்வியவழக்கா
ணிறையுமாற்றலேமவையிழந்தெங்ஙனநிலைப்பே
மிறைவநீபெருங்கருணையாலிரங்கியேயிடராங்
குறையினீக்கெனப்பணிந்திடப்பரனுளங்குழித்தே. (௧௯)

வனைதுழாய்மணிவண்ணனைநோக்கிநீமக்கட்
கினைவுதீர்தரமறையெலாந்தொகுத்தினிதெளிதாய்
நினையுமாறருள்வியாதனென்றொருபெயர்நீடத்
துனைவினுகுதிதுவாபரந்தொறுமிதுதுணிவே. (௨௰)

திசைமுகன்றனைநோக்கிநீமனுவெனத்திகழ்ந்தே
யிசைவுறும்பரி * சறத்தினையியற்றெனவிமையோர்
பசையறுந்தவத்தோர்தமைச்சாத்திரம்பயனு
னசைதரும்பழமொழியிவைநவிற்றுவீரெனவே. (௨௧)

இனியவாய்மொழியம்பியேவிடுத்தலுமீசன்
பனிகொடாமரைப்பதம்பணிந்தேகியேபாரின்
முனிவியாதனேமுதலியபடிவமாய்மொழிந்தார்
கனியநூற்றுறையடங்கலுங்கற்றவர்களிப்ப. (௨௨)

வல்லி † சத்தியவதியிடைவியாதனாய்மாலும்
புல்லியீசனதருளினான்மறையெலாம்புகலி
னெல்லையற்றனதொகுப்பதெவ்வாறெனவிரங்கி
நல்லியற்பெறுசாதனமறிந்திடானயந்தே. (௨௩)

தந்தையாகியபராசரன்றனக்கிதுசாற்றச்
சிந்தையோர்ச்சியிற்றெளிந்தவன்மறைவனஞ்சேர்ந்து
முந்தையோரெலாமுடித்தனர்நினைந்ததுமுயல்வா
னெந்தையேகுதிகடிதெனப்பணிந்தவனிசைந்தே. (௨௪)

அம்பிகாபதிக்கானந்தமகிழ்ச்சியேயளிக்கு
நம்பினார்க்கிருடீர்த்தருண்ஞானமேநயக்குஞ்
செம்பொனூர்மணிமாளிகைமறைவனஞ்சேர்ந்தே
யிம்பர்வானெனவிலங்கியவளமகிழ்ந்திறைஞ்சி. (௨௫)

---

* அறத்தினையியற்றென-தருமசாத்திரங்களைச் செய்யென்று. † சத்தியவதிக்கு மற்சகந்தி, யோசனகந்தி, பரிமளகந்தி எனவும் பெயர். இவள் வசுராசன்வீரியத்தால் மீன்வயிற்றிற் பிறந்து, பரதவர் வீட்டில்வளர்ந்து, பராசரமுனிவருக்கு வியாதரைப்பெற்றுச், சந்தனுவுக்குக் காமக்கிழத்தியாயிருந்தவள் எனவறிக.

மோகமீர்தர * யாத்திரையாற்றியேமுதலா
மேகநாயகனிணையடியிறைஞ்சி † நீரேற்று
மேகமார்மதிற்சினகரமேற்றிசைவிரிநீர்த்
தாகமீர்தடந்தொட்டதன்மேற்றிசைதன்னின். (௨௬)

அட்டமூர்த்தமாயலங்கியவிலிங்கமுமாற்றித்
தொட்டதன்றடந்தோய்ந்தபிடேகமுந்தொடக்கி
மட்டவிழ்ந்தநன்மலரினுற்பூசையும்வகுத்து
வட்டவார்சடைவரதனைத்தினந்தொறுமகிழ்ந்தான். (௨௭)

உள்ளவாவறும் ‡ வியாதனீரோடையின்மூழ்கி
வெள்ளவாரொளி § வியாதனதிலிங்கமும்விழைந்தோ
ரெள்ளமேவுமஞ்ஞானமீர்ந்திலங்குபேரறிவாய்த்
தெள்ளுமாறுயர்ந்தோங்குவர்தீவினைதீர்த்தே. (௨௮)

மல்குசீர்மறைவனத்திடைவாவியும்வகுத்துப்
பில்குகாதலினிலிங்கமும்பேணியாற்றுதலா
னல்குமோகவேரரிந்தகத்தோர்ச்சியொன்றருளா
னல்குமாறெழுந்துதித்திடக்குறித்திதுநவில்வான். (௨௯)

o பற்றதாநிலையிழந்தவர்பதிதர்பாசண்டர்
மற்றுமோதலான்வந்தவாலாமையினீங்கி
முற்றுமாரணமூழ்கிவேதாமிர்தமுதற்சீர்
பெற்றதாலதுதருமறைதொகுத்திடும்பேறே. (௩0)

படியினின்றெழுந்தேகிவேதாமிர்தம்பணிந்து
கடியுலாமலர்க்கூலத்திற்சங்கற்பங்கரைந்து
நொடியுமந்திரத்தோடறன்மூழ்கியேநோற்பார்க்
கடிகளாயவித்தியேசனதடிமலர்போற்றி. (௩௧)

கொழுதிவண்டினங்கூட்டுணுங்கொன்றையம்பசுந்தார்
விழுதினார்சடைவிமலனைப்போற்றிடமின்னு
லெழுதிவேய்ந்தபொற்சினகரத்தேய்ந்துமுன்பணிந்து
பழுதுதீர்தரவலஞ்செய்துமும்முறைபணிந்தே. (௩௨)

---

* யாத்திரை ஆறியாத்திரை. † நீரைப்பருகி முகில்கள் சூன்முதிருந் துணையும் படியுமதில். ‡ வியாதனீரோடை - வியாசதீர்த்தம். § வியாசலிங்கம். o இழந்தவரும், பதிதரும், பாசண்டரும், மற்றையரும், ஓதினமையால் உளதாகிய தோஷத்தினின்றும் வேதமுழுவதும் வேதாமிர்தத்திலே ஸ்நானஞ் செய்து நீங்கிப்பழைய சிறப்பைப் பெற்றனவன்றே, ஆதலால் அதுவே வேதங்களைத் தொகுத்துச் செய்யுமாற்றலையும் நமக்குத்தருமென்று கருதி. நிலை-ஆச்சிரமம். வாலாமை-அழுக்கு.

காணுமாசையாலுட்சென்றுகண்ணினீர்காலப்
பூணுமன்பிறுற்புதமலர்ச்சேவடிபோற்றி
வாணிலாவியவளரொளியிலிங்கமாய்வயங்கித்
தாணுமேவுறத்தாழ்ந்தனன்பன்முறைதரைமேல். (கஙூ)

வீழ்ந்தெழுந்தழன்மெழுகெனக்கரைந்தமெய்ப்புளகத்
தாழ்ந்தகங்குழைந்தமலநின்சேவடியடைந்தே
போழ்ந்தவிச்சைவெம்பொருப்பினைப்பொருவிலாமுதலாய்
வாழ்ந்துபோயினனெனப்பரிவாற்றுதிவகுப்பான். (கூச)

அறிவரியபேரொளியாயனந்தமாய்நித்தியமாயசலமாகிப்
பொறிமனங்கட்கெட்டாதபோதமாய்ப்பூரணமாய்ப் * புரணமாகிக்
குறிகுணங்களவைநீங்கிக்கோதிலாவருட்கருணைக்குன்றமாகும்
வெறிகமழுமலர்ப்பொழில்சூழ்வேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. ()

முன்னமறும்பரமாகிமுழுதுலகுந்தானேயாய்முதல்வனாகிப்
பின்னமறவவற்றவற்றிற்பிறங்கியவற்றியல்பாகிப்பிரிந்துநீங்கி
யன்னமுதற்கோசவடிவாயகன்றுபலவணுக்கட்காவியாகும்
வின்னிறையுமணிமாடவேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. (கூசு)

அலகில்சராசரமனைத்துமாக்கியளித்தழித்தடக்கியமலமாகி
யிலகுபரமானந்தப்பரவையதாயிதிற்றிவலையேய்ந்துவானோர்
குலவினிலைகளிகூரக்கொடுத்துமறைச்சிரத்தொளிருங்குகையாய்முற்றும்
விலகுமொளியால்விளக்கும்வேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. (கூஎ)

சிற்பரத்திற்றெளிந்தபரசிவமாகிச்சிதானந்தத்தேறலாகி
யற்புதமாயகிலமுந்தன்னிடத்தலங்கவயிக்கமிளிரமலமாகி
நிற்பனவுஞ்சரிப்பனவுநிகழ்த்தியெழில்வளர்சோதிநீலவாட்கண்
விற்புருவக்கொடியிடனும்வேதவனப்பதிகதியாய்விளங்குமன்றே. (கூஅ)

வேறு.

உருவருவுபயஞ்சார்ந்தமுக்கிரமுலகமாற்றுங்
கருவுளதிலதபாவங்கற்பனைபகுதியீசன்
பொருவறுபுருடன்மாயையணுவெனப்புனிதவேதந்
தெருமருமென்னில்வேதநாதநிற்றெளிவார்யாரே. (சக)

வேறு.

இன்னும்பலவாந்தோத்திரங்களியம்பிவேதவனத்தீசன்
பொன்னங்கழன்மேற்பணிந்து † சயபோற்றிபோற்றியெனப்போற்றப்
பின்னுஞ்சடையோன்வியாதனெதிர்பெறவேதோற்றிப்பெருந்தவத்தோய்
‡ முன்னந்தருவேமொழிதியெனமுருகார்முளரியடிபோற்றி. (சo)

---

* புரணம்-பிரகாசம். பதி-பசுபதி. கதி-மோக்ஷம். † சய-நம்மைப்பாதுகாக்கும் விஷயத்திற் சர்வோத்தமனுயிரு. ‡ முன்னம்-குறிப்பு.

அருளாற்பெரியோய்வரமெளியேற்களித்தியாயினகத்தாகு
மிருளாசகற்றிப்புனிதமறையெல்லாந்தொகுத்தற்கியல்பாய
தெருளார்ந்திலங்குசங்கற்பசித்திமேவச்செய்தியெனப்
பொருளாமீசன்கரந்தலேமேற்பொலிவித்தருளிப்போயினனே. (௪௧)

கரந்தவீசன்றனைப்போற்றிக்காதலோடுமினிதமரச்
சுரந்தவருளான்முழுதுணர்ச்சிதோற்றவேதந்தொகுத்துலகத்
தரந்தைதீரநான்குவகையாக்கியரியபொருளனைத்தும்
புரந்துதமையப்பயில்வித்தானறவோர்க்குலகம்பொலிதரவே. (௪௨)

ஆதியிருக்குப்பயிலவனுக்கருளிவைசம்பாயனனுக்
கோதுமிரண்டாந்தைத்திரியமுதவிச்சாமஞ்சயிமினிக்குக்
கோதுதீரக்கொடுத்தனந்தங்குலவுபுராணம்பதினெட்டாய்ப்
பாதுகாத்துப்பகுத்தவற்றைச்சூதற்களித்தான்பரிவினொடும். (௪௩)

வேறு.

மாலினீங்கியேயுயிர்த்தொகையின்பமேமருவப்
பாலினாகியநூலெலாந்தொகுத்தருள்பரப்பிக்
கோலியேயுலகளித்தனன்வியாதனுங்குளிர்நீர்
வாலிதாயவேதாமிர்தம்படிந்தெழுவரத்தால். (௪௪)

இனியநீர்தருபுனிதவேதாமிர்தமேய்ந்து
முனிவியாதனுமுதுக்குறைமேவினன்மூழ்கு
மனிதர்போதமுமாயுளுமேவியேவாழ்வார்
வனிதைபாகனுமகிழ்ந்துநல்வரமெலாம்வழங்கும். (௪௫)

சீதநீர்மதிச்செஞ்சடைச்சிவனருள்சேர்ந்து
பூதனாகியவிரிஞ்சனுமனுவெனப்போந்து
வேதகானனத்தியாத்திரையாறையும்விளைத்து
நாதனீரடிபணிந்தபின்னுளத்துறநயந்தே. (௪௬)

செய்ய * பானுவின்சிவகுறிக்கிருசதஞ்சேர்ந்த
வெய்யும்விற்கிடையிலங்குமீசானதிக்கேய்ந்தார்
வெய்யதீவினைவீட்டிடமேதகு † வாவி
மையறீர்தரவகுத்ததின்மூழ்கினன்மனுவால். (௪௭)

அகழ்ந்ததீர்த்தத்தினனுதினமாடியவரத்தாற்
றிகழ்ந்தவிப் ‡ பதிசிறப்பினாற்றெளிவுளத்தேய்ந்து
புகழ்ந்துமாதவர்போற்றிடமிருதியும்புனைந்தே
மகிழ்ந்துமேவினன்மனுவெனவையகம்வாழ்த்த. (௪௮)

---

* பானுவின் சிவகுறி-பாற்கரேசலிங்கம். † வாவி-மனுதீர்த்தம். ‡ பதி-பசுபதி.

நீதிநூற்றுறைநிகழ்த்தியநிறைமதிமனுவின்
போதநூற்றியதடம்புரிந்தாடினர்புகராங்
கோதினூற்றியவினையொழித்தறநெறிகூடிச்
சோதிவேதனதுலகிடையின்பமேதுய்ப்பார். (சகூ)

வேறு

அளவாவேதந்தொகுத்ததனால்*வேதவியாசனும்பெயரு
முளதாயுயர்ந்தான் மனுவெனநூலுலகத்திலங்கமனுவுயர்ந்தான்
வளமார்ந்திலங்குமிக்காதைபடிப்பார்கேட்பார்மலரோனுந்
துளவார்மாலுமறியாதசோதிதுணைத்தாடுறவாரே. (ருo)

வேறு.

விரையார்மென்பூவேதாவமிர்தத், துரைசால்காதையொளிவேலுரவோன்,
கரைவாயுணரக்கனிநாரதனுந், தரைவாய்பரவத்தகைசாற்றினனே. (ருக)

வேதாமிர்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,கூoரு.

---

# பிரமதீர்த்தச்சருக்கம்.

கோடியன்மறைசைமேன்மைகுழைந்துளங்கோதினீங்கி
நீடியவருளின்மேவநிகழ்த்தியநெறியின்மிக்கோய்
பீடியல்பிரமதீர்த்தம்பிரமவீசன்சீர்பேணித்
தேடியதவமேயன்னுயருளெனச்செப்புகின்றான். (க)

† மடங்கலானழிந்தயாவும்வரன்முறைவகுத்துவேதா
வடங்கலுந்தத்தமாற்றினணிபெறவமைத்தநாளிற்
படங்கிளர்பரவையல்குற்பணிமொழிப்பவளச்செவ்வாய்
விடங்கெழுகரியவேற்கண்மெல்லியற்சாயன்மிக்காள். (உ)

---

* வேதவியாசன்-வேதத்தைப் பிரித்தவன். வியாசம்-பிரித்தல். † மடங்கல்-ஊழித்தீ.

உருவெழில்வனப்புவாய்ந்தவொருத்தியைத்தருவானெண்ணிப்
பெருகியவுலகின்மாந்தர்பிறங்கெழில்வேறுவேறு
மருவியவழக்கிற்காமர்மலிந்தன*திலத்தின்வாங்கித்
திருவினுமுருவமிக்குத்திகழ்தரச்சிறப்பிற்செய்தான். (௫)

வீங்கெழில்வனப்பின்மேன்மைவேய்ந்தனவேறுவாங்கித்
தேங்கமழ்குமுதச்செவ்வாய்த்திலோத்தமைதிகழுஞ்சாய
லோங்கெழிற்காமவல்லியொளிசெயுமுருவநோக்கிப்
பூங்கணைகுளிப்பநெஞ்சம்புழுங்கினன்பூவின்மேலான். (௬)

பஞ்சியிற்படருந்தீயிற்படர்ந்துயிர்பருகிப்போத
மெஞ்சிடக்குழைந்துதீயின்மெழுகெனவியைந்துவேட்கை
வஞ்சியிற்செவ்விவாய்ந்துவயங்கியமாதின்பாதங்
குஞ்சியிற்கொள்ளவெண்ணவஞ்சிமென்கொடியினெல்கி. (௭)

செய்யமென்கமலப்போதிற்சீறடிசேப்பச்செம்பொற்
பையராமணியிற்செய்தபரிபுரமிழற்றவோட
மையலோடுள்ளமாழாந்தெழுந்தவன்வலிதுபற்ற
வெய்யவெம்முலையாடேன்சோர்மென்மொழிமிழற்றுகின்றாள். (௮)

அத்தனீயெனக்குநின்போலறத்தினையளிக்குநீரா
ரித்திறநினையாரேசாமென்னவுமிரங்கியோரான்
புத்தமுதன்னசாயற்பூவைநின்புணர்மென்கொங்கை
முத்தமார்பழுந்தாதாயின்முடிந்திடுமாவியென்றே. (௯)

தோள்களால்வலிந்துபற்றித்தொண்டையங்குமுதச்செவ்வாய்
வாளமர்விழிகளோடிமறிதரமாந்திமார்பிற்
றாளமார்முகமென்கொங்கைதழும்புறவணைத்துக்காம
மூளுமாமுயங்கியின்பக்கடலிடைமூழ்கினானே. (௧௦)

முதிர்பெருங்காதல்கூரமுயங்கினன்முகந்துமூசி
யதிர்கடலமிழ்தம்போலுமணங்கினையலங்குமார்பப்
பிதிர்சுணங்கரும்புங்கொங்கைபிணைவிழிசேப்பப்பெட்பாற்
கதிரிளந்தளிரின்மேனி†கவின்செயக்கலந்துநீங்கா. (௧௧)

---

* திலம்-எள்ளு. ஆடுமேகமேக்களிலே ஒவ்வோரங்கங்களே சிறந்திருந்தமையின், அனைத்தங்கங்களும் சிறந்திருக்குமாறு உத்தமவங்கங்களுள்ளும்உத்தமோத்தமமாய் எட்பிரமாணமாயுள்ள அழகுகளை எடுத்தாரென்பதாம். அதுபற்றியே இவட்குத் திலோத்தமை என்னுங் காரணக் குறியுளதாயிற் றென்க. † கவின் ஈண்டுப்புணர்ச்சியினாலாயதோர் புத்தழகு. அதைவருஞ் செய்யுளான் விளக்குப.

கரியமென்கூந்தல்சோரக்கலைமதியமுதங்கான்ற
புரிவுறமுகத்தின்வேர்வைபொலிதரப்புளகம்பூப்ப
வரிமதர்நெடுங்கணச்சத்தலமரவாரஞ்சோரத்
தெரிதரநாணிக்காந்திதிருமுகஞ்சிறிதுகோட்டி. (சo)

ஊதையினிசைந்தவல்லியொப்பநின்றசையுமொண்பூங்
கோதையைக்குளிரநோக்கிக்குவிமுலைக்குமுதச்செவ்வாய்
மாதையான்மணந்தவின்பம்வாயுமேவானோர்க்கென்று
தாதைமுன்னையிற்சிட்டிக்கச்சத்தியற்றடங்கிற்றன்றே. (சக)

பெற்றநன்மகடன்சாயற்பெருநலனுகர்ந்தவாற்று
லற்றறிவடங்கிமூடமாகியேயவலங்கூர்ந்து
மற்றிதற்கென்கொல்சார்ந்தியெனவவன்மதித்துமுன்னுங்
கற்றனன்சிருட்டிவேதவனத்தெனக்கருத்திற்கொண்டான். (சஉ)

தெளிதருசிருட்டிமேவித்தீவினைசிதையமாற்றி
யொளியுறுமாறுவேதவனமெனவுணர்ச்சியோங்கி
* முளியரிற்பெயலிற்றோன்றமுளரியானெழுந்துமூசுங்
களியளிகமலமேயுங்கடிமறைக்கானஞ்சேர்ந்தான். (சங)

சேர்ந்தியாத்திரையோராறுந்திகழ்தரவாற்றித்தீமை
சோர்ந்திடவிலிங்கமாற்றத்தூயநல்லோரைசேர
வார்ந்தொளிரிலிங்கமாற்றிவனப்புறும்பூசையாற்றற்
கோர்ந்தனன்றடமொன்றங்கணீசனுக்காட்டற்கம்மா. (சச)

† காற்றொளிரிலிங்கமேல்பாற்கதிதருமிலிங்கமாற்றிப்
போற்றியதயிர்நெய்யான்பால்புரிந்தவைந்தமுதம்பூர்தே
னூற்றியநறைமென்போதுபைந்தொடையொழுகுரு‡துப்பா
லாற்றியகறியினோடுமோதனமளித்துப்பின்னும். (சரு)

மணங்கமழ்தூபதீபமகிழ்ந்தளித்தடைக்காயீந்து
பணங்கிளர்மணியிற்செய்தபணிபரிவட்டஞ்சாத்திக்
குணங்கெழு§துரியமாற்றிக்குழைதருமன்பினோடு
மணங்கமர்பாகத்தண்ணலடியிணையகத்தினுக்கி. (சசு)

கனிவொடும்பலநாட்பூசைகருத்துறவாற்றிப்போற்றிப்
பனிதருதீர்த்தமுற்றும்படிந்தரன்பாதம்போற்றித்
துனியுறுதீமைநீங்கித்தோற்றமார்தொழிலுமேவி
யினிதெனவிருக்கைமேவியின்பமுற்றமர்ந்தானன்றே. (சஎ)

---

* முளியரிற்குப் பெயல்போல உணர்ச்சியோங்கித் தோன்ற எனமுடிக்க. முளிதல்-காய்தல். அரில்-சிறுதூறு. † வாயுவிலிங்கத்துக்கு மேற்குத்திக்கில். ‡ துப்பு-நெய். § துரியத்தானத்தில் யோசித்து.

அண்ணன் மாமலரோன்வாவிபடிந்தவனிலிங்கம்போற்றின்
வண்ணமார்பரதாரத்தைமணந்தவப்பாவமாதி
யெண்ணிலவகலுமெல்லாவின்பமுமேய்வரீறில்
பண்ணவன்வேதநாதன்பதமலர்பணிந்துபோற்றி. (௧௭)

பிரமயாத்திரையின்மேவிப்பிரமதீர்த்தத்தின்மூழ்கி
வரமுறுபிரமலிங்கம்பணிந்திடின்வலியமாயை
யுரமறஞானமேவியுவப்பர்சோமகனைப்போலப்
பரமமாய்ப்பிரமகத்தியாதியபாவம்வீழ்த்தே. (௧௮)

வேறு.

என்றவனியம்பவெரிமுகங்காலுமிலங்கிலையலங்கல்வேலேந்துங்
குன்றெனநிமிர்ந்துகுலவியதிணிதோட்கோமகன்கொழுமடற்செழுந்தேன்
மன்றன்மாமலரோன்மகன்முகநோக்கிவல்வினைச்சோமகன்மறையோற்
கொன்றதுமவன்றன்கொள்கையுங்குறியுங்கூறெனமுனிவரன்கூறும். (௨0)

குளிரிளந்தென்றல்குறுநடைபயிலுங்குருமலர்த்தருநிறைவாவித்
தளிர்மணங்கமழுஞ்சந்தனப்பொதும்பர்த்தமிழநன்னாட்டுவான்றடவு
மொளிர்மனைப்பிரமபுரியெனவோங்குமுயர்பதியதனிடையோம
நளிர்புகைமாந்திநகைமதிமறுவாம்*ஞாயிறுமப்புகைநடுவாம். (௨௧)

அப்புரியமர்வோன்சோமகனெனும்பேரந்தணனருவினைச்செயலா
லொப்பிலானிளமையுற்றநாட்டொடங்கியுறும்பொருள்வேசைகட்குதவிச்
செப்பிளமுலைமேற்படிந்தவர்கலவித்தேறலைமாந்திவெஞ்செருக்கா
லிப்புவிமறந்துன்மத்தனுய்மயங்கியிருவகைக்குரவர்தம்பொருளும். (௨௨)

போகம்விற்றுதவும்பொருட்பசைமடவார்பொருட்டளித்தவசமாய்ப்புணரு
மோகமுற்றுழன்றுன்முடிந்தனபொருளுமுகிழ்முலையவர்களுமுனிந்தா
ராகம்விற்றுதவற்காயினருகியவரடித்தகற்றவுமகலான்
† மோகமுற்றிரங்காத்தன்மையான்மத்தர்தாங்கினன்பித்தரிற்றளர்ந்தான். ()

ஆங்குநின்றெழுந்தேயவனிமேற்படர்ந்தா§னடவிநின்றடவிவாயடைந்தான்
றீங்குருவாயசோமகனொருகாற்சிரித்திடுந்திகைத்தழுமொருகாற்
பாங்குறவோடும்பதைத்துடன்பார்க்கும்பருவிழிபிறழநின்றயருந்
தூங்குமோரிடையிற்றுளைந்திடுநீரிற்சொல்லருந்தொழில்பலபுரியும். (௨௪)

*அப்புகையாண்டும் பரந்திருத்தலாற் சூரியன் எஞ்ஞான்றும் அப்புகை மத்தியிற் சஞ்சரிப்பான் என்க. † அப்பொருட்பெண்டிர் தன்னிடத்துத் தாகங்கொண்டிரங்காத தன்மையினால். § ஓர் காட்டினின்று மற்றோர்காட்டை யடைந்தான்.

இன்னணம்வெறிகொண்டியங்குவாளுெருநாளிணர்த்தருநீழலிற்றுயிலும்
பன்னயமுணர்ந்துபசையுடன்மூத்தபனவனைப்படர்வனத்திடையின்
முன்னமுற்றதுகண்டவன்றலைமுடியின்முடிவுறச்சிலையினைமுரணூர்
தன்னதுவலியாலிடவவன்பதைத்துத்தணந்தனனுருயிர்தளர்ந்தே. (உரு)

முடிதலும்பிரமசத்தியொன்றெழுந்துமுனிவொடுமுழங்கழல்போலக்
கடிதெதிர்ந்தடரக்கருதியேவெருவிக்கலக்கமுற்றலக்கணுற்கரைய
வடிவொடுமிவனைத்தொடர்ந்தலைத்துருத்துமற்றவர்கண்ணுருதாகக்
கொடியசோமகனுங்குலைந்தலைந்தழுதுகூப்பிடுங்கோவெனக்குழறும். (உ௬)

கண்டுயில்காலையெதிர்ந்துடன்கதுவக்கண்விழித்தழுதயலோட
வுண்டுயிர்பருகற்குருத்தடிதொடருமுறுக்கிடுமொருதலையாக
விண்டுருதிவ்வாறலைத்திடப்பயத்தால்விரகறவெங்கணுமுழல்வான்
பண்டுசெய்தவத்தான்மறைவனத்தடைந்துபல்லிடைப்பயில்பவனெருநாள்.

முகையவிழ்ந்தளிகண்முரன்றுபாண்மிழற்றுமுரிதிரைப்பிரமதீர்த்தத்திற்
றகையுறப்படியும்பனவர்தம்மருகிற்சார்ந்துறுங்களியினுற்குவி
நகைவிரித்திலயநவிற்றிடுமோடுநடித்திடுமிவன்றனைநாடி
மிகையுறுநீசனிவனெனவருகுமேவலைபோதியென்றுரைப்ப. (உ௭)

அருகுருதெழுதிபோதியென்றுரைக்குமவர்தமையயர்மயக்கடைந்தோன்
றிருகுவெஞ்சினத்தானருகுறவவருஞ்செங்கையஞ்சலிப்புனல்சிறியோன்
வெருவுறவவன்மேல்வீசிடமெய்யின்விழுப்புனல்படுதலு*மிருதி
மருவிநற்போதம்வயங்கிடமோகமயக்கினைவழக்கறமாற்றி. (உ௯)

சினத்தடர்ந்தெதிரும்பிரமசத்தியினிற்றீர்ந்தனன்றெரிந்ததுகாணுன்
மனத்துறுமகிழ்வாலித்தலையாதோமற்றிவர்யாவரோயாணுர்
கனத்துயரெங்ஙன்கழிந்ததென்ருயுங்காலையிற்போதமொன்றுதிப்ப
வனத்துறையலங்குந்தீர்த்தமீதமலமாமெனவருளினுலறிந்தான். (௩0)

புனையுமித்தீர்த்தம்புண்ணியப்பொருளாம்புனிதமாம்பூசுரர்தூவும்
நனையுநீர்த்துவன்மோகமுமாற்றிநலிதரும்பிரமசத்தியுமாய்ந்
தினையுமாறகற்றியிலங்கியபோதமீதலாலிதன்கரைமேவி
நினையுமாறடைந்ததமியனிற்றவத்தானீடினர்நிலத்திலையென்றுன். (௩௧)

முற்செயுந்தருமந்தவம்பயனுதவமுகிழ்த்ததான்முழங்குதெண்டிரைசூழ்ந்
தெற்படுதீர்த்தமெய்தியதினியாணியன்மறைவிதியினுலீதிற்
பொற்புறப்படிதல்பொருளெனக்கொண்டுபுகன்றுசங்கற்பமும்படிந்து
நற்புனனியதிநயந்தவன்பிரமநாதனைநசையொடும்போற்றி. (௩௨)

* மிருதிமருவி-பழையஞாபகம்வரப்பெற்று.

அஞ்சலியோடமமர்ந்திடப்போதமலங்கிநற்றுறவின்மேலார்வ
நெஞ்சகநிறையவமலமாயுறையுநிலையெவராலெனநினைவான்
றஞ்செனப்பிரமநாதனைப்பணியுந்தவமுனிபுலத்தியன்றன்பொற்
கஞ்சநற்றுளேதுணையெனப்பணிந்துகரைந்துளங்காதலிற்பகர்வான். (௩௩)

தோற்றமிங்கிதனின்மருவுறுமரணச்சுடிகையம்பாந்தள்வாய்ச்சுழல்வேற்
கேற்றநீகலுழனுவதேயன்றியிரங்கியீங்கருள்பவரிலையா
லாற்றவும்பிறந்தைக்கஞ்சிநின்றயர்வேனருந்துயர்ப்பிறவிவேரகற்றி
மாற்றிநீயுபாயம்வழங்கெனவிழிநீர்வழிதரக்குழைவொடும்வணங்க. (௩௪)

குறும்புமூன்றகற்றுங்கோதிலாமுனிவன்சோமகன்குறிப்பெலாமுணர்ந்து
பெறும்பதமளித்தபிரமதீர்த்தத்தின்பெருமையைநினைந்தவன்பேண
வுறும்*பவந்தீர்க்குமுறுதிமெய்ஞ்ஞானவுண்மையேயுவரிவெண்டிரைபோ
லறம்பலவினையாலரியதாமுத்தியறைந்தமெய்ஞ்ஞானமுமறியின். (௩௫)

மேதகுவேதசிரத்தினைத்தெளியின்†மெய்ம்மையாமப்பொருள்விளைந்தா
ரேதமதகன்றுபரமமாயுறைவரச்சிரத்தியற்கையாராயு
மூதறிவிலாதார்பிரமதீர்த்தத்துமூழ்கிடின்மொழிந்தமெய்ஞ்ஞானப்
போதமாமென்னப்புலத்தியன்புகலச்சோமகன்போற்றியேபுகல்வான். (௩௬)

கொழுமடற்கமலப்பிரமதீர்த்தத்துக்குளிர்புனற்குலவியான்படியத்
தழுவியவினைகள்சரிந்தன § தமத்தைத்தவிர்ந்துளந்தற்பரமுணர்வான்
விழுமியதுறவேவிரும்பியதுடலும்வெறுத்ததுவினைப்பிறப்பொழிப்பான்
பழுதறுஞானம்பரிந்தருளென்னப்பங்கயத்தவன்மகன்பகர்வான். (௩௭)

வருணவாச்சிரமத்தொழிற்பயனென்புமகமுதற்கருமநற்பயனைத்
தருபவனுகிமுழுதுணர்ந்தழியாத்தலைவனுய்ச்சகலமுமியற்றி
திருமலனுகிநினைந்ததுமுடிக்குநித்தனுய்ப் ○ பழுதில்சங்கற்ப
மருவினனுகியமலவானந்தவடிவமாய்வயங்குபூரணமாய். (௩௮)

குறிகுணமகன்றவசலமாயவத்தைக்கூட்டமும்பிரிவுமற்றவற்றை
யறிபவனுகியகிலமுந்தோற்றியழிந்திடவதற்கிடமாகிச்
செறிவுறுமீசனொருவனுண்டென்றுதேறியிவ்வுலகெலாந்தெளியிற்
பொறிமுதற்சிறையுமச்சமுமவற்குப்புணர்ந்திடாதெனவறிபுரிந்தே. (௩௯)

சொற்றருமவனேநானெனப்பேதத்துகளறவேகமாய்த்துணியி
னற்றதுபிறப்புமமலவானந்தமாமுயிரென்றிடவறவோய்
பற்றறநிறைந்தபரஞ்சுடராயபரனொடுபசிமுதற்பிறவி
யுற்றயர்ந்தழலுமுயிரினுக்கேகமுறுவதெவ்வாறெனவுரைப்பான். (௪0)

---

* பிறவியைத்தீர்க்குமுறுதிப்பொருள் மெய்ஞ்ஞானமுடைமையே; சமுத்திரமுந்திரையும்போலும் அறங்களுங் கிரியைகளும் முத்திசாதனமன்று. † மெய்ஞ்ஞானம் உற்பத்தியாம். § தமம்-அந்தகாரம்; என்றது ஈண்டுஞ் ஞானத்தை. ○ பழுதில்சங்கற்பம்-சத்தியசங்கற்பம்.

தோற்றமுமழிவும்பெருக்கமுஞ்சுருக்கந்துன்னலுந்தூலமாமுடற்கே,
யாற்றியசெவிமுதலியபொறிகட், கழிபசிதாகமேயாதி
சாற்றியல்பிராணற், கிச்சையுமுவர்ப்புங்கருதியதியற்றலுமனத்துக்,
கேற்றநற் * போகமருத்துதல்செய்வோனியல்பிதுமதிக்கெனவிசைப்பர். ()

அறிவறியாமைபந்தமுத்திகடாமா † ருயிர்ப்போலியின்பாலா
நெறிதருகுணியுங்குணங்களுமவத்தைநிலைகளும்விளக்கியேநீங்கிக்
குறியுறுமிவற்றின்றோற்றமுமழிவுங்குலவியசெலவொடுபிரிவுஞ்
செறிவுறக்கரியாய்ச்சச்சிதானந்தத்தெளிவுயிரங்கதேசிவமாம். (௬௨)

ஆய்ந்தவையுசாவினவற்றவற்றியல்பையீற்றினுக்காற்றியேயான்மா
வேய்ந்திடாதிவையென்றுண்மையையுணரவீசனுயிருடருமயக்காற்
றேய்ந்துடலாதியானெனவவற்றின்றொழிலினைமேற்கொளிற்றோற்றி
மாய்ந்திடுமிவற்றைவிடுத்திடிற்சிவமாய்வயங்கிடுமாயையினகன்றே. (௬௩)

ஒருமுதற்னேமாயையின்விகற்பாலுயிர்பரமுலகமாயொளிருந்
‡ தருகனவதனிற்றன்பலவாயதன்மையிற்சார்தருநனவின்
வருமவையசத்தாமாறெனப்போதமருவிடிற்சிவமலதில்லையாற்
கருதிடிற்காலமூன்றினும்பந்தங்கலந்திடான்கரியெனக்காணும். (௬௪)

போதமாயமலப்பொருளதாயென்றும்புணர்ந்திடுமயக்கினாற்கோசு
மீதியானென்னவிரும்பிடுமொருகால்விடுத்தவைவிரவுதீர்த்தத்தால்
வேதமோர்குரவன்வியஞ்மொழியதனால்விமலமாய்வேறறவிளங்கு
நாதனாயின்பநலம்பொலிந்திலங்குமென்றிடச்சோமகனவில்வான். (௬௫)

குரவனதருளாற்கோதறப்பிரமங்கூடுதலுண்மையாந்தீர்த்தம்
வரமிகப்புரியுமாறெவனென்னமனத்துநீயனுபவம்வாய்ந்து
விரவியநெறியினையமேதழுக்குவிடுத்துநீவிமலமாய்விளங்கும்
பரமமாயினையாற்பிரமதீர்த்தத்துப்படிதலாலெனத்துரைபலித்தே. (௬௬)

வேறு.

பிருகுவருணன்யாக்கியவற்கியனேபேசுமவன் § மனையா
ருருகுநாசிகேதுமுதலுரவோர்வேதநதிமூழ்கிப்
பருகுமின்பப்பரமானார்பகர்காசிபன்றேவலனுதி
குருகுபாயுமணிகன்னி,வணிகர்கோடிகுறித்துயர்ந்தார். (௬௭)

---

* போகமருந்துவோன்-போத்தா, அருத்துதல செய்வோன் - கருத்தா, என்னுமிரண்டும் புத்திக்குரியவை. போத்தா-அநுபவிப்பன்; சீவான்மா. கருத்தா-செய்பவன்; பரமான்மா. † உயிர்ப்போலி-சிதாபாசன் .‡ சொப்பனப்பிரபஞ்சம் நனவிற் பொய்யாதல்போல மெய்ஞ்ஞானமுதிக்கச் சிவமல்லது பிறிதில்லை. § மனையாரென்றது கார்க்கியும் மயித்திரேயியுமாகிய இருவரையும். வணிகரென்றது வசுதேவன், சுதேவனென் னு மிருவைசியர்களையும். இவர்கோடி தீர்த்தத்தினாலே மேம்பட்டார்கள்.

இன்னும்பலதீர்த்தத்தினிடையேய்ந்துதிகழ்ந்தாரிழிபாக
மன்னுமையம்விடுதியெனுமகிழ்ந்தேயருளிப்புலத்தியனுந்
தன்னதிருப்பிற்சார்ந்தனனுற்றருமப்பிரமதீர்த்தத்தை
முன்னம்பணிந்துசோமகனுமுதலாம்பிரமேசனைப்போற்றி. (சஅ)

இன்பப்பரமாய்முத்திநிலேயேய்ந்துபழுத்தவினையளவும்
வன்புற்றமர்ந்தேபிறவியினைமாய்த்தான்பிரமமலர்வாவி
துன்பக்கொடியவினையனைத்துந்தொலேத்தேபிரமஞ்சோமகனுக்
கன்புற்றளித்தவண்ணமுமங்கவரோன்செயலுமறைந்தனமே. (சக)

வேறு.

பிரமதீர்த்தப்பெருங்கதைபேசுவார், பரவுவாரவர்பாவம்பரிந்தர,
* விரவுதீர்த்திடவின்புற்றிலங்கியே, பரமமாயபதத்தினைப்பற்றுவார். (ருo)

* இரவு-இருள்; என்றது ஈண்டஞ்ஞானத்தை.

பிரமதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ,கூருரு.

---

# அஞ்சுமான்றீர்த்தச்சருக்கம்.

பிஞ்சுமாமதியஞ்சூடும்பிஞ்ஞகனருளேபேணு
மஞ்சுமான்றீர்த்தமேன்மையறைகுவன்கேணீயிஞ்சி
மஞ்சுதோயயோத்திமேயமன்னவன்மருவார்போரி
லஞ்சுசீர்விறலோன்மாந்தர்க்கருளினலன்னைபோல்வான். (க)

இருங்கடலுலகமெல்லாமெதிரெறிந்தளித்துமாற்றார்
நெருங்கடன்முருங்கச்சீறிநிணங்கமழ்ந்தணங்குநாறுங்
கருங்கைவெண்களிற்றானன்னகாவலன் † கடுவினேடு
மொருங்குதாய்வயிற்றின்மேவிச்சகரனென்றேங்கும்பேரான். (உ)

† இச்சகரன் பிதா அசிதன் என்பவன். இவ்வசிதனுக்கு மனைவியர் இருவருளர். இவன், சந்திரகுலத்துக் கேகயராசன் வந்தெதிர்க்கவே, அபசெயமடைந்து, அரசிழந்து, நாட்டைவிட்டு, மனைவியரோடும் மந்திரிகளோடும் காட்டிற்போய்ப் பார்க்கவசவனரென்னும் பிருகுமுனிவரது ஆச்சிரமத்திற் சிலகாலமிருந்தான். இருக்கும்போது அம்மனைவியரிருவரும் ஒருங்கு கருப்பவதிகளாயினர். இவருள் மூத்தாளாகிய காளிந்தியென்னும் மனைவியின் சிசுமரிக்கும் பொருட்டு,இளையாள் அவட்கு நஞ்சூட்டினள். அந்நஞ்சு, அப்பிருகு முனிவரதநுக்கிரகத்தாற் சிசுவையுந்தாயையுங்கொல்லாதுகருப்பத்துடனிருந்து,காலமுதிர்ந்து பிறக்கும்போது பிள்ளையுடன் பிறந்தது. அக்காரண

த்தால் அப்பிள்ளைக்குச் சகரன் என்னும் நாமதேயம் உளதாயிற்று. இதுபற்றியே, கடுவினோடு மொருங்குதாய்வற்றின்மேவிச்சகரனென்றோங்கும் பேரான் என்றார். கரம்-நஞ்சு. கரத்தோடு கூடப்பிறந்தவன் சகரன். இச்சகரன், தந்தையாகிய அசிதன் காட்டின்கணிறப்பவே, பிருகு முனிவராலும் மந்திரிகளாலும் க்ஷத்திரிய தருமங்களெலாற்றினும் அதிசாமர்த்தியமுடையவனாகித் தன்பகைவனாகிய கேகயராசனைவென்று தன்னரசை மீட்டான். இச்சரித்திரத்தை வான்மீகராமாயணத்திற் காண்க.

ஆடல்வெம்பரிமா * மன்னற்கணிநலஞ்சுமக்கலாற்று
வேடவிழ்மலர்மென்கூந்தன்மடந்தையரிருவர்தம்மு
ளோடரித்தடங்கணங்கையொருத்திபாலுலவாத்தீமை
நீடசமஞ்சசன்றானுதித்தறநீத்துநாளும். (௫)

குறுநடைப் † புதல்வர்தம்மைக்குளமுதற்கொடுத்துவஞ்சித்
துறுதிரைச்சரயுவீழ்த்தங்குடறுடித்துலப்பநோக்கிக்
குறுநகைவிளைக்குஞ்செய்கைகொற்றவனோர்ந்துமாய்ப்ப
விறுமசமஞ்சசற்கன்றேந்திழைகருப்பமேய்ந்தாள். (௬)

சிற்றுதரத்து ‡ மற்றைத்தேவிபாற்கருப்பஞ்செவ்வூன்.
வெற்றுயிர்ப்பிண்டமாயோர்விதியினால்வீழநோக்கி
மற்றதுதன்னைவேறுவகைரந்தைகத்தயுதமாறு
பெற்றநற்பிண்டமாக்கித்தனித்தனிகுடத்திற்பெய்தே. (௭)

அரியமந்திரநீர்தூவியருந்தகிகேள்வனுக்கப்
புரிவலிமொய்ம்பின்மிக்கார்பொருதிறற்புரையிலாதார்
தெரிதருமயுதமாறுசேர்ந்தவர்திருமாலென்னப்
பரிகரிபனைத்தேர்சாபவேதத்திற்பயிற்சிமிக்கார். (௮)

தும்பையந்தொடையன்மைந்தர்சூழ்தரத்தோற்றமேவி
வெம்புவெங்கிரணபானுநடுப்பகல்விளக்கமேபோ
லம்புவியொருவனாகவளித்தவன்மனுடானந்த
நம்பறத்துறக்கத்தின்பநயந்துவாழுநாதனுவான். (௯)

கொய்யுளைப்பரிமாமேதமாயிரங்குறித்துக்கோலத்
தையவித்துபங்காட்டிநெற்றியினம்பொற்பட்ட
மையறவீரவாற்றல்வரித்துமாநிலமீதேவி
வெய்யமாவினைக்காத்தோம்பமைந்தரைவிடுத்துவேந்தன். (௧௰)

---

* ஈண்டு மன்னனென்றது சகரனை. † சிறுவர்களை வெல்லம் முதலியவைகளைக் கொடுத்து வஞ்சித்தழைத்துக் கொடுசென்று சரயுநதியில் வீழ்த்தி. ‡ மற்றைத்தேவி என்றது சகரனுடைய இரண்டாம் மனைவியை. அவைத்தல்-அரிதல். அயுதமாறு-அறுபதினாயிரம்.

* ஊனமொன்றுய நூறுவேள்வியுமுனுற்றியொன்றும்
வானகமகிழவாற்றமாவிடமகவான்மாயந்
தானமர்ந்துருவமாற்றித்தன்னரசழியாவண்ணம்
† பானனன்மாவைச்சோரப்பான்மையாற்கவர்ந்துபற்றி. (௯)

காதலற்றமலமாயபொருளினைக்கருத்துளாக்கிப்
பாதலத்தமரு ‡ மாயன்படிவமாங்கபிலன்பாங்கிற்
றூதலர்த்தியமென்போதாரிருக்கையிற்பிணித்துத்தான்போய்
மீதலத்தமர்ந்தானுக்கம்விழைந்துவான்மேயகோமான். (௧௦)

அடிச்சுவடாய்ந்துபின்சென்றறுபதாயிரவராய்ந்தும்
படித்தலைமுற்றுங்காணூர்பாதலம்படர்வானெண்ணிப்
பொடித்திரட்பூமிகீண்டு§பூழிவாய்மடுத்துவேலை
வடித்தனராகிப்பாந்தண்மண்டிலமருளச்சென்றூர். (௧௧)

சென்றவரெங்குங்காணூர்திசைக்கரிசிமிழ்த்தபாங்கி
ஞென்றியுமாய்ந்துதேடவொருசிறையுலவாவேட்கை
பொன்றியகபிலன்பாங்கிற்புரிவுறப்பிணித்தபாய்மாக்
கன்றியசிந்தையார்கண்டறவனைக்கணியாராகி. (௧௨)

ஆர்த்தனரவிழ்ப்பத்தேறியருந்தவன்சீற்றநோக்கிற்
பார்த்திடப்பொடியதாகிப்படரெரிப்பஞ்சிபோல
மூர்த்தமுந்துகளாய்வீழ்ந்தார்முடிந்தவிச்செய்கையாவும்
பார்த்தலைமன்னன்கேட்டுப்பழங்கணுற்றவலங்கூர்ந்தான். (௧௩)

மகத்தழற்சாலைத்தீக்கைமருவியவேந்தன்சேறற்
ககத்துறுமுயற்சிமுற்றுமாய்ந்தனனுகிக்கோமான்
முகத்தெதிர்ந்துரைத்தான்றீமைமுயலசமஞ்சசன்று
ணுகத்தெறுமங்நாளேய்ந்துகருப்பமாயுதித்த ० தோன்றல். (௧௪)

முருகனினிளவலானேன்முயலுமூதாதைபாதத்
தருகுறவணைந்துபோற்றியஞ்சுமானரசதேற்ற
மருவுதிபுலம்பல்போதவழக்கன்றுன்மகத்தினீங்கி
மெ ருவுதலறமன்றுகுமுறுதியற்றவரையொத்தே. (௧௫)

---

* ஊனம்-குறைவு. எனவே, தொண்ணூற்றென்பதுயாகமும் என்பதாயிற்று † பானனன்மா-பானலாகிய நல்லவிலங்கு. பானல்-குதிரை. ‡ மாயன் படிவமாங்கபிலன்-விஷ்ணுவின் அவதாரமாகிய கபிலமுனிவர். § பூழிவாய் மடுத்து-மண்ணைவாயிலிட்டு விழுங்கி. வடித்தல்-சமமாக்கல்; சமுத்திரமாக்கி என்றதாம். ० இவனே அசமஞ்சசன் புதல்வனுகிய அஞ்சுமான். அது வருஞ்செய்யுளாற்றெரித்துக்கூறுப.

யானுளனாகப்பீழையெய்துவதெவனேவேற்றேன்
வானவனெனினுமாய்த்துவயப்பரிகொணர்வனின்னே
தானருள்புரிதியென்றுத்தாழ்ந்திடத்தழைத்துத்தாங்கி
யானனமுச்சிமோந்தேயகன்மடிக்கொண்டுசொல்வான். (கசு)

இளையனீசாவதானத்தெகியேயிடுக்கணீங்கித்
தளையவிழ்த்தயத்தையீங்குத்தருகெனவிடுத்துத் * தாரை
யுளைவகன்றேகிவாவென்றுரைத்தவனுசிமேவி
முளையெயிற்றரிமானேற்றின்குருளையின்மூடுகிச்சென்றான். (கஎ)

சுருதியுஞ்சாமவேதத்தொகுதியுந்துயரநீக்கு
மிருதியும்படைகளாற்றும்விற்றிறல்வெம்மையாவுங்
கருதியவஞ்சுமானுங்கடற்படைசூழ்ந்துகாப்பப்
பரிதியிற்பொலிந்துதோற்றிப்படர்ந்தனன்கபிலன்பாங்கர். (கஅ)

படர்பவனெறியிற்கண்டேயுரோமசன்பாதம்போற்றி
யிடர்கெடுமுறுதிவல்லேயிசைத்தியென்றிறைஞ்சவன்னோன்
மடலவிழ்துளவத்தண்டார்மாயனுங்கபிலன்வாய்மா
வடலினுல்வலியாற்போதத்தமைதியாலாவதன்றால். (கக)

சீற்றமோடமர்வானுங்குச்சேரலேகடிதுசேரு
மாற்றல்சாலுறுதிவேறின்றறைகுவனமலற்கஞ்சிக்
கூற்றமுமணுகாமேன்மைமறைவனங்குலவுங்கோமான்
போற்றவேவேண்டிற்றெல்லாமளித்திடும் † போதமாகும். (௨௦)

பாண்டவரங்கண்மேவியென்றெடும்பரமற்போற்றிப்
பூண்டன்ரரசின்பான்மைசனியுமப்புரியைப்போற்றிக்
காண்டகுகிரகமேலாய்க்கவின்றனன்கணிப்பிலாதா
ராண்டணைந்தின்பம்பெற்றாராதலாலங்கணீயும். (௨க)

கடிதெழூந்தேகிவேதநாயகன்கமலம்போலு
மடிகளிற்போற்றியுள்ளத்தருள்பெறற்காயசெய்கை
மடியறவகுத்தியாயின்மனத்துநீநினைந்தவெல்லாங்
குடிபுகவருளும்போகென்றருந்தவன்கூறியேக. (௨௨)

மேவியகளிப்பினோடும்விரைந்தவண்மேவிவாவிக்
காவியங்கழனிமென்பூங்கமலமென்பொகுட்டிற்காதற்
றூவியஞ்சேவலன்னந்துணையொடுந்துயிலத்தோட்டிற்
றூவியங்களிகண்மேனிதைவருந்தகையுநோக்கி. (௨௩)

---

* தாரை-வழி. † போதமாகும்-ஞானஞ்சித்திக்கும். ‡ தைவருதலாகிய
நற்சகுனத்தையும் பார்த்தென்பது கருத்து.

முற்றியவனத்தின்மேயமறைவனமுன்னியாக்கம்
பற்றியாத்திரையோராரும்பயிற்றியப்பாங்கிற்றீர்த்த
முற்றனவனைத்துமூழ்கியும்பர்கோனுவக்கும்பூசை
தெற்றெனவாற்றற்கெண்ணித்திருவினதமைதிக்கேற்ப. (௨௪)

உருகியபசும்பொற்சாந்திஞெளிமணிக்கற்சேர்ந்தோங்கற்
பருகியமதிலோரேழுங்கோபுரம்பரிதியாக்க
மருகியதென்னவாக்கிமண்டபமநேகமம்பொன்
செருகியசிகரமாதிதிருவுறத்திகழச்செய்தான். (௨௫)

நிலவிரிமுத்தமாலைநிழன்மணித்தாமநாற்றி
யலர்கதிர்ப்பரிதித்தோற்றமாமெனவலங்குஞ்சோதி
குலவுசோபானமாதிகுயிற்றியேகுளிர்ந்தகோயில்
விலகிவில்லுமிழவாக்கிவீதிகள்பலவும்விட்டான். (௨௬)

மேனிலைமாடமோங்கவிரிகதிர்மனைகள்வீதி
தானிறைவெய்தவாற்றியந்தணர்தவத்தோர்மேவப்
பானிலவிருக்கையோடுபல்வளம்பயிலவீந்து
கூனிலவொளிருஞ்சோதிக்குருமணிச்சடையோற்கென்றும். (௨௭)

செருத்தலான்பால்களாதிசெழும்பழத்தேறல்செந்தேன்
றருத்தலைக்கனிகளாதிதண்பனிச்சாந்தம்பூநீர்
திருத்தமாரபிடேகங்கடேங்கமழ்மாலைசீதக்
கருப்புரமணந்தநாவிக்கலவையுங்கவினச்சாத்தி. (௨௮)

விலைவரம்பறியலாகாமென்பணிமிகும்பட்டாடை
கலைபலசாத்தியாவிகமழ்ந்தவோதனங்களாதி
யிலைதுவர்க்காயினோடுமினியநீர்தூபந்தீப
மலைவறமுற்றுமேற்றியாபரணங்களீந்தே. (௨௯)

திருவிழாவாற்றிவீதிதிகழ்தரக்கலவைதூவித்
தருமலர்சிதறித்தீபத்தளிபலதயங்கிமொய்ப்பக்
குருமணித்தடந்தேராதிவாகனங்குலவித்தோற்றம்
பொருவறத்திகழச்செய்துபூசனைபுரிவித்தானே. (௩௰)

தாணுவீசானதிக்கிற்றன்னமரிருக்கைமேவப்
பாணவீழ்ச்சியினோர்*பட்டம்பரிவுடனமைத்துமூழ்கி
வேணவாவடங்கப்பார்ப்பார்விழைவனவளித்துமேவிப்
பூணுலாமுலையாள்பங்கன்பொன்னடிதினமும்போற்றி. (௩௧)

---

* பட்டம் இதுவே அஞ்சுமான்றீர்த்தம்.

மாடுசூழ்ந்திறைஞ்சிமுக்கால்வருபவனொருநாள்வேதம்
பாடுசேவடியிற்போற்றிப்பரிவொடும்பணிந்துபல்காற்
கூடுமன்பதனாற்போற்றிக்குருமயிர்ப்புளகமேவி
யாடுமோதரவாற்சாற்றுந்துதித்தொடையமைப்பதானான். (௩௨)

வேறு.

திருவார்மறையுமயன்மாலுந்தேவர்கோனும்பலதேர்ந்து
மொருகாலனுவாயினுமுணராதுயர்ந்தமேன்மையுடையானே
பெருவாழ்வளிக்குமறைவனத்தெம்பேறேயமுதேபெருகொளியே
வெருவாதடைந்தேனினதடியையருளாய்வேதவிழுப்பொருளே. (௩௩)

பெருக்கார்கருணைத்திவலையினைப்பெற்றேயயனுந்திருமாலு
முருக்காண்பதுவுமளிப்பதுவுமொழிந்தேயியற்றாதலினின்
றருக்கார்நோக்கந்துரும்பினிடைச்சாரினதுவேயவராகு
மருக்கால்வேதவனவாழ்வேயெல்லாநினதுவலியாமே. (௩௪)

மகவான்முதலோர்தானவரால்வருந்தவவர்பால்வலியீந்தே
யிகவாதளிக்கமறந்திரித்தேமென்னுமகந்தைக்கியக்கவுருத்
தகவாய்ந்தழல்கான்முதற்றேவர்தன்மையிழந்தேதருந்திருணத்
துகவாரகந்தையொழித்தனையேதுலகுன்சத்தியொழித்திடினே. (௩௫)

அயனேயாதி*சலமேவியருளினிலேசமவ்வதொழிற்
பயனேயாகப்பகுத்ததுவுமுணராய்பரமானந்தநிறை
வயமேயாகிக்கனைசூதன்வகுத்தேயுலகமளிக்கவருள்
வியனேயருளும்வேதவனவிமலாகதிநீவேறிலையே. (௩௬)

† ஆதிநோக்கமாயையினீயளித்தாயதனாற்சராசரமும்
பூதிமேவுமெனுமேன்மைபுகழ்வோன்பூசைபுரிந்தறியேன்
நீதிநூலுமழற்றுறையுநினையேனினைவார்தமக்கெளியாய்
தீதினிறைவேன்வேதவனத்தெளிவேபுகலுன்சேவடியே. (௩௭)

அறிவாய்விகற்பமதற்கிடமாயவத்தைநீங்கியானந்தக்
குறியாயிலகியேகமதாய்க்குறித்தற்கரியவனுபூதி
நெறியாய்விலங்கும்பரமாயநிமலாபோற்றிநிறையின்பச்
செறிவேபோற்றிவேதவனத்தேவேபோற்றிசிவபோற்றி. (௩௮)

---

* சலமேவி-விட்டுனு. இலேசம்-அற்பம். உணராய் உணரப்படமாட்டாய்; செயப்பாட்டுவினை. சூதன்-பிரமா. பிரமாமுதலியதேவர்கள் தேவரீரருளின தற்பமாகிய கூறேயாம். † ஆதிநோக்கம்-ஞானக்கண்பார்வை. பூதி-சுவானுபூதி.

என்றேயிரங்கிப்பலவேத்துமிளையோனியம்பவிலங்குமருட்
குன்றேயனையானெதிர்தோன்றிக்குளிர்ந்தேமுள்ளங்குறித்தவர
மின்றேயருள்வோம்பணியாலுமிசைக்குநுதியாத்திரையாலு
மொன்றேபலவேவேண்டியநீயுரைப்பாயென்னவோதுவனால். (௩௯)

ஒளியார்பரமசிவஞானமுதவிக்கபிலனுழைப்பரிமா
வளியாலளித்தென்றடமேவியாடுமெவர்க்குப்பரிமேதத்
தெளிவார்பயனுமளித்தியெனச்செப்பிப்போற்றத்திருவாளன்
களியாலளித்துநந்திதனைக்கூவிக்கபிலற்கொணர்கென்றான். (௪௦)

அண்ணலருளாலருணந்திகபிலன்றன்னையயத்தோடு
நண்ணவருளக்கபிலமுனிநாதனளினச்சேவடிமே
லெண்ணின்மகிழ்ச்சியொடுமேவியிறைஞ்சியெழிலார்மணக்கோல
வண்ணங்காணவென்னதவஞ்செய்தேனென்றுவழங்கிடுவான். (௪௧)

வேறு.

உய்ந்தனனடியேனுய்ந்தேனுயர்ந்தெனக்கொப்புமற்றே
ஐந்தவித்தடங்கியாய்ந்துமரியயனுதிதேவர்
பைந்தளிர்ப்பதுமம்போலும்பதமலர்ப்படிவங்காணு
நைந்தனரனையநீயேநயந்தெனைநினைத்தலாலே. (௪௨)

அன்பனுமஞ்சுமானுக்களியனேனுதவியாதே
யின்புறச்செய்வேனன்றோனிமித்தமாயிலங்குஞ்சோதிப்
பொன்புரைசடிலத்தெம்மானென்னையும்பொருளாவெண்ணி
முன்புறக்காட்சியீந்துமுதமுறமோகந்தீர்த்தான். (௪௩)

அடியனேனுயவென்னுலாவதென்னளித்தவேவற்
படியுளப்படியிற்செய்வேன்பணித்தருளென்றுபாரிற்
பொடியுறப்பணிந்துபோற்றிப்புளகமெய்யுளவப்பூங்கண்
வடிவெலாநனைப்பநின்றமாதவன்றன்னைநோக்கி. (௪௪)

பரியிவற்கருளித்தூயவஞ்சுமான்பரிவினுற்றும்
வரிமலர்ப்பட்டமேவிவைகியேநம்மைப்போற்றிப்
புரியிடைமகிழ்வாய்சீவன்முத்தியும்பொலியவீந்தேந்
தரியெனப்புகன்றுசோதியிலிங்கத்திற்றலைவன்சார்ந்தான். (௪௫)

வேறு.

சங்கரன்மறைதலுங்கபிலன்றாழ்ந்தெழுந்
துங்கமாரஞ்சுமான்றன்னைத்தோள்களாற்
பொங்கருளொடுந்தழீஇப்புரவிநல்கியே
யங்கமார்மகத்தினையமைத்தியென்னவே. (௪௬)

நிலமிசைப்பணிந்துநீநிகழ்த்துநோக்கிணுற்
றலமிசைச்சாம்பராந்தலைவர்யாவரு
மலமரலொழித்துவானடையநல்கெனப்
புலமலிகபிலனும்புரிவிற்கூறுவான். (௪௭)

எழிலிசைப்பகீரதனென்னும்வேந்தனும்
வழியிடைத்தோன்றியேவானக்கங்கைநீர்
பொழிதரவளித்திடும்போதிநீயெனக்
கழிமகிழ்வெய்தியக்காளையஞ்சுமான். (௪௮)

வேதநாயகன்றனைப்போற்றிமெய்த்தவன்
பாதமேபணிந்தவன்பணித்தவாம்பரி
காதலின்மேவியேகடிதுகாவியம்
போதவிழயோத்தியிற்போதன்மேயினான். (௪௯)

பவளவாயினியர்பல்லாண்டுமேவியே
சவளமாலியானையான்சகரன்காதல்கூர்
தவளமாளிகையிடைச்சார்ந்துதாதணி
* யுவளகச்சாலையினுவப்பினெய்தினான். (௫0)

அவையெலாம்பெருமகிழ்வெய்தியாரணக்
குவைதருமாசிகள்கூறியேத்திட
நவையறு † பிதாமகனளினநாண்மல
ரிவையெனுஞ்சேவடியிறைஞ்சியேத்தலும். (௫௧)

வரையகன்மார்பகத்தணைத்துவார்மயிர்
நிரைகமழுச்சியுமோந்துநேயமாய்க்
கரைதருகண்பனியாட்டிக்காதலால்
விரைமகமுடித்தனன்வேந்தர்வேந்தனே. (௫௨)

மாலுருவாகியகபிலன்வண்டினத்
தோலுறுமஞ்சுமான்றீர்த்தத்தொண்புனல்
சாலுமுக்காலமும்படிந்துதன்னையே
போலுயர்வேதநாயகனைப்போற்றினான். (௫௩)

போதவிழ்த்தளியினமூசிப்பூந்துணர்த்
தாதயிலஞ்சுமான்றீர்த்தத்தண்கரை
யேதமற்றுறைந்தனனிலஞ்சியீதினிற்
காதலிற்படிபவர்காண்பரின்பமே. (௫௪)

---

* உவளகம்-அந்தப்புரம். † பிதாமகன்-பாட்டன்.

வேறு.

பரிந்தவர்க்குப்பரிமேதப்பயனளிக்குமஞ்சுமான்பட்டமேன்மை
விரிந்தகதைநாரதனும்வேந்தனுக்குவிளம்பினனிவ்வியனார்காதை [ய்
தெரிந்துரைப்பார்கேட்பவர்தாந்திருமருவும்பெருவாழ்விற்சிறந்துசெவ்வா
முருந்தனையமுகைமூரன்முற்றிழையாள்பங்கனடிமுளரிசேர்வார். (௫௫)

அஞ்சுமான்றீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,0௯0.

---

# பாண்டவதீர்த்தச்சருக்கம்.

திருவாரும்வேதவனத்தெளிகாதையெனுஞ்செழுந்தேன்செவியினூடு
பெருவாழ்வுபெறவளித்தோய்பிறங்கியபாண்டவதீர்த்தப்பெயரின்மேவி
மருவாருந்தடமேன்மைசனியிவணேய்ந்துயர்ந்ததிவைவகுப்பாயென்றுத்
தருவாருமழைத்தடக்கைத்தகைவேந்தன்வினவமுனிசாற்றலுற்றான். (௧)

ஆடியவஞ்சனைச்சூதாலரசிழந்துதிருநீங்கியமுதச்செவ்வாய்
வாடியமென்மருங்குல்வனத்திரௌபதையோடணிவேள்விவனப்புவாய்மை
கூடியவந்தணர்சூழவிந்திரசேனுதியவர்குழாத்தினோடு
நீடிய*வெம்மாத்துவிதவனத்தடைந்துசிலகாலநிகழ்ந்தபின்னர். (௨)

காரிருட்காமியவனத்துப்பயில்காலைத்தனஞ்சயன்கற்பகக்காவேந்த
னோரிருவரனுமதியாலுரோமசனுந்தருமனுழையுயர்வானின்றும்
பாரினுறப்பணிந்தெழுந்தேபாத்தியமேமுதலருளப்பரிந்துமேவிக்
கூரிய லுங்கதிர்வடிவேற்றருமன்முகநோக்கிமனங்குளிரச்சொல்வான். (௩)

தங்கியொருதலைமேவிற்றருந்துயரங்†காரியமித்தருணத்தில்லைப்
பொங்கியெழினனிதருமம்புணராதுபுலத்தியனேமுதலோர்பூமேற்
கொங்கிவருங்குளிர்தீர்த்தயாத்திரையாணினைந்தவெலாங்கூடிப்பாவ
மங்கிடவுயர்ந்தனராலெழுதியெனவிதிகாசம்வகுத்துக்கூற. (௪)

மடவரலுந்தம்பியருமற்றையரும்புடைசூழவழிக்கொண்டோங்குந்
தடமருவுபெருங்கானும்வாவிகளுங்குளிர்சாரற்சைலவைப்புங்
கடன்மடியுநதிநதமுங்கலைமுனிவரிருக்கைகளுங்கண்டுபோற்றி
யுடனனையப்படிந்துமறையொழுக்கியலும்வழக்கியற்றியுவகையோடும். ()

---

* வெம்மாத்துவிதவனத்தடைந்து-கொடியவிலங்குகளையுடைய துவித வனத்தையடைந்து. † இத்தருணத்திங்கிராசகாரியமில்லை, இராசகாரியங் களின் மிகமுயற்சிசெய்யிற் பெரிதுந்தருமம் புணரமாட்டாது. இதிகாசம்-சரித்திரம், மேற்கோள்.

தேங்குமுதச்செழுங்கனிவாய்ப்பாஞ்சாலியிளையவர்தாந்தெய்வவேதத்
தோங்குமறையுரோமசனந்தணரோடும்பலவிடமுமுற்றுநீங்கிப்
பூங்குழலார்பந்தடிப்பப்பொறித்தடங்கட்கலாபமுடல்போர்த்தெழாலிற்
பாங்குநடமஞ்ஞையினம்பயிலவேதவனமடைந்துபரிவிற்போற்றி. (௬)

நோக்கியகண்ணீக்கரிதாநொடிவரியவனமேவிநுகர்ச்சிநோற்பார்
பாக்கியமேபோற்பரந்தபதியிடையாறியாத்திரையும்பரிவினூற்றி
நீக்கிமடல்விரித்தறுகாலெழுசிறைப்பாண்சுரும்பளிதேனிறையமாந்தித்
தேக்கியிடும்பலவாவிதிளைத்தாடித்திங்களொன்றுசேர்ந்துவைகி. (௭)

இருக்கையினோர்மலர்*வாவியிழைத்ததனின்முக்காலமியல்பின்மூழ்கி
மருக்கிளரும்வேதவனமாதீர்த்தம்பலபடிந்துமறைசைநாதற்
குருக்கியவன்பொடும்பூசையுவந்தளித்துத்துதியாற்றியொளியார்கோயிற்
றிருக்கிளரவலஞ்சூழ்ந்துதிங்களுமிம்முறைமேவித்திகழ்ந்தானன்றே. (௮)

பற்றலராருயிர்தொலையத்தாணிழைத்தபட்டமதிற்பசியமாழை
கற்றவர்பாற்பலவுதவிக்கமழ்மறைசைப்பெருமான்றன்கருணைமேவிச்
சுற்றியகாங்கேயன்முதற்றுணையோருஞ்சுயோதனனுந்தொலையப்போரில்
வெற்றியமர்ந்துலகளித்தான்விறற்றருமன்மறைவனஞ்சேர்மேன்மையாலே.

பாண்டவவாவியிற்படிந்தேபசியதபனியமளித்தோர்பகையினீங்கி
யாண்டகையாயரசுரிமையடைவர்சிறூர்கல்விதிருவனைத்துமேவி
நீண்டசடைநிமலனருணெறியடைவருலகளிக்குநிருபரேறே
வேண்டவரமளித்தருளும்பாண்டவதீர்த்தப்பெருமைவிளம்பினேமால். (௧௦)

## சனிதீர்த்தமான்மியம்.

சனிதீர்த்தமேன்மையினிச்சாற்[illegible]†[illegible]ணிசாயைதன்பா
லினிதீன்றமகவாகுமிலங்குசனியவன்கிரகமெவைக்குமேலாய்த்
தனிதாங்கும்பதமேவத்தவம்புரிதற்குயர்ச்சியுறுந்தலமொன்றுய்ந்து
கனிதூங்குநறியநறுக்கமழ்வேதவனமடைந்துகாதல்கூர்ந்தே. (௧௧)

மூன்றிரண்டியாத்திரையுமுறைபுரிந்தத்தலதீர்த்தமுற்றுமூழ்கி
வான்றிகழுந்தலமேவவயங்கியவேதாவமிர்தவாவித்தெனபாற்
றோன்றினியதீர்த்தடமுந்தொட்டதனிற்றினமூழ்கித்துயரமீக்கூர்ந்
தூன்றியமெய்த்தவம்புரிந்தானுணவகன்றிந்தியமடக்கியுலப்பில்காலம். (௧௨)

நறியமலர்த்‡தனதுதடநானவிதியாற்படிந்துநளினம்போலுஞ்
சிறியமதியணிவேணிச்சிவபெருமானடிபோற்றித்திகழ்வாரேனோர்நாள்
வெறிகமழுமலர்தூவிவிழைந்தடிமேற்பணிந்தவசமேவியன்பாங்
குறிநிகழத்தோத்திரங்கள்பலவாற்றிக்குழைந்துருகிக்குறித்துச்சொல்வான்.

---

* வாவி இதுவே பாண்டவதீர்த்தம். † தரணி-சூரியன். சாயாதேவிக்குச் சன்னை எனவும் பெயர். ‡ தனதுதடம்-சனிதீர்த்தம்.

போற்றியருளாலுலகம்புரந்தளிக்கும்புகலாயபொருளேபோற்றி
தேற்றியெனையிருணீக்கிச்சேவடிக்கீழருமையுறச்செய்தாய்போற்றி
யூற்றியலன்புருவாயவுளத்தினொளிபழுத்தூறுமுணர்வேபோற்றி
மேற்றிகழும்பரமாகிவேதவனத்தமுதாயவிளைவேபோற்றி. (கச)

என்றினையபலவேத்தியிறைஞ்சுதலும்வேதவனத்திறையோனேர்ந்து
நன்றிதரும்பூசையினாலியாத்திரையாற்றடமியற்றுநன்மைதன்னா [ப்
லொன்றியநோன்பதுதன்னாலுவந்துவரமளித்தருள்வோமுரைப்பாயென்ன
பொன்றிகழுஞ்சடையானையடிபோற்றியெழுந்துசனிபுகல்வதானான். (கரு)

வரந்தருவாயெனிற்கிரகமனைத்தினுக்குமேலாயவாழ்வுமேவப்
புரந்தடியேனியற்றுமலர்ப்பொய்கையினிற்படிந்தார்கள்போகமேன்மை
நிரந்தபதந்திருவாயுணீர்மையுறவெனதுதுயர்நீங்கிநீடு
மரந்தைகெடவருள்வாயென்றுரைப்பவளித்தமலேசனகன்றானம்மா. (கசு)

நிறைபுனலிற்றிரைபோலப்பரனகலச்சனிக்கோடானெடுவான்மேவி
யுறைகிரகமனைத்தினுக்குமுயர்பதத்துப்பரனருளாலுறைந்தேயோர்ச்சிக்
குறையகல்வானியங்கியுளங்குளிர்காலையொருகாலக்கோடான் * பூமே
லறையுமுரோகிணிநடுவணடைந்தமரமழையுலகத்தற்றதன்றே. (கஎ)

மாரிவறந்தாவிதனைவருத்துபசிமிகுந்துபயிர்வாய்த்தலின்றிப்
பாரினுயிர்பலவிறப்பப்பஞ்சமுறீஇப்பதைபதைக்கும்பருவநோக்கிக்
கூரிலைவேற்றயரதனுங்கோவேந்தன்வசிட்டனுரைகொண்டுமேவித்
† தேரியலுமணிவீதிவேதவனத்தியாத்திரையோராறுஞ்செய்தே. (கஅ)

ஒழியாதுசனிதீர்த்தமுவந்துபடிந்தேதினமுமொளிரும்பால
விழியாளனயமறைவித்தகனைப்பத்தியொடும்விழைந்துபோற்றி
யழியாததனிமுதலேயன்புறுமாருயிர்க்கமுதேயருளேவேத
மொழியானேயுலகேத்துமுன்னவனேயெனப்பணிந்துமுறையிற்சூழ்ந்தே.

அருண்மேவித்தினம்பணியுமதனாலுஞ்சனிதீர்த்தமாடலானுந்
தெருண்மேவுவேதவனச்சிறப்பானுஞ்சங்கற்பசித்திசேர்ந்தே
யுருண்மேவுந்தேர்நினைந்தவுழையுறுபேறெய்திமனத்துவகையோடு [ன்.
மிருண்மேவுஞ்சனியொடும்போரிழைப்பனெனவவன்பதத்தினெய்தவன்னா

---

* சனி இடபலக்கினத்தில்வர. † தேரோடும்வீதி இத்தயரதமகாரா சாவான் நிருமிக்கப்பட்ட தாகலின், அதனையுமீண்டு ஞாபகங் கூர்வித்தற் பொருட்டுப் பிறிதோரடை கொடாது தேரியலுமணிவீதிவேதவனமென வீதியடைகொடுத்தோதினார். இவ்வேதுப்பற்றி இவ்வேதவனத் தேரோடும் வீதி தயரத மகாராசாவீதி என இன்றும் வழங்கப்படு மாறறிக.

கட்புநரபதியோடுநயந்துமறைவனப்பெருமைநாடிப்பூமேற்
கொட்பகலமழைதூவிக்குளிரவளித்தவனியுறுங்குறையுநீக்கிப்
பெட்புறுநல்வரமளிப்பேம்பேசுகெனநீயாற்றும்பீழையோவத்
தட்பமுறுந்தடமுனதிற்றூழ்ந்தார்கட்கருளுகெனத்தந்துபோனான். (உக)

வேந்தனுமவ்வரஞ்சனிபால்வேண்டியயோத்தியையடைந்துவிருப்பின்மேவி
மாந்தர்பெருமகிழ்வோடுமனங்களிப்பப்புரந்தளித்தான்வையம்பூமீ
ரேந்துசனிதடம்படிந்தாரின்பமுமாரோக்கியமுமிலங்குஞ்செல்வக்
காந்தியுமுண்டாய்ச்சனிதன்கடுந்துயருமருவாதுகளிப்பரன்றே. (உஉ)

வேறு.

சனிவாவியின்மேன்மைகடாழ்வறவே
கனிவாய்முனிகாவலனோர்தரவே
யினிதாகவிசைத்தனனீதுணர்வார்
முனிவார்வினையாயினமுட்டறவே. (உ௩)

பாண்டவதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,0௩௩.

---

# சூரியபுட்கரணிச்சருக்கம்.

பருமணிதிரைசொரிபானுப்பட்டமு
மிருளகல்பாற்கரவிலிங்கமுற்றதும்
வருமுறைகூறெனவழங்குமன்னனுக்
கருண்முனிதகவொடுமறைதன்மேயினான். (க)

பாயிருள்சீத்தெழும்பரிதிவானவ
னாயிரங்கண்ணனென்றிருவராசறச்
சேயுயர்விசும்பிடையமர்ந்துசெல்வமே
மேயினரிருங்களிமேவியெண்ணுவார். (உ)

முறைதரவடுக்கு*மூவுலகும்போற்றிடு
மிறையெனுமதிபன்யானியானென்றெண்ணியே
கறைதருமகந்தையிற்கலந்துகாதலா
லுறையுநாளெல்லைபொன்னுழையினேகியே. (௩)

மூவுலகேத்திடுமுதல்வன்யாரெனத்
தேவர்நாயகனெனச்செப்புமிந்திரன்
காவலனென்பதற்கையங்காண்கிலே
மாவலாவின்றெனவருக்கன்கூறுவான். (௪)

---

* திரிலோகநாதன் யான்யானென்று தனித்தனிகருதி.

கலமலி*மூவுலகினுக்குநாதனாய்ப்
பலர்தொழும்பான்மையும்படைத்துமல்குவா
னிலமிசைத்தவம்பலநிறைப்பனென்றுதே
ஙலர்சொரிமறைவனத்தருளின்மேவினான். (௫)

உள்ளியபயனுடனுதவுமோங்குசீர்
வள்ளியவிலிங்கமொன்றமைத்துவாவியுந்
தெள்ளியதீம்புனல்சேரவாற்றிவண்
புள்ளியல்புதுமலர்ப்பூசையாற்றுவான். (௬)

ஆற்றுமத்தடப்புனலாட்டியன்பினாற்
போற்றுமுக்காலமும்புரிந்துபூசனை
காற்றுடன்மனம்பொறியடக்கிக்காய்தர
நோற்றுளத்தரனடிபதித்துநோன்மையால். (௭)

வற்றியென்புகுதரவயங்குமாதவ
முற்றினனெடியநாண்முயலமோகமீர்
சுற்றியசெஞ்சடைச்சுருதிநாயகன்
பொற்றிரட்குன்றெனமுன்னம்பூத்தனன். (௮)

கண்டனனெழுந்தனன்கண்கள்காதனீர்
விண்டனன்றொழுதனன்வேதநாயகன்
முண்டகநாண்மலர்முருகுநாறெழி
லுண்டனசேவடியுவந்துபோற்றினான். (௯)

பருகியவன்பினாற்பரிதிவானவ
னுருகியவுளத்தொடுமுவப்பினோங்கியென்
றிருகியதீவினைதீர்ந்ததென்றுதேன்
பெருகியகாதலாற்பேணிப்பேசுவான். (௧௦)

வேறு.

விண்ணமரும்புரமூன்றுமழல்வாய்வீழ்ந்துவெந்தவியக்குறுமூரல்வி ளைத்தாய்போற்றி, கண்ணழலாற்கழைக்காமன்கருகிநீறாய்க்கவினழியவிமை யலர்த்துங்கடவுள்போற்றி, மண்ணகழ்ந்தும்விண்பறந்துமயனுமாலுமருட் கையுறத்தழலாகிவளர்ந்தாய்போற்றி, பண்ணமருமொழியோடுமறைசைமே யபரம்பரனேபசுபதியேபகவாபோற்றி. (௧௧)

கூற்றுயிர்விண்டயர்ந்தடங்கநிமிர்த்தகோலக்கோகனதக்குருநிறச்சேவ டியாய்போற்றி, தோற்றுமுரட்சலந்தரன்வெந்திறன்மாய்ந்தாகந்துடித்தவி யவருணேமிச்சுடரேபோற்றி, யூற்றமிகுந்தகலிடம்பார்விழுங்கச்சீறியோங் குசுரநதிவேகமொழித்தாய்போற்றி, சாற்றுமறைவனமேவியுலகங்காக்குந் தண்ணளியாய்சங்கரனேதனியேபோற்றி. (௧௨)

* திரிலோகேசனாகி.

காலவழல்வெம்பகுவாய்விழுங்கமாய்வர்கண்ணன்முதற்றேவர்களக் காலமுண்போங், கோல்மிதனுற்றெளிவீரெனக்கபாலக்குளிர்மாலேயெழின் மேனிக்கொண்டாய்போற்றி, யாலமணிகளமேவியரியேயாதியமரர்தமக்கர சளித்தவமலாபோற்றி, ஞாலமதற்கணியாயமறைசைவேதநாயகனே நான்ம றையினயமேபோற்றி. (கங)

கனித்துவர்வாய்க்குழைதடவுங்சருங்கணீலக்காரிகையோடெழின்மே னிகலந்தாய்போற்றி, தனித்துணையாயெனதுளத்தேதழைத்துத்தோன்றித்த ளர்வகற்றியெதிர்ந்தபவந்தவிர்த்தாய்போற்றி, புனிற்றிளமாமதிக்குழவியமு தச்சோதிபொறியரவமெழமாந்திப்புனல்வாய்ப்பாயு, மினிற்றிகழுங்குளிர் வேணிவிகிர்தாபோற்றிவேதவனநாயகனேபோற்றிபோற்றி. (கச)

வேறு.

தோத்திரமின்னனவியம்பித்தோமறுங்
காத்திரங்கம்பமுற்றுருங்கிக்காதலா
னேத்திரமிமைப்பறுநிலைமைக்கேய்ந்தது
பாத்திரமெனவிழிபரப்பிப்போற்றவே. (கரு)

வேண்டியதருளுதும்விளம்புநீயெனுத்
தூண்டியசெஞ்சுடர்ச்சோதிகூறலும்
* பாண்டரக்களிற்றவனென்னப்பாயசீ
ரீண்டிமூவுலகமுமேத்தநல்குவாய். (கசு)

என்பெயர்த்தினத்திடையாவரேனுமென்
பொன்பயில்வாவியின்மூழ்கிப்போற்றிரு
ரின்பமுந்தருமமும்பொருளுமேய்ந்துநின்
னன்புறச்சிவபுரியடையநல்கென. (கஎ)

பணிந்தெழும்பரிதியைப்பார்த்துமூவுல
கணிந்துநாயகனெனவலங்கியந்தணர்
துணிந்துனேச்சந்திகடோறும்போற்றியே
யுணர்ந்துறச்சதமகனெுத்துவாழ்கெனு. (கஅ)

நல்வரமளித்துநீநயந்தநாடணிற்
† பல்வலம்படிந்தெமைப்பரிவிற்போற்றுவார்
செல்வமுமாயுளுமறமுஞ்சேயுய
ரெல்வளவின்பமுமியாவுமெய்துவார். (கசு)

---

* வெள்ளையானையையுடைய இந்திரனைப்போல. † பல்வலம் - சிறு குளம்.

ஆவணிகார்த்திகையாகுந்திங்களிற்
பூவணி * பொய்கையிற்புக்குநந்தமைத்
தூவணியாடினர்தொழுததூய்மையோர்
நாவணிபுகழொடுநயப்பரின்பமே. (உ0)

† பார்பொருட்டரியவதாரம்பற்றுநாட்
சார்சதமகனெனச்சகாயநல்கிநீ
சீர்வளமருவுதியென்னச்செப்பிநீர்க்
கார்மணிமிடற்றவன்கரந்துபோயினான். (உக)

கரந்தவப்பரமனைக்கருதிப்போற்றியே
யரந்தைதீர்ந்தரியெனவகிலம்போற்றிட
நிரந்தவன்புகழொடுநிகரற்றுதியாய்ப்
பரந்தவான்மகிழ்ந்தனன்பரிதியென்பவே. (உஉ)

மணிதிகழ்மறைவனமேவிவாவியு
மணிகிளரிலிங்கமுமாற்றுமேன்மையாற்
பணிபவர்க்கின்பருள்பகவனாகிவான்
றுணிதருமதியனுச்சோதியாயினான். (உங)

வேறு.

ஆதலினாற்சூரியபுட்கரணியிடையவன்றினத்தினடைந்தமூழ்கிக்
காதலினாற்பகலவன்முன்கருதிவழிபடுமிலிங்கங்கணிந்துபோற்றிற்
பூதலமீதழியாதபுகழ்மேன்மைதருமாதிபொருந்திமூன்று
மூதுலகுந்தொழும்பதியாய்முளைப்பரெனமுதல்வனுக்குமுனிவன்சொற்றான்.

வேறு.

சூரியவாவிதுளைந்துபடிந்தா, ராரியராகியருந்திருவுற்றே
பாரியவின்புபரிப்பர்விரிப்பார், சீரியரிக்கதைதேர்பவரோடும். (உரு)

சூரியபுட்கரணிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ங, 0ருஅ.

---

# சந்திரபுட்கரணிச்சருக்கம்.

சீதமதியப்பகவன்றிருவார்மறைசைமேவி
நாதனுருவஞ்சமைத்துநலமார்தடமுமமைத்துப்
பாதம்பரவவளித்தபான்மையுரைத்தியெனவே
போதந்திகழுமுனிவனரசற்கினிதுபுகல்வான். (க)

---

* பொய்கையிற்புக்காடினராய் நந்தமைத்தொழுததூய்மையோர்.

† உலககாரியநிமித்தம் விட்டுணு அவதாரத்தை மேற்கொள்ளுங்காலங்களில் இந்திரனைப்போல நீயும் அவ்விஷ்ணுக்குச் சகாயஞ்செய்து.

மழையார்தடங்கண்மகளிரிருபத்தெழுவர்வளப்பாற்
றழைவார்தம்மைத்தக்கன்றகவாலளித்துச்சசிநீ
பிழையாதிவர்பாலன்பிற்பிரியஞ்சமமாய்ப்பெரிதும்
விழைவாயென்னவிடுப்பவமர்ந்தேயகலாவிழைவால். (௨)

கலவிக்கடலிற்படிவான்கதிர்மென்முலைரோகிணிபாற்
குலவிக்குளிரமற்றைக்குதலைப்பணிமென்மொழியா
ரலவிக்கலவிமதனனடலம்பகலம்போழ
நிலவிக்கனிவான்முனிவார்தந்தைக்கிதனைநிகழ்த்தி. (௩)

நாணுஞ்செலுத்துமிறைஞ்சிநலமார்கழுநீர்விழிநீர்
பூணாரகலநனைப்பப்புழுங்கத்தக்கன்புகைந்து
சேணார்மதியைக்குறைந்துதேயச்சாபஞ்செப்ப
வேணார்கிரணமழுங்கியழுங்கிக்குறைவுற்றெய்த்தான். (௪)

நெஞ்சங்கலங்கித்தீர்க்குநெறியேதென்னநினைவா
னஞ்சந்துணையோடணையவரியார்வரிகள்பாடுங்
கஞ்சங்கமழுங்கழிசூழ்மறைசைமேவிக்களியா
னஞ்சங்கவினுமிடற்றானளினப்பதங்கணயந்தே. (௫)

வேறு.

அன்பாலுயர்பூசனையாற்றவலங்குமீச
னென்பாலருள்செய்திடிற்சாபமிழைப்பதென்னென்
றின்பார்மறைசைப்பதிமன்னியிறைஞ்சியேத்தி
முன்பாரருள்பெற்றிடயாத்திரைமுற்றுமாற்றி. (௬)

பதியார்தருதீர்த்தமனைத்தினும்பண்பின்மூழ்கி
விதியான்மறைநாயகன்வீறுவிடங்கவீசன்
கதியேயுமிராகவன்பூசைகனிந்தகோமான்
* சதியாழனவாணியென்றீங்கிவர்தாள்கள்போற்றி. (௭)

தாவிக்களிவண்டுணமுண்டகந்தாழு † மென்றாழ்
வாவிக்கயல்வாய்ந்தநன்றூணுயர்வாரமோரை
மேவிச்சிவலிங்கமுமாற்றிவிரும்பியாட்டப்
பூவிற்றிகழ்பொய்கையுந்தன்பெயர்பூப்பநல்கி. (௮)

காலந்திகழ்மூன்றினுமாவிகலந்துமூழ்கி
யேலங்கமழ்தீம்புனலாற்சிவலிங்கமாட்டிச்
சீலந்தருபூமுதலாயதெரிந்துசெய்தான்
ஞாலம்பரவும்படிபூசனையென்றுமென்றும். (௯)

---

* சதியாழனவாணி வீணாவாதவிதூஷணி. வீணையினுடைய நாதத்தைமிகத்தூஷித்தல். வாதம்-நாதம். † என்றாழ்வாவிக்கயல்-சூரியபுட்கரணிக்கயலிலே.

தலையாயவரிச்சைசெபந்துதிசாலவாற்றி
நிலையாமனமைம்பொறியாசையினீக்கிவீக்கி
யுலைவாயவருந்தவமேவியுலப்பில்காலஞ்
சிலையாயசமாதியுமாற்றினன்றிங்களாேனன். (௫0)

அரிதாயவருந்தவமாற்றியரிச்சைமேவிப்
பரிவாயமதிக்கலர்த்தேங்குழற்பாவைபாகன்
புரிவோடுமெதிர்ந்திடப்பொங்கொளிபூத்தமேனிப்
பெரியோனடிபோற்றிமகிழ்ந்தலர்பெய்துபேசும். (கக)

வேறு.

மூவாமணியேமுழுமாமுதலே, பாவார்மறைதேடுபரம்பரனே,
பூவார்சடையாய்புனிதப்புயலே, தேவாபிறைசூடியசேகரனே. (கஉ)

ஆடுங்கழலாயறிவேயமலா, நீடும்பொருளாகியநின்மலனே,
நாடுந்தனியேநலமேயருள்வாய், வாடுந்தமியேன்மகிழ்வாயுறவே. (கங)

அரியோடயனுவிதிகைத்தறவே, யெரியாகியிலங்கியவெம்மிறையே,
வரியார்மலர்வாள்விழிபங்குடையாய், புரியாயருளென்றுபுகன்றிடலும்.

வேறு.

மு[illegible]றோன்றியமுக்கணெம்பெருமா
னின்னலோம்புதியீருதும்வரமறையியலாற்
பன்னநம்முருவாற்றியேபரிந்தபூசனையா
லன்னமார்தடமாற்றலாலறியாத்திரையால். (கரு)

மறைவனத்திடைவைகலால்வழங்கியேவரமுன்
குறையகற்றுதுங்கூறெனக்குழைந்தடிபோற்றி
யிறைவநின்னருளின்னதேலிகலினுற்றக்க
னறையவாய்தருஞ்சாபமுன்பகற்றியேயதன்பின். (கசு)

யானியற்றியதடத்திடைமூழ்கியானிழைக்கும்
வானிழற்குறியிலிங்கமும்போற்றினர்வலியோர்
தானிகழ்த்தியசாபமுநதவிர்ந்தவர்தாங்கு
மூனிழைத்தவெவ்வினையெலாமொழிந்திடவுதவாய். (கஎ)

வாரமென்னதுதனினிவ்வாவியின்மூழ்கித்
தீரமேவியசிவகுறிபோற்றினர்திகைப்பார்
சாரவாற்றியதழல்வினைதடிந்துநின்சார்பிற்
சேர[illegible]செய்வான். (கஅ)

[illegible]சாபவெந்தீயுறத்தளர்ந்தோர்
பக்கந்துறைமேவியேமற்றையபக்கம்
புக்கவான்கலைமுறைமுறைபொலிவுறப்பொருந்தி
மி[illegible]மருள்வி[illegible]றல். (ககூ)

வளர்ந்துவான்கலைமல்குதற்கவதிபூரணையாந்
தளர்ந்துவண்கலைசாய்வதற்கமையதுதானு
மளந்திரண்டினுக்கிடைபடுநாட்டிதியவற்றிற்
கிளர்ந்த * கவ்வியமவ்வியஞ்செயமறைகிளக்கும். (௨௦)

† தேயுமக்கலையங்கியேமுதலியதேவர்
வாயுமாறளித்தவர்தமைவளர்த்திடாமகந்தா
லாயுநற்றவந்தானமென்றிவற்றினாலாகி
மாயுமக்கலைவளர்ந்துபூரணமுறமலரும். (௨௧)

‡ நின்னதாக்கமுங்குறைவுமூன்றுலகருணெறியான்
மன்னவாருவதாம்பிணிதீர்த்துயிர்வாய்ப்பப்
பன்னு ○ மோடதித்தலைவனுய்ப்பாரளித்துயர்வா
யென்னநல்கியேநீண்மலரிலஞ்சியினேய்ந்தே. (௨௨)

சோமவாரத்திற்படிந்தெமைத்தொழவினைதுடைத்துக்
காமமேவுவர்கார்த்திகையாந்தினங்கலந்தே
தாமமார்ந்தநந்திருவுருப்போற்றியதவத்தோ
ரேமமாயவீடெய்துவரென்றிறையெழுந்தான். (௨௩)

மல்குபேரொளிமறைதலும்போற்றியேமறியும்
பில்குகாதலாற்றனதுயர்நிலையிடைப்பெயர்ந்தே
யல்குபாவநோயகற்றி[illegible]ந்து
பல்கவான்கலையமுதமீந்தொளியுருப்படைத்தான். (௨௪)

திங்களம்புலிச்செழுந்தடந்திளைத்தவண்சிறக்கு
மங்களந்தருவரதனைப்பணிந்தவர்வாழ்ந்து
வெங்களங்குறுவினையொழித்தமலராய்விளங்கி
யெங்களம்பரன்பதியிடையினிதுவீற்றிருப்பார். (௨௫)

---

* கவ்வியம்-தேவப்பிரீதி; யாகம்முதலியன. அவ்வியம்-பிதிர்ப்பிரீதி; பிண்டம்முதலியன. இதுமேலுங்காட்டப்பட்டது. † தேயுங்கலைகள் பதினைந்தும் முறையே பதினைந்துதினத்திலும் ஒவ்வொன்றாக அங்கினி முதலிய தேவர்களாலுண்ணப்பட்டு, அவர்களை உச்சீவிக்கும்படி செய்து, மகத்தினாலும், தவத்தினாலும், தானத்தினாலும் அவைகள் மீளவளர்ந்து மலருமென்க. ‡ நின் வளர்ச்சியுந் தேய்வும் திரிலோக க்ஷேமவிருத்தியின்பொருட்டாவனவாம். ○ ஓடதி-மரமுதன்மருந்து. ஓடதிசம்பந்தம் ஔடதம்.

வேறு.

சினத்துத்தக்கனளிக்குஞ்சாபச்செயல்போய்
மனத்துக்களியின்மதியக்கடவுண்மல்கின்
பினந்துத்தழையுங்காதையரசற்கியலா
லனத்துத்திகழ்வானளித்தானளித்தானருளால். (உசு)

சந்திரபுட்கரணிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,௦அச.

---

## சஞ்ஞைதீர்த்தச் சருக்கம்.

[illegible]பேரல்குற்றுமக்
[illegible]லைக்கொடியாஞ்சஞ்ஞை
யுழலரிக்கணஞ்சூழ்பட்டத்துயர்[illegible]ரப்பனோர்தி
[illegible]டைநிருபரேறே. (க)

வடிவெழில்வனப்புவாய்ப்பவானகத்துவட்டாவீன்ற
பிடிநடைமயிலஞ்சாயற்சஞ்ஞையைப்பிறங்குவெய்யோன்
கடிமணங்கமழமேவிக்கலந்தறக்களிக்குநாளிற்
கொடியிடையிரவிமேனிக்குரூஉச்சுடர்குறித்துக்கூசி. (உ)

உருப்பவிர்வெயிலினெல்கும்புனிற்றிளந்தளரினேக்குந்
திருப்புரையெழின்மென்சாயற்றிருந்திழைகுழையுமேனி
நெருப்புறுகிரணமாற்றாதயர்ந்தவணீங்கிநேய
விருப்பொடுதந்தைதன்பான்மேவியுள்விளைவுகூற. (௩)

வஞ்சியங்கொம்பரன்னாண்மனக்கருத்திரவிசோதிக்
கஞ்சியீங்குறைதற்காகுமெனவுணர்ந்தருளார்தெய்வம்
பஞ்சின்மெல்லடியினார்க்குப்பதியலதில்லைப்பற்று
லெஞ்சினார்நிரயத்தாழ்வரெனவெடுத்தியம்புகின்றான். (௪)

தீயவன்பிணியனேழைசினத்தினன்*சீத்தையேனும்
பாயவன்போடுந்தெய்வம்பதியெனப்பரிந்துண்மேவி
யாயவனேவலாற்றியடித்துணைபோற்றியால
மேயவன்சொல்லாற்சீறியிசைப்பினுமினிதுசெய்தே. (ரு)

குழைதரவினிதுகூறிக்கொண்கனுதரிக்கமேன்மை
தழைதரப்பொருளைப்பேணிச்சரணநீர்பருகித்தாழ்ந்தே
யுழையகலாதமேன்மையுருவெழிலொழுக்கமேன்மேல்
விழைவுறவணிந்துபோற்றல்விதியறமின்னனார்க்கே. (சு)

---

* சீத்தை-கிழவன்.

தலைவனிற்றீர்தலேனோர்தம்மனைச்சார்தருய்தன்
னிலையிடைநெடிதுவாழ்தல்பதிகுறைநிகழ்த்தித்தூற்ற
லுலைவறவெறுப்புச்செய்தலுவர்த்தலூண்டுயில்முன்மேவ
விலைமலிவேற்கணல்லார்க்கெரிநரகீயுமன்றே. (எ)

காதலனுவக்குமாயிற்களிபெறுங்கலவியின்ப
மாதரம்பெருக்கல்வேண்டுமெவட்கவன்கடவுளன்று
யீதறமிரவிதன்பாலேகுதிகடிதினென்ன
மாதவளயர்ந்துசோகமருவிமீண்டியங்கிவாணின். (அ)

கண்டனளெம்மைப்போற்றிக்கருத்துறுதுயரமெல்லாம்
விண்டவளுரைப்பயாமுமெல்லியற்குறுதியோர்ந்து
வண்டமர்குழலாய்சோகமாற்றிவானகன்றுமண்மேற்
றண்டலைசூழும்வேதவனத்திடைத்தவத்தின்மேவி. (க)

வேதகானனத்துத்தீர்த்தமனைத்தினும்விழைந்தூழ்கிப்
போதவிழ்தடமொன்றுக்கிப்புனிதமந்திரத்தான்மூழ்கி
நாதனைப்போற்றிமேவினலம்பெறுசித்தியுண்டா
மேதகுசித்திதன்னுன்மெல்லியனின்னையொப்பாள். (௰)

ஒருத்தியையமைத்துவெய்யோனுழையமைத்துறைதி*யப்பாற்
கருத்தியல்கருமமுற்றுங்காண்டியென்றுரைத்தேமாகத்
திருத்திகழ்மறைசைமேவித்தீர்த்தங்களனைத்துமூழ்கி
யருத்தியாத்திரையுமாற்றிச்சஞ்ஞையங்கரனைப்போற்றி. (கக)

மேற்றிசைச்சுடர்களாற்றிமேவுபுட்கரணிப்பாங்க
ராற்றினடீர்த்தமாற்றியதிற்றினமுக்கான்மூழ்கிப்
போற்றியேயரனைநோன்புபுரிந்தனள்பொறியின்வேட்கை
மாற்றிவாயுணவுந்தானோர்மண்டலமருட்கையற்றே. (கஉ)

நோற்றருந்தவத்தாற்†றன்போனுணங்கிடையணங்கையாக்கிப்
பாற்கரன்றன்பாலேவப்பரிந்தவள்சஞ்ஞைபோலத்
தோற்றமுமெழினுமேவச்சுடரவன்கலந்துதோய
‡மாற்றவள்சனியினோடுஞ்சாவன்னிமனுவையீன்றுள். (கங)

---

* அதன்பின்பு நின்கருத்திருக்குங் காரியமுற்றும் அதனைக்காண்பாயென்றியாஞ் சொன்னேமாக. † தன்போனுணங்கிடையணங்கு சவன்னை. சவன்னை - சமானவன்னத்தையுடையவள். சவன்னையிடத்துப்பிறந்தவன் சாவன்னி என்க. சாயாதேவி என்பதும் இச்சவன்னையை எனவறிக. ‡ மாற்றவள் - மறுமனையாட்டி.

முன்னியசஞ்ஞைவைவச்சுதமனுத்தருமன்மோதிப்
பின்னியயமுனையென்னுமூவரைப்பெற்றுப்போனு
ளின்னியற்சாயையைவர்தம்மையுமினிதுபோற்றி
யன்னியமின்றித்தாயாய்வளர்த்திடுமெந்தகாளில். (௧௪)

நிகமகானனத்துச்சஞ்ஞைகிலைபெறுந்தவத்தாலீச
னகமகிழ்வெய்தி*மேவற்கருந்துவட்டாவையுன்ன
முகமலர்ந்தெய்திப்போற்றிமுக்கணெம்பெருமான்முன்னேய்க்
துகமதனுடலங்காய்ந்தோயுன்னியதென்னையென்ன. (௧௫)

முறுகுவெங்கிரணமாற்குமுகிழ்த்தமென்றளிர்மாமேனி
யிறுகுவெம்முலையாள்சஞ்ஞைக்கிரவிதன்னிலங்குமேனி
குறுகி†வெங்சரத்திற்றீர்ந்துகுளிர்பெறவைரச்சாணை
மறுகுறக்கடைந்துசாயல்வனப்புறவகுப்பாயென்ன. (௧௬)

கூறியபணியுட்கொண்டுகுழைந்தடிபணிந்துபோற்றித்
தேறியகளியால்வானஞ்சேர்ந்தனன்சஞ்ஞைதேர்ந்து
வேறியவுருவமாகிவேதகானனத்துமேவி
யாறியகாலத்தார்வச்சஞ்ஞைமுன்னளித்தமைந்தர். (௧௭)

தருமனு‡மனுவுந்தூயயமுனையுந்தரணிதன்பான்
மருவினர்பணிந்துதந்தைமலரடிபோற்றியுள்ள
முருகுறவமுதுதாயாமுவள்சனிமனுவையோம்பி
வெருவுறவெம்மைக்காயும்வேற்றவள்போலவென்ன. (௧௮)

ஆய்ந்தவன்றுய்க்குமைந்தரனைவருமொப்பாராகக்
காய்ந்திவர்மூவர்தம்மைக்கடிவதென்னென்றுஞானந்
தோய்ந்தவன்நோக்காலுண்மைதுணிந்தகச்சாயைதன்பா
லேய்ந்துநீயாரைவல்லேயிசையலதிடுக்கணேற்பாய். (௧௯)

எனவெகுண்டுரைப்பவஞ்சியிலங்கெழிற்சஞ்ஞையேய்ந்துன்
மனமருள்கிரணவெம்மைவாய்வதற்கஞ்சிமாமைத்
தனதுருச்சாயையென்னைத்தானெனத்தந்துநின்பா
லனநடைக்கிழத்தியாகியமர்கெனவளிக்கவன்றே. (௨௦)

கலந்துநின்னேடுமேவிக்காதல்கூர்மைந்தராக
வலந்தருமிருவர்தம்மைவாய்ந்தவர்தம்மையன்பா
னலந்தரப்பரிந்துசஞ்ஞைமைந்தர்பானயப்பற்றன்னேர்ப்
புலந்தனனென்றுவுண்மைபுகன்றவள்கரந்துபோனுள். (௨௧)

---

* மேவற்கு-சஞ்ஞை தன்னுயகனுகிய சூரியனை யடைதற்கு. † உஷ்ண கிரணத்தினீங்கி. ‡ மனு முன்னையது வைவவச்சுதமனு, பின்னையது சவர்ணிமனு.

போயபின்றுவட்டாவில்லிற்பொழிகதிரிரவிபோகி
வேயனபசுந்தோட்சஞ்ஞையாங்கெனவிரைந்துசிற்பி
யாயவன்பற்றித்தோளாற்பிணித்தரனருளாற்*சாணை
வாயவனுரவெய்யமுரட்கதிர்மழுங்கவாக்கி. (உஉ)

ஒழுகெழில்வனப்புவாய்ந்தவொளியுருவுவப்பமேவிப்
பழுதறுமிரவிக்கின்சொற்பகர்ந்துநின்பாலார்வேட்கை
தழுவியசஞ்ஞைநின்கூர்தருங்கதிர்க்கஞ்சிச்சாம்பி
முழுமறைவனத்துநோற்பாண்முயங்குதற்குறுதிமேவ. (உ௩)

ஆங்கடைந்துனதுமேனியழகெலாமவட்குநல்கித்
† தேங்கடைந்தனையமென்சொற்சேயிழைதிருவில்வீசிக்
கோங்கடைந்தடவிநோற்குங்குவிமுலைகுழையப்புல்லித்
தீங்கடைந்தமர்ந்தவின்பஞ்சேர்கெனச்செப்பவேகி. (உ௪)

பூமகட்கரிசீர்மார்பம், ‡ புவிமகட்கணிபொற்றாலி,
பாமகட்கயன்றனுவாம், பயின்மறைவனத்துமேவித்
§ தேமகட்கமலவாவித்தீர்த்தங்கடிளைத்துநாகக்
கோமகட்கங்கமீந்தகுழகனைக்குழைந்துபோற்றி. (உ௫)

மணிவளர்மறைசைமுற்றுந்தேடித்தன்மனையைக்காணு
தணிகிளர் ○வடவையாகிநின்றதையறிந்துகாமம்
பிணிசெயக்கனிந்துபாய்மாப்பிறங்குருவாகிச்சேரப்
பணிவளரல்குலேனுரெனப்பிரிந்தகற்றிப்பல்கால். (உ௬)

கணவனென்றுணர்ந்துகாமக்கலவியிற்களித்துக்கூடிப்
புணர்தலுமிருவர்தம்பாற்பொங் ┼ கழல்பரிபோற்றேன்றி
யணவுதலறிந்துதாங்கியளக்கினருக்கன்வீழ்ப்பத்
தணவுறுவடவையாகித்தரித்தனுதரணியோங்க. (உ௭)

---

* சாணையின்கணச்சூரியனிருக்க. † தெளித்தெடுத்ததேன்போலுமென் சொற்களை வசனிக்கும் சேயிழையாகிய சஞ்ஞையினது திருவில்வீசுதலினு லே கோங்கரும்பானதுதோற்றுக்காட்டையடைந்து நோற்றற்கேதுவாகிய குவிமுலைகுழையப்புல்லிச் சிலகாலமிடை யூருகிய தீங்கையடைந்திருந்த காமவின்பத்தைப்பெறுகவெனச்செப்பச் சென்றெனக. ‡ புவிமகட்கணி பொற்றாலி-பூமிதேவிக்கு வேதாரணியம் திருமங்கிலியம்போலு மென்பது தாற்பரியம். § தேம என்புழிஈற்றகரம் ஆறுவதனுருபு. நாகக்கோ-மலையர சன். ○வடவை-பெண்குதிரை. ┼ அழலானது குதிரைபோலத்தோன்றி வருதலையறிந்து.

பரவையின்வீழ்த்தபின்னரிருவரும்பழையமேனி
வரமுறமேவிச்சித்திவனப்பருள்சஞ்ஞைதீர்த்தங்
கரவறப்படிந்துபோற்றிக்கலந்தனர்வானிற்காட்சி
விரவியசஞ்ஞைதீர்த்தம்படிந்தவர்விழைந்தயாவும். (உ௮)

மேவியேவினைகள்வீட்டிச்சித்திகண்மேவியீசன்
பூவினேர்பாதநீழற்பொலிகுவரொருகான்மூழ்கிற்
றுவிரிவாசபேயபலத்தினைச்சார்வரென்றுற்
காவிசூழ்சஞ்ஞைதீர்த்தமேன்மையார்கணிக்கற்பாலார். (உ௯)

வேறு.

மறைவனத்தலர்வாவிவகுத்துளச், குறையகற்றினள்கோதறுசஞ்ஞையென்,
றிறைவனுக்கருண்மாமுனியின்சொலாற்,கறையகற்றியகாதையிதாமரோ.

சஞ்ஞைதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯,௧௧௪.

# சத்தசாகரதீர்த்தச்சருக்கம்.

சத்தசாகரமேன்மைதடங்கடல்
வைத்தமாநிலமுற்றுமகிழ்தர
வத்தனாருளென்னவளித்திடு
முத்தவெண்குடையாற்குமொழிகுவான். (௧)

ஆதிகற்பத்தலை * கடலேழுமாய்ந்
தேதினீதியில்வாழ்க்கையியற்றுவான்
மாதுவேண்டிவகுத்துலகாக்கிடுந்
தீதிறக்கனைச்சேர்ந்தடிபோற்றியே. (௨)

பெருகுசோமன்பிறங்கியகாசிபன்
மருகராகவகுத்ததுபோலெமக்
குருகுகாதற்புதல்வியுதவிநீ
யருளுவாயெனவாய்ந்துமறுத்தனன். (௩)

மறுத்ததக்கனைவாரிகளேழ்வருங்
கறுத்தநெஞ்சிற்கனன்றுகழிவளம்
பொறுத்தவேதவனத்திற்புகுந்துதீங்
கறுத்ததீர்த்தமனைத்தினுமூழ்கியே. (௪)

* கடலேழுமானவை யாய்ந்து என எழுவாயாக வைத்துரைக்க.

வேதநாதன்விரும்பியநல்கிடும்
பாததாமரைபோற்றிப்பணிந்துபின்
* ஞுதவேசனுக்குத்தரத்தார்வமோ
டோதவேலைகள்வைகியுவப்பினுல். (௬)

மேயவாச்சிரமத்துவிளங்குசீர்ப்
பாயதம்பெயராற்பனிமாமலர்த்
தூயவோர்தடந்தொட்டனரத்தடஞ்
சாயன்மேன்மைதழைத்தணிசார்ந்ததே. (௬)

ஆக்குமத்தடமூழ்கியனுதினந்
தூக்குமந்திரஞ்சொல்லிச்சுருதியால்
வாக்குநீரபிடேகமறைவனந்
சாக்குநாயகற்காட்டிக்கசிவினுல். (௭)

வற்றியாகமறுகுறவான்றவ
முற்றியோர்மண்டலஞ்செலமோகமீர்
பற்றியாத்திரையாறும்பயின்றுநேர்
மற்றிலாதமறைவனவள்ளல்பால். (அ)

மாடுசூழ்வலங்கொண்டுமகிழ்ந்துவா
ருடுசேவடிகண்டெழுமன்பிஞு
னீடுகாதனிலைபெறமாமறை
தேடுநாதன்றிருவுருத்தேறியே. (௯)

வேறு.

அரகரசங்கரவமலவற்புத
புரகரபுங்கவபுனிதபூரண
சிரகரதுங்கவனங்கசீதர
முரகரபங்கவபங்கமுன்னவ. (௧o)

கரியுரிபரிதருமுரககங்கண
புரியெரிபுரைவிரிசடிலபுங்கவ
பரிபுரமரிசொரிசரணபங்கய
வரிவிரிமரையவற்கருளுமங்கண. (௧௧)

வேறு.

எனத்துதித்திறைஞ்சவேதவனத்திறையெதிர்ந்துதோன்றி
மனத்துயரகற்றுந்தூயமானினிவேண்டிநீங்க
ளனத்துறைமறைசைமேவியாறியாத்திரையுமாற்றித்
தினத்துறத்தவமும்போற்றிச்செழுந்தடந்திகழச்செய்தீர். (௧௨)

---

* பாற்கரேசலிங்கப்பெருமானுக்கு.

இனமணிவரன்றிக்கூலத்தெறிதருநதிகள்யாவு
மனமகிழ்மனைவியாகவயங்குவீர்மீளவின்னும்
பனவரமளிப்போமென்னப்பரவைகடொழுதுபாத
வனமலர்பணிந்துபோற்றிவாழ்த்தினர்வகுத்துச்சொல்வார். (௧௩)

அழிந்துலகடங்கிற் * காலவங்கியெம்மாக்கவீக்க
மொழிந்துகவன்னியேவவுன்னுநாளுருவமென்பூ
வழிந்ததேனூறுபாயுமறைவனமேவிவைகப்
பொழிந்தருள்புரிதியெம்மாற்போற்றியபுனிதவாவி. (௧௪)

ஐயநின்னருளாலெம்பேராகவங்கதனிற்றோய்ந்தார்
வெய்யவெம்பாவமுற்றும்வீட்டிநின்விமலமாகுஞ்
செய்யசேவடியிற்சேரத்திகழுணர்வளித்தியென்னத்
தையலோர்பங்கன்வேண்டும்வரமெலாந்தமக்கங்கீந்தே. (௧௫)

ஒளித்தனன்கடல்களெல்லாமுவகையோடோங்கித்திங்கட்
டெளித்தனநதிகள்காதற்சேயிழையாகமேவிக்
களித்தனவொடுங்குங்காலைக்கமழ்மறைவனத்துமேவி
யளித்தநல்வரத்தாற்சத்தசாகரத்தமர்ந்துமன்னும். (௧௬)

மடிவிலாமறைசைக்கூழிவருதலின்றதனுண்மேவி
யொடிவிலாதுறையுஞ்சத்தசாகரமுவந்துமூழ்கிற்
கடியதிவினைகள்வீட்டிக்கதிதருஞானமேவிப்
படியின்மேலுயர்ந்துவாழ்ந்துபரன்கழற்பதமஞ்சேர்வார். (௧௭)

வேறு.

தேன்றருமகதியாழ்த்திருவமாமுனி
வான்றருசத்தசாகரத்துமாட்சியை
யூன்றருநெடியவேலுரவற்கோதினான்
சான்றருந்தவமுதற்றருமஞ்சாரவே. (௧௮)

தாழ்குழற்சஞ்ஞைதன்றடத்துக்காதையு
மேழ்கடற்சத்தசாகரத்தினேய்வதுங்
கேழ்தரப்படிப்பவர்கேட்பவர்க்கெலாம்
வாழ்வுறத்தனயருமனையுமல்குமே. (௧௯)

சத்தசாகரதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,௪௩௩.

---

* காலவங்கி-காலாக்கினிருத்திரர்.

# அத்திரிதீர்த்தச்சருக்கம்.

புத்தமுதெனக்கதைபொழிந்தருள்புரக்கு
மத்த * புவனத்தொகையளித்தருள்சுரக்கும்
வித்தகர்தமைப்பெறவிருப்புறுதவத்தா
லத்திரிவகுத்தவகைசெப்பெனவளிப்பான். (௧)

[illegible]த்தவுயர்தக்கன்
வேதியனருட்கொடுவிருப்பினொடுமிக்க
வாதியினுயிர்த்தொகையனைத்தையுமளித்தே
யூதியமுறப்பெருகுவப்பினொடுமுற்றான். (௨)

† தக்கனுயர்சந்ததிதனைத்தவநெறிக்கண்
[illegible]ப்பறவினைப்பா
ன்றுக்கபகுதித்திரிதொடக்கறவிடுத்தார்
மக்களெனவுற்றிடமனத்திடைமதித்தான். (௩)

‡ பீதவனமுற்றொளிர்பெருஞ்சிறையிசைச்சீர்
நாதவனமுற்றுநளினத்தடநயக்கும்
வேதவனமுற்றிருள்விடுத்தருள்பழுத்தா
ரோதவனமுற்றுயர்பதித்திறமுணர்ந்தே. (௪)

ஆர்த்தலைமணித்தொகையரித்தயலளிக்குந்
தீர்த்தமளவற்றனதிலைத்துமகரந்தம்
போர்த்தபுரியாத்திரைபுரிந்துமதன்வீழப்
பார்த்தவனடித்துணைபணிந்துபரிவோடும். (௫)

---

* புவனத்தொகையளித்தருள்சுரக்கும்வித்தகரென்றது மும்மூர்த்தி களை. † தக்கன்துயர்ந்த சந்ததியைத், தவநெறிக்கண் மிக்குயரு மத்திரிமுனி வர், வியப்பானது நீங்கப்பார்த்து, இருவினைப்பகுதியை யுடைய மூன்று பிரகிருதிக்கட்டறக் கழித்துவிட்டவர்களாகிய திரிமூர்த்திகளைத் தன் பிள் ளைகளென்று பெறும்படி மனத்தின்கண் மதித்தாரென்க. தக்கன்து பிரகிரு தியிலகப்பட்ட சிருட்டியைப்போலன்றித் தான் அதிலகப்படாத சிருட்டி செய்ய விரும்பினார் என்பது கருத்து. ‡ பொன்னிறம் பொருந்திவிளங்கும் பெருஞ்சிறைகளையும், இசையையுடைய சிறந்த நாதத்தையுமுடைய அன் னங்கள் முழுதும் விரும்பும் தாமரைத்தடாகங்களையுடைய வேதவனத்தை யடைந்து அஞ்ஞானத்தை விட்டருள்கனிந்த அடியார்கள் துதிக்க; அழகு மிக்குயர்ந்த கடவுட்டிறத்தையுணர்ந்தென்க.

* உள்ளௌனவுரைத்தகிருகத்தினையொழித்தே
புள்ளமர்புறத்தலையிருக்கைபுரிகிற்பான்
றெள்ளுமலயத்துறைதிருத்தகுதவத்தோன்
கள்ளவிழ்மலர்த்தடவிருக்கையெதிர்கண்டான். (௬)

வேறு.

தேனார்தமிழ்மாதவனின்பூதினைத்துமேவுங்
கானார்திருவாச்சிரமத்தினைக்கண்டுகாதல்
வானார்தவமாற்றுதற்கித்தலைவாய்ந்ததென்னாத்
தானாதரவோடுமகிழ்ந்ததுசார்ந்துவைகி. (௭)

முடியாதனவாயினுமேவமுடித்துநல்கும்
வடிவாயவிலிங்கமனுத்திரள்வாயவாற்றிக்
கடியாரபிடேகமியற்றிடக்காதலோடும்
படியாரவகத்தியன்பூசைபரித்தவீசன். (௮)

பின்மேற்றிசைபேசியவிற்கிடைநூறுபேணி
வின்மேற்படர்வாவியுந்தன்பெயர்மேவவாற்றிச்
சொன்மேற்புடுதீர்த்தமுக்காலமுந்தோய்ந்துசோதி
தன்மேற்படர்தீர்த்தமுமும்முறைசாலவாட்டி. (௯)

தெரிநாண்மலராதியருச்சனைசெய்துபின்னர்ப்
பரிவோடுமகத்தியவீசனற்பாதமேவிப்
பிரியாதுபணிந்துமனத்துறுபெட்பினோடு
மரிதாயவருந்தவமாற்றினனன்புமிக்கான். (௧௦)

பன்னாளுமில்ஞ்சிபடிந்துபரிந்துபூசை
மின்னாருமகத்தியவீசனைமேவவேத்தி
† "யின்னாதவருந்தவமாற்றியெதிர்ந்துதோன்று
நன்னாளுளதாவதுமுண்டுகொலென்றுநண்ணி. (௧௧)

மாயுந்தவமாற்றிவலிந்தெழுகாமமாதி
காயும் ‡ புதனாகியவத்திரிகாதல்கூர
வாயுந்தமிழ்வாயவளித்தவகத்தியேசன்
பாயுந்தனிமால்விடைமீதுபரிந்துதோன்றி. (௧௨)

---

* உள்ளௌனவுரைத்தகிருகத்தினையொழித்து - அந்தர்க் கிருகத்தை யொழித்து. வேதாரணிய எல்லைக்குள்ளிருக்கலாகா தென் கருதி அதனை விட்டுநீங்கி என்பது கருத்து. † இன்னாத வருந்தவம்-உடம்புக்குத் துன்பந் தரு மரியதவம். ‡ புதன்-அறிஞன்.

ஆற்றுந்தவம்பூசையிலஞ்சியமைத்தவன்பாற்
போற்றுந்திறத்தான்மகிழ்வெய்தினம்புந்திமேவிச்
சாற்றும்பயனல்குதுங்கேளெனத்தாழ்ந்துவிண்மேற்
றேற்றும்பரஞ்சோதியைக்கண்டனன்றேகையோடும். (௧௩)

திரைமேலெழுவெங்கதிராயிரஞ்சேர்ந்தசோதி
நிரைபேருலகெங்கணுமூழ்கநிரந்தவானோர்
விரைமாமலர்சிந்திடநோக்கிவிழைந்துபோற்றித்
தரைமீதுபணிந்துமகிழ்ந்தடிதாழ்ந்துசொல்வான். (௧௪)

வேறு.

பன்னற்கரியபரமாயபதியேபோற்றிபசுமாழை
மின்னற்சடைமேலிளமதியமிலைந்தாய்போற்றிவிதிமாலு
முன்னற்கழலாயளவாதமுளைத்தாய்போற்றிதமிழ்முனிவ
னன்னத்திரள்சூழிருக்கையமர்ந்தருள்வாய்போற்றியரபோற்றி. (௧௫)

எழுதாமறையினீற்றுளிருமிறையேபோற்றியிலங்குலக
முழுதாய்ப்பரந்துதனியாயமுதலேபோற்றிமுதிரன்பாற்
றொழுவாருளத்தின்னமுதாயசுவையேபோற்றிசுடர்ச்சோதி
விழுதார்சடையாய்குறியமுனிவிழைந்தாய்போற்றிவிடை*போற்றி. (௧௬)

† அந்தீங்கிளவியமுதாயவருளேபோற்றியவிர்மேனி
செந்தீவண்ணனொடும்பிரியாத்திருவேபோற்றிதிகைத்தெளியே
னுந்தீங்குழலாதளித்தவெழினுதலேபோற்றிபோற்றியிலங்
கிந்தீவரமேயனவாட்கணிமயமீன்றவிளங்கொடியே. (௧௭)

போற்றியிணையற்றேருருவாய்ப்பொலிவீரென்னப்புகழ்ந்தேத்த
வேற்றினமர்வார்வேண்டுவநீயிசைப்பாயெனலுமிலங்குலகின்
மாற்றிலாதமூவருமென்மகவாய்மேவவரமாய
பேற்றையினிதுநல்குகபின்பேசும்வரமுமொன்றுளதால். (௧௮)

அளியேனியற்றவென்பெயரானலங்குவாவிபடிந்தடியேன்
றெளிவாரிலிங்கந்தனைப்போற்றித்திகழ்ந்தார்தீயவினைவீட்டிக்
களியார்போகமுத்தியினைக்காணவருள்வாயெனப்போற்ற
வொளியாமொருவனளித்திலிங்கத்தொளித்தானுலகமோங்குறவே. (௧௯)

---

* விடைபோற்றி-இடபமும்போற்றப்படுவது. † இச்செய்யுள் அகத்தியான்பள்ளியிலெழுந்தருளியிருக்கும் பாகம்பிரியாளென்னுமம்மைதோத்திரம். இவ்வம்மைக்கு வாமபாகேசுவரி என்பது சமஸ்கிருத நாமதேயம்.

புந்திமேயவரமேவிப்பொலியுமகிழ்வாற்புரிவோடு
மந்திவண்ணன்றனைப்போற்றிவிடைகொண்டமருமாச்சிரம
நந்துகாலைத்*துருவாசன்றத்தாத்திரையனெனநாம
முந்தியீன்றனனசூயைமுகுந்தனரனைமுறையுறவே. (உ0)

தோன்றலாயவிவர்யோகத்துறைகட்கரசாய்த்துகளற்று
ரான்ற†மதியாயத்திரிநேத்திரத்தினுதித்தானலரோனு
மேன்றுமூவர்க்கத்தனெனுமிசையின்மேவியத்திரியுங்
கான்றமலர்த்தேன்சூழ்மறைசைமேன்மையதனாற்களிகூர்ந்தான். (உக)

தெத்தாத்திரையன்றுருவாசனென்னச்சிறந்தோரத்திரிதன்
முத்தார்வாவிமூழ்கியவன்முதலைப்போற்றிமுருகுயிர்க்குங்
கொத்தார்வேணிக்குறுமுனிப்பேர்க்கோமான்றனையுங்குழைவோடும்
புத்தாரமுதமெனப்போற்றிச்சித்தியோகிற்பொலிந்தனரே. (உஉ)

கண்ணுவனுமத்திரிதன்றீர்த்தத்து‡மழலவன்றன்கயத்துமூழ்கி
யுண்ணிகழும்விருப்பதனாலிலிங்கமுமொன்றமைத்தரிச்சையுதவிப்போற்றிப்
பண்ணியலுந்தமிழ்முனிவன்பகவனையுமருண்மேவிப்பலநாள்வைகி
யெண்ணிகழுமுனிவர்குழாத்துயர்ச்சியுறவிலங்கினனாலினிமையேய்ந்தே.

§ தருமனுமத்திரிதீர்த்தந்தனின்மூழ்கிக்குறிபோற்றித்தமிழ்த்தேனல்கும்
பொருவருமாதவன்போற்றும்புனிதனையுந்தினம்போற்றிப்புதுநீர்வாவி
திருமருவவமைத்தொளியார்சிவஞானஞ்சீவன்முத்தித்திறமுமேய்ந்தான்
மருவுமருள்பெறுலோபாமுத்திரையுமவன்போலவகுத்துவாய்ந்தாள். (உச)

---

* எதிர்நிரனிறை. அத்திரிமுனிபன்னியாகிய அனசூயையினிடத்துக் கர்ப்பவாசஞ்செய்து பிறத்தலாகிய துர்வாசமின்றி, அவளது புஷ்பாஞ்சலியினின்றும் சிவாம்மிசம் ஓர்குழந்தைவடிவாகிக் கீழேகுதித்து விளையாடினமையின், அக்குழந்தைக்குத் துர்வாசன் என்னும் காரணக்குறி உளதாயிற்று. தம்மடியவர்க்கு வரும் விக்கினங்களை நீக்குபவர் எனப் பொருள்படும்வழி, விக்கினேச்சுரபதம் பொருள்படுமாறுபோல இத்துருவாசபதமும் பொருள்படுமென்க. துர்வாசன்-கெட்டவிடத்தில் வசியாதவன். இனி அத்திரிமுனிவருக்கு,விட்டுணுவே தம் மாயாசத்தியினால் உருத்திரமூர்த்தியைப்போலவும் மாயாரூபங்கொண்டு வெளிப்பட்டு, மும்மூர்த்திமகப்பேறுவரங்கொடுத்துத் தாமே மும்மூர்த்திரூபமாகிய மகவுகளாகிப்பிறந்தார் எனப்பாகவதத்திற் கூறப்பட்டது. இதனாலும், ஆதிமூலமாகிய விட்டுணுவல்லது, அநாதிமூலமாகிய சிவபெருமான் யோனிவாய்ப்பட்டுப் பிறத்தல், இறத்தல்கள் யாண்டுங் கேட்கப்படாமை அறிக. † மதி-சந்திரன். ‡ அழலவன்றன்கயம் அக்கினிபுட்கரணி. § தருமன்-யமன்.

பாயிருள்சீத்தெழுங்கதிராம்பன்னிருவரரியதவம்பயின்றுபன்னாட்
டாயினருளாந்திவணன்றனைப்போற்றிப்பேரருளேதழைத்துச்சோதி
யாயிலகியுலகளித்தாரனகுயைதீர்த்தமதிலாடியுய்ந்தாள்
வேயுலகிலெண்ணிலரத்தலையகத்தியேசனருண்மேவியுய்ந்தோர். (உரு)

வேறு.

அனையவத்திரிவாவியிற்படிந்தெழுந்தகத்தியற்கருளீசன்
வனையுமீரடிபுணர்ந்திடவினையெலாம்வாட்டியேயருண்மேவி
நினையுமாத்திரைப்போகமுமுத்தியுநிகழ்த்திடுமளகேசன்
றனையுநேர்திருச்செல்வுமுமாயுளுந்தரையுறத்தழைவாரால். (உசு)

வேறு.

வித்துருமமொத்தசடைவித்தகன்விருப்பாய்
பத்திமலயத்தவனிருக்கையயல்பற்றுந்
தத்துதிரையத்திரிதடத்தியலுமேன்மை
யித்திறமெனத்தவனிறைக்கினிதிசைத்தான். (உஎ)

வேறு.

மேலாகியகாதைவிரிப்பவர்மேயகேள்விப்
பாலார்தமிழ்மாமுனியன்புபரித்தவீசன்
சேலார்விழியோடுமகிழ்ந்தருள்செய்யவென்று
நாலாகியமெய்ப்பயன்மேவுவர்ஞாலமீதே. (உஅ)

அத்திரிதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௩,௧௬௧.

---

# அக்கினிபுட்கரணிச் சருக்கம்.

பாவகனொருகாற்பின்னும்பனிமலர்ப்பசியசெந்தேன்
காவகன்மறைசைமேவிக்கயத்தினைவகுத்துக்காம
ரேவகனயனக்காவியிலங்கிழைபங்கனீய
மேவகன்மகிழ்ச்சியாக்கம்விளம்பெனவிரிக்கலுற்றான். (க)

* விரிந்தவானகத்துத்தேவரனைவரும்வேள்விப்பாகம்
பரிந்தனரமர்ந்தகாலையவிப்பயன்பற்றியார்கண்
ணருந்துவமென்னவாயுமமையத்துமறைசையாக்கந்
தெரிந்துறுதழலோன்சூழ்ச்சிதெரிந்திதுசெப்புகின்றான். (உ)

---

* தேவரனைவரும் அவிப்பாகத்தை யார்மாட்டிருந்தருந்துவேமென்று
ஆராய்கின்றுழி ஒருங்கிருந்த அக்கினிதேவன் அதற்குபாயத்தையறிந்து சொல்
வானாயினான் என்பதாம்.

விண்ணவர்கேண்மின்வேதவனத்திடையானைமேவிப்
பண்ணவர்க்கரசனாயகுறுமுனிபரித்தநோற்றிக்
கண்ணவனருளானும்மைக்கலந்துநம்படிவமாகி
யுண்ணவியளிப்பனென்றாவுரைத்தவருவப்பவேகி. (௩)

குறுமுகைவெடித்ததேனுங்*குடக்கனிகொழித்தசாறு
முறுசுவையரம்பைதேமாவுறுங்கனிச்சாறுமாய
சிறுநதியலர்த்தூண்மேயசேற்றிடைச்சேவலன்ன
மிறுதுணையளிக்கும்வேதவனத்தினையெய்திப்போற்றி. (௪)

வெறிதருகாமமாதிவிடுத்துமெய்ஞ்ஞானமேவிக்
குறிகுணமகன்றவின்பமாகியேகுலவுங்கோற்றேன்
செறிதமிழ்முனிவன்மேயவிருக்கையிற்சேர்ந்துபோற்றி
யறிவுருவாயவத்திவண்ணனையமர்ந்துமேவி. (௫)

சன்னிதியதனிற்றீர்த்தந்தன்பெயர்சாரவாக்கிப்
பொன்னிவர்சடையார்க்கந்நீர்புரிந்தபிடேகமாற்றி
நன்மலர்சந்தமாதிநலம்பெறப்பூசையாற்றிச்
சொன்னயத்துதியினோடுவணஞ்செய்துதொழுதுபோற்றி. (௬)

ஆற்றருந்தவமுமாற்றியனுதினமகத்தியேசன்
பாற்றரும்பூசையாற்றிப்பணிந்துசூழ்ந்தெழுந்துபண்பா
னேற்றிடுமனலோன்முன்னநுடங்கிடைபாகன்மேவி
நீற்றொளிமேனிகாட்டிநிறையொளிப்பரப்பினின்றே. (௭)

அங்கியன்பிற்பூசையாற்றலாலரியநோன்பாற்
பொங்கியபூநீர்ப்பொய்கைபுணர்த்தலாற்பொருந்திநம்பாற்
றங்கியிருக்கையாற்றுந்தன்மையாற்றருதும்வேண்டிற்
றிங்கிசையென்னுமோசையிருசெவிப்புறத்துமேவ. (௮)

இலங்கியவிதயநாப்பணெழுஞ்சுடர்க்கொழுந்தாயோங்கி
யலங்கியவுருவந்தானேயாகிவேறன்றியாசு
விலங்கியசமாதிமேயோன்விழித்துத்தண்ணென்றுமேனி
கலங்கினனெழுந்துகண்டேகண்கணீர்க்கலுழிபாய. (௯)

மெய்ம்மயிர்ப்புளகம்போர்ப்பவிழுந்தடிபல்காற்போற்றி
யையனேயமுதேயாண்டவரசனேயவிருமேனி
செய்யனேசிவனேசோதிச்சிற்பரத்தெளிவேசெங்கண்
வெய்யமால்விடையாய்கும்பமுனிக்கருள்விமலாபோற்றி. (௧௦)

* குடக்கனி-பலாப்பழம். அலர்த்தூள்-பூவின்மகரந்தம்.

புந்தியிற்பொலிவேபோற்றிபூரணபுனிதாபோற்றி
யந்தியிற்றிகழுமேனியண்ணலேபோற்றியார்வ
முந்திநீயளித்தலாலேயுயர்மணவாளக்கோல
நந்தியேமகிழ்ந்துநல்கக்குறுமுனிநலத்தைச்சேர்ந்தான். (௧௧)

அன்னநீயெனக்குவேண்டிற்றளித்தியேலமரராக்க
மன்னவேயொருங்குகூட்டமருவுசங்கற்பசித்தி
முன்னநீயளித்தென்றீர்த்தமூழ்கிநிற்போற்றினோரு
மின்னறீர்ந்தின்பமாயுளிசைவனப்பீறில்செல்வம். (௧௨)

மழைமதர்நெடுங்கணல்லார்மைந்தரோடமர்ந்துவாழ்ந்து
பிழைதருதீமைவீட்டிப்பிறங்கியபோகமுத்தி
விழைதரவளிப்பாய்வேண்டும்வரமிவைவிமலவென்ன
விழையிடைமங்கைபாகன்பாவகற்கிரங்கிச்சொல்வான். (௧௩)

இலகியவன்னிநீயேயாவுமாயியைந்துதேவர்
குலவுருவாகிவேள்வியவியினைக்கொண்டுநல்கி
யலகில்சங்கற்பசித்தியடைதிநின்னாவிதோய்ந்தா
ருலகினீயுரைத்தயாவுமுற்றுமேலுலகஞ்சேர்வார். (௧௪)

சித்திரைச்செறிவெண்பக்கந்திகழ்ந்தசத்தமிநாளின்பே
ரத்திரைக்கடலினாகுமங்கிதீர்த்தத்துமாங்கு
நத்திரைத்தெழுநின்றீர்த்தமதனினுநயந்தியோக
முத்திரையுடையார்போலமூழ்கினர்முழுதுமேவி. (௧௫)

திருமலிந்தின்பமார்ந்துதிகழ்ந்தசங்கற்பசித்தி
யொருமையினடைந்துநம்பேரருளினாலுயர்வாரென்னாப்
பெருவரமளித்துத்தூயவிலிங்கமாய்ப்பிறங்கப்போற்றித்
தருநிழலவரைவாழ்வித்தனலவன்றழைத்தான்றானும். (௧௬)

எழுந்திரையங்கியாற்றுமிலஞ்சியிற்படிந்துசோதிக்
கொழுந்துயருருவமாயகுறுமுனியிலிங்கம்போற்றித்
தொழுந்தவமுடையார்வேண்டுந்திருவெலாந்துணிவின்மேவி
யழுந்துவெம்பிறவிநீங்கியமலமாயமர்வரம்மா. (௧௭)

அளக்கரினங்கிதீர்த்தமாவியாமங்கிதீர்த்தந்
துளக்கறப்படிந்துதூயகுறுமுனிதொழுதுபோற்றும்
விளக்கமாரிலிங்கம்போற்றுமேன்மையார்மேன்மையாரே
இளக்குவாரமரர்போற்றக்கேடில்வீடடைவரன்றே. (௧௮)

குறுமுனியிலிங்[illegible]டருருவங்கண்டார்
பெறுகுவரின்பவீடேபிறங்கியபோகம்வேண்டி
னறுமலர்த்தருவினீழலுள்முகனிருக்கையாதி
மறுவறுபதங்களன்னோர்வரவெதிர்கொள்ளுமன்றே. (௧௯

அனலவன்றீர்த்தமூழ்கியகத்தியவீசற்கன்பாற்
புனன்மலிபழனப்பேரூர்புனிதவான்பொருவில்சாந்த
மினுமணிப்பூண்பட்டாடைவிரைமலர்மாலையீந்தோர்
முனமலிகோபுராதிதிருப்பணிமுறையிற்செய்தோர்.　　　　(௨0)

சேயிதழ்க்கமலம்போலுஞ்சேவடிபணிந்தார்யாரும்
பாய்திரைப்புடவிமுற்றும்பரித்துப்பின்பரிந்தபோக
மேயிருஞ்சுவர்க்கமேவிவேண்டியவின்பமார்ந்து
தாயினுமினியான்செய்யசரணிழற்றங்கிவாழ்வார்.　　　　(௨௧)

அத்திரியிதனின்மூழ்கியந்திவண்ணனையும்போற்றிப்
பத்தியிற்பணிந்துமூவர்தமைப்பெறும்பதத்திற்சேர்ந்தான்
சித்திகண்ணுவனேயாதிமுனிவரர்சேர்ந்தாரீது
முத்திநல்வழியாமாடிமுனிதொழுமுதலைப்போற்றின்.　　　　(௨௨)

செங்கனன்மீண்டும்வேதவனத்திடைச்சேர்ந்துதெண்ணீர்ப்
பங்கயவாவியாற்றிப்படர்ந்தமைபகர்ந்தேம்பாரிற்
சங்கரனுருவமாயமறைவனத்தன்மையோர்ந்தாய்
மங்கலமாகியோங்கிவாழ்கெனவகுத்துச்சொல்வான்.　　　　(௨௩)

அணிவளநிறைந்துபாரோர்க்கமுதமாயமலமாகிப்
பணிபவர்க்காக்கநல்கிப்பரம்பரற்கிதயமாகிப்
பிணியுறும்பிறப்புநீக்கும்பெருமறைவனத்துமேன்மை
துணிவனவுரைத்தேமுற்றும்யாவரேசொல்லவல்லார்.　　　　(௨௪)

வரன்முறை, யிலிங்கந், தோற்றம், ௦ வனப்பதி, நாம, மேன்மை,
யரன்மனு, வன்னி, யாறியாத்திரை, மணத்திருக்கம்,
பரவிடங்கேசன், * றென்பாற்பசுபதி, யடைந்தோர்பான்மை,
விரவியதீர்த்த, மேன்மை,விளக்கினம்விதியிற்றந்தே.　　　　(௨௫)

மறைவனப்புகழ்படிப்பவர்கேட்பவர்வல்வினைத்திரணீக்கிக்
குறையகற்றியேதிருக்கவின்காதலர்கோற்றொடிகுணமாயு
ணிறைதரப்பொலிந்தளவிலின்பார்ந்தணிநிலத்திடைப்புகழ்மேவி
யிறையெனப்பொலிந்திமையவர்போற்றிடவிலங்குவரெழில்வாய்ந்தே.　　()

என்றுமோரையொன்றலதொருதலத்திடையேய்ந்திடாவெனக்கீச
ஞென்றுபேரருளுதவலாலித்துணையுன்னுழையுயர்ந்தோங்கித்
துன்றுசீர்மறைவனக்கதையோதினேன்றுகளறுங்கதிபெற்றே
னன்றுமேவியகேள்வியானீயுமுய்ந்திருமையுநணுகுற்றாய்.　　　　(௨௭)

---

* தென்பாற்பசுபதி இராமநாதசுவாமி. அடைந்தோர் சாலிகோத்திர முனிவர் முதல் அக்கினிதேவன் ஈறாயினோர். இறுதிக்கண்மேன்மை-குளகே சர் மேன்மைமுதலிய ஒழிந்தமேன்மை. விதி முதனூல் விதியும்,இலக்கண விதியும், இன்னோரன்ன பிறவிதியும். வனப்பதி வேதவனப்பதி.

செல்வன்ஞானியென்றிடநாரதன்சேவடித்தலம்போற்றி
யெல்லையீருமன்பிருங்கதிகாதையாலீந்தனையெனையாள்வான்
மல்லன்மாதவமறக்கிலேனெனத்தொழுமன்னனைவிடைகொண்டே
யொல்லைவானகத்துற்றனனாரதனுயர்மறைமுனிவீர்காள். (௨௮)

வேறு.

வாகைநெடுங்கதிர்வேன்மாந்தாதாநாரதனைமறையோன்மைந்த
னோகையினின்வினவவவனுயருமறைவனமேன்மையுரைத்தவாறே
யீகைபெறநைமிசத்தீருமக்குரைத்தேனிதுதேர்வாரெடுத்துச்சொல்வார்
பாகைநிகர்பணிமொழி[illegible]ப்பதிவாரென்றும். (௨௯)

என்னவுயர்தவச்சூதனிசைத்திடநைமிசத்தவத்தோரெழுந்துமேலோன்
பொன்னடித்தாமரைபோற்றிப்பூசைபுரிந்தருந்தவத்தோய்பொருவில்காதை
பன்னரியகதியெளிதேபயப்பவருளினைநோன்பின்பயனும்பெற்றே
முன்னவனுமருள்புரிந்தானினிக்குறையுமொன்றுமிலேமுனிவவென்றே. ()

வேறு.

நாரதன்முழுவதுநவையறவுணர்தருநலமேவுங்
காரணமெதுவவனியல்வரன்முறையொடுகரைவாயென்
றாரணமுணர்தருமறவர்கள்வினவிடவறிவாரும்
பூரணநிலைபுணர்புகழ்முனிகனிவொடுபுகல்கின்றான். (௩௧)

அக்கினிபுட்கரணிச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩,௧௯௨.

---

## நாரதச்சருக்கம்.

உள்ளத்தீமையொழித்தின்புதவலாற்
பள்ளத்தார்புனல்போலப்படருமா
லள்ளற்போதவிழ்த்தாகியதேன்பொழி
வெள்ளத்தார்மறைக்கானத்தமேன்மையே. (௧)

முற்றுமாய்ந்துமுதுக்குறைமேவியே
யெற்றிமுப்பகையின்பச்சுடரதாய்ப்
பற்றுஞானப்பரவைமிந்நாரதன்
பெற்றவாறென்பிறங்கியகேள்வியாய். (௨)

வேதமேயுருவாயவியாதனாற்
போதமேவியபுண்ணியமூர்த்தியே
யேதமின்றிவிணவியயாவையு
மோதினனருள்வேந்தனுவப்பவே. (௩)

என்றுநைமிசமேயவிருந்தவ
ரொன்றுகாதலிற்கேட்பவுவப்புரு
நன்றுநீருரைசெய்ததுநாரதன்
* றுன்றுமாறுதுணிதிரென்றோதுவான். (ச)

பொதியமேயபொரியரைச்சந்தன
முதியமென்பணைமூசவுரிஞ்சியே
மதியசீதமணியெனவார்த்துமென்
புதியபோதிற்பொருநைபொலிந்ததால். (ரு)

மலையினுள்ளவளங்கவர்ந்தார்கலி
நிலையினூடுநிமிர்ந்துகலங்கொளா
வலையின்முத்தமணிதருமாசெயா
விலையின்மேயவணிசரின்மிக்கதே. (சு)

தருமமேயுருவாயதழங்குநீர்ப்
பொருநைமேயதென்னுடுபொலிந்துளார்
பெருமையாளர்பிறங்கியவேதநூ
லொருமையார்நெறிமுற்றுமுணுற்றுவார். (எ)

கண்ணுதற்பெருமான்பொடிகண்டிகை
மண்ணுவாருடன்முற்றுமலிந்துளா
ரெண்ணுவாரஞ்செழுத்திறையீரடி
பண்ணுவாரரன்கோயிற்பணிகளே. (அ)

அன்னவேதியருரினமர்ந்தவர்
சொன்னவேவல்புரிந்துழல்சூழ்ச்சியா
லின்னன்மேவிய † தாசியிவள்குல
முன்னமேவினரோடுமுயங்கியே. (கூ)

ஈன்றமைந்தனிரங்கியிணைமுலை
கான்றபாலயின்றுள்ளங்களிப்புற
நான்றதொட்டிலடிவளர்ந்திம்முறை
தோன்றலைந்துவருடந்தொடங்குநாள். (க0)

பற்றுமுற்றவும்பாற்றிப்பகைதடிந்
திற்றதாம்பரமென்னவுணர்ந்திவை
முற்றுமப்பரமேயெனமுனனுவார்
மற்றுமெய்தன்மருவொளிகாரியே. (கக)

---

* துன்றுமாறு-பிறந்த பிரகாரம். † தாசி-அடிமைவேலைக்காரி.

திங்கணான்கும் * வருடஞ்செறிதலாற்
றங்கவோரிடமோர்ந்துதவமறைத்
துங்கவேதியர்தம்பதிநான்னிரு
ரெங்கணுதற்கினியயதிகளே. (சஉ)

நீத்தமாதவர்சாரநெகிழ்ந்துளம்
பூத்தவேதியர்போகம்பொறிப்புகர்
காத்தமேன்மைக்கடவுளரிங்குற
யாத்தபுண்ணியம்யாவதென்றண்மினார். (சங)

இனியநன்மொழிகூறியிரும்பதி
புனிதமாகப்பொருந்துதல்வேண்டுமென்
† றனிகமாகவிரப்பவமர்ந்தனர்
முனிவராகியமூதறிவோர்களே. (கச)

ஆங்கவர்க்குப்பணிசெயவாதியி
னோங்குநல்வினையுற்றனனாதலாற்
பாங்குதாசிமகவைப்பணித்தலுந்
தீங்கிலானதுசெய்குவதாயினான். (கரு)

இளையராடன்மறந்தவர்க்கீரடி
விளையவின்பம்வருடிவிழுத்தவர்
களையுமாடைகழீஇப்புறங்காவல்செய்
தளையுமா ‡ திவனாய்ப்பணியுய்த்தலும். (கசா)

பாலனன்பணிகண்டுபரிந்தவர்
சாலுமாதரவாற்றருமெச்சிலை
வாலிதென்னவருந்திடவல்வினை
யோலமென்றிரிந்தோடியொளித்ததே. (கஎ)

வேறு.

மறைத்தவெவ்வினைமாய்தலுமுளமொளிவாய்ந்தே
யுறைத்தவன்பினோடுறைந்தவர்சிவகதையோதி
நிறைப்பவஞ்செவிநிறைதலுநெகிழ்ந்தநேர்கூற்றங்
குறைத்தசேவடிக்காதரவெழுந்ததுகூர்த்தே. (கஅ)

* வருடம்-மழை. † அனிகம்-கூட்டம். ‡ இவனாய்-இவனொருவனாய்.

எழுந்தவாதரவேவலுமுணர்ந்தவரிமயக்
கொழுந்திரேடமர்குருமணிமந்திரங்கூறி
யழுந்தியாவருமறிவதற்கரிய * மெய்ஞ்ஞானந்
தழுந்தவாதுனையெனவருள்செய்தனர்சார்ந்தார். (௧௯)

ஞானமாதவரேகலுநானிலனாகி
யூனமுற்றிடுமிவளெனவன்னையோடுறைந்தா
னனகாலையினங்கவடோறுவிடையான்பா
ருனளித்திடவேகினனிரவிடைத்தனித்தே. (௨௦)

கடுவொடுங்கியவாளெயிற்றுடராக்கெளவ
நடுநடுங்கியேயிறத்தலுமவனதுநாடிச்
சுடுமிடம்படுகாட்டிடையிந்தனச்சூழற்
கடுகுவெங்கனற்கிரையதாக்கினனொருகணத்தில். (௨௧)

பாசவேரறப்பாற்றினன்சிவனெனும்பரிவாற்
றேசமேற்படர்ந்தரும்பதிதீர்த்தங்கள்சிவணி
நேசமார்தரவிமலனபல்புகழ்நினைந்தே
வாசமேவினன்பதிநகர்மண்டலமருங்கே. (௨௨)

திருப்பொலிந்துயர்தேசமேற்றிரிபவனொருநா
ளுருப்புவெங்கதிர்க்கோடையிற் † கடத்திடையுற்று
விருப்புமாய்ந்தறவெம்பியே ‡ வெடிபடுவிடபத்
தருப்பயின்றகான்மேவினன்வெயிலுறத்தளர்ந்தே. (௨௩)

பொறிவரிப்புலிபுழைக்கைமாப்புலவுவாயாளி
நெறிமயக்கியகுடாவடிநிணங்கவர்செந்நாய்
செறிமயிர்க்கருங்கோலமேமுதலியதிரண்டங்
கறிவழித்திடுமரியரவொடுங்கியததுவே. (௨௪)

அடைந்தவெவ்வனக்கானியாற்றடைகரையமர்ந்து
குடைந்தருந்தியேகுளிர்புனலிளைப்பறக்குலவி
மி[illegible]வினன்[illegible]யாவு
முடைந்துகும்படிதுறவர்தாணினைந்தனனுளத்தே. (௨௫)

---

* மெய்ஞ்ஞானம் உனைத் தவாது தழுவுமென முடிக்க. செய்யுமென்னும் வாய்பாட்டுத் தழுவு மென்முற்று ஈற்றுயிர்மெய்கெட்டுத் தழுமென நின்றது. † கடம்-அருநெறி. வெடி-அச்சம். ‡ விடபம்-கொம்பர்.

உணர்வினுங்கவருரைத்தவப்பரஞ்சுடர்ஞானம்
புணருமாதரம்புந்தியிற்புணரவும்புணரான்
* றுணரினீரறற்றூய்மையின்மீளவுஞ்சூழ்ந்து
மணரியோர்ந்திலன்பன்முறையின்னணமாய்ந்தான். (௨௬)

திருந்துமாவியைச்சிற்பரமதனையோதெரியான்
வருந்தியேவிழூஉமல்குகண்ணீர்விழமௌனம்
பொருந்திமேவலுமோரொலிவானிடைப்பொலிந்து
மருந்துபோலுறமற்றதுகேட்டனன்மகிழ்வால். (௨௭)

தாழ்ந்தவெவ்வினைதந்தவிப்பிறப்பினிற்றளர்ந்து
சூழ்ந்துமேவலைஞானத்தைத்துயருமிக்காயம்
வீழ்ந்தவந்நிலைவிமலமாய்வேற்றுடன்மருவி
வாழ்ந்துபோதியென்றுரைத்துடன்மறைந்ததவ்வாக்கே. (௨௮)

விழைபொருட்பயன்மேவினர்போன்மனம்விழைந்தும்
பிழையுடற்பொறைபிரிவதென்றெனப்பெரிதுயிர்த்துத்
தழையு‡மிச்சையைத்தடிந்துலகெங்கணுஞ்சரித்தே
யிழையுடைக்கொடிபாகனைநினைந்துடலிழந்தான். (௨௯)

மெய்யகன்றுடன்விரிஞ்சனைதுயர்மகவாகிச்
செய்யசெஞ்சடை†செம்பொனூலுரம்பெறச்†சீரை
தையசீருடைதண்டொடுகமண்டலந்தனிமா
னையதோன்மருவாருருவனப்பினனாகி. (௩௰)

உதித்து§நாரதனெனும்பெயர்புனைந்துயர்ஞான
மதித்துமாதவமலரவன்றனைக்குறித்தாற்ற
விதித்தவேதியன்மென்சிறையஞ்சமேன்மேவித்
துதித்தமைந்தனைத்துணிவரஞ்சொல்லெனச்சொல்வான். (௩௧)

இருளைவேரரிந்திடர்ப்பிறப்பெனும்பெயரிடும்பை
யுருளைவெம்பொடியாக்கியவுலப்பிலாநந்தத்
தெருளைநல்கெனமறைவனஞ்சேர்ந்தறஞ்செய்யி
னருளுமீசனப்பதியதிசயமுநீயறிவாய். (௩௨)

---

* அடிக்கடி நீரிலே பாதப்பிரக்ஷாளனஞ்செய்துகொண்டு மீளவுந் தியானித்தடைந்துந் தெளிந்திலன். துணர்-பூ. அஃதாகுபெயராய்ப்பாதத்தை யுணர்த்திநின்றது. † இச்சை ஈண்டாகாமியம். ‡ செம்பொனூல்-சுவர்ணோபவீதம். மரவுரியைப் பொருத்தித்தைத்த அழகியவுடை. § நாரதன்-ஞானத்தைக்கொடுப்பவன். நாரம்-ஞானம். தன்-கொடுபபவன்.

கடிதினேகெனக்கமழ்ந்தொளிகொன்றருந்துறக்கம்
படியிஞுமெனப்பல்வளங்கனிந்துபன்மறையு
நொடியுநூல்களுநுணங்கியகேள்வியுமசமுங்
குடிபுகுந்தணிகுலவியமறைவனங்குறுகி. (௩௩)

போதவிழ்த்தளிபுதுமதுவயின்மணிகன்னி
வேததீர்த்தமுங்கோடியும்விதிமுறைபடிந்து
காதலாற்பிரதக்கிணங்கவின்பெறவாற்றி
நாதனீரடிகளினமேற்பணிந்துளநயந்தே. (௩௪)

புந்தியாய்ப்பொறிநெறிப்புலப்பொருளெலாம்புணர்ந்தும்
பந்தியாதுயர்கரியெனப்படும்பொருள்விளக்க
முந்தியாயெனவுலகளித்தொளிர்தருமுருவா
லந்தியாயருளமலனேயாதியேயரசே. (௩௫)

போற்றியென்றடிபோற்றிடப்புராதனன்ருென்றிச்
சாற்றிநீவரஞ்சார்கெனத்தயங்குமெய்ஞ்ஞானப்
பேற்றினின்னலம்பெறுவல்யானெனத்தொழப்பெருகு
மூற்றினின்பமேயுதவியவுணர்விளையளித்தான். (௩௬)

குறிகுணங்கடந்தமலமாய்க்குளிருமானந்தஞ்
செறிதருங்கனசிற்பிரகாசமாய்த்*தீமான்
மறியவில்லுமிழ்ந்தணவரிதாய்மதியாதி
யறிவதற்கரிதாயுலகாதரமாகி. (௩௭)

வேறு.

ஏகமாயவத்தைக்காலத்தெல்லையற்றினதென்ருேராப்
போகமாய்த்தானின்ருயிற்சராசரம்பொக்கமாகு
மூகமாய்விளங்குஞானத்தொளியினைநல்கவோகை
வேகமாயுடல்களாதிவிரகறவிளங்கிஞனே. (௩௮)

இனையரெண்ணிலாரிப்பதியிலங்குமெய்ஞ்ஞானந்
துனைவின்மேவினர்சுருதியங்கானகச்சோதி
வினையவிச்சையும்வீட்டுதற்கருட்கொடிவேய்ந்தான்
முனைவராகியமுனிவிர்நீர்முந்துமின்முயன்றே. (௩௯)

எளிதின்முத்தியையெய்துதற்குபாயமொன்றிசைக்கேன்
விளியுமாதவவேட்கையைவிடுத்தலர்மேய்ந்தே
யளிகள்சூழ்மறைவனமடைந்தமலமாயின்பக்
களியின்மூழ்குமின்கதியினைக்கண்ணுறக்கண்டே. (௪௦)

---

* தீமான்மறிய-கொடியமானென்னுமகங்காரங்கெட.

கருப்பவெஞ்சிறைக்கிடந்துயர்நோய்க்கடற்கருக்கி
யுருப்புவெண்ணிரயத்துழுமருட்பிறப்புற்று
நெருப்புறும்புழுவெனத்துடித்தயருதனீங்க
விருப்பமேவிநீர்மறைவனமேவுதிர்விரைந்தே. (சக)

பலவுமாய்ந்ததிற்சாரமாயுண்மையாய்ப்பரமா
யிலகுபாயமீதுணர்ந்தனன்மறைவனத்தெய்ந்தே
யுலகமாயைநீரொழித்தருளானந்தவுருவா
யலகுதீர்பிறப்பகற்றுவீர்நைமிசத்தறவீர். (சஉ)

எண்ணில்*வாரமேயியம்பினுமிலகுமெய்ஞ்ஞானக்
கண்ணிலார்பவக்காதலார்மெய்யெனக்கருதா
ரண்ணலாரருளுடையரேயாக்கமென்றறிவார்
வண்ணமார்மறைவனமெவர்க்கெய்திடும்வரத்தீர். (சங)

வேறு

சூதனிவ்வாறுகூறநைமிசத்துறவோர்யாருங்
காதலான்மறைசைமேவிக்கருணையேயுருவமாகும்
வேதநாயகனைப்போற்றவிடையருளென்னச்சூத
னுதரவோடியானுமடைவனென்றனையரோடும். (சச)

பொருக்கெனவெழுந்துவேதவனத்திடைப்புகுந்துபூமேற்
றிருக்கிளர்ந்தணிகள்வார்ந்துசெறிவளநிறைந்துதேசார்ந்
தருக்கனுமுட்குஞ்சோதியரமியவீதியாம்பன்
முருக்கிதழ்ச்செய்யவாயார்†முல்லையுமுதலோர்சால்பும். (ச௫)

மகத்துறைவழக்கும்வேதவொழுக்கமுமாதுபாக
னகத்தவருருகும்பூசையார்வமுமமலவாழ்வுஞ்
சகத்துயர்சிறப்புநோக்கித்தருமத்தினுருவமாகி
மிகத்திகழ்பதியைப்போற்றியாத்திரையாறுமேவி. (சசா)

வேண்டினர்க்கமுதமாயவேதநாயகனைப்போற்றித்
தூண்டியசுடரினுள்ளஞ்சோதியாய்த்துகளிற்றீர்ந்தே
யீண்டியமகிழ்ச்சியோடுமின்பமாயிலங்குமேன்மை
பூண்டியல்பதியின்மேவிப்புனிதராய்ப்பொலிந்தாரென்றும். (சஎ)

கதிதருங்காதையீதுகற்பவர்கேட்போர்காதன்
மதிதரவிரித்துச்சொல்வோர்வல்வினைவீட்டிவானோர்
துதிதருஞ்செல்வமாயுள்சுந்தரமடவார்மைந்தர்
பதியுறவாழ்வுமேவிப்பரன்பதநீழல்சார்வார். (சஅ)

---

* வாரம்-தடவை என்பது மேலுங்காட்டினும். † முல்லை-கற்பு.

வேறு.

செந்தமிழ்மறைவனப்புராணஞ்சீர்பெறுஞ்
சந்தவின்பத்தொடைதழைத்ததாதலான்
முந்துநான்முதுக்குறைமுற்றுநல்கியே
பந்தமீர்ந்தின்னருள்பயக்கும்பன்னினே. (சக)

வேறு.

மழலையின்சொலார்மைந்தருமதுகரம்படிந்த
குழலினர்களுங்குறையறுஞ்செல்வமுங்கொடையும்
பழனவூர்களும்படைத்துவாழ்ந்தரவொடும்பகைதீர்
குழவிமாமதியணிந்தவனடிநிழற்குளிர்வார். (ருo)

வேறு.

வாழியணிவேதவனம்வாழிமறைவனநாதன்மறையோர்வாழி
வாழிபலவுலகேத்துமரன்சீர்த்திநீற்றொளியும்வயங்கிவாழி
வாழிசிவன்றிருப்பூசைசமயநெறிமாதவருமல்கிவாழி
வாழிமழைவளஞ்சுரந்துமாநிலமாமனுநீதிவாழிவாழி. (ருக)

நாரதச்சருக்க முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் ௲,உசரு.

---

## வேதாரணியபுராண முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

அகோரதேவர் திருவடி வாழ்க.

---

சருக்கமொன்றுதற்பயின்றவர்சனனவித்தனலிற்
கருக்குமென்றிதுகழறலிற்கரலிகிதச்சொற்
திருச்சருட்கொடிநிருத்துமென்சிறியதீப்பவமு
முருக்குமென்றியாழ்மொழியரிறபவிதுமுடித்தேன்.

---

## இலிங்கச்சருக்கத்துக் கூறிய

## மூர்த்தபேதங்கள் வருமாறு:—

௧-வேதாரணியேசுரமகாலிங்கம்.
௨-இராமலிங்கம்.
௩-சிந்தாமணிவிநாயகர்.
௪-மோக்ஷத்துவாரேசுரலிங்கம்.
௫-காசிவிசுவேசலிங்கம்.
௬-சித்தேசலிங்கம்.
௭-சிதம்பரசபாநாயகர்.
௮-காசியன்னபூரணி.
௯-நகுலேசலிங்கம்.
௧௦-காஞ்சியேகாம்பரேசுரன்.
௧௧-காளத்தியீசுரலிங்கம்.
௧௨-கும்பேசுரன்.
௧௩-மதுரைச்சொக்கலிங்கம்.
௧௪-திருக்கேதாரேசுரலிங்கம்.
௧௫-திருவாரூர்வன்மீகநாதர்.
௧௬-திருக்கோகரணேசலிங்கம்.
௧௭-ஆடகேசலிங்கம்; வியாசதீர்த்தக் கீழ்கரை.
௧௮-சித்திரகுத்தேசலிங்கம்.
௧௯-வியாசேசலிங்கம்.
௨௦-நாகேசலிங்கம்.
௨௧-சந்திரலிங்கம்.
௨௨-இராமேசலிங்கம்.
௨௩-தாரகேச்சுரலிங்கம்.[தென்கரை
௨௪-ஆடகேசலிங்கம்; மணிகன்னித்
௨௫-வித்தியேசலிங்கம்.
௨௬-சராசந்தேசலிங்கம்.
௨௭-ஆதிவராகேசலிங்கம்.
௨௮-சோமநாதலிங்கம்.
௨௯-லளிதேசலிங்கம்.
௩௦-துண்டிவிநாயகர்.
௩௧-அரிச்சந்திரேசலிங்கம்.
௩௨-அரிகரபுத்திரர்.
௩௩-கெங்கேசலிங்கம்.
௩௪-வைரவக்கடவுள்.
௩௫-கெங்காதேவி.
௩௬-கேசவாதீசலிங்கம்.
௩௭-வாசுகேசலிங்கம்.
௩௮-சுவிர்த்தேசலிங்கம்.
௩௯-பருப்பதேசலிங்கம்.
௪௦-மணிகன்னிகேசுரன்.
௪௧-க்ஷேத்திரபாலகர்.
௪௨-நந்திகேசுவரலிங்கம்.
௪௩-பிருகிருடிலிங்கம்.
௪௪-பரான்னேசுவரலிங்கம்.
௪௫-பரத்திரவியேசுவரலிங்கம்.
௪௬-பிரதிக்கிரேசுரலிங்கம்.
௪௭-அப்சரசுலிங்கம்.
௪௮-மார்க்கண்டேயலிங்கம்.
௪௯-பராபவாதேசலிங்கம்.
௫௦-இந்திரலிங்கம்.
௫௧-அகத்தியேசலிங்கம்.
௫௨-லோபாமுத்திரேசலிங்கம்.
௫௩-கண்ணுவலிங்கம்.
௫௪-அத்திரிலிங்கம்.
௫௫-குளகேசலிங்கம், அமுதகடேசலிங்கம்.
௫௬-கணேசலிங்கம்.
௫௭-சண்முகலிங்கம்.
௫௮-சூரியலிங்கம்.
௫௯-சந்திரலிங்கம்.
௬௦-சத்தமருத்திலிங்கம்.
௬௧-பிரமலிங்கம்.
௬௨-வருணலிங்கம்.
௬௩-வாயுவேசன்.
௬௪-விட்டுணுலிங்கம்.
௬௫-வசிட்டலிங்கம்.
௬௬-காலாக்கினியுருத்திரலிங்கம்.
௬௭-குபேரலிங்கம்.
௬௮-பராசரலிங்கம்.
௬௯-சேதுமாதவர்.
௭௦-வீரகத்திவிமோசகவிநாயகர்.
௭௧-சுப்பிரமணியக்கடவுள்.
௭௨-யாழைப்பழித்தமொழியம்மை.
௭௩-புவனிவிடங்கேசர்.
௭௪-உமாமணவாளக்கோலநாயகர்.
௭௫-தேவபத்தசபாநாயகலிங்கம்.இவ்விலிங்கத்தைத் தற்காலத்தார் சோழீசுரவுடையவரெனவழங்குப.
௭௬-தேவபத்தசபாநாயகர்.

ஆ (௭௬) திருச்சிற்றம்பலம்.

விடங்கச்சருக்கத்து (கககூ) ம் பக்கத்து (சகூ) ம் பாட்டுக் குறிப்புரையில் நேர்ந்துழிக்காட்டுதும் எனக்கூறிய சத்தவித நடனங்கள் வருமாறு:—

திருவாரூர்-வீதிவிடங்கர்-அஜபாநடனம்.
திருக்காறாயல்-ஆதிவிடங்கர்-குக்குடநடனம்.
திருமறைக்காடு-புவனிவிடங்கர்-ஹம்ஸபாதநடனம்.
திருக்கோளிலி-அவனிவிடங்கர்-பிருங்கநடனம்.
திருநாகை-சுந்தரவிடங்கர்-வீசிநடனம்.
திருவாய்மூர்-நீலவிடங்கர்-கமலநடனம்.
திருநள்ளாறு-நகவிடங்கர்-உன்மத்தநடனம். (இந்நகவிடங்கத்தை நகரவிடங்கம் என்பாருமுளர்.)

இதற்குப்பிரமாணம்:—

ஸ்காந்தே.

த்யாகராஜமாஹாத்ம்யம்.

ஶ்ரீமதாரூரஜபாநடநம் வீதீவிடங்காஹ்வயம்
ஶ்ரீகாறாயலமாதிவிடங்கம் குக்குடநடநம் சாத்ரம் ச நாந்தீஹாரம் |
வேதாரண்யே ஹம்ஸபாதநடநம் புவநீவிடங்காஹ்வயம்
ப்ருங்கம் ப்ருங்கநடநம் வநிக்ரியகம் நந்தம் ச ஹ்ரம் மாவகம் ||

காயாரோஹணம் ஸுந்தரவிடங்கம் வீசிநடம்
வாய்மூரம் நீலவிடங்கமேவ கமலம் ந்ருத்தம் தாயம் கலிதம் |
உந்மத்தாக்ய நடம் ஸுந்தர நகாக்யம் நவஸந்தம் வாரம்
நாநாவித நடம் வரம் வரஶிவஸ்தாநக்ஷேத்ரகம் ||

திருச்சிற்றம்பலம்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௮௭ | ௯௪ | ௨ | வுறுநதீங்கும். | வுறுந்தீங்கும். |
| ௯௮ | ௧௩ | ௧ | மெவி. | மேவி. |
| ௧௧௨ | ௩௮ | ௧ | நமபனே. | நம்பனே. |
| ௧௧௮ | ௯௧ | ௯ | யனறி. | யன்றி. |
| ௧௧௯ | ௯௭ | ௨ | பரிவினாக்கமுத | பரிவினர்க்கமுத. |
| ௪௫௨ | ௬௯ | ௪ | தாரயப்புவி. | தாராய்ப்புவி. |
| ௪௫௫ | ௧௯ | ௨ | வனபபெயர். | வனப்பெயர். |
| ௨௫௩ | ௧௬ | ௪ | மென்பபேர். | மெனப்பேர். |
| ௨௬௨ | நாமம் | ௩ | கோலாகனது. | கோலாகலனது. |
| ௨௭௪ | ௪௪ | ௨ | காதாலாற். | காதலாற். |
| ௨௮௨ | ௫௬ | ௧ | முயைிறனே. | முறையினே. |
| ௨௯௨ | ௪ | ௪ | சாற்றினனனே. | சாற்றினனே. |
| ௨௯௩ | 0 | ௨ | மித்திருரக்கு. | மித்திரருக்கு. |
| ௨௯௭ | ௩௪ உரை | ௨ | சந்திரகேசரர். | சந்திரசேகரர். |
| ௯0௧ | ௫௫ உரை | ௪ | சூக்கும்வுடமபை. | சூக்குமவுடம்பை. |
| ௩0௯ | ௬௪ உரை | ௨ | எமப்படி. | எப்படி. |
| ௯௧௭ | ௨ | ௪ | மணேக்கணுற்முன். | மணேக்கணுற்முன். |
| ௩௧௮ | ௭ | ௩ | மாதாலா. | மாதலா. |
| ௯௨௪ | ௫௧ | ௪ | வேதநி. | வேதநதி. |
| ,, | ௫௨ | ௧ | யமபலன். | யமலன். |
| ௯௪௬ | ௫ | ௧ | யினெிடும். | யினெடும். |
| ௯௪௮ | ௧௫ | ௧ | தார்ளுடல. | தார்களுடல. |
| ௯௮௧ | 0 | ௧ | பத்திரச்ருக்கம். | பத்திரச்சருக்கம். |
| ௪௨0 | ௧௭ | ௧ | தெகி. | தேகி. |
| ௪௨௬ | ௬ | ௪ | பயில. | பயில். |
| ௪௩௧ | ௨0 | ௪ | ரினப. | ரின்ப. |
| ௪௫0 | ௩௧ | ௨ | ணியல. | ணியல். |
| ௪௫௧ | ௧௧ | ௯ | முனனு. | முன்னு. |

☞ இப்புராணத்தை நாம் அச்சிட ஆரம்பித்த சிலதினங்களுள், அச்சிடுவிக்கும் ஐயாவவர்களுக்குச் சரீராரோக்கியமின்மை ஆரம்பித்தமையின், அதுபற்றி அத்தியாவசியகம் அச்சிடும்படி நேர்ந்ததாகலின், அகோராத்திரம் விரைந்தச்சிட்டு வந்தமையே, சிறுபான்மை பிழை சம்பவித்தற் கேதுவாயிற்று. அவற்றுள் அகப்படுதற் கரியன பல ஈண்டெடுத்துக்காட்டப்பட்டன. சில அகப்படுதற் கெளியனவாகலின், அவற்றை நேர்ந்துழித்திருத்திப்படித்துக்கொள்க,

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# தேவாரம்.

## திருமறைக்காடு.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

திருவிராகம்.

பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

சிலைதனைநடுவிடைநிறுவியொர்சினமலியரவதுகொடுதிவி
தலமலிசுரரசுரர்களொலிசலசலகடல்கடைவுழிமிகு
கொலைமலிவிடமெழவவருடல்குலைதரவதுநுகர்பவனெழின்
மலைமலிமதில்புடைதழுவியமறைவனமமர்தருபரமனே. (௧)

கரமுதலியவவயவமவைகடுவிடவரவதுகொடுவரு
வரன்முறையணிதருமவனடல்வலிமிகுபுலியதளுடையின
னிரவலர்துயர்கெடுவகைநினையிமையவர்புரமெழில்பெறவளர்
மரநிகர்கொடைமனிதர்கள்பயின்மறைவனமமர்தருபரமனே. (௨)

இழைவளர்தருமுலைமலைமகளினிதுறைதருமெழிலுருவினன்
முழையினின்மிகுதுயிலுறுமரிமுசுவொடுமெழமுளரியொடெழு
கழைநுகர்தருகரியிரிதருகயிலையின்மலிபவனிருளுறு
மழைதவழ்தருபொழினிலவியமறைவனமமர்தருபரமனே. (௩)

நலமிகுதிருவிதழியின்மலர்நகுதலையொடுகனகியின்முகை
பலசுரநதிபடவரவொடுமதிபொதிசடைமுடியினன்மிகு
தலநிலவியமனிதர்களொடுதவமுயறருமுனிவர்கடம
மலமறுவகைமனநினைதருமறைவனமமர்தருபரமனே. (௪)

கதிமலிகளிறதுபிளிறிடவுரிசெய்தவதிகுணனுயர்பசு
பதியதன்மிசைவருபசுபதிபலகலையவைமுறைமுறையுணர்
விதியறிதருநெறியமர்முனிகணனொடுமிகுதவமுயறரு
மதிநிபுணர்கள்வழிபடவளர்மறைவனமமர்தருபரனே. (௫)

கறைமலிதிரிசிகைபடையடல்கனன்மழுவெழுதரவெறிமறி
முறைமுறையொலிதமருகமுடைதலைமுகிழ்மலிகணிவடமுக
முறைதருகரனுலகினிலுயரொளிபெறுவகைநினைவொடுமலர்
மறையவன்மறைவழிவழிபடுமறைவனமமர்தருபரமனே. (௬)

இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
விருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
மருவியவறுபதமிசைமுரன்மறைவனமமர்தருபரமனே. (௭)

சனம்வெருவுறவருதசமுகனொருபதுமுடியொடுமிருபது
கனமருவியபுயநெரிவகைகழலடியிலொர்விரனிறுவின
னினமலிகணநிசிசரன்மகிழ்வுறவருள்செய்தகருணையனென
மனமகிழ்வொடுமறைமுறையுணர்மறைவனமமர்தருபரமனே. (௮)

அணிமலர்மகடலைமகனயனறிவரியதொர்பரிசினிலெரி
திணிதருதிரளுருவளர்தரவவர்வெருவுறலொடுதுதிசெய்து
பணியுறவெளியுருவியபரனவனுரைமலிகடறிரளெழு
மணிவளரொளிவெயின்மிகுதருமறைவனமமர்தருபரமனே. (௯)

இயல்வழிதரவிதுசெலவுறவினமயிலிறகுறுதழையொடு
செயன்மருவியசிறுகடமுடியடைகையர்தலைபறிசெய்துதவ
முயல்பவர்துவர்படமுடல்பொதிபவரறிவருபரனவனணி
வயலினில்வளைவளமருவியமறைவனமமர்தருபரமனே. (௧௦)

வசையறுமலர்மகணிலவியமறைவனமமர்பரமனைநினை
பசையொடுமிகுகலைபலபயில்புலவர்கள்புகழ்வழிவளர்தரு
விசையமர்கழுமலநகரிறைதமிழ்விரகனதுரையியல்வல
விசைமலிதமிழொருபதும்வலவவருலகினிலெழில்பெறுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கு
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
விதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொளுங்கருத்தாலே. (௧)

சங்கந்தரளம்மவை தான்கரைக்கெற்றும்
வங்கக்கடல்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
மங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
கங்கைசடைமேலடைவித்தகருத்தே. (௨)

குரவங்குருக்கத்திகள்புன்னைகண்ஞாழன்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மே
லரவம்மதியோடடைவித்தலழகே. (௩)

படர்செம்பவளத்தொடுபன்மலர்முத்த
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
வுடலம்முமைபங்கமதாகியுமென்கொல்
கடனஞ்சமுதாவதுவுண்டகருத்தே. (௪)

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனார்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனோர்தொழுதேத்தவிருந்தநீயென்கொல்
கானார்கடுவேடுவனானகருத்தே. (௫)

பலகாலங்கள்வேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுனென்கொ
றலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. (௬)

வேலாவலயத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமாமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. (௭)

கலங்கொள்கடலோதமுலாவுகரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
விலங்கையுடையானடர்ப்பட்டிடரெய்த
வலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. (௮)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனங்கழுகானவருன்னைமுனென்கொல்
வானந்தலமண்டியுங்கண்டிலாவாறே. (௯)

வேதம்பலவோமம்வியந்தடிபோற்ற
வோதம்முலவும்மறைக்காட்டிலுறைவா
யேதில்சமண்சாக்கியர்வாக்கிலையென்கொ
லாதரொடுதாமலர்தூற்றியவாறே. (௧௦)

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருமறைக்காட்டிலே, திருநாவுக்கரசுநாயனார்வேண்டுகோளின்படி திருஞானசம்பந்தப்பிள்ளையார் "சதுரம்மறை" என்னும் இத்திருப்பதிகம் பாடியருளும்போது, இதன் முதற் றேவாரத்திலேயே திருக்கதவு அடைக்கப்பட்டது.

---

பண்-பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பொங்குவெண்மணற்கானற்பொருகடற்றிரைதவழ்முத்தங்
கங்குலாரிருள்போழ்க்கலிமறைக்காடமர்ந்தார்தாந்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தனரேனு
மெங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலரே. (க)

கூனிளம்பிறைசூடிக்கொடுவரித்தோலுடையாடை
யானிலங்கிளரைந்துமாடுவர்பூண்பதுமரவங்
கானலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்பத்
தேனலங்கமழ்சோலைத்திருமறைக்காடமர்ந்தாரே. (உ)

நுண்ணிதாய்வெளிதாகிநூல்கிடந்திலங்குபொன்மார்பிற்
பண்ணியாழெனமுரலும்பணிமொழியுமையொருபாகன்
றண்ணிதாயவெள்ளருவிசலசலநுரைமணிததும்பக்
கண்ணிதானுமோர்பிறையார்கலிமறைக்காடமர்ந்தாரே. (ங)

ஏழைவெண்குருகயலேயிளம்பெடைதனதெனக்கருதித்
தாழைவெண்மடற்புல்குந்தண்மறைக்காடமர்ந்தார்தா
மாழையங்கயலொண்கண்மலைமகள்கணவனதடியி
னீழலேசரணாகநினைபவர்வினைநலிவிலரே. (ச)

அரவம்வீக்கியவரையுமதிர்கழறழுவியவடியும்
பரவநாஞ்செய்தபாவம்பறைதரவருளுவர்பதிதான்
மரவநீடுயர்சோலைமழலைவண்டியாழ்செயுமறைக்காட்
டிரவுமெல்லியும்பகலுமேத்துதல்குணமெனலாமே. (ரு)

பல்லிலோடுகையேந்திப்பாடியுமாடியும்பலிதே
ரல்லல்வாழ்க்கையரேனுமழகியதறிவரெம்மடிகள்
புல்லமேறுவர் பூதம்புடைசெலவுழிதர்வர்க்கிடமா
மல்குவெண்டிரையோதமாமறைக்காடதுதானே. (சு)

நாகந்தான்கயிறாகநளிர்வரையதற்குமத்தாகப்
பாகந்தேவரொடசுரர்படுகடலளறெழக்கடைய
வேகநஞ்செழவாங்கேவெருவொடுமிரிந்தெங்குமோட
வாகந்தன்னில்வைத்தமிர்தமாக்குவித்தான்மறைக்காடே. (எ)

தக்கன்வேள்வியைத்தகர்த்தோன்றனதொருபெருமையையோரான்
மிக்குமேற்சென்றுமலையையெடுத்தலுமலைமகணடுங்க
நக்குத்தன்றிருவிரலாலூன்றலுநடுநடுத்தரக்கன்
பக்கவாயும்விட்டலறப்பரிந்தவன்பதிமறைக்காடே. (அ)

விண்டமாமலரோனும்விளங்கொளியரவணையானும்
பண்டுங்காண்பரிதாயபரிசினனவனுறைபதிதான்
கண்டலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்ப
வண்டலங்கமழ்சோலைமாமறைக்காடதுதானே. (கூ)

பெரியவாகியகுடையும்பீலியுமவைவெயிற்கரவாக்
கரியமண்டைகையேந்திக்கல்லெனவுழிதருங்கழுக்க
ளரியவாகவுண்டோதுமவர்திறமொழிந்துநம்மடிகள்
பெரியசீர்மறைக்காடேபேணுமின்மனமுடையீரே. (௧௦)

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமர்ந்தாரைக்
கையினூற்றிருழுதெழுவான்காழியுண்ஞானசம்பந்தன்
செய்தசெந்தமிழ்பத்துஞ்சிந்தையுட்சேர்க்கவல்லார்போய்ப்
பொய்யில்வானவரோடும்புகவலர்கொளவலர்புகழே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

திருவிராகம்.

பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

கற்பொலிசுரத்தினெரிகானினிடைமாநடமதாடிமடவா
ரிற்பலிகொளப்புகுதுமெந்தைபெருமானதிடமென்பர்புவிமேன்
மற்பொலிகலிக்கடன்மலைக்குவடெனத்திரைகொழித்தமணியை
விற்பொலிநுதற்கொடியிடைக்கணிகைமார்கவரும்வேதவனமே. (க)

பண்டிரைபவப்புணரியிற்கனகமால்வரையைநட்டரவினைக்
கொண்டுகயிறிற்கடையவந்தவிடமுண்டகுழகன்றனிடமாம்
வண்டிரைநிழற்பொழிலின்மாதவியின்மீதணவுதென்றல்வெறியார்
வெண்டிரைகள்செம்பவளமுந்துகடல்வந்தமொழிவேதவனமே. (உ)

காரியன்மெலோதிநதிமாதைமுடிவார்சடையில்வைத்துமலையார்
நாரியொருபான்மகிழுநம்பருறைவென்பர்நெடுமாடமறுகிற்
றேரியல்விழாவினொலிதிண்பணிலமொண்படகநாளுமிசையால்
வேரிமலிவார்குழனன்மாதரிசைபாடலொலிவேதவனமே. (௩)

நீறுதிருமேனியின்மிசைத்தொளிபெறத்தடவிவந்திடபமே
யேறியுலகங்கடொறும்பிச்சைநுகரிச்சையரிருந்தபதியா
மூறுபொருளின்றமிழியற்கிளவிதேருமடமாதருடனார்
வேறுதிசையாடவர்கள்கூறவிசைதேருமெழில்வேதவனமே. (௪)

கத்திரிகைதுத்திரிகறங்குதுடிதக்கையொடிடக்கைபடக
மெத்தனையுலப்பில்கருவித்திரளலம்பவிமையோர்கள்பரச
வொத்தரமிதித்துநடமிட்டவொருவர்க்கிடமதென்பருலகின்
மெய்த்தகையபத்தரொடுசித்தர்கண்மிடைந்துகளும்வேதவனமே. (௫)

மாலைமதிவாளரவுகொன்றைமலர்துன்றுசடைநின்றுசுழலக்
காலையிலெழுந்தகதிர்தாரகைமடங்கவனலாடுமரனூர்
சோலையின்மரங்கடொறுமிண்டியினவண்டுமதுவுண்டிசைசெய
வேலையொலிசங்குதிரைவங்கசுறவங்கொணரும்வேதவனமே. (௬)

வஞ்சகமனத்தவுணர்வல்லரணமன்றவியவார்சிலைவளைத்
தஞ்சகமவித்தவமரர்க்கமரனாதிபெருமானதிடமாங்
கிஞ்சுகவிதழ்க்கனிகளூறியசெவாயவர்கள்பாடல்பயில
விஞ்சகவியக்கர்முனியக்கணநிறைந்துமிடைவேதவனமே. (௭)

முடித்தலைகள்பத்துடைமுரட்டுருவரக்கனைநெருக்கிவிரலா
லடித்தலமுன்வைத்தலமரக்கருணைவைத்தவனிடம்பலதுயர்
கெடுத்தலைநினைத்தறவியற்றுதல்கிளர்ந்துபுலவாணர்வறுமை
விடுத்தலைமதித்துநிதிநல்குமவர்மல்குபதிவேதவனமே. (௮)

வாசமலர்மேவியுறைவானுநெடுமாலுமறியாதநெறியைக்
கூசுதல்செயாதவமணாதரொடுதேரர்குறுகாதவரனூர்
காசுமணிவார்கனகநீடுகடலோடுதிரைவார்துவலைமேல்
வீசுவலைவாணரவைவாரிவிலைபேசுமெழில்வேதவனமே. (௯-௰)

மந்தமுரவங்கடல்வளங்கெழுவுகாழிபதிமன்னுகவுணி
வெந்தபொடிநீறணியும்வேதவனமேவுசிவனின்னருளினாற்
சந்தமிவைதண்டமிழினின்னிசையெனப்பரவுபாடலுலகிற்
பந்தனுரைகொண்டுமொழிவார்கள்பயில்வார்களுயர்வானுலகமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# கோளறு திருப்பதிகம்.

பண்—பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனான்
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (க)

என்பொடுகொம்பொடாமையிவைமார்பிலங்கவெருதேறியேழையுடனே
பொன்பொதிமத்தமாலைபுனல்சூடிவந்தெனுளமேபுகுந்தவதனா [தா
லொன்பதொடொன்றொடேழுபதினெட்டொடாறுமுடனாயநாள்களவை
மன்பொடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (உ)

உருவளர்பவளமேனியொளிநீறணிந்துவுமையோடும்வெள்ளைவிடைமேன்
முருகலர்கொன்றைதிங்கண்முடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
றிருமகள்சலையதூர்திசயமாதுபூமிதிசைதெய்வமானபலவு
மருநெறிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௩)

மதிநுதன்மங்கையோடுவடபாலிருந்துமறையோதுமெங்கள்பரம
னதியொடுகொன்றைமாலைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
கொதியுறுகாலனங்கிநமனோடுதூதர்கொடுநோய்களானபலவு
மதிகுணநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (ச)

நஞ்சணிகண்டனெந்தைமடவாடனோடுவிடையேறுநங்கள்பரமன்
றுஞ்சிருள்வன்னிகொன்றைமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடுமுருமிடியுமின்னுமிகையானபூதமவையு
மஞ்சிடுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (ரு)

வாள்வரியதளதாடைவரிகோவணத்தர்மடவாடனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றைநதிசூடிவந்தெனுளமேபுகுந்தவதனாற்
கோளரியுழுவையோடுகொலையானைகேழல்கொடுநாகமோடுகரடி
யாளரிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (சு)

செப்பிளமுலைநன்மங்கையொருபாகமாகவிடையேறுசெல்வனடைவா
ரொப்பிளமதியுமப்புமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனால்
வெப்பொடுகுளிரும்வாதமிகையானபித்தும்வினையானவந்துநலியா
வப்படிநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (எ)

வேள்படவிழிசெய்தன்றுவிடைமேலிருந்துமடவாடனோடுமுடனாய்
வாண்மதிவன்னிகொன்றைமலர்சூடிவந்தெனுளமேபுகுநதவதனா
லேழ்கடல்சூழிலங்கையரையன்றனோடுமிடரானவந்துநலியா
வாழ்கடனல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (அ)

பலபலவேடமாகும்பரனாரிபாகன்பசுவேறுமெங்கள்பரமன்
சலமகளோடெருக்குமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலுமறையோடுதேவர்வருகாலமானபலவு
மலைகடன்மேருநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௯)

கொத்தலர்குழலியோடுவிசயற்குநல்குகுணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாகமுடிமேலணிந்தெனுளமேபுகுந்தவதனாற்
புத்தரொடமணைவாதிலழிவிக்குமண்ணறிருநீறுசெம்மைதிடமே
யத்தகுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே. (௧௦)

தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நெறுன்னிவளர்செம்பொனெங்குநிக
நான்முகனாதியாயபிரமாபுரத்துமறைஞானஞானமுனிவன்
றானுறுகோளுநாளுமடியாரைவந்துநலியாதவண்ணமுரைசெ
யானசொன்மாலையோதுமடியார்கள்வானிரலசாள்வராணைநமதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தப்பிள்ளையார், வேதாரணியத்திலே எழுந்தருளியிருக்கும்போது, பாண்டிநாடெங்கும் வைதிகமார்க்கமும் சைவமார்க்கமுங் குன்றிச், சமணசமயமேவிருத்தியாகப், பாண்டியனுடைய மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரும், முதன்மந்திரியாராகிய குலச்சிறைநாயனாருந்தவிர மற்றைப் பாண்டியனும், பாண்டிநாட்டாரும், சமணர்களுடைய துர்ப்போதனையினாலே விபூதிசாதனங்கைவிட்டு, ஆருகதமதத்திலே பிரவேசித்தமையால், அவ்விருவரும் மிகக்கவலைகொண்டிருக்குஞ் சமாசாரத்தைப் பிள்ளையார் கேள்வியுற்று, அப்பமூர்த்தியோடுந் திருக்கோயிலிற்சென்று, சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு, திருக்கோபுரத்துள் இருந்து, பாண்டிமாதேவியாரும், குலச்சிறைநாயனாரும் சொல்லியனுப்பிய வார்த்தையை அவருக்குச்சொல்லிப், பாண்டிநாட்டுக்கு எழுந்தருளுதற்குத் திருவுளங்கொண்டருளினார். அப்பொழுது அப்பமூர்த்தி தேவரீர் சிறுபிள்ளையாய் இருக்கின்றீர், அச்சமணர்களுடைய வஞ்சனைக்கோ எல்லையில்லை. தேவரீருக்கு இப்போது கிரகங்கள் வலியில, ஆதலால், தேவரீர் அவ்விடத்திற்கு எழுந்தருளுதற்கு உடன்படவொண்ணாது என்று விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையார், சிவபிரான் நம்முடையசிந்தையே கோயில்கொண்டு எழுந்தருளியிருத்தலினால் நமக்குத் தீங்குவாராது என்றுசொல்லிச் சிவபிரானுடைய திருவடிகளைத்துதித்து "வேயுறுதோளி" என்னுங் கோளறுதிருப்பதிகத்தைப் பாடித்துதித்து, வேதாரணியத்தைநீங்கி மதுரைக்குச்சென்று, சமணர்களை வாதிலேவென்று, விபூதிசாதனத்தை விளக்கி விருத்திசெய்தருளினார்.

---

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

இந்திரனோடுதேவரிருடிகளேத்துகின்ற
சுந்தரமானார்போலுந்துதிக்கலாஞ்சோதிபோலுஞ்
சந்திரனோடுகங்கையரவையுஞ்சடையுள்வைத்து
மந்திரமானார்போலுமாமறைக்காடனாரே. (க)

தேயனநாடராகித்தேவர்கடேவர்போலும்
பாயனநாடறுக்கும்பத்தர்கள்பணியவம்மின்
காயனநாடுகண்டங்கதனுளார்காளகண்டர்
மாயனநாடர்போலுமாமறைக்காடனாரே. (உ)

அறுமையிவ்வுலகுதன்னையாமெனக்கருதிநின்று
வெறுமையின்மனைகள்வாழ்ந்துவினைகளானலிவுறாதே
சிறுமதியரவுகொன்றைதிகழ்தருசடையுள்வைத்து
மறுமையுமிம்மையாவார்மாமறைக்காடனாரே. (ங)

கால்கொடுத்திருகையேற்றிக்கழிநிரைத்திறைச்சிமேய்ந்து
தோல்படுத்துதிரநீராற்சுவரெடுத்திரண்டுவாச
லேல்வுடைத்தாவமைத்தங்கேழுசாலேகம்பண்ணி
மால்கொடுத்தாவிவைத்தார்மாமறைக்காடனாரே. (ச)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கள்விரும்பியோதப்
பண்ணினார்கின்னரங்கள்பத்தர்கள்பாடியாடக்
கண்ணினார்கண்ணினுள்ளேசோதியாய்நின்றவெந்தை
மண்ணினார்வலங்கொண்டேத்துமாமறைக்காடனாரே. (ரு)

அங்கையுளனலும்வைத்தாரறுவகைச்சமயம்வைத்தார்
தங்கையில்வீணைவைத்தார்தம்மடிபரவவைத்தார்
திங்களைக்கங்கையோடுதிகழ்தருசடையுள்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (சு)

கீதராய்க்கீதங்கேட்டுக்கின்னரந்தன்னைவைத்தார்
வேதராய்வேதமோதிவிளங்கியசோதிவைத்தா
ரேதராய்நட்டமாடியிட்டமாய்க்கங்கையோடு
மாதையோர்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (எ)

கனத்தினார்வலியுடையகடிமதிலரணமூன்றுஞ்
சினத்தினுட்சினமாய்நின்றுதீயெழச்செற்றார்போலுந்
தனத்தினைத்தவிர்ந்துநின்றுதம்மடிபரவுவார்க்கு
மனத்தினுண்மாசுதீர்ப்பார்மாமறைக்காடனாரே. (அ)

தேசனைத்தேசன்றன்னைத்தேவர்கள்போற்றிசைப்பார்
வாசனைசெய்துநின்றுவைகலும்வணங்குமின்கள்
காசினைக்கனலையென்றுங்கருத்தினில்வைத்தவர்க்கு
மாசினைத்தீர்ப்பர்போலுமாமறைக்காடனாரே. (கூ)

பிணியுடையாக்கைதன்னைப்பிறப்பறுத்துய்யவேண்டிற்
பணியுடைத்தொழில்கள்பூண்டுபத்தர்கள்பற்றினாலே
துணிவுடையரக்கனோடியெடுத்தலுந்தோகையஞ்ச
மணிமுடிப்பத்திறுத்தார்மாமறைக்காடனாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தேரையுமேல்கடாவத்திண்ணமாத்தெழித்துநோக்கி
யாரையுமேலுணராவாண்மையான்மிக்கான்றன்னைப்
பாரையும்விண்ணுமஞ்சப்பரந்ததோண்முடியடர்த்துக்
காரிகையஞ்சலென்பார்கலிமறைக்காடனாரே. (க)

முக்கிமுன்வெகுண்டெடுத்தமுடியுடையரக்கர்கோனை
நக்கிருந்தூன்றிச்சென்னிநாண்மதிவைத்தவெந்தை
யக்கரவாமைபூண்டவழகனார்கருத்தினாலே
தெக்குநீர்த்திரைகண்மோதுந்திருமறைக்காடனாரே. (உ)

மிகப்பெருத்துலாவமிக்கானக்கொருதேர்கடாவி
யகப்படுத்தென்றுதானுமாண்மையான்மிக்கரக்க
னுகைத்தெடுத்தான்மலையையூன்றலுமவனையாங்கே
நகைப்படுத்தருளினானூர்நான்மறைக்காடுதானே. (ங)

அந்தரந்தேர்கடாவியாரிவனென்றுசொல்லி
யுந்தினான்மாமலையையூன்றலுமொள்ளரக்கன்
பந்தமாந்தலைகள்பத்தும்வாய்கள்விட்டலறிவீழச்
சிந்தனைசெய்துவிட்டார்திருமறைக்காடனாரே. (ச)

தடுக்கவுந்தாங்கவொண்ணாத்தன்வலியுடையனாகிக்
கடுக்கவோர்தேர்கடாவிக்கையிருபதுகளாலு
மெடுப்பனானென்னபண்டமென்றெடுத்தானையேங்க
வடுக்கவேவல்லனூராமணிமறைக்காடுதானே. (ரு)

நாண்முடிக்கின்றசீரானடுங்கியேமீதுபோகான்
கோள்பிடித்தார்த்தகையான்கொடியன்மாவலியனென்று
நீண்முடிச்சடையர்சேருநீள்வரையெடுக்கலுற்றான்
றோண்முடிநெரியவைத்தார்தொன்மறைக்காடனாரே. (௬)

பத்துவாயிரட்டிக்கைகளுடையன்மாவலியனென்று
பொத்திவாய்த்தீமைசெய்தபொருவலியரக்கர்கோனைக்
கத்திவாய்கதறவன்றுகால்விரலூன்றியிட்டார்
முத்துவாய்த்திரைகண்மோதுமுதுமறைக்காடனாரே. (௭)

பக்கமேவிட்டகையான்பாங்கிலாமதியனாகிப்
புக்கனன்மாமலைக்கீழ்ப்போதுமாறறியமாட்டான்
மிக்கமாமதிகள்கெட்டுவீரமுமிழந்தவாறே
நக்கனபூதமெல்லாநான்மறைக்காடனார்க்கே. (௮)

நாணஞ்சுகையனாகிநன்முடிபத்தினோடு
பாணஞ்சுமுன்னிழந்துபாங்கிலாமதியனாகி
நீணஞ்சுதானுணராநின்றெடுத்தானையன்று
வேணஞ்சுகைகள்செய்தாரெழின்மறைக்காடனாரே. (௯)

கங்கைநீர்சடையுள்வைக்கக்காண்டலுமங்கைகூடத்
தென்கையான்றேர்கடாவிச்சென்றெடுத்தான்மலையை
முன்கைமாநரம்புவெட்டிமுன்னிருக்கிசைகள்பாட
வங்கைவாளருளினானூரணிமறைக்காடுதானே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஓதமால்கடல்பரவியுலகெலா
மாதரார்வலங்கொண்மறைக்காடரைக்
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (க)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்கந்தானுடைமாமறைக்காடரோ
வார்க்குங்காண்பரியீரடியார்தம்மை
நோக்கிக்காண்பதுநும்பணிசெய்யிலே. (உ)

புன்னைஞாழல்புறணியருகெலா
மன்னினார்வலங்கொண்மறைக்காடரோ
வன்னமென்னடையாளையோர்பாகமாச்
சின்னவேடமுகப்பதுசெல்வமே. (௩)

அட்டமாமலர்சூடியடம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியு
மிட்டமாகவிருக்குமிடமிதே. (ச)

நெய்தலாம்பனிறைவயல்சூழ்தரு
மெய்யினார்வலங்கொண்மறைக்காடரோ
தையல்பாகங்கொண்டீர்கவர்புன்சடைப்
பைதல்வெண்பிறைபாம்புடன்வைப்பதே. (ரு)

துஞ்சும்போதுந்துயிலின்றியேத்துவார்
வஞ்சின்றிவலங்கொண்மறைக்காடரோ
பஞ்சின்மெல்லடிப்பாவைபலிகொணர்ந்
தஞ்சிநிற்பதுமைந்தலைநாகமே. (சு)

விண்ணுளார்விரும்பியெதிர்கொள்ளவே
மண்ணுளார்வணங்கும்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (எ)

திருவினார்செல்வமல்குவிழாவணி
மருவினார்வலங்கொண்மறைக்காடரோ
வுருவினாளுமையாளையொர்பாகமாய்
மருவினார்கங்கையைச்சென்னிதன்னிலே. (அ)

சங்குவந்தலைக்குந்தடங்கானல்வாய்
வங்கமார்வலங்கொண்மறைக்காடரோ
கங்கைசெஞ்சடைவைப்பதுமன்றியே
யங்கையில்லனலேந்தலுமாகிதே. (கூ)

குறைக்காட்டான்விட்டதேர்குத்தமாமலை
யிறைக்காட்டியெடுத்தான்றலையீரைந்து
மறைக்காட்டானிறையூன்றலும்வாய்விட்டா
னிறைக்காட்டாயெம்பிரானுனையேத்தவே. (கO)

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (க)

ஈண்டுசெஞ்சடையாகத்துளீசரோ
மூண்டகார்முகிலின்முறிக்கண்டரோ
வாண்டுகொண்டநீரேயருள்செய்திடு
நீண்டமாக்கதவின்வலிநீக்குமே. (௨)

அட்டமூர்த்தியதாகியவப்பரோ
துட்டர்வான்புரஞ்சுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசென்னிப்பரமரோ
சட்டவிக்கதவந்திறப்பிம்மினே. (௩)

அரியமாமறையோதியநாவரோ
பெரியவான்புரஞ்சுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருத்தரோ
பெரியவான்கதவம்பிரிவிக்கவே. (௪)

மலையினீடிருக்கும்மறைக்காடரோ
கலைகள்வந்திறைஞ்சுங்கழலேத்தரோ
விலையின்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீக்குமே. (௫)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்குந்தண்பொழில்சூழ்மறைக்காடரோ
வார்க்குங்காண்பரியீரடிசேளுமை
நோக்கிக்காணக்கதவைத்திறவுமே. (௬)

வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தரோ
வந்தமில்லியணிமறைக்காடரோ
வெந்தைநீயடியார்வந்திறைஞ்சிட
விந்தமாக்கதவம்பிணிநீக்குமே. (௭)

ஆறுசூடுமணிமறைக்காடரோ
கூறுமாதுமைக்கீந்தகுழகரோ
வேறதேறியவெம்பெருமானிந்த
மாறிலாக்கதவம்வலிநீக்குமே. (௮)

சுண்ணவெண்பொடிப்பூசுஞ்சுவண்டரோ
பண்ணியேறுகந்தேறும்பரமரோ
வண்ணலாதியணிமறைக்காடரோ
திண்ணமாக்கதவந்திறப்பிம்மினே. (௯)

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீ
ரிரக்கமொன்றிலீரெம்பெருமானீரே
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆளுடையபிள்ளையாரும் அப்பமூர்த்தியும் பலதலங்களைத்தரிசித்து வணங்கிக்கொண்டு, திருமறைகாட்டையடைந்து, ஆலயத்துட்சென்று, வலமவந்து, வேதங்கள்அருச்சித்துத் திருக்காப்புச்செய்த திருக்கதவுக்குமுன்வந்து, பிள்ளையார் அப்பமூர்த்தியைநோக்கி, அப்பரேநாம் சுவாமியை அபிமுகத்திருவாயில் வழியாகச்சென்று தரிசிக்கத் திருக்கதவுதிறக்கும்படி திருப்பதிகம்பாடும் என்றார். அப்பமூர்த்தி "பண்ணினேர்மொழியாள்" என்னுஞ்சொற்றொடரைமுதலாகவுடைய இத்திருப்பதிகம்பாடக்கதவுதிறக்கப்படாமல் தாழ்த்ததுகண்டுதிருக்கடைக்காப்பிலே "இரக்கமொன்றிலீர்" என்று பாடிவணங்க, உடனே திருக்கதவம் திறக்கப்பட்டது. திறக்கப்படுதலும், நாயன்மாரிருவரும் மற்றைச்சிவனடியார்களும் ஆச்சரியமுற்றுத்திருவருளைவியந்து, உள்ளே பிரவேசித்துச் சுவாமியை நேரேதரிசித்துவணங்கி ஆனந்தமடைந்தார்கள்.

---

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தூண்டுசுடரனையசோதிகண்டாய்தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய், காண்டற்கரியகடவுள்கண்டாய்கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய், வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லா, மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௧)

கைகிளரும்வீணைவலவன்கண்டாய்காபாலிகண்டாய்திகழுஞ்சோதி மெய்கிளருஞானவிளக்குக்கண்டாய்மெய்யடியாருள்ளத்துவித்துக்கண்டாய், பைகிளருநாகமசைத்தான்கண்டாய்பராபரனகண்டாய்பாசூரான்கண்டாய், வைகிளருங்கூர்வாட்படையான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௨)

சிலந்திக்கருண்முன்னஞ்செய்தான்கண்டாய்திரிபுரங்கடீவாய்ப்படுத்தான்கண்டாய், நிலந்திக்குநீர்வளிதீயானான்கண்டாய்நிரூபியரூபியுமாய்நின்றான்கண்டாய், சலந்துக்கச்செனனிச்சடையான்கண்டாய்தாமரையான்செங்கண்மாறானேகண்டாய், மலந்துக்கமால்விடையொன்றூர்ந்தான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (௩)

